# பண்டைக்கால நாகரிகங்களின் வரலாறு

## (கி.பி. 476 வரை)

(மேல் பட்டப் படிப்பிற்குரியது)

டாக்டர் கி. ர. அநுமந்தன்




தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த.பா.நி. (க.வெ) வரிசை எண்—849

# பண்டைக்கால நாகரிகங்களின் வரலாறு

## கி.பி. 476 வரை

(மேல் பட்டப் படிப்பிற்குரியது)

ஆசிரியர்

டாக்டர் கி. ர. அநுமந்த

எம்.ஏ., எம்.எஸ். (விஸ்கா

பேராசிரியர், பண்டைய வரலாற்றுத்துறை,

மதுரை காமராஜ் பல்கலைக்கழகம்,

மதுரை.





தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—April 1979

No. of Copies Printed—1000

T.N.T.B.S. (C.P.) No. 849



**HISTORY OF ANCIENT CIVILIZATION**

**(Upto 476 A.D — M.A.)**

Dr. K. R. Hanumanthan
M.A., M.S., (Wis. U.S.A.), Ph.D.,

**10**

...ed by the Tamil Nadu Text Book ...y under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by :*

Novel Art Printers,
202, Jani Jan Khan Road,
Madras-600 014.

# அணிந்துரை

(திரு. செ. அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினெட்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் இளங் கலை வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ் வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாற்றியல், அரசியல், உளவியல், பொருளியல், மெய்ப் பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதவியல், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டவியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூலநூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான *பண்டைக்கால நாகரிகங்களின் வரலாறு* (கி.பி. 476 வரை) என்னும் இந் நூல் தமிழ் நாட்டுப் பாட நூல் நிறுவனத்தின் **849** ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இது வரை **884** நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்ட'த்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கலையியற் பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளர வேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ்; எங்கும் தமிழ்' என்னும் குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு தமிழக ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரியதாகுக!

செ. அரங்கநாயகம்

# பொருளடக்கம்

# 1. தோற்றுவாய்

***வரலாறுபற்றியப் பொருள் விளக்கம்***

நாகரிகத்தின் வரலாறுபற்றி விரிவாக ஆராயப் புகுமுன் நாகரிகம், வரலாறு ஆகிய இரு சொற்களின் உண்மைப் பொருள் என்ன என்பதுபற்றிச் சற்றே சிந்தித்தல் நலமுடைத்தாகும். 'மக்கள்தாமே ஆறறிவுயிரே' என்ற நம் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியர் கூறிச் சென்றதற்கேற்ப மனிதன் இன்று தனது ஆருவது அறிவான பகுத்தறிவைப் பயன்படுத்தி இயற்கையைத் தன்வசமாக்கி உலகத்தை ஆட்டிப் படைக்கிருன். இத்தகைய வியத்தகு முன்னேற்றம் நாகரிகம் என்று குறிக்கப்பெறுகின்றது. இது திடீரென்று ஏற்பட்டதோர் நிகழ்ச்சியன்று. காலப்போக்கில் படிப்படியாக வளர்ந்து பரந்து விரிந்ததோர் ஆலமரத்தைப் போன்று அது விளங்குகிறது. அத்தகைய மரத்தின் ஆணிவேர்வரை சென்று ஆராய முற்படுவதே வரலாருகும். கற்காலத்தே காட்டுமிராண்டியாய்த் திரிந்த மனிதன் தற்காலத்தே எங்ஙனம் இவ்வளவு முன்னேற்ற நிலையை அடைந்தான் என்பதைச் சித்திரித்துக் காட்டுவதே வரலாறு எனப்படும். கடந்தகால நிகழ்ச்சிகளை ஒன்றன்பின் ஒன்ருக நம் கண்ணின்முன் கொணர்ந்து நிறுத்தி இன்றைய நிகழ்ச்சிகளுக்கு அவை எங்ஙனம் அடிப்படையாய் அமைந்துள்ளன என்பதை அது எடுத்துக் காட்டுகிறது. 'மனிதன் ஓர் ஒன்று கூடி வாழும் பிராணி' என்பார் அரிஸ்டாடில் என்னும் அறிஞர். இங்ஙனம் அவன் ஒன்றுகூடிச் செயல்பட ஆரம்பித்த காலத்திலிருந்து மனித சமுதாயத்தில் நடைபெற்ற பல்வேறு கூட்டு நிகழ்ச்சிகளின் தொகுப்பே வரலாறு எனலாம்.

வரலாறு எத்தகைய நிகழ்ச்சிகளை விதந்து ஓதவேண்டும் என்பதுபற்றி அறிஞர் பெருமக்களிடையே கருத்து வேறுபாடுகள் பெரிதும் காணப்படுகின்றன. 'மன்பதை செய்த மாபெரும் குற்றங்கள், மதிகெட்ட செயல்கள், உற்ற இன்னல்கள் இவற்றின் பட்டியலே வரலாறு' என்பார் கிப்பன் (Gibbon) எனும் வரலாற்றறிஞர். 'வரலாறு என்பது ஒரு வறட்டுக் குப்பை' என்பார் ஃபோர்டு (Ford) எனும் பொறியியற் புலவர். 'சுய சரிதங்களின் தொகுப்பே வரலாறு' என்பார் கார்லைல் எனும் ஆங்கில அறிஞர். வரலாறு என்பது வெறும் அரசியல் நிகழ்ச்சிகளை மட்டும் உட்கொண்டது என்பர் ஒரு

சிலர். பொருளாதார நிகழ்ச்சிகளின் தொகுப்பே வரலாறென்பர் வேறு சிலர். இங்ஙனம் ஒவ்வொருவரும் வரலாற்றைப்பற்றி ஒருதலைப் பட்சமான கருத்துகளையே வலியுறுத்துகின்றனர். இவர்களது கூற்றுகளைக் கேட்கும்போது பல குருடர்கள் சேர்ந்துகொண்டு யானையைப்பற்றித் தெரிவித்த கருத்துகள் நமக்கு நினைவுக்கு வருகின்றன. யானையின் உறுப்புகளை, யானை என்று தப்பாக எண்ணிக் கொண்ட குருடர்களைப் போன்றே வரலாற்றின் பல்வேறு கூறுபாடு களைத் தனித்தனியே மிகைப்படுத்திக் கூறி அதுவே வரலாறென்று வற்புறுத்துகின்றனர் ஒருசில ஆசிரியர்கள். வரலாற்றை ஒரு தனிப் பாடமாக முதன்முதல் படிக்கத் தொடங்கிய கிரேக்கர்கள் அரசியல் நிகழ்ச்சிகளின் தொகுப்பே வரலாறு என்று கூறினர். இன்றைக்கும் அவ்வாறே கருதுகின்ற ஆசிரியர்கள் பலர் உளர். 'அரசியல் என்பது இன்றைய வரலாறு. வரலாறென்பது கடந்தகால அரசியல்' (History is past politics and politics present history) என்பது ஃபிரீமேன் (Freeman) என்பாரது கூற்றாகும். 'அரசியலின் வேர் வரலாறு; வரலாற்றின் கனிந்த கனியே அரசியல்' (History is the root of politics and politics is the fruit of history) என்பது சீலி (Seeley) எனும் ஆசிரியரின் கருத்தாகும். ஹெரோடோட்டஸ் (Herodotus), தூசிடைடிஸ் (Thucydides) போன்ற கிரேக்க ஆசிரியர்களும் லிவி (Livy) போன்ற உரோமானிய ஆசிரியர்களும் வரலாற்றை அரசியல் நிகழ்ச்சிகளின் தொகுப்பாகவே வரைந்தளித்துள்ளனர். அவற்றில் போர்க்களங்களின்வருணனைகளும், அரசர், அரசியர்களின் பெயர்ப் பட்டியல்களுமே மிகுந்து காணப்படுகின்றன. எனவே, அவற்றைப் படிப்பவர்கள் விரைவில் சலிப்படைந்துவிடுகின்றனர். அதனாற்றான் அவர்கள் வரலாறு ஒரு 'வறட்டுக் குப்பை' என வசை பாடுகின்றனர். அரசியல் நிகழ்ச்சிகள் வரலாற்றில் இடம்பெற வேண்டியது இன்றியமையாதது என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை. ஆனால், அவை மட்டும்தான் வரலாற்றில் இடம்பெற வேண்டும் என்பதில்தான் அறிஞர்கள் கருத்து மாறுபடுகின்றனர்.

வேறு சில ஆசிரியர்கள் வரலாற்றைப் 'பொருளாதார நிகழ்ச்சி களின் தொகுப்பு' என்று கூறுநிற்பர். ஃபியூவர் பேக் (Fuer Back) என்ற ஆசிரியர் வரலாற்று நிகழ்ச்சிகள் யாவும் சுற்றுப்புறங்களாலும், பொருளாதார நடவடிக்கைகளாலுமே உருவாக்கப்படுகின்றன என்று கூறுகின்றார். பொருளாதாரத் துறையில் உள்ளவர்கள், இல்லாதவர்கள் ஆகிய இருதரப்பான வர்க்கத்தினரிடையே நடை பெறும் ஓயாத வர்க்கப் போராட்டமே (Class struggle) வரலாறு என்பது கார்ல் மார்க்ஸ் (Karl Marx) என்ற அறிஞரின் கருத்தாகும். அவரது கருத்துப்படி ஆண்டான் அடிமைப் போராட்டமே கிரேக்க

வரலாறும். பேட்ரீஷியன் (Patricians) என்ற பிரபுக்களுக்கும் பிளபியர்கள் (Plebians) என்ற சாதாரண மக்களுக்கும் இடையே விளைந்த போராட்டங்களின் தொகுப்பே உரோமானிய வரலாறும். இன்றைய சமுதாயத்தில் அவரது கருத்துப்படி முதலாளிகளுக்கும், தொழிலாளிகளுக்கும் இடையே ஓயாத போராட்டம் நடைபெற்றுக் கொண்டே இருக்கும். வர்க்கமற்ற சமுதாயம் (Classless Society) அமையும்வரை இப் போராட்டத்திற்கு ஓய்வில்லை என்பதே அவரது கருத்து. இத்தகைய கருத்துகள் ஒருதலைப்பட்சமானவை. மனிதன் உணவினால் மட்டும் உயிர் வாழ்வதில்லை. உலகியல் பொருள்களை அடைவதற்காக மட்டுமே அவன் போராடுகிறான் என்பதும் ஒப்புக்கொள்ள முடியாத தொன்றாகும். தொழிலாளர் களின் நலனைக் குறிக்கோளாகக் கொண்ட முதலாளித்துவ சமுதா யத்தில் (Welfare Capitalism) வர்க்கப் போராட்டத்திற்கு இடமே இல்லை. எனவே, வரலாற்றில் பொருளாதாரக் கூறுபாட்டை மிகைப் படுத்திக் கூறுவது அவ்வளவு பொருத்தமுடையதாகத் தெரிய வில்லை.

ட்ரெவெல்லியன் (Trevelyan) போன்ற வரலாற்றாசிரியர்கள் சமுதாய வரலாறே உண்மையான வரலாறு எனக் கட்டுரைப்பர். மக்கள் எம் முறையில் வாழ்கின்றார்கள்? எத்தகைய பழக்கவழக்கங் களைக் கைக்கொண்டுள்ளார்கள், அவர்களது நம்பிக்கைகள், வழி பாட்டு முறைகள், காதல், திருமணம் போன்றவற்றில் என்னென்ன முன்னேற்றங்கள்ஏற்பட்டுள்ளன என்பதைச் சித்திரிப்பதே வரலாறு என்பது அவரது கருத்தாகும். சமுதாயம் தனிப்பட்ட முறையில் இயங்கக் கூடுமாயின் அவரது கூற்று உண்மையாக இருக்கலாம். ஆனால், சமுதாயங்கள் எவ்வாறு அரசியல் சூறாவளியில் சிக்கி முற்றிலும் மாறிவிடுகின்றன என்பது நாம் நன்கு அறிந்ததொன்றே யாம். அரசியல், பொருளாதாரச் செல்வாக்கின்றிச் சமுதாயம் செயல் பட இயலுமா என்பது ஐயப்பாட்டிற்குரியதே ஆகும். எனவே, வரலாற்றில் சமுதாயக் கூறுபாடுகளை மிகைப்படுத்திக் கூறுவதும் பொருந்தா வாதமேயாகும்.

இக் காலத்து வரலாற்றாசிரியர்கள் பெரும்பாலும் ஒரு நாட்டின் வரலாறென்பது அதன் நாகரிகத்தின் வரலாறே என்று வரையறுத் துக் கூறுகின்றனர். டாயின்பீ (Toynbee) என்ற ஆசிரியர் பல்வேறு சமுதாயங்களின் நாகரிகச் சிறப்பியல்புகளை விவரிப்பதே வரலாறு என்பர். ராபின்சன் (Robinson) போன்ற ஆசிரியர்கள் புதிய வரலாறு (New History) என்ற ஒரு சொல்லைப் படைத்துள்ளனர். அதன்படி வரலாறு மனிதனின் பல்வேறு முயற்சிகளையும் படம்

பிடித்துக் காட்டுகின்ற ஒரு பாடமாகும். அரசியல், பொருளாதாரம், கலை ஆகிய பல்வேறு துறைகளிலும் மனித சமுதாயம் வளர்ந்த பல் வேறு நிலைகளை வர்ணிப்பதே வரலாறுகும். புறத்துறையில் மட்டு மின்றி அகத்துறையிலும் மனிதன் பெற்றுள்ள முன்னேற்றங்களையும் வரலாறு விரித்துரைக்க வேண்டும். அத்தகைய வரலாற்றில் புவியியல் (Geology), தொல்பொருள் இயல் (Archaeology), வேதி யியல் (Chemistry), சமூகவியல் (Sociology), உளவியல் (Psychology), வானவியல் (Astronomy), உடற்கூற்று இயல் (Biology), பொருளியல் (Economics), விலங்கியல் (Zoology) போன்ற பல்வேறு அறிவியல் பாடங்களின் துணையும் தேவை. எனவே, அன்றுமுதல் இன்றுவரை பல்வேறு துறைகளிலும் மக்கள் சிந்தித்த சிந்தனைகள், பேசிய பேச்சுகள், செய்த செயல்கள், போட்ட திட்டங்கள், ஏன் கண்ட கனவுகள் எல்லாம் சேர்ந்ததே நாகரிக வரலாறு என்பது அறிஞர்கள் ஒப்பமுடிந்த ஒரு பெருங் கருத்தாமென்க.

### வரலாற்றுப் படிப்பின் முக்கியத்துவம்

'வரலாற்றுப் படிப்பு ஒருவனுக்கு அறிவு முதிர்ச்சியை அளிக் கிறது' என்பது பேகன்(Bacon) என்னும் பேரறிஞரின் கருத்தாகும். அது முற்றிலும் உண்மை. நல்ல அநுபவம் உள்ள ஒருவனை நாம் அறிவாளி எனப் போற்றுகிறோம். மக்கட் சமுதாயத்தில் பல்வேறு காலங்களில் ஏற்பட்ட பல்வேறு அநுபவங்களின் பெட்டகமே வரலாறு. அத்தகைய அநுபவங்களையெல்லாம் அறிந்த ஒருவன் முதிர்ந்த அறிவாளியாகத் திகழ்வான் என்பதில் ஐயமில்லை. தன் னுடைய காலத்திலும், அதற்கு முற்பட்ட காலத்திலும் வாழ்ந்த பல்வேறு மக்களின் எண்ணங்களையும் செயல்களையும் தனது வாழ்க் கையில் அமைத்துக்கொண்டு முன்னேறும் பண்பு மனிதனிடம் மட்டுமே காணப்படுவது. இத்தகைய உயரிய பண்பைப் பயன்படுத் தத் துணைபுரிவது வரலாற்றுப் படிப்பாகும். வரலாற்றில் வருகின்ற பெருமக்களாகிய அரிஸ்டாடில், அசோகர், இயேசுநாதர், நபிகள் நாயகம், சங்கரர், மார்டின் லூதர், அக்பர் போன்ற பல்வேறு தலை வர்களையும் முன்மாதிரியாகக் கொண்டு உயர்ந்தவர்கள் பலர். கிரேக்க சமுதாயம், ஆங்கிலச் சமுதாயம் இவற்றை முன்மாதிரியாகக் கொண்டு உயர்ந்த சமுதாயங்கள் பல. இங்ஙனம் தனி மனிதர்களும் சமுதாயங்களும் தங்களது முன்னேற்றங்களுக்கு வேண்டிய நல்ல கருத்துகளையும் அநுபவங்களையும் எடுத்துக்கொள்ள வரலாறு ஒரு வாய்ப்பு அளிக்கிறது. அதே போன்று சீசர், அலெக்சாந்தர், அவுரங்கசீப், நெப்போலியன் போன்ற அரசர்கள் செய்த தவறுகளை அறிந்துகொண்டு இன்றைய அரசியல் தலைவர்கள் அதுபோன்று மீண்டும் தவறு செய்து அல்லலுருதிருக்கவும் வரலாறு துணைபுரி

கிறது. 'தீது ஒரீஇ நன்றின்பால் உய்ப்பது அறிவு' என்பது வள்ளுவர் வாக்கு. அத்தகைய அறிவை அளிப்பதே வரலாருகும்.

தனது வரலாற்றை அறியாத சமுதாயம் நினைவாற்றலை இழந்துவிட்ட மனிதனுக்குச் சமமாகும். தனிமனிதனுக்கு நினைவாற்றல் எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு ஒரு நாட்டுக்கு அதன் வரலாறு இன்றியமையாது வேண்டப்படுவதாகும். தனி மனிதன் எவ்வாறு தனது கடந்தகால அநுபவங்களின் அடிப்படையில் தனது நிகழ்கால எதிர்கால வாழ்க்கையை அமைத்துக்கொள்ளுகிருனே, அதேபோலச் சமுதாயங்களும் நாடுகளும் தங்களுடைய கடந்தகால வரலாறு எனும் அடிப்படையின் மீதே நிகழ்காலம், எதிர்காலம் என்னும் கட்டடங்களைக் கட்டமுடியும்.

மற்றும் சரித்திரம் என்னும் சல்லடையில் சலித்தெடுக்கப்பட்ட பல உண்மைகள் வருங்காலத்திற்கான வழிமுறைகளை வகுத்துக் கொள்ள வகை செய்கின்றன. சான்ருகப் புரட்சிகளைப்பற்றிப் படிக்கும்போது அவை ஏற்படக் காரணம் என்ன, அவை ஏற்படாமல் எங்ஙனம் தடுக்க முடியும் என்பனவற்றை நாம் அறிந்துகொள்ளுகிருேம். பிரிட்டிஷ் பேரரசைஎதிர்த்துச் சுதந்திரம் அடைந்த அமெரிக்காவைப் பின்பற்றிப் பல நாடுகள் சுதந்திரம் அடைந்திருப்பது கண்கூடு. மாஜினி, கவூர், கரிபால்டி போன்ற இத்தாலிய தேசீயத் தலைவர்களின் போராட்டங்களைப் படித்து உற்சாகம் பெற்றவர்களே ஜவஹர்லால் நேரு போன்ற விடுதலை வீரர்களாவர்.

மற்றும் வரலாற்றுப் படிப்பு மனிதனது மனத்தை விரிவடையச் செய்கிறது. நாம் வாழ்ந்தால் போதும், பிறன் எக்கேடு கெட்டால் என்ன என்ற குறுகிய மனப்பான்மையை வரலாற்றுப் படிப்பு போக்கடிக்கிறது. ஒரு நாடு எவ்வளவு தூரம் மற்ற நாடுகளுக்குக் கடன் பட்டிருக்கிறது என்பதை வரலாற்று மாணவன் நன்கு தெரிந்து கொள்ளுகிருன். சுயநலத்தின் விளைவாக ஏற்படுகின்ற போராட்டங்கள் உலக நாகரிக வளர்ச்சிக்கு எவ்வளவு இடையூருக உள்ளன என்பதை அவன் நன்கு புரிந்துகொள்ளுகிருன். சகோதரத்துவம், சமத்துவம் என்ற கொள்கைகள் அவன் மனத்தில் ஆழ்ந்து பதிந்து விடுகின்றன. தனது நாட்டுப் பிரச்சினைகளை அவன் சர்வ தேசியக் கண்கொண்டு நோக்குகிருன். அதே சமயத்தில் தனது நாட்டின் முன்னேற்றத்தையும் அவன் கருதத் தவறுவதில்லை. வரலாறு நாட்டுப்பற்றை (Patriotism) வளர்க்கிறது. ஆனல், தேசிய வெறியை உண்டாக்குவதில்லை. நாமும் வாழவேண்டும்; உலகமும் வாழவேண்டும்; 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற பரந்த மனப்பான்மை கொண்ட உலகக் குடிமகனை வரலாறு உருவாக்குகின்றது.

மற்றும் வரலாறு ஏனைய சமுதாய நூல்களுக்கெல்லாம் தாய் போன்றது. வரலாறின்றேல் அரசியல் இல்லை. பொருளாதாரம், சமூகவியல், உளவியல், மானிடவியல் (Anthropology) போன்ற சமுதாய சாத்திரங்கள் எல்லாம் வரலாற்றுச் சுரங்கத்திலிருந்தே தமக்கு வேண்டிய மூலப்பொருள்களைத் தோண்டி எடுத்துக் கொள்ளுகின்றன.

சாதாரண பொது அறிவு வளர்ச்சிக்கும்கூட வரலாற்றின் துணை பெரிதும் தேவைப்படுகிறது. இக்கால நாளேடுகளையும் சஞ்சிகைகளையும் புரட்டினால் நூற்றுக்குத் தொண்ணூறு பங்கு செய்திகள் வரலாற்றுத் தொடர்புள்ளவைகளாகவே இருக்கக் காண்கிறோம். யூத-அரபு போராட்டம், ஆப்பிரிக்க நிறவெறி (Apartheid), அமெரிக்க நீக்ரோக்களின் போராட்டம் இவற்றையெல்லாம் புரிந்துகொள்ள வரலாற்றறிவு இன்றியமையாதது. ஒலிம்பிக் என்ற உலக விளையாட்டைப்பற்றி அறிந்துகொள்ள கிரேக்க வரலாற்று அறிவு தேவைப்படுகிறது. இலக்கியங்களில் வருகின்ற ஏராளமான மேற்கோள்களை ரசிக்கவும் வரலாற்றறிவு இன்றியமையாதது. எகிப்தியப் பிரமிடுகள், மகாபலிபுரச் சிற்பங்கள், தாஜ்மகால் முதலியவைகளை அறிந்து அனுபவிக்க வரலாற்றறிவு எவ்வளவு தேவை என்பது சொல்லாமலே பெறப்படும்.

மேற்கூறிய பயன்களுக்காக மட்டுமேயன்றி அதற்கே உரித்தான ஓர் இன்பம் அளிக்கும் தன்மைக்காகவும் வரலாறு படிக்கப்படுகின்றது. வரலாற்றைப் படிக்கும்போது உலகப் பயணத்தில் ஈடுபட்டுள்ளதுபோல் உணருவதாக ஓர் ஆசிரியர் கூறுகிறார். ஆம்! வரலாறு எனும் கப்பல் மூலமாக நாம் காலமெனும் கடலுள் சென்று பல்வேறு காலங்களில் நடைபெற்ற பல்வேறு நிகழ்ச்சிகளைக் கண்டு களிபேருவகை எய்துகின்றோம். உள்ளம் குதூகலத்தால் நிறைந்து பெரிதும் உற்சாகம் பெறுகின்றது.

*நாகரிகம் பற்றிய பொருள் விளக்கம்*

வரலாற்றின் தன்மைபற்றி மாறுபட்ட கருத்துகள் இருப்பது போலவே நாகரிகம் என்றால் என்ன என்பதுபற்றியும் அறிஞர் பெருமக்களிடையே பல்வேறு கருத்துகள் உலவுகின்றன. ஓர் சமுதாயமானது உச்ச நிலையை அடைந்து அறிவுத் துறையிலும் ஆன்மீகத் துறையிலும் பெரிதும் வளர்ச்சியடைந்துள்ளபோதுதான் அது பண்பட்ட சமுதாயம் எனக் கருதத்தகும் என்றும், நாளடைவில் அவை சீரழிந்த நிலையை எய்துகின்றபொழுதே அதை நாகரிக சமுதாயம் என்று கருதத்தகும் என்றும் ஆஸ்வால்டு ஸ்பெங்லர் (Oswald

Spengler) என்ற ஜெர்மானிய மெய்யறிஞர் கூறுகின்றார். ஆர்னால்டு டாயின்பீ (Arnold Toynbee) என்பார் நன்கு பண்பட்ட ஒவ்வொரு சமுதாயத்தையுமே ஒரு நாகரிகம் எனக் கருதலாம் என்று குறிப்பிடுகின்றார். நாகரிகம் அடைந்த சமுதாயங்கள் வேறு, நாகரிகம் அடையாத பழங்குடிச் சமுதாயங்கள் (Primitive Societies) வேறு என்று அவர் பிரிவுபடுத்திக் காண்கின்றார். பழங்குடிச் சமுதாயங்கள், ஒரு சில மக்களை உடையதாய் ஒரு குறிப்பிட்ட குறுகிய நிலப் பாங்கில் ஒரு குறுகிய கால இடைவெளியில் வசித்து வருகின்ற மக்கட் கூட்டமாகும். ஆனால், அவை நாகரிகப் பாதையில் ஓரளவு முன்னேறி அத்துடன் நின்றுவிடுகின்றன. நாகரிகமடைந்த சமுதாயங்கள் நாளுக்கு நாள் முன்னேறிக்கொண்டிருப்பனவாகும்.

பழங்குடி மக்களை நாம் காட்டுமிராண்டிகள் (Barbarians) என்றும், தற்கால மக்களை நாகரிகமுள்ளவர்கள் என்றும் சாதாரணமாகக் கூறுவது வழக்கம். ஆனால், பழங்குடி மக்களிடத்தேயும் ஒரு வகையான அரசியலமைப்பு, சமுதாயக் கட்டுக்கோப்பு, பண்பட்ட பழக்க வழக்கங்கள், கலைகள் முதலியவைகளைக் காண்கின்றோம். விருந்தினர்களை உபசரித்தல், உண்மை பேசுதல், ஒழுக்கமாய் இருத்தல் இவைகளில் பழங்குடி மக்கள் நாகரிக மனிதனையும் விஞ்சியிருப்பதை நாம் எளிதில் காணலாம். இதற்குச் சான்றாக ரவீந்திர நாத் தாகூர் (Rabindra Nath Tagore) வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியைக் கூறுகின்றார். நாகரிகம் உடையோர் என்று கூறிக்கொள்ளுகின்ற ஆங்கிலேய வீரர் சிலர் விமானத்தில் பறந்து எல்லைப்புறக் குடிகளின்மீது குண்டுமாரி பொழிந்தனர். அதன் பின் பழங்குடி வீரர்கள் அவ் விமானத்தைச் சுட்டுவீழ்த்தினர். வீழ்ந்த அவ் விமானத்தில் இருந்த வீரர்களை அம் மக்கள் கொல்லவில்லை. தம் இல்லங்களுக்கு அழைத்துச் சென்று அவர்களுக்கு இன்னமுது அளித்து உபசரித்தனர். இவ் இருவகை மக்களுள் யாருடைய நடத்தை நாகரிகமானது என்று தாகூர் கேட்கின்றார். பழங்குடி மக்கள் உண்மையில் ஆங்கிலேயர்களை விடப் பண்புடையவர்கள் என்று அவர் கூறுகின்றார். எனவே, நாகரிகம் இல்லாதவர்களிடத்தே பண்பு இருப்பதும், நாகரிகம் உடையவர்களிடத்தே பண்பு இல்லாமலிருத்தலும் கூடும். பண்பு என்பது அக வாழ்க்கையைப் பற்றியது. அக வாழ்க்கையில் பழங்கால மக்கள் நல்ல வளர்ச்சி அடைந்திருந்தனர் எனத் தெரிகிறது. ஆகவே, பழங்குடி மக்களை நாகரிகமற்றவர்கள் என்று கூறும்போது இக்காலத்தே காணப்படுகின்ற புறவுலகச் சாதனங்கள் (Worldly comforts) அவர்களிடையே இல்லை என்பதையே நாம் குறிக்கின்றோம்,

**நாகரிகமும் பண்பாடும் (Civilisation and Culture)**

நாகரிகம் (civilisation) வேறு, பண்பாடு (culture) வேறு என்று ஒருசில ஆசிரியர் கூறுவர். நாகரிகம் என்பது இயற்கையை வென்று புறவுலகத்தே மனிதன் ஏற்படுத்திக்கொண்டுள்ள சௌகரியங்களை மட்டுமே குறிக்கும் என்றும், பண்பாடு என்பது மனிதன் தனது மனத்தகத்தே எழுகின்ற கோபம், காழ்ப்பு, பொருமை போன்ற குற்றங்களை நீக்கி அன்பு, ஒற்றுமை போன்ற குணங்களை வளர்த்து மனம் சமநிலை எய்துவதையே குறிக்கும் என்றும் அன்னார் கூறுவர். புறவுலக இயல்பை வெல்வதால் நாகரிகமும், அகவுலக இயல்பை வெல்வதால் பண்பாடும் ஏற்படுகின்றது. புறவுலக முன்னேற்றம் இன்றியும், பண்பாடு அமைய முடியும். ஆனால், பண்பாடு இல்லாத புறவுலக முன்னேற்றம் பயன் தராது. அதனுற்றான் அறிவியலில் இவ்வளவு முன்னேறியுள்ள தற்கால மனிதர்கள் இன்னும் ஒருவரோடு ஒருவர் போரிட்டு மடிகின்றனர். பேராசையும், வெறுப்பும், சுயநலமும் இன்னும் உலகில் தாண்டவமாடுகின்றன. பண்பட்ட மனிதனுடைய உள்ளம் அழகிய நற்குணங்களை உடையது. தன்னுயிர்போல் மன்னுயிரை பாவிக்கின்ற தன்மையை அது வளர்ப்பது. ஒப்புரவு அறிதல், உலகத்தோடு ஒட்ட ஒழுகல், சகிப்புத் தன்மை (tolerance) முதலியவை பண்பாட்டு வளர்ச்சியின் அறிகுறிகளாகும். இவ் வுலகில் நாம் காணும் இசை, நாட்டியம், சிற்பம் முதலிய கலைகள் யாவும் பண்பாட்டின் கூறுகளாகும். மொத்தத்தில் உள்ளத் துறையிலும், ஆன்மீகத் துறையிலும் மனிதன் பெற்றுள்ள முன்னேற்றங்கள் யாவும் பண்பாடு என்று அழைக்கப்படுகின்றன.

நாகரிகம் என்பது புறவுலக முன்னேற்றத்தை மட்டுமே குறிப்பிடுகின்றது என்று சிலர் கூறுவர். அதில் படிப்படியான முன்னேற்றம் உண்டு. சான்ருக, வில்லையும் அம்பையும் போருக்குப் பயன்படுத்திய மனிதன் இன்று அணுகுண்டுகளைப் பயன்படுத்துகிருன். அன்று மரக் கலப்பையைப் பயன்படுத்திய மனிதன் இன்று இயந்திரக் கலப்பையைப் பயன்படுத்துகிருன். நீரில் மிதக்கிருன். வான வெளியில் பறக்கிருன். வெண்ணிலவை முத்தமிடும் ஏவுகணைகளை ஏவுகிருன். ஆனுல், இது மட்டும்தான் நாகரிகம் என்பதை டாயின்பி போன்ற ஆசிரியர்கள் ஒப்புக்கொள்ளுவதில்லை. புற முன்னேற்றம், அக வளர்ச்சி இரண்டும் கலந்ததே நாகரிகம் என்று இன்று பொதுவாக எண்ணப்படுகிறது. புற இயற்கைச் சக்திகளை மனிதன் முதலில் வெல்ல வேண்டும். அதன்பின் அகத்தே எழுகின்ற சவால்களை அவன் மேற்கொள்ள வேண்டும். அந்தச் சவால்களை (challenges) எந்த அளவுக்கு அவன் மேற்கொள்ளுகிருனே அந்த அளவுக்கே அவன் நாகரிகம் உடையவன் என்பது அவர்தம் கருத்தாகும்.

எனவே, பண்பாட்டை (culture) உட்கொண்ட நாகரிகமே உண்மையான நாகரிகமாகும். இல்லெனில் அது போலி நாகரிகம் அல்லது புற நாகரிகம் எனப்படும். அகப் பண்பாட்டை வளர்க்கத்தக்க சமுதாய அமைப்பே நாகரிகம் என்று வில் டூரான்ட் (Will Durant) என்னும் ஆசிரியர் கூருநிற்பர். அத்தகைய சமுதாய அமைப்பில் காணப்படுகின்ற கூறுபாடுகள் நான்கு. அவையாவன: பொருளாதார வளம், அரசியல் அமைப்பு, நன்னெறி மரபுகள், கல்வி, கலை வளர்ச்சி.

*நாகரிகத்தின் கூறுபாடுகள்*

முதலாவதாகப் பொருளாதார வளம். ஒரு சமுதாயத்தின் வளர்ச்சிக்கு நிலையான பொருளாதார வாழ்க்கை இன்றியமையாதது. மிருகங்களை வேட்டையாடியும், மீன்களைப் பிடித்தும், பழங்களையும் கிழங்குகளையும் பறித்துத் தின்றும் நாடோடியாய் வாழ்க்கை நடத்தி வந்த வரையில் மனிதன் நாகரிகம் அடையவில்லை. விவசாயத்தில் ஈடுபட்டு ஓரிடத்தில் நிலையாக வேரூன்றிய பின்னரே மக்களிடையே நாகரிகம் அரும்பலாயிற்று. பல தொழில்கள் ஏற்பட்டன. வாணிபம் வளர்ந்தது. சமுதாயப் பிரிவுகளும், அரசியல் அமைப்புகளும் ஏற்பட்டன. சமயம், கலை இவற்றில் மனிதனுக்கு ஈடுபாடு ஏற்பட்டது. கிராமத்தில் விவசாயத்தால் வித்திடப்பட்ட நாகரிக வாழ்க்கை நகரத்தில் முகிழ்த்து மணம் வீசத் தொடங்கியது. உண்மையில் நகர வாழ்க்கையில்தான் நாகரிகம் வளர்ந்தது. நகரத்துக்கும் நாகரிகத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. நகரத்தில்தான் மனிதன் ஒன்றுகூடிப் பல வினைகளைச் செய்தான். பல பேருடைய மூளைகள் வேலை செய்யத் தொடங்கியதாலேயே பல அறிவியல் படைப்புகள் ஏற்பட்டன. அதனால் மக்கள் பல வாழ்க்கை வசதிகளைப் பெற்றனர்.

இரண்டாவதாக நாகரிகச் சமுத்தாயத்தில் காணப்படுவது அரசியல் அமைப்பாகும். ஆதியில் நாடோடியாய் வாழ்ந்த மனிதர்கள் ஓரிடத்தில் நிலையாக வாழத் தொடங்கிய பின் ஒருவருக்கொருவர் சச்சரவின்றி அமைதியாய் வாழ ஒருசில நெறிமுறைகளை வகுத்துக் கொண்டனர். அவற்றைச் செயல்படுத்தி ஓர்அரசியல் அமைப்பையும் ஏற்படுத்தினர். கோனாட்சி, குடியாட்சி போன்ற பல்வேறு அரசியல் அமைப்புகள் இல்லாத சமுதாயத்தை நாகரிகம் உடையதென்று நாம் கருதுவதற்கில்லை.

மூன்றாவதாக ஒழுக்கநெறிகள்(Morality). அரசியல் சட்டங்கள் புற வாழ்க்கையில் அமைதியை ஏற்படுத்த உதவியது போல அக வாழ்க்கையில் ஒழுங்கை ஏற்படுத்தப் பல நெறிமுறைகளை மக்கள்

வகுத்துக் கொண்டனர். உண்மை பேசுதல், ஏமாற்ருமை, கற்பு நெறி போன்ற பல நன்னெறிகளை மக்கள் வகுத்துக் கொண்டனர். அவற்றை வற்புறுத்தச் சமயங்கள் ஏற்பட்டன. அவைகளோடு ஒரு சில, மூட நம்பிக்கைகளும் வளர்ந்தன. எனினும் மக்களின் ஒழுக்கம் கெடாமலிருக்க அவைகளும் தேவைப்பட்டன. இவை யாவும் நாகரிகமடைந்த சமுதாயத்தின் பிரிக்க முடியாத கூறுபாடுகளாக அமைந்துவிட்டன.

நான்காவதாகக் கல்வி, கலை வளர்ச்சி. காட்டுமிராண்டிகளுக்கும் நாகரிக மக்களுக்கும் உள்ள முக்கிய வேறுபாடு இவற்றில்தான் அடங்கியுள்ளது. மனிதன் ஓர் சிந்திக்கும் பிராணி. பேச்சாலும் எழுத்தாலும் மனிதன் என்றைக்குத் தானுகச் சிந்தித்து, அங்ஙனம் சிந்தித்த தனது கருத்துகளைப் பிறரோடு பரிமாறிக்கொள்ள ஆரம்பித்தானே அன்றே கல்வி தோன்றியது. மொழிகளும் நூல் களும் பிறந்தன. இசையாலும், நாட்டியத்தாலும், சிற்பத்தாலும், ஓவியத்தாலும் என்றைக்கு மனிதன் தனது உள்ளத்து உணர்ச்சி களைப் புறத்தே பிரதிபலிக்கக் கற்றுக்கொண்டானே அன்றே கலையும் பிறந்தது. ஒரு சமுதாயத்தின் புறநாகரிக வளர்ச்சியை அதில் காணப்படுகின்ற விஞ்ஞான வசதிகளைக் கொண்டு நாம் எவ் வாறு கணக்கிடுகின்ருேமோ, அதே போன்றுதான், ஒரு சமுதா யத்தின் அக நாகரிக வளர்ச்சியின் அளவைக் கல்வி கேள்விகளிலும், கலைகளிலும் அஃது அடைந்திருக்கின்ற மேம்பாடுகளிலிருந்து நன்கு கணித்துவிடலாம். இங்ஙனம் அகம், புறம் ஆகிய இரு துறை களிலும் பல்வேறு முன்னேற்றங்களை நாளுக்கு நாள் பெற்றுவரு கின்ற ஒரு சமுதாயத்தைத்தான் நாகரிகம் அடைந்த சமுதாயம் என்று வரலாற்ருசிரியர்கள் கூறுவர்.

இதே கருத்தைத்தான் நம் தண்டமிழ்ப் புலவர் திருவள்ளுவப் பெருந்தகையும் கூறிச் சென்றுள்ளார். கல்வியறிவுடையவர்களே மக்கள், ஏனையோர் விலங்குகளுக்குச் சமம் என்று பொருள்படு கின்ற 'விலங்கொடு மக்க ளனையர், இலங்குநூல் கற்ருரோ டேனை யவர்' என்ற திருக்குறள் ஈண்டு நினைவுகூர்தற்பாற்று. அறிவின் பயனுக எய்தப்பெற்ற முன்னேற்றம் மட்டும் நாகரிகமாகாது. அக ஒழுக்கம் பண்பட வேண்டும் என்பது குறளாசிரியரின் கொள்கை யாம். 'அரம்போலும் கூர்மைய ரேனும், மரம்போல்வர் மக்கட் பண்பில்லாதவர்' என்பது குறள். அத்தகைய மக்கட்பண்பு(Huma-nism) உள்ளவர்களால்தான் உலகம் நடைபெறுகிறது என்பதைப் 'பண்புடையார்ப் பட்டுண்டு உலகம், அஃது இன்றேல் மண்புக்கு மாய்வது மன்' என்று அவர் அழகாக எடுத்துரைத்துள்ளார்.

*நாகரிகங்களின் தோற்றத்திற்கான காரணங்கள்*

உலகத்தின் பல்வேறு பகுதிகளில் அவ்வப்போது தோன்றிய பல்வேறு நாகரிகங்கள் எத்தகைய சூழ்நிலைகளால் முதன்முதலில் உருவாயின? அவற்றின் வளர்ச்சிக்கான காரணங்கள் யாவை? அவற்றில் ஒருசில நாகரிகங்கள் ஏனையவற்றைவிடப் பல்லாற்றானும் சிறந்து விளங்கியது எங்ஙனம்? என்பன போன்ற கேள்விகளுக்கு வரலாற்றாசிரியர்கள் பல்வேறு வகையான விடைகளைத் தந்துள்ளனர். அவர்கள் அனைவரும் தாம் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என வாதிக்கும் முறையில் தத்தம் கருத்தையே பெரிதும் வலியுறுத்திக் கூறியுள்ளனர். பொருளாதார வளமையே நாகரிகத்தின் தோற்றத்திற்கு அடிப்படையான காரணம் என்பர் சிலர். காலநிலை மாறுபாடே நாகரிகம் அரும்புதற்கான சூழ்நிலையை உருவாக்குகிறது என்பர் வேறுசிலர். மற்றொரு நாகரிகத்தின் தொடர்பாலேயே ஒரு புது நாகரிகம் உருவாகிறது என்று சாதிப்பர் இன்னும் சிலர். ஆனால், நுணுகி ஆராயும்பொழுது ஒரு நாகரிகம் தோன்றுவதற்குப் பல்வேறு சூழ்நிலைகள் அடிப்படையாய் இருப்பதை நன்கு அறியலாம்.

*புவியியல் கொள்கைகள்* (Geographical Theories)

நாகரிகங்களின் தோற்றம்பற்றிப் பேசப்படுகின்ற பல்வேறு கொள்கைகளில் மிக முக்கியமானவை புவியியலைச் சார்ந்த கொள்கைகள் ஆகும். அதிலும் தட்ப வெப்ப நிலையைப் (Climate) பொறுத்தே நாகரிகங்கள் அமைகின்றன என்பது பல அறிஞர்களுடைய வாதமாகும். அரிஸ்டாடில் (Aristotle), மான்டெஸ்க் (Montesquieu) போன்ற அறிஞர்கள் இத்தகைய கருத்தையே வற்புறுத்துகின்றனர். எல்ஸ்வொர்த் ஹன்டிங்டன் (Ellsworth Huntington) என்ற தற்கால அமெரிக்கப் புவியியல் வல்லுநர் இத்தகைய கருத்தையே பெரிதும் வற்புறுத்துகிறார். காலநிலையின் தூண்டுதலால் அன்றி எந்த நாகரிகமும் உச்சநிலையை எய்தியதில்லை என்பது அவரது கோட்பாடாகும். ஒரு குறிப்பிட்ட காலநிலையில்தான் மக்கள் தங்களது ஆற்றல்களை முழுமையாக வெளிப்படுத்த முடியுமென்றும் முப்பத்தெட்டு பாகைக்கும் (degrees) அறுபத்தி நான்கு பாகைக்கும் இடைப்பட்ட ஓர் காலநிலையில்தான் மனிதனது மனம் உற்சாகமாக வேலை செய்து புதிய நாகரிகம் ஒன்றினைப் படைக்க முடியும் என்பதும் அவரது திடமான நம்பிக்கையாகும். அத்துடன் வேறு சில சூழ்நிலைகளும் தேவை என்று அவர் கூறுகின்றார். காற்றில் ஈரம் இருக்க வேண்டும். ஏறக்குறைய 75 சதவிகித ஈரம் காற்றில் இருப்பது நாகரிக வாழ்க்கைக்குப் பெரிதும் உகந்தது. காலநிலை அடிக்கடி மாறுபடுகின்ற சூழ்நிலையும் நாகரிக வளர்ச்சிக்குத்

தேவையானதாகும். திடீர் திடீர் என்று தோன்றுகின்ற புயல், மழைக்காற்று போன்றவை தட்ப வெப்ப நிலையில் பல மாற்றங்களை உண்டாக்கும். அத்தகைய மாற்றங்களால்தான் மனிதன் புதியதொரு தெம்பையும் உணர்ச்சியையும் பெறுகின்ருன் என்பது அவரது வாதமாகும்.

நடைமுறையில் பார்க்கும்போது காலநிலை வேறுபாட்டுக் கொள்கையில் ஓரளவு உண்மை இருப்பதாகவே தோன்றுகிறது. குளிர் நிறைந்த ஆர்டிக் பிரதேசத்திலோ வெப்பக்காற்று வீசுகின்ற சகாரா பாலைவனத்திலோ இருள் நிறைந்த ஆப்பிரிக்கக் காடுகளிலோ வறட்சி நிறைந்த அமெரிக்கப் பகுதிகளிலோ நாகரிகம் எதுவும் தோன்றவில்லை என்பது நாம் கண்கூடாகக் காணுகின்ற ஓர் உண்மையாகும். மற்றும் இன்றைக்குப் பாலைவனமாகக் காட்சியளிக்கின்ற ஒரு பிரதேசமானது ஒரு காலத்திலே செழுமைமிக்க புல்வெளிகளாக இருந்தனவென்பதையும், அச்சமயத்தேதான் அங்கே நாகரிகங்கள் தோன்றிவளர்ந்தனவென்றும் நாம்அறியவருகின்ருேம். சான்ருக இன்றைக்குப் பாலைவனமாகக் காட்சியளிக்கின்ற சகாராப் பிரதேசத்திலும் சிந்து வெளியிலும் ஒருகாலத்தே நல்ல மழைபெய்து கொண்டிருந்ததென்றும், நீர்வளமும் நில வளமும் கொழித்ததென்றும், மக்கள் அங்கு நல்ல மாளிகைகளைக் கட்டிக்கொண்டு நகர வாழ்க்கையை வாழ்ந்தனர் என்றும் தெரிகிறது. சிந்துவெளியில் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ள ஹரப்பா, மொகஞ்சதாரோ போன்ற பெரு நகரங்கள் இக் கருத்தை நன்கு வலியுறுத்துகின்றன. பாலைவனத்தில் தென்படும் பாதைகள், இன்றைக்கு நீரே இல்லாத ஆறுகளில் காணப்படும் பாலங்கள் முதலியவை காலநிலை மாறுபாட்டால் எங்ஙனம் நாகரிகங்கள் வீழ்கின்றன என்பதை நன்கு புலப்படுத்துகின்றன.

அமெரிக்காவில் ஒரு காலத்தே சீரும் சிறப்புமுற்றுத் திகழ்ந்த மாயா நாகரிகமானது இன்று மறைந்துபோய்விட்டது. அதன் அழிபாடுகள் மெக்ஸிகோ, கௌதிமாலா, ஹாண்டூராஸ் போன்ற இடங்களில் இன்றும் காணப்படுகின்றன. அங்கு வாழ்ந்த மக்கள் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாய் பெரும் நகரங்களைக் கட்டிக்கொண்டு வாழ்ந்ததாகத் தெரிகிறது. கணிதம், வானவியல், சிற்பம், கட்டடக் கலை ஆகியவற்றிலெல்லாம் அவர்கள் வியத்தகு மேன்மையை எய்தியிருந்தனர். ஆனல், இன்றைக்கோ அந்நாகரிகம் இருந்தவிடங்களில் அடர்த்தி மிக்க காடுகள்தாம் காணப்படுகின்றன. அத்தகைய காடுகள் ஆதியிலேயே அங்கு இருந்திருக்குமேயானல் பண்பட்டதோர் நாகரிகம் அங்குத் தோன்றியிருக்க முடியாது. மாயா நாகரிகம் வெள்ளையர்களால் அழிக்கப்பட்டதென்பது உண்மைதான்;

எனினும், தட்பவெப்ப நிலையில் ஏற்பட்ட மாறுபாடும் அந் நாகரிகத்தின் அழிவுக்கு ஒரு முக்கிய காரணமாய் இருந்திருக்கக்கூடுமென்பதை எவரும் மறுக்க வொண்ணுது.

காலநிலை மாறுபாட்டுக் கொள்கையைப் பலர் கடுமையாகத் தாக்கியுள்ளனர். ஒரு காலத்தே நாகரிகத்தின் தொட்டில்களாகத் திகழ்ந்த கிரேக்கமும் ரோமும் இன்றைக்கு அந்த நிலையில் இல்லாததற்குக் காலநிலை ஒரு காரணமென்று கருதுவதற்கில்லை. அன்றிருந்த தட்ப வெப்ப நிலை இன்றும் அப்படியேதான் இருக்கிறது. இருப்பினும் அந்நாகரிகங்கள் போன இடம் தெரியவில்லை. எகிப்து, மெசபடோமியா போன்ற இடங்களில் பண்டைக் காலத்தே தோன்றி வளர்ந்த பெரு நாகரிகங்கள் மாண்டுபோனமைக்குக் காரணம் காலநிலை மாறுபாடுதான் என்று யாரும் கூறிவிட முடியாது. ஏனெனில் காலநிலையில் அங்கெல்லாம் அதிக மாற்றங்கள் ஏற்படவில்லை.

**மண்வள இழப்புக் கொள்கை** (Soil Exhaustion Theory)

இக்காலத்திய ஒரு சில விஞ்ஞானிகள், பேரரசுகள் பல இவ்வுலகத்தே மறைந்துவிட்டமைக்குக் காரணம் அப் பேரரசுகளில் மண்வளம் நாளுக்கு நாள் அருகி மறைந்துவிட்டதேயாகும் என்று கருதுகின்றனர். மனிதன் இயற்கையை அழிப்பதன்மூலம் தன்னையே அழித்துக்கொள்கிருன் என்பது அவர்தம் வாதமாகும். எங்கெங்கெல்லாம் நிலவளமும் நீர்வளமும் நன்கு பாதுகாக்கப்படுகின்றனவோ அங்கெல்லாம் உயர்ந்த நாகரிக வாழ்க்கை வளர்ந்து வரும். ஆனல், பலஇடங்களில் மனிதன் பயிர் சாகுபடிக்காகவும், கால்நடை மேய்ச்சலுக்காகவும் நிலங்களை அளவுக்கு மீறிப் பயன்படுத்தியதன் விளைவாக அவற்றின் வளமையை வற்றச் செய்துவிட்டான். எனவே, சோலைவனங்களாயிருந்த பலவிடங்கள் பாலைவனங்களாய் மாறின. செழிப்பான பூமியிருந்த வரையில் அங்கு நாகரிகம் செழித்தது. செழிப்பு குன்றக்குன்ற மக்களுக்கு இன்றியமையாத உணவுப்பொருள்கள்கூட அங்கு விளையவில்லை. இங்ஙனம் மனிதனின் முறைகெட்ட செயல்களால் ஏற்பட்ட பஞ்சத்தின் விளைவாகவே நாகரிகங்கள் சிதைந்தன. மக்கள் மண்வளம் மங்கிய இடங்களை விட்டுவிட்டுச் செழிப்பு நிறைந்த பிரதேசங்களுக்குக் குடிபெயர்ந்து விட்டார்கள். அடர்ந்த காடுகளை அழித்து அவற்றைச் சாகுபடிக்கு உகந்த நிலங்களாக மாற்றியதாலும் மனிதன் தன் அழிவைத் தேடிக்கொண்டான். வெள்ளங்களால் ஏற்படும் மண்அரிப்புகளைக் காடுகள் தடுத்து மண்வளம் குன்ருமல் பாதுகாத்தன. ஆனல், காடுகள் அழிக்கப்பெற்றதும் குன்றுகளின் சரிவுகளில் இருந்த மண் ஏராளமாக அடித்துச் செல்லப்பட்டது. அஃது ஆறுகளின் வழியே

ஓடிக் கடலில் வீணுகக் கலந்தது. இங்ஙனம் மனிதன் செயற்கை யாக வாழத் தொடங்கியதால்தான் நாகரிகத்தின் சீரழிவிற்கு வித் திட்டான் என்று பலர் கூறுகின்றனர்.

**தரையியல் கொள்கை (Topographical Theory)**

ஒரு நாட்டினுடைய இயற்கையமைப்புதான் அதன் நாகரிக வளர்ச்சிக்குக் காரணம் என்பர் ஒரு சிலர். 19ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த கார்ல் ரிட்டர் (Carl Ritter) என்ற ஜெர்மானிய அறிஞர் இத்தகைய கொள்கையை விதந்தோதியவர்களில் சிறந்தவராவார். கண்டங்களுடைய அமைப்பு, உருவம் முதலியவைகளுக்கு ஏற்பவே அதன் நாகரிக வளர்ச்சியும் அமையுமென்பது அவரது கோட் பாடாகும். சான்ருக, பெரிதும் உடைபட்ட கடற்கரையை உடைய நாடுகள் வாணிபத்தில் முன்னேறுகின்றன. ஏனெனில், நல்ல துறை முகங்கள் பல கடற்கரைகளில் ஏற்பட அத்தகைய அமைப்பு உதவு கின்றது. நாற்புறமும் நன்கு மலைகளாலும் காடுகளாலும் காக்கப் படுகின்ற நாடுகள் நாளடைவில் நலிவடைகின்றன. ஏனெனில், தமக்கு அபாயம் ஒன்றுமில்லை என்று அறிந்த மக்கள் சோம்பல் மீதுறப்பெற்று எத்தகைய முன்னேற்றத்திலும் நாட்டமில்லாதவர் களாய் மாறிவிடுகின்றனர். இங்ஙனம் மக்களது வாழ்க்கையில் ஒரு வகையான தேக்க நிலை ஏற்படுவதற்குப் புவியியல் அமைப்பு ஒரு காரணமாய் அமைகிறது. ஐரோப்பாவும் இங்கிலாந்தும் வாணிபத் தில் சிறந்து விளங்குவதற்குக் காரணம் அவற்றின் உடைபட்ட கடற்கரையே எனில் மிகையாகாது. கடற்கரை உடைபட்டிருப்ப தால் நாட்டுக்குள் நெடுந்தூரம் வரை நீர் செல்ல முடியும். அதனுல் மக்கள் கடல்பயம் சிறிதும் அற்றவர்களாக மாறிக் கடல் கடந்த வாணிபத்தில் பெரிதும் ஈடுபடுகின்றனர். வாணிப வளர்ச்சியால் பொருள்வளம் பெருகுகின்றது. பொருள் வளம் பெருகுவதால் நாக ரிகம் முகிழ்க்கிறது. ஐரோப்பாவில் தலைசிறந்த நாகரிகம் தோன்றிய தற்குக் காரணம் மேற்கண்ட இயற்கையமைப்பேயன்றி வேறன்று.

மக்களின் வாழ்க்கை முறையை இயற்கையின் இயல்பானது எங்ஙனம் மாற்றியமைக்கிறதென்பதை தாமஸ் பக்கில் (Thomas Buckle, 1821-62) என்னும் ஆங்கில வரலாற்றறிஞர் நன்கு விளக்கியுள்ளார். இரு வேறுபட்ட இயற்கைச் சூழ்நிலைகள் உலகில் உள்ளதாயும் அவற்றுள் ஒருவகை மனிதனின் கற்பனைத் திறனைத் (imagination) தூண்டுவதாயும், மற்றெருவகை அவனது அறிவுத் திறனை (intellect) வளர்ப்பதாயும் அவர் கூறுகிருர். சான்ருக, இந்தி யாவின் இயற்கைச் சூழ்நிலையானது முன்னைய வகையைச் சேர்ந்த தாகும். வானளாவிய மலைச் சிகரங்கள், நுழைதற்கரிய அடர்ந்த

காடுகள், வற்ருத பெரும் நதிகள், பயங்கரமான பாலைவனங்கள் முதலியவைகளைக் கொண்ட இந்தியா, மக்களின் உள்ளங்களிலே ஒரு வகையான அச்சத்தை ஏற்படுத்துகின்றது. பிரம்மாண்டமான இவ் வியற்கையின் முன் தான் எம்மாத்திரம் என்று மனிதன் நினைக்கின்ருன். எனவே, அவன் தன்னைத்தான் தியாகம் செய்ய முன் வருகின்ருன். தன் உடம்பைச் சித்திரவதைக்குள்ளாக்குகிருன். மழையில் நனைந்தும், குளிரில் நடுங்கியும், வெயிலில் வாடியும் அவன் கடுந்தவம் புரிகிருன். கற்பனையில் அவன் உள்ளம் மிதக்கிறது. உலகத்தையே அழிக்கவல்ல கொடூரமான கடவுளர்களை அவன் உண்டாக்கிக்கொண்டு அவற்றை அடைய மிகக் கடுமையான விரதங்களை அநுட்டிக்கிருன். 'வாழ்வாவது மாயம்; அது மண்ணாவது திண்ணம் என்ற வறட்டு வேதாந்தம்' மக்களிடையே வளர்வதற்கு இந்தியாவின் கம்பீரமான புவியியல் அமைப்பே காரணம் என்பது பக்கிலின் வாதமாகும். இரண்டாவது வகையான இயற்கைச் சூழ்நிலைக்கு அவர் கிரீஸ் நாட்டைச் சான்ருகக் காட்டுகிருர். கிரீஸின் இயற்கையமைப்பு சாதாரணமானது. மக்களை அஞ்சவைக்கத் தக்க அம்சங்கள் அதில் எதுவும் இல்லை. எனவே, மக்களிடையே தன்னம்பிக்கையும், எதுவும் நன்மையாகவே முடியும் என்ற நல்லெண்ணமும்(optimism) வளர்ந்தது. முயன்ருல் முடியாத தொன்றில்லை என்ற ஊக்கம் அவர்கள்பால் ஏற்பட்டது. அவர்களது உள்ளம் உயர்ந்தது. அதன் வழி அவர்களது நாகரிகமும் உயர்ந்தது. 'வெள்ளத்தனைய மலர்நீட்டம், மாந்தர்தம் உள்ளத்தனையது உயர்வு' என்ற குறள் மொழியை மெய்ப்பிக்கும் வகையில் கிரேக்கரின் வாழ்க்கை அமைந்ததென்ருல் அதற்கு மிக முக்கியமான தூண்டுகோலாயிருந்தது அவர்தம் நாட்டின் இயற்கையமைப்பேயாகும் என்பது பக்கிலின் நம்பிக்கையாகும்.

சுற்றுப் புறங்கள் மனிதனது வாழ்க்கையை மாற்றியமைக்கின்றன என்ற கொள்கையானது ஓரளவுக்கே பொருத்தமானதாகும். கிரேக்க நாகரிகத்தைத் தோற்றுவித்ததாகக் கருதப்படும் இயற்கைச் சூழ்நிலையில் அதிகமான மாற்றங்கள் எதுவும் அண்மைக் காலம்வரை ஏற்பட்டதாகத் தெரியவில்லை. அன்றைக்கிருந்த ஒலிம்பஸ் மலையும், ஈஜியன் கடலும், மற்றும் வளைகுடாக்களும், நதிகளும் துறைமுகங்களும் இன்றும் அப்படியேதான் இருக்கின்றன. இருப்பினும் இக்கால கிரேக்கர்களிடையே ஆக்கத்திறன் எதுவும் ஒளி விடுவதாகக் காணேம். அதேபோன்றுதான் இத்தாலிய நாகரிகமும். ஒருகாலத்தில் பேரரசொன்றை அமைத்து வீறுடன் விளங்கிய இத்தாலியர் இன்று சாதாரண மக்களாகக் காட்சியளிக்கின்றனர். இயற்கையமைப்பில் மாறுபாடு அதிகம் ஏற்படாத நிலையிலும்,

மக்களின் நாகரிகத்தின் தராதரம் அவ்வப்போது மாறுபடுவதெங்ஙனம்? எனவே, நாகரிகத்தை உருவாக்கவும், வளர்க்கவும், சமுதாயப் பொருளாதாரக் காரணங்கள் பல இருக்கவேண்டுமென்பது இதனுல் நன்குபெறப்படுகின்றது. மற்றும் மனிதன் பகுத்தறிவு படைத்தவன். அதைக் கொண்டு அவன் இயற்கையை வெல்ல வல்லவனுகிருன். எனவே, இயற்கை மனிதனைக் கட்டுப்படுத்துகிறது என்பதைவிட, மனிதன் இயற்கையைக் கட்டியாண்டு அதன்மூலம் நாகரிகத்தைப் படைக்கிருன் என்பதே பெரிதும் உண்மையாகும்.

*நாடோடிக் கொள்கை* (Nomad Theory)

உலக நாகரிகங்கள் பலவற்றைப் படைத்தவர்கள் நாடோடிக் கூட்டத்தினரே என்பது ஒரு சில வரலாற்றுசிரியர்களின் கருத்தாகும். இத்தகைய கருத்தைக் கொண்டவர்களுள் தலைசிறந்தவராக எண்ணப்படத்தக்கவர் ஃபிரான்ஸ் ஓப்பன்ஹீமர் (**Franz Oppenheimer**) என்னும் ஜெர்மானிய அறிஞராவார். நாடோடிகளான அராபியர்கள் சாரசனிக் (**Saracenic**) நாகரிகத்தையும், டியூடானியர்கள் ஐரோப்பிய நாகரிகத்தையும், ஆரியர்கள் இந்திய நாகரிகத்தையும் படைத்துள்ளதை அவர் தன் கொள்கைக்குச் சான்ருக எடுத்துக் காட்டுகிருர். நாடோடிகள் ஒற்றுமையுள்ளவர்கள். வலிவு மிக்கவர்கள். பால், இறைச்சி இவற்றை முக்கியமாக உண்பதால் அவர்களது உடலும் உள்ளமும் ஊட்டம் நிறைந்து விளங்குகின்றன. அவற்றைக் கொண்டு அவர்கள் தங்களைவிடப் பலவீனமான சுதேசிகளை எளிதில் வென்று அடிமைகளாக ஆக்கிக்கொள்ளுகின்றனர். அடிமைகள் வாழ்க்கை வசதிகளைச் செய்து கொடுத்துவிடுவதால், வெற்றி பெற்ற நாடோடிகள் நல்ல ஓய்வு நேரத்தைப் பெறுகின்றனர். பொருள் வசதி இருப்பதால் அவர்கள் தமது ஓய்வு நேரத்தை நன்கு பயன்படுத்தி நாளடைவில் நாகரிக வாழ்க்கையை உருவாக்குகின்றனர் என்பது அவர்தம் கருத்தாகும். மற்றும் உலகின் பல பாகங்களை வலியச் சென்று தாக்கியவர்கள் நாடோடிக் கூட்டத்தினராகவே இருக்கின்றனர். ஏனெனில், நாடோடிகள் பல மனைவியரை மணக்கும் வழக்கத்தினர். எனவே, ஏராளமான குழந்தைகளை அவர்கள் பெற்றெடுக்கின்றனர். அநேகமாக அவர்கள் ஆடு மாடு மேய்க்கும் தொழிலையே மேற்கொண்டிருப்பர். அவற்றின் பாலைக் கொண்டு குழந்தைகளை நன்கு வளர்க்கலாம். எனவே, பெண்கள் நீண்ட நாள்களுக்குத் தமது குழவிகளுக்குப் பாலூட்ட வேண்டிய அவசியமில்லை. அதன் விளைவாக அவர்கள் அடிக்கடி கருவுறுகின்ற வாய்ப்புகள் உண்டு. இன்னோரன்ன காரணங்களால் நாடோடிக் கும்பல்களிடையே மக்கள் தொகை அடிக்கடி கட்டுக்கடங்காமல் போய்விடுவது வழக்கம். மக்கள் தொகைப் பெருக்கைச் சமாளிக்க

அவர்கள் அண்டையிலிருந்த நாடுகளைத் தாக்குவர். இங்ஙனம்தான் அராபியப் பாலைவனத்தின் வடக்கேயுள்ள புல்வெளிகளினின்றும் பாபிலோனியர்கள், அஸிரியர்கள், சாலடியர்கள் போன்ற நாடோடிக் கூட்டத்தினர் வந்து மெசபடோமியப் பள்ளத்தாக்கைத் தாக்கினர். யூதர்கள், முஸ்லிம்கள் முதலியோர் அராபியப் பாலைவனத்திலிருந்து வெளிப் போந்தவர்களேயாவர். அவர்கள் தாம் பிறந்த நாட்டைவிட்டுப் பிற நாடுகளைத் தேடிச் செல்லக் காரணம், மக்கட் பெருக்கமும் உணவுப் பற்றுக் குறையுமேயாகும். விவசாயம் செய்ய முடியாததாலும், தெரியாததாலுமே அவர்கள் அண்டை நாடுகளின் மீது படையெடுக்க நேர்ந்தது. அங்ஙனம் படையெடுத்து சுதேசிகளை வென்ற பின் அவர்கள் வெல்லப்பட்டாரோடு கலந்து அவர்தம் பழக்க வழக்கங்களைப் பின்பற்றி ஓர் புதிய கலப்பு நாகரிகத்தைப் படைத்தனர். உடலாலும் உள்ளத்தாலும் சோர்ந்துபோயிருந்த சுதேசிகள் நாடோடிகளின் கலப்பால் புதிய இரத்தத்தையும், புத்துணர்ச்சியையும் பெற்றுப் புதிய நாகரிகத்துக்கு அடிகோலினர்.

ஒப்பன்ஹீமரின் இவ் வாதமும் ஒருதலைப்பட்சமானதேயாகும். ஏனெனில், உலக நாகரிகங்களிற் பல நாடோடிகளால் ஏற்படுத்தப் படவில்லை என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. சான்றாகப் பண்டைய எகிப்திய நாகரிகத்தைப் படைத்தவர்கள் நாடோடிகளல்லர். நன்கு நிலைபெற்ற வாழ்க்கை வாழ்ந்த வேளாண்மக்களே அந் நாகரிகத்தைத் தோற்றுவித்தனர். கி.மு. 2000 ஆம் ஆண்டிலேயே வாணிபத் துறையில் தலைசிறந்து விளங்கிய பினீஷியர்கள் ஆரம்பத்தில் நல்ல விவசாயிகளாகவே இருந்தனரெனத் தெரிகிறது. எனவே, நாகரிகங்களனைத்தையும் தோற்றுவித்தவர்கள் நாடோடிகளே என்று அறுதியிட்டுக் கூற முடியாது. நாகரிகத்தின் உறுதுணையான சக்கரம், வண்டி, நாணயம், நீர்ப்பாசன வசதி முதலிய பல்வேறு சாதனங்களை எல்லாம் கண்டுபிடித்தவர்கள் சமவெளியில் வாழ்ந்த விவசாயிகளே அன்றி, பாலைவனத்தில் வாழ்ந்த நாடோடிகள் அல்லர். நாடோடிகள் பொருள்களை அழிக்கத் தெரிந்தவர்களேயன்றி ஆக்கத் தெரிந்தவர்களல்லர் என்பது தார்ஸ்டீன் வெப்ளன் (Thorstein Veblan) என்ற அமெரிக்க மெய்யறிஞரின் கருத்தாகும். ஆனால், அவர்கள் எங்கெங்கு சென்றார்களோ அங்கெல்லாம் புதிய இரத்தத்தைப் பாய்ச்சி புதிய தெம்பையும் ஊக்கத்தையும் உண்டாக்கினார்கள் என்பது ஒருதலை. அத்தகைய ஊக்கம் புதிய நாகரிகங்களைத் தோற்றுவிக்க உறுதுணையாயிருந்ததென்பது வெளிப்படை. அத்துடன் பாபிலோனியர்களும், அஸிரியர்களும், ஹிப்ருக்களும் சென்று குடியேறிய பிரதேசங்கள் செழிப்பாயிருந்ததும் நாகரிக வளர்ச்சிக்குக் காரணமாயிருந்ததெனில் மிகையாகாது.

**துன்பியல் கொள்கை (Adversity Theory)**

துன்பம் நிறைந்த சூழ்நிலையில்தான், மனிதன் புதிய ஆற்றலையும் ஆக்கத் திறனையும் வெளிப்படுத்தி புதிய நாகரிகத்தைப் படைக்கிருன் என்பது அண்மையில் மறைந்துபோன டாயின்பீ எனும் ஆங்கில வரலாற்றுப் பேராசிரியரின் கொள்கையாகும். இயற்கையின் கடுமை எங்கெல்லாம் வலுவுற்றிருந்ததோ அங்கெல்லாம் தான் நாகரிகம் தோன்றியுள்ளது என்பார் டாயின்பீ. இத்தகைய இயற்கையின் கடுமையானது மனிதனது ஆற்றலுக்கு ஓர் அறைகூவலாக (Challenge) அமைகிறது. அவ் வறைகூவலை ஏற்றுப் பதிலளிக்க அல்லது எதிர்மாற்றம் (Response) தர மனிதன் முற்படுகிருன். அதனுல் அவன் இயற்கையின் சவாலைச் சமாளிப்பதோடுமட்டுமின்றி புதியதோர் நாகரிகத்தைப் படைத்தற்கான சக்தியையும் பெறுகின்ருன். ஆண்டிஸ் மலைகளிலும், மெக்ஸிகோவின் அடர்ந்த காடுகளிலும் காணப்பட்ட கடுமையான துன்பச் சூழ்நிலைகளே மாயா, அஸ்டக் (Aztec) போன்ற பண்டைய நாகரிகங்களைத் தோற்றுவித்தன. நைல் நதிக் கரையிலும், டைகிரிஸ் யூப்ரடீஸ் நதிகளின் கரைகளிலும், ஹ்வாங்கோ (சீனு) நதிக்கரையிலும், ஒரு காலத்தே மண்டிக்கிடந்த அடர்ந்த காடுகளும், கொடிய விலங்குகளும், நச்சுப் பாம்புகளுமே மனிதனது ஆற்றலை வெளிக்கொணர்ந்து பண்டைய எகிப்திய, சுமேரிய, சீன நாகரிகங்களைத் தோற்றுவித்தன. பாலினீஷியர்களுக்குக் கடல் ஒரு சவாலாயமைந்தது. ஆயிரக்கணக்கான மைல்கள் பரவியிருந்த கடலைக் கடந்து ஆசியாவை அடையும் முயற்சியில் வெற்றி பெற்ற பின்னரே அவர்கள் பாலினீஷிய நாகரிகத்தைத் தோற்றுவித்தனர். ஹிப்ரூக்களுக்கும், அராபியர்களுக்கும் பாலைவனம் (அரேபியா) ஓர் பெருஞ் சவாலாக அமைந்தது. அதுவே அவர்தம் பிற்கால நாகரிகத்திற்கு வித்திட்டது. இங்ஙனம் இயற்கையில் விளங்கும் தடங்கல்கள் நாகரிகங்களுக்கு வித்திட்டன. அதோடு செயற்கையில் ஏற்படும் இடையூறுகளும் மக்களது படைப்பாற்றலை வெளிப்படுத்த சில சமயம் உதவுகின்றன. எதிரியின் கைகளில் அடைந்த தோல்வியால் உந்தப்பட்டு, புதிய நாகரிகங்களைப் படைத்தோர் பலராவர். ரோமானியர்களிடம் முதல் பியூனிக் போரில் (Punic war) தோல்வியுற்ற பின்னரே கார்த்தஜீனியர்கள் (Carthagenians) ஸ்பெயினை வென்று அங்கு ஓர் பேரரசை நிறுவினுர்கள். ரோமானியர்களால் ஒடுக்கப்பட்டு ஒறுக்கப்பட்ட கிறிஸ்தவர்களே நாளடைவில் தம்மை வென்றவர்களையே—ரோமானியர்களையே தம் மதத்துக்கு மாற்றிவிடத்தக்க வலுவினைப் பெற்றனர். இங்ஙனம் மக்களிடையே மறைந்து கிடக்கும் படைப்பாற்றலை வெளிப்படுத்தும் கருவியாக இடுக்கண்கள் பயன்படுகின்றன என்பது டாயின்பீயின் சித்தாந்தமாகும். அவரது

கருத்தின்படி இடுக்கண்கள் இருந்தால்மட்டும் போதாது. அவற்றைச் சமாளிக்க வேண்டுமென்ற விருப்பமும் மக்களிடம் இருக்க வேண்டும். மெக்ஸிகோவிலிருந்த காடுகளைப் போன்று ஆப்பிரிக்காவில் வனங்களிருந்தபோதிலும், ஆண்டிஸ் மலைகளைப் போன்று ஆல்ப்ஸ் மலைகளிருந்தபோதிலும் அங்கெல்லாம் நாகரிகங்கள் தோன்றவில்லை. ஏனெனில், அங்கு வாழ்ந்த மக்கள் இயற்கையின் சவாலை ஏற்கும் உள்ளத்திறனைப் பெற்றிருக்கவில்லை. எனவே, ஒரு நாகரிகம் தோன்றவேண்டுமானால் இயற்கையாகவோ, செயற்கையாகவோ ஓர் சவால் இருக்கவேண்டும். அதோடு அதற்குப் பதில் கொடுக்கும் மனப்பாங்கும் மக்களிடை இருக்கவேண்டும். சவால், சமாளிப்பு (Challange and Response) ஆகிய இரண்டும் இருக்கின்ற இடத்தில்தான் நாகரிகம் தோன்றுகிறது. சவால் அத்துமீறிப் போனாலோ, அன்றி மிகவும் குறைந்திருந்தாலோ சமாளிப்பு தோன்றாது. தூந்திரப் பிரதேசத்திலுள்ள குளிர் அளவுக்கு மீறி இருப்பதால் மக்கள் அதைச் சமாளிக்க இயலவில்லை. எனவே, அங்கு நாகரிகம் தோன்றவில்லை. கிழக்கு ஆப்பிரிக்கக் காடுகளில் மனிதனுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் எளிதாகக் கிடைத்துவிட்டதால் அங்குச் சவால் என்பதே இல்லாமல் போய்விட்டது. அல்லது மனிதனது ஆற்றலை வெளிப்படுத்தும் அளவுக்கு அச் சவால் வலிவு பெற்றிருக்கவில்லை. எனவே, டாயின்பீயின் கருத்துப்படி ஒரு நாகரிகம் ஓரிடத்தில் தோன்றவேண்டுமானால், மக்களை எதிர்கொள்ளும் சவால்கள் அல்லது இடையூறுகள் மிக அதிகமாகவோ அன்றி மிகக் குறைவாகவோ இல்லாது, இரண்டுக்கும் இடைப்பட்ட நிலையில் மிதமான தன்மையுடையனவாயிருக்க வேண்டும். அதே சமயத்தில் அங்கு வாழும் மக்களிடையே இடையூறுகளை வெல்லவேண்டுமென்ற ஆர்வமும் உள்ளுணர்வும் இருக்கவேண்டும்.

டாயின்பீயின் இக்கருத்தைப் பலர் ஒப்புக்கொள்ள மறுக்கின்றனர். இடர் நிறைந்த சூழ்நிலையிலன்றி இன்பமும் ஓய்வும் நிறைந்த சூழ்நிலையிலேயே நாகரிகம் உண்டாகக் கூடும் எனப் பலர் கருதுகின்றனர். அடிமைகளைக் கொண்டு வேலை வாங்கியதாலேயே கிரேக்கர்களுக்கு ஓய்வு நேரம் மிகுதியாய்க் கிடைத்தது. சுகபோக வாழ்க்கையில் அன்னார் திளைத்தனர். ஓய்வும் சுகபோகமும் சேர்ந்தே கிரேக்கர்களின் கலைகளையும் பண்பாட்டையும் வளர்த்தன. வயிறு குளிர்ந்த பின்னரே கலைகளில் மனிதனுக்கு நாட்டம் ஏற்படுகிறது. செழிப்பான நதிப் பள்ளத்தாக்குகளில் பல நாகரிகங்கள் தோன்றியுள்ளதை நாம் காண்கிறோம். எனவே, இடையூறுகளின் இடையில்தான் நாகரிகங்கள் அரும்பக்கூடும் என்ற கொள்கையும் அவ்வளவாக ஏற்புடைத்தன்று என்பது நன்கு பெறப்படுகின்றது.

நாகரிகம் ஓரிடத்தில் தோன்றி வளர்வதற்கு இதுதான் காரணம் என்று அறுதி இட்டுக் கூறுதல் ஒண்ணுது. பல்வேறு காரணங்களின் மொத்த விளைவாகவே நாகரிகங்கள் தோன்றுகின்றன. மிதமான தட்பவெப்ப நிலை, துறைமுகங்களின் அண்மை, நீர் வளம், நிலவளம், கனிவளம் முதலிய இயற்கை வளங்கள் நாகரிகம் தோன்றுதற்குரிய புறச்சூழ்நிலைகள் என்பதில் ஐயமில்லை. நில வளமும், நீர்வளமுமிருந்தால்தான் விவசாயம் நடைபெறும். விவசாயம் நடைபெற்றால்தான் நிலையாக மக்கள் ஓரிடத்தில் வாழ்வார்கள். நிலையான வாழ்க்கையிருந்தால்தான் மக்களிடையே நாகரிகம் தோன்றும். மக்கள் தம்மிடையே தொடர்பு கொள்ளவும், வாணிபம் புரியவும், பொருளுற்பத்தி தேவை. பொருளுற்பத்திக்கு உலோகங்கள் தேவை. எனவேதான் நாகரிக வளர்ச்சிக்குக் கனி வளமும் தேவைப்படுகின்றது. ஆனல், இத்தனையும் இருந்தும் மக்களிடையே படைப்பாற்றலும் ஊக்கமும் இல்லை என்றல் பயன் ஒன்றுமில்லை. மக்களிடையே படைப்பாற்றல் வளரவேண்டுமானுல், படைப்பாற்றலிற் சிறந்த மற்றெரு மக்கட் கூட்டத்தோடு தொடர்பு இருத்தலும் இன்றியமையாதது. தூந்திரப் பிரதேச எஸ்கிமோக்களும், ஆஸ்திரேலிய சுதேசிகளும், ஆப்பிரிக்கக் காட்டுமிராண்டிகளும் நாகரிக மக்களின் தொடர்பின்மையின் விளைவாகவே கேவலம் மிருக வாழ்க்கையிலேயே பல்லாண்டுகளாகத் திளைத்து வந்தனர். நாகரிகமடைந்த ஐரோப்பியர்களின் தொடர்பு ஏற்பட்ட பின்னரே அங்கெல்லாம் மக்கள் நாகரிகப் பாதையில் நடைபோட ஆரம்பித்துள்ளனர். எகிப்து, சுமேரியா போன்ற இடங்களில் ஆதியிலேயே மக்கள் நாகரிகம் பெற்றிருந்ததனுலேயே அவர்களுக்கருகில் வாழ்ந்த பாபிலோனியர்கள், ஹிப்ரூக்கள், பினீஷியர்கள், பாரசீகர்கள், கிரேக்கர்கள் முதலியோர் பிற்காலத்தே தமக்கே யுரிய நாகரிகங்களைப் படைக்க முடிந்தது. கிரேக்க, ரோமானிய நாகரிகங்களின் தொடர்பாலேயே இன்றைய ஐரோப்பிய நாகரிகம் தோன்றியுள்ளது. இந்திய நாகரிகத்திலும், பல்வேறு நாகரிகங்களின் சாயலை நாம் நன்கு காணலாம். நாகரிக மக்களின் தொடர்பின்றி உலகின் ஏதோ ஓர் மூலையில் தனித்து வாழ்கின்ற மக்களிடையே நாகரிகம் தோன்றுவதில்லை என்பதும் நிலையற்ற நாகரிக வாழ்க்கை தோன்றவேண்டுமானுல் அதற்குரிய இயற்கைச் சாதனங்களோடு, ஓரளவேனும் நாகரிகமடைந்துள்ள மக்கள் கூட்டத்தினரின் தொடர்பும் செல்வாக்கும் பெரிதும் தேவை என்பதும் நன்கு பெறப்படும். மற்றும் ஒரு குறுகிய இடத்தில் மக்கள் தொகை அளவுக்கு மீறிப் பெருக்கமடைவதாலும் நாகரிகங்கள் தோன்ற வாய்ப்பு ஏற்படுகின்றது. எகிப்து, இத்தகைய நிலையில்தான் அக்காலத்தே விளங்கியது. பத்து மைல் அகல

முள்ள செழிப்பான நைல்நதிப் பள்ளத்தாக்கில் மக்களின் நெரிசல் அதிகமாயிருந்த காரணத்தாலேயே அவர்கள் பல்வேறு கருவிகளை யும் சாதனங்களையும் உண்டாக்கும் ஆற்றலைப் பெற்றனர். தேவை அதிகரிக்கும்போது மனிதனின் படைப்பாற்றல் வெளிப்படுகின்றது. மக்களின் நெரிசல் ஓர் குறுகிய இடத்தில் அதிகரிக்கும்போது, இயல் பாகவே அவர்களின் தேவையும் அதிகரிக்கின்றது. அத் தேவை யைப் பூர்த்தி செய்துகொள்ள அவர்கள் பல பொருள்களையும் கருவி களையும் படைக்கின்றனர். அதனுல் நாகரிகம் தோன்றுகிறது. அண்டை நாடுகளில் பரவுகிறது. பேரரசுகள் ஏற்படுகின்றன. செல் வமும் செல்வாக்கும் மக்களிடை பெருகுகின்றன. அதனுல் பலருக்கு நல்ல ஓய்வு நேரம் கிடைக்கிறது. ஓய்வின் விளைவாகக் கலைகள் வளர்கின்றன. இந்த வகையில்தான் எகிப்து, சுமேரியா போன்ற நாடுகளில் பண்டைய நாகரிகங்கள் தோன்றி அண்டை நாடுகளி லெல்லாம் பரவின. மக்களிடையே சமயப்பற்று வளர்வதாலும் நாக ரிகம் தோன்றுகின்றது. பண்டைய நாகரிகச் சமுதாயங்களை உரு வாக்கியவர்கள் சமயம் சார்ந்த அறிஞர்களாயும், மதகுருமார்களா யும் இருக்கக் காண்கின்ருேம். நாகரிக வாழ்க்கைக்குக் கட்டுப்பாடு கள் தேவை. அத்தகைய கட்டுப்பாடுகளை ஆதியில் மக்களிடையே ஏற்படுத்தியவர்கள் சமய குரவர்களேயாவர். நாளடைவில், சமயக் கட்டுப்பாடுகளை ஒட்டி அரசியல் கட்டுப்பாடுகளான சட்டங்கள் தோன்றின. சமய குருமார்களே எழுத்துகளை உண்டாக்கிக் கல்வி யறிவை மக்களிடையே பரப்பியவர்கள். நாகரிக வாழ்க்கைக்குத் தேவையான சூழ்நிலையை உருவாக்குவதில் சமயங்களும் பெரும் பங்கை வகிக்கின்றன. இங்ஙனம் ஒரு நாகரிகமானது தோன்றி வளர்வதற்குத் தக்கதொரு புறச் சூழ்நிலையோடு, நல்லதோர் அகச் சூழ்நிலையும் தேவை என்பது நன்கு பெறப்படுகின்றது.

# 2. வரையப்பெருத வரலாற்றுக் காலம்

## (Unrecorded History)

*வரையப்பெருத வரலாற்றுக் காலத்தின் வெவ்வேறு பிரிவுகள்*

மனிதனது வரலாற்றுக் காலத்தை இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒன்று கற்காலம். மற்றொன்று உலோக காலம். முன்னையது கல்வியறிவற்ற காலம் (Pre-Literate Age). அக் காலத்தே மக்கள் எழுத்தறிவைப் பெற்றிருக்கவில்லை. தம்மைப்பற்றி அவர்கள் எதையும் குறித்து வைக்கவில்லை. மனிதனது இந் நிலவுலக வாழ்வில் ஏறக்குறைய 95 சதவிகித காலத்தை இக்காலம் விழுங்கி விடுகிறது. கி.மு. 500ஆம் நூற்றாண்டு வரை இத்தகைய நிலை நீடித்தது. இதை வரையப்பெருத வரலாற்றுக் காலம் (Unrecorded History) என்று இன்றைய வரலாற்றறிஞர்கள் கூறுவது சாலப் பொருந்தும். இக் காலத்தைப் பழைய கற்காலம், புதிய கற்காலம் என இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். கருவிகளைச் செய்யப் பயன்படுத்தப்பட்ட கற்களின் இயல்புகளுககு ஏற்ப இக் காலங்கள் வரையறை செய்யப்பட்டுள்ளன. பழங்கற்காலத்தில் உறுதியான வெண்கற்களை உடைத்துக் கரடு முரடான கருவிகளை மனிதன் உண்டாக்கினன். சற்றும் வேலைப்பாடற்றதும், வனப்பற்றதுமான கோடாரி(Hatchet), ஈட்டி போன்ற கருவிகளை அன்னார் செய்தனர். எனவேதான் அவர்களது காலம் பழங்கற்காலம் என அழைக்கப்படுகிறது. புதிய கற்காலத்தில் அவை நன்கு சாணைக்கல்லில் தேய்த்து வழவழப்பாக்கப்பட்டன. இங்ஙனம் காலத்தைக் கருவிகளின் தன்மைக்கேற்ப பிந்தியது, முந்தியது என்று கணிப்பதை ஒருசில வரலாற்றாசிரியர்கள் ஏற்றுக்கொள்ளுவதில்லை. பயன்படுத்துகின்ற கருவிகளின் முன்னேற்றத்திற்கேற்ப மக்கள் முன்னேற்றமடைந்திருப்பார்களா என்பது சற்றே ஐயப்பாட்டிற்குரியதாகும். சான்றாகப் பழங்கற்கால மனிதன் ஓவியங்களை வரையும் பண்பைப் பெற்றிருந்தான். ஆனால், புதியகற்கால மனிதனே அக்கலையை அறிந்திருக்கவில்லை. எனவே, பண்பாட்டைப் பொறுத்தவரையில் புதிய கற்காலத்து மனிதனைவிடப் பழங்கற்கால மனிதன் உயர்ந்தவன் என்பது தெரியவருகின்றது. ஆனால், கருவிகளின் இயல்பைப் பொறுத்தவரையில் புதிய கற்கால மனிதன் பழங்கற்கால மனிதனைவிட உயர்ந்தவனாகி

விடுகின்ருன். எனவே, இத்தகைய வரையறை யாவும் ஓரோவழி தோராயமானவையே என்பது நினைவிற் பதிக்கற்பாற்று.

கற்காலத்தை அடுத்து வருவது உலோக காலமாகும். அப்போ தெல்லாம் மக்கள் எழுத்து வாசனை பெற்றுவிடுகின்றனர். நாகரிகம் அரும்பத் தொடங்கிவிடுகின்றது. மக்கள் தம் மனத்தில் தோன்றிய எண்ணங்களை எழுத்து வடிவிலும், ஓவிய வடிவிலும் வெளிப்படுத்தி வைத்துள்ளனர். அவற்றைக் கொண்டு அவர்களது வரலாற்றை நாம் ஓரளவு வரையமுடிகிறது. எனவே, இக் காலத்தை எழுதப் பெற்ற அல்லது வரையப்பெற்ற வரலாற்றுக் காலம் (Recorded History) என்று கூறுவர். உண்மையில் நாகரிக வரலாறு என்பது இக் காலத்திலிருந்துதான் தொடங்குகிறது. கி.மு. 3600-ல் தான் மனிதன் முதலில் எழுதத் தொடங்கினன். அதற்கு முன்பு அவன் எத்தனையோ காலம் பண்பட்ட வாழ்க்கையை வாழ்ந்திருக் கிருன். எனவே, மனிதனது இன்றைய நாகரிக வாழ்வின் அடிப் படைகள் அமைக்கப்பெற்ற காலமான எழுத்தறிவற்ற காலத்தைப் பற்றியும் ஓரளவு நாம் தெரிந்துகொள்ளுதல் இன்றியமையாத தாகும். அதைப்பற்றித் துல்லியமாக யாரும் எதையும் கூற இயலாது எனினும் ஆங்காங்கே கிடைக்கின்ற தொல்பொருட் சின்னங்களைக் கொண்டு அவர்களது வாழ்க்கை நெறிகளை நாம் ஒருவாறு ஊகிக்க இடமுண்டு.

### மனிதனின் தோற்றம்

விந்தைகள் நிறைந்த இவ் வுலகில் விந்தைகளுக்கெல்லாம் விந்தையாய் விளங்குகின்ருன் மனிதன். அவன் தனது ஆற்றலால் இவ் வுலகில் உள்ள ஏனைய உயிர்கள் அனைத்தையும் ஆட்டிப் படைக்கும் வன்மையைப் பெற்றுள்ளான். மற்ற எல்லாப் பிராணி களையும்விட அதிகமான அளவு மூளையைப் பெற்றுள்ள மனிதன் ஏனைய உயிரினங்களுக்குக் கிடைக்காத சிந்திக்கும் திறனையும், அங்ஙனம் சிந்தித்த கருத்துகளை மற்றவர்களோடு பரிமாறிக் கொள்ளும் ஆற்றலையும் பெற்றுள்ளான். இத்தகைய விசித்திரமான மனிதப்பிறவி எங்கு, எப்போது, எப்படித் தோன்றிற்று என்பதைப் பற்றி ஆராய்ச்சியாளர்கள் சதா சிந்தித்தவண்ணம் இருக்கின்றனர். எனினும், அது இன்னும் சரியான விடை தெரியாத புதிராகவே இருந்துவருகின்றது. மனிதனது தோற்றம்பற்றி அறிவியலார் ஓரோவழி தோராயமாகப் பின்வருமாறு கூறியுள்ளனர்.

கார்த்திகை மாதத்தில் சிறுவர்கள் கார்த்திகைப் பந்தம் ஆடுவதை நாம் பார்த்திருக்கின்ருேம். மூன்று கவைகளினிடையே வைக்கப்பட்ட நெருப்புப் பந்தத்தைப் பிள்ளைகள் வேகமாகச் சுற்று

வார்கள். அப்போது அப் பந்தத்தினின்றும் பல நெருப்புப் பொறிகள் தெறித்து ஓடிவரும். அஃது காண்பதற்கு இனியதோர் காட்சி. இதே போன்றுதான் கணக்கிடுதற்கரிய மிக நெடுங்காலத்தே இயற்கை யன்னை பல விண்மீன்களைப் பந்தமாகக் கொண்டு கார்த்திகை விளையாட்டை ஆடியிருக்கிருள். அப் பந்தங்களுள் நாம் தினமும் காணும் கதிரவனும் ஒன்று. நெருப்புப் பிழம்பான அப் பகலவன் வேகமாகச் சுற்றியபோது அதனின்றும் பல பொறிகள் தெறித்து வான வெளியில் உதிர்ந்தன. அப் பொறிகளில் ஒன்றே பூமி எனப் படுவது. மற்றும் திங்கள், செவ்வாய், புதன், வியாழன் போன்ற ஏனைய கோள்களும் இங்ஙனம் கதிரவனின்றும் தெறித்த சிறு நெருப்புப் பொறிகளேயாகும். கதிரவனைவிட வலிமைமிக்க ஈர்ப்புச் சக்தி வாய்ந்த வேருெரு விண்மீன் அதனருகே வந்த காரணத் திஞல்தான் பூமியும் மற்றக் கோள்களும் அதனிடமிருந்து பிய்த்து எறியப்பட்டவை என்றும் ஒருசில அறிவியலார் கருதுகின்றனர்.

இங்ஙனம் கதிரவனின் குழவியாய்ப் பிறந்த பூமி ஆதியில் ஓர் நெருப்புப் பிழம்பாக வானவெளியிலே நெடுங்காலமாக அதாவது ஏறக்குறைய 200 கோடி ஆண்டுகள் வரை வட்டமிட்டுக்கொண் டிருந்தது. அதன் பின்னர் பூமியின் மேற்பரப்பு கொஞ்சம் கொஞ்ச மாகக் குளிர்ந்து மெல்லிய பாறைகள் தோன்றின. பூமியைச் சுற்றிலும் ஓர் புகை மண்டலம் சூழ்ந்திருந்தது. அப் புகையில் கலந் திருந்த நீராவியானது நாளடைவில் குளிர்ந்து பெரு மழையாகப் பொழிந்தது. பூமியில் எங்கு பார்த்தாலும் வெள்ளக்காடாகக் காட்சி யளித்தது. வாவிகளும், குளங்களும் ஆங்காங்கு தோன்றின. மழை நீரால் அடித்துவரப்பெற்ற மண், பள்ளத்தாக்குகளில் ஆங்காங்கே தேங்கிச் சிறிய திட்டுகளை உண்டாக்கிற்று. எனினும், பூமியின் பெரும் பகுதிகளை நீர்நிலைகளே அடைத்துக்கொண்டிருந்தன. அவையே நாளடைவில் பெருங்கடல்களாக வடிவெடுத்தன. மேகத்திரை அவ்வப்போது சற்றே விலகியபோது கதிரவனின் கதிர்கள் நீர்ப் பரப்பின்மேல் விழுந்தன. நாளடைவில் அமீபா என்ற மிக நுண்ணிய உயிர் அணு நீரின் மேற்பரப்பில் தோன்றிற்று. விரைவில் அது பல அணுக்களாகப் பல்கிப் பெருகியது. இவ் வணுக்கள் ஒன்று சேர்ந்து கடல் நத்தை (Jelli fish) போன்ற உயிரினங்கள் தோன் றின. நீர்நிலைகளின் அடித்தளங்களில் சில உயிரணுக்கள் சென்று பலகாலம் மண்ணிலே ஒட்டிக் கிடந்ததன் விளைவாகத் தாவரங்கள் தோன்றின. இங்ஙனம் ஆதியில் தோன்றிய உயிரினங்களாவன தாவரங்களும், கடல் நத்தைகளுமே என்பது அறிவியலறிஞர்களின் கருத்தாகும்.

மேற்கூறிய நத்தைகளுக்கு நாளடைவில் கால்கள் முளைத்தன. நண்டு, தேள் போன்ற பிராணிகள் ஆங்காங்கே பரிணமித்தன. விரைவிலேயே மீன்கள் என்ற உயிரினம் கடலில் தோன்றியது. சுவாசப் பைகள் இன்றியே அவை சுவாசிக்குந் திறமை பெற்றிருந் தன. கடலில் ஏற்பட்ட நெரிசல் காரணமாக ஒரு சில மீன்கள் நிலத்தை வந்தடைந்தன. அப்போது நிலத்திலிருக்கும் பிராண வாயுவைச் சுவாசிப்பதற்கேற்ற சுவாசப் பைகள் அவைகளிடம் தோன்றின. இப் பிராணிகள் சில சமயம் நிலத்திலும் சில சமயம் நீரிலும் சென்று வாழ்ந்தன. அவற்றுக்கு ஆம்ஃபிபியன் (Amphibian) என்று பெயர். தவளை போன்ற பிராணிகள் இவ் வினத்தைச் சார்ந் தவை. இப் பிராணிகள் நாளடைவில் தரையிலேயே வாழக்கூடிய, ஊரும் பிராணிகளாக மாறும். டினேசார் (Dinosaur) போன்ற இராக்கதப் பல்லிகள் இவ்வினத்தைச் சார்ந்தவை. இவற்றில் சில மரங்களின் உச்சியில் சென்று வாழ்ந்தன. கடலிலிருந்த தாவரங்கள் அலைகளால் வீசி எறியப்பட்டு நிலத்திலும் வந்து நிலைக்க ஆரம்பித் தன. நாளடைவில் பெருங்காடுகள் பூமியின் மேற்பரப்பில் தோன்றின. அக் காட்டு மரங்களில் வசித்த பல்லிகள் விரைவி லேயே பாராசூட் போன்ற ஓர் உறுப்பைத் தம் உடல்களில் தோற்றுவித்துக் கொண்டு பறவைகளாகப் பரிணமித்தன. இங்ஙனம் நாளடைவில் ஊர்வன (Reptiles), பறப்பன (Birds) ஆகிய இரு வகைப் பிராணிகள் உலகில் தோன்றின.

ஆதியில்/ இவ்வுலகின் வடபாகத்தே ஏராளமான பனி படர்ந் திருந்தது என்றும், அப் பனிமலைகள் அவ்வப்போது நகர்ந்து உலகில் காலநிலை மாற்றத்தைத் தோற்றுவித்தன என்றும் அறிவியலார் உரைப்பர். நான்குமுறை இப் பனிப் பிரளயம் (Glacial Movements) நடைபெற்றதாம். இப் பிரளயங்களுக்கு இடைப் பட்ட காலத்தில்தான் பூமியில் உயிரினங்கள் தோன்றின. இப் பனிப் பிரளயங்களின்போது ஊர்வன, பறப்பன ஆகிய பிராணிகள் யாவும் குளிர் தாங்காமல் மாண்டுவிட்டன. தப்பிப் பிழைத்தவை குட்டி போட்டுப் பாலூட்டும் பிராணிகளேயாகும். ஐம்பது கோடி ஆண்டுகளுக்கு முன்பு இப் பாலூட்டிகள் (Mammals) இந் நில வுலகில் தோன்றின. அவற்றில் ஒரு பிரிவு மற்றவைகளைக் காட்டிலும் ஆற்றலில் தலைப்பட்டு விளங்கியது. தனது முன்னங் கால்களைக் கைகளைப்போலப் பயன்படுத்தி இரைகளைப் பிடிக்கின்ற வித்தையை அவை பழகிக் கொண்டன. அவற்றின் நகங்கள் விரல் களாகப் பரிணமித்தன. இவ் விரல்களில் கட்டை விரலைப் பயன் படுத்தி இரைகளைப் பிடிக்கும் திறனை அவை கற்றுக்கொண்டன. இத்தகைய பாலூட்டிகள்தான் மனிதனின் மூதாதையர் என்பர் அறிவியலார். இவை பிரைமேட்டுகள் (Primates) என அழைக்கப்

படுவன. விரைவிலேயே இவை இரண்டு கால்களால் ஓரளவு நிமிர்ந்து நடக்கின்ற பிராணிகளாக மாறின. அவற்றுக்கு ஹோமினிடே (Hominidae) என்று பெயர். பல்லாயிரம் ஆண்டுகள் கழித்து அவை நன்கு நிமிர்ந்து நடக்க ஆரம்பித்தன. இவை ஹோமோ எரக்டஸ் (Homo Erectus) என்று அழைக்கப்படும். இப்பிராணியின் உடல் நன்கு வளர்ச்சி பெற்றிருந்ததேயன்றி அதன் மூளை நல்ல வளர்ச்சி பெறவில்லை. அதன் மண்டையோடு மற்றப் பிராணிகளின் மண்டை ஓடுகளைக் காட்டிலும் பெரிதாயும், உருண்டும், வளைந்தும் காணப்பட்டது. சற்றே சாய்ந்திருந்த நெற்றி நிமிர்ந்து செங்குத்தாகக் காட்சியளித்தது. இத்தகைய பிராணியே ஆதி மனிதனுவான். அவன் பெயர் ஹோமோசேப்பியன்ஸ்(Homo-sapiens) என்பதாகும். டார்வின் எனும் விஞ்ஞானி, உள்ளது சிறத்தல் (Theory of Evolution) என்னும் கொள்கைப்படி குரங்கிலிருந்து மனிதன் பரிணமித்தான் என்பர். குரங்கும் மனிதனும் தனித்தனியே தோன்றிய இனங்கள் என்று இக்கால விஞ்ஞானிகள் கூறுகின்றனர். எனினும், படிப்படியாகவே மனிதன் தனது ஆற்றல்களைப் பெற்றுன் என்பது ஒருதலை.

*முந்திய பழங்கற்காலம்* (Lower Palaeolithic Age)

***ஆதி மனிதர்கள்;*** ஆதி மனிதர்களைப் பற்றிய உண்மைகளைத் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்களே முதன்முதலில் கண்டு வெளியிட்டவர்கள். அவர்கள் முதன்முதலாகக் கண்டுபிடித்த ஆதி மனிதனின் எலும்புக் கூடுகள் மத்திய ஆப்பிரிக்காவில் உள்ள தங்கனிகா (Tanganyka) பகுதியில் கிடைக்கப்பெற்றன. அம் மனிதனின் மண்டையோட்டுப் பகுதியொன்றும், தாடை எலும்பு ஒன்றும் அவன் பயன்படுத்திய ஒரு சில கற்கருவிகளும் அங்கே அகப்பட்டன. வேதியல் முறைப்படி அவற்றின் காலத்தைக் கணக்கிட்டபோது அவை 1,750,000 ஆண்டுகளுக்கு முற்பட்டவை என்பது தெரிய வந்தது. பழங்கற்கருவிகளைப் பயன்படுத்திய இம் மனிதர்கள் நன்கு நிமிர்ந்து நடந்தனர் என்றும், சிறந்த படைப்பாற்றலைப் பெற்றிருந்தனர் என்றும், அறிவியலாளர் கணித்தனர். அவர்களுக்கு ஜின் ஜான்த்ரோபஸ் பாய்ச்சி (Jinjanthropus Boisci) என்ற பெயர் சூட்டப்பட்டது.

அடுத்தாற்போல் ஜாவாவிலும் சீனுவிலும் முந்தைய பழங்கற்கால மனிதர்களின் சின்னங்கள் அகழ்ந்தெடுக்கப்பட்டன. 1891ஆம் ஆண்டு ஜாவாவில் கண்டெடுக்கப்பட்ட மண்டையோடு

கி.மு. 500,000 ஆண்டுகளுக்கு முற்பட்டது எனக் கணக்கிடப் பட்டுள்ளது. மனிதனின் தாடை எலும்பு, தொடை எலும்பு, ஒரு சில பற்கள் இவற்றையும் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் அங்கே கண்டெடுத்தனர். இம் மனிதனின் பெயர் பிதிகாந்த்ரோபஸ் எரக்டஸ்(Pithecanthropus Erectus) என்பதாகும். இவனது மூளை தற் கால மனிதனுடைய மூளையில் மூன்றில் இரண்டு பங்காக இருந்திருக்க வேண்டுமெனக் கணக்கிட்டுள்ளனர். எனினும், கொரில்லாக் குரங்கு களின் மூளை அளவைவிட அது இருமடங்காய் இருந்ததெனவும் அன்னூர் கூறுவர். 1925ஆம் ஆண்டில் தென் ஆப்பிரிக்காவில் நிகழ்த்தப்பெற்ற அகழ்வாராய்ச்சிகளிலிருந்து பிதிகாந்த்ரோபஸ் எரக்டஸ் மனிதனுக்கும் முற்பட்ட ஓர் மனித இனம் இவ் வுலகில் வாழ்ந்திருக்க வேண்டுமென்று அறிவியலார் கணித்துள்ளனர். அதை ஆஸ்ட்ரலோபிதிகஸ் (Austrolopithicus) என அழைப்பர். அவ் வினமானது மனிதனைவிடப் பெரும்பாலும் கொரில்லாக் குரங்கை ஒத்திருப்பதாகவே கூறப்படுகிறது. சீனுவில் பீகிங் நகருக் கருகில் 1906ஆம் ஆண்டிலிருந்து 1930ஆம் ஆண்டு வரையில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சியின் விளைவாக 32எலும்புக் கூடுகள் கண்டெடுக்கப்பட்டன. இவற்றினின்றும் இங்கு வாழ்ந்த மக்களின் தன்மையை மானிடவியல் வல்லுநர்கள் கணித்துள்ளனர். அதன் படி காலத்தால் அவர்கள் ஜாவா மனிதனுக்குச் சமமானவர்கள். அவர்களுக்குப் பீகிங் மனிதர்கள் அல்லது சினுந்த்ரோபஸ் பீகினென்ஸிஸ் (Sinanthropus Pekinensis) என்று பெயர் தரப் பட்டுள்ளது. அடுத்து இங்கிலாந்திலுள்ள பில்ட்டௌன் (Pilt-Down) என்னுமிடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட எலும்புச் சின்னங் களிலிருந்து பழங்கற்கால மனிதர்கள் இங்கிலாந்திலும் வாழ்ந்திருக்க வேண்டுமென்று பலரும் கருதினர். ஆனுல், அவை யாவும் போலி யானவை என்று அண்மையில் மெய்ப்பிக்கப்பட்டுவிட்டன. பிரான்சு நாட்டில் ஃபான்டே சவாடே (Fonte Chevade) என்னுமிடத்திலுள்ள ஒரு குகையில் ஒருசில மண்டையோட்டுப் பகுதிகள் 1947-ல் கண்டெடுக்கப்பட்டன. இங்கு வாழ்ந்த பழங்கால மனிதன் அடர்ந்த புருவங்களையும் நேரிய நெற்றியையும் உடையவனுய் இருந்திருக்க வேண்டுமென்று தொல்பொருள் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

மேற்கூறிய மூன்று வகைப்பட்ட மனிதர்களேயன்றி நான்காம் வகை மனித இனம் ஒன்றும் ஜெர்மனியில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. வடமேற்கு ஜெர்மனியில் உள்ள நியாண்டர் பள்ளத் தாக்கில் 1865ஆம் ஆண்டில் பல மண்டையோட்டுப் பகுதிகள் தோண்டியெடுக்கப்பட்டன. அத்தகைய மண்டையோடுகள் பிற் காலத்தே பெல்ஜியம், ஸ்பெயின், இதாலி, ருஷ்யா, பாலஸ்தீனம்

போன்ற இடங்களிலும் கிடைத்துள்ளன. இவ் வகையைச் சார்ந்த மனிதர்கள் நியாண்டர்தால் மனிதர்கள் (Neandarthal Men) என்று அழைக்கப்பட்டனர். அவர்கள் நான்காம் பனியுகத்தின் இறுதியில் அதாவது ஏறக்குறைய 50,000 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர் களாவர். அவர்களது உயரம் ஐந்தடி நான்கு அங்குலமாகும். பருத்த உடலும், பின் சாய்ந்த நெற்றியும், நீண்ட தாடையும், அடர்ந்த புருவமும் கொண்டவர்களாய் அன்னூர் காட்சியளித் தனர். ஏறக்குறைய குரங்குகள் போன்றே அவர்கள் தோற்றமளித் தனர். எனினும், மனிதர்களுக்குரிய சிறப்பியல்புகள் அவர்களிடம் காணப்பட்டது. 1921ஆம் ஆண்டில் ஆப்பிரிக்காவில் புரோகன் ஹில் (Broken Hill) என்னுமிடத்தில் பண்டைய மனிதர்களின் எலும்புக்கூடுகளைத் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் கண்டு பிடித்தனர். அவ்விடம் வாழ்ந்த மனிதன் ரொடீஷிய மனிதன் (Rhodesian Man) எனப்பட்டான். நியாண்டர்தால் மனிதனுக்கும், நவீன மனிதனுக்கும் இடைப்பட்ட நடுநிலையிலிருந்தவன் ரொடீஷிய மனிதன் என்பது மானிடவியல் வல்லுநரின் கருத்தாகும். பிரான்சு நாட்டில் கிரிமால்டி (Girimaldi) எனும் இடத்திலுள்ள குகைகளிலும் ஆதி மனிதர்களின் எலும்புக்கூடுகள் காணக்கிடைத்துள்ளன. கிரிமால்டி மனிதர்கள் ஆப்பிரிக்கப் பழங்குடி மக்களைப் போன்று குட்டையாயும், கறுப்பாயுமிருந்திருக்க வேண்டுமென அறிவியலார் கருதுகின்றனர்.

இக்கால மக்கள் குகைகளில் வசித்து வந்தனர். தோலை ஆடை யாக உடுத்தினர். கல்லாலும், மரத்தாலும் செய்யப்பட்ட கருவி களைக் கொண்டு மிருகங்களை வேட்டையாடிப் பிழைத்தனர். இயற்கையில் கிடைக்கும் கிழங்கு, கனி வகைகளை உண்டு உயிர் வாழ்ந்தனர். நெருப்பின் பயனை ஓரளவு அறிந்திருந்தனர். ஒன்ருக வாழ்ந்து ஓரளவு சமுதாய நிறுவனங்களை அமைக்கக் கற்றிருந்தனர். இறந்தவர்களைப் புதைப்பதில் அவர்கள் எடுத்துக்கொண்டுள்ள அக்கறையைப் பார்க்குமிடத்து, மரணத்திற்குப்பின் மனிதன் வாழ்கிருன் என்ற எண்ணம் அவர்களிடத்தே தோன்றியிருக்க வேண்டுமென்று தெரிகிறது. எனவே, முந்தைய பழங்கற்கால மனிதர்களிடம் ஓரளவு சமய உணர்ச்சியும் அரும்பியிருந்தது என்பதை நாம் ஊகிக்க முடிகிறது.

***பிந்திய பழங்கற்காலப் பண்பாடு*** (Upper Palaeolithic Culture)

கி.மு. 30,000ஆம் ஆண்டில் பிந்தைய பழங்கற்காலம் தொடங் கியது. ஏறத்தாழ 200 நூற்றுண்டுகள் வரை (30,000—10,000)

அது நீடித்தது. இக்காலத்தே வாழ்ந்த மக்களுக்கு குரோமாக்னன் (Cro-magnon) மனிதர்கள் என்று பெயரிட்டுள்ளனர். அவர்கள் இன்றைக்கு ஏறத்தாழ 25,000 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர்களாவர். பிரான்சிலுள்ள குரோமாக்னன் என்னுமிடத்தில் அகழ்ந்தெடுக்கப்பட்ட எலும்புச் சின்னங்களைக் கொண்டு இம் மக்களின் உடல் இலக்கணங்கள் ஊகிக்கப்பட்டுள்ளன. அதன்படி அவர்கள் ஆறடி உயரம் உள்ளவர்கள். பரந்த தோள்பட்டையும், எடுப்பான நாசியும், நன்கு வளர்ச்சி பெற்ற தாடையும், அடர்ந்த புருவமும், பெருத்த மண்டையோடும் உடையவர்கள். நியாண்டர்தால் மக்களுக்கு மிகப் பிற்காலத்தே வாழ்ந்த இவர்கள் அவர்களைவிட உயர்ந்த நாகரிக மேம்பாடு உடையவர்களாயிருந்தனர். பிராணிகளின் எலும்பை மட்டுமின்றி அவற்றின் தந்தம், கொம்பு ஆகியவைகளைக் கொண்டும் இவர்கள் பல கருவிகளைச் செய்யத் தெரிந்திருந்தனர். எலும்பில் செய்யப்பட்ட ஊசி, தூண்டில் முள், கல் எறி கவண்கள், வில், அம்பு போன்ற கருவிகளின் பயனை அவர்கள் நன்கு அறிந்திருந்ததாகத் தெரிகிறது. எலும்புத் துண்டுகளையும், விலங்குகளின் புற்களையும் கோத்து அவர்கள் மாலையாக அணிந்தனர். இறைச்சியை அவர்கள் சமைத்து உண்ணத் தெரிந்துகொண்டனர். பெரும்பாலும் நாடோடிகளாகவே வாழ்ந்த அவர்கள் சில சமயங்களில் ஓரிடத்தில் நிலையாகவும் வாழ்ந்தனர். அப்போது குகைகள்தான் அவர்களுக்கு உறைவிடங்களாக அமைந்தன. சில இடங்களில் பூமியைத் தோண்டி அதற்குமேல் சாதாரண கூரையை வேய்ந்து அவர்கள் அங்கே வசித்தனர். அவர்களது கைவன்மை மிக்க கருவிகளைப் பார்க்குமிடத்து அவர்களிடையே ஒருவித சமுதாய அமைப்பு இருந்திருக்க வேண்டுமென்றும் கைவன்மை மிக்க தொழிலாளிகள் பலர் ஒரே கூட்டமாக வாழ்ந்து தொடர்ந்து ஒரே தொழிலை நீண்ட நாள் செய்திருக்க வேண்டும் என்றும் நாம் எளிதில் ஊகிக்கலாம். ஒருசில தொழில்களில் தனித்திறம் பெற்ற வகுப்பினர் பல சலுகைகளைப் பெற்று, செல்வாக்கு மிக்க பல குடும்பங்களாக வாழ்ந்திருக்க வேண்டும். அவர்களிலிருந்தே அக் கூட்டத்தினரின் தலைவர்கள் தோன்றியிருக்க வேண்டும். குரோமாக்னன் மக்களிடையே சமய உணர்ச்சி நன்கு மலர்ந்திருந்தது. இறந்தவர்களை அவர்கள் நியாண்டர்தால் மனிதர்களைவிட அதிக அக்கறையுடன் கவனித்தனர். மரணமுற்றோரின் சடலங்களுக்கு வண்ணம் பூசப்பட்டது. கழுத்தணிகள், பில்லைகள் முதலியவை அவற்றுக்கு அணிவிக்கப்பட்டன. நல்ல முறையில் வடித்தெடுக்கப்பட்ட கருவிகள் சடலங்களோடு சேர்த்து வைத்துப் புதைக்கப்பட்டன. மற்றும் இம் மனிதர்கள் மந்திர தந்திரங்களில் நம்பிக்கை வைத்திருந்ததாகத் தெரிகிறது. ஒரு பிராணியின் உருவத்தைக் கொல்லுவதைப் போன்று

படம் வரைந்தால், அப் பிராணியை வேட்டையாடுவதில் வெற்றி கிட்டும் என அவர்கள் நம்பியிருக்கக் கூடும். அவர்கள் வாழ்ந்த குகைகளில் மிருகங்களை வேட்டையாடிப் பிடிப்பது போன்ற காட்சிகள் நிறைய சித்திரிக்கப்பட்டுள்ளதற்கு இத்தகைய நம்பிக்கையே காரணமாயிருந்திருக்கலாம். அம்பு பதிக்கப்பெற்ற எருமை மாட்டு உருவங்கள் மேற்சொன்ன குகைகளில் பொம்மைகளாகச் செய்து வைக்கப்பட்டுள்ளன. அவையும் மேற்கூறிய நம்பிக்கையின் விளைவாக ஏற்பட்டதாகவே தெரிகிறது.

குரோமாக்னன் மக்களிடையே ஓரளவு அறிவு வளர்ச்சியும் காணப்பட்டது. பொருள்களையும், பிராணிகளையும் விரல்விட்டு எண்ணுகின்ற திறமையை அக்கால மனிதன் பெற்றிருந்தான். எழுத்துகள் போன்ற உருவங்கள் அவனது குகைகளில் காணப் படுவதிலிருந்து அவன் ஒரு வகையான பண்டைய எழுத்து முறையைக் கையாண்டிருக்கலாம் என்று ஒருசிலர் கருதுகின்றனர். ஆனால், அதுபற்றித் திட்டவட்டமாக எதுவும் கூறுதற்கில்லை. எனினும், அம் மக்களிடையே கலை உணர்ச்சி நன்கு மலர்ந்திருந்தது என்பதை நாம் திண்ணமாகக் கூறலாம். சிற்பம், ஓவியம், உலோகத்திலும், மரத்திலும், மண்ணிலும் உருவங்களைப் பொறித்தல் ஆகிய கலைகளில் அவர்கள் கைதேர்ந்தவர்களாயிருந்தனர்; ஆனால் கட்டடக் கலையிலும், பானை வனைவதிலும் சிறப்படையவில்லை; ஓவியக் கலையில்தான் தன்னிகரற்று விளங்கினர். வெவ்வேறு நிறங்களைத் தக்க இடங்களில் பயன்படுத்தும் கலையை நன்கு அறிந்திருந்தனர். இயற்கையை அப்படியே தங்கள் ஓவியங்களில் படம் பிடித்துக் காட்டினர். மிருகங்கள் ஓடுவது போன்றும், தாண்டுவது போன்றும், அசை போடுவது போன்றும் மிக இயற்கையாக வரையப்பெற்றுள்ளன. ஆனால், இயல்பாக ஏற்பட்ட அழகுணர்ச்சியின் விளைவால் அவை தீட்டப்பட்டன என்று நாம் கூறுதற்கில்லை. ஏனெனில் வேட்டையாடப்படும் மிருகங்களையேயன்றி, வேறு பொருள்களின் உருவங்களை அதிகமாக அவர்கள் தீட்டவில்லை. சான்றாக மரம், செடி, கொடிகளின் உருவங்களை அவர்கள் வரையவில்லை. ஒருசில மனித உருவங்களே வரையப்பட்டுள்ளன. அவை கருப்பாயும், விகாரமாயும் காணப்படுகின்றன. அவற்றின் பிறப்புறுப்புகள் மிகவும் பெரியனவாய்க் காட்டப்பட்டுள்ளன. ஒரு சில குகைகளில் மனிதனின் உள்ளங்கைகள் மட்டுமே வரையப்பட்டுள்ளன. அவற்றுள் ஒருசில விரல்கள் துண்டிக்கப்பட்டது போன்று காட்டப் பட்டுள்ளன. இவற்றிலிருந்து அக் கால மக்கள் சமய உணர்ச்சியால் உந்தப்பட்டே ஓவியங்களை வரைந்திருப்பார்கள் என்று தெரிகிறது. ஆண், பெண் மர்ம உறுப்புகள் மிகைப்படுத்தி வரையப்பட்டிருப் பதைக் காணும்போது மகப்பேறு பெறுவான்வேண்டி அவை

வரையப்பட்டிருக்கலாமெனவும் தோன்றுகிறது. துண்டிக்கப்பட்ட விரல்கள் மனிதன் தெய்வங்களுக்காகத் தன் உடலுறுப்புகளைப் பலியிடும் வழக்கத்தைக் காட்டுகிறது. மற்றும் ஏதோ பயன் கருதியும் அவர்கள் சில உருவங்களை வரைந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. ஏற்கெனவே கூறியபடி மிருகங்களின் படங்களை வரைவதன் மூலம் அவற்றை எளிதில் வேட்டையாடிவிடலாம் என்று அவர்கள் நம்பியிருக்க வேண்டும். வேட்டை கிடைத்த பின் அவர்கள் தங்களது ஓவியங்களின் மீது அக்கறை செலுத்தியதாகத் தெரியவில்லை. ஏனெனில், ஒரே ஓவியத்தின்மீது மண்ணை அப்பி மீண்டும் மீண்டும் ஓவியங்கள் வரையப்பட்டிருப்பதைப் பார்க்கிரும். அவைகள் யாவும் மனிதர்கள் யாரும் எளிதில் பார்க்கக் கூடாத இருண்ட குகைகளில் வரையப்பட்டிருப்பதைக் கொண்டு அவைகள் ஏதோ மாயா ஜாலத்திற்காக (Magical Sense) வரையப்பட்டவை என்று ஊகிக்கலாம். ஆனுல், மந்திரத்தால் மிருகங்களை அதிகமாக வேட்டையாட வேண்டுமென்ற குறிக்கோள்மட்டுமே இந்த ஓவியங்களுக்குக் காரணமாயிருந்தது என்று கூற இயலாது. பயன் கருதாத கலையுணர்ச்சியும் அதற்கு ஓரளவு காரணமாயிருந்திருக்கக் கூடும். மிருகங்களை உள்ளது போன்று வரைவதில் ஏற்படக்கூடிய கலையின்பம் காண வேண்டியும் அவை தீட்டப்பட்டிருக்கலாம். ஏனெனில், அவை ஏறக்குறைய கிரேக்க ஓவியங்களைப் போன்று அவ்வளவு நன்ருக வரையப்பட்டுள்ளன. எனவே, கி.மு. 10,000 ஆண்டளவிலேயே மனிதன் கலையுணர்ச்சி உடையவனுய்த் திகழ்ந்தான் எனக் கூறலாம். இத்தகைய பழங்கற்கால நாகரிகம் பனிப் பிரளயத்தால் ஏற்பட்ட காலநிலை மாறுபாட்டால் நாளடைவில் சீரழிந்தது (கி.மு. 10,000 ஆண்டளவில்).

**புதிய கற்கால நாகரிகம்—கி.மு. 10000—கி.மு. 4000 (Neolithic Culture)**

இயற்கையின் கொடுமையினின்றும் தன்னைப் பாதுகாத்துக் கொண்ட பழங்கற்கால மனிதன் விரைவிலேயே நாகரிகப் பாதையில் நடைபோட ஆரம்பித்தான். உலகியல் துறையில் அவன் சிறப்பான முன்னேற்றம் அடைந்தான். நாடோடியாய்த் திரிந்த அவன் ஓரிடத்தில் நிலையாக வாழக் கற்றுக்கொண்ட காலம் இதுவேயாகும். அவனது வாழ்க்கையில் ஏற்பட்ட வியத்தகு மாற்றங்களைக் கொண்டே, வரலாற்று ஆசிரியர்கள் இக்காலத்தைப் புதிய கற்காலப் புரட்சி (The Neolithic Revolution) என்று அழைக்கின்றனர். பழங்கற்காலத்தே இயற்கையில் இருந்து உணவைச் சேகரித்து உண்டு வாழ்ந்த மனிதன் (Food gatherer) இக் காலத்தே உணவை உற்பத்தி செய்பவனுக (Food-producer) மாறினுன். தனக்கு

வேண்டிய தானியங்களை நிலத்தில் பயிர் செய்ய ஆரம்பித்தான். மரத்தினால் செய்யப்பட்ட கலப்பைகளில் கல்லினாலாய கொழுவினைப் பிணைத்து மாடுகளின் உதவிகொண்டு நிலங்களை உழுது பண் படுத்தி, கோதுமை, பார்லி போன்ற தானியங்களையும், காய்கறி, கனி, கிழங்குகளையும் பயிரிட அவன் கற்றுக்கொண்டான். காட்டு மிருகங்களை வீட்டு மிருகங்களாகப் பழக்குகின்ற ஆற்றலை அவன் பெற்றிருந்தான். இது அவனுடைய அரும் பெருஞ் சாதனைகளில் ஒன்றாகும். முதன்முதலில் நாய்களைப் பழக்கி அதை வேட்டை யாடும் பணிக்குப் பயன்படுத்திக் கொண்டான். அதன் பின்னர் ஆடு மாடுகளையும், பன்றிகளையும், குதிரைகளையும் பழக்கி அவை களைக் கூட்டங் கூட்டமாக வளர்க்கலானான்; குடிசைகளைக் கட்டு வதற்கு ஏணிகள், கப்பிகள்(Pulleys), நெம்புகோல்(Levers) முதலி யவைகளைப் பயன்படுத்தினான். சுவிட்சர்லாந்து போன்ற இடங்களில் வாழ்ந்த புதுக்கற்கால மனிதர்கள் காட்டு மிருகங்களினின்றும் இரவில் தங்களைப் பாதுகாத்துக்கொள்ள நீர் நிரம்பியுள்ள ஏரிகளில் மூங்கில்களை நட்டு அவற்றின்மேல் பலகைகளைப் பொருத்தி அவை மீது குடிசைகளைக் கட்டி வாழ்ந்தனர். இவைகளுக்கு ஏரிக் குடியிருப் புகள் (Lake dwellings) என்று பெயர். இவற்றைக் கட்டிய மக்கள் உண்மையிலேயே தச்சுத் தொழிலில் மிக்க வல்லுனர்களாய் இருந் திருக்க வேண்டும்.

உபரியான தானியங்களையும் தண்ணீரையும் சேகரித்து வைக்க, புதிய கற்கால மனிதன் மண்பானைகளை வனைந்தான். இதனால் இக் காலத்தை மண்பானைக் காலம் (Pottery Age) என்றும் கூறுவர். சுனைகளில் நீரருந்தி, இயற்கையில் எளிதாய்க் கிடைத்த பொருட்களை உண்டு நிலையற்ற வாழ்க்கையை வாழ்ந்துவந்த பழங் கால மனிதன் இப்போது உணவுப் பண்டங்களையும், தண்ணீரையும், சுடப்பட்ட மண்ணாலாய பானைகளில் சேகரித்து வைத்துக் காப்பாற்றக் கற்றுக்கொண்டான். பானை வனைவதைப் பெருந் தொழிலாக மட்டுமின்றி ஓர் அருங்கலையாகவும் அவன் கைக்கொண் டான் எனத் தெரிகிறது. புதிய கற்காலப் பானைகள் பல்வேறு உருவங்களில் அழகாக ஆக்கப்பட்டிருப்பதோடு, அதன்மேல் அழகிய உருவங்களும் பொறிக்கப்பட்டிருந்தன. பழங்கற்கால மனிதர்கள் கனவிலும் கண்டிராத பல தொழில்களில் இக்கால மனிதர்கள் ஈடுபட்டனர். விவசாயம், நெசவு, மீன் பிடித்தல், பானை வனைதல் போன்றவை அவர்களது முக்கிய தொழில்களாகும். மூங்கி லாலும், நாணற் புற்களாலும், கூடை முடையவும், பாய் பின்னவும் அவர்கள் கற்றிருந்தனர். போக்குவரவு வசதிக்காகப் படகுகளையும், வண்டிகளையும் அவர்கள் ஏராளமாகச் செய்தனர். அழகிய விலை யுயர்ந்த கற்களைக்கொண்டு பலவித ஆபரணங்களையும் செய்து

அவர்கள் அணிந்துகொண்டனர். நெசவுத் தொழிலுக்கான தறிகளையும், நூற்கண்டுகளையும், விவசாயத்திற்கான கலப்பை, கொழு, அரிவாள், ரம்பம் போன்ற கருவிகளையும் மற்றும் ஊசிகள், சாணைக் கற்கள், கப்பிகள், நெம்புகோல்கள், கோடரிகள், உளிகள், ஏணிகள் போன்ற பல்வேறு கருவிகளின் பயனையும் அன்னார் அறிந்திருந்தனர். உருண்டு செல்லும் சக்கரங்கள் அவர்கள் கண்டுபிடித்த பொருள்களிலெல்லாம் சிறந்தவையாகும். சக்கரங்களைக் கொண்ட வண்டிகள்தாம் வியாபார வளர்ச்சிக்கும், நாகரிக மேம்பாட்டிற்கும் வழிவகுத்தன. ஆடுகளிலிருந்து கிடைத்த உரோமங்களைக் கொண்டும், செடிகளிலிருந்து கிடைத்த நார்களைக் கொண்டும் பல அழகிய ஆடைகளை நெய்ய இக்கால மக்கள் அறிந்திருந்தனர். ஆடைகளில் வண்ணம் தோய்த்தும், அழகிய உருவங்களைத் தைத்தும் அவர்கள் தங்களை அலங்கரித்துக் கொண்டனர். முகம் பார்க்கும் கண்ணாடிகளும், புதிய கற்காலச் சின்னங்களிலிருந்து கிடைத்துள்ளன. எனவே, நாகரிக வளர்ச்சிக்கான பல்வேறு சூழ்நிலைகள் இக் காலத்தே உருவாகிவிட்டன என்று தெரிகிறது.

மற்றும் இக்காலத்தேதான் மக்களிடையே பல நிறுவனங்கள் (Institutions) தோன்றலாயின. அவற்றில் முக்கியமானது குடும்பம். ஒரு கணவனும், மனைவியும் அவர்களது குழந்தைகளும் சேர்ந்து வாழ்ந்த பல குடும்பங்கள் ஆங்காங்கே ஏற்படலாயின. ஆண்கள் பல மனைவியரை மணக்கும் வழக்கமும் காணப்பட்டது. விவசாயத்தில் ஈடுபட்ட மனிதன் தனது மனைவியரையும், மக்களையும் பல்வேறு வினைகளில் ஈடுபடுத்திப் பொருள் தேட முற்பட்டான். இக் காலத்தே ஏற்பட்ட மற்றொரு முக்கியமான நிறுவனம் சமயம். இயற்கையில் காணப்பட்ட பல பயங்கரமான நிகழ்ச்சிகளைக் கண்டு பயந்துபோன மனிதன் அவற்றினின்றும் தன்னைக் காப்பாற்றத் தன்னிலும் உயர்ந்த ஓர் சக்தியின் துணையை நாடினான். அச் சக்தியை அவன் பல வகைகளில் திருப்திப்படுத்த எண்ணினான். அவற்றைக் கல் வடிவங்களில் வைத்து அவன் வழிபட்டான். அதற்காகச் சடங்குகளும், வழிபாட்டு முறைகளும் ஏற்பட்டன. மிருகங்களையும், ஏன் மனிதனையும்கூடப் பலியிடும் வழக்கம் ஏற்பட்டது. தனக்கு ஏற்பட்ட நோய்களினின்றும் தன்னைக் காத்துக்கொள்ளவும், மனிதன் பல சடங்குகளை மேற்கொண்டான். விவசாயத்திற்கு வேண்டிய மழையைப் பெறவும் அவன் சமயச் சடங்குகளில் ஈடுபட்டான். இங்ஙனம் சடங்குகள் நிறைந்த ஒருவகையான சமயம் இக் காலத்தில் உருவாயிற்று.

இக் கால மனிதன் கடைப்பிடித்த சடங்குகளில் எல்லாம் மிக முக்கியமானது, இறந்துபோன முன்னோர்களின் வழிபாடாகும்.

இறந்தோர்களைப் புதைத்து அவர்களது கல்லறைகளின்மீது சுமை தாங்கிக் கற்கள் போன்ற பெரிய கற்களை வட்டமாக நட்டு அவர்கள் நினைவுச்சின்னங்களை எழுப்பினர். இத்தகைய நினைவுச்சின்னங்களை இன்றும் இங்கிலாந்தில் ஸ்டோன் ஹென்ஜ் (Stone Henge) என்னுமிடத்திலும், பிரான்சில் கார்னுக் (Carnac) என்னுமிடத்திலும் காணலாம். இறந்தவர்களின் ஆவிகளை மட்டுமின்றி சூரியனையும் மற்றும் பல தேவதைகளையும் இக் கால மக்கள் வழிபட்டதாகத் தெரிகிறது. இவ்வித வழிபாட்டினுல் நிலங்களில் நல்ல விளைச்சலும், போரில் வெற்றியும் கிட்டும் என்பது அவர்களது நம்பிக்கை.

இக்கால மக்கள் அமைத்த இன்னெரு முக்கியமான அமைப்பு அரசு (State) என்ற நிறுவனமாகும். ஓர் குறிப்பிட்ட நிலப்பரப்பில் வாழ்ந்த மக்கள் அனைவருமாக ஒன்று சேர்ந்து தங்களை ஓர் அரசியல் சமுதாயமாக இக்காலத்தே அமைத்துக் கொண்டனர். தங்களிடையே விளையும் நிலவுரிமை, சொத்துரிமை பற்றிய வழக்குகளைத் தீர்க்கவும், போட்டிகளைத் தடுக்கவும், பூசல்களைத் தவிர்க்கவும் அவர்கள் தங்களிடையே ஓர் அரசாங்கத்தை அமைத்துக் கொண்டனர். அரசாங்கத்தின் தலைவர்கள் பெரும்பாலும் அவர்களுக்குள்ளேயே பெரிதும் துணிவும், ஆற்றலும் கொண்ட ஒருவனுக இருந்தான். சில சமயங்களில் தேவதைகளிடம் தொடர்பு கொண்டிருந்ததாகக் கூறிவந்த சமயப் பூசாரிகளும் அரசாங்கத்தின் தலைமைப்பீடத்தை அடைந்தனர். பொதுவாக அரசியல் தலைவர்களும், சமயத் தலைவர்களும் ஒருங்கே சேர்ந்தே நாட்டை ஆண்டனர். சமுதாயத்தால் தடுக்கப்பட்ட செயல்களைச் (taboos) செய்பவர்களைத் தண்டிப்பதே அரசாங்கத்தின் முக்கியக் கடமையாக இருந்தது.

இங்ஙனம் புதிய கற்கால மக்களிடையே நாகரிகத்தின் முக்கிய இலக்கணங்களான பொருளாதார வளம், அரசியல் அமைப்பு, சமுதாயக் கட்டுக்கோப்பு, சமய நிறுவனங்கள் முதலிய அனைத்தும் அமைந்திருப்பதைக் காண்கிறோம். ஆனுல் கல்வி, கேள்விகளில் மட்டும் அவர்கள் தேர்ச்சி அடையவில்லை. அதனுல்தான் அவை பழங்குடிப் பண்பாடுகளெனக் (Primitive Cultures) கருதப்படுகின்றன.

## நாகரிகத்தின் உதயம்—கால அட்டவணை

| காலம் | நில நூல் கூறும் காலப் பெயர் | உயிரினங்களின் வகை | பண்பாட்டுக் காலம் |
|---|---|---|---|
| 3 பில்லியன் ஆண்டுகளுக்கு முன் | முற்பட்ட கெம்பிரியன் காலம் (Precambrian) | ஓரே உயிரணுவைக் (Cell) கொண்ட உயிர்ப் பொருள்கள் (Organisms) முதன் முதல் தோன்றிய முதுகெலும்பற்ற ஜந்துக்கள் (Invertebrates), புழுக்கள், கடற்பாசி (Algae) உயிரினம். | |
| 510 மிலியன் ஆண்டுகளுக்கு முன் | பேலியோஸாயிக் காலம் (Paleozoic) | கடற்பாசி உயிரினம், நத்தையினம் (Mollusks) பூச்சிகள், முதுகெலும்புள்ள உயிர்கள், பவளப் பூச்சிகள், சுறு மீன்கள், நுரையீரல் கொண்ட மீன்வகை (Lung fish), நண்டுவகை (Crusta-ceans), தவளை இன உயிர்கள் (Amphibians), சிற்றிலைப் படர் செடியினம் (Ferns). | |
| 180 மிலியன் ஆண்டுகளுக்கு முன் | மெசோசாயிக் காலம் (Mesozoic) | இராக்கதப் பல்லிகள், பெரும் ஊர்வன உயிர்கள், பறவைகள், பையுடைய பாலூட்டிகள் (Marsupials), எலும்புள்ள மீன்கள், மரங்கள். | |

| காலம் | நில நூல் கூறும் காலப் பெயர் | உயிரினங்களின் வகை | பண்பாட்டுக் காலம் |
|---|---|---|---|
| 90 மிலியன் ஆண்டுகளுக்கு முன் | செனோசாயிக் காலம் (Cenozoic) | ஆரம்பகாலப் பாலூட்டிகள், முதல் பிரைமேட்டுகள் (Primates), வாலில்லாக் குரங்குகள், வாலுடைக் குரங்கின் மூதாதைகள், பெரும் வாலில்லாக் குரங்கின் மூதாதைகள், பிற்காலப் பாலூட்டிகள் (Mammals), ஆரம்பகால மனித இனங்கள் | |
| ஒரு மிலியன் ஆண்டுகளுக்கு முன் | செனோசாயிக் பிளீஸ்டாசீன் காலம் (Pleistocene) | தற்கால மனிதர்கள், மிருகங்கள் | முந்திய பழங்கற் காலம் (Lower Paleolithic) பிந்திய பழங்கற்காலம் புதிய கற்காலம் (New Stone Age) |
| 7000 ஆண்டு களுக்கு முன் முன் | ,, | பல்வேறு இனத்தைச் சேர்ந்த மனிதர்கள் | நாகரிக மனிதன் |

# 3. பண்டைய எகிப்திய நாகரிகம்

### *நதி தீரங்களில் நாகரிகம் தோன்றக் காரணம்*

நாகரிகம் தோன்றி வளர ஒரு சில சூழ்நிலைகள் தேவை என ஏற்கெனவே நாம் கண்டோம். முதலில் மக்கள் ஓரிடத்தில் நிலையாக வாழவேண்டும். அப்படி வாழ்வதற்குச் செழிப்பான நிலமும், வற்றாத நீர்வளமும், மிதமான கால நிலையும் தேவை. இத்தகைய சூழ்நிலைகள் பண்டைக் காலத்தே எகிப்து, மெசபடோமியா, இந்தியா, சீனு போன்ற நாடுகளில்தான் அமைந் திருந்தன. இக் கீழை நாடுகளின் செழிப்பான நதிப் பள்ளத் தாக்குகளில்தான் பண்டைய நாகரிகங்கள் தோன்றி வளர்ந்தன. எகிப்தின் நைல் நதிப் பள்ளத்தாக்கும், மெசபடோமியாவில் யூப்ரடிஸ், டைகிரிஸ் என்ற நதிகளின் இடைப்பட்ட நிலப்பரப்பும், இந்தியாவில் சிந்து, கங்கை பாயும் சமவெளிகளும், சீனுவில் ஹுவாங்கோ, யாங்க்ட்சி-கியாங் நதிகளின் தீரங்களும் பண்டைய நாகரிகங்களின் பாசறைகளாய்த் திகழ்ந்தன. ஏனெனில், அந் நதி தீரங்களில்தான் விவசாயத்திற்கேற்ற வண்டல் மண் நிறைந்த செழிப்பான பூமியும், வற்றாத நீர்ப்பாசன வசதியும் இருந்தன. எனவே, மக்கள் தங்கள் வாழ்க்கைக்கேற்ற வசதிகள் பலவற்றையும் எளிதில் பெற்றனர். ஓய்வு நேரம் அவர்களுக்கு நிறையக் கிடைத்தது. அந் நேரங்களில் அவர்கள் கலைகளை ஓம்பினர். சமயங்களை உண்டாக்கினர். மனிதனது நாகரிக வாழ்க்கை அரும்பியது. நாகரிகம் எனும் கதிரவன் கிழக்குத் திக்கில்தான் உதித்தான். ஆனால், இன்று மேலை நாடுகள்தான் நாகரிகத்தின் உறைவிடங்கள் எனப் பேசப்படுகின்றன. இதுவே காலத்தின் கோலம் எனப்படும்.

### *எகிப்திய வரலாற்றின் திறவுகோல்*

பழம் பெருமை வாய்ந்த எகிப்தின் வரலாறுபற்றி சமீப காலம் வரை உலகம் ஒன்றும் அறியவில்லை. பிரம்மாண்டமான பிரமிட்டுகளும், கோயில்களும், புதையுண்ட நகரங்களும் எகிப்தின் பழம் பெருமையைப் பல்லாண்டுகள் வரை மௌனமாக எடுத் தியம்பிக்கொண்டிருந்தன. விவிலிய நூல், கிரேக்க லத்தீன் இலக்கியங்கள் இவை ஓரளவு எகிப்திய வரலாற்றை எடுத்தோதின.

ஆனல், எகிப்தின் வரலாறுபற்றி திட்டவட்டமாக நாம் அறிய முற்பட்டது பதினெட்டாம் நூற்ருண்டின் பிற்பகுதியிலிருந்துதான் எனலாம். தற்செயலாக நேர்ந்த ஒரு நிகழ்ச்சியால் இருண்டு குகை எனக் கிடந்த எகிப்திய வரலாற்றில் ஒளி பிறந்தது.

எகிப்திய கல்லறைச் சுவர்களிலும் கோயில்களின் மதிற்புறங்களிலும் ஒருவித விநோதமான எழுத்துகள் நிறைந்து கிடந்தன. அதனைப் படிக்கக் கூடியவர்களோ, விளக்கக் கூடியவர்களோ ஒருவரும் எகிப்திலேயே இல்லை. காண்போருக்கு ஒரு புதிராய் இருந்த இவ்வெழுத்துகளைப் படிக்கும் காலமும் வந்தது. 1799ஆம் ஆண்டில் நெப்போலியன் எகிப்தின் மீது படையெடுத்து வந்தான். அவனது வீரர்கள் நைல் நதியின் முகத்துவாரத்தில் ராஸட்டா எனுமிடத்தில், எழுத்துகள் பொறிக்கப்பட்ட கற்பலகை ஒன்றைக் கண்டெடுத்தனர். அந்த ராஸட்டா கல் (Rosetta Stone) தான் எகிப்திய வரலாற்றுக்குத் திறவுகோலாய் அமைந்தது. அக் கல்லில் மூன்று வெவ்வேறு மொழிகளில் எழுத்துகள் பொறிக்கப்பட்டிருந்தன. அதன் உச்சியில் எகிப்தின் பண்டைய சித்திர எழுத்துகளும் (heiroglyphs), நடுவில் பிற்கால எழுத்துகளும், அடியில் கிரேக்க எழுத்துகளும் காணப்படுகின்றன. ஒரே பொருளைப் பற்றிய சாசனம் மூன்று மொழிகளில் பொறிக்கப்பட்டுள்ளது. இதனை எகிப்திய வரலாற்றின் நற்காலமென்றே சொல்ல வேண்டும். ஏனெனில், அறிஞர்கள் இந்த சாசனத்திலுள்ள தெரிந்த கிரேக்க எழுத்துகளைக் கொண்டு தெரியாத எகிப்திய எழுத்துகளை விளக்கிவிட்டனர். 1802ஆம் ஆண்டில் சம்போலியன் (Champolion) எனும் பிரஞ்சு அறிஞர் கிரேக்க எகிப்திய எழுத்துகளை ஒப்பிட்டு 14 எழுத்துகளுக்குப் பொருள் கண்டார். அவரது முறையைப் பின்பற்றி மற்ற எழுத்துகளும் படிக்கப்பட்டன. அதைக் கண்டு நாட்டின் பல்வேறு இடங்களிலுமிருந்த சாசனங்கள் படிக்கப்பட்டன. எகிப்தின் பண்டைய வரலாறு புது உருவத்துடனும், மெருகுடனும் வெளிவரலாயிற்று.

ஏறத்தாழ முப்பத்து மூன்ருயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எகிப்திய அரசிளங்குமரன் ஒருவன் இறந்துபோனுன். பதினெட்டே வயது நிரம்பிய பச்சிளங்காளையாகிய அவனது பெயர் துதன்காமன் (Tutenkhamon) என்பதாகும். அக்கால வழக்கப்படி அவனது சடலம் பலவித ஆடம்பரங்களுடன் புதைக்கப்பட்டது. அவனது முகம் தூய பொன்னுல் ஆய முகமூடி ஒன்றினுல் மூடப்பட்டது. அவனது பாதங்களைப் பொன்னுல் ஆய மிதியடிகள் அலங்கரித்தன. நன்கு பாடம் பண்ணப்பட்ட அவனது உடலானது முற்றிலும் பொன்னுலான ஒரு சவப்பெட்டிக்குள் வைக்கப்பட்டது. அப் பெட்டி

யானது மேலும் இரண்டு சவப் பெட்டிகளால் மூடப்பட்டது. அதன் பின்னர் பல்வேறு அறைகளைக் கொண்ட ஓர் பெரிய கல்லறையில் அச் சடலம் அடக்கம் செய்யப்பட்டது. இறந்த பிறகும் ஒருவனது உயிர் வாழ்கிறது என்றும், பூதவுலகில் தான் பெற்ற இன்பங்களை அது ஆவியுலகில் மீண்டும் அநுபவிக்கின்றது என்றும் நம்பிய எகிப்தியர்கள் தமது அரசனுடைய சடலத்தைச் சுற்றிலும் அவனுக்குப் பிரியமான பல்வேறு பொருட்களை வைத்தனர். அவன் உண்டுவந்த பல்வேறு அலங்காரப் பொருள்களும், கட்டில்களும், இருக்கைகளும், பெட்டிகளும் அலங்கரிக்கப்பட்ட தேர்களும் இன்னோரன்ன பல பொருள்களும் அக் கல்லறையில் இடம்பெற்றன. இவை யாவற்றுக்கும் மேலாகப் பொன்னாலாய அவனது சிம்மாசனமும் வைக்கப்பட்டிருந்தது. அதன் பின்புறத்தில் அவ்வரசனது உருவமும், அவனது அரசியின் உருவமும் பொறிக்கப்பட்டிருந்தன. இந்தக் கல்லறையானது 1922ஆம் ஆண்டில் ஹோவர்டு கார்டர் (Howard Carter) எனும் பிரிட்டிஷ் தொல்பொருள் ஆராய்ச்சியாளரால் கண்டுபிடிக்கப்பட்டது. அதன் இரகசிய வழியைக் கொள்ளைக்காரர்கள் எப்படியோ காணுமல் விட்டுவிட்டனர். அதனுற்ருன் அது இன்றைக்குப் பண்டைய எகிப்திய வரலாற்றின் கருவூலமாகத் திகழ்கிறது.

துதன்காமன் பிறப்பதற்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே எகிப்தில் ஓர் உன்னத நாகரிகம் ஓங்கியிருந்தது. எகிப்திய மன்னர்கள் இறந்தபின்பு அவர்களது சடலங்கள் 'பிரமிடுகள்' எனும் பெருங் கல்லறைகளில் புதைக்கப்பட்டன. மெம்பிஸ் (Memphis) என்ற பழைய எகிப்திய தலைநகருக்கருகில் இத்தகைய பிரமிடுகளை இன்றும் ஏராளமாகக் காணலாம். பண்டைய உலகத்தின் ஏழு அதிசயங்களில் ஒன்ருகக் கருதப்படுகின்ற இப் பிரமிடுகள் வரலாற்றுக்கு ஓர் வற்ருத ஊற்ருகத் திகழ்கின்றன. அவற்றில் காணப்படும் பொருட்களைக் கொண்டும் ஓவியங்களைக் கொண்டும் எகிப்திய வாழ்க்கை நிலையை நாம் ஒருவாறு புரிந்துகொள்ள முடிகிறது.

மற்றும் எகிப்திய மன்னர்கள் தீப்ஸ் (Thebes), லெக்ஸோர் (Lexor) போன்றவிடங்களில் கட்டுவித்துள்ள பிரம்மாண்டமான கோயில்களும், அங்குக் காணப்படும் பொருள்களும், சிலைகளும், எகிப்திய நாகரிகத்தை நமக்கு நன்கு உணர்த்துகின்றன. பெரிய சிலைகளும், நினைவுச் சின்னங்களும், எகிப்திய வரலாற்றுக்குப் பெரிதும் துணைபுரிகின்றன. கோயில்களில் காணப்படும் சாசனங்களும், பெப்பைரஸ் என்ற காகிதத்தில் எழுதப்பட்ட ஆயிரக்

கணக்கான கடிதங்களும், நூல்களும், பதிவேடுகளும் நமக்கு எகிப்திய வாழ்க்கையைப்பற்றி அறியத் துணைபுரிகின்றன.

***நைல் நதியின் கொடை***

பண்டைய எகிப்தின் நாகரிகமும் வரலாறும் அதன் புவியியல் அமைப்பினுல் பெரிதும் பாதிக்கப்பட்டது. அதன் மேற்கே சஹாரா பாலைவனம் பரந்து விரிந்து கிடக்கிறது. தெற்கே அடர்ந்து இருண்ட காடுகள் நிறைந்துள்ளன. கிழக்கே செங்கடலும், வடக்கே மத்தியதரைக் கடலும், அதற்கு அரண்போல் நின்று பாதுகாக்கின்றன. அக் கடல்களுக்கு இடையிலுள்ள சினுய் எனும் சிறிய பாலைவனத்தின் மூலமாகவே எதிரிகள் எகிப்தைத் தாக்க முடியும். எனவேதான் வேற்று நாட்டுப் படையெடுப்பின் அபாய மின்றி எகிப்தியர்கள் தமக்கே உரித்தான ஓர் தனிப் பெரும் நாகரிகத்தை ஏற்படுத்திக்கொண்டனர். அந் நாகரிகம் தோன்ற உறுதுணையாய் அமைந்தது எகிப்தின் ஜீவ நாடியான நைல் நதி யாகும். அந் நதியின் செழிப்பான வண்டல் மண்ணும், நீரும்தான் எகிப்திய வளத்திற்குக் காரணமாகும். மலைகளிலிருந்து அடித்துக் கொண்டு வரும் வண்டல் மண்ணை அது ஆண்டுதோறும் எகிப்திய கழிமுகப் பிரதேசத்திலும், கரைகளின் இருமருங்கிலும் குவிக்கிறது. வெள்ளத்தின்போது இருபத்தைந்தடி ஆழம் உள்ள நீர்ப்பரப்பு, நதியில் ஓடுகிறது. எனவே, நீர் வடிந்த பின் எகிப்திய நிலங்கள் முப்போக விளைவுக்குத் தகுதியாக விளங்குகின்றன. இச் செழிப் பான பூமியில் ஆதியில் அடர்ந்த காடுகளும், கொடிய விலங்கு களும், பாம்புகளும் இருந்தனவென்றும், அவற்றையெல்லாம் வென்று நிலத்தைப் பண்படுத்திய பின்னரே அங்கு நாகரிகம் தோன்றியதென்றும் கூறப்படுகின்றது. அங்கு நாகரிகத்தைத் தோற்றுவித்த மக்கள் முதலில் சஹாராப் பாலைவனப் பகுதியில் வாழ்ந்தார்கள். வடக்கே பனிமலைகளின் நகர்ச்சியால் ஐரோப்பா வின் பெரும்பகுதி குளிர்வுற்றதால் பருவக் காற்றின் திசை மாறி விட்டது. எனவே, அப் பருவக் காற்றின் மூலம் மழையைப் பெற்றுச் செழிப்பாக இருந்த சஹாரா நிலப்பகுதி நாளடைவில் பாலைவன மாக மாறிவிட்டது. எனவேதான் அங்கிருந்த மக்கள் நைல் நதிக் கரையை நாடிச் சென்று இயற்கையோடு போராடி நாகரிகத்தை உருவாக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அவர்களே மெசப டோமியாவிற்கும் சென்று அங்கும் நாகரிகத்தைத் தோற்றுவித்தனர் என்பது டாயின்பி (Toynbe) என்ற வரலாற்ருசிரியரின் கருத்தாகும். இங்ஙனம் மக்களது உழைப்போடு நைல் நதியின் நீர் வளமும், நில வளமும் சேர்ந்தே பண்டைய எகிப்திய நாகரிகத்தை உருவாக்கிய காரணத்தால்தான் அதை 'நைல் நதியின் நன்கொடை' என்று வரலாற்றின் தந்தையான ஹெரடோட்டஸ் என்பார் அழைத்தார்.

**எகிப்தின் அரசியல் வரலாறு — வரலாற்றுக்கு முற்பட்ட காலம் (கி.மு. 5000 — கி.மு. 3200)**

வரலாற்றிற்கு முற்பட்ட மிகப் பழங்காலத்தில் எகிப்தில் வாழ்ந்த மனிதர்கள் குட்டையாகவும், கறுப்பாகவும், சற்றே வளைந்த மூக்கினையும் உடையவர்களாக இருந்தனர்: அவர்கள் காகேசிய (Caucasian) இனத்தின் ஒரு பிரிவினராவர். எனினும், நீக்ரோ, லிபிய இனத்தவர்களோடு அவர்கள் கலந்து ஒரு கலப் பினத்தை உருவாக்கினர். அவர்கள் முதலில் கற்களையே கருவி களாகக் கொண்டு வேட்டையாடினர். அவைகள் பார்வைக்குப் பளபளப்பாய் இருந்தன. நாளடைவில் செம்பு, தங்கம் ஆகிய உலோகங்களையும் அவர்கள் பயன்படுத்தத் தெரிந்துகொண்டனர். அவர்களது மண்பாண்டங்கள் பளபளப்பாயும், நன்கு அலங்கரிக்கப் பட்டதாயும், கலைத்திறம் செறிந்தவைகளாயும் விளங்கின. செங்கல் லாலும் கருங்கல்லாலும் கட்டப்பட்ட வீடுகளில் அவர்கள் வாழ்ந் தனர். காட்டு மிருகங்களை அவர்கள் வீட்டு மிருகங்களாகப் பழக்கி, அவற்றைத் தம் அன்றாட வாழ்க்கைக்குப் பயன்படுத்திக் கொண்டனர். நிலத்தை உழுது பயிர் விளைவிக்கவும், விளைந்த பண்டங்களைப் படகுகள் மூலம் வேற்றிடங்களுக்குக் கொண்டு செல்லவும், அவர்கள் அறிந்திருந்தனர். ஆதியில் அவர்கள் சிறு சிறு குழுக்களாகவே (tribes) வாழ்ந்தனர். ஒவ்வொரு குழுவுக்கும் ஓர் தலைவன் இருந்தான். நாளடைவில் இக் குழுக்கள் ஒன்றுக இணைந்து சிறுசிறு நகரங்களாக அமைந்தன. ஒவ்வொரு நகரமும் ஒரு தனியரசாகத் திகழ்ந்தது. கி.மு. நாலாயிரத்தில் நகர அரசுகள் இணைந்து இரண்டு பேரரசுகள் உருவெடுத்தன. ஒன்று நைல் நதி யின் கழிமுகப் பிரதேசத்திலும் மற்றென்று அதன் தெற்குப் பகுதி யிலும் அமைந்திருந்தது. கி.மு. 3400ஆம் ஆண்டளவில் இவ் விரண்டு பேரரசுகளும், ஒன்றுக இணைந்தன. அப்போதிருந்தே எகிப்தியர்கள் சம்பவங்களைச் சாசனங்களில் பொறித்துவைக்கும் பழக்கத்தைக் கைக்கொண்டனர். ஒரு வகையான சட்ட முறை யையும் அவர்கள் அறிந்திருந்தனர். வானவியல் அறிவையும் அவர்கள் சிறிதே பெற்றிருந்ததாகத் தெரிகிறது.

**பிரமிடுகளின் காலம் (கி.மு. 3200 — கி.மு. 2500 வரை)**

கி.மு. 3200-ல் எகிப்தில் தோன்றிய மீனஸ் (Menes) என்ற பேரரசர் வடக்கு தெற்கு ஆகிய இரு எகிப்தையும் ஒருங்கிணைத்து ஓர் தனிப்பேரரசை நிறுவினர். அவரது அரண்மனை மிக விசால மாக இருந்ததால் அவரை மக்கள் பரோவா (Pharaoh) என அழைத்தனர். பரோவா என்றுல் பெரிய வீட்டில் வசிப்பவர் என்று பொருள். மீனசுக்குப் பின் ஐந்து தலைமுறைவரை அவரது வழித்

தோன்றல்கள் ஆண்டனர். அக் காலத்தே நாட்டின் பரப்பு மேலும் விரிவடைந்தது. பல கால்வாய்கள் வெட்டப்பட்டு நீர்ப்பாசன வசதிகள் பெருகின. மன்னனை மக்கள் இறைவனுகக் கருதி வழி பட்டனர். அவன் இறந்தபின் அவனது சடலத்தை என்றும் கெடாமல் இருக்கும்படி பதம் செய்து பெரிய பிரமிடுகளில் வைத்துப் புதைத்தனர். அத்தகைய கல்லறைக் கட்டடங்கள் பரோவாக் களின் வல்லமையைப் பறையறைந்துகொண்டு இன்றும் நின்று நிலவுகின்றன.

***பிரபுக்களின் காலம்***

பீரோவாக்கள் தமது நண்பர்களுக்கு ஏராளமான நிலங்களை வழங்கியதன் விளைவாக செல்வாக்கு மிக்க ஓர் நிலக்கிழார் வகுப்பு எகிப்தில் தோன்றியது. அவர்கள் கை ஓங்கியவுடன் நாட்டில் குழப்பம் மேலிட்டது. ஒவ்வொரு பிரபுவும் ஓர் தனி அரசனைப் போன்று வாழத் தொடங்கினுன். ஒரே பேரரசு என்ற நிலைமை மாறி சிறு சிறு அரசுகள் நாடெங்கிலும் ஏற்பட்டன. அந் நாடுகளின் தலைவர்கள் தனிப்பட்ட அரசர்களாக விளங்கினர். அவர்கள் ஒருவரோடு ஒருவர் போரிட்டுக்கொண்டு நாட்டின் அமைதியைக் கெடுத்தனர். இதையறிந்த ஹைக்ஸோஸ் (Hyksos) என்ற அரபு வமிசத்தினர் கி.மு. 1800-ல் எகிப்தைத் தாக்கிக் கைப்பற்றினர். இருநூறு ஆண்டுகளுக்கு மேல் எகிப்தை அவர்கள் ஆண்டு வந்தனர். அவர்களது கொடுங்கோலை மக்கள் வெறுத்தனர். மற்றும் அவர்களது கொடுங்கோன்மைக்கு உதவியாக இருந்த யூதர்களையும் (கோஷன் நாட்டிலிருந்து ஓடி வந்தவர்கள்) அவர்கள் அடியோடு வெறுத்தனர். எகிப்தியர்கள் ஹைக்ஸோஸ் வீரர்களிடம் தோற்ற தற்குக் காரணம் அவர்கள் பயன்படுத்திய குதிரைப் படையே ஆகும். நாளடைவில் எகிப்தியர்களும் குதிரையேற்றத்தில் திறம் பெற்றவராயினர். வலிமை மிக்க ஓர் குதிரைப்படையை அவர்கள் ஏற்படுத்தி, அதன் உதவியால் ஹைக்ஸோஸ்களை நாட்டை விட்டுத் துரத்திவிட்டனர்.

***பேரரசு காலம் (கி.மு.1580 — கி.மு. 1090 வரை)***

ஹைக்ஸோஸ்கள் வெளியேற்றப்பட்ட பின்பு எகிப்தியர்கள் மீண்டும் ஓர் பேரரசை நிறுவினர். நாளடைவில் அது எதியோப்பியா, பாலஸ்தீனம், சிரியா ஆகிய நாடுகளுக்கும் பரவியது. ஒரு சிலர் பெரும் பணக்காரர்களாக மாறினர். செல் வாக்கு மிக்க மத குருமார்களும் பிரபுக்களும் பரோவாவுடன் போட்டியிட முனைந்தனர். எனவே, பேரரசு பலவீனமடைந்தது.

*பேரரசின் வீழ்ச்சி*

கி.மு. 1100 முதல் எகிப்து பல வெளிநாட்டுப் படையெடுப்புகளுக்கு உட்பட்டது. ஹிட்டைட்டுகள் (Hittites) என்னும் முரட்டு வகுப்பினர் பேரரசின் எல்லைகளைத் தாக்கினர். அதன் பின் அசிரியர்கள் எகிப்தைத் தாக்கிக் கைப்பற்றிக்கொண்டனர். கி.மு. ஏழாம் நூற்றுண்டில் எகிப்தியர்கள் மீண்டும் சுயேச்சை பெற்றனர். ஆனால், கி.மு. 525-ல் பாரசீகர்கள் தாக்கியபோது எகிப்து அடிமை நாடாகியது. கி.மு. நான்காம் நூற்றுண்டில் அலெக்சாந்தர் பாரசீகப் பேரரசை முறியடித்தபோது எகிப்து கிரேக்கர்கள் கைக்கு மாறியது. கிரேக்கப் படைத்தலைவர்களில் ஒருவரான தாலமி (Ptolemy) என்பவர் எகிப்தில் ஓர் புதிய வமிசத்தைத் தோற்றுவித்தார். எகிப்து ஓரளவு சுதந்திரத்தை அநுபவித்தது. கி.மு. 39-ல் ரோமானியர்கள் எகிப்தைத் தாக்கினர். அப்போது எகிப்தை ஆண்டுவந்த கிளியோபாட்ரா (Cleopatra) என்னும் பேரழகி தன் நாட்டை எதிரிகளிடமிருந்து காக்கவேண்டி, அவர்களிடம் தன் அழகையே அடகுவைத்தாள். கண்டோர் மயங்கும் தனது வியத்தகு மேனி எழிலாலும், சாகஸத்தாலும் அவள் ரோமானியத் தலைவர்களான சீசர், அந்தோனி போன்றவர்களைத் தன் கைப் பாவையாக ஆட்டிப் படைத்தாள். அவ்விதமாக அவள் எகிப்தின் சுதந்திரத்தைக் காப்பாற்றப் பாடுபட்டாள். ஆனால் கி.மு.30-ல் எகிப்தின் மீது படையெடுத்த அகஸ்டஸ் மன்னனிடம் அவளது சாகஸம் பலிக்கவில்லை. அவளை உயிரோடு சிறை செய்து ரோம் நகர வீதிகளில் ஊர்வலமாக அழைத்துச் செல்ல அகஸ்டஸ் எண்ணினன். அதையறிந்த அவ்வழகு ராணி 'மயிர் நீப்பின் வாழாக் கவரிமான் அன்னர், உயிர் நீப்பர் மானம் வரின்' என்ற குறளுக்கு ஏற்ப நஞ்சினை யருந்தி தனது உயிரை மாய்த்துக்கொண்டாள். எகிப்தின் சுதந்திரம் பறிபோகியது. 1936ஆம் ஆண்டில்தான் அது மீண்டும் சுயேச்சை பெற்றது.

*அரசியல் அமைப்பு*

மீனஸ் என்ற மன்னனல் ஏற்படுத்தப்பட்ட பண்டைய அரசு (Old Kingdom) என்ற அரசியல் அமைப்பானது ஏறத்தாழ ஒன்பது நூற்றுண்டுகள் நீடித்தது (கி.மு. 3500—கி.மு. 2630). அதன் மன்னர்கள் ஈடும் எடுப்புமற்ற முறையில் தமது அதிகாரங்களைச் செலுத்தி ஆட்சி புரிந்தனர். இரண்டு இராச்சியங்களை ஒன்று சேர்த்து ஒரு பேரரசை உருவாக்கியவரின் சந்ததிகள் என்பதைக் காட்டும் வகையில் இரண்டு மணிமகுடங்களை அவ் வரசர்கள் அணிந்தனர். அவர்கள் தங்களை இறைவனின் தனிப் பிரதிநிதிகளாகக் கருதிக் கொண்டனர். உண்மையில் நாட்டில் நீதியையும், நேர்மையையும்,

சமுதாயத்தில் ஒழுங்கையும் ஏற்படுத்துபவர் இறைவனே என்றும், அவ் விறைவனின் பகராளே (Agent) அரசன் என்றும் மக்கள் நம்பினர். ரி (Re) என்னும் கதிரவக் கடவுளின் புதல்வனே அரசர் என்பது அவர்களின் உறுதியான நம்பிக்கையாகும். இங்ஙனம் மன்னனைத் தெய்வமாக நம்பிய மக்கள் அவரது பெயரைச் சொல்வதற்கும் அஞ்சினர். எனவேதான் பெரிய வீட்டில் வசிப்பவர் எனப் பொருள்படும் 'பரோவா' என்ற பட்டத்தை மன்னருக்குச் சூட்டி அவ்வாறே அழைக்கவும் ஆரம்பித்தனர். அவருடைய பாதங்களை முத்தமிடுதல் பெறற்கரிய பேறு என்று அவர்கள் நினைத்தனர். பெரும்பான்மையான மக்கள் அவருடைய காலடியில் கிடக்கும் தூசியைமட்டுமே முத்தமிட அனுமதிக்கப்பட்டனர். அரசர் தமது தெய்வீகத்தை இழந்துவிடாமல் இருக்கும்பொருட்டு தமது சொந்தக் குடும்பத்தில் அன்றி அயற் குடும்பங்களில் திருமணத் தொடர்பு கொள்ளக்கூடாது என்ற ஓர் நியதி ஏற்பட்டிருந்தது. மன்னரைச் சுற்றி ஏராளமான வேலையாட்கள் பணி செய்யக் காத்து நின்றனர். அழகிய ஆடைகள் அணிந்த பிரபுக்கள் பலர் அவரை எப்பொழுதும் வலம் வந்தவண்ணமிருந்தனர். அவரது முடியை அலங்கரிக்கவும், ஆடைகளை வெளுக்கவும், வாசனைத் திரவியங்களை அள்ளித் தெளிக்கவும், ஆடை அலங்காரம் செய்விக்கவும் என்றே பலர் நியமிக்கப்பட்டிருந்தனர். மன்னனது ஓய்வு நேரங்களில் அவரை மகிழ்விக்க யாழிசைப்போரும், குழலூதுவோரும், நாட்டிய நங்கையரும் ஏராளமாக இருந்தனர். அவரை அந்தப்புரத்தில் மகிழ்விக்க ஆயிரக்கணக்கான இராணிகள் காத்துக்கிடந்தனர். எனினும், அவர்களில் ஒருத்தி மட்டும்தான் அரசனின் கொலு மண்டபத்தில் அவரோடு வீற்றிருக்கும் தகுதியைப் பெற்றிருந்தாள். அழகிய கண்கவர் பாத்திரங்களும், தந்தங்கள் பதிக்கப்பட்ட பெரும் பீரோக்களும், நாற்காலிகளும், பொன்னாலும் மணியாலும் ஆய ஆபரணங்களும், உயர்வகை மதுக்குடங்களும், அரசர்களின் கல்லறைகளில் வைக்கப்பட்டிருந்ததைக் கொண்டு அரண்மனையில் அரசர் எவ்வளவு ஆடம்பரத்துடன் வாழ்ந்திருப்பார் என்பதை நாம் ஒருவாறு ஊகித்து உணரலாம்.

அரசர்கள் எவ்வளவு செல்வந்தர்களாய் வாழ்ந்தனர் என்பதற்கு அவர்கள் எழுப்பியுள்ள பிரமிடுகளே ஒரு பெருஞ்சான்றாகும். ஒவ்வோர் அரசரும் தமது கௌரவத்திற்கேற்றபடி மென்மேலும் பெரிய பிரமிடுகளைக் கட்டியுள்ளனர். அவற்றுள் யாவற்றிலும் பெரிதாய் விளங்குவது கியோப்ஸ் (Cheops) அல்லது கூஃபு (Khufu) என்ற மன்னரின் பிரமிடேயாகும். பதின்மூன்று ஏக்கர் நிலப்பரப்பில் கட்டப்பட்டுள்ள அவ்வானளாவும் கட்டடம் காண்

போர் பிரமிக்கும்வண்ணம் அமைந்துள்ளது. ஏறக்குறைய 1,00,000 அடிமைகள், இருபது ஆண்டுகள் அல்லும் பகலும் உழைத்து அதைக் கட்டியுள்ளனர். அதில் ஒவ்வொன்றும் சுமார் 2½ டன் எடையுள்ள 2,300,000 கற்கள் ஒன்றன்மேல் ஒன்ருய் வைக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. அவ்வளவு கனமான கற்களை அவ்வளவு உயரம் வரை எங்ஙனம் ஒன்றன்மேல் ஒன்ருய் அடுக்கினர் என்பது தற்காலப் பொறியியல் வல்லுனர்களுக்கே புரியாத ஓர் புதிராக உள்ளது. இத்தகைய கல்லறைகளில் அரசனுக்கு வேண்டிய பொருள்கள் யாவும் வைக்கப்பட்டிருந்தன. அரசனது மனைவியரும், வேலையாட்களும்கூடக் கொல்லப்பட்டு அவனேடு புதைக்கப்பட்டனர் என்றும் தெரிகிறது.

***அரசாங்கம்***

மன்னனே மத்திய அரசாங்கத்தின் தலைவனுக விளங்கினுன். சட்டங்களைச் செய்யவும், வழக்குகளில் தீர்ப்பு வழங்கவும் அவனே இறுதியான அதிகாரங்களைப் பெற்றிருந்தான். சட்டங்களை அமல் நடத்தி நாட்டில் ஒழுங்கையும் அமைதியையும் நிலைநாட்டுவது அவனது முக்கிய கடமையாக இருந்தது. நாட்டின் படைகளுக்கும் அவனே தனித் தலைவனுகத் திகழ்ந்தான். சமயம் பற்றிய சடங்குகள் அனைத்திற்கும் அவனே தலைமை பூண்டான்: கோயில் களைக் கட்டவும், அவற்றில் விழா எடுக்கவும், கடவுளர்க்குப் படைக்க வேண்டிய பொருள்களை வழங்கவும் அவன் பெரிதும் அக்கறை எடுத்துக்கொண்டான். அதேபோன்று நாட்டின் நீர்ப் பாசன வசதிகளைக் கவனித்து விவசாயத்தை ஓங்கச் செய்வதும் அவனது முக்கியப் பணியாகும். நடுநிலை கோடாது நாட்டு மக்களுக்கு இறுதி நீதி வழங்குவது அவனது தலையாய கடமை யாகும்.

அரசனுக்கு உதவியாக ஏராளமான உயர்தர அதிகாரிகள் இருந்தனர். தலைமை நீதிபதி, வேளாண் அமைச்சர், கட்டடக் கலைஞர், தானைத் தளபதி ஆகியோர் அவனது மிக முக்கிய அதிகாரிகளாவர். எண்ணற்ற சிப்பந்திகளும், சாதாரண அதிகாரி களும் அலுவலில் மத்திய அரசுக்குத் துணை புரிந்தனர். அரசனுடைய செலவினைப் பற்றிய கணக்குகளையும், வரி தண்டுதல் பற்றிய விவரங்களையும் ஆவணங்களில் அவ் வதிகாரிகள் குறித்து வைத்தனர். வரியாக வசூலிக்கப்பட்ட தானியங்களைச் சேமித்து வைக்கப் பெரிய பெரிய தானியக் களஞ்சியங்கள் தலைநகரத்தில் இருந்தன. உள்ளாட்சித்துறை (Local Government) நன்கு நிருவகிக்கப்பட்டது. நாடு பல மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு தலைவர் நியமிக்கப்பட்டார்.

மாவட்டங்கள் நோம்கள் (Nomes) என்றும் மாவட்ட ஆட்சியாளர்கள் நோமார்க்குகள் (Nomarch) என்றும் அழைக்கப்பெறலாயினர். இங்ஙனம் 42 நோமார்க்குகள் உள்ளாட்சித் துறையை நிருவகித்தனர். தொடக்கத்தில் அவர்கள் மன்னனுல் நியமிக்கப்பட்டனர் எனினும் நாளடைவில் அவர்கள் பரம்பரை அதிகாரிகளாக மாறினர். வரி வசூலித்தல், நியாயம் வழங்குதல், படைகளை நடத்துதல், கடவுளர்க்கு வழிபாடு நடத்துதல் போன்றவை அவர்களது கடமைகளாகும்.

நாட்டின் நீதி நிருவாகத்துறை நன்கு அமைக்கப்பட்டிருந்தது. நீதிபதிகள் என்ற தனிப்பட்ட வகுப்பு இல்லையெனினும் நிருவாக அதிகாரிகளே நீதி வழங்குமாறு பணிக்கப்பட்டனர். ஆறுவகைப்பட்ட நீதிமன்றங்களில் அவர்கள் நீதிபதிகளாகப் பணியாற்றினர். சிறிய திருட்டுகள் முதல், அரசு துரோகம் வரை எல்லா வழக்குகளும் சாதாரண நீதிமன்றங்களிலேயே விசாரிக்கப்பட்டன.

இராணுவ அடிப்படையில் அரசு அமைக்கப்படாதது பண்டைய எகிப்திய அரசாங்கத்தின் ஓர் சிறப்பியல்பாகும். அரசனுக்கென்று தனிப்பட்ட சேனை ஒன்றுமில்லை. தேசிய சேனையைத் திரட்டும் வழக்கமும் அக் காலத்தில் இல்லை. ஆங்காங்கே இருந்த மாவட்டங்களில் மட்டும் உள்நாட்டுச் சேனைகள் நிறுத்தப்பட்டிருந்தன. உள்நாட்டுக் குழப்பங்களைத் தவிர்க்க அவை பயன்படுத்தப்பட்டன. வெளிநாட்டுப் படையெடுப்பு ஏற்பட்டபோது மாவட்டப் படைகள் அனைத்தையும் ஒன்று திரட்டியே மன்னர் போர் புரிந்தார். அத்தகைய அபாயம் அநேகமாக வெகு நாட்கள் ஏற்படாமல் இருந்த காரணத்தினுலேயே எகிப்திய மன்னர்கள் இராணுவத்தைப்பற்றி அவ்வளவாக அக்கறை எடுத்துக்கொள்ளவில்லை. இராணுவத்தை வலுப்பெற அமைப்பதற்குப் பதிலாக நாட்டின் நீர்ப்பாசன வசதிகளைக் கவனிப்பதிலேயே மன்னரின் கவனம் எல்லாம் சென்றது. போக்குவரத்து வசதிகளையும் அவர் கவனிக்கவேண்டியதாயிற்று. நைல் நதியின் ஒரு கிளையானது செங்கடலின் வடமுனையோடு ஒரு கால்வாயால் இணைக்கப்பட்டிருந்தது. இன்றைய சூயஸ் கால்வாயைப் போன்று போக்குவரத்துக்கு அது பெரிதும் துணை புரிந்தது.

அரசியலமைப்பின் இன்னெரு முக்கியமான அம்சமானது புள்ளி விவரச் சேகரிப்பாகும். பிறப்பிறப்புக் கணக்கு (Census), மக்களது சொத்துகளின் விவரம் ஆகியவை ஆண்டுக்கொருமுறை கணக்கிடப்பட்டன. மக்கள் மீது வரி போடுவதற்கு இப் புள்ளி விவரங்கள் பெரிதும் உதவி செய்தன. அரண்மனையில் நடைபெறும்

ஒவ்வொரு நிகழ்ச்சியையும் குறித்து வைக்கும் நற்பழக்கமும் அக் காலத்தே இருந்து வந்தது. இத்தகைய ஆவணங்கள் எகிப்தின் வரலாற்றை வரையப் பெரிதும் துணை புரிகின்றன.

எகிப்திய அரசியல் அமைப்பில் ஒரு வகையான அரசு பொது வுடமைக் கொள்கை (State Socialism) கடைப்பிடிக்கப்பட்டதாகத் தெரியவருகிறது. தனிப்பட்டவர்களுக்கு அங்குச் சொத்துரிமை இல்லை. எல்லா நிலங்களும், பொருள்களும் அரசாங்கத்துக்கே சொந்தமாக இருந்தன. ஒவ்வொரு குடிமகனும் அரசாங்கத்தின் ஓர் ஊழியனாகவே கருதப்பட்டான். பொது நலத்துக்காகவே ஒருவன் உழைக்க வேண்டும் என்ற நியதி இருந்தது. பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களை அமைப்பதில் மக்களே கூலியின்றி உழைத்து ஒத் துழைத்தனர். மக்களைப் பொதுத் தொண்டுகளில் ஈடுபடுத்துவதே மாநில அதிகாரிகளின் முக்கியப் பணியாகக் கருதப்பட்டது. பிற்காலத்தே ஏற்பட்ட எகிப்தியப் பேரரசு முதலில் ஏற்பட்ட பேரரசைப் போன்றே அரசியல் அமைப்பைப் பெற்றிருந்தது. ஆனால், மத்திய அரசின் அதிகாரங்கள் மட்டும் விரிவடைந்திருந் தன. உள்ளாட்சித்துறையின் அதிகாரங்கள் யாவும் பறிபோயின. மாவட்ட அதிகாரிகள் மன்னனின் வெறும் கைப்பாவைகளாக மாறினர். மன்னன் தனக்கென்று ஓர் பெரும்படையை அமைத் துக் கொண்டான். பெரும் பிரபுக்களும் மன்னனின் அடிமை களாக மாறினர். இங்ஙனம் அரசர்கள் எதேச்சாதிகாரிகளாகப் பிற்காலத்தே மாறிவிட்டனர்.

***சமுதாய வாழ்க்கை***

எகிப்திய சமுதாய வாழ்வில் நம் நாட்டில் இருப்பதைப் போன்ற சாதி முறை இல்லை. சட்டத்திற்கு முன்பு அனைவரும் சமமாகவே கருதப்பட்டனர். பொருளாதார நிலையில் வேறுபட்ட பல்வேறு வகுப்புகள் மட்டும் இருந்தன. அவ் வகுப்பினரில் உயர்ந் தோரும் தாழ்ந்தோரும் இருந்தனரென்றாலும் அது நிலையான ஓர் அமைப்பாக இல்லை. முயற்சியாலும், உழைப்பாலும் கீழ் மட்டத்தி லிருப்பவனும் மேல் மட்டத்திற்கு எளிதிலேயே சென்றுவிட முடியும். அடிமை நிலையில் இருப்பவனும்கூட உயர்ந்த பிரபுத்துவ நிலையை அடைய வாய்ப்பு இருந்தது.

எகிப்திய சமுதாயத்தில் ஐந்து வகுப்பினர்கள் காணப்பட்டனர். அவர்கள் முறையே அரச குடும்பத்தினர், மத குருமார்கள், பிரபுக்கள், மத்தியதர வகுப்பினர் (வணிகர்கள், உழவர்கள், கைவினைஞர்கள், எழுத்தர்கள்), விவசாயப் பண்ணையாட்கள் என்போராவர். பேரரசு காலத்தில் போர் வீரர்கள் என்ற ஆறுவது

புதிய வகுப்பினர் தோன்றினர். போர்களில் சிறைப்படுத்தப்பட்டவர்கள் யாவரும் அடிமைகள் என்ற ஏழாம் வகுப்பினராக மாறினர். அவர்கள் அரசாங்கச் சுரங்கங்களிலும், கோயில் நிலங்களிலும் வேலை செய்து வயிறு வளர்த்தனர். நாளடைவில் அவர்கள் படைவீரர்களாயும், அரசனின் பணியாளர்களாயும் மாறினர். வகுப்புகளிடையே உயர்வும் தாழ்வும் அவ்வப்போது மாறிக்கொண்டேயிருந்தது. பழைய பேரரசு காலத்தில் பிரபுக்களும், மதகுருமார்களும் சமுதாயத்தின் மேல்தளத்தை அலங்கரித்தனர். அதன் பின்னர் மத்தியதர வகுப்பினர் மன்னர்களிடம் பல சலுகைகளைப் பெற்று உயர்நிலை அடைந்தனர். சிறப்பாக வணிகர்கள், தொழில் அதிபர்கள் ஆகியோரின் நிலை உயர்ந்தது. இறுதியில் தோன்றிய பேரரசில் அரசாங்க அதிகாரிகள் மிக உயர்ந்த நிலையை அடைந்தனர். சமய குருமார்களும் தங்களிடம் மந்திர சக்தி இருப்பதாகக் கூறி சமுதாயத்தில் உயர்ந்த நிலையைப் பிடித்துக் கொண்டனர். இங்ஙனம் உயர்ந்தோருக்கும், தாழ்ந்தோருக்கும் இடையே அகன்ற இடைவெளி இருந்தது. செல்வந்த பிரபுக்கள் அரண்மனை போன்ற பெரும் மாளிகைகளில் வசித்தனர். அவற்றைச் சுற்றிலும் நறுமணம் கமழும் தோட்டங்களும், குளிர்ந்த சோலைகளும் அமைந்திருந்தன. அவர்களின் உணவு மீனும், மதுவும், இறைச்சியும், இனிப்பும், பழங்களும், காய்கறிகளும், ரொட்டியும் நிறைந்த விருந்துணவாகவே இருந்துவந்தது. பளபளப்பான வெண் சலவைக் கற்களாலும், பொன்னாலும், வெள்ளியாலும் செய்யப்பட்ட உண்கலன்களில் அவர்கள் உணவருந்தினர். விலையுயர்ந்த ஆடை, அணிகலன்களை அணிந்தனர்; பொன்னாலும் மணியாலும் ஆகிய பட்டையான கழுத்தணிகளைச் சூட்டிக்கொண்டனர். முகத்தையும், தலையையும் நன்கு மழித்து எப்போதும் வழுவழுப்பாகவே வைத்துக்கொண்டனர்; அவசியமானபோது செயற்கை முடிகளையும் தரித்துக்கொண்டனர்; பெண்டிர் நீண்ட முடியை வைத்திருந்தனர். உயர்வகை அணிகலன்கள் அவர்களின் அழகுக்கு அழகு செய்தன. அவர்களின் ஆடை மெல்லியதாயும் கவர்ச்சியானதாயும் இருந்தன. துணிகள் பருத்தியாலும், லினன் நாரினாலும் செய்யப்பட்டன. கண்களுக்கு மையிட்டுக்கொள்ளுதலும், உதட்டுக்கும் நகத்திற்கும் சாயம் பூசிக்கொள்ளுதலும் அக்கால உயர்குடிப் பெண்டிரின் வழக்கமாகும். எகிப்தியப் பெண்கள் சிகையலங்காரக் கலையை நன்கு அறிந்திருந்தனர். தந்தத்தால் ஆன கொண்டை ஊசிகள் பல அவர்களது தலையை அலங்கரித்தன.

சாதாரண மக்களோவெனில் மிக எளிமையாகவே வாழ்ந்தனர். குடியானவர்கள் மண்ணினால் கட்டப்பட்ட சிறு குடிசை

களில் வசித்தனர். பட்டணங்களில் பெரிய மச்சு வீடுகளுக்கு அருகில் குச்சு வீடுகளும் காணப்பட்டன. தொழிலாளிகள் மிகவும் முடை நாற்றம் மிகுந்த சேரிகளில் நெருக்கமாக வாழ்ந்தனர். ஒரு சில பானைகள், பெட்டிகள் போன்றவைகளைத் தவிர அவர்களிடம் பொருள்கள் எதுவும் அதிகமாக இல்லை. பிரபுக்களின் மாளிகைகளோவெனில் உயர்ந்த மரங்களால் செய்யப்பட்ட மேஜை, நாற்காலிகளாலும், வண்ணத் திரைச்சீலைகளாலும், தரை விரிப்புகளாலும் அலங்கரிக்கப்பட்டு எழிலொழுக விளங்கின.

எகிப்திய சமுதாயத்தில் ஒருவன் ஒருத்தியை மணந்து கொள்ளும் வழக்கமே பெரிதும் காணப்பட்டது. அரசனும்கூட சட்டப்படி ஒருத்தியைத்தான் மணக்க முடியும். ஏனைய மனைவியரெல்லாம் கூத்தியராகவே கருதப்பட்டனர். அத்தகைய கூத்தியருக்குச் சமுதாயத்தில் நல்ல மதிப்பு இருந்தது. பெண்கள் பொதுவாகவே நன்கு நடத்தப்பட்டனர். மறுமக்கள்தாயம் அல்லது தாய் வழி முறை (Matriarchal System) என்ற முறையிலேயே குடும்பங்கள் அமைக்கப்பட்டன. அதன்படி ஓர் குடும்பத்தின் தலைவி அதன் தாயே ஆவாள். அவளுக்கே குடும்பச் சொத்து அனைத்தும் சொந்தமாகும். அவளுடைய தகப்பனுக்கு அவளது குழந்தைகள் மீதிருந்த அதிகாரம் அவற்றின் சொந்தத் தகப்பனுக்குக்கூட இல்லையெனலாம். கீழை நாடுகளிலேயே பெண்களுக்கு முதன் முதல் அரசுரிமை வழங்கிய நாடு எகிப்து ஒன்றேயாகும். எகிப்திய அரசர்களிடையே ஓர் விசித்திரமான வழக்கம் காணப்பட்டது. தமது தெய்வாம்சத்தைக் காப்பாற்றுதற் பொருட்டும், குடும்பச் சொத்து அந்நியருக்குப் போய்விடாதபடி காப்பாற்றவும் தமது குடும்பத்தில் உள்ள பெண்களையே அவர்கள் மணந்து கொண்டனர். தனது சொந்த சகோதரியையே மணந்து கொண்ட மன்னர்கள் பலர். 'மன்னன் எவ்வழி குடிகள் அவ்வழி' என்பதற்கேற்ப ஏனைய மக்களும் இதே போன்ற திருமண முறைகளைக் கடைப்பிடித்தனர். அதனால் மக்களின் உடலும், உள்ளமும் பலவீனப்பட்டுப் பகைவர்களுக்கு எளிதில் வசப்படும் நிலைமை ஏற்பட்டதென் பலர் கருதுகின்றனர்.

**பொருளாதார வாழ்க்கை**

வளம் நிறைந்த எகிப்தின் பொருளாதார நிலைமை சீரும் சிறப்பு முற்றுத் திகழ்ந்ததில் விந்தை ஒன்றுமில்லை. விவசாயம்தான் நாட்டுப் பொருளாதாரத்தின் முதுகெலும்பாகத் திகழ்ந்தது. விவசாயத்தில் ஈடுபட்ட பண்ணையாட்கள் மிகவும் கண்டிப்பாக நடத்தப்பட்டனர். நிலத்தோடு அவர்களையும் சேர்த்து விற்கின்ற உரிமையை நிலக்கிழார்களும், அரசாங்கத்தாரும் பெற்றிருந்தனர்.

நில அடிமைகள் விருப்பப்படி நிலத்தைவிட்டு ஓடிவிட இயலாது. கால்வாய்கள், அணைகள் கட்டுவதற்கு அவர்கள் இலவசமாக உழைப்பை நல்க வேண்டும். தமக்கு வேண்டிய உணவையும், உடையையும் பெற்றுக்கொண்டு அரசாங்கத்துக்காக எப்போதும் உழைப்பதே உழவனின் கடமையாகும். நிலக்கிழாரிடமிருந்து ஏராளமான வரி வசூலிக்கப்பட்டது. வரி கொடாதவர்கள் சித்திர வதைக்குட்படுத்தப்பட்டனர்.

வேளாண்மை மிக எளிய முறையிலேயே நடைபெற்று வந்தது. எருது பூட்டப்பட்ட மரக்கலப்பைகளைக் கொண்டே அவர்கள் உழுதனர். ஆனால் பன்றிகளைக் கொண்டு மண்ணைக் கிளறச் செய்து அதில் விதை விதைப்பதே பெரும்பான்மையோரின் வழக்கமாய் இருந்தது. வெள்ளம் வடிந்ததும் இத்தகைய விதைப்பு நடைபெறும். நிலங்கள் யாவும் முடிவாகப் பரோவாவிற்கே சொந்தமானவை யாகும். விளைச்சலில் பத்து அல்லது இருபது சதவிகிதத்தை வரியாகக் கொடுப்பவர்களுக்கே அரசன் நிலங்களைப் பகிர்ந்தளித் தான். நைல் நதியின் நீரைக் கொண்டு உழவர்கள் கோதுமை, பார்லி, சோளம், காய்கறிகள், பழங்கள், நார் போன்ற பொருள்களைப் பயிரிட்டனர்.

வேளாண்மையே அன்றி வேறு பல தொழில்களிலும் மக்கள் ஈடுபட்டனர். கிரீட் (Crete), பினீஷியா (Phoenicia), பாலஸ்தீனம் (Palestine), சிரியா (Syria) ஆகிய நாடுகளோடு அவர்கள் வாணிபம் செய்தனர். கோதுமை, துணிமணிகள், மண் பாண்டங்கள் ஆகியவைகளை ஏற்றுமதி செய்தனர். தங்கம், வெள்ளி, தந்தம் போன்ற பொருள்களை இறக்குமதி செய்தனர். ஆப்பிரிக்காவின் கிழக்குக் கடற்கரையிலிருந்து ஏலம், கிராம்பு போன்ற வாசனைத் திரவியங்களையும், தெற்கு ஆப்பிரிக்காவின் தீப்பறவையின் இறகுகளையும், சிரியாவின் மீன், திராட்சை ரசம், சூடம் போன்ற பொருட்களையும், தென்னிந்தியாவிலிருந்து மயில் தோகை, சந்தன மரம், அரிசி போன்ற பொருட்களையும், நூபியா விலிருந்து தங்கத்தையும், செம்பையும், மத்தியதரைக்கடல் நாடுகளிலிருந்து இரும்பையும் அவர்கள் இறக்குமதி செய்தனர். உள்நாட்டு வாணிபம் நைல் நதி மூலம் நடைபெற்றது. பண்டங்கள் நிறைந்த படகுகள் நைல் நதியில் ஊர்ந்த வண்ணம் இருந்தன. நில வாணிகத்திற்குக் கோவேரிக் கழுதைகள் பெரிதும் பயன் பட்டன. அயல்நாட்டு வாணிபம் கப்பல்கள் மூலம் நடைபெற்றது. எகிப்தில் உலோகம் அக்காலத்தே கிடைக்காததால் அவர்கள் வெளிநாடுகளுக்குச் சென்று சுரங்கங்களைக் கைப்பற்றி உலோகங் களைத் தோண்டியெடுத்தனர். செம்பையும், தகரத்தையும் கலந்து

வெண்கலத்தை உண்டாக்கி அதிலிருந்து வாள், கத்தி, கேடயம், கப்பிகள், நெம்புகோல்கள், சக்கரங்கள் போன்ற பல்வேறு பொருள்களை அவர்கள் செய்துவந்தனர். சுரங்கத் தொழில், கப்பல் கட்டும் தொழில், பானை வனைதல், கண்ணாடி செய்தல், துணி நெய்தல் ஆகியவை எகிப்தியரின் முக்கியத் தொழில்களாகும். இவற்றை உற்பத்தி செய்ய இருபது முப்பது பேர்கள் கொண்ட தொழிற்சாலைகள் ஆங்காங்கே காணப்பட்டன. தச்சர்கள் மரத்தி லிருந்து கப்பல்கள், படகுகள், வண்டிகள், மேசை, நாற்காலிகள், கட்டில்கள், தேர்கள், சவப்பெட்டிகள் முதலியவற்றைச் செய்தனர். தோலைப் பதப்படுத்தி கேடயங்கள், இருக்கைகள், துணிகள் முதலியவற்றையும் ஒரு சிலர் உற்பத்தி செய்தனர். பெப்பைரஸ் என்ற நாணற் புல்லிலிருந்து காகிதமும், கயிறும், பாய்களும், மிதி யடிகளும் செய்யப்பட்டன. மிக நுட்பமான வேலைப்பாடமைந்த மெல்லிய துணிகளை நெய்வதில் எகிப்தியர்கள் வல்லுனர்களாய்த் திகழ்ந்தனர். பொறியியல் தொழில்களிலும் அவர்கள் கைதேர்ந்த வர்களாவர். நீண்ட மதிற் சுவர்களும், பெரும் அரண்மனைகளும், அணைகளும் அவர்களால் கட்டப்பட்டன. நீண்ட கால்வாய்களும் ஏராளமாக வெட்டப்பட்டன. கண்கவர் கட்டடங்களைக் கட்டு வதிலும் அவர்கள் வல்லவர்கள். காற்றினால் இயங்கும் பொறிகளை அவர்கள் நீர் இறைக்கவும், மாவு அரைக்கவும் பயன்படுத்தினர்.

இக்கால வாணிப நிறுவனங்கள் பலவற்றின் பயனை எகிப்தி யர்கள் நன்கு உணர்ந்திருந்தனர் என்று தெரிகிறது. சொத்துரிமைப் பத்திரங்கள், உயில்கள், ஒப்பந்தங்கள், கடன் கொடுக்கல் வாங்கல், வட்டி வசூலித்தல் போன்றவைகளை அவர்கள் நன்கு அறிந்திருந்தனர். நாணயப் புழக்கம் அவர்க ளிடையே இல்லையெனினும், பொருள்களுக்குப் பதிலாகத் தங்கம் அல்லது செம்பு மோதிரங்களைத் தருகின்ற பழக்கம் காணப்பட்டது. இத்தகைய மோதிரப் பணப்புழக்கம் பண்டைய நாகரிகங் களில் எகிப்தில் மட்டுமே வழக்காற்றில் இருந்து வந்தது. ஆனால், அதில் ஈடுபட்டவர்கள் பெரும் வணிகர்களேயன்றி சாதாரண மக்கள் அல்லர். பண்டங்களை வாங்கும்போது தராசில் அவற்றை நிறுத்துப் பார்த்து வாங்கும் பழக்கத்தை எகிப்திய வணிகர்கள் மேற்கொண்டனர். பொருள்களை நிறுத்து வாங்கும் வணிகர்களின் படம் எகிப்தியப் பண்டைச் சின்னங்களில் மிகுதியும் காணப்படுகிறது. எகிப்தியப் பொருளாதார அமைப்பு பெரும்பாலும் பொதுவுடமை முறையிலேயே அமைந்திருந்தது. நாட்டின் உற்பத்திச் சாதனங்கள் பெரும்பாலும் அரசாங்கத்தின் கையிலேயே இருந்தன. நாட்டில் பெரும்பான்மையான தொழிலாளர்கள் அரசாங்க ஊழியர்களாகவே இருந்து வந்தனர். பண்ணை

யாட்களும், அடிமைகளும், அரசாங்க நிலங்களிலும், பண்ணை களிலும், தொழிற்சாலைகளிலும், கோயில்களிலும் பணிபுரிந்தனர். பண்டைய பேரரசில் ஒருசில தனிப்பட்ட வணிகர்களும் நிலக் கிழார்களும், கைவினைஞர்களும் இருந்தனர். ஆனால், இறுதியில் ஏற்பட்ட பேரரசின்போது அரசாங்கமானது தனிப்பட்டவர்களின் பொருளாதார வாழ்வில் பெரிதும் குறுக்கிட்டது. எல்லாம் அரசுக்கே சொந்தம் என்ற கொள்கை மீண்டும் தலையெடுத்தது. சுரங்கத் தொழில், வேளாண்மை, வாணிபம், கோயில் கட்டுதல், பிரமிடுகள் அமைத்தல் போன்ற பல்வேறு தொழில்களையும் அரசாங்கமே மேற் கொண்டது. ஆனால், ஏராளமான நிலங்களும், ஆடு மாடுகளும், கப்பல்களும், மத குருமார்களுக்கு இனமாக வழங்கப்பட்டன. அவர்களிடம் வரி வசூலிக்கப்படவில்லை. இதன் விளைவாக அரசு ஏராளமான வரிப்பணத்தை இழந்தது. விண்ணுலகவாழ்க்கைக்காக வேண்டி மிகுந்த அளவில் பொருள் செலவழிக்கப்பட்டது. இதனால் நாட்டின் பொருளாதார வளம் பெரிதும் சீர்குலைந்தது.

***சமய நிலை***

எகிப்தியர்களின் வாழ்வில் சமயம் மிகச் சிறந்த இடத்தைப் பெற்றிருந்தது. அவர்களது வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியிலும் சமயத்தின் செல்வாக்கு தலைதூக்கி நின்றது. அவர்களது அரசாங்கம் சமயத்தின் அடிப்படையிலேயே அமைந்ததொன்றாகும். அவர்களது இலக்கியத்திலும், தத்துவத்திலும், சமயக் கருத்துகள் நிறைந்து விளங்கின. அன்றின் கலையும், கட்டடமும், சமயத்தின் சேவைக்கே அர்ப்பணிக்கப்பட்டன. நாட்டின் செல்வத்தின் பெரும் பகுதி கோயில் கட்டுதல், கல்லறை எழுப்புதல், விழா எடுத்தல் போன்ற சமய சம்பந்தமான செயல்களுக்கே செலவிடப்பட்டன.

எகிப்தியர்கள் இயற்கைச் சக்திகளையே இறைவனாக வழி பட்டனர். அவர்களது தெய்வக் கணங்களில் கதிரவக் கடவுளே தலையாய இடத்தைப் பெற்றிருந்தார். அவரது பெயர் ரா அல்லது ரீ (Ra or Re) என்பதாகும். பழங்காலத்தே தீப்ஸ் நகரில் அவருக்கு ஆமன் (Amon) அல்லது ஆமன் ரி (Amon Re) என்ற பெயர் வழங்கிற்று. இயற்கையில் தாவரங்கள் அனைத்தினுடைய தோற்றத் திற்கும் வளர்ச்சிக்கும் காரணமாகக் கருதப்பட்ட ஆசிரிஸ் (Osiris) என்ற தெய்வம் மற்றொரு முக்கிய கடவுளாகும். நைல் நதியையும் எகிப்தியர்கள் ஆசிரிஸ் என்ற தெய்வமாக வணங்கினர். இங்ஙனம் எகிப்தியர்கள் தமது வாழ்க்கைக்கு இன்றியமையாத நைல் நதியையும், சூரியனையுமே தலைமைக் கடவுளர்களாகப் போற்றினர். ரீ என்ற கடவுள்தான் அரசனையும், அரசாங்கத்தையும், மக்களையும் காப்பாற்றி மரணமிலாப் பெருவாழ்வில் வாழச்

செய்பவராகக் கருதப்பட்டார். அக் கடவுளின் ஒப்பற்ற பிரதிநிதியே அரசனுவான். அவன் மூலமாக அத் தெய்வம் நாட்டில் நன்னெறியையும், ஒழுக்கத்தையும், நீதியையும், நேர்மையையும், நியாயத்தையும் உண்மையையும் வழங்குகிருர் என்பது எகிப்தியர்களின் திடமான நம்பிக்கை. ஆசிரிஸ் என்ற தெய்வம் இயற்கையில் உள்ள செடி கொடிகளின் உருவகம். நைல்நதி மூலமாக அது மக்களுக்குச் சேவை செய்வதாகக் கருதப்பட்டது. ஆதி காலத்தில் ஆசிரிஸ், எகிப்தை ஆண்டதாகவும், மக்களுக்கு வேளாண்மையைக் கற்றுக்கொடுத்து சட்டங்களை வகுத்தளித்ததாகவும், நாளடைவில் அவருடைய சகோதரரான ஸெட் (Set) என்பவரால் அவரது உடல் துண்டிக்கப்பட்டதாயும், அதன்பின் அவரது மனைவி இசிஸ் (Isis) என்ற தேவதை அத் துண்டங்களை ஒன்று சேர்த்து உயிர்ப்பித்ததாகவும், பின்னர் நெடு நாட்கள் அவ்வரசன் நாட்டை ஆண்டுவிட்டு, பாதாள உலகிற்குச் சென்று மரித்தோர்களின் நீதிபதியாகப் பணியாற்றினுர் என்றும், அவரது மகனை ஹோரஸ் (Horus) என்பார், தமது சிற்றப்பனை ஸெட்டைக் கொன்று பழி தீர்த்துக் கொண்டதாயும் கதை ஒன்று எகிப்தில் உலவுகிறது. இந்தக் கதையில் பல உண்மைகள் பொதிந்து கிடக்கின்றன. ஆசிரிஸ் மரித்து மீண்டும் உயிர்த்தெழுவது நைல்நதியில் தண்ணீர் வடிவதையும், பின்னர் வெள்ளம் ஏற்படுவதையும், அதனுல் வாடிய பயிர்கள் தழைப்பதையும் குறிப்பதொன்ருகும். கணவன், மனைவி, புதல்வர் இவர்களிடையே இருக்க வேண்டிய அன்பையும், பற்றையும் மேற்படி கதை சித்திரிக்கிறது. மற்றும் மரணமின்றி மக்கள் எந்நாளும் வாழமுடியும் என்ற எகிப்தியர்களின் நம்பிக்கையையும் இக்கதை சுட்டிக்காட்டுகிறது. இறுதியாக ஸெட் என்ற தீய கடவுளை ஹோரஸ் கொன்றுவிடுவதானது, அதர்மத்தை தர்மம் வெல்லும் என்ற கொள்கையை நிலைநாட்டுகிறது.

நாளடைவில் ரீ என்ற கதிரவக் கடவுளின் வழிபாடு மக்களிடையே அருகியது. ஆசிரிஸ் என்ற தெய்வ வழிபாடே மக்களிடம் செல்வாக்குப் பெற்றது. மரித்தோர்களைப் புரக்கும் தெய்வமாக அவர் • மதிக்கப்பட்டார். அவரை வழிபட்டோர் மரணத்திற்குப் பின்பே எல்லா இன்பங்களையும் அடைய முடியும் என்ற நம்பிக்கையால் உந்தப்பட்ட எகிப்திய மக்கள் மறுமை இன்பத்திலேயே தங்கள் நாட்டத்தையெல்லாம் செலுத்தலாயினர். இம்மையில் நலனை நல்கக்கூடிய ரீ எனும் தெய்வம் இரண்டாம் தரமாகவே மதிக்கப்பட்டது. பண்டையப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பிறகு எகிப்தியர்கள் 'பா' (Ba) அல்லது ஜீவான்மா என்று ஒன்று இருப்பதாக நம்பினர். அதன் இன்னெரு பகுதி 'கா' என்று

அழைக்கப்பட்டது. மனிதன் இறந்த பிறகு 'பா' என்னும் பகுதி ஓர் பறவையின் வடிவை எய்தி பறந்து போவதாகவும், 'கா' என்ற பகுதியும் அதுபோலவே அலைந்து திரிவதாகவும் மக்கள் நம்பினர். இவ்விரண்டு பகுதிகளும் நெடுங்காலம் கழித்து மீண்டும் பழைய உடலுக்குள் வந்து புகுந்து அதை உயிர்ப்பிக்கும் என்பது எகிப்தியர்களின் நம்பிக்கையாகும். அதனால்தான் சடலங்களைக் கெடாமல் பாதுகாக்கும் வழக்கம் எகிப்தில் ஏற்பட்டது. மூமியா (Mumia) என்ற தாரில் தோய்க்கப்பெற்றுப் பதனம் செய்யப்பட்ட சடலங்கள் மம்மிகள் (Mummies) என அழைக்கப்பட்டன. மம்மிகள் மீண்டும் உயிர்பெற்று வாழ்க்கையை அநுபவிப்பதற்காக ஏராளமான பொருள்கள் அவர்களுடன் சேர்த்துப் புதைக்கப் பட்டன.

மக்களின் சமய அறிவு வளர வளர அவர்களின் நம்பிக்கைகளிலும் மாற்றம் ஏற்பட்டது. பிரிந்தவர்களின் ஆன்மா மறு உலகிற்குப் போனவுடன் ஆசிரிஸ் என்ற தெய்வத்தின்முன் அவை விசாரிக்கப்படுவதாக மக்கள் நம்பினர். நம் நாட்டுப் புராணங்களில் வருகின்ற எமனை ஒத்த தெய்வமே ஆசிரிஸ். சித்திரபுத்திரனைக் கொண்டு எமன் உயிர்களை விசாரிப்பது போன்று ஆசிரிஸும் ஆன்மாக்களை விசாரிப்பதாக மக்கள் நம்பினர். விசாரணையில் மூன்று படிகள் உண்டு. முதற்படியில் உயிர்கள், கொலை, களவு, பொய், பேராசை, விபசாரம், கோபம், கர்வம் போன்ற நாற்பத்திரண்டு பாவங்களையும் செய்யவில்லை என்று உறுதி அளிக்க வேண்டும். அதன் பின்னர் தெய்வ வழிபாடு, பசித்தோர்க்கு உணவும் உண்டியும் அளித்தல், கொடை, ஈகை போன்ற நற்குணங்களைத் தான் கடைப்பிடித்ததாக அந்த உயிர் உறுதியளிக்க வேண்டும். மூன்றுவது கட்டத்தில் உயிரின் இதயமானது தர்மத் தராசின் ஒரு தட்டிலும், உண்மையின் அடையாளமான இறகு மறு தட்டிலும் வைத்து நிறுக்கப்படும். ஆன்மா கூறியதெல்லாம் உண்மையாயின் தட்டிரண்டும் சமமாக நிற்கும். அப்படி நின்றுல் உயிர்கள் சுவர்க்கத்திற்குச் சென்று எல்லாவித இன்பங்களையும் அநுபவிக்கும். இம்மையில் கிடைக்கப்பெருத இன்பங்கள் அனைத்தும் அங்குக் கிடைக்கும். தராசு தட்டுகள் தாழ்ந்தால் உயிர்கள் நரகத்திற்குச் சென்று பசி, தாகம் போன்ற பல்வேறு துன்பங்களையும் அநுபவிக்கும்.

பேரரசு மீண்டும் ஏற்பட்ட பின்னர் எகிப்திய சமயத்தில் சமய குருமார்களின் ஆதிக்கம் வளர்ந்தது. மக்களின் மூடநம்பிக்கைகளையும், பயங்களையும் பயன்படுத்திக்கொண்டு அவர்கள் பெரும்

பொருளீட்டினர். தாயத்துகளையும், கவசங்களையும் அவர்கள் தாராளமாக விற்றனர். மந்திரங்கள் எழுதப்பெற்ற காகிதச் சுருள்களைக் கல்லறையில் வைத்தால் ஆன்மாக்கள் சுவர்க்கத்தை அடையும் என்று அவர்கள் கூறினார்கள். அத்தகைய மந்திரங்கள் அடங்கிய காகிதச் சுருள்களைத் தயாரித்து அதை அனைவருக்கும் விற்றனர்; மரித்தோரின் நூல் (The Book of the Dead) என்ற அந்நூலைப் படித்தோர் ரீ என்ற கடவுளின் இராச்சியத்தில் நுழைவர் என்று கூறினார்கள்; இதனால் மக்களின் தன்னம்பிக்கை குறையத் தொடங்கியது. நல்வினைகள் செய்வதில் இருந்த ஆர்வம் மக்களிடையே மங்கியது.

மத குருமார்களின் கபட நாடகங்களைக் கடிந்து பலர் குரல் எழுப்பினர். நான்காம் அமன் ஹோட்டப் (Amenhotep) என்னும் அரசர் இவ்வியக்கத்திற்குத் தலைமை வகித்தார். 1375ஆம் ஆண்டில் பட்டத்திற்கு வந்த அவர், பூசாரிகளைக் கோயில்களி னின்றும் துரத்தியடித்தார். பல தெய்வ வணக்கத்தை ஒழித்து, ஏக தெய்வ வழிபாட்டை ஏற்படுத்தினார். அத் தெய்வத்திற்கு ஆடன் (Aton) என்ற பெயரை அவர் சூட்டினார். ஆடன் மனநிறைவுற்றார் என்று பொருள்படும் அக்நெடன் (Akkenaton) என்ற பெயரை அவர் சூட்டிக்கொண்டார். 'நேர்மையும், மனத் தூய்மையுமே வேண்டற்பாலது; அதுவே சமயம்' என்று அவர் போதித்தார். ஆனால், அக்பரது தீன் இலாஹியைப் (Din Ilahi) போல் அது விரைவிலேயே மறைந்துவிட்டது. துதங்காமன் என்னும் மன்னனது காலத்தில் மத குருமார்கள் மீண்டும் ஆதிக்கம் பெறலாயினர். மூட நம்பிக்கைகளும் வளரலாயின. மந்திரங்களும், மாயங்களும், மக்களைக் கைப்பற்றிக் கொண்டன. தாயத்துகளை விற்கும் வழக்கம் மீண்டும் ஏற்படலாயிற்று. அதன் காரணமாக மக்கள் வாழ்வின் எல்லாத் துறைகளிலும் ஒரு சீரழிவு தோன்றலாயிற்று.

மேற்கூறிய தெய்வங்களேயன்றி எகிப்தியர்கள் பசு, ஆடு, பாம்பு, முதலை போன்ற மிருகங்களையும் வணங்கினர். நாளடைவில் அவை தெய்வங்களின் வாகனங்களாக மாறின. எருது, ரீ எனும் தெய்வத்தின் வாகனமாகவும், ஆடு, ஆசிரீஸின் வாகனமாகவும், ராஜாளிப் பறவை ஹோரஸின் வாகனமாகவும் வைத்து வணங்கப் பட்டன. ஆண், பெண் குறிகளை வணங்கும் வழக்கமும் அவர்களிடையே காணப்பட்டது. ஆடும் எருதும் படைப்புத் தெய்வங்களாக வணங்கப்பட்டன. தாவரங்களை வணங்கும் வழக்கமும் ஒரு சிலரிடையே காணப்பட்டது.

***கலைகளின் வளர்ச்சி***

பண்டைய எகிப்தியர்கள் அருங்கலைகளை நன்கு பேணி வளர்த்தனர். இக் கலைகளிலெல்லாம் சிறப்பு வாய்ந்தது கட்டடக் கலை. கற்களைக் கொண்டு அழகிய கட்டடங்களை முதன்முதலில் நிர்மாணித்தவர்கள் எகிப்தியர்களே. எகிப்தில் ஆங்காங்கே காணப்படும் பிரமிக்கத்தக்க பிரம்மாண்டமான பிரமிட்டுகளே எகிப்தியரின் கட்டடக் கலையின் சிறப்புக்குத் தனிப்பெருஞ் சான்ருகும். எகிப்திய மொழியில் 'பிரமிஸ்' என்ருல் உயரம் என்று பொருள். எனவேதான் உயரமான கோபுரங்கள் பிரமிட்டுகள் எனப்பட்டன. சதுரமான அடித்தளத்தின்மீது எழுப்பப்பட்ட அக் கல்லறைக் கோபுரங்கள் சில சமயம் 500 அடிகள்வரை உயர்ந் திருந்தன. அவற்றின் அகலம் சுமார் 756 அடிகள். அவற்றின் சுற்றளவு 72 மைல்களாகும். கி.மு. 3000-ல் எகிப்தை ஆண்ட ஜெஸர் (Zeser) என்ற மன்னரது கல்லறை இமொடெப் (Imotep) என்ற கட்டடக் கலைஞரால் கட்டப்பட்டது. சதுரம் சதுரமாக ஒன்றன்மேல் ஒன்ருகக் கட்டப்பட்டு முடிவில் கூராயிருந்த அந்தக் கல்லறைக்குப் படிக்கட்டுக் கல்லறை (Stepped Pyramids) என்று பெயர். ஆனுல், நாளடைவில் இந்த அமைப்புமுறை மாறியது. உச்சியிலிருந்து அடிவரை ஒரே சாய்வான சமதளத்தை உடைய சுவர்கள் கட்டப்பட்டன. கூபு (Khufu) என்ற பரோவாவின் கல்லறை இங்ஙனம் கட்டப்பட்டதேயாகும். அஃது 481 அடி உயரமும், 755 அடி அகலமும் கொண்டது. இதன் பெயர் கிஸே பிரமிட் (Gizeh) என்பதாகும். கட்டி முடித்தவுடன் அதைச் சுற்றிலும் அரசனின் அரண்மனைகளும், அதிகாரிகளுக்கு வீடுகளும் கட்டப்பட்டன. இப்படியே அங்கு ஒரு நகரமே தோன்றியது. பண்டைய எகிப்தின் தலைநகரான மெம்பிஸ் (Memphis) இவ்வாறு ஏற்பட்டதேயாகும். இந்தப் பிரமிட்டுகளுக்கு அடியில் பல அறைகள் கட்டப்பட்டிருந்தன. ஒன்றிலே இறந்தவரின் சடலம் வைக்கப்பட்டிருந்தது. இன்னேர் அறையில் உணவும், இனிப்புப் பண்டங்களும் தினந்தோறும் இறந்தவனின் உறவினரால் கொண்டு வந்து வைக்கப்பட்டன. இறந்த உயிர் மலஜலம் கழிப்பதற்குக் கூடத் தனியறைகள் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. கல்லறையின் சுவர்களில் இறந்தவர்கள் வாழ்ந்த சுற்றுப்புறங்கள் ஓவியமாக வரையப்பட்டிருந்தன. இவ்வோவியங்களிலிருந்தே நாம் அக்கால வாழ்க்கையைப்பற்றி உணர்கிறேம். இறந்தவர் களின் ஆவிகள் படித்து நற்கதியடைய ஒருசில சமய நூல்களும் ஆங்கே வைக்கப்பட்டிருந்தன. இக் கட்டடங்களின் ஓரத்தில் உள்ள குறுகிய வாயில், மேலே அத்தனை பாரம் அழுத்தியும் இன்று வரை உருமாருமல் இருப்பதொன்றே எவ்வளவு திறமையுடன் அவை கட்டப்பட்டன என்பதை நன்கு விளக்கும்.

சிற்பக்கலையும் கட்டடக் கலையோடு நன்கு வளர்ச்சியடைந்தது. கல்லாலும், மரத்தாலும் செய்யப்பட்ட சிலைகள் பல நமக்குக் கிடைத்துள்ளன. அவற்றின் கண்களில் பளிங்குக் கற்கள் பதிக்கப் பட்டுள்ளதால் அவை உயிருள்ளவை போல காட்சியளிக்கின்றன. எகிப்தியச் சிற்பக் கலையின் சிகரமாக விளங்குவது ஸ்பிங்ஸ் (Sphinx) என்னும் சிலையாகும். அது மனிதனது தலையையும், சிங்கத்தினது உடலையும் கொண்டது. 160 அடி நீளமும் 70 அடி உயரமும் கொண்ட அதன் தலைமட்டும் 33 அடி நீளமும் 13 அடி 8 அங்குல அகலமும் கொண்டது. சியோப்ஸ் என்ற பரோவாவின் தலையே இந்தச் சிலையின் தலையென்று ஒருசிலர் புகல்வர்.

எகிப்தியரின் கட்டடக் கலைஞான முதிர்ச்சியை இன்னும் அவர்தம் ஆலயங்களில் காணலாம். தீப்ஸ் என்னுமிடத்தில் கட்டப்பட்டுள்ள கார்னைக் பேராலயம் மிகக் கம்பீரமாக விளங்கு கிறது. அவ்வாலயத்திலே பெரும் பெரும் மண்டபங்கள் இருக் கின்றன. அவற்றின் கூரையை வரிசை வரிசையாக அமைந்த தூண்கள் தாங்கி நிற்கின்றன. மேற்கூரையின் பக்கங்களில் சன்னல்கள் வைக்கப்பட்டுள்ளன. அவைகளிலிருந்து வெளிச்சம் மண்டபங்களுக்குள் பாய்ந்தது.

மருத்துவக் கலையும் எகிப்தில் ஓரளவு வளர்ச்சி பெற்றிருந்தது. மதகுருமார்களில் பலர் மருத்துவர்களாயிருந்தனர். கோயில்களே மருத்துவக் கூடங்களாகவும் திகழ்ந்தன. உடற்கூறு சாஸ்திரம் (Anatomy) அறுவை சிகிச்சைமுறை (Surgery), நோய்களின் அறிகுறிகள் (Symptoms), அவற்றை நீக்குவதற்கான முறைகள் முதலியவைகளைப்பற்றி அவர்கள் நன்கு அறிந்திருந்தனர். குறிப்பிட்ட நோய்களைப்பற்றி தனிப்பட்ட ஆராய்ச்சி செய்யப் பல மருத்துவர்கள் இருந்தனர். பல நோய்களை மந்திரங்களாலேயே குணப்படுத்த அவர்கள் முயன்றனர். பிசாசுகள் உடலைப் பீடிப்ப தால் சில நோய்கள் வருகின்றன என்ற எண்ணத்தில் அவர்கள் சில சமயங்களில், நோயாளிகளுக்கு அந்தக் கெட்ட ஆவிகளை உடம்பினின்றும் வெளியேற்ற பேதி மருந்தும், வாந்தி மருந்தும் கொடுத்தனர். ரணசிகிச்சைக்குப் பின்னர் நோயாளி இறந்து விட்டால் சிகிச்சை செய்த மருத்துவருக்குக் கடுந்தண்டனை விதிக்கப்பட்டது.

இங்ஙனம் எகிப்தியர்கள் பல துறைகளிலும் வல்லுனராய்த் திகழ்ந்தனர். அவர்கள் இதயத்தில் அழகுணர்ச்சி (Sense of beauty) பொங்கி வழிந்ததென்பதை அவர்கள் செய்து வைத்துப் போன ஒவ்வொரு பொருளும் உணர்த்துகின்றது. கட்டில்களின்

கால்களை வெறும் நீண்ட சதுரமாகச் செய்யாமல் மிருகங்களின் தலைகளைப்போல அவற்றை ஆக்கினர். மட்பாண்டங்கள், சுவர்கள் முதலிய இடங்களில் ஓவியங்கள் அழகாக வரையப்பட்டன. ஆனால், இவைகளெல்லாம் சில விதிகளுக்குட்பட்டு வரையப்பட்டுள்ளதால் இயற்கையாக இல்லை. செயற்கையாயும், ஒரே மாதிரியாகவும் இருக்கின்றன. எனினும் பண்டைக் காலத்திலேயே இவ்வளவு கலையுணர்வுடன் வாழ்ந்த எகிப்தியர்கள் மிகவும் பாராட்டப்படக் கூடியவர்களேயாவர்.

கணிதத்திலும் எகிப்தியர்கள் மேதைகளாகத் திகழ்ந்தனர். பின்னங்களைப் பற்றியும், வரைபடக் கணிதம் பற்றியும் அவர்கள் நன்கு அறிந்திருந்தனர். கூட்டல், கழித்தல், வகுத்தல், ஆகிய முறைகளை அறிந்திருந்த அவர்கள் பெருக்கும் முறையை மட்டும் அறியவில்லை. கூட்டும் முறையையே பெருக்குவதற்கும் பயன் படுத்தினர். தசாம்சமுறை அவர்களுக்குத் தெரிந்திருந்தது. பூஜ்யத்தின் பயனை அவர்கள் அறியவில்லை. முக்கோணம், நாற்கரம் முதலிய உருவங்களின் பரப்பை அளக்க அவர்கள் கற்றிருந்தனர். உருளை, முப்பட்டை, அரைவட்டம் இவற்றின் கன அளவுகளைக் கணிப்பதற்கும் அவர்கள் வழிகளை அறிவர். வட்டத்தின் சுற்றளவுக்கும், ஆரத்துக்கும் (Radius) உள்ள விகிதத்தை 3.16 என்று அவர்கள் கணக்கிட்டிருந்தனர்.

வானியலில் அவர்களுக்கு இருந்த அறிவு பெரிதும் பாராட்டத்தக்கதாகும். சூரியன் சஞ்சரிக்கும் இடங்களை அவர்கள் நன்கு கணித்து அதன் அடிப்படையில் ஒரு கால அட்டவணையைத் தயாரித்தனர். ஓராண்டுக்குப் பன்னிரண்டு மாதங்கள் என்றும், மாதம் ஒன்றுக்கு முப்பது நாட்கள் என்றும், ஆண்டுக்கு முன்னூற்று அறுபத்தைந்து நாட்கள் என்றும் அவர்கள் கொண்டிருந்தனர். இறுதி மாதத்தோடு அவர்கள் ஐந்து நாட்களைக் கூட்டிக் கொண்டனர். பிற்காலத்தே ரோமானியர்கள் இம்முறையைக் கடைப் பிடித்தனர். காலத்தை அளக்க எகிப்தியர்கள் ஓர் நீர்க் கடிகாரத்தையும் பயன்படுத்தினர்.

மிகப் பழங்காலத்திலேயே எகிப்தியர்களின் புனித எழுத்து எனப் பொருள்படும் ஹேய்ரோகிளிபிக் (Hieroglyphics) என்னும் சித்திர எழுத்துகளைப் பயன்படுத்தினர். ஒவ்வொரு சித்திரமும் ஒவ்வொரு செயலையோ அல்லது பொருளையோ குறித்தது. சான்றாகக் கலப்பையோடு வரையப்பட்ட மனிதனது படம் நிலத்தை உழுவதைக் குறித்தது. நாளடைவில் ரீபஸ் (Rebus) என்ற முறைப்படி ஒவ்வொரு சித்திரமும் ஓர் எழுத்தைக் குறிக்கலாயிற்று. உதாரண

மாக ஈயின் படம், ஈ என்ற எழுத்தையும், கையின் படம் கை என்ற எழுத்தையும் குறித்தது. இரு படங்களும் சேர்ந்து 'ஈகை' என்ற சொல்லாயிற்று. இதன் வழி பல சொற்களும் வாக்கியங்களும் தோன்றலாயின. 24 குறியீடுகளைக் கொண்ட எழுத்துகள் கண்டு பிடிக்கப்பட்டன. அவை பேப்பைரஸ் (Papyrus) என்ற செடியி னின்றும் செய்யப்பட்ட காகிதத்தின்மீது கருப்பு மையைக் கொண்டு ஓர் எழுதுகோலால் எழுதப்பட்டன. காகிதத்தைக் குறிக்கும் 'பேப்பர்' என்ற ஆங்கிலச் சொல் பேப்பைரஸ் என்ற சொல்லி லிருந்தே பிறந்தது.

எகிப்திய இலக்கியம் பெரும்பாலும் சமயம் பற்றியதாக இருந்தது. கி.மு. மூவாயிரத்தில் எழுதப்பட்ட மெம்பைட் (Memphite) நாடகம் ஓர் சிறந்த இலக்கியமாகும். சமயத்தைப் பற்றியும், கடவுளைப்பற்றியும் அவற்றில் பல வாக்குவாதங்கள் இடம் பெற்றுள்ளன. ரீ எனும் தெய்வம் நன்மையைப் புரந்து தீமையை எங்ஙனம் ஒழிக்கிறது என்பதை அஃது நன்கு எடுத்துக் காட்டு கிறது. அஹ்நடன் (Akhenaton) என்பவரால் புனையப்பட்ட அரசகாவியம் ஏகதெய்வ வாதத்தை வற்புறுத்துகிறது. கருணை, அன்பு, நீதி, மன்னிப்பு முதலிய நற்குணங்களின் உறைவிடமாக அவர் திகழ்வதாய் வருணிக்கப்பட்டுள்ளார்.

சினுஹியின் கதை (The Tale of Sinuhe) என்பது இன்னொரு சிறந்த இலக்கியமாகும். இறந்தவர்கள் படித்து இன்புறுவதற்காக இது எழுதப்பட்டது. ஏழைகளின் துயரங்களைப் போக்க தேவதூதன் வருவான் என்று செப்புகிறது இன்னொரு நூல். யூதர்கள் மெசையா (Messiah) என்ற தேவதூதன் வருகையைப் பற்றிக் கூறுவது மேற்கண்ட கருத்தினின்றும் பிறந்திருக்கக்கூடும். இரு சகோதரர்களின் கதை (The Tale of Two Brothers) என்ற இலக்கியமானது பழைய ஏற்பாட்டில் (Old Testament) உள்ள ஜோசப், போடிபாரின் மனைவி, இவர்கள் பற்றிய கதைக்கு வித்திட் டது எனலாம். இவையன்றி இன்னும் ஏராளமான துணிகரக் கதைகளும், காதல் கவிதைகளும், நாடோடிப் பாடல்களும் எகிப்திய இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. எல்லாம் விதியின் செயல் என்று கருதி மக்கள் எப்படி மகிழ்ச்சியோடு வாழ்ந்தனர் என்பதை இவ்விலக்கியங்கள் நன்கு சித்திரிக்கின்றன. ஏழைகளின் அல்லல்களை அவை நன்கு படம் பிடித்துக் காட்டுகின்றன.

இங்ஙனம் எகிப்திய இலக்கியம் மக்களின் அன்றாட சமுதாய வாழ்க்கையை நமக்குத் தெள்ளிதின் புலப்படுத்துகின்றது.

**உலக நாகரிகத்திற்கு எகிப்து வழங்கிய நன்கொடை**

வேறு எந்த நாகரிகத்தையும்விட எகிப்திய நாகரிகத்திற்குத் தான் இன்றைய உலக நாகரிகமானது பெரிதும் கடமைப் பட்டுள்ளது. எலியட் ஸ்மித் போன்ற ஆசிரியர்கள் எகிப்திய நாகரிகத்திலிருந்துதான் ஏனைய பண்டைய நாகரிகங்கள் அனைத்தும் தோன்றின என்று கட்டுரைப்பர். ஆனால், அது ஓரளவு மிகைப்படுத்தப்பட்ட கூற்றேயாம். எனினும், பண்டைய நாகரிகங் களின் கூறுபாடுகள் பலவற்றில் எகிப்திய நாகரிகத்தின் செல் வாக்கை நன்கு காணலாம். தத்துவம், கணிதம், அறிவியல், இலக்கியம் ஆகிய துறைகளில் முதன்முதல் முன்னேற்றமடைந்த வர்கள் எகிப்தியர்களேயாவர். எனவே, அத்துறைகளிலெல்லாம் ஏனைய நாகரிகங்கள் எகிப்திற்குப் பெரிதும் கடன்பட்டுள்ளன. உலகத்திலேயே மிகத் தொன்மையான அரசியல் சித்தாந்தமும் நீதித் துறை அமைப்பும் எகிப்தில்தான் முதன் முதல் தோன்றி வளர்ச்சியடைந்தன. நீர்ப்பாசனத்துறை, பொறியியல் துறை இவற்றில் முதன் முதல் சிறந்த தேர்ச்சியைப் பெற்றிருந்தவர்கள் அவர்களே. மத்தியதரைக்கடல் நாகரிகங்கள் யாவும் எகிப்திட மிருந்தே அவற்றைக் கற்றுக்கொண்டன. அதே போன்று மண் பாண்டம் வனைதல், கண்ணாடி செய்தல், காகிதம் செய்தல் முதலிய அரும் தொழில்களும் எகிப்திலிருந்தே பிற நாடுகளுக்குப் பரவின. கலை, கலைக்காகவே அன்றி பொருளுக்காக அல்ல என்ற கருத்தை முதன் முதல் தெளிவாகக் கொண்டிருந்தவர்கள் எகிப்தியர்களே யாவர். அந்தக் கொள்கையின் அடிப்படையில் அவர்கள் வளர்த்த கட்டடக்கலைப் பண்புகளை இக்காலத்தவர்கள் பெரிதும் பயன்படுத்தி யுள்ளார்கள். சான்றுகத் தூண் வரிசை, முகப்பு, தூண்கள் நிறைந்த தாழ்வாரம், இடை மண்டபம், சன்னலோடு கூடிய தாழ்ந்த சுவர்கள், முக்கியக் கட்டடத்தின் கூரைக்கு மேல் சன்னல் கள் கட்டப்படுதல் ஆகிய கட்டடப் பண்புகளை முதன் முதலாகக் கண்டுபிடித்து உலகுக்கு நன்கொடையாக வழங்கியவர்கள் எகிப்தி யர்களேயாவர்.

சமயத் துறையிலும், அற இயல் துறையிலும்தான் எகிப்தி யர்கள் உலகத்திற்கு பெரும் கொடை வழங்கியுள்ளார்கள். தமக் கென்று ஒரு தேசிய மதத்தை முதன் முதலாக ஏற்படுத்திக் கொண் டவர்கள் எகிப்தியர்களே. ஒவ்வொரு மனிதனும் சாகா வரம் பெற்று என்றைக்கும் நிலவுலகில் வாழக்கூடும் என்ற கொள்கையில் அவர்கள் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தனர். அதோடு கடவுள் ஒன்றே என்ற கொள்கையை உலகுக்கு முதன் முதல் அளித்தவர்கள் அவர்களேயாவர். அதோடு இறைவன் அருள்

பொருந்தியவர்; மக்களுடைய பாவங்களை மன்னிக்கக் கூடியவர். அதே சமயத்தில் நன்மை செய்பவர்களுக்குச் செல்வாக்கையும், தீமை செய்பவர்களுக்குத் துன்பத்தையும் அவர் தருவதாக அவர்கள் முதன் முதலாக நம்பினார்கள். மற்றும் நீதிநெறித் துறையில் அவர்கள் பெரிதும் முன்னேற்றமடைந்திருந்தார்கள். பொய் பேசுதல், திருடுதல், கொலை செய்தல் முதலிய கொடுங் குற்றங்களுக்கு அவர்கள் பல தண்டனைகளை வழங்கினர். அதோடு எல்லாருக்கும் சமமான நீதி வழங்கவும், நியாயத்தோடும், கருணையோடும் நடந்துகொள்ளவும் அவர்கள் ஒவ்வொருவரும் பாடுபட்டார்கள்.

## பண்டைய சமீபக் கிழக்கு நாகரிகங்கள் (Ancient Civilizations of the Near Orient)

| காலம் | அரசியல் நிலை | கலைகளின் நிலை | பொருளாதார நிலை | சமய நிலை |
|---|---|---|---|---|
| கி.மு. 4000 | எகிப்தில்வரலாற்றுக்கு முற்பட்ட காலம் (கி.மு. 4000—3200) | சூரிய நாட்காட்டி (கி.மு. 4000) (Solar Calender) | நில அடிமை முறை ஏற்படல் (கி.மு. 3500) | சூரிய வழிபாடு |
| | சுமேரிய ஆதிக்கம் மெசபடோமியாவில் (கி.மு. 4000—2000) | சித்திர எழுத்துகள், புனித எழுத்துகள் (hieregly-phic), கணிதம், வானியல் (கி.மு. 3500—2500) | | |
| | எகிப்தின் பண்டைய அரசு | ஆப்பெழுத்து முறை (Cuneiform writing) (கி.மு. 3200) | | எகிப்தின் அறச்சமயம் (கி.மு. 3000) |
| | | உயிர் எழுத்து முறை எகிப்தில் (alphabet) | | |
| கி.மு. 3000 | ஈஜிய நாகரிகம் (கி.மு. 3000—4000) | பிரமிடுகள் எகிப்தில் எழுதல் (கி.மு. 2700) — தத்துவ வளர்ச்சி. | எகிப்திலும் கிரீட்டிலும் தொழில் வளம் பெருகுதல். | மனிதனின் சிரஞ்சீவித்துவத்தில் (Immortality) நம்பிக்கை. |
| | எகிப்தில் பிரமிடுகள் காலம் (கி.மு. 2100—1788) | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| கி.மு. 2000 | எகிப்திய முதற் பேரரசு காலம் (கி.மு 2100—1788)<br>ஹிட்டைட் பேரரசு (கி.மு. 2000—1200)<br>பாபிலோனியப்பேரரசு (கி.மு. 1900—1600)<br>ஹைக்சோஸ்எகிப்தை வெல்லல் (கி.மு. 1750—1580)<br>கேஸைட்டுகள் பாபிலோனியாவை வெல்லல் (கி.மு. 1600) | டுங்கியின் சட்டத்தொகுதி (கி.மு. 2000)<br>ஹம்முராபியின் சட்டத் தொகுதி (கி.மு. 1790) | எகிப்தில் அடிமை முறை வளர்தல் (1580) - ஹிட்டைட்டுகள் இரும்பைப் பயன்படுத்தல் (கி.மு. 1500) | பாபிலோனியாவில் பூத வழிபாடு (கி.மு. 1900) |
| கி. மு. 1500 | எகிப்தியப் பேரரசு (கி.மு. 1580—1090)<br>ஹீப்ருக்கள் கானானை வெல்லல் (கி.மு. 1300—900)<br>ஹீப்ரு கோனாட்சி (கி.மு. 1025—935) | எகிப்திய கோயில் கட்டட முறை வளர்ச்சி (கி.மு. 1580—109)நெடுங்கணக்கு எழுத்து முறை (alphabet) பினிஷியர்களால் கண்டுபிடிக்கப்படல் (கி.மு.1500)<br>அசிரியர்களின் இயல் சிற்பம் (கி.மு. 1300—600) (Realistic sculpture) | பினீஷியர்களின் பலத்த உலக வாணிபம் (கி.மு. 1000—500) | இக்னடனின்ஓரிறை வழிபாடு (கி.மு. 1375)<br>ஹீப்ருக்கள் யகோவாவை வணங்கல் (கி.மு. 1000) |

| காலம் | அரசியல் நிலை | கலைகளின் நிலை | பொருளாதார நிலை | சமய நிலை |
|---|---|---|---|---|
| கி.மு. | யூதர்களின்கோனாட்சி (கி.மு 1025—935) | | | யூதர்களின் பத்துக் கட்டளைகள் (கி.மு. 700) |
| | | | | யூத தீர்க்கதரிசிகள் செய்த புரட்சி (கி.மு. 700—500) |
| | 10 இஸ்ரவேல் குடும்பங்கள் பிரிதல் (கி.மு. 935) | | | |
| | இஸ்ரவேல் இராஜ்யம் (கி.மு. 935—722) | | | |
| | ஜீடா நாடு (கி.மு. 935—586) | | | |
| | அஸிரியபேரரசு(கி.மு. 722—612) | | அஸிரியாவில் அடிமை முறை ஏற்படல் (கி.மு. 750) | ஹீப்ருக்களின் ஓரிறை வழிபாடு (கி.மு 600) |
| | அஸிரியர் எகிப்தைக் கைப்பற்றல் (கி.மு. 670) | | | |

| | | | |
|---|---|---|---|
| சாலிடியப் பேரரசு (கி.மு. 612—539)<br>யூதரின் பாபிலோனிய சிறைவாசம் (கி.மு. 586—537) | ஒரு நாளுக்கு இத்தனை மணி நேரம், நிமிடம் எனப் பிரித்தல் (கி.மு. 600) | லிடியர்கள் நாணயத்தைக் கண்டுபிடித்தல் (கி.மு. 600) | சாலிடியர்களின் வானியல் மதம் (கி.மு. 600—500) |
| பாரசீகப் பேரரசு (கி.மு. 559—330) | ஆண்டின் நீளத்தைக் கணித்தல் (கி.மு. 600) | சாலிடியர்கள் உலக வாணிபத்தில் ஈடுபடல் | ஜோதிட வளர்ச்சி (கி.மு. 600—500) |
| பாரசீகர் எகிப்தைக் கைப்பற்றல் (கி.மு. 525) | வானிலை ஆராய்ச்சி, சட்டத் தொகுதி | | ஜொராஸ்டிரிய மதம் பாரசீகத்தில் தோன்றல் (கி.மு. 600—300) |
| பாரசீகப் பேரரசர் டாரீஸின் ஆட்சி (கி.மு. 521—486) | ஜாப் (Job) எனும் நூல் எழுதப்பெறல் (கி.மு. 500) | பாரசீகர்கள் பெருவழிகளைத் தலைநகருக்கு அமைத்தல் (கி.மு. 500) | மித்ரேயிசம் (Mithraism) (கி.மு. 300—கி.பி.275)<br>கினுஸ்டிசிசம் (Gnosticism) (கி.மு. 100—கி.பி. 100)<br>கிறிஸ்தவ சமயத் தோற்றம்(கி.பி. 25) |

# 4. மெசபடோமிய நாகரிகங்கள்

## சுமேரிய நாகரிகம்

*புவியியல் அடிப்படை*

நைல்நதிப் பள்ளத்தாக்கில் எகிப்திய நாகரிகம் தோன்றியது போலவே, யூப்ரடிஸ் (Euphrates), டைகிரிஸ் (Tigris) என்ற இரு நதிகள் பாயும் சமவெளியில் பல நாகரிகங்கள் தோன்றின. இந்த இரு நதிகளும் வடக்கே உள்ள ஆர்மீனிய மலைகளில் உற்பத்தியாகி தெற்கு நோக்கி ஓடிப் பாரசீக வளைகுடாவில் கலக்கின்றன. பண்டைக்காலத்தில் ஒன்றுக்கொன்று இணையாக ஓடி கடலில் கலந்த இவ்விரு நதிகளுக்கிடையே சுமார் 170 மைல் நீளமும், 40 மைல் அகலமும் கொண்ட ஒரு வளமான சமவெளி அமைந்திருந்தது. அச் சமவெளியை மெசபடோமியா என்று அழைக்கிறோம். மெசபடோமியா என்ற கிரேக்கச் சொல்லுக்கு இரு நதிகளுக்கிடையே உள்ள நாடு என்று பொருள். ஆண்டுதோறும் இந்நதிகளில் வரும் வெள்ளப் பெருக்கின் விளைவாக எழுபத்திரண்டடி வண்டல்மண் சமவெளியில் வந்து படிகிறது. இதனால் பாரசீக வளைகுடாவின் விளிம்பானது நாளுக்கு நாள் உள்நோக்கிப் போய்க்கொண்டேயிருக்கிறது. அவ்விரு நதிகளும் கடலோடு கலந்த இடங்களில் எரிடு (Eridu), ஊர் (Ur) என்ற இரு நகரங்கள் அமைந்திருந்தன. குடாவின் கரையில் அமைந்திருந்த அந் நகரங்கள் இன்றைக்கு உள்நாட்டில் 125 மைல்கள் தள்ளிக் காணப்படுகின்றன. மற்ற இடங்களில் இருப்பதைப் போன்று இங்குள்ள மண் அடிக்கடி பயிர் செய்யப்படுவதால் தனது செழுமையை இழப்பதில்லை. ஏனெனில், ஆண்டுதோறும் புதிய வண்டல்மண் அதில் வந்து சேர்ந்துகொண்டே இருக்கிறது. முப்போகம் விளைவிக்கத்தக்க முழுமையான செழிப்புடன் அது திகழ்கின்றது. இதன் விளைவாகவே மெசபடோமியாவும், எகிப்தும் பண்டைய உலகின் தானியக் களஞ்சியங்களாக (Granaries) விளங்கின. விவிலிய நூலில் விவரிக்கப்படும் பாலும் தேனும் ஓடுகின்ற பாபிலோன் நகரம் இங்குதான் தோன்றியது.

எகிப்தில் நிறைய கற்கள் கிடைப்பதுபோல சுமேரியாவில் கிடைப்பதில்லை. வெறும் வண்டல்மண் மட்டுமே எங்குப் பார்த்

தாலும் அங்குக் காணப்பட்டது. எனவே, வீடுகள் களிமண்ணால் கட்டப்பட்டன. எழுத்துகளைப் பொறித்து வைக்கவும், களி மண்ணையே சுமேரியர்கள் பயன்படுத்தினர். முற்றிலும் நாவிற் கினியதும், உயிர்ச்சத்து நிறைந்ததுமான பேரீச்சம்பழங்களையும், கோதுமையையும் இக் களிமண்ணே ஆண்டு முழுமையும் விளைவித்துத் தந்தது. எனவேதான் களிமண்மீது கட்டப்பட்ட நாகரிகம் என்று இதை ஒருசில வரலாற்று வல்லுநர்கள் அழைப்பது வழக்கம்.

தென்மேற்கு ஆசியாவில் வேளாண்மைக்குத் தகுதி பெற்ற பகுதியானது, சினாய் தீபகற்பத்திலிருந்து மெசபடோமியா வரை விரிந்துள்ள நிலப்பகுதியே ஆகும். இதைப் பேராசிரியர் பிரெஸ்டெட் (Breasted) என்பார் 'வளமிக்க வளர்பிறைப் பிரதேசம்' (Fertile Crescent) என அழகுபட அழைக்கிறார். பனிமலை நகர்ச்சியின் (Glacial Movements) விளைவாக வடக்கே இருந்து ஓடிவந்த நாடோடி மக்கள் அனைவரையும் இச் செழிப்பான பிரதேசம் காந்தம் போன்று ஈர்த்ததில் வியப்பொன்றுமில்லை. எகிப்தைப் போலன்றி இப்பகுதி அடிக்கடி அயல்நாட்டினரின் படையெடுப்புக்கு ஆளாகியது. எனவே, இங்கு ஒன்றன்பின் ஒன்றாய்ப் பல்வேறு அரசுகள் தோன்றி விதவிதமான நாகரிகங் களைத் தோற்றுவித்தன.

### *அரசியல் வரலாறு*

மெசபடோமியாவில் முதன்முதலில் ஒரு சிறந்த நாகரிகத்தைத் தோற்றுவித்தவர்கள் சுமேரியர்களாவார்கள். சுமேரியர்கள் டைகிரிஸ், யூப்ரடிஸ் பள்ளத்தாக்கின்மீது ஏறத்தாழ கி.மு. 5000 ஆண்டில் படையெடுத்து அதன் தெற்குப் பகுதியில் குடியேறினர். அவர்கள் எங்கிருந்து வந்தார்கள் என்பது திட்ட வட்டமாகத் தெரியவில்லை. மத்திய ஆசியா, எகிப்து போன்ற இடங்களிலிருந்து அவர்கள் வந்திருக்கக்கூடும். அவர்கள் செமிடிக் இனத்தைச் சேர்ந்தவர்கள் அல்லர் எனக் கருதப்படுகிறது. குட்டையாயும், பருத்த உடலும், முட்டை வடிவமான முகமும், சாய்ந்த நெற்றியும், எடுப்பான நாசியும், அகன்ற கண்களும், மெல்லிய உதடுகளும் உடையவர்களாய் அவர்கள் காட்சியளித் தனர். அவர்கள் அலையலையாகச் சென்று சுமேரியாவின்மீது படையெடுத்து கி.மு. 4000 ஆண்டளவில் நன்கு நிலைத்துவிட்டனர். ஆரம்பத்தில் அவர்கள் சிறுசிறு நகர அரசுகளைத் தோற்று வித்தனர். அவற்றுள் நிப்பூர் (Nippor) என்ற நகரம் சிறந்து விளங்கியது. என்லில் (Enlil) என்ற கடவுளுக்கு அமைக்கப்பட்ட


மத்தியக் கிழக்கின்
நாகரிகத் தொட்டில்கள்
கருங்கடல்
காஸ்பியன் கடல்
ஆசியா மைனர்
ஹிட்டைட்டுகள்
கிரீட்
சைப்ரஸ்
மத்திய தரைக் கடல்
சைடான்
டயர்
டைகிரிஸ்
நினேவா
அசிரியா
யூப்ரடிஸ்
சிரியா
டமாஸ்கஸ்
பாபிலோன்
அகேட்
ஜெருசலம்
பாலஸ்தீனம்
சுமேர்
சினாய் மலை
மெம்பிஸ்
அராபியப் பாலைவனம்
செங்கடல்
எகிப்து
கர்னக்
தீப்ஸ்
நைல்

கோபுரத்தின் சின்னங்கள் இன்றும் அங்குக் காட்சியளிக்கின்றன. ஊர் எனும் மற்ரோர் இடத்தில் பொன்னாலும், வெள்ளியாலும், தந்தத்தாலும் செய்யப்பட்ட பொருள்களும், பாத்திரங்களும், சிலைகளும் நிறையக் கிடைத்துள்ளன. அவைகள் நேர்த்தியான வேலைப்பாடு கொண்டவை. ஆபிரகாம் எனும் யூதத் தலைவர், கானான் (Kanan) தேசத்திற்கு இந்நகரிலிருந்தே யூத மக்களை அழைத்துச் சென்ருர் என்று விவிலிய நூல் கூறும்.

கி.மு. மூவாயிரம் ஆண்டளவில் சுமேரியாவில் ஊர் (Ur), லகாஷ் (Lagash), யூரக் (Uruk) போன்ற நகர அரசுகள் தலைசிறந்து விளங்கின. சுட்ட களிமண் ஓடுகளிலிருந்து இவற்றைப் பற்றிய சில விவரங்கள் கிடைத்துள்ளன. லகாஷ் நகரை ஆண்ட உறுகாகனு (Urukagana) என்ற அரசன் ஓர் அறிவுசான்ற வல்லரசனுக ( Enlightened Despot) விவரிக்கப்படுகிருன். பிரபுக்களும், மத குருமார்களும் சேர்ந்துகொண்டு சாதாரண மக்களைச் சுரண்டி வந்த நிலையைத் தடுக்க அவன் பல்வேறு ஆணைகளைப் பிறப்பித்தானும். கோயில்களில் வரும் பொருளைப் பூசாரிகள் கொள்ளையடிப்பதைத் தடுக்கப் பல்வேறு ஆணைகளை அவ்வரசன் பிறப்பித்தானும். அக்காலத்திலேயே நல்ல முறையில் சட்டங்களை அவன் தொகுத்தளித்துள்ளான். பிற்காலத்திய ஹம்முராபிச் சட்டங்களுக்கு (Hammurabi's Code) அவை முன்னேடிகளாய் விளங்கின. லுகால் ஜக்கிஷி (Lugal Zagg'si) என்ற ஓர் அரசர் ஊர் என்னும் நகர அரசைத் தாக்கி வென்ருர். அவர் கோயில்களை இடித்துத் தெய்வங்களை அப்புறப்படுத்தினுர். ஏராளமான மக்களைக் கொன்று குவித்தார். அவருக்குப் பிறகு பல சுமேரிய மன்னர்கள் அரசாண்டனர். கி.மு. 2400ஆம் ஆண்டளவில் மெசபடோமியப் பள்ளத்தாக்கின் வட பகுதியில் சார்கன் (Sargon) என்ற செமிடிக் மன்னர் அரசு ஒன்றை ஏற்படுத்தினுர். அவர் சுமேரியாவைத் தாக்கித் தகர்த்து, அதன் நகர அரசுகளைக் கைப்பற்றிக் கொண்டார். லுகால் ஜக்கிஷி எனும் கொடுங்கோலனை எதிர்த்துப் போரிட்டுச் சிறைப்படுத்தி விலங்கிட்டுத் தனது தலைநகருக்குஇட்டுச் சென்ருர். அவருடைய குடிமக்கள் சுமேரியர்களோடு கலந்துறவாடி அவர்களது நாகரிகப் பண்புகளைக் கடைப்பிடித்தனர். சார்கனின் தலைநகரம் அகேடியா என்பதாகும். அவர் தோற்றுவித்த அகேடியப் பேரரசு பல நூற்றுண்டுகள்வரை செல்வாக்குடன் விளங்கியது. ஈழமைட்டுகள், சிரியர்கள் ஆகியோரையும் வென்று அவர் தமது நாட்டை மத்தியதரைக்கடல் வரை பரப்பினுர். சார்கனுக்குப்பின், சுமேரியர்கள் கலகம் செய்து நாட்டைப் பலவீனப்படுத்தினர். இதைப் பயன்படுத்திக்கொண்டு குதி (Guti) என்ற காட்டுமிராண்டி வகுப்பினர் சார்கனின் வழித்தோன்றல்

களைத் தோற்கடித்தனர். கி.மு. 2100ஆம் ஆண்டளவில் சுமேரியர்கள் குதியைத் தோற்கடித்துத் தங்களது சுதந்திரத்தை மீண்டும் நிலைநாட்டினர். ஊர் எனும் நகரம்தான் சுதந்திரப் போருக்குத் தலைமை தாங்கி நடத்தியது. அதனை ஆண்டவர்களில் ஒருவரான ஊர் எங்கூர் (Ur Engur) என்பார் ஒரு நல்லரசர். நாட்டில் அவர் ஒரே மாதிரியான சட்டங்களை அமைத்து நீதியை நன்கு நிலைநாட்டினார். ஊர் நகரில் பல அழகிய கட்டடங்களைக் கட்டினார். மேற்காசியா வரை அவரது பேரரசு பரவியிருந்தது. அவரது மகனான டுங்கி என்பார் அவரைப் போலவே பல நற்பணி களைச் செய்துகொண்டு 48 ஆண்டுகள் அரசோச்சினார். அவரை மக்கள் தெய்வம் என்றே போற்றினர். அவர் தன்னை 'நால்வேறு திக்குகளின் அரசர்' என்று அழைத்துக்கொண்டார். அவரது மரணத்துக்குப் பின் ஈழமைட்டுகள் மெசபடோமியாவை வென் றனர். கி.மு. 1800ஆம் ஆண்டளவில் ஆமொரைட்டுகள் என்ற வகுப்பினர் அரேபியாவில் இருந்து வந்து இந் நாட்டைக் கைப் பற்றிக் கொண்டனர். பாபிலோன் என்ற நகரை உண்டாக்கியவர் கள் அவர்களே. எனவே, அவர்கள் பாபிலோனியர்கள் எனவும் அழைக்கப்படுவர். அவர்களில் மிகச் சிறந்த மன்னர் ஹம்முராபி (Hmmurabi) எனப்படுவார். அவருக்குப்பின் பாபிலோனிய வமிசம் சீரழிந்தது. வடமேற்கிலிருந்து காஸைட்டுகள் (Kassites) என்னும் காட்டுமிராண்டிகள் கி.மு. 1750ஆம் ஆண்டளவில் பாபிலோனியா வைக் கைப்பற்றித் தம்வசமாக்கினர். குதிரைப்படையை முதன்முதலில் இங்குக் கொண்டுவந்தவர்கள் அவர்களே. கி.மு. 1300ஆம் ஆண்டளவில் வடக்கே இருந்து அசிரியர்கள் என்னும் வகுப்பினர் வந்து இங்கு ஒரு பெரிய பேரரசைத் தோற்றுவித்தனர். அவர்களின் தலைநகரம் நினெவா (Ninevah) எனப்படும். ராணுவ வெறிபிடித்த அசிரியர்களைக் கி.மு. 612ஆம் ஆண்டளவில் சால்டியர்கள் (Chaldians) என்ற செமிடிக் இனத்தவர் வென்றனர். இவர்களில் மிகப் புகழ் பெற்ற மன்னர் நெபுகத்நேசர் (Nebuchad-nezzar) என்பவராவர். பண்டைய உலகின் ஏழு அதிசயங்களில் ஒன்றான தொங்கும் தோட்டங்களை (Hanging gardens) உண்டாக் கியவர் அவரே. கி.மு. 539-ல் அசிரியர்களைப் பாரசீகர்கள் போரில் வெற்றி கொண்டனர். பாரசீகப் பேரரசின் ஒரு பகுதி யாகவே மெசபடோமியா விளங்கியது. எனவே, மெசபடோமி யாவின் அரசியல் வரலாறு அதோடு முடிவுற்றது எனலாம்.

### சுமேரிய நாகரிகம்

மெசபடோமிய நாகரிகத்துக்கு அடிப்படையை அமைத்த வர்கள் சுமேரியர்களே ஆவர். மெசபடோமியாவில் கண்டுப் பிடிக்கப்பட்ட எழுத்துமுறை அவர்களால் தோற்றுவிக்கப்பட்டதே

யாகும். அதேபோன்று சமயம், சட்டங்கள், வாணிபம், அறிவியல் ஆகிய துறைகளிலும் அவர்கள் அந்நாகரிகத்தின் முன்னோடிகளாய் விளங்கினர். அவர்களுக்குப்பின் வந்தவர்கள் அவற்றை அப்படியே ஏற்றுக்கொண்டனர். ராணுவம், அரசாங்க அமைப்பு ஆகிய துறைகளில் மட்டுமே பின்வந்தவர்கள் ஒரு சில மாற்றங்களை ஏற்படுத்தினர்.

*அரசியல் நிலை*

சுமேரிய நாட்டில் பல சிறு நகர அரசுகள் இருந்தன. ஒவ்வொரு நகர அரசும் ஒரு மன்னரின் கீழிருந்தது. அவரை படெஸி (Patasi) என அழைத்தனர். மன்னரே நகரத்தின் முக்கிய மதகுருவாகவும், சேனைத் தலைவராகவும், நீர்ப்பாசன முறையின் மேற்பார்வை யாளராகவும் திகழ்ந்தார். ஒரு சில அரசர்கள் அண்டையில் உள்ள நகர அரசுகளை வென்று பெரிய அரசுகளை ஏற்படுத்தினர். பொதுவாக இந்நகர அரசுகளிடையே ஓர் அரசியல் ஒற்றுமை இருந்தது. ஓர் இணைக் கூட்டரசுபோல் (Confederation) அவை செயற்பட்டன. அந்நியப் படையெடுப்பின்போது அவை யாவும் ஒன்று சேர்ந்து நின்றன.

மன்னர்கள் தங்களது நாட்டின் நிலங்களைப் பிரபுக்களுக்கு மானியங்களாக வழங்கினர். போர்க்காலத்தில், அரசனுக்கு அப் பிரபுக்கள் போர் வீரர்களைத் தந்துதவினர். ஒருவகை நிலமானிய முறை (Feudalism) அங்கு நிலவிற்று. மன்னர்கள் தம் குடிகளிட மிருந்து தானியங்களை வரியாகப் பெற்றுப் பெரும் கிடங்குகளில் அவற்றைச் சேமித்து வைத்தனர். அதிகாரிகளுக்கும் சிப்பந்தி களுக்கும் அதிலிருந்தே ஊதியம் வழங்கப்பட்டது. ஒவ்வோர் அரசனும் ஒரு பெரிய மாளிகையில் ஊரின் ஒரு கோடியில் வாழ்ந்தான். அம்மாளிகைக்குக் குறுகிய வாயில்களே இருந்தன. அவற்றின் வழியே யாராவது ஒருவர் மட்டுமே மாளிகைக்குள் நுழைய முடியும். வாயிற்காப்போர் இரவும், பகலும் அரண்மனை யைக் காவல் புரிந்தனர். மன்னனுக்கென்றே தனிப்பட்ட கோயில் இருந்தது.

போர்க்களத்தில் மன்னரே படைகளுக்குத் தலைமை தாங்கி நடத்தினர். இரதத்தில் இவர்ந்து சென்று அவர் போர் புரிந்தார். அவரது வீரர்கள் வில், அம்பு, கேடயம் போன்ற போர்க்கருவி களைப் பயன்படுத்தினர். பொதுவாக அரசர்கள் வாணிபம் பற்றியும், நீர்ப்பாசனம் பற்றியும் ஏற்படுகின்ற பூசல்கள் காரண மாகவே போரிட்டனர். சில சமயங்களில் சுரங்கங்களுக்காகவும் அவர்கள் சமர்புரிந்தனர். தோற்கடிக்கப்பட்ட வீரர்களை அடிமை

களாக மாற்றினர். அவர்களில் பத்தில் ஒரு பகுதியினரைக் கடவுளர்க்குப் பலியிட்டனர்.

சுமேரியரின் சட்டங்கள் நன்கு வரையறுக்கப்பட்டிருந்தன. ஆனால், அவை அவ்வளவு கடுமையாக இல்லை. பின்னால் வந்த ஹம்முராபியின் சட்டப்படி விபசாரத்திற்காக மனைவியைக் கொன்றவனுக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டது. ஆனால், சுமேரியச் சட்டம் அங்ஙனம் செய்யவில்லை. குற்றம் இழைக்கப் பட்டவனை குற்றவாளி மறுமணம் செய்துகொள்ளும்படி அது கூறியது. ஆண், பெண் உறவுகளையும், கடன் கொடுக்கல், வாங்கல்களையும், ஒப்பந்தங்களையும், வாணிபத்தையும், தத்து எடுத்துக்கொள்ளுதலையும் சுமேரியச் சட்டங்கள் கட்டுப்படுத்தின. நீதிமன்றங்கள் பொதுவாகக் கோயில்களிலேயே தமது பணியைச் செய்தன. கோயிற் பூசாரிகளே நீதிபதிகளாகப் பணியாற்றினர். உயர்நீதி மன்றங்களில் மட்டுமே தனிப்பட்ட நீதிபதிகள் நியமிக்கப் பட்டனர். நீதிமன்றத்துக்குச் செல்லாமல் ஒரு நடுவர் மூலமாகவே வழக்குகளைத் தீர்த்துக்கொள்ளச் சட்டம் இடமளித்தது. இதனால் எதற்கெடுத்தாலும், நீதிமன்றத்திற்குச் செல்லும் வழக்கம் நின்றது. நாட்டின் சட்டங்களையெல்லாம் ஆக்கும் உரிமை மன்னனிடம் இருந்ததென்றாலும், அம்மன்னனும் சட்டங்களுக்குக் கட்டுப் பட்டான். சட்டம் மக்களின் உரிமைகளைக் காப்பாற்றியது.

*பொருளாதார நிலை*

சுமேரியர்களுடைய பொருளாதார அமைப்பில் தனிப்பட்ட நபர்களுக்கு அதிக உரிமை தரப்பட்டிருந்தது. எகிப்தில் இருந்தது போன்று நிலங்கள் யாவும் மன்னனுக்குச் சொந்தமாக இல்லை. அதே போன்று அரசாங்கம் வாணிபத்திலும், கைத்தொழிலிலும் தனி உரிமை பெற்றிருக்கவில்லை. தனிப்பட்டவர்களுக்கே நிலம் சொந்தமாக இருந்தது. சாதாரண மக்கள்கூடத் தனிப்பட்ட முறையில் சொத்து வைத்துக்கொள்ளவும், தம் விருப்பம் போல் திருமணம் செய்துகொள்ளவும், பொருள் ஈட்டவும் உரிமை பெற்றிருந்தனர். ஆனால், நாட்டின் பெரும்பான்மையான மக்களுக்கு நில உரிமை இல்லை. அவர்கள் பெரும் நிலக்கிழார்களின் நிலங்களில் பண்ணையாட்களாகவே வேலை செய்து வந்தனர். அடிமை முறை என்னும் நிறுவனம் சுமேரியாவில் இல்லை எனினும் பண்ணையாட்களின் நிலை ஏறக்குறைய அடிமைகளுடையது போன்றே இருந்தது. கடன் வாங்கியவர்கள் பலர் ஆண்டையர் களிடம் தங்களை அடகு வைத்துக்கொண்டனர். ஆனால், அவர்கள் வேற்று நிலங்களில் கூலி வேலை செய்யவும், சொத்துச் சேர்க்கவும்

உரிமை பெற்றிருந்தனர். போரில் சிறைபிடிக்கப்பட்டவர்களும் அடிமைகளாக மாற்றப்பட்டனர்.

விவசாயமே சுமேரியர்களின் முக்கிய தொழிலாகும். அவர்களது நீர்ப்பாசன வசதிமுறை மெச்சத்தக்கதொன்று. நிலங்களில் அவர்கள் பார்லி போன்ற தானிய வகைகளையும், பேரீச்சம் போன்ற பழங்களையும், காய்கறி வகைகளையும் பயிரிட்டனர். நிலத்தை உழுவதற்கு எருதுகள் பயன்படுத்தப்பட்டன. விதை விதைப்பதற்கு முக்கோணமான ஒரு கருவி பயன்படுத்தப்பட்டது. அறுவடைக்கு மரத்தால் ஆன ஓர் அரிவாளை அவர்கள் பயன்படுத்தினர். ஓய்வு நேரங்களில் விவசாயிகள் நெசவுத் தொழிலில் ஈடுபட்டனர். நெசவையே தொழிலாகக் கொண்டவர்களும் பலர் இருந்தனர். விவசாயத்தில் கிடைத்த பொருட்களை அயல்நாட்டில் விற்றுச் செய்பொருட்களை அவர்கள் வாங்கி வந்தனர். தற்காலத்தைப் போன்று அவர்கள் காசோலை (Cheque), உண்டி, ரசீது முதலியவற்றைப் பயன்படுத்தினர். எழுதப்பட்ட ஒப்பந்தங்கள் நாணயமாகக் காப்பாற்றப்பட்டன. ஒரு சில கழிவுத் தொகையைப் பெற்றுக்கொண்டு பிற நாடுகளுக்குச் சென்று பொருள் விற்பனைக்காகப் பேரம் பேசிய தரகர்கள் பலர் இருந்தனர். தங்க, வெள்ளிக் கட்டிகள்தான் (Bullions) நாணயங்கள் போன்று பயன்படுத்தப்பட்டன. ஷெக்கல் (Shekal) என்பது அத்தகைய வெள்ளிக் கட்டியின் பெயராகும். சுமேரிய மக்கள் மண்ணினால் கட்டப்பட்ட வீடுகளில் குடியேறினர். செங்கற்களும் சில வீடுகளில் பயன்படுத்தப்பட்டன. வீடுகளில் வளைவுகளை (Arches) அவர்கள் அமைத்தனர். கதவுகள் மரத்தால் செய்யப்பட்டிருந்தன. அவை எளிதில் மூடித் திறக்கும்வண்ணம் சுழல் திருகாணிகள் பொருத்தப்பட்டிருந்தன. வணிகர்கள் தம் பண்டங்களை வண்டிகளில் ஏற்றிச் சென்று விற்றனர். படகுகள்மூலம் சென்று அவர்கள் வேற்று நாட்டினருடன் வாணிபம் நடத்தினர். பண்டமாற்று முறையே (Barter) பெரிதும் பயன்படுத்தப்பட்டது. வாங்கிய கடனுக்கு வட்டியளிக்கும் பழக்கமும் காணப்பட்டது.

***சமூக நிலை***

சுமேரியர்களின் சமுதாயத்தில் பல படித்தரங்கள் இருந்தன. மன்னனும், பிரபுக்களும் சமுதாயத்தின் உச்சாணிக் கொம்பில் இடம் பெற்றிருந்தனர். மதகுருமார்களும், வணிகர்களும், கல்விமான்களும், உழவர்களும், மருத்துவர்களும் இடைத்தர வர்க்கத்தினராவர். சமுதாயத்தின் கடைநிலையில் காணப்பட்டவர்கள் அடிமைகளேயாவர். ஆனால், அவ்வடிமைகள் உழைப்பால் செல்வம் சேகரித்து அதன்மூலம் தங்களது சுயேச்சையை விலை

கொடுத்து வாங்கிவிட முடியும். பெண்கள் ஆண்களுக்கு உட்பட்டே வாழ்ந்தனர். தம் மனைவியரை அடிமைபோல விற்கின்ற உரிமையையும் கணவர்கள் பெற்றிருந்தனர். மகப்பேறு இல்லாத மனைவியரை விவாகரத்துச் செய்யும் உரிமையும் கணவனுக்கிருந்தது. விபசாரம் செய்த மனைவி கொல்லப்பட்டாள். ஆனால், அதே குற்றத்தைச் செய்த ஆண்மகன் மன்னிக்கப்பட்டான். பெண்களுக்கு ஓரளவு சுதந்திரம் கொடுக்கப்பட்டிருந்தது. தாங்கள் பெற்ற ஸ்ரீதனத்தை அவர்கள் தமக்கே சொந்தமாக வைத்துக் கொள்ளலாம். தனிப்பட்டமுறையில் வியாபாரம் செய்தும் அவர்கள் பொருளீட்டலாம். அடிமைகளை விற்கவும், வாங்கவும் அவர்களுக்கு உரிமை உண்டு. தாம் ஈன்ற மக்களைக் கட்டுப்படுத்தவும் அவர்கள் அநுமதிக்கப்பட்டனர். மரணத்திற்குப்பின் தமது சொத்து யாருக்குச் சேரவேண்டுமென்பதைப் பெண்கள் தாமே தீர்மானித்தனர். ஒருசில பெண்கள் கோயில்களில் சேவை செய்வதற்கென்றே தங்களை அர்ப்பணித்துக் கொண்டனர். அவர்கள் கடவுளின் வைப்பாட்டிகள் என்று கருதப்பட்டனர். நம் நாட்டில் சோழர் காலத்திலிருந்த தேவர் அடியாள்களுடன் இவர்களை ஒப்பிடலாம்.

பெண்கள் தங்களை அலங்கரித்துக் கொள்ளுவதிலும் ஒப்பனை செய்துகொள்ளுவதிலும் கைதேர்ந்தவர்களாயிருந்தனர். வகை வகையான சிகையலங்காரங்களை அவர்கள் அறிந்திருந்தனர். கொண்டையில் பூச்சூட்டிக்கொண்டும், கண்ணுக்கு மையிட்டும், முகத்தில் பன்னிறங்கொண்ட துகள்களைப் பூசிக்கொண்டும் அவர்கள் தங்களை அழகுபடுத்திக் கொண்டனர். கண்ணைப் பறிக்கும் வண்ணஞ் செறிந்த ஆடைகளை அவர்கள் அணிந்து மகிழ்ந்தனர்.

**சமயம்**

சுமேரியர்கள் எண்ணிறந்த கடவுளர்களை வணங்கி வந்தனர். கதிரவனே அவர்களின் கண்கண்ட முதல் தெய்வமாவார். ஷமாஷ் (Shamash) என்பது அக் கதிரவக் கடவுளின் பெயராகும். மழைக்கும் காற்றுக்கும் தெய்வமாக விளங்கியவர் என்லில் (Enlil) என்பவராவார். இஷ்டார் (Ishtar) என்ற பெண் தெய்வம் நம் நாட்டு ரதி தேவதைக்கு ஒப்பானது. நீர்ப்பாசனத்தையும், வெள்ளங்களையும் கட்டுப்படுத்திய தெய்வம் லிங்கிர்சு (Lingirsu) எனப்பட்டது. தாவரங்களைப் புரக்கும் தெய்வம் அபு அல்லது டாமஸ் (Abu or Tamus) எனப்பட்டது. ஒவ்வொரு கடவுளுக்கும் மனைவியர் இருந்தனர். அவர்கள் அனைவரும் கோயில்களில் வைத்து வழிபடப்பட்டனர். மிருகபலி, நரபலி முதலியன

கடவுளுக்கு அளிக்கப்பட்டன. சமயக்குரவர்கள் கோயில்களில் பூஜை செய்து வாழ்ந்தனர். கோயில்களின் சொத்தை அவர்கள் நன்கு அநுபவித்தனர்.

மலை நாட்டிலிருந்து வந்த காரணத்தால் மலைகள் போன்ற செயற்கையான மண் கோபுரங்களைக் கட்டி அவற்றின் உச்சியில் தங்களது கடவுளரை வைத்து வழிபட்டனர். அவற்றின் உச்சிக்குப் போகப் படிக்கட்டுகள் கட்ட அவர்களுக்குத் தெரியவில்லை. அதற்குப் பதிலாகக் கட்டடத்தின் ஓரத்தில் சாய்வான சமதளம் ஒன்றைக் கட்டி அதன் வழியே உச்சிக்குச் சென்று இறைவனை வழிபட்டனர். இத்தகைய கோபுரங்களையே பிற்காலத்தில் இங்கு வந்த யூதர்கள் பேபலின் கோபுரங்கள் (The Tower of Babel) என்று அழைத்தனர்.

மரணத்திற்குப்பின் மனித உயிர் வாழ்கிறது என்பதில் சுமேரியர்கள் அசையாத நம்பிக்கை கொண்டிருந்தனர். சவக் குழியில் அவர்கள் உணவும், நீரும் வைத்தே சடலங்களைப் புதைத் தனர். இறந்தபின் ஒவ்வோர் உயிரும் இருண்டதோர் உலகிற்குச் செல்வதாக அவர்கள் நம்பினர். அவ்வுலகம் ஷியோல் (Sheol) என அழைக்கப்பட்டது. சிறிது காலம் அங்குத் துன்பம் அநுபவித்த பின் உயிர்கள் விடுதலை பெற்றன. ஆனால், மீண்டும் திரும்பிவந்து மடிந்துபோன பழைய உடல் மூலமாக அவை உயிர்த்தெழ முடியும் என்ற நம்பிக்கை அவர்கட்கில்லை. இதில் அவர்கள் எகிப்தியர் களினின்றும் வேறுபடுகின்றனர். எனவேதான் அவர்கள் இறந்து போனவர்களின் சடலங்களை அழியாமல் காக்கும் முயற்சியில் ஈடு படவில்லை. பெரிய கல்லறைகளைக் கட்டுவதிலும் அவர்கள் கவனம் செலுத்தவில்லை. சமயம் சுமேரியர்களின் வாழ்வில் மிக முக்கிய மான இடத்தைப் பெறவில்லை. நல்ல மகசூலைப் பெறுதல், வாணிபத்தில் லாபம் பெறுதல் போன்ற உலகியல் வெற்றிகளுக் காகவே அவர்கள் இறைவனை வணங்கினர். சமயத்திற்கும், ஒழுக்கத்திற்கும் ஒன்றும் சம்பந்தமில்லை.

உற்பத்தியைப் பற்றியும், வெள்ளத்தைப் பற்றியும் பல கட்டுக் கதைகள் சுமேரியர்களிடையே உலவின. அவற்றின்படி உலகில் மனிதன் பெற்ற வெற்றியைக் கண்டு பொறாமைப்பட்ட கடவுளர்கள் அவர்களை அழிக்கவென்று ஓர் பெரும் வெள்ளத்தை உண்டாக்கினர். அவர்களுள் ஒரு தெய்வம் இந்த இரகசியத்தைத் தனது பக்தன் ஒருவனுக்குக் கூறிவிட்டது. எனவே, அவன் முன் ஜாக்கிரதையாகப் படகு வீடு ஒன்றைக் கட்டிக்கொண்டான். பின்னர் பெரு வெள்ளம் வந்து ஏழு நாட்கள் உலகை நீரில் ஆழ்த்தியது. நீர் வடிந்தபின் படகு வீட்டிலிருந்த மனிதன் தன் குடும்பத்துடன் வெளிவந்து உலகில் மீண்டும் மனித வர்க்கத்தை உண்டாக்கினான். விவிலிய

நூல் இக்கதையை அப்படியே கடன் வாங்கியுள்ளது. மார்டக் (Marduk) என்ற கடவுள் பல சிறு தெய்வங்களை எல்லாம் கொன்று அவர்களில் ஒருவரது உடலிலிருந்து உலகைப் படைத்தளித்தார் என்றும், களிமண்ணிலிருந்து மனிதனை உண்டாக்கினார் என்றும் மற்றொரு புராணம் இயம்புகிறது. இவற்றிலெல்லாம் நீதி, நெறி சம்பந்தமான உண்மைகள் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.

*அறிவியல் சாதனைகள்*

அறிவுத்துறையில் சுமேரியர்கள் அவ்வளவாக முன்னேற்றம் அடையவில்லை. எழுத்துகளைக் கண்டுபிடித்ததே அவர்களுடைய சாதனைகளுள் மிகச் சிறந்ததொன்றாகும். கி.மு. 3600ஆம் ஆண்டளவிலேயே சாசனங்களைக் கற்களின்மீது அவர்கள் பொறித்தனர். அதன்பின் கி.மு. 3200ஆம் ஆண்டளவில் களிமண் பலகைகளில் அவர்கள் எழுத்துகளை எழுதிக் காயவைத்தனர். அவை ஆப்பு வடிவத்தில் அமைந்திருந்ததால் ஆப்பு எழுத்துகள் (Cuneiform) என்று பெயர் பெற்றன. களிமண் பலகைகளில் எழுதியபின் அவர்கள் அதைச் சுட்டு கெட்டியாக்கிக் கொண்டனர். ஒப்பந்தங்கள், ஆவணங்கள் (Records) முதலியன இவ்வாறே தயாரிக்கப்பட்டன. எழுத்துகள் வலமிருந்து இடமாக எழுதப்பட்டன. முதலில் சித்திர எழுத்து முறையைக் கையாண்ட சுமேரியர்கள் நாளடைவில் பல ஒலிக்குறியீடுகளை உள்ளிட்ட 150 சொற்பகுதிகளை (Syllables) உண்டாக்கினர். அவற்றை மனனஞ் செய்தவர்களே எழுதவும் படிக்கவும் முடியும். பொதுவாக மத குருமார்களே படித்தவர்களாயிருந்தனர். பெரும் நூலகங்களை அரசர்கள் வைத்திருந்தனர். டெல்லோ (Tello) என்னுமிடத்திலுள்ள நூலகத்தில் 30,000 களிமண் பலகைகள் இருந்ததாகக் கூறுவர்.

கணிதத்தைப் பொறுத்தவரையில் பெருக்கல், வகுத்தல், வர்க்க மூலம் (Square roots) கண்டுபிடித்தல் முதலியனவற்றை அவர்கள் அறிந்திருந்தனர். நிறுத்தல், நீட்டல் அளவுகளைப் பன்னிரண்டின் மடங்காகக் கணக்கிட்டனர். அறுபது என்ற எண்ணை ஒரு சாதாரண அலகாகப் (unit) பயன்படுத்தினர். சந்திரனது வளர்ச்சி, தேய்வு இவற்றைக் கொண்டு மாதங்களையும், ஆண்டுகளையும் கணக்கிட்டனர். ஆண்டின் இறுதியில் ஒரு மாதத்தைக் கூட்டிக்கொண்டனர்—வானியலில் அவர்களுக்கு அதிக அக்கறை இருக்கவில்லை. ஆனால், ஜோதிடக் கலைக்காக அதைப் பயன்படுத்தினர். மருத்துவத்துறையிலும் அவர்கள் அதிக முன்னேற்றம் அடையவில்லை. பேய், பிசாசுகளாலேயே நோய்கள் வருகின்றன என்றும், மாயாஜாலத்தின் மூலம் அவற்றை ஓட்டு

வதனாலேயே ஒருவன் நோயினின்று விடுபடமுடியுமென்றும் நம்பினர். ஆவிகளை ஓட்ட அவர்கள் தாயத்துகளை அணிந்தனர். சில மூலிகைகளையும் அவ்வப்போது மருந்தாகப் பயன்படுத்தினர்.

சிற்பக்கலையில் சுமேரியர்கள் வல்லுநர்களாயிருந்தனர். உலோகங்களிலும், மணிகளிலும் அவர்கள் அழகிய உருவங்களைப் பொறித்தனர். போர்க் கருவிகள், ஆபரணங்கள் ஆகியவற்றில் மனித உருவங்கள், மிருகங்களின் வடிவங்கள் அழகிய முறையில் பொறிக்கப்பட்டன. கட்டடக்கலையில் அவர்கள் ஓரளவு கைதேர்ந்தவர்களாய் இருந்தனர். தங்களது கோயில்களில் அவர்கள் வளைவுகளையும் (Arches), குவிமாடங்களையும் (Domes), தூண் வரிசைகளையும் (Columns), கவிகை மோடுகளையும் (Vaults) முதன் முதலில் சமைத்தனர். வெயிலில் உலர்த்தப்பட்ட செங்கற்கள் பொதுவாகப் பயன்படுத்தப்பட்டன. சுவர்களில் பல பொம்மைகள் அலங்காரமாக வைக்கப்பட்டிருந்தன. கண்கவர் ஓவியங்கள் வீட்டிற்கு எழில் சேர்த்தன. கோயில்களில் மிருகங்கள், வீரர்கள், கடவுளர்கள் ஆகியோரின் உருவங்கள் பொறிக்கப்பட்டன. அவை ஆடம்பரமின்றி எளிமையாகக் காட்சியளித்தன. டெல்-எல்-உபேத் (Tel-el-ubaid) எனுமிடத்தில் கண்டெடுக்கப்பட்ட ஓர் எருது தலையும், ஊர் என்னுமிடத்தில் காணக்கிடைத்துள்ள இராணியின் உருவமொன்றும், சுமேரியக் கலை மேம்பாட்டின் சின்னங்களாய் விளங்குகின்றன. கட்டடங்கள் பொதுவாக எளிமையான தோற்றத்துடன் விளங்கின. நடுவில் ஓர் முற்றமும், அதைச் சுற்றி அறைகளும் ஒவ்வொரு வீட்டிலும் அமைந்திருந்தன. கிணறுகள் வீடுதோறும் காணப்பட்டன. மேஜை, நாற்காலிகளும் படுக்கைகளும் அனைத்து வீடுகளிலும் காணப்பட்டன. கழிவுநீரை வெளியேற்ற திறம்பெற்ற முறையில் சாக்கடைகள் அமைக்கப்பெற்றிருந்தன. சுமேரியர்களுக்கே உரித்தான ஸிகுராட் (Ziggurat) என்ற கோபுரங்கள் வியத்தகு கட்டடங்களாகும். அவற்றில் மூன்று முதல் ஏழு மாடிகள்வரை அமைக்கப்பட்டிருந்தன.

பொன்னால் செய்யப்பட்ட ஆபரணங்கள் சுமேரியர்களின் கலையுணர்வை நன்கு வெளிப்படுத்துகின்றன. கி.மு. 4000-ல் செய்யப்பட்ட அவ்வாபரணங்களின் நுட்பமும் செறிவும் இன்றும் நம்மை வியப்பிலாழ்த்துகின்றன. ஊர் என்னுமிடத்தில் கண்டு பிடிக்கப்பட்டுள்ள ஓர் பொன்னுறையும், நீலமணிக்கல்லால் ஆன ஓர் குத்துவாளும் அக்காலக் கலையுணர்வின் செம்மைக்குச் சான்று பகர்கின்றன.

இங்ஙனம் நாகரிகத்தில் சுமேரியர்கள் எகிப்தியர்களையும் மிஞ்சியவர்களாய் இருந்தனர். பல துறைகளில் அவர்கள் உலக நாகரிகத்தின் முன்னோடிகளாய்த் திகழ்ந்தனர். முதன் முதலாக அரசுகளையும், பேரரசுகளையும் ஏற்படுத்தி, நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்கியவர்கள் அவர்களே. முதன் முதலாக வாணிபத்தில் தங்கத்தையும், வெள்ளியையும் அலகாகப் பயன்படுத்தியவர்களும், கடன்முறையைக் கையாண்டவர்களும் அவர்களே. கல்வியில் பெரிதும் மேம்பாடுற்று எழுத்துக் கலையை வளர்த்து, உற்பத்தி, பிரளயம் ஆகியவற்றைப் பற்றிக் கதைகளைப் புனைந்து, இலக்கியத்தையும் காவியத்தையும் ஓம்பிக் காத்து, நூலகங்களை நிறுவிய பெருமையும் அவர்களுக்கே உரித்தாகும். ஆபரணங்களை அணிவதிலும், வாசனைத் திரவியங்களைப் பயன்படுத்துவதிலும் அவர்கள் ஏனையோருக்கு முன்னோடிகளாய்த் திகழ்ந்தனர். சிற்பம், புடைப் போவியம் (Relief) முதலியவற்றை ஏற்படுத்திய வழிகாட்டிகள் அவர்களேயெனலாம். ஆனால், இத்தகைய சிறப்புகள் வாய்ந்த சுமேரிய சமுதாயத்தில் கறை படிந்ததைப்போல அடிமைமுறையும், பேராசையும், போரும், எதேச்சாதிகாரமும், வைதீகமும் காணப் பட்டன. குற்றங்கள் சிலவும் ஆனால் குணங்களோ பலவுமாக விரவிக் கிடந்தமையால் சுமேரிய நாகரிகம் பண்டைய நாகரிகங் களிலேயே தலைசிறந்தது என்று கூறுதல் பெரிதும் பொருத்த மாகும்.

## பாபிலோனிய நாகரிகம்

### *ஹம்முராபி* (Hammurabi)

சுமேரியப் பேரரசு டுங்கி (Dungi) என்ற அரசருக்குப்பின் பல முரட்டு வகுப்பினரின் தாக்குதலுக்கு உட்பட்டு அல்லோல கல்லோலப்பட்டது. கி.மு. 21ஆம் நூற்றாண்டில் அது ஈழமைட்டு கள் என்ற காட்டுமிராண்டிகளின் ஆட்சிக்கு உட்பட்டது. கி.மு. 1800ஆம் ஆண்டில் செமிடிக் வகுப்பைச் சேர்ந்த ஆமொரைட்டுகள் என்ற கூட்டத்தினர் அராபியப் பாலைவனத்தின் எல்லைப்புறங்களிலிருந்து மெசபடோமியாவின்மீது படையெடுத்து வென்றனர் என்று முன்னர்க் கண்டோம். பாபிலோன் என்னும் தலைநகரத்தைத் தங்கள் தலைநகராகக் கொண்டதால் அவர்கள் பாபிலோனியர்கள் என வரலாற்றில் அழைக்கப்படலாயினர். அவர்களுக்குப் பின்னால் வந்த சாலடியர்களிடமிருந்து வேறு படுத்திக் காண்பான்வேண்டி, அவர்களைப் பழைய பாபி லோனியர்கள் என்றும் சாலடியர்களைப் புதிய பாபிலோனியர்கள் என்றும் அழைப்பது வழக்கம். ஆமொரைட்டுகளில் மிகவும் புகழ் வாய்ந்த அரசன் ஹம்முராபி (Hammurabi, கி.மு.

2123-2081 வரை) எனப்படுவார். அவருடைய ஆட்சிக் காலத்தில் பாபிலோனியப் பேரரசு அசிரியாவரை பரந்து விரிந்து கிடந்தது. பல சிறிய அரசுகள் யாவும் அவரது பேரரசில் கடலிற் கலந்த நதிகள் போலக் கலந்து ஒன்றுபட்டன. ஒரே சட்டம், ஒரே ஆட்சிமுறை எங்கும் நிலவியது. ஈழமைட்டுகள் மீண்டும் தோற்கடிக்கப்பட்டு மீண்டும் மலைக்கே துரத்தப்பட்டனர். ஹம்முராபி ஓர் சிறந்த போர்வீரரேயன்றி நல்லதோர் அரசியல் ஞானியுமாவார். சுமேரியாவை வளம் கொழிக்கும் நாடாகச் செய்த பெரிய கால்வாய் ஒன்றை அவர் வெட்டினார். 'சுமேர், அகேட் ஆகிய நாடுகளில் தானியங்கள் குவியல் குவியலாகக் குவியும்படி செய்தவனும், ஆண்டு முழுவதும் வற்றாத நீரையளிக்கத்தக்க பெரிய கால்வாயை வெட்டியவனும் நானே' என்று அவரே ஓர் சாசனத்தில் மார்தட்டிக் கொள்ளுகிறார். மற்றும் ஏராளமான கோயில்களைக் கட்டியது குறித்தும் அவர் பெருமைபட்டுக் கொள்ளுகிறார். தமது தலைநகரை அவர் அழகிய அரண்மனைகள், கோயில்கள் ஆகியவற்றைக் கொண்டு நிரப்பினார். நகரைச் சுற்றிப் பெரும் மதிற்சுவரையும் எழுப்பினார். தானியங்களைச் சேகரித்து வைக்கப் பெரும் தானியக் களஞ்சியங்களை அமைத்தார். யூப்ரடீஸ் நதியின்மீது பெரும் அணை ஒன்றைக் கட்டி நீரைத் தேக்கிக் கால்வாய்கள்மூலம் அதை வேளாண்மைக்குப் பயன்படுத்தினார். இங்ஙனம் அவர் மக்கள் நலன் கருதிச் செய்த சேவைகள் பல.

### *ஹம்முராபியின் சட்டத் தொகுதி* (Hammurabi's Code)

ஹம்முராபியின் பெயர் இன்றைக்கு வரலாற்றின் ஏடுகளில் மாறாப் பசுமையுடன் விளங்குவதற்குக் காரணம் அவர் கட்டிய கோயில்களும், வெட்டிய கால்வாய்களும் மட்டும் அல்ல. அவர் தொகுத்தளித்த சட்டங்களும் அவரது புகழை இன்றளவும் பறை சாற்றி நிற்கின்றன. 1902ஆம் ஆண்டில்தான் அச்சட்டத் தொகுதியானது சூசா என்னும் நகரத்தில் கண்டெடுக்கப்பட்ட கருங்கற் பலகையினின்றும் உலகிற்குத் தெரியவந்தது. அவர் காலத்துக்கு முன்னர் பல சட்டத் தொகுதிகள் இருந்திருக்கலாம். ஈடும் எடுப்புமற்ற நாகரிகத்தவர்களாகிய எகிப்தியர்கள் நல்லதொரு சட்டமுறையை அறிந்திருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. ஆனால், அவை யாவும் அழிந்தொழிந்து போயின. காலதேவனின் கரங்களினின்றும் காப்பாற்றப்பட்டு அன்றைய நிலையிலேயே இன்றைக்கும் காணப்படுகிற சட்டத்தொகுதி ஹம்முராபியின் சட்டங்களேயன்றி வேறல்ல. பிற்காலத்து மோசஸ் என்ற யூத தீர்க்கதரிசியைப் போன்று இதுவும் இறைவனால் உவந்தளிக்கப்பட்ட வரப்பிரசாதமாகவே கருதப்படுகிறது. இச்சட்டங்கள் பொறிக்கப்பட்ட மண் உருளையின் ஒரு பக்கத்தில், ஷாமாஸ்

என்ற கதிரவக் கடவுளிடமிருந்து இச் சட்டத் தொகுதியை ஹம்முராபி பெறுவது போன்று ஓர் ஓவியம் பொறிக்கப்பட்டுள்ளது. அதன் முகவுரையில் 'நல்லோரைக் காக்கவும், தீயோரை அழிக்கவும், எளியோரை வலியாரிடமிருந்து மீட்கவும், நாட்டு மக்களின் நன்மையைப் பெருக்கவுமே இறைவன் இச் சட்டங்களை அருள்பாலித்தான்' என்பதாகக் கூறப்பட்டுள்ளது. இதில் மொத்தம் 250 சட்டங்கள் அடங்கியுள்ளன. இவை தனிப் பட்டோரது சொத்துரிமை, குடும்ப நலம், தொழில், வாணிபம், கடுங்குற்றங்கள் என்ற இன்னோரன்ன தலைப்புகளின்கீழ் மிகச் சீராகவும், செம்மையாகவும் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றில் பகுத்தறிவின்பாற்பட்ட பல சட்டங்கள் இருப்பதோடு காட்டு மிராண்டித்தனமான தண்டனைகளும் காணப்படுகின்றன.

இச்சட்டத் தொகுதியானது மக்களுக்குச் சொத்துரிமையை வழங்குகிறது. அதே சமயம் குடிமக்கள்மீது பல பொறுப்புகளையும் சுமத்துகிறது. பொறுப்புகளினின்றும் வழுவியவர்களுக்கு இது மிகக் கடுமையான தண்டனைகளை வழங்குகிறது. கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல் என்ற பழிக்குப் பழி முறையை இது பின்பற்றுகிறது. சான்றாக ஓர் கட்டடக் கலைஞன் கட்டிய வீடானது, திடீரென்று இடிந்து வீழ்ந்து அதில் குடியிருப்பவனைக் கொன்றுவிட்டால் அதற்குத் தண்டனையாக அதைக் கட்டியவனையும் அதே முறையில் கொன்றுவிட வேண்டும் என்று இச்சட்டம் பேசுகிறது. ஒரு மனிதன் இன்னொருவனின் மகளைக் கொன்றுவிட்டால், அதற்குப் பதிலாக அவனது மகளும் அவ்விதமாகவே கொல்லப்படவேண்டும் என்பது இச்சட்டத்தின் நியதியாகும். இவ்வகையில் ஹம்முராபிச் சட்டங்கள் பேசுகின்ற நீதியும், மனுநீதிச் சோழனின் நீதியும் ஒன்றாக இருப்பதைக் காண்கிறோம். ஆனால், இத்தகைய கடுமை யான தண்டனைகள் ஏழை எளிய மக்களுக்கே விதிக்கப்பட்டன. சமுதாயத்தில் செல்வந்தர்களாக இருந்தவர்கள் ஓரளவு எளிய தண்டனையையே பெற்றனர். ஆனால், பொதுவாகப் பார்க்கு மிடத்து தண்டனைகள் கடுமையானவைதான். திருடுதல், கொள்ளை யடித்தல், அடிமைகள் தப்பித்துப் போக உதவி செய்தல் போன்ற சாதாரண குற்றங்களுக்கும் மரண தண்டனை விதிக்கப்பட்டது. தனது முதலாளியை எதிர்த்த வேலையாளுக்கு 60 சவுக்கடிகள் கொடுக்கப்பட்டன. மந்திரவாதி என்று சொல்லிக்கொண்டு மக்களை ஏமாற்றுகிறவர்கள் ஆற்றில் வீசி எறியப்பட்டனர். ஆனால், அன்னார் ஆற்றில் முழுகாமல் தப்பித்துவிட்டால் குற்றமற்றவர்கள் என ஒப்புக்கொள்ளப்பட்டனர். அடிமைகள்மீது இச்சட்டங்கள் மிகக் கண்டிப்பாக அமல் செய்யப்பட்டன. ஆனால், அவர்களுக் குள்ளேயே வெவ்வேறு வகுப்பினருக்கு வெவ்வேறு உரிமைகள்

வழங்கப்பட்டன. ஒரு சில அடிமைகள் சுயேச்சைக் குடிமக்களோடு திருமண உறவு கொள்ளலாம். சொத்துகளும் தனியே வைத்துக் கொள்ளலாம். ஆனால், பெரும்பாலான அடிமைகளுக்கு அது முடியாத காரியம். சாதாரணமாக வழக்குகள் நீதிபதிகளின் முன்பு தீர விசாரிக்கப்பட்டன. அத்தகைய விசாரணையின்போது இருதரப்பாரும் தங்கள் கட்சியினை எடுத்து வாதாடவும், சாட்சிகளைக் கொண்டு தங்கள் வாதங்களை மெய்ப்பிக்கவும் வழிவகை இருந்தது.

பாபிலோனிய நாகரிகம் சிறந்த வாணிபத்தின் விளைவேயாதலால் வாணிபச் சம்பந்தமான சட்டங்கள்தான் மேற்கண்ட சட்டத் தொகுதியில் மிகுந்து காணப்பட்டன. தச்சர்கள், தையற்காரர்கள், செங்கல் செய்பவர்கள், கட்டடம் கட்டுவோர், இடையர், ஏவலாட்கள் போன்ற பல்வேறு தொழிலாளிகளுக்கு எவ்வளவு கூலி வழங்கவேண்டுமென்பது சட்டத்தில் நன்கு வரையறுக்கப்பட்டிருந்தது. வியாபார ஒப்பந்தங்கள், கடன்கள் முதலியவற்றைப் பற்றிய சட்டங்களும் ஏராளமாக உள்ளன. கூட்டுமுறையில் வாணிபம் செய்தவர்களின் ஒப்பந்தங்கள், சொத்துகளை அடகு வைத்தல், விற்றல் ஆகியவை பற்றிய பத்திரங்கள் முதலியன அடங்கிய பல களிமண் சாசனங்கள் பாபிலோனியாவில் கிடைக்கப் பெற்றுள்ளன. தானியங்களும், வெள்ளியும் வட்டிக்கு விடப்பட்டன. அவற்றுக்கு முறையே $31\frac{1}{3}$ சதவீதமும் 20 சதவீதமும் வட்டியாக வசூலிக்கப்பட்டது. ஹம்முராபியின் சட்டங்கள் வாணிபத்தைப் பெரிதும் பேணி வளர்த்தன. அதனால் தானியங்கள், எண்ணெய், பேரீச்சம்பழம், தோல், மண்பாண்டங்கள் முதலியன பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. அதே போன்று தங்கம், வெள்ளி, செம்பு, உப்பு முதலிய பொருள்களும், அடிமைகளும் பிற நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன.

திருமண உறவு பற்றிய பல சட்டங்களும் விதிக்கப்பட்டிருந்தன. திருமணமென்பது ஆண், பெண் என்னும் இரு பாலாரிடையே ஏற்படும் ஓர் ஒப்பந்தமாகக் கருதப்பட்டது. அதன்படி ஒருவரை ஒருவர் மரியாதையாக நடத்தவேண்டும். மணமகன் மாமனருக்கு ஓர் குறிப்பிட்ட அளவு வெள்ளிக்காசுகளை வழங்க வேண்டும். ஒரோவழி திருமணத்தை முறித்துக்கொள்ள இருதரப்பாரும் விரும்பினால் அப்பணம் மணமகனுக்கே திருப்பித் தரப்பட வேண்டும். அதற்கு மாறாக மணப் பெண்ணுக்கு வழங்கப்பட்ட ஸ்ரீதனமானது மருமகளுக்கு அவளது மாமனரால் திருப்பித் தரப்படும். மணமகனும், மணமகளும் தங்களது காதலில் உறுதியில்லாதவர்களாகக் காட்டிக் கொண்டால் அதற்கு அவர்

கள் ஓர் அபராதத் தொகையைச் செலுத்த வேண்டும். உறுதியாக நிற்பார்களாயின் பல்லார் முன்னிலையில் அவர்களது திருமணம் இனிது நடந்தேறும். திருமணத்துக்குப்பின் பெண்ணை, அவளது கணவன் கொடுமைப்படுத்தினால், அவள் தனது ஸ்ரீதனத்தைத் திரும்பப் பெற்றுக்கொண்டு தனது பெற்றோரின் இல்லத்துக்கே சென்றுவிடலாம். ஆணுக்கும் பெண்ணுக்கும் சமமான உரிமைகள் பல தரப்பட்டிருந்தாலும், பெண்களின் உரிமைகள் ஓரளவு மிகுதியாகவே பாதுகாக்கப்பட்டன. குணமாதற்கரிய நோய்வாய்ப்பட்ட மனைவிக்குக்கூட கணவன் அவள் இறக்கும்வரை உண்டி, உடையளித்துக் காப்பாற்ற வேண்டுமென நீதி செய்யப்பட்டிருந்தது. பெண்கள் தனிப்பட்ட முறையில் நிலபுலன்களை வைத்திருந்தனர். எழுத்தர்கள் போன்ற பதவிகளையும் அவர்கள் வகித்திருந்தனர். சொத்துகளைப் பிரியம்போல் வாங்கவும், விற்கவும், விற்ற பணத்தை விருப்பம்போல் வாணிபத்தில் முதலீடு செய்யவும் மகளிர் தனியுரிமை பெற்றிருந்தனர்.

ஹம்முராபியின் சட்டத்தில் அரைகுறை மருத்துவர்களுக்குப் பாதுகாப்பு இல்லை, கவனக்குறைவாகச் செய்யப்பட்ட ஓர் அறுவை சிகிச்சையால் நோயாளி ஒருவன் இறந்துவிட்டானெனில், அம் மருத்துவனின் விரல்கள் துண்டிக்கப்பட்டன. மருத்துவர்களின் கட்டணங்கள் வரையறுக்கப்பட்டன.

ஹம்முராபியின் சட்டத் தொகுதியை நுணுகி ஆராயும்போது ஏற்றத்தாழ்வு மிகுந்த ஓர் சமுதாயத்தை நாம் பாபிலோனியாவில் காண்கிறோம். நாட்டை வெற்றி கொண்ட செமைட்டுகள் எல்லாவித உரிமைகளையும் பெற்ற பிரபுக்களாக வாழ்ந்தனர். வணிகர்களும், விவசாயிகளும், தொழிலாளிகளும் ஒரு சில உரிமைகளே பெற்ற நடுத்தர வர்க்கத்தினராய் விளங்கினர். சமுதாயத்தின் அடிமட்ட தளத்தில் மண்டிக் கிடந்தவர்கள் அடிமைகள். அவர்கள் உயிரற்ற பொருட்களைப் போன்று வாங்கப்பட்டும், விற்கப்பட்டும், அடகு வைக்கப்பட்டும் பலவிதமான இன்னல்களுக்கு ஆட்படுத்தப்பட்டனர்.

### பொருளாதார வாழ்க்கை

விவசாயமே நாட்டுப் பொருளாதாரத்தின் முதுகெலும்பாகும். மாடுகளைக் கொண்டு ஏர் உழுது நிலங்களில் பயிர் விளைப்பதில் மக்கள் தனித்திறம் பெற்று விளங்கினர். ஏரில் பொருத்தப்பட்ட ஒரு குழாயின் மூலம் விதைகள் விதைக்கப்பட்டன. நீரை ஏரிகளில் சேமித்து வைத்துக் கால்வாய்கள் மூலமாக அந்நீரை வயல்களுக்குப் பயன்படுத்த அன்னார் கற்றிருந்தனர். ஹம்முராபிக்குப் பின்வந்த

நெபுகத்நேசர் என்ற ஓர் மன்னர் 140 மைல்கள் சுற்றளவு கொண்ட நீர்த்தேக்கம் ஒன்றை ஏற்படுத்திஞர் என்று கூறப்படுகிறது. தானியங்கள், பேரீச்சம் பழங்கள், திராட்சை, ஒலிவ மரம் (Olive Tree) முதலியவற்றைப் பாபிலோனியர்கள் பயிர் செய்தனர்.

நிலத்திலிருந்து செம்பு, இரும்பு, வெள்ளி, தங்கம், எண்ணெய், நெப்தா என்ற திராவகம் முதலியவற்றை அவர்கள் தோண்டியெடுத்துப் பயன்படுத்தினர். திராவகம் எளிதில் தீப்பிடிக்கக் கூடியது என்பதை அவர்கள் அறிவர். அதை நம்பாத அலெக்ஸாந்தர் என்ற கிரேக்க மன்னர் ஒரு சிறுவன்மீது அத் திரவத்தை ஊற்றி, நெருப்பைப் பற்றவைத்துப் பார்த்தார் எனக் கூறப்படுகிறது. உலோகத்திலிருந்து பல பொருட்களை உண்டாக்க அவர்களுக்குத் தெரிந்திருந்தது. தறிகளின் உதவி கொண்டு துணிகளை நெய்யவும், திகிரியின் உதவியால் பானைகளை வனையவும், சுடப்பட்டதும் சுடப்படாததுமான செங்கற்களால் வீடுகளைக் கட்டவும் அவர்கள் நன்கு உணர்ந்திருந்தனர்.

பாபிலோனியர்கள் வாணிபத்தில் நனி சிறந்தவர்கள். கழுதைகள் பூட்டப்பட்ட கைவண்டிகள் மூலமாகப் பண்டங்கள் ஏராளமாகப் பிற நாடுகளுக்குச் சென்றுகொண்டிருந்தன. கி.மு. 2100ஆம் ஆண்டுக்குப்பின் குதிரைகளும் வாணிபத்தில் பயன் படுத்தப்பட்டன. இந்தியா, எகிப்து, ஆசியா போன்ற பகுதிகளோடு வாணிபம் தழைத்தோங்கியது. அரசர்கள் வணிகர்களை ஓம்பி வளர்த்தனர். கொள்ளைக்காரர்களிடமிருந்து அவர்களைக் காப்பாற்றினர். பொன்னும், வெள்ளியும், வாணிபப் பரிவர்த்தனைக்குப் பயன்பட்டன. ஷெக்கல் (Shekel) என்பது மிகச் சிறிய வெள்ளி நாணயமாகும். அறுபது ஷெக்கல்கள் கொண்டது ஒரு மினுவாகும். அறுபது மினுக்கள் ஒரு டாலங் எனப்படும். இருபது முதல் முப்பது சதவீத வட்டிக்கும் கடன் தரப்பட்டது. திருப்பித் தராத கடன்காரர்கள் சொத்து பறிமுதல் செய்யப்பட்டது. அடிமைகளும் சொத்துகளைப் போன்றே விற்கவும், வாங்கவும் பயன்படுத்தப் பட்டனர். சொத்துரிமை அற்ற அவர்களை எந்தத் தொழிலிலும் ஈடுபடுத்தலாம். எவ்வித இன்னல்களுக்கும் உட்படுத்தலாம். அதை ஏனென்று கேட்க யாருக்கும் உரிமை கிடையாது. ஆனல், சில அடிமைகள் நிறையப் பொருள் சேர்த்துத் தங்களது சுதந்திரத்தை விலை கொடுத்து வாங்கிக்கொண்டனர்.

### சமுதாய ஒழுக்கம்

பாபிலோனிய சமுதாயத்தில் ஏற்றத் தாழ்வுகள் மிகுந்திருந்தன என்பதைக் கண்டோம். பிரபுக்களும், மதகுருமார்களும்

அங்கு உயரிய இடத்தைப் பெற்றிருந்தனர். ஆனால், அவ்வுயர் வகுப்பாரிடத்தே ஒழுக்கம் மருந்துக்கும் காணப்படவில்லை. 'பரத்தையர் நிறைந்த பாபிலோன்' என்று அந்நாட்டைப்பற்றி ஹெரடோடஸ் எனும் அறிஞர் வெறுப்போடு பேசுகிறார். பாபிலோனில் உள்ள வீனஸ் கோயிலில் ஒவ்வோர் ஆண்டும் ஓர் நூதன விழா நடைபெற்றது. அப்போது திருமணமானவர்களும், திருமணமாகாதவர்களுமான மகளிர் பலர் சாரிசாரியாய் கோயிலில் வந்தமர்ந்திருப்பர். கோயிலுக்கு வரும் ஆண்கள் தங்களுக்கு விருப்பமான ஓர் பெண்ணின்மீது ஒரு வெள்ளிக்காசை வீசியெறிவர். உடனே அம்மாது அங்ஙனம் தன்மீது காசு விட்டெறிந்தவனோடு சென்று ஓரிரவைக் கழிக்கவேண்டும். இங்ஙனம் அந்நியன் ஒருவனோடு ஒரு நாளைக்கு உறவு கொள்ளுதல் இன்றியமையாதது என்றும், அத்தகைய பேறு பெறாதவர்கள் வீனஸின் அருளைப் பெறாதவர்கள் என்றும் பாபிலோனியர்கள் நம்பினர். இத்தகைய அருளைப் பெறாத அருவருப்பான உருவுடைய பெண் பிறவிகள் பலராவர். இந்த வழக்கம் எங்ஙனம் தோன்றியதென்று தெரியவில்லை. கடவுளுக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளுதல் என்ற பழைய வழக்கினின்றும் இது ஏற்பட்டிருக்கக்கூடும். ஒவ்வொரு பெண்ணும் ஒரு நாளைக்குத் தன்னைக் கோயிலின் பிரகாரத்தில் கடவுளின் பிரதிநிதி ஒருவனுக்கு அர்ப்பணித்துக் கொள்வது என்பது ஒரு புனிதச் சடங்காகவே கருதப்பட்டது. அங்ஙனம் செய்தவர்கள் வேசிகள் அல்லர். பரத்தையர் கூட்டம் ஒன்று தனியே கோயிலில் வாழ்ந்து வந்தது. அவர்கள் தங்களை நிரந்தரமாக இறைவனிடம் அர்ப்பணித்துக்கொண்ட தேவர் அடியர்கள் என்று கருதிக் கொண்டனர். இத்தகைய புனிதப் பரத்தமைத் தொழிலை (Sacred Prostitution) கி.பி. 325-ல்தான் கான்ஸ்டன்டைன் (Constantine) என்னும் ரோமானிய மன்னர் ஒழித்துக் கட்டினார்.

பாபிலோனியச் சமுதாயத்தில் கற்பு நெறி பொதுவாகக் காப்பாற்றப்படவில்லை. திருமணத்திற்கு முன் ஒரு பெண் தூய்மையாக இருக்கவேண்டுமென்பது கட்டாயமில்லை. திருமணத்திற்கு முன்பு பலரிடம் கூத்தியராக வாழ்ந்த மகளிர் பலர். மகளிரைச் சந்தைகளில் ஏலமிடுவது மிகச் சாதாரணமாகப் பாபிலோனியாவில் நடந்த தொன்றாகும். இங்ஙனம் ஏலத்திலெடுக்கப்பட்ட பெண்டிரை, வாங்கியோர் திருமணம் செய்துகொள்வர். திருமணம் செய்து கொள்ளப்பட்ட பெண்ணுக்கு மகப்பேறு ஏற்படாவிட்டால் அவளது கணவன் அவளை விவாகரத்து செய்துவிடுவான். இவ்விதமாகவே தன்னிடம் விசுவாசமாக இல்லாத கணவனை விவாகரத்து செய்யும் உரிமை மனைவியருக்கும் இருந்தது. பல ஆண்டுகளாக ஒரு கணவன் மனைவியைப் பிரிந்திருந்தால், அவள் வேறோர் ஆண்

மகனோடு சென்று வாழும் உரிமையைப் பெற்றிருந்தாள். பொதுவாகப் பெண்கள் சுதந்திரமாக நடமாடினர். நீரிறைத்தல், மாவாட்டுதல், துணிநெய்தல், நூல்நூற்றல் போன்ற பல தொழில்களில் அவர்கள் ஈடுபட்டனர். பலர் கடைகள் வைத்து வியாபாரம் செய்தனர். ஒருசிலர் கல்வி கற்று எழுத்தர்களாய்ப் பணிபுரிந்தனர். இஃதெலாம் இருப்பினும் ஆணே குடும்பத்தின் தலைவனாகத் திகழ்ந்தான். பெண்களைச் செல்வந்தர்கள் தங்களது களியாட்டப் பொருள்களாகவே கருதினர். வீட்டின் ஒரு மூலையில் அவர்களை அடைத்து வைத்தனர். ஏழைக் குடும்பங்களில் பெண்கள் அடிமைகளைப்போல நடத்தப்பட்டனர். பிள்ளை பெறும் எந்திரங்களாகவே அவர்கள் பெரும்பாலும் கருதப்பட்டனர்.

### சமயம்

பாபிலோனியர்களுடைய அரசு சமயச் சார்புடையது ஆகும் (Theocratic). அங்கே சமய நம்பிக்கை மிகவும் வேரூன்றிக் கிடந்தது. சமயக் குரவர்கள் தனித் தலைமையுடன் விளங்கினர். அவர்களால் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் மட்டுமே மன்னர்களாகப் பதவி ஏற்க முடிந்தது. இறைவனின் பகராளாகவே (Representative) மனிதன் கருதப்பட்டான். இறைவனின் பெயராலேயே அரசன் கோலோச்சினான். கடவுளின் பெயரிலேயே வரிகள் வசூலிக்கப்பட்டன. அங்ஙனம் வசூலிக்கப்பட்ட பொருளின் பெரும் பகுதி கோயில்களுக்கென்றே செலவிடப்பட்டன. அடிமைப் படுத்தப்பட்ட நாடுகளினின்றும் கிடைத்த ஏராளமான பொருள்களும்கூட கோயில்களின் சொத்துகளாயின. ஒவ்வொரு நிலக்கிழாரும் விளைச்சலின் ஒரு பகுதியைக் கோயிலுக்குத் திறையாக வழங்க வேண்டும். அங்ஙனம் திறை செலுத்தப்படாத நிலங்கள் கோயிற் பூசாரிகளுக்குச் சொந்தமாயின. பூசாரிகளின் செல்வம் வளர்மதிபோல வளர்ந்துகொண்டேயிருந்தது. அவர்கள் ஏராளமான அடிமைகளை வைத்துக்கொண்டு ஆடம்பர வாழ்க்கை வாழ்ந்தனர்; வணிகர்களுக்கு வட்டிக்குக் கடன் கொடுத்தனர்; ஏழைகளுக்கு வட்டியின்றிக் கடன் வழங்கினர். நாட்டின் நீதிபதிகளாகவும், வழக்குரைஞர்களாகவும் பணியாற்றினர்; அரசியல், வாணிபம் சம்பந்தமான பத்திரங்களையெல்லாம் எழுதித் தந்தனர். அவர்களைப் பகைத்துக்கொள்ள மன்னர்களும் அஞ்சினர். நெற்றி வியர்வை நிலத்தில் சிந்த உழைத்துப் பொருளீட்டுவது வணிகர்களின் கடமையாயிருக்க, அதை அநுபவிக்கும் உரிமையைக் குருமார்களே பெற்றிருந்தனர் என்றால் அது மிகையாகாது. பாபிலோனியர்கள் எண்ணற்ற கடவுளர்களை வழிபட்டனர். ஏறக்குறைய 65,000 தெய்வங்களை அவர்கள் தொழுதேத்தியதாகத்

தெரிகிறது. ஒவ்வொரு கிராமத்திற்கும் கிராமதேவதைகள் இருந்தன. சூரியக் கடவுளின் பெயர் 'ஷமாஸ்' (Shamas) என்பது. காற்றுத் தெய்வம் 'அனு' (Anu) வாவார். பூமித் தேவதை பெல் அல்லது பால் (Bel or Ball) என அழைக்கப்பட்டது. ஒவ்வோர் குடும்பத்திற்கும் குலதெய்வம் ஒன்று உண்டு. அதேபோல தனி மனிதர்களுக்கும் தனித்தனியே 'இஷ்டதேவதைகள்' உண்டு. இவை அனைத்துக் கடவுளுக்கும் தலைமைத் தெய்வம் மார்டக் (Marduk) எனப்படுவார். இஷ்டார் (Ishtar) எனும் தேவதை பாபிலோனியரின் இறைவியாகும். அப்பெண் தெய்வம் தாயாகவும், அதே சமயத்தில் போர்க் கடவுளாகவும், காமதேவதையாகவும் கருதப்பட்டது. நம்நாட்டு ரதி தெய்வத்திற்கு அதனை ஒப்பிட லாம். 'அர்த்தநாரீசுவரர்' வடிவிலும் அது வணங்கப்பட்டது. விரும்பியவர்களோடு காமலீலைகள் புரிந்துகொண்டும் அதே சமயத் தில் கன்னியாகவும் வாழுகின்ற ஓர் தெய்வமாக அது மதிக்கப் பட்டது.

உலக உற்பத்தியைப்பற்றி சுமேரியர்கள் கொண்டிருந்த கருத் தையே பாபிலோனியர்களும் கொண்டிருந்தனர். அப்சு(Apsu) என்ற ஆண்சக்தியும், டியமட் (Tiamet) என்ற பெண் சக்தியும் இணைந்து பலதெய்வங்களைப் பெற்றெடுத்தனர். ஆனால், விரைவிலேயே அத் தெய்வங்களையெல்லாம் டியமட் கொன்று குவிக்க ஆரம்பித்தார். எங்கும் குழப்பம் தாண்டவமாடியது. உடனே மார்டக் எனும் பெருந் தெய்வம் தோன்றி, டியமட்டைக் கொன்று, அதனை இரண்டாகப் பிளந்து ஒரு பகுதியை தேவலோகமாகவும், இன்னொரு பகுதியைப் பூவுலகமாகவும் படைத்தார். பாபிலோனியர்களின் பிரம்மதேவனாக அவர் விளங்கினார். ஒரு பிடி களிமண்ணை எடுத்து அதிலிருந்து மனிதனை அவர் படைத்தார். ஆதியில் மனிதன் விலங்கு போலவே வாழ்ந்தான். மீன் வடிவமான ஓயனஸ் (Oannes) என்ற மச்ச மனிதன் மூலம் அவன் கல்வியையும், கலைகளையும் கற்றுக்கொண்டு நாகரிக வாழ்க்கையை வாழத் தொடங்கினான். விரைவிலேயே அவன் ஏராளமான பாவங்களைச் செய்யலானான். அதனால் வெகுண்டெழுந்த தேவர்கள் மாபெரும் வெள்ளத்தை ஏற்படுத்தி யாவரையும் அழித்தனர். ஆனால், ஷமாஷ் (Shamash) என்ற ஒரே ஒருவர் மட்டும் விழிப்புடன் தான் செய்து வைத்திருந்த மரவீட்டின் மூலம் வெள்ளத்தின் அழிவுக் கரங்களி லிருந்து தப்பி, அது வடிந்தபின் மீண்டும் வெளிப்போந்து உலகத்தில் மக்களைப் பெருக்கினான். இப்போது உலகில் வாழ்பவர் அனைவரும் ஷமாஷின் சந்ததியரே என்ற கருத்து நிலவி வந்தது.

டாமஸ் (Tammuz) என்ற தாவரக் கடவுளைப் பற்றிய கதையும் கற்பனை செறிந்த ஒன்றாகும். இயா (Ea) என்ற முழுமுதற் கடவுளின் மகன் டாமஸ். அவன் உலகமாகிய புல்தரையின்மீது தனது ஆடுகளை மேய்த்துக்கொண்டிருந்தபோது இஷ்டார் என்ற தேவதை அவன்மீது மோகம் கொண்டு அவனை மணந்துகொள்ள விரும்பியது. அப்போது கரடி ஒன்று டாமஸைக் கொன்றுவிட்டது. அதன்பின் டாமஸின் உயிர் அரளு (Aralu) என்ற நரகத்துக்குப் போய் விட்டது. அதனைத் தேடி இஷ்டார் என்ற தெய்வமும் அங்குச் சென்றது. நரகத்தின் அதிபதியான எரஸ்கிகால் (Ereshkigal) என்ற அதன் சகோதரி பொறாமையின் காரணமாக இஷ்டாரைச் சிறை செய்தது. உற்பத்திக்கெல்லாம் மூல காரணமான இஷ்டார் சிறை செய்யப்பட்டவுடன் வானம் இருண்டது. வையம் வறண்டது. செடி, கொடிகள் வாடின. மனிதனும் விலங்குகளும் உற்பத்தித் தொழிலையே மறந்துவிட்டனர். எனவே, கடவுளர்கள் யாவரும் ஒன்று சேர்ந்து எரஸ்கிகாலிடம் முறையிட்டு இஷ்டாரைச் சிறை மீட்டனர். இஷ்டாரும், டாமஸும், உலகிற்குத் திரும்பியவுடன் எங்கும் பசுமை திரும்பியது. உயிர்கள் இனப் பெருக்கத்தில் ஈடுபட்டன. இந்தக் கதையானது தாவரங்கள் உலகில் எப்படி மடிந்து மீண்டும் மீண்டும் உற்பத்தியாகின்றன என்பதை மறைமுக மாகப் புலப்படுத்துகிறது.

பாபிலோனியர்கள் இன்பம் நிறைந்த சொர்க்கத்திலும், துன்பம் தோய்ந்த நரகத்திலும் நம்பிக்கை கொண்டிருந்தனர். பாவம் செய்த உயிர்கள் நரகத்தில் இடர்ப்படுவதைத் தடுக்க அன்றைய மக்கள் உண்டியையும், உணவையும் தமது முன்னோர்களுக்குப் படைக்கின்ற பழக்கம் பாபிலோனியர்களிடையே காணப்பட்டது. இறந்தவர்களைப் பெரும் பானைகளில் புதைப்பதும் சில சமயங்களில் எரிப்பதும் அவர்களது வழக்கம். ஆனால், இறந்த சடலங்களைப் பதனம் செய்யும் பழக்கம் அவர்களிடையே காணப்படவில்லை.

பாபிலோனியர்கள் கடவுளைப் பலவிதமாக வணங்கினர். உணவும், பழங்களும் தெய்வங்களுக்குப் படைக்கப்பட்டன. மிருகங்கள் பலியிடப்பட்டன. பலியிடுதலைச் சரிவரச் செய்ய குருமார்கள் நியமிக்கப்பட்டனர். அவர்களே தெய்வங்களுக்கு வழிபாடு நடத்தினர். ஊர்வலமாகவும் அவற்றையும் எடுத்துச் சென்றனர். இறைவனை நினைத்து ஜபம் செய்வது அவர்களது முக்கிய வழிபாட்டு முறையாகும். மந்திரங்கள் எழுதப்பட்ட தாயத்துகள் மூலம் அவர்கள் தங்களைப் பேய், பிசாசுகளினின்றும் காத்துக்கொண்டனர். சகுனங்களிலும், கோள்களின் தீய சக்தி களிலும் அவர்களுக்கு வெகுவான நம்பிக்கையிருந்தது. தெய்வங்

களுக்குப் பலியிடப்பட்ட மிருகங்களின் ஈரல்களையும், குடல்களையும் கூர்ந்து நோக்கி அதன்மூலம் பலியிட்டவனின் எதிர்காலத்தைக் கணக்கிட்டனர். குறி சொல்பவர்களும், சகுனம் பார்ப்பவர்களும், ஜாதகம் கணிப்பவர்களும் நாட்டில் மிக்க செல்வாக்குடன் திகழ்ந்தனர். மிக உன்னதமானதோர் நாகரிகத்தைப் படைத்த பாபிலோனியர்கள் இங்ஙனம் மூட நம்பிக்கைகளால் சூழப்பெற்று, தன்னம்பிக்கை இழந்து எதற்கெடுத்தாலும் அஞ்சுகின்ற கோழைகளாக நாளடைவில் மாறினர். ஒரு நாயின் ஓட்டத்தைக் கொண்டு ஒரு மன்னனின் தலைவிதியை நிர்ணயிக்கலாம் என்று அவர்கள் நம்பினார்கள் என்றால் மூடநம்பிக்கைகள் எவ்வளவு தூரம் அவர்களை ஆட்டிப்படைத்தது என்பது சொல்லாமலே போதறும்.

**இலக்கியம்**

சுமேரியர்களிடமிருந்து எழுத்துக் கலையைக் கற்றுக்கொண்டவர்கள் பாபிலோனியர்கள். முக்கோண வடிவில் செதுக்கப்பட்ட முனையைக் கொண்ட எழுதுகோலைக் கொண்டு மண்பலகையின்மீது எழுத்துகளை எழுதி அதை உலர வைத்தனர். அல்லது நெருப்பால் சுட்டனர். இங்ஙனம் உண்டாக்கப்பட்ட களிமண் பலகைகள்மீது மணலைத் தெளித்து அதன்பின் அதை மண்ணால் ஆகிய இன்னோர் உறையில் போட்டு வைத்தனர். இத்தகைய உறைகள் முத்திரை பதிக்கப்பெற்று வேறிடங்களுக்கு அனுப்பப்பட்டன. இத்தகைய களிமண் பலகைகள் நிறைந்த நூலகங்கள் பல நாடெங்கும் மலிந்து கிடந்தன. பாபிலோனிய எழுத்துகளில் 300 குறியீடுகள் உள்ளன. அவை ஒவ்வொன்றும் ஓர் சொற்பகுதியைக் குறிக்கும். இதைக் கொண்டு அவர்கள் கதைகளையும் வரலாற்று நூல்களையும் ஏராளமாக எழுதியுள்ளனர். பெரோஷூஸ் (Berosus) என்ற பாபிலோனிய வரலாற்றாசிரியர் மிகப் புகழ் வாய்ந்தவர். அவர் கி.மு. 2800-ல் வாழ்ந்தவர். கில்கமிஷ் (Gilgamesh) என்பவரைப் பற்றிய கற்பனை வளம் செறிந்த கதை அஷூர்பானிபால் நூலகத்திலிருந்து கிடைத்துள்ளது. கில்கமிஷை மகாபாரதத்தில் வருகின்ற பீமனுக்கு ஒப்பிடலாம். பீமனைப் போல பலம் கொண்டிருந்த அவன் கன்னியரைக் கற்பழித்தல், மனைவியரை மயக்கிக் கணவர்களிடமிருந்து பிரித்தல் போன்ற அடாத செயல்களில் ஈடுபட்டான். இதைப் பொறுத மக்கள் இஷ்டார் (Ishtar) எனும் தேவதையிடம் முறையிட்டனர். இஷ்டார், அருரு (Aruru) என்ற கில்கமிஷின் தாயிடம் வேண்டி என்கிடு (Enkidu) என்ற மற்றொரு பலமிக்க தெய்வத்தை உண்டாக்கி அதை கில்கமிஷின் மீது ஏவிவிட்டார். தன் நண்பனான என்கிடுவை மீண்டும் உயிர்ப்பிக்க மரணத்தை வெல்லும் சஞ்சீவி மூலிகையைத் தேடிக் கில்கமிஷ், ஷமேஷ் என்ற கடவுளிடம்

ஏகினர். சஞ்சீவியைப் பெற்றுத் திரும்பும் வழியில் அவர் குளித்துக் கொண்டிருக்கையில் பாம்பு ஒன்று அந்த மூலிகையைத் திருடிச் சென்றுவிட்டது. கோபமடைந்த கில்கமிஷ் கோயில் கோயிலாகச் சென்று என்கிடுவைக் காணவேண்டுமென்று பிரார்த்தித்தார். என்கிடு ஒருகணம் அவர்முன் தோன்றி தான் நரகத்தில் பட்டுக் கொண்டிருக்கும் இன்னல்களை ஒப்புவித்துவிட்டு மறைந்துவிட்டார். அதோடு கதை முடிகிறது. மரணமிலாப் பெரு வாழ்வு பற்றியும், நரகத்தின் இடர்கள் பற்றியும் கில்கமிஷுக்கும், ஷமேஷனுக்கும், என்கிடுவுக்கும் நடைபெறும் வாக்குவாதங்கள் பல தத்துவங்களை உள்ளடக்கி இருப்பதாகக் கூறப்படுகிறது.

**கலையும் அறிவியலும்**

பொருளீட்டுவதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்த பாபிலோனியர்களிடம் படைப்பாற்றல் (Creativity) நிறைந்து விளங்காவிடினும் ஓரளவு அழகுணர்ச்சி காணப்பட்டது. நன்கு மெருகிடப்பட்ட நேர்த்தியான கற்கள், பொன்னாலும், வெள்ளி யாலும், செம்பாலும் செய்யப்பட்ட அழகிய ஆபரணங்கள், ஆடம்பர மிக்க திரைச்சீலைகள், மேஜைகள், படுக்கைகள், நாற்காலிகள் முதலியன அவர்களின் அழகுணர்ச்சிக்கு ஓர் பெருஞ் சான்றாக விளங்குகின்றன. குழல், யாழ், மத்தளம், துத்தேரி, தாளக் கருவிகள் போன்ற பல இசைக் கருவிகளைப் பயன்படுத்தி அவர்கள் இசைக்கலையை வளர்த்தனர். கூட்டமாகவும், தனியாகவும் மெல்லிசை மகளிர் கோயில்களையும், மாளிகைகளையும் தங்களது இசை ஒலியால் நிரப்பினர். ஓவியத்தில் அன்னர் அதிகம் கருத்தைச் செலுத்தவில்லை. எகிப்தியர்களைப் போன்று வண்ணந் தீட்டுவ திலும், சுவர் ஓவியம் வரைவதிலும் அவர்கள் சிறப்படையவில்லை. சிற்பக்கலையிலும் அவர்கள் அவ்வளவாக அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. ஒரே மாதிரியான முகங்களும், முகபாவனைகளுமே எல்லாச் சிற்பங்களிலும் காணப்படுகின்றன. அவர்களது கட்டடங் கள் மண்ணாலானவை. நடுவில் முற்றமும், நாற்புறமும் அறைகளும் கொண்டு அவை விளங்கின. பலகணிகள் அவற்றில் ஒன்றும் இல்லை. கோயில்களும் வீடுகள் போன்றே கட்டப்பட்டிருந்தன. அவற்றுக்கருகே ஸிக்குராட் (Ziggurat) என்ற உயர்ந்த கோபுரங்கள் கட்டப்பட்டன. அவற்றில் சில சமயம் ஏழுமாடங்கள் இருந்தன. ஒவவொரு மாடமும் ஒவ்வொரு நட்சத்திரத்தின் பெயரைக் கொண்டு விளங்கியது. வானியல் ஆராய்ச்சிக்கும் அவை பயன்பட்டிருக்கலாமெனத் தோன்றுகிறது. ஏனெனில், ஒவ்வொரு மாடியின் நிறமும் ஓர் கோளின் நிறத்தால் பூசப்பட்டிருந்தது. கோபுரத்தின் அடித்தளம் சனிக்கு ஒதுக்கப்பட்டிருந்தது. எனவே,

அதற்குக் கறுப்பு வண்ணம் பூசப்பட்டிருந்தது. அடுத்த வெண்மை நிற மாடி வெள்ளிக் கிரகத்திற்கு உரியதாய் விளங்கியது. மூன்று, நான்கு, ஐந்து ஆறு, ஏழாவது மாடிகள் முறையே வியாழன், புதன், சந்திரன், சூரியன் ஆகியவற்றுக்கு ஒதுக்கப்பட்டு அதற் கேற்ற வண்ணம் பூசப்பட்டிருந்தது.

பாபிலோனியர்கள் கணித அறிவில் சிறந்து விளங்கினர். வட்டம் 360 பாகைகளாகப் பகுக்கப்பட்டிருந்தது. பன்னிரண்டு பன்னிரண்டாக எண்ணுகின்ற வழக்கத்தைக் கொண்டிருந்தனர். கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் ஆகியவற்றை அவர்கள் எளிதில் செய்யக் கற்றிருந்தனர். வரைபடக் கணிதத்தை அவர்கள் நன்கு பேணி வளர்த்தனர். வானியலில் அவர்கள் பெரிதும் அக்கறை செலுத்தினர். கோள்களைத் தெய்வமாக அவர்கள் வழிபட்டனர். அவற்றின் நிலையினைக் கொண்டு மனிதனின் எதிர் காலத்தைக் கணிக்க அவர்கள் முற்பட்டனர். இங்ஙனம் ஜாதகக் கலையை முதன்முதலில் வளர்த்தவர்கள் பாபிலோனியர்களேயாவர். கோள்களின் போக்கையும், அவற்றின் பாதையையும் துல்லியமாகக் கணித்த அவர்கள் கிரஹண காலங்களையும் திட்டமாகக் கணித்து வெளியிட்டனர். பூமியின் பாதை முட்டை வடிவில் அமைந்திருப் பதையும், அது செல்லும் 12 முக்கிய இடங்களையும் அன்னார் அறிந் திருந்தனர். அவர்களது ஆண்டு 360 நாட்களைக் கொண்டது. 12 மாதங்கள்கொண்டது ஓர் ஆண்டு. ஒரு மாதத்துக்கு நான்கு வாரங் கள் என்றும், நாள் ஒன்றுக்கு 12மணிகள் என்றும், மணியொன்றுக்கு 30 நிமிடங்கள் என்றும் கணக்கிட்டனர். சந்திரன் உதித்த ஒரு முறைக்கும் அடுத்த முறைக்கும் இடைப்பட்ட காலத்தை அவர்கள் ஒரு நாளெனக் கருதினர். அவர்களது கால அட்டவணை ஏறக் குறைய நம்முடையது போன்றே அமைந்திருந்தது எண்ணி வியத்தற்பாலதாகும்.

மருத்துவக் கலையில் அவர்கள் அதிகம் முன்னேறவில்லை. கசப்பான கஷாயங்களைக் கொண்டு நோய்களைப் போக்க முதலில் அன்னார் முயன்றனர். முடியாவிடில் மந்திர தந்திரங்களாலேயே நோய்களைக் குணமாக்க முன்வந்தனர். பேய்களாலேயே நோய்கள் வருகின்றனவென்றும், மந்திரங்களால் அவற்றை ஓட்டிவிட்டால் நோய்கள் தானே குணமாகிவிடுமென்றும் அவர்கள் நம்பினர்.

### உலக நாகரிகத்துக்குப் பாபிலோனியாவின் பரிசு

சமயத் துறையில் யூதர்கள் கொண்டிருந்த பழக்க வழக்கங் களும், புராணக் கதைகளும் பாபிலோனியர்களிடமிருந்து கடன் வாங்கப்பட்டவையே. ஐரோப்பிய நாகரிகம் பாபிலோனியர்களுக்

குப் பெரிதும் கடப்பாடுடையது ஆகும். கிரேக்கர்களின் கணிதம், வானியல், மருத்துவம், இலக்கணம், தொல்பொருள் ஆராய்ச்சி (Archaeology), வரலாறு, தத்துவம் போன்ற துறைகளுக்குப் பெரிதும் முன்னேடிகளாய் விளங்கியவர்கள் பாபிலோனியர்களே. உலோகங்கள், கோள்கள், நிறுத்தல், நீட்டல் அளவைகள், இசைக் கருவிகள், இவைகளின் கிரேக்கப் பெயர்களும் பாபிலோனியப் பெயர்களும் ஏறத்தாழ ஒன்று என்றே கூறலாம். பாபிலோனியர்கள் கட்டிய ஸிக்குராட் என்ற நீண்ட கோபுரத்தை ஒட்டியே பிற்கால முகமதியர்களும் இடைக்கால ஐரோப்பியர்களும் நெடிய கோபுரங்களைக் கட்டினர். ஹம்முராபியின் சட்டத் தொகுதி, பண்டைய சமுதாயங்களின் சட்டங்களுக்கெல்லாம் அடிப்படையாய் அமைந்தது. அராபியர்கள் தங்களது அறிவியல் அறிவைப் பாபிலோனியர்களிடமிருந்தே பெற்றனர். இவர்களைப் போரில் புறங்கண்ட அசிரியர்கள் அவர்தம் நாகரிகத்தையும், பண்பாட்டையும் தங்கள் பேரரசின் பல பாகங்களிலும் பரப்பினர். பின்னர் வந்த பாரசீகர்களும், கிரேக்கர்களும் அதை மேலும் ஆசியாவிலும், ஐரோப்பாவிலும் பரவச் செய்தனர். எனவே, பாபிலோனிய நாகரிகம் சீர்குலைந்தது என்றாலும் அதன் கூறுபாடுகள் மாய்ந்திடாமல் ஏனைய நாகரிகங்களினூடே சென்று, அவை நிலை பெற்றுவிட்டன.

## அசிரிய நாகரிகம்

சுமேரியர்களுக்குப் பிறகு மெசபடோமியாவில் முற்றிலும் தனிப்பட்டதோர் நாகரிகத்தை ஏற்படுத்தியவர்கள் அசிரியர்களேயாவர். பாபிலோனிய நாகரிகத்தினின்றும் அது முற்றிலும் வேறுபட்டது. பாபிலோனிய நாகரிகம் வாணிபத்தை அடிப்படையாகக் கொண்டது. ஆனால், அசிரிய நாகரிகமோவெனில் விவசாயத்தை முதுகெலும்பாகக் கொண்டது. எனினும், அசிரியர்கள் பாபிலோனியர்களின் நாகரிகத்தைப் பொன்னேபோல் பாதுகாத்துத் தம்முடைய நாகரிகத்தோடு இணைத்துக்கொண்டனர். ஆரியர்கள் தம்மால் வெல்லப்பட்ட திராவிடர்களின் நாகரிகத்தையும், கிரேக்கர்கள் தம்மால் தோற்கடிக்கப்பட்ட ஈஜியர்களின் நாகரிகத்தையும் அழித்துவிடாமல், எங்ஙனம் தம்மகத்தே உட்கொண்டு மேலும் பெருக்கினர்களோ அதுபோலவே அசிரியர்களும் தம்மால் வெல்லப்பட்ட பாபிலோனியர்களின் நாகரிகத்தைத் தம் உடைமையாக ஆக்கிக்கொண்டனர்.

### *அசிரியப் பேரரசின் வரலாறு*

மெசபடோமியப் பிரதேசத்தில் அசிரியர்களின் தலைமை ஏறக்குறைய கி.மு. 1300 முதல் கி.மு. 606ஆம் ஆண்டுவரை

ஈடும் எடுப்பு மற்றுத் திகழ்ந்தது. கீழைநாட்டு ரோமானியர்கள் என அழைக்கப்படுகின்ற அசிரியர்கள் ஏறக்குறைய கி.மு.3000ஆம் ஆண்டில் டைகிரிஸ் நதியின் வடபாகத்திலும், பாபிலோனியாவின் வடமேற்கிலும் உள்ள பிரதேசத்தில் குடியேறினர். அவர்கள் ஒருவகை செமிடிக் (Semitic) இனத்தவர்களாவர். அசூர் (Asur) என்ற தெய்வத்தை வணங்கியதால் அவர்களுக்கு அசிரியர்கள் என்ற பெயர் ஏற்பட்டது. பல நூற்றுண்டுகள் வரை அவர்கள் அண்டை நாடுகளோடு ஓயாது போரிட்டுத் தம்மைக் காத்துக்கொள்ள வேண்டிய நிலையிலிருந்தனர். அவர்கள் வாழ்ந்த இடம் மலைப்பாங்கானது; விவசாயத்துக்குத் தகுதியற்றது. எனவே தான் அவர்கள் அண்டை நாடுகளில் தமது ஆதிக்கத்தைப் பரப்ப விரும்பினர். நாடு பிடிக்கும் ஆசை அவர்களிடம் இயல்பாகவே வளரலாயிற்று. போர்க்குணமும் அவர்கள்பால் பெரிதும் ஓங்கலாயிற்று. அவர்களது குதிரை வீரர்களையும் தேர்ப்படை வீரர்களையும் கண்டு அஞ்சாதார் இலர் எனலாம். அவர்கள் வாழ்ந்த இடத்தில் இரும்பு நிறையக் கிடைக்கப்பெற்றதால் அதைக் கொண்டு அவர்கள் வில், வேல், வாள் முதலிய போர்க் கருவிகளைச் செய்துகொண்டு மிகக் கடுமையாகப் போர் புரிந்தனர். இத்தகைய இரும்புப் போர்க் கருவிகளின் முன் பாபிலோனியர்களின் வெண்கலக் கருவிகள் எதிர் நிற்க முடியவில்லை. விரைவிலேயே அவர்கள் பாபிலோன் நகரத்தைக் கைப்பற்றினர் (கி.மு. 1200). அதற்கு முன்பே டைகிரிஸ் நதியின் கரையில் நினெவா (Nineveh) என்ற தலைநகரை அமைத்து ஒரு சுதந்திர நாட்டைத் தோற்றுவித்தனர். நினெவாவில் கி.மு. 12ஆம் நூற்றுண்டில் ஆண்ட பல அரசர்களும் போர் புரிவதை ஒரு கடமையாகக் கொண்டிருந்தனர். அவர்களுள் முதலாம் ஷால்மெனேசார் (Shalmanesar) என்பவர் மிகச் சிறந்த போர் வீரராவார். அவர்தான் தமது நாட்டைப் பாபிலோனியர்களின் ஆதிக்கத்திலிருந்து மீட்டவர். அவர் கி.மு. 1200ஆம் ஆண்டளவில் பாபிலோனியாவைக் கைப்பற்றினுர். அவருக்குப் பின் நூற்றைம்பது ஆண்டுகள் கழித்து திக்லாத்பிலேசார் (Tiglathpilasar) என்ற மன்னர் பெரும்புகழுடன் ஆட்சி புரிந்தார். அவர் ஹிட்டைட்டுகள் எனும் கூட்டத்தினரை முற்றிலும் முறியடித்து பிப்ளஸ் (Piples), செடான் (Sedan) போன்ற நகரங்களை வென்று தம் வசமாக்கிக்கொண்டார். வேட்டையாடுவதில் அவர் அளவற்ற விருப்ப முடையவர். ஆயிரம் சிங்கங்களை அவர் கொன்றதாகக் கூறப்படுகிறது. அவரது காலத்திற்குப்பின் அசிரியப் பேரரசு அளவில் சுருங்கியது. மேற்கே பிடிபட்ட நாடுகளனைத்தும் பறிபோயின. இச் சமயத்தில் நல்ல வேளையாக கப்பொடீசியாவின் (Cappadesia) பல இரும்புச் சுரங்கங்கள் அவர்கள் வசமாயின. அவ்விரும்பினுலாய பல போர்க் கருவி

களைக் கொண்டு அசிரியர்கள் மேலும் முன்னேற ஆரம்பித்தனர். இரண்டாம் சார்கன் என்பார் கி.மு. 725-ல் வடக்கேயுள்ள ஆர்மீனியர்களை வென்று ஓர் புதிய பேரரசைத் தோற்றுவித்தார். இப் பேரரசு ஒரு நூற்றுண்டுக்கு மேல் நிலேத்திருந்தது. பாபி லோனியா, ஈழம், எகிப்து ஆகிய நாடுகளை வென்று அவர் தமது பேரரசோடு இணைத்துக்கொண்டார். யூதர்களும், சைப்ரஸ் தீவு கிரேக்கர்களும் அவரிடம் அடி பணிந்தனர். அவர் காலத்தில் இலக்கியமும், கலைகளும், வாணிபமும் வளர்ச்சியடைந்தன. அவரது மகனுன சென்னகரீப் (Sennacherib) ஒரு மகாவீரர். அவர் காலத்தில் பாபிலோனியர்கள் கலகஞ் செய்தனர். அவர் களை சென்னகரீப் மிகக் கடுமையாகத் தண்டித்தடக்கினுர். பாபி லோனியாவில் தனது மகனை ஆட்சிப்பீடத்தில் அமர்த்தினுர். அவர் காலத்து நினெவா கண்கவர் கட்டடங்கள் நிறைந்த பெரு நகரமாய் மாறியது. அந் நகருக்குக் குடி நீர் அண்மையில் உள்ள குன்றுகளின் உச்சியிலிருந்து நீண்ட குழாய்களின் மூலம் கொண்டுவரப்பட்டது. மேலும் இந்தியாவிலிருந்து பருத்தி யைக் கொணர்ந்து அடிமைகளைக் கொண்டு அதைச் சாகுபடி செய்வித்தவரும் அவரே. இறுதியில் அவரை அவரது புதல்வர் களே கொன்றுவிட்டனர்.

அவரது பேரரான அசுர்பானிபால் (Ashurbanipal) அசிரிய மன்னர்கள் யாவரிலும் சிறந்தவர். அவர் சிறந்த போர் வீரர் மட்டுமின்றி, கல்வி, கேள்விகளிலும் வல்லவர். 20,000-க்கும் மேற்பட்ட நூல்களைக் கொண்ட ஓர் நூல் நிலையத்தை அவர் அமைத்தார். நினெவா நகரம் புலவர்களின் பூம்பொழிலாகத் திகழ்ந்தது. பல்வேறு மொழி பேசும் மக்களும் அந்நகரில் வாழ்ந் தனர். அசிரியாவின் புகழ் அக் காலத்தே உச்ச நிலையை அடைந்திருந்தது. எகிப்து, சிரியா, பாபிலோனியா, ஆசியா மைனர் போன்ற இடங்களில் அசிரிய ஆட்சி பரவியிருந்தது. அவரது மரணத்துக்குப்பின் நாடு குழப்பத்தில் ஆழ்ந்தது. நாட்டில் பலர் அரசைக் கைப்பற்றப் போட்டியிட்டனர். இந் நிலையைப் பயன்படுத்திக்கொண்டு சாலடியர்கள் எனும் வகுப் பினர் நினெவா நகரைத் தாக்கி கி.மு. 600ஆம் ஆண்டில் அதைக் கைப்பற்றிக்கொண்டனர். விரைவில் பாபிலோனிய நகரமும், அவர்கள் வசமாயிற்று. அசிரிய ஆட்சியின் மாட்சி அதோடு வீழ்ந்துவிட்டது.

*அரசியல் நிலை*

அசிரியப் பேரரசர்கள் போர் செய்வதில் மட்டுமின்றி நாட்டை ஆட்சி புரிவதிலும் வல்லவர்களாய்த் திகழ்ந்தனர். அவர்களது

பரந்த பேரரசு பல மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஓர் தலைவனை அரசர் நியமித்தார். மத்திய அரசின் தலையீடு அதிகமின்றி மாநிலங்கள் ஓரளவு சுயேச்சையுடன் திகழ்ந்தன. திறைகளை ஒழுங்காகச் செலுத்தி வருகின்ற வரையில் மாநிலத் தலைவர்களின் போக்கில் மன்னர்கள் தலையிடுவது இல்லை. இத்தகைய சுயேச்சையைப் பயன்படுத்திக் கொண்டு பல மாநிலத் தலைவர்கள் அடிக்கடி கலகம் விளைவித்தனர். இத்தகைய கலவரங்களை ஒழிக்க திக்லாத்பிலாசார் (Tiglat-Pilasar) என்ற மன்னர் தான் கைப்பற்றிய மாநிலத்தின் குடி மக்களை வேற்று மாநிலங்களில் குடியேற்றி அந்நியர்களைக் கொணர்ந்து வெல்லப்பட்ட மாநிலங்களில் குடியேற்றம் செய்யும் வழக்கத்தை மேற்கொண்டார்.

மன்னரே நாட்டின் தனிப்பெருந் தலைவராவார். அவரே படைகளின் சேனாதிபதியுமாவார். வலிமை மிக்க குதிரைப் படை, தேர்ப் படை, காலாட் படை ஆகிய முப்படைகளும் அவரது நேரடி அதிகாரத்தில் இயங்கின. போர்க்களத்தில் பெரியதோர் தேர் ஒன்றின் மீதமர்ந்து, படைகளை நடத்திச் சென்று போர் புரிந்தார். போரையே ஒரு பொழுதுபோக்காகக் கொண்ட மன்னர்கள் பல்வேறு முறைகளைத் திறமையாக மேற்கொண்டனர். மின்னல் வேகத்தில் எதிரிகளைத் தாக்கி அவர்களைத் திணறடித்தல், அவர்களுடைய போர் முறையின் சிறப்பியல்லாகும். அவர்கள் பயன்படுத்திய இரும்பு ஆயுதங்கள் ஏனையோருக்குச் சிம்ம சொப்பனமாய் விளங்கின. வீரர்கள் கட்டுப்பாடு மிகுந்தவர்களாய் போர்க்களத்தில் இறுதிவரை அணிகுலையாமல் நிற்பதில் அவர்களுக்கு நிகர் அவர்களே எனலாம். மதில்களை இடிக்க அவர்கள் இரும்பு முனைகளைக் கொண்ட தகர்க் கருவிகளைப் பயன்படுத்தினர். சக்கரங்களைக் கொண்ட வண்டிகளில் பொருத்தி அவற்றை வேகமாக மதில்கள்மீது செலுத்தும் கலையை அவர்கள் தெரிந்து வைத்திருந்தனர். நகர்ந்து செல்லும் கோபுரங்களின் உச்சியின் மீது நின்றுகொண்டு விற்படை வீரர்கள் மதில்மீது இருந்த எதிரிகள்மீது அம்பு மாரி பொழிந்தனர். மதில்மீது இருந்த வீரர்களும், எரிகின்ற பந்தங்களையும், பாறைகளையும் மற்றும் துர்நாற்றம் வீசுகின்ற பல்வேறு பொருட்களையும் முற்றுகையாளர்மீது வீசியெறிவது வழக்கம். அசிரியர்கள் ஈவு இரக்கமற்ற கொடியவர்கள். மக்களைக் கொலை செய்வது, சித்திரவதைப் படுத்துவது போன்றவற்றில் அவர்கள் அளவுக்கு மீறிச் செயல்பட்டனர். கைது செய்தவர்களின் தோலை உரித்தல், கண், காது போன்ற உறுப்புகளைத் துணித்தல் என்பன அவர்களுக்கு மிகச் சாதாரணமாக இருந்தன. எதிரிகளிடையே பீதியை உண்டாக்கவே அவர்கள்

இத்தகைய கொடிய முறைகளைக் கையாண்டனர். அசிரியர்களின் பெயரைக் கேட்டாலே அழுத பிள்ளை வாய்மூடும் என்ற நிலைமையை அவர்கள் உண்டாக்கி வைத்திருந்தனரெனில் மிகையாகாது.

மன்னர்களுக்கு அடுத்தபடியாக நாட்டில் செல்வாக்குடன் வாழ்ந்தவர்கள் மத குருமார்களாவர். அவர்களின் சொற்படியே மன்னன் நடந்துகொண்டான். ஆவேச நிலையில் பூசாரிகள் கூறிய மொழிகளையே அரசன் நம்பி அதற்கேற்ப நடந்து கொண்டான். இஷ்டார் என்ற பெண் தெய்வத்தால் ஆட்கொள்ளப் பட்டவர்களாக அத்தகைய பூசாரிகள் கருதப்பட்டனர்.

அசுர் என்ற தெய்வமே நாட்டின் உண்மையான தலைவர் என்றும், அதன் பிரதிநிதியே மன்னர் என்றும் மக்கள் நம்பினர். அத் தெய்வத்தின் பெயராலேயே சட்டங்கள் இயற்றப்பட்டன. வரிகள் வசூலிக்கப்பட்டன. சட்டங்கள் உண்மையில் மிகவும் கடுமையானவையாக இருந்தன. சாதாரணக் குற்றங்களுக்குக் கூட மூக்குகளை அரிதல், நாக்குகளைத் துணித்தல் போன்ற தண்டனைகள் வழங்கப்பட்டன. உயிரோடு எரித்தல், நஞ்சிட்டுக் கொல்லல், சவுக்கடி கொடுத்தல் போன்ற தண்டனைகளும் சாதாரணமாக வழங்கப்பட்டன. பலவந்தத்தின் அடிப்படையில் அரசு அமைந்திருந்த காரணத்தாலேயே இத்தகைய வன்முறைகளை மன்னர்கள் கையாண்டனர் எனத் தெரிகிறது.

உள்ளூராட்சியைப் பொறுத்த வரையில் பெரும் நிலக் கிழார்களே மாநிலத் தலைவர்களாகப் பணி புரிந்தனர். அவர்கள் மக்களிடமிருந்து வரி தண்டி அதன் ஒரு பகுதியை மன்னனுக்குச் செலுத்தி வந்தனர். பொது மராமத்து வேலைகளும், போருக்கு ஆள் திரட்டும் வேலையும் அவர்களைச் சார்ந்ததேயாகும். சிறிய மாநிலங்களில் அரசனால் நியமிக்கப்பட்ட அதிகாரிகள் ஆட்சிப் பொறுப்பைக் கவனித்து வந்தனர்.

*பொருளாதார நிலை*

அசிரியர்கள் போர் செய்வதில் காட்டிய ஊக்கத்தை வாணிபத்தில் காட்டவில்லை. பெரும்பாலும் விவசாயிகளாகவே அவர்கள் விளங்கினர். பார்லி, எள், தினை போன்ற தானியங்களை அவர்கள் விளைவித்தனர். பாபிலோனியர்கள் கடைப்பிடித்த வேளாண்மை முறைகளை அவர்கள் அப்படியே மேற்கொண்டனர். நாடெங்கும் கால்வாய்கள் வெட்டப்பட்டன. சுரங்கத் தொழில் மற்றுமோர் முக்கிய தொழிலாகும். முதலில் செம்பு, பித்தளை போன்ற

உலோகங்களையும், இறுதியில் இரும்பையும் அவர்கள் தோண்டி யெடுத்துப் பலவகையிலும் பயன்படுத்தினர். பருத்தியைக் கொண்டு நூல் நூற்று ஆடைகளை நெய்யும் தொழிலிலும் பலர் ஈடுபட்டனர். அழகிய பானைகளை வனையும் கலையினையும் அவர்கள் போற்றி வளர்த்தனர். ஓரளவுதான் வாணிபத்தில் அவர்கள் ஈடுபட்டனர். நினெவா நகரில் உலகின் பல்வேறு நாடுகளிலிருந்து வந்த வணிகர்கள் பண்டமாற்றம் செய்துகொண்டனர். ஈயத்தாலும், வெள்ளியாலும் செய்யப்பட்ட ஒருவகையான நாணயங்களும் பயன்படுத்தப்பட்டன. வட்டிக்குக் கடன் கொடுக்கும் வங்கிகள் பல நினெவாவில் இருந்தன. 25 சதவிகிதம் வரை வட்டி வசூலிக் கப்பட்டதாக அறிகிறோம். இங்ஙனம் கடனைப் பெற்று உலக வாணிபத்தில் ஈடுபட்ட வாணிபக் குழுக்கள் சில அசிரியப் பேரரசில் தொழில் புரிந்தன.

### சமய வாழ்க்கை

அசிரியர்கள் அசூர் என்ற தெய்வத்தையே முக்கியமாக வணங்கினர். போரில் வெற்றியைத் தருபவர் அவரே எனக் கருதப்பட்டார். இடி மின்னலுக்கும் அவரே தலைவர். இஷ்டார் எனும் பெண் தெய்வம் மக்கட்பேற்றை அருளும் ஆற்றல் பொருந் தியதாகக் கருதப்பட்டது. போரில் வெற்றி கிடைக்கச் செய்பவளும், அவளேயாவாள். இத் தெய்வங்களை மகிழ்விக்க அசிரியர்கள் ஏராளமான மிருகங்களையும், சிறைபிடிக்கப்பட்ட மனிதர்களையும் பலியிட்டனர். மந்திரம், மாயம், பில்லி, சூனியம், பேய், பிசாசுகள் முதலியவைகளில் அவர்கள் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந் தார்கள். அவற்றினின்றும் தங்களைக் காத்துக்கொள்ள அவர்கள் பலவிதமான தாயத்துகளை அணிந்துகொண்டனர்.

### இலக்கியம், கலை, அறிவியல்

அசிரிய மன்னர்களில் அசுர்பானிபால் போன்ற ஒரு சிலர் இலக்கியப் பித்தர்களாய் விளங்கினர். இலக்கியம், சமயம், அறிவியல் இவற்றைப்பற்றிய ஆயிரக்கணக்கான நூல்களை அவர்கள் நூல் நிலையங்களில் சேகரித்துவைத்தனர். எதிர்காலத் தைக் கணித்துக் கூறுகின்ற சோதிட நூல்கள் ஏராளமாக அத்தகைய நூலகங்களில் காணப்படுகின்றன. கணிதமும் இலக்கணமும் நன்கு வளர்ந்திருந்தன. வட்டத்தை 360 பாகை களாக அவர்கள் பிரித்தனர். அரசர்களின் வெற்றிகளைத் தொடர்ந்து கூறுகின்ற களிமண் பலகைகள் பல கிடைத்துள்ளன. நூல்களை எழுதுவதற்கென்றே தனிப்பட்ட எழுத்தர்கள் இருந்தனர். வானியல், மருத்துவம் போன்ற அறிவியல் பற்றிய நூல்களையும்

அசிரிய ஆசிரியர்கள் யாத்தனர். ஐந்து கோள்களின் பெயர்களை அவர்கள் குறிப்பிட்டுள்ளனர். கிரகணங்கள் (Eclipses) ஏற்படுவதைத் துல்லியமாகக் கணிக்கும் திறமையும் அவர்களுக்கிருந்தது. பூமியின் மேற்பரப்பில் உள்ள இடங்களைக் குறிக்க தீர்க்க ரேகை, அட்ச ரேகை போன்ற ஒருவகைக் கோடுகளை அவர்கள் பயன்படுத்தியதாக அறிகிறோம். மருத்துவத் துறையில் அவர்கள் பெரிதும் முன்னேறியிருந்தனர். ஐநூறுக்கும் மேற்பட்ட மருந்துகள் பயன்படுத்தப்பட்டதாகத் தெரிகிறது. அவற்றில் ஒருசில தாவரங்களிலிருந்தும் மற்றும் சில உலோகங்களிலிருந்தும் தயாரிக்கப்பட்டன. ஒரு நோயை முன்கூட்டியே அறிந்துகொள்ளும் அறிகுறியைப் (Symptoms) பற்றி அவர்கள் அறிந்திருந்தனர் எனினும் மந்திர தந்திரங்களால் நோய்களைப் போக்கவும் அவர்கள் முயன்றனர். அசிரியர்கள் தங்களது மொழியையே அன்றி வேற்று மொழிகளையும் பயின்றனர். அசுர்பானிபால் எனும் மன்னர் ஓர் அகராதியின் துணை கொண்டு சுமேரிய மொழியைத் தாமாகவே பயின்றார் என்று அறிகிறோம். பல்வேறு தாவரங்களின் பெயர்களும், விலங்குகளின் பெயர்களும் களிமண் பலகைகளில் பொறித்து வைக்கப்பட்டன. கிரேக்கர்கள் அவற்றை அப்படியே ஏற்றுக்கொண்டனர்.

கட்டடக் கலையையும் அசிரியர்கள் போற்றி வளர்த்தனர். கண்டோர் வியக்கும் அரண்மனைகளையும், வானளாவிய மாட மாளிகைகளையும், கூடகோபுரங்களையும் அவர்கள் நினெவா நகரத்தில் எழுப்பினர். அவைகள் பார்ப்பதற்குக் கம்பீரமாக இருந்தனவெனினும், அழகாக அமையவில்லை. வட்டம், வளைவு போன்ற கட்டடக்கலை முறைகளை அவர்கள், பாபிலோனியர்களிடமிருந்து அப்படியே ஏற்றுக்கொண்டனர். அவர்களது பரந்த அரண்மனைகளில் பெரிய கற்களினால் செய்யப்பட்ட விலங்குருவங்கள் பல காணப்பட்டன. அத்தாணி மண்டபங்களின் இரு மருங்குகளையும் சிலைகள் அணிசெய்தன. அரண்மனையின் கதவுகள் சிலசமயம் வெண்கலத்திலேயே செய்யப்பட்டிருந்தன. அவற்றில் நேர்த்தியான உருவங்கள் பல பொறிக்கப்பட்டிருந்தன. அரண்மனையின் வாயில்களில் சிறகுகளைக் கொண்ட வெண்கல எருதுகள் வைக்கப்பட்டிருந்தன. சிலசமயம் சிங்கங்களின் உருவங்களும் அங்கே வைக்கப்பட்டிருந்தன. அரண்மனையின் உட்சுவர்களில் புடைப்போவியங்களும், விலையுயர்ந்த நீல மணிக் கற்களும், வெள்ளி, வெண்கலம் இவற்றால் செய்யப்பட்ட உருவங்களும் அலங்காரத்துக்காகப் பொருத்தப்பட்டிருந்தன. மற்றும் விலையுயர்ந்த திரைச்சீலைகளும், சுவர்களின்மீது தொங்கிக் கொண்டிருந்தன. நன்கு வர்ணமடிக்கப்பட்ட தூலங்களில் இயற்கைக் காட்சிகள் ஓவியங்களாகப் பாங்குறச் சித்திரிக்கப்பட்

டிருந்தன. பெரும்பாலும் கட்டடங்கள் மரத்தாலேயே கட்டப்பட்டிருந்ததால், நாளடைவில் இவை சிதைந்து அழிந்தொழிந்து போயின. ஆனால், கல்லால் கட்டப்பட்ட கட்டடங்களே அதிகம். அவை நெடுநாட்கள் வரை அழியாமல் அப்படியே இருந்தன. வளைவுகளும், குவிமாடங்களும் அவர்களது கட்டடங்களின் சிறப்பியல்புகளாகும். தூண் வரிசைகளையும் அவர்கள் ஓரோவழி பயன்படுத்தினர்.

அசிரியர்களின் கலைத்திறன் அவர்களது அழகிய ஆபரணங்களிலும், மரச் சாமான்களிலும் நன்கு காணப்படுகிறது. மரச் சாமான்களில் அழகிய மணிக் கற்களையும் உலோகங்களையும் பதிக்க அவர்கள் கற்றிருந்தனர். இசை, ஓவியம் இவற்றைப் பாபிலோனியர்களிடமிருந்து இவர்கள் அப்படியே கடன் வாங்கிக்கொண்டனர். ஆனால், ஒளி வீசும் நிறங்களைப் பயன்படுத்தி ஓவியம் வரைவதில் அசிரியர்கள் தனிச் சிறப்புற்று விளங்கினர். புடைப்போவியங்கள் (Bas-relief) வரைவதில் அவர்கள் ஈடும் எடுப்புமற்றவர்கள். மனித உருவங்கள் அவ்வளவு வனப்பாக இல்லை. கை, கால்கள் கட்டையாகவும், நேராகவும் ஒரே மாதிரியாகவும் காணப்படுகின்றன. தெய்வ உருவங்களும் அவ்விதமே வரையப்பட்டன. ஆனால், விலங்குகளின் உருவங்கள் மட்டும் உயிருள்ளவை போன்று தீட்டப்பட்டுள்ளன. படுத்திருப்பது போலவும், தூங்குவது போலவும், சீறுவது போலவும், இறப்பது போலவும் பல்வேறு நிலைகளில் சிங்கங்கள் வரையப்பட்டுள்ளமை கண்ணுக்கினிய காட்சியாம். உலகிலேயே தலைசிறந்த ஓவியங்களாகக் கருதப்படுபவைகளில் இவையும் ஒன்றாகும் என்பர். சிற்பங்கள் ஒருசிலவே நினெவா நகரில் காணப்பட்டன. எருதுகள், சிங்கங்கள் ஆகியவைகளின் உருவங்கள் மிகக் கம்பீரமாக அமைக்கப்பட்டன. ஆனால், மனித உருவங்களும், தெய்வ வடிவங்களும் மட்டுமே விறைப்பாகவும் உணர்ச்சியற்றும் தோன்றுகின்றன. இரண்டாம் அசுர்பானிபால் உருவத்தில்மட்டும் கலை நனி சொட்டுகிறது. அரசர்க்கே உரித்தான கம்பீரம் அதில் நன்கு தொனிக்கிறது. அவரது கண்களில் கருணையும் கடுமையும் ஒரே சமயத்தில் ஒளி வீசுகின்றன.

### *சமூக வாழ்க்கை*

அசிரிய சமுதாயத்தில் ஐந்து வகுப்புகள் இருந்தன. அவைகள் முறையே கனவான்கள், கைவினைஞர்கள், விவசாயிகள், தொழிலாளர்கள், அடிமைகள் ஆகியவையாகும். அடிமைகள் பலவிதமான வேலைகளுக்கும் பயன்படுத்தப்பட்டனர். பெரிய பெரிய சிலைகளையெல்லாம் அவர்கள் தூக்கிச் சென்றுகொண்டிருப்பது

போலவும், அவர்களைத் துரிதப்படுத்தும்பொருட்டு அதிகாரிகள் சவுக்கால் அடிப்பது போலவும் ஒருசில ஓவியங்கள் தீட்டப் பட்டுள்ளன. அடிமைகளை உயிரோடு எரித்தல், கண்ணைப் பிடுங்கல், நாக்கை நறுக்குதல் போன்ற கொடூரமான செயல்களைச் செய்வதில் அசிரியப் பெருங்குடி மக்கள் அலாதியான இன்பங் கண்டனர். அவர்கள் பெண்களை அடிமைகள் போன்றே நடத்தினர். பாபிலோனியாவிலிருந்ததைவிடப் பெண்களின் நிலை அசிரியாவில் தாழ்ந்தே காணப்பட்டது. கொலைத் தொழிலில் ஈடுபட்டிருந்த அசிரியர்கள் தங்கள் மக்கள் தொகையைப் பெருக்க விரும்பினர். எனவே, சிசுக் கலைப்பு (abortion) செய்த பெண்களுக்குக் கொலைத் தண்டனை வழங்கப்பட்டது. முகமூடியின்றி பெண்கள் வெளியே செல்ல இயலாது. கற்பை இழந்த பெண்டிர் கடுமையான தண்டனைக்காளாயினர். ஆனால், ஆண்கள் பல பெண்களைக் கூத்தியராக வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டனர். பரத்தமைத் தொழில் பரவலாகக் காணப்பட்டது. அதை ஒழுங்குபடுத்த அரசாங்கம் தக்க நடவடிக்கைகளில் ஈடுபட்டது. அரசர்களும் பிரபுக்களும் ஏராளமான மனைவியரை மணந்திருந்தனர். திருமணம் ஒரு வாணிபம் போல நடைபெற்றது. திருமணமான பின்பும் பல பெண்கள் தங்களது தாய் வீடுகளிலேயே தங்கினர். அவ்வப்போது அவர்களின் கணவர்கள் அவர்களிருக்கும் வீட்டிற்கு வந்து போவது வழக்கம்.

இங்ஙனம் அசிரியர்கள் வல்லாண்மை எனும் மணல்மேட்டின் மீது தங்களது அரசு எனும் கட்டடத்தை அமைத்தனர். அதைக் கட்ட அவர்கள் கையாண்ட வன்முறைகள் நாடெங்கும் மனக் கசப்பை ஏற்படுத்தியது. எனவே, அரசு ஒரு சிறிது ஆட்டங் கண்டவுடனேயே பல மாநிலங்கள் கலகஞ் செய்து சுயேச்சை அடைந்தன. அண்டையில் இருந்த முரட்டு வகுப்பினர் பலர் பிணத்தின்மீது பாயும் கழுகுகள்போல அசிரியப் பேரரசின்மீது பாய்ந்து அதைச் சின்னாபின்னப்படுத்தினர். அசிரியர்களின் எதிரிகள் பேரரசைச் சூறையாடியதுடன் அசிரியர்களை அடிமை யாக்கி அவர்களைப் பல்லாற்றானும் துன்புறுத்திப் பழிதீர்த்துக் கொண்டனர். மீண்டும் அவர்கள் தலைதூக்காதவாறு அவ்வெதிரிகள் அசிரியர்களை அறவே ஒடுக்கிவிட்டனர். வெறும் ராணுவ பலத்தால் மட்டும் ஓர் அரசு வெகுநாள் நிலைக்க முடியாது என்பதற்கு அசிரியப் பேரரசு ஓர் பெருஞ் சான்றாக விளங்குகிறது.

## சாலடிய நாகரிகம்

உள்நாட்டுப் போர்களால் அசிரியப் பேரரசு அலைக்கழிக்கப் பட்டுக்கொண்டிருந்த நேரத்தில் சாலடியர் என்ற செமிடிக்

(Semitic) இனத்தவர் தெற்கே பாரசீக வளைகுடாவின் முனையிலிருந்து புறப்பட்டு வந்து பாபிலோனியாவைக் கைப்பற்றி மறைந்து போன பாபிலோனிய நாகரிகத்தை மீண்டும் உயிர்ப்பிக்க எத்தனித்தனர். எனவே இவர்களது பேரரசு 'புதிய பாபிலோனியப் பேரரசு' என்றும் அழைக்கப்படுவதுண்டு. அசிரியர்கள் காலத்தே உருமாறிப்போன பாபிலோனிய நாகரிகத்தை முழுவதுமாக அவர்களால் உயிர்ப்பிக்க முடியாவிடினும் பழைய சட்டங்கள், இலக்கியம், அரசாங்க அமைப்பு, பொருளாதார முறை முதலியவைகளை அவர்கள் ஓரளவு மீண்டும் நிலை நாட்டினர்.

நெபோ போலசார் (Nabo Polassar) என்ற சாலடியத் தலைவர்தான் நினெவா நகரத்தைக் கைப்பற்றி அங்கு (கி.மு. 625) பாபிலோனியாவின் கடைசிப் பேரரசைத் தோற்றுவித்தார். ஆட்சித் திறமை நிரம்பப் பெற்றவராய் அவர் விளங்கினார். மத பக்தியும் அவரிடம் நிறையக் காணப்பெற்றது. மார்டுக் எனும் தெய்வத்திற்குப் பெரியதோர் கோயிலை அவர் கட்டுவித்தார். அவருக்குப்பின் வந்த நெபுகத்நேசார் (Nebuchadnezzar) சாலடிய மன்னர்களிலேயே தலைசிறந்தவர். அவரது காலத்தில் சாலடியப் பேரரசு சீரும் சிறப்பும் உற்றுத் திகழ்ந்தது. எகிப்தியர்களை வென்று அவர்களது கூட்டாளிகளையும் அவர் ஒருங்கே அடக்கினார். பாலஸ்தீனத்தின்மீது படையெடுத்து ஜெருசலேம் நகரை வென்று யூதர்களை அடிமைப்படுத்தி பாபிலோனியாவிற்குக் கொண்டுவந்து குடியேற்றினார். டைர் (Tyre) என்னும் நகரத்தைத் தவிர ஏனைய பினீஷிய நகரங்களையெல்லாம் வென்று, அவர் தன்னடிப் படுத்தினார். யூப்ரடிஸ் நதிப் பள்ளத்தாக்கு, சிரியா, பாலஸ்தீனம் ஆகிய நாடுகளை உட்கொண்டதாய் சாலடியப் பேரரசு சிறப்புடன் விளங்கியது.

நெபுகத்நேசர் போரில் புறங்காட்டாத பெரு வீரர் மட்டுமல்லர். கலை உலகிலும் அவர் ஓர் கதிரவனாய்த் திகழ்ந்தார். இலக்கிய ஈடுபாடு அவருக்கு அதிகமில்லையெனினும், கட்டடக்கலை அவரது கவனத்தைப் பெரிதும் ஈர்த்தது. மண்ணால் ஆய பிரம்மாண்டமான கட்டடங்களை அவர் பாபிலோன் நகரில் கட்டினார். யூப்ரடிஸ் நதியின் இருமருங்கிலும் கட்டப்பட்ட நகரை ஒரு மரப்பாலம் இணைத்துக் கொண்டிருந்தது. உலகத்திலேயே முதன்முதலாகக் கட்டப்பட்ட பாலம் இதுவேயெனலாம். நகரைச் சுற்றிலும் ஓர் மதிற்சுவர் கட்டப்பட்டது. அதையடுத்து ஆழமான அகழி யொன்றும் அந் நகரைப் பாதுகாத்தது. மதிற்சுவரின் வாயில்கள் கண்டோர் வியக்கும் வண்ணம் அலங்கரிக்கப்பட்டிருந்தது. நகரின் கிழக்குக் கரையில் ஏற்கெனவே தமது முன்னோர்களால் மார்டுக்

என்ற தெய்வத்திற்காகக் கட்டப்பட்ட ஆலயம் ஒன்றை அவர் மீண்டும் புதுப்பித்துப் புது மெருகுடன் திகழச் செய்தார். அக் கோயிலின் வானளாவிய கோபுரம் ஏழு அடுக்குகளைக் கொண்டதாய் விளங்கியது. முன்னூறு அடி சதுரத்தின் மேல் கம்பீரமாக அமைந்திருந்த அதன் உயரமும் முன்னூறடியே ஆம்.

நெபுகத்நேசர் பாரசீக மன்னரின் மகளை மணந்துகொண்டார். அப்பாரசீக இராணிக்கு வறட்சி நிறைந்த பாபிலோன் நகரம் சற்றும் பிடிக்கவில்லை. பச்சைப் பசேலென்று விளங்கும் புல்வெளிகளும், காடுகளும் நிறைந்து இயற்கையன்னையின் எழில் கொழிக்க நின்ற தனது தாய்நாட்டை எண்ணி அவர் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தார். அவரது ஏக்கத்தை அறிந்த நெபுகத்நேசர் தமது அரண்மனையின் மாடி ஒன்றில் ஒரு செயற்கைத் தோட்டத்தை அமைத்தார். தூண்களின் உச்சியில் அமைக்கப்பட்ட தளத்தின் மீது மண் பரப்பப்பட்டது. அதன்மீது வளர்க்கப்பட்ட மரங்களும், புல்வெளிகளும் அங்கு வானில் தொங்குவதுபோல் தெரிந்ததால் 'தொங்கும் தோட்டம்' (Hanging Gardens) என அதை மக்கள் அழைக்கலாயினர். பாரசீக மலைச்சரிவுகளின் செழுமையும், புல்வெளிகளின் பொலிவும், பூஞ்சோலைகளின் புத்தெழிலும் ஒருங்கே சேர்ந்து பூத்துக் குலுங்கும் அழகைக் கண்டு அப்பாரசீக அரசி பரவசமடைந்தார். பிறந்த வீட்டை எண்ணிப் பெருமூச் செறிவதை விடுத்துப் புகுந்த வீட்டின் பெருமையைப் போற்ற ஆரம்பித்தார். உலகத்தின் ஏழு அதிசயங்களுள் ஒன்றாகக் கிரேக்கர்கள் அதைப் போற்றிப் பேசியதில் வியப்பொன்றுமில்லை.

சாலடியர்கள் வானியல் சாத்திரத்தில் வல்லுநராய்த் திகழ்ந்தனர். கிரகணம் ஏற்படும் காலத்தை அவர்கள் துல்லியமாய்க் கண்டறிந்தனர். நட்சத்திரங்களைப் பன்னிரண்டு தொகுதிகளாகப் பிரித்து அவற்றை ஒவ்வொன்றையும் ஒரு குறியீடு மூலம் குறிப்பிட்டனர். ஒரு மனிதன் பிறக்கும்போது இருக்கும் கோள்களின் நிலையைக் கொண்டு அவனது எதிர்காலத்தை நிர்ணயித்து விடலாம் என அவர்கள் நம்பினர். எனவே ஜோதிட சாஸ்திரத்தில் அவர்கள் நிபுணர்களாய் இருந்தனர். காலத்தை நுண்ணிய முறையில் கணக்கிட அவர்கள் அறிந்திருந்தனர். வாரத்திற்கு ஏழு நாட்களே என்பதைக் கண்டுபிடித்தவர்களும் அவர்களே. ஒரு நாளைக்குப் பன்னிரண்டு இரட்டை மணிகள் என்றும், ஒவ்வோர் இரட்டை மணியும் 120 நிமிடங்கள் கொண்டவை என்பதையும் அவர்கள் கணித்திருந்தனர். அவர்களிடையே வாழ்ந்திருந்த நபு ரிமானு (Nabu Rimannu) எனும் புகழ்பெற்ற வானியல் அறிஞர் ஓர் ஆண்டின் அளவை மிகத் துல்லியமாகக் கணக்கிட்டுள்

ளார். இக்காலத்தில் ஆண்டின் கால அளவுக்கும் அவர் கண்டு பிடித்த ஆண்டின் கால அளவுக்கும் உள்ள வேறுபாடு இருபத்தாறு நிமிடங்களேயாகும். கிடின்னு(Kidinnu) என்ற இன்னொரு வானியல் அறிஞர் பூமியின் அச்சில் காணப்படுகிற சாய்வானது எங்ஙனம் அவ்வப்போது மாறுபடுகிறது என்பதைக் கண்டுபிடித்தார். இங்ஙனம் சாலடியர்கள் பூமியையும், கோள்களையும் நுணுகி ஆராய்வதற்குக் காரணம் அவர்களது சமய நம்பிக்கையே ஆகும். தங்களது வாழ்க்கையின் போக்கை நிர்ணயிக்கும் தெய்வங்கள் என்றே நம்பி, அவர்கள் கிரஹங்களைப் போற்றி வழிபட்டனர். எனவே சோதிடமும், வானியலும் அவர்களுக்குச் சிறப்பாகத் தெரிந்திருந்தது. ஏனைய கலைகளில் சாலடியர்களின் முன்னேற்றம் அவ்வளவு சிறப்பானது என்று கூறுவதற்கில்லை. அசிரியர்கள் காலத்துக்கு மேல் மருத்துவத்துறையில் மிகப் பெரிய முன்னேற்றம் எதுவும் ஏற்படவில்லை. இலக்கியம், சிற்பம் போன்ற கலைகள் உயிர்ப்பின்றி மிகச் சாதாரண நிலையிலேயே இருந்தன. பழைய பாபிலோனியர்களின் நூல்களைப் படியெடுத்துப் பார்த்தனரேயன்றி புதிதாக அவர்கள் எதையும் படைக்கவில்லை.

சாலடியர்களின் தனித்திறமையானது அவர்களது சமய நிறுவனத்தில்தான் பெரிதும் வெளிப்பட்டது. பாபிலோனியர்களின் மதம் இவர்களது மதத்தினின்றும் பெரிதும் வேறுபட்டு விளங்கியது. பாபிலோனியக் கடவுளர்களிடம் மனிதத்தன்மை மருந்துக்கும் இல்லை. அவர்கள் முற்றிலும் தெய்வத்தன்மை பொருந்தியவர் களாய் எல்லாம் வல்லவர்களாய் மன வாக்குகளுக்கு எட்டாத மாண்பு பொருந்தியவர்களாய்க் கருதப்பட்டனர். ஒவ்வொரு தெய்வமும் ஒவ்வொரு விண்வெளிக் கோளுடன் இணைக்கப்பட்டது. மார்டக் எனும் தெய்வம் வியாழனோடும், இஷ்டார் எனும் தேவதை வீனஸோடும் இணைத்துப் பேசப்பட்டனர். அவர்கள் உலகத்தை ஆள்வதாகவும், அவர்களுடைய நோக்கங்கள் மனித அறிவுக்கு எட்டாதவை என்றும் கருதப்பட்டது. இங்ஙனம் கடவுளர்களின் எண்ணங்கள் மனிதனது அறிவுக்கு அப்பாற்பட்டவைகளாகக் கருதப்பட்டதால், எல்லாம் விதியின் பயன் என்ற ஓர் நம்பிக்கை மக்களிடையே வலுப்பெற்றது. இறைவனிடத்தில் முழுவதுமாகச் சரணடைந்து விடுவதால் மட்டுமே ஒருவன் உய்ய வகை உண்டு என்ற எண்ணம் மக்களிடையே குடியேறியது. இறைவனிடம் அடைக்கலம் அடைந்து வாழ்ந்து வருபவர்க்கெல்லாம் நன்மையே நடைபெறும் என்பது அவர்களின் ஆழ்ந்த நம்பிக்கையாகும். இம்மை யில் நல்வாழ்வு வாழ்தற்பொருட்டே அவர்கள் இச் சரணாகதி மார்க்கத்தைப் பின்பற்றினரேயன்றி, மறுமையில் பேரின்பம் பெறுவ தற்கன்று. உண்மையில் மறு உலகைப் பற்றிச் சாலடியர்கள்

ஒன்றும் அக்கறை எடுத்துக்கொள்ளவில்லை. வாழ்க்கையில் காணப்பெறும் பல புரியாத புதிர்களைக் கண்ட மக்கள் அவற்றைச் சமாளிக்கவே கடவுளிடம் அடைக்கலம் புகுந்தனர் என்று ஊகிக்க இடமுண்டு. இது எவ்விதமாயினும் சாலடிய மக்களிடம் ஓர் ஆன்மீக உணர்ச்சி பரிணமித்தது என்பது நன்கு தெளிவாகிறது. அதனால் இறைவனை நோக்கிப் பாடப்பெற்ற உணர்ச்சிமிக்க பல கவிதைகள் உருவாகின. அரசர்கள் வாயிலாக வெளிவந்ததாகக் கருதப்படும் அப்பாடல்களில் கடவுளர்கள் பலவாறு புகழ்ந்தேத்தப் படுகின்றனர். மக்களை நன்னெறிப்படுத்த உதவும்படி அவர்கள் வேண்டப்படுகின்றனர். கடவுளர்கள் எட்டாத தொலைவிலுள்ள விண்மீன்களிடையே இருந்துகொண்டு மனிதனின் தலைவிதிகளை நிர்ணயிப்பதாக நம்பிய மனிதன் தன்னை ஓர் அற்பப் பிராணியாக நினைக்கத் தலைப்பட்டான். பாவம் செய்வதே தனது இயல் பென்றும், தாழ்வான உணர்ச்சிகளுக்கெல்லாம் தான் இருப்பிடம் என்றும் மனிதன் எண்ணத் தலைப்பட்டான்.

மக்களிடையே இதன் விளைவாகத் தன்னம்பிக்கை அறவே மாய்ந்தொழிந்தது. வாழ்க்கையில் மக்கள் துன்பத்தையே அன்றி இன்பத்தை எதிர்பார்ப்பது வீணானது என்று அவர்கள் கருதியதால் கிடைத்த உலகியல் இன்பங்களை முழுமையாக நுகர்வதிலேயே அவர்கள் பெரிதும் நாட்டம் செலுத்தினர். தவறு செய்வது தவிர்க்க முடியாதது என்னும் எண்ணம் அவர்கள் மனத்தில் வேர் விட்டதன் விளைவாக எத்தகைய பாவத்தைச் செய்யவும் அவர்கள் அஞ்ச வில்லை. நல்வழியில் நடப்பதற்காக இறைவனிடம் அவர்கள் முறை யிடுவதாகக் காணோம். மற்றபடி நீண்ட ஆயுளையும், ஏராளமான மக்களையும், சுகபோக வாழ்வினையுமே அவர்கள் கடவுளிடம் வரமாக வேண்டுவதற்குத் தலைப்பட்டனர். எனவே, சாலடியர்கள் இறைவன்மீது பாரத்தைப் போட்டுவிட்டு உலகியல் இன்பங்களை நன்கு ஆசை தீரச் சுவைத்தனர்.

இங்ஙனம் சமயம் அறிவியல் ஆகிய இரு துறைகளில் மட்டுமே சாலடியர்கள் ஓரளவு சொந்தமாகச் சிந்தித்து, தங்களது படைப் பாற்றலை வெளிப்படுத்தினர். மற்றபடி அரசியல், சட்டம், இலக்கியம், சிற்பம், ஓவியம் ஆகிய ஏனைய துறைகளிலெல்லாம் அவர்கள் பழைய பாபிலோனியர்களின் அடிச்சுவட்டையே பின் பற்றினர்.

### உலக நாகரிகத்திற்கு மெசபடோமிய நாகரிகங்கள் வழங்கியுள்ள நன்கொடை

எகிப்திய நாகரிகத்தைப் போன்றே மெசபடோமியாவில் தோன்றிய நாகரிகங்களும் உலக நாகரிகத்திற்குப் பல்வேறு

கொடைகளை வழங்கியுள்ளன. இன்று நாம் ஏழு நாட்களைக் கொண்ட வாரத்தையும், பன்னிரண்டு எண்களைக் கொண்ட கடிகாரத்தையும் கொண்டிருப்பது மெசபடோமிய நாகரிகங்களின் நன்கொடையேயன்றி வேறன்று. சாலடியர்கள் ஒரு நாளுக்குப் பன்னிரண்டு இரட்டை மணிகள் இருப்பதாகக் கருதியதை ஒட்டியே நம் கடிகாரங்களில் பன்னிரண்டு எண்களை அமைத்திருக்கிறோம். சோதிடக் கலையில் நம்மில் பலருக்கு இருக்கின்ற ஆர்வம் சாலடியர்களிடமிருந்து வழி வழி வந்ததொன்றேயாகும். வளர்பிறை, தேய்பிறைக் கேற்பப் பயிர்களை வேளாண்மை செய்கின்ற பழக்கம் சாலடியர்களுடையதே. நட்சத்திரங்களைப் பன்னிரண்டு தொகுதிகளாகப் பிரித்து அவற்றில் ஒவ்வொன்றையும் ஒரு குறியீடு மூலம் குறிக்கும் பழக்கமும், வட்டத்தை 360 பாகைகளாகப் பிரிக்கின்ற வழக்கமும், நாம் கடைப்பிடிக்கும் பெருக்கல் முறையும், மெசபடோமிய நாகரிகங்களிலிருந்து கடன் வாங்கப்பட்டவையாகும்.

இன்றைய நாகரிகங்களைப் போன்றே பண்டைய பல நாகரிகங்களும் மெசபடோமிய நாகரிகங்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளன. சாலடிய நாகரிகத்தின் பல கூறுபாடுகளைப் பண்டைய பாரசீக நாகரிகத்தில் காணலாம். கி மு. 1850-ல் பாபிலோனியர்களை வென்ற காஸைட்டுகளுக்கு (Kassites) உதவி செய்த ஹிட்டைட்டுகள், பாபிலோனியர்களின் ஆப்பெழுத்து முறையையும் (cuneiform), களிமண் பலகைகளின் மீது சாசனங்களைப் பொறிக்கும் பழக்கத்தையும், கில்கமிஷ் கதையையும் மற்றும் பல சமயச் சிந்தனைகளையும் ஏற்றுக்கொண்டனர். பாபிலோனியர்களின் கடவுளர்களான இஷ்டார், டாமஸ் போன்ற தெய்வங்களைப் பினீஷியர்கள் ஏற்றுக்கொண்டனர். கானனைட்டுகள் (Canaanites) கைக்கொண்ட பல சமயப் பழக்க வழக்கங்கள் சுமேரியர்களிடமிருந்து கடன் வாங்கப்பட்டவையே ஆகும். ஹீப்ருக்கள் அல்லது யூதர்களின் நாகரிகம் மெசபடோமிய நாகரிகத்துக்கு மிகப் பெரிதும் கடன்பட்டுள்ளது. உலகத்தின் தோற்றம், பிரளயம் பற்றிய புராணக் கதைகள், சட்டத் தொகுதி போன்றவைகளை யூதர்கள் மெசபடோமியாவிலிருந்தே பெற்றனர். கி.மு. 586ஆம் ஆண்டிலிருந்து கி.மு. 539ஆம் ஆண்டு வரை அவர்கள் பாபிலோனியாவில் சிறை வைக்கப்பட்டிருந்தபொழுது பாபிலோனிய நாகரிகத்தின் செல்வாக்குக்கு அவர்கள் பெரிதும் உட்பட்டனர். தங்களைச் சிறைப்படுத்திய மக்களிடமும் பல நற்பண்புகள் இருப்பதை அறிந்து அவற்றை மேற்கொண்டனர். வாணிபத் துறையில் அவர்கள் காட்டிய ஊக்கம் சாலடியர்களிடமிருந்து வந்ததொன்றேயாகும். மற்றும் விதியில் நம்பிக்கை, பேய், பிசாசுகளிடம் பயப்படுதல், உலகத்தைத் துன்பமயமானதாகக் கருதுதல் போன்ற கருத்துகள்

சாலடியர்களின் சமயத்திலிருந்தே யூதர்கள் மதத்திற்குப் பரவியது. கிரேக்கர்களும் ரோமானியர்களும் மெசபடோமிய நிறுவனங்களைப் பெரிதும் விரும்பி ஏற்றனர். கிரேக்கர்களின் ஸ்டாயிக் (Stoic) சித்தாந்தம் சாலடியர்களின் கொள்கையிலிருந்தே பிறந்ததாகத் தெரிகிறது. ஏற்கெனவே நன்கு நிர்ணயிக்கப்பட்ட விதிகளுக் கேற்பவே உலகத்தில் யாவும் நடைபெறுகின்றன என்ற சித்தாந்தம் சாலடியர்களின் பரிசேயாகும். ரோமானியர்கள் சாலடி யர்களின் பல வழக்கங்களை இட்ரஸ்கர்கள் (Etruscans) மூலமாக அறிந்து கடைப்பிடித்தனர். வருங்காலத்தில் நடப்பவைகளை முன் கூட்டியே அறிய முற்படுதல், கோள்களைத் தெய்வங்களாக நினைத்து வழிபடுதல் போன்ற சமயப் பழக்கங்கள், கட்டடங்களில் வளைவு களையும், குவிமாடங்களையும் அமைக்கின்ற வழக்கம் முதலியன சாலடியர்களிடமிருந்து ஏற்பட்டவையே. மெசபடோமிய மக்கள் பலர் ரோமில் குடியேறித் தம் பழக்கங்களை அங்குப் பரப்பியதாகத் தெரிகிறது. முக்கியமாகத் தமது வருங்கால நிகழ்ச்சிகளை முன் கூட்டியே அறிய ரோமானியர்கள் சாலடியர்களின் உதவியை நாடினர். சாலடியர்கள் என்ற பெயரை 'ஜோதிடர்கள்' என்ற பொருளிலேயே அவர்கள் வழங்கினர்.

இங்ஙனம் பாரசீகர்களும், பினீஷியர்களும், கானனைட்டுகளும், ஹீப்ருக்களும், கிரேக்கர்களும், ரோமானியர்களும் மெசபடோமிய நாகரிகங்களின் பல சிறப்பியல்புகளை ஏற்றுக்கொண்டு அவற்றைத் தமதுடைமையாக்கிக் கொண்டதை நாம் தெள்ளிதின் உணரலாம்.

# 5. பாரசீக நாகரிகம்

**நாடு**

எகிப்து முதல் இந்தியா வரை பரந்து விரிந்து கிடந்ததோர் பெரும் பேரரசை, ஏறக்குறைய இருநூறு ஆண்டுக் காலம் ஆண்ட பாரசீகர்கள், இன்றைக்கு பெர்சியா அல்லது ஈரான் என்று பேசப் படுகிற நிலப் பகுதியில் ஆதியில் வாழ்ந்திருக்கவில்லை. பாரசீக வளைகுடாவுக்குக் கிழக்கே இருந்த பர்ஸ் (Pars) என்ற சிறு நிலப் பகுதியிலேயே அவர்கள் வாழ்ந்தனர். அதைப் பாரசீகர்கள் ஃபர்ஸ் (Fars) அல்லது ஃபரிஸ்தான் (Faristan) என இக் காலத்தே அழைக்கின்றனர். அதன் இயற்கையமைப்பு மக்கள் வாழ்க்கைக்கு அவ்வளவு ஏற்றதாயில்லை. கண்ணுக்கெட்டிய தூரம் வரை எங்குப் பார்த்தாலும் மலைகளும் காடுகளுமே தென் பட்டன. நாட்டை வளமாக்கும் நதிகள் ஒரு சிலவே இருந்தன. வறண்ட பாலைவனங்கள் ஆங்காங்கே காணப்பட்டன. கோடைக் காலத்தில் கடுமையான வெய்யில் காய்ந்தது. மாரிக் காலத்தில் கடுங்குளிர் மக்களை வாட்டியது. எனவே, அங்கு வாழ்ந்த இரண்டு மிலியன் மக்களும் அண்டை நாடுகளுடன் வாணிபம் புரிந்தோ அன்றி அவற்றைக் கொள்ளையடித்தோதான் வாழ்க்கை நடத்த முடியும் என்ற நிலையிலிருந்தனர்.

## சமுதாய வாழ்க்கை

**மக்கள்**

பாரசீக மக்கள், இந்தோ-ஐரோப்பிய இனத்தைச் சேர்ந்த வர்கள். தெற்கு ஆசியாவிலிருந்து அவர்கள் பர்ஸ் நாட்டுக்கு வந்திருக்கக்கூடுமென ஊகிக்கப்படுகிறது. இந்தியாவுக்குள் பிற் காலத்தே குடிபுகுந்த ஆரியர்களும், அவர்களும் ஒரே இனத் தவர்கள் என்று தெரிகிறது. டேரியஸ் எனும் பாரசீக மன்னன் தன்னை 'ஆரிய வம்சத்தின் வழி வந்த ஆரியன்' என்று பெருமை பாராட்டிக் கொள்கிறான். ஆரிய நாடு எனப் பொருள் படும் ஆரியான வெஜோ (Airyana-Vejo) என்ற பூர்வீக நாட்டிலிருந்து வந்ததாக ஜொராஸ்டிரியர்கள் கூறிக்கொள் கின்றனர். ஸ்டிராபோ (Strabo) என்ற வரலாற்றாசிரியர் பாரசீகர் கள் ஆரியானா (Ariana) நாட்டைச் சேர்ந்தவர்கள் என்று குறிப் பிடுகிறார். ஈரான் என்ற இக்காலப் பெயர் ஆரியானா என்ற

சொல்லினடியாகப் பிறந்ததொன்றேயாம். பாரசீகர்கள் பேசிய மொழி சமஸ்கிருதத்தைப் போன்றதோர் மொழியாகும். அது ஜெண்ட் மொழி (Zend) எனப் பாரசீகர்கள் கூறுவர். ஜெண்ட், பஹ்லவி (Pahlavi) ஆகிய இரு மொழிகள் பண்டைய பாரசீக மொழியினின்றும் தோன்றின. பண்டைய வேத நூலான ஜெண்ட் அவெஸ்தம் (Zend-Avesta) ஜெண்ட் மொழியில் எழுதப்பட்டது. இன்றைய பாரசீக மொழி பஹ்லவியிலிருந்து தோன்றியதாகும். பாரசீகப் பட்டயங்கள் பாபிலோனிய ஆப்பெழுத்துகளின் வடிவில் பொறிக்கப்பெற்றுள்ளன. அராமிய உயிரெழுத்துகள் லிபியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. பாபிலோனியர்கள் பயன்படுத்திய 300 குறியீடுகளை அவர்கள் 36 ஆகக் குறைத்து அவற்றை உயிரெழுத்துகளாக மாற்றிக் கொண்டனர். சதா போரில் ஈடுபாடு கொண்டிருந்த பாரசீகர்கள் மிகக் குறைவாகவே எழுதினர். எனவேதான் அவர்கள் புகழ் மிக்க இலக்கியங்கள் எவற்றையும் படைக்கவில்லை.

பாரசீக மக்கள் இயற்கையிலேயே மிகவும் வனப்பு வாய்ந்தவர்களாய்க் காணப்பட்டனர். எடுப்பான கூரிய மூக்கும், எழிலார்ந்த கண்களும், நெடிய தோற்றமும், வெள்ளிய நிறமும் கொண்டு அவர்கள் அழகின் இருப்பிடமாய்த் திகழ்ந்தனர். அவர்களது நடையில் ஒருவித கம்பீரமும் கண்ணியமும் தென்பட்டன. உடை உடுக்கு முறையில் அவர்கள் லிடியர்களைப் பின்பற்றினர். முகத்தை விட்டு ஏனைய உறுப்புகள் அனைத்தையும் அவர்கள் ஆடையால் மூடிக் கொண்டனர். தலையில் தலைப் பாகையையும், பாதங்களில் தோலினாலாய செருப்புகளையும், இடையில் ஒன்றன்மே லொன்றாய் மூன்று ஆடைகளையும், அரைக் கச்சையொன்றையும் (girdle) அணிந்தனர். உள் ஆடை கைகளை மணிக்கட்டு வரையில் மறைத்தது. அரசர்கள் பூ வேலைப்பாடுகள் செறிந்த கால் சட்டைகளை அணிந்தனர். பெண்களும் ஆண்களைப் போலவே உடையணிந்தனர். மார்பு பகுதியில்மட்டும் ஓர் பிளவு ஆடையில் காணப்பட்டது. ஆண்கள் நீண்ட தாடியையும், சுருள் முடியையும் வைத்துக் கொண்டனர். செயற்கை முடியை வைத்துக்கொள்ளும் வழக்கமும் பிற்காலத்தே தோன்றியது. பெண்டிர் தங்களது தலைமுடியைப் பல வகையாக அலங்கரித்துக்கொண்டனர். நீண்ட சடையாகவோ அன்றி உருண்ட கொண்டையாகவோ அது வாரி முடிக்கப்பெற்றது. கண்களுக்கு மையிட்டும், இமைகளுக்கு நிறந் தீட்டியும் அவர்கள் முகத்தின் அழகைப் பெருக்கிக் கொண்டனர். உடலின் நிறத்தை அழகாக்கப் பல்வேறு தைலங்களை மேலெங்கும் பூசிக் கொண்டனர். பெண்களையும் ஆண்களையும் அழகுபடுத்துவதையே தொழிலாகக் கொண்ட ஒரு சில மேனி

மினுக்கிகள் (Adorners) பாரசீகத்தில் வாழ்ந்து வந்தனர். அவர்களைக் கிரேக்கர்கள் காஸ்மெடெய் (Kosmetai) என அழைத்தனர். நறுமணமிக்க பூச்சுகளை அவர்கள் மேனியில் பூசிக் கொள்வது வழக்கம். விலையுயர்ந்த வாசனைத் திரவியங்களை உடலில் பூசிக்கொள்ளாமல் அரசர்கள் வெளிச்செல்ல சம்மதிக்க மாட்டார்கள் எனக் கூறப்படுகிறது.

**பழக்க வழக்கங்களும் ஒழுக்கமும்**

பாரசீகர்கள் தங்களது அன்றாட வாழ்க்கையில் பல்வேறு ஆசார விதிகளை (Etiquetta) மிகக் கவனத்துடன் கடைப்பிடித்தனர். ஸெர்க்ஸீஸ் (Xerxes) மன்னரது ஆட்சிக் காலம் வரை அவர்கள் உண்பதிலும், உடுப்பதிலும், குடிப்பதிலும் பெரிதும் மிதமாகவே நடந்துகொண்டனர். ஒரு நாளைக்கு ஒரு முறையே அன்னூர் வயிருர உண்பது வழக்கம். தண்ணீரைத் தவிர வேறெவ்விதமான மதுவகைகளையும் அவர்கள் அருந்துவது வழக்கமில்லை. உடலையும் உள்ளத்தையும் தூய்மையாக வைத்துக் கொள்வதில் அவர்கள் காட்டிய அக்கறை கொஞ்சநஞ்சமல்ல. தெருவில் நின்றுகொண்டு தின்பண்டங்களைத் தின்பதையும், குடிப்பதையும், நடைபாதையில் எச்சில் துப்புவதையும், மூக்கைச் சிந்துவதையும் அவர்கள் நாகரிகக் குறைவாகக் கருதினர். நகங் களைதல், மயிர் தரித்தல், மலங்கழித்தல், சிறுநீர் கழித்தல், மாதவிலக்குப் போன்றவை உடலையும் உள்ளத்தையும் அசுத்தப் படுத்துவதாகக் கருதப்பட்டு, அத்தகைய அசுத்தத்தைப் போக்கு தற்கான பல்வேறு குளியல்கள், நீராட்டுகள், மந்திர உச்சாடனங்கள், சடங்குகள் பற்றி ஜொராஸ்திரிய வேத நூல்கள் பெரிதும் விதந்து ஓதுகின்றன. குளிக்காமலும், கைகளை நன்கு கழுவாமலும் இறைவனுக்குரிய ஆராதனைகளைச் செய்வது பெரிய பாவமாகக் கருதப்பட்டது. அசுத்தமான உடலில், தெய்வீகத் தேவதைகள் வந்து எங்ஙனம் குடிபுகும்? எங்ஙனம் ஆட்கொள்ளும் என அவர்களின் வேத நூல்கள் கேட்கின்றன. உடல் தூய்மையைப் பாதுகாப்பதில் பாரசீகர்கள், யூதர்களுக்கும், பிராமணர்களுக்கும் சற்றும் சளைத்தவர்கள் அல்லர் என்பதையே அவர்தம் ஆசார அநுட்டானங்கள் நமக்குத் தெள்ளிதின் புலப்படுத்துகின்றன.

விழாக்காலங்களில் மக்கள் ஒன்று கூடும் வேளைகளில் ஒவ்வொருவரும் தூய வெண்ணிற ஆடைகளையே அணியவேண்டுமென்பது வற்புறுத்தப்பட்டது. தொத்து நோய்களால் பீடிக்கப் பட்டவர்கள் விழாக் கூட்டங்களில் கலந்துகொள்ள அநுமதிக்கப் படவில்லை. தடையை மீறி அத்தகையோர் மக்களிடையே புகுந்து தங்களது நோயைப் பிறருக்கும் பரப்பினுல் அவர்கள் கடுமையான தண்டனைக்குட்படுத்தப்பட்டனர். காம வயப்பட்டுத் தற்புணர்ச்சி

(Onanism) ஒருபால் புணர்ச்சி (Sodomy) போன்ற கூடா ஒழுக்கங்களில் ஈடுபட்டோர் அசுத்தமிக்கவர்களாகக் கருதப்பட்டுக் கசையடி கொடுக்கப்பட்டனர். வரையறையற்ற உடற் கூட்டுறவு (Promiscuity), பரத்தமை (Prostitution) முதலிய கெட்ட நடத்தைகளில் ஈடுபட்டோரை ஊளையிடும் ஓநாய்கள், நஞ்சுமிழும் பாம்புகள் போன்றவைகளை விடக் கொடுமையானவர்களாகக் கருதிக் கொல்லவேண்டும் எனப் பாரசீக வேத நூல்கள் ஆணையிடுகின்றன. ஆணுயினும், பெண்ணுயினும் கூடா ஒழுக்கங்களில் ஈடுபட்டோர் சமமாகவே தண்டிக்கப்பட்டனர். ஒருபால் புணர்ச்சியை அவெஸ்த வேதம் மிக வன்மையாகக் கண்டிக்கிறது. சிறு பையன்கள் மீது மோகங் கொள்ளும் கெட்ட பழக்கத்தை (Pederesty) பாரசீகர்கள் கிரேக்கரிடமிருந்து கற்றுக்கொண்டனர் என்று ஹெரோடோடஸ் எனும் கிரேக்க வரலாற்ருசிரியர் கூறுவதிலிருந்து ஒருபால் புணர்ச்சி நாட்டில் பரவலாக இருந்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது. பெண்களைப் பலவந்தமாகக் கடத்திக் கொண்டு போகிற வழக்கத்தையும் பாரசீக நூல்கள் பெரிதும் கண்டிக்கின்றன. ஆனல், நடைமுறையில் வன்முறைக் கடத்தல் அவ்வளவாகத் தண்டிக்கப்படவில்லை எனவும், அதற்குக் காரணம், ஒரு பெண்ணின் மறைமுகமான ஒப்புதலின்றி அவளை யாரும் கடத்திக்கொண்டு போக முடியாது எனும் எண்ணமேயாகுமென்றும், ஹெரோடோடஸ் கூறுகிருர்.

ஒரு குடும்பத்தின் உயர்வுபற்றியும், புனிதம் பற்றியும் அவெஸ்த வேதம் பரக்கக் கூறுகிறது. ‘தனியே வாழ்பவனை விட ஒரு மனைவியோடு இல்லறம் நடத்துபவன் உயர்ந்தவன் ஒரு வீட்டை வைத்து நடத்துபவன் வீடில்லாதவனை விட உயர்ந்தவன். பல மக்களை உடையவன், பிள்ளையில்லாதவர்களை விடப் பல மடங்கு உயர்ந்தவன். செல்வத்தை உடையவன் அது இல்லாதவனை விட உயர்ந்தவன்’ என அவெஸ்தம் கூறுகிறது. பரலோகத்தில் அநுபவிக்கப்படும் பேரின்பத்துக்கு அடுத்தபடியான இன்பத்தை ஒருவன் அடையக்கூடிய இடம் ஒருவனுடைய வீடேயாகும் என்றும், புனிதமான புரோகிதர், அன்புக்குரிய மனைவி மக்கள், பயன்தரும் ஆடு மாடுகள் இவையெல்லாம் நிறைந்த வீட்டை உடையவனைவிடப் பாக்கியசாலி எவனும் இருக்க முடியாதென்றும் அவ்வேதம் உரைக்கின்றது. வீட்டு மிருகங்களில், நாயக்கு மிக உயர்ந்த இடம் அளிக்கப்படுகிறது. நஞ்சிப்போன உணவை நாய்க்கு இட்டவர்களுக்குக் கடுமையான தண்டனை விதிக்கப்பட்டது. பெட்டை நாயைக் கொன்றவனுக்கு ஆயிரத்து நூறு கசையடிகள் வழங்கப்பட்டன. பல நாய்க்குட்டிகளைச் சமுதாயத்துக்கு வழங்கக்கூடியதென்பதாலேயே பெட்டை

நாய் பெரிதும் போற்றப்பட்டது. மாடுகளின் உற்பத்திக்குக் காரணமான எருதும், பசுவும் மிகவும் பெருமைப்படுத்தப் பட்டன. இந்தியர்களைப் போலப் பாரசீகர்களும் பசுவைத் தெய்வ மாக எண்ணி வழிபட்டனர். மக்கட் செல்வத்தை அவர்கள் பெரிதும் போற்றினர். ஒன்றிக் கட்டையாக வாழும் கன்னியரை யும், காளைகளையும் சட்டம் அநுமதிக்கவில்லை. கருச்சிதைவுக்குக் (abortion) கடுமையான தண்டனை விதிக்கப்பட்டது. திருமண மாகுமுன்பே ஓர் பெண் கருவுற்றுவிட்டாலும் (fornication), கணவனையின்றிப் பிற ஆடவரோடு கூடிக் கருவுற்றுவிட்டாலும் (adultery), கருவைச் சிதைக்காமலிருந்தால், அவர்கள் மன்னிக் கப்பட்டார்கள். எப்படியாயினும் மக்கள் பெருக்கம் நாட்டில் ஏற் படவேண்டுமென்பதைப் பாரசீகர்கள் விரும்பினர் எனத் தெரிகிறது. பட்டாளத்துக்கும் பல்வேறு லாபகரமான தொழில்களைச் செய்வ தற்கும் ஆட்கள் நிறையத் தேவைப்பட்டதால் ஆண் மக்களை அவர்கள் பெரிதும் விரும்பினர். பெண் மக்கள் பெறுவதை ஓர் சாபக் கேடென நினைத்தனர். நிறைய ஆண் மக்களைப் பெறு வான் வேண்டி, பலதார மணம் (Polygamy), வைப்பாட்டி முறை (Concubinage) போன்ற வழக்கங்களைச் சட்டம் அநுமதித்தது. நிறைய ஆண் மக்களைப் பெற்ற தந்தை ஒருவனுக்கு அரசர் பரிசுகள் அனுப்பிவைப்பது வழக்கம்.

***பெண்கள் நிலை***

பெண்கள் சமுதாயத்தில் சற்று உயர்வாகவே மதிக்கப்பட்ட னர். முகமூடியின்றி அவர்கள் வெளியே எங்கு வேண்டுமானாலும் போய் வரலாம். சொத்துகளை வைத்துக்கொள்ளவும், அவற்றை நிர்வகிக்கவும் அன்னாருக்கு முழு உரிமை தரப்பட்டிருந்தது. கணவனுக்குப் பதிலாகப் பல குடும்ப காரியங்களை அவர்கள் நிர் வகிக்க அனுமதிக்கப்பட்டனர். ஆனால், டேரியஸ் மன்னரது காலத்துக்குப் பின்னர், பெண்களின் நிலை பெரிதும் இழிவுற்றது. மாத விலக்குக் காலங்களில் தற்காலிகமாக ஒதுக்கி வைக்கப் பட்ட மகளிர் நிரந்தரமாகவே சமுதாயத்திலிருந்து ஒதுக்கி வைக் கப்பட்டனர். உயர்குலப் பெண்டிர் நன்கு மூடி மறைக்கப் பெற்ற பல்லக்குகளில் ஏறியே வெளியே சென்றனர். அரண்மனை யில் பெண்டிர் அந்தப்புரம் எனும் ஒதுக்கிடத்தில் ஆடவர் கண் படாமல் வாழ்ந்தனர். திருமணமான பெண்கள் கணவனையன்றி ஏனைய ஆடவரிடம் பேசுவதுகூடக் குற்றமாகக் கருதப்பட்டது. சொந்த சகோதரரோடு பழகுவதற்குக்கூடத் தடை விதிக்கப் பட்டது. பொது நினைவுச் சின்னங்களிலும், பட்டயங்களிலும் பெண்களின் பெயர்கள் இடம் பெறுவதென்பது முயற்கொம்பாயிருந் தது. ஆனால், பரத்தையர், வைப்பாட்டிகள் போன்றோர் எவ்விதக்

கட்டுப்பாடுகளுமின்றிச் சுயேச்சையாகத் திரிந்தனர். அரசவைகளில்கூட அவர்களது செல்வாக்குப் பிற்காலத்தே மிக ஓங்கியிருந்தது. சீமான்களும், அரசர்களும் நிறைய வைப்பாட்டிகளை வைத்துக்கொண்டனர். போருக்குப் போகும்போதுகூடச் சில சீமான்கள் தம் கூத்தியரை உடன் அழைத்துச் சென்றனர். மன்னரின் அந்தப்புரத்தில் 300க்கும் மேற்பட்ட கூத்தியர் வாழ்ந்ததாக அறிகிறோம். பொதுவாகப் பெண்களுக்குக் கணவன்மார்களைப் பெற்றோரே தேர்ந்தெடுத்தனர். நெருங்கிய உறவினர்களைக்கூட மணந்துகொள்ளும் வழக்கம் பாரசீகரிடம் காணப்பட்டது. சான்றாக, அண்ணன் தனது தங்கையையும், தந்தை தனது மகளையும் மணந்துகொள்வதுகூடக் குற்றமாகக் கருதப்படவில்லை.

### *தீய பழக்கங்கள்*

மிக உயர்ந்த கோட்பாடுகளைக் கொண்ட சமயத்தை மேற்கொண்டொழுகிய பாரசீகர்களிடையே மிருகத்தனமான ஒரு சில பழக்கங்களும் இருந்தன என்பது வியப்பாகவே உள்ளது. சான்றாகத் தம்மிடம் தோல்வியுற்ற மன்னர்களைப் பாரசீக அரசர்கள் நடத்திய விதம் உண்மையில் மிகக் கொடூரமாக இருந்தது. முதலாம் டேரியஸ் மன்னர் தமது பெஹிஸ்டன் பட்டயத்தில் இங்ஙனம் குறிப்பிடுகிறார். 'ஃபிரவர்திஷ் (Fravartish) என்பான் கைது செய்யப்பட்டு என்முன் கொணரப்பட்டான். நான் அவனது மூக்கையும், நாக்கையும், காதுகளையும் அறுத்தெறிந்தேன். கண்களைப் பிடுங்கினேன். அவனது கைகளிலும் கால்களிலும் விலங்கிட்டு அவனை எனது அரண்மனையில் வைத்திருந்தேன். அப்போது எல்லா மக்களும் வந்து அவனைப் பார்த்தார்கள். பின் எக்படானவில் அவன் சிலுவையிலறையப்பட்டான்.' இங்ஙனம், கைதிகளைச் சித்திரவதை செய்வது அக்காலத்தே சர்வ சாதாரணமாக நடைபெற்றது. இரண்டாம் அர்டாஸெர்க்ஸீஸ் (Artaxerxes II) காலத்தில்கூட இத்தகைய கொடுமைகள் நிகழ்ந்ததாகப் புளூடார்க் (Plutarch) எனும் வரலாற்றாசிரியர் கூறுகிறார். தேசத்துரோகிகளும், மன்னருக்கெதிராகச் சதி செய்தவர்களும் ஈவிரக்கமின்றிச் சிலுவையிலறையப்பட்டுக் கொல்லப்பட்டனர். அவர்களது சகாக்கள் அடிமைகளாகச் சந்தைகளில் விற்கப்பட்டனர். அவர்களது நகரங்கள் சூறையாடப்பட்டன. அந்நகரில் வாழ்ந்த சிறுவர்களுக்கு விதையடிக்கப்பட்டது (Castrated). சிறுமிகள் பிரபுக்களின் அந்தப்புரத்துக்கு விற்கப்பட்டனர். இங்ஙனம் மன்னர்கள் தங்களது எதிரிகளை நடத்தியதைக் கொண்டு, மக்களும் அவ்விதமே இரக்கமற்ற அரக்கர்களாய் இருந்தனரென நாம் ஓர் முடிவுக்கு வந்துவிடுவதற்

கில்லை. பொதுவாக, மக்கள் தாராள குணமும், தயாள சிந்தையும் கொண்டவர்களாயிருந்தனர். அவர்களது விருந்தோம்பும் மனப்பான்மையைப் பலரும் பாராட்டியுள்ளனர். மற்றும் அவர்கள் நாணயத்துக்குப் பேர் போனவர்கள். நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள். சொன்ன சொல்லைக் காப்பாற்றுவதில் அவர்கள் பெரிதும் அக்கறை யெடுத்துக்கொண்டனர். உடன்பாடு ஒன்றைச் செய்துகொண்டால் அதை அவர்கள் எவ்வாறேனும் மீற மாட்டார்கள். ஒருவரை ஒருவர் காட்டிக்கொடுக்க மாட்டார்கள். பாரசீகர்களுக்கு எதிராகப் போரிடும் படையில், ஒரு பாரசீகனைக் கூடச் சேர்க்க முடியாதெனக் கூறப்படுகிறது.

## பொருளாதார வாழ்க்கை

***விவசாயம்***

விவசாயமே மக்களின் முக்கிய தொழிலாய்த் திகழ்ந்தது. எல்லாம் வல்ல ஆண்டவர்க்கு மிகப் பிடித்தமான தொழில் உழவு ஒன்றே என ஜெண்ட் அவெஸ்தம் கூறுகிறது. நிலங்களில் ஒரு பகுதி தனிப்பட்ட சிறு நிலச்சுவான்தார்களால் சாகுபடி செய்யப்பட்டது. அன்னார் தத்தம் நிலங்களைத் தாமே உழுது பயிரிட்டனர். அவர்களில் சிலர் ஒன்ருகக் கூடிக்கொண்டு, கூட்டு விவசாயத்திலீடுபட்டனர். மற்றும் சில நிலங்கள் பெரும் நிலப் பிரபுக்களுக்குச் சொந்தமாயிருந்தன. பிற நாட்டைச் சேர்ந்த அடிமைகளின் உதவி கொண்டு அன்னுரிற் சிலர் தமது நிலங்களைப் பயிரிட்டனர். மற்றும் சிலர் நிலங்களைக் குத்தகைக்கு விட்டு, விளைச்சலில் ஒரு பகுதியை வாரமாகப் பெற்றுக்கொண்டனர். மரத்தாலான கலப்பை உழவுக்குப் பயன்படுத்தப்பட்டன. அதன் கொழுமுனை உலோகத்தால் செய்யப்பட்டிருந்தது. எருதுகளைக் கலப்பையில் பூட்டியே உழவர் நிலங்களை உழுதனர். வயலுக்கு வேண்டிய நீரைச் செயற்கை நீர்ப்பாசன வசதி மூலம் உழவர் பெற்றுக்கொண்டனர். பார்லி, கோதுமை முதலிய உணவு தானியங்களே முக்கியமாகப் பயிரிடப்பட்டன. தானியங்களையே அன்றி, இறைச்சியையும் மக்கள் விரும்பி உண்டனர். போதையளிக்கக்கூடிய மதுபானங்களையும் அவர்கள் அருந்தியதாகத் தெரிகிறது. சைரஸ் என்ற மன்னர் தம் படைவீரர்க்கு மதுவை வழங்கி ஊக்குவித்தார் எனவும், அமைச்சர்கள் மது அருந்தாமல் ஆலோசனைகளிலீடுபடுவதில்லை எனவும் கேள்விப்படுகிறோம். மது மயக்கத்தில் தீட்டப்பட்ட திட்டங்கள் அடுத்த நாள் காலையில் மீண்டும் பரிசீலிக்கப்பட்டன வாம். ஹோமா (Haoma) என்ற ஒரு வகை மதுபானம் கடவுளர்க்கு ஆஹுதியாக வழங்கப்பட்டதெனவும், அதை அருந்திய பக்தர்கள் புதிய தெம்பையும், தெய்வ பக்தியையும் பெற்ற

னர் எனவும் கூறப்படுகிறது. இப்பானம் ஹோமா எனும் செடியின் வேர்களிலிருந்து இறக்கப்பட்டது. செல்வந்தர்களே அதை உண்டனர். சாதாரண மக்கள் தானியங்களினின்றும் இறக்கப்பட்ட மதுவை உண்டனர்.

*தொழில்கள்*

தொழில் வளத்தைப் பெருக்குவதில் பாரசீக அரசு அவ்வளவாக அக்கறை எடுத்துக்கொள்ளவில்லை. தமக்குட்பட்ட நாடுகள் பல்வேறு தொழில்களில் ஈடுபடுவதை ஊக்குவித்து, அவற்றின் மூலம் உற்பத்தியான பொருள்களைப் பாரசீக மன்னர்கள் திறையாகப் பெற்றுக்கொண்டனர். நாட்டின் பல பாகங்களைப் பெருவழிகள் மூலம் இணைப்பதில் மன்னர்கள் பெரிதும் ஊக்கம் காட்டினர். பாரசீகப் பொறியியல் வல்லுநர்களின் சீரிய பணியின் விளைவால் சார்டிஸ் (Sardis) நகரத்திலிருந்து சூஸா (Susa) நகரம்வரை ஒரு பாதை அமைக்கப்பட்டதாகவும், அதன் நீளம் 1500 மைல்கள் எனவும் அறிகிறோம். பாரசீக நீட்டலளவையின் பெயர் பரசங் (Parasang) என்பதாகும். ஒரு பரசங் 3·4 மைல்களுக்குச் சமம். நான்கு பரசங்குகளுக்கு ஒன்றாகப் பல சத்திரங்கள் வழிநெடுகக் கட்டப்பட்டிருந்ததாகவும், அவை பயணிகளின் விடுதிகளாகவும், தபால் நிலையங்களாகவும் பயன்பட்டன என்றும் ஹெரோடோடஸ் எனும் கிரேக்க வரலாற்றாசிரியர் கூறுகிறார். ஒவ்வொரு நிலையத்திலும், தபால்களைத் தாங்கிச்செல்லவென்று குதிரைகள் தயாராக வைக்கப்பட்டிருந்தன. அவை மூலம், ஒரே வாரத்தில் கடிதங்கள் சூஸாவிலிருந்து சார்டிஸுக்குச் சென்று சேர்ந்தன என அறிகிறோம். படைவீரர்கள் செல்வதற்கே இப்பாதைகள் பெரும்பாலும் பயன்பட்டன எனினும், வாணிபத்துக்கும், கலாசாரப் பரவலுக்கும் இவை பயன்படுத்தப்பட்டன. பாரசீகப் பண்பும் பழக்க வழக்கங்களும் பிறநாடுகளில் பரவ இப்பெருவழிகள் ஏதுவாயிருந்தன.

கடல் வாணிபத்திலும், கப்பல் கட்டும் தொழிலிலும் பாரசீக அரசர்கள் சிறிதும் அக்கறை காட்டவில்லை. அவர்கள் தமக்கென்று ஓர் நாவாய்ப் படையைக் (Navy) கட்டிக்கொள்ளவில்லை. வேண்டும்போது கிரேக்கர்களிடமிருந்தும் பினீஷியர்களிடமிருந்தும் கப்பற்படையை அவர்கள் கடன் வாங்கிக்கொண்டனர். பாரசீக வளைகுடாவையும் மத்தியதரைக்கடலையும் இணைத்து ஓர் கால்வாயை டேரியஸ் மன்னர் வெட்டினார். ஆனால், அவரது வழித்தோன்றல்களின் கவலையின்மையால் அது விரைவில் மணல் தூர்ந்துவிட்டது. பாரசீகர்கள் வாணிபம் செய்வதை ஓர் இழிந்த தொழிலாகக் கருதினர். சந்தை என்பது பொய்யும் புனைசுருட்டும்

போட்டி போட்டுக்கொண்டு வளருமிடம் என அவர்கள் நினைத்தனர். எனவே யூதர்கள், பினீஷியர்கள், பாபிலோனியர்கள் போன்ற பிற நாட்டாரே பாரசீக வாணிபத்தைத் தனியுரிமை (monopoly) ஆக்கிக் கொண்டனர். அவரவர்க்குத் தேவையான பொருள்களை அவரவர்களே தமது நிலங்களில் உற்பத்தி செய்துகொள்வதில் செல்வர்கள் பெருமை அடைந்தனர். பிறரிடமிருந்து ஒன்றை வாங்குவதும், பிறருக்குத் தம் பொருளை விற்பதும் கேவலமாகக் கருதப்பட்டது. எனினும், நாட்டில் வாணிபம் ஓரளவு நடைபெற்று வந்தது. ஆரம்பத்தில் பண்டமாற்று முறையிலேயே (Barter system) வாணிபம் நடைபெற்றது. நாளடைவில் நாணயங்கள் புழக்கத்துக்கு வந்தன. லிடிய நாட்டிலிருந்து அதைப் பாரசீகர்கள் கற்றுக் கொண்டனர். டேரியஸ் மன்னர் தங்க நாணயங்களையும், வெள்ளி நாணயங்களையும் வெளியிட்டார். ஒரு தங்க நாணயம் 13.5 வெள்ளிக் காசுகளுக்குச் சமமாக மதிக்கப்பட்டது.

## அரசியல் நிலை

*அரசர்*

பாரசீகர்கள் உலகுக்கு அளித்துச் சென்றுள்ள கொடைகளுள் அவர்களின் சீரிய ஆட்சி முறையே தலைசிறந்ததாகும். பேரரசின் தனிப்பெருந் தலைவராகத் திகழ்ந்தவர் மன்னரேயாவர். அவர் போர்வீரர் எனப் பொருள்படும் க்ஷத்ரர் (Khshathra) என அழைக்கப்பட்டார். போர் வீரர்களைக் குறிக்கும் க்ஷத்திரியர் என்ற வடமொழிச் சொல் இதினின்றும் பிறந்திருக்கக் கூடுமெனத் தெரிகிறது. பேரரசருக்கு உட்பட்டுப் பல சிற்றரசர்கள் இருந்தமையால் அவர் தம்மை 'மன்னாதி மன்னர்' (King of Kings) என அழைத்துக் கொண்டார். கொள்கை அளவில் மன்னர் வரம்பற்ற அதிகாரமுடையவர். காரணங் காட்டாமலும், விசாரணையின்றியும் அவர் ஒருவனைச் சிரச்சேதம் செய்யலாம். அவரது வாயினின்றும் வந்த வார்த்தைகள் தெய்வீக வாக்காகக் கருதப்பட்டன. அவர் இட்டதே சட்டம். மன்னர் கூற்றுக்கு எதிர்மாற்றம் கூற எத்தகைய பிரபுக்கும் உரிமை கிடையாது. அரசரின் செயல்களைக் குறை கூறவோ, ஏளனம் செய்யவோ, அவரிடம் பணிபுரியும் பெரும் அமைச்சர்களுக்குக் கூடத் துணிவில்லை. அரசரின் கைகளில் தண்டனை பெற்ற குற்றவாளிகள் அதை ஓர் பெரும் பேருகக் கருதி அவனை வாழ்த்தினர். நிரபராதியான தனது மகனைக் கொன்றுவிட்ட அரசனின் கொடுங்கோன்மையைக் குறை கூறுமல், அவனது வில்வித்தையின் மேன்மையை ஓர் தந்தை புகழ்கின்ற அளவுக்கு, அடிமை மனப்பான்மை மக்களிடம் மண்டிக் கிடந்தது. இங்ஙனம் சர்வ வல்லமை பொருந்திய மன்னர்கள் நாட்டின் நிர்வாகத்தையும்

தாமே மேற்கொண்டு நடாத்தினர். சிறு காரியங்களிலும் தலையிட்டு வந்தனர். ஆனால், நாளடைவில் மன்னர்கள் ஆட்சிப் பொறுப்பில் சலிப்புற்று, மது அருந்துவதிலும், சூதாட்டத்திலும், மங்கையர் மயக்கத்திலும் பொழுதுபோக்கலாயினர். ஆட்சிப் பொறுப்பு பெரும் பிரபுக்கள், அமைச்சர்கள், நம்பிக்கைக்குப் பாத்திரமான அலிகள் (eunuchs) முதலியோரிடம் ஒப்படைக்கப் பட்டது. இராணிகள் வதிந்த அந்தப்புரத்துக்குள் தாராளமாகப் போய்வர உரிமை பெற்றிருந்த அலிகளான அரச சேவகர்கள், நாட்டில் பல சதிகள் ஏற்படக் காரணமாயிருந்தனர். ஒரு மன்னர் இறந்ததும் யார் பட்டத்துக்கு வருவது என்பது வரையறுக்கப் பெறுதலில் பலர் அதற்குப் போட்டியிட்டனர். போட்டியில் அலிகளும் கலந்து கொண்டனர். பேரரசின் வீழ்ச்சிக்கு அவர்கள் ஓர் முக்கிய காரணமாயமைந்தனர்.

*பிரபுக்கள்*

அரசருக்கு அடுத்தபடியாக நாட்டில் செல்வாக்குடன் வாழ்ந்தவர்கள் பிரபுக்கள் எனும் உயர்குடிப் பெருமக்களாவர் (Aristocracy). டேரியஸ் மன்னருக்கு அவரது எதிரிகளை முறியடிக்க ஆறு பிரபுக் குடும்பங்களுக்குத் தனிப்பட்ட சலுகைகளும் உரிமைகளும் வழங்கப்பட்டன. மற்றும் பல பிரபுக்கள் மன்னரிடமிருந்து நிலங்களை மானியமாகப் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்தனர். மன்னருக்கு அவ்வப்போது திறை செலுத்தி வருவதும், ஆபத்துக் காலங்களில் படை உதவி புரிவதும் அவர்தம் முக்கிய கடமைகளாகும். மற்றபடி அவரவர்களின் பண்ணைகளில் அவர்கள் தன்னிச்சையாகவே செயல்பட்டனர். வரி வசூலிக்கவும், நீதி பரிபாலனம் செய்யவும், படை திரட்டவும் அவர்கள் முழு உரிமை பெற்றிருந்தனர். மன்னருக்கு அவ்வப்போது ஆலோசனை கூறவும் அவர்கள் உரிமை பெற்றிருந்தனர். முக்கிய காரியங்களில் ஈடுபடுமுன் மன்னர் அவர்களைக் கலந்தாலோசிப்பது வழக்கம். அவர்களின் அறிவுரைகளுக்கு அநேகமாக அரசர் செவிமடுப்பார். ஆனால், அவற்றை மீறிச் செயல்படவும் மன்னருக்கு அதிகாரம் இருந்தது.

*படைகள்*

ஓர் யதேச்சாதிகாரி போன்று செயல்பட்ட மன்னனுக்கு உறு துணையாயிருந்தது அவனது பெரும் படையாகும். பதினைந்து வயது முதல் ஐம்பது வயதுக்குட்பட்ட, எல்லா ஆண்களும் கட்டாயமாக இராணுவ சேவை செய்யவேண்டுமென்பது வற்புறுத்தப்பட்டது. தமது மக்களைப் போருக்கு அனுப்ப மறுத்த தந்தையர்கள் கொடூர

மாகக் கொலை செய்யப்பட்டனர். தனது நான்கு மக்களைப் படைக் களத்துக்கு அனுப்பிவிட்டு, ஐந்தாவது மகனைத் தனது பண்ணை நிர்வாகத்துக்காக விட்டுவிடுமாறு ஒரு தந்தை மன்றாடிக் கேட்டதற்காக, அவ்வைந்தாம் மகனை இரு கூறுகப் பிளந்து படைகள் செல்லும் பாதையின் இருமருங்கிலும் தொங்கவிடுமாறு ஸெர்க்ஸீஸ் (Xerxes) எனும் பேரரசர் ஆணையிட்டதாக அறிகிறோம். எனவே, அரசரின் படையில் ஏராளமான வீரர்கள் இருந்தனர். ஸெர்க்ஸீஸ் மன்னரது படையில் 1,800,000 வீரர்கள் இருந்ததாகக் கூறப்படுகிறது. இருப்பினும் அப்படையில் ஓர் கட்டுப்பாடு இல்லை. அரசரைக் காக்க ஓர் தனிப்பட்ட காவல்படை இருந்தது. அதில் தேர்ந்தெடுத்த இரண்டாயிரம் குதிரை வீரரும், காலாட்படையினரும் இருந்தனர். ஏனைய படைப்பகுதியில் பல்வேறு மாநிலங்களிலிருந்து பிரபுக்களால் அனுப்பப்பட்ட போர் வீரர்கள் இருந்தனர். அவற்றின் தளகர்த்தர்களிடையே ஓர் ஒற்றுமை இல்லை. அதனால்தான் அளவில் சிறியதும் அதே சமயத்தில் கட்டுப்பாடு மிக்கதுமான கிரேக்கப்படையிடம் மாரத்தான், பிளேட்டா போன்ற போர்க்களங்களில் பாரசீகப் படை தோல்வியுற நேர்ந்தது. வீரர்கள் அம்புகள், வாள்கள், ஈட்டிகள், குத்து வாட்கள், கவண்கள், கத்திகள் போன்றவற்றைப் பயன்படுத்தினர். தற்காப்புக்காகக் கேடயம், கவசம், தொப்பி முதலியவைகளையும் அவர்கள் அணிந்திருந்தனர். படைவீரர்களோடு, ஏராளமான வேலையாட்களும், பரத்தையரும், அலிகளும், எழுத்தர்களும் உடன் சென்றனர். படை நகரும்போது ஓர் சிறு நகரம் இடம்விட்டு இடம் போவதுபோன்று தோன்றியது. படையின் ஒரு பகுதி தோற்றவுடன், முக்கியமாக அரசரது காவற் படை தோற்றதும் படையில் குழப்பம் ஏற்பட்டு யாவரும் கலைந்து ஓடிவிடுவது வழக்கமாகிவிட்டது.

### சட்டம்

சட்டங்களுக்கெல்லாம் பிறப்பிடமாகத் திகழ்பவர் அஹுரைமெஸ்டா எனும் இறைவனே ஆவார் என்றும், அவரது விருப்பத்தைப் பிரதிபலிப்பவர் அரசரேயாதலால், அரசரின் ஆணைகளே சட்டங்களாக மதிக்கத்தக்கன என்றும் பாரசீக மக்கள் நம்பினர். மன்னரின் ஆணையை மீறுவது கடவுளுக்கு விரோதமாகச் செய்யப்படும் பாவமாகக் கருதப்பட்டது. சட்டத்தை மீறியவர்களைப் புரோகிதர்களே ஆரம்பத்தில் விசாரித்துத் தீர்ப்புக் கூறினர். ஆனால், நாளடைவில் சட்டங்களின் எண்ணிக்கை பெருகிவிட்ட காரணத்தால் அதற்கு விளக்கம் கூற வழக்கறிஞர்கள் பலர் தேவைப்படலாயினர். எனவே, நாட்டில் ஓர் வழக்குரைஞர் கூட்டம் தோன்றலாயிற்று. வழக்குகளை விசாரிப்பதில் தனிப்பட்ட ஒழுங்கு

முறைகள் கடைப்பிடிக்கப்பட்டன. வழக்கு அத்துமீறி ஒத்திப் போடப்படுவதைத் தடுக்க வேண்டி, ஒவ்வொரு வழக்கும் தீர்க்கப் படுவதற்குக் குறிப்பிட்ட காலவரையறை வகுக்கப்பட்டது. நடுவர்கள் மூலமாக வழக்குகளைத் தீர்த்துக்கொள்ளவும் மக்கள் அநுமதிக்கப்பட்டனர். வழக்கு மன்றத்தில் வாதி பிரதிவாதிகள் பிரமாணம் (Oath) எடுத்துக்கொள்ளும்முறை கடைப்பிடிக்கப் பட்டது. குற்றவாளிகளை ஜாமீனில் விடும் வழக்கமும் நிலவியது. கடுஞ்சோதனை முறைகளைக் (Ordeal) கையாண்டு உண்மைகளைக் கண்டுபிடிக்கு முறையும் அவ்வப்போது கடைப்பிடிக்கப்பட்டது. நீதிபதிகள் இலஞ்சம் வாங்குவது பெருங்குற்றமாகக் கருதப்பட்டது. இலஞ்சம் வாங்கிய ஒரு நீதிபதியை உயிரோடு தோலை உரித்துக் கொல்லுமாறு கெம்பைஸஸ் (Cambyses) என்ற மன்னர் ஆணை யிட்டதாக அறிகிறோம். அரசரே நாட்டின் தலைமை நீதிபதியாகத் திகழ்ந்தார். சில சமயங்களில் அவர் தனக்குப் பதிலாக ஒரு மூதறிஞரை நீதிபதியாக நியமிப்பதும் உண்டு. அரசருக்கு அடுத்தபடியாக ஏழு நீதிபதிகளைக் கொண்ட உயர் நீதிமன்றம் இருந்தது. அதற்குக்கீழ் நாடெங்கும் பல நீதிமன்றங்கள் இருந்தன. வழக்குகளில் இறுதித் தீர்ப்பு வழங்கும் அதிகாரம் மன்னருக்கே உரியது. அவர் பார்த்து எத்தகைய குற்றவாளியை யும் மன்னித்துவிடவும் கூடும்.

குற்றவாளிகளுக்கு அளிக்கப்பட்ட தண்டனைகள் மிகவும் கடுமையாக இருந்தன. சான்றுக இடையர்களின் நாயைக் கொன்ற வனுக்கு இருநூறு கசையடிகள் கொடுக்கப்பட்டன. கசையடி பெற விரும்பாதவர்கள் ஓர் அடிக்கு ஆறு ரூபாய் வீதம் அபராதத் தொகையைக் கட்டிவிட அநுமதிக்கப்பட்டார்கள். பெரிய குற்றங் களுக்குச் சூடு போடுதல், உடலுறுப்புகளைக் குறைத்தல், குருடாக்கல், சிறை செய்தல் போன்ற தண்டனைகள் வழங்கப் பட்டன. மரண தண்டனை சாதாரணமாக வழங்கப்படுவதில்லை. ஆனால், அரச துரோகம், பலவந்தக் கற்பழிப்பு (rape), ஒருபால் புணர்ச்சி, கொலை போன்ற குற்றங்களுக்கும், அரசருக்குச் சொந்த மான கூத்தியர் சொத்துகள் முதலியவற்றை அபகரிக்க முயற்சிப் போருக்கும் மரண தண்டனை விதிக்கப்பட்டது. அத் தண்டனை பல்வேறு முறைகளில் வழங்கப்பட்டது. நஞ்சூட்டுதல், கழுவேற்றுதல், சிலுவையில் அறைதல், தூக்கிலிடல், கல்லால் அடித்தல், இரு கற்களுக்கிடையே வைத்து தலையை நசுக்கல், தலையை விட்டுவிட்டு உடலின் ஏனைய பகுதிகளைப் புதைத்தல், வெப்பமிக்க சாம்பலை உடலின்மீது பூசுதல் முதலிய முறைகள் கையாளப்பட்டன.

*மாநில அரசுகள்*

பாரசீகப் பேரரசானது இருபது பெரும் மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டது. அவை சத்ரபிகள் (Satrapies) என அழைக்கப் பட்டன. அவை ஒவ்வொன்றையும் அரசரின் பிரதிநிதி ஒருவர் சத்ரபர் (Satrap) எனும் பட்டத்துடன் ஆண்டுவந்தார்: மாநிலத்தில் கலவரங்கள் ஏற்படுவதைத் தடுக்க ஒரு சிறுபடையுடன் கூடிய தளபதி நியமிக்கப்பட்டிருந்தார். மாநில ஆளுனரும் தளபதியும் தனித்தனியே செயல்பட்டனர். அவர்களது செயல்களைக் கூர்ந்து கவனித்து அவ்வப்போது அரசருக்குத் தெரிவிக்கவென்று செயலாளர் ஒருவர் ஒவ்வொரு மாநிலத்திலும் நியமிக்கப்பட் டிருந்தார். இவர்கள் அனைவரையும் உளவுபார்க்க ஏராளமான உளவாளிகள் நாடெங்கும் அமர்த்தப்பட்டிருந்தனர். அவர்கள் மூலம் சதிகாரர்களைக் கண்டுபிடித்து அரசர் அவர்களைப் பதவியில் இருந்து நீக்கிவிடுவது வழக்கம். மாநில ஆளுநர்கள், ஏராளமான எழுத்தர்கள், சிப்பந்திகள் முதலியோர்களின் உதவியைக் கொண்டே ஆட்சியை நடத்தினர். அவர்களுக்கு அரசர் ஊதியம் ஏதும் வழங்கவில்லை. ஆனால், மக்களிடமிருந்து அவர்கள் தமக்கு வேண்டிய பணத்தையும் பொருள்கள் அனைத்தையும் பெற்றுக் கொண்டனர். அவர்களிடம் இருந்து வசூலிக்கப்பட்ட வரிப் பணத்தில் ஒரு பகுதியை அவர்கள் அரசருக்குத் திறையாகச் செலுத்தினர். மற்றும் ஒவ்வொரு மாநிலமும் இன்னின்ன பொருள் களை அரசருக்கு வழங்க வேண்டுமென்பது வரையறுக்கப்பெற் றிருந்தது. சான்றாக, எகிப்து தானியத்தையும், மீடியா ஆடுகளையும், ஆர்மீனியா குதிரைக் குட்டிகளையும், பாபிலோனியா அலிகளையும் வழங்கிவந்தன. இங்ஙனம் வரிகள் ஏராளமாக விதிக்கப்பெற்றிருந் தும்கூட மாநிலங்களில் அமைதியானதும் திறமை மிக்கதுமான ஆட்சி நடைபெற்றுவந்தது. பெரும் பேரரசு ஒன்றை ஏற்படுத்தி அதை வெற்றியுடன் ஆட்சி புரிந்த பாரசீகர்கள் உண்மையில் பாராட்டப்பட வேண்டியவர்களாவர். ரோமானியர்களுக்குமுன் இத்தகைய பெரும் காரியத்தைச் சாதித்த பெருமை அவர்களுக்கு மட்டுமே உரியதாகும். அவர்களது வெற்றிக்குக் காரணம் மாநிலங் களுக்கு அவர்கள் வழங்கிய சுயேச்சையே எனலாம். ஒவ்வொரு மாநிலமும் தனக்குரிய மொழியையும், சட்டங்களையும், சமயத்தை யும், அறநெறிகளையும் தத்தம் இச்சைப்படியே வகுத்துக்கொண் டன. பாரசீகப் பேரரசர்கள் மாநில விவகாரங்களில் அதிகம் தலையிடாததால், பேரரசெங்கணும் மக்கள் திருப்தியாக வாழ்ந் தனர். மன்னர் தன்னை இறைவனின் பிரதிநிதி என எண்ணிய தாலும் அறநெறிக்கு மாறாக நடந்துகொண்டால் இறைவனால் தண்டிக்கப்படுவரென நம்பியதாலும் மிகுந்த பயபக்தியுடனும்

நேர்மையுடனும் ஆட்சி புரிந்தனர். குடிமக்களும் அரசனைத் தெய்வமாக மதித்து அவருக்குக் கீழ்ப்படிவதையே ஒரு கடமையாக எண்ணினர். இத்தகைய நம்பிக்கையினுல்தான்; மிகப் பரந்த ஓர் பேரரசை மன்னர் ஒருவர் தனி நின்று அமைதியுடனும் திறமையுடனும் கட்டியாள முடிந்தது எனலாம்.

## பாரசீக சமயம்

### *ஜொராஸ்டிரஸ்*

பாரசீக மக்களின் சமயம் ஜொராஸ்த்திரியம் (Zoroastrianism) எனப்படுவதாகும். அதை உண்டாக்கியவர், ஜாரதுஸ்ட்ரா (Zarathustra) எனப் பாரசீகர்களால் அழைக்கப்படுகிறுர். ஆனுல், கிரேக்கர்கள் அவரை ஜொராஸ்டிரஸ் (Zoroastres) என அழைத்தனர். நாளடைவில் ஜொராஸ்டர் (Zoroaster) என்ற பெயர் அவருக்கு நிலேத்தது. ஜொராஸ்டர் என்ற ஓர் தனிப்பட்ட மனிதர் உண்மையில் வாழவில்லே என்றும், மிகப் பழங்காலத்தில் வாழ்ந்த பல்வேறு சமயத் தலேவர்களேயே அப்பெயர் குறிக்கிறதெனவும் ஒரு சில ஆசிரியர்கள் கூறுவர். ஆனுல், பாரசீகர்கள் அவரை இந்நில உலகில் வாழ்ந்த ஓர் உண்மைத் தலேவர் எனவே நம்புகின்றனர். ஏறக்குறைய கி.மு. 550ஆவது ஆண்டில் அவர் பிறந்ததாகப் பொதுவாக நம்பப்படுகிறது. ஆனுல், அரிஸ்டாட்டல் போன்ற கிரேக்க அறிஞர்கள் கி.மு. 6000த்தில் அவர் பிறந்ததாகக் கூறுவர். ஈரானின் மேற்குப் பகுதியில் அவர் பிறந்தார். அவருடைய தந்தை ஓர் புரோகிதர். அவர் இறைவனே வழிபட்டுக் கொண்டிருந்தபோது அவரால் இறைவனுக்குப் படைக்கப்பெற்ற ஹோமா எனும் மதுரசத்தில் தெய்வீக ஆவி புகுந்து அதன் மூலம் புரோகிதரின் உடலே அடைந்ததெனவும் அதே சமயத்தில் தெய்வீக ஒளிக்கதிர் ஒன்று அவரது மனேவியின் வயிற்றுக்குள் புகுந்ததாகவும் பாரசீகக் கதைகள் கூறுகின்றன. இறைவனது அருளால் அவர் கருத்தரித்தார் என்பதையே இக் கதைகள் புலப்படுத்துகின்றன. இந்நிலவுலகில் பிறந்த உடனேயே ஜொராஸ்டர் கலகல என நகைத்ததாகவும், அதைக் கேட்ட கெட்ட ஆவிகள் பலவும் நாட்டைவிட்டு ஓடிவிட்டன எனவும் புராணங்கள் கூறுகின்றன. ஜொராஸ்டர் தம் இளவயதிலேயே இறைவன்மீது மிகுந்த பக்தி உடையவராக இருந்தார். தனியே மலேக் குகைகளில் போய் அமர்ந்துகொண்டு வெறும் கனிகளே மட்டுமே உணவாக உட்கொண்டு அவர் அருந்தவம் புரிந்தார். அச்சமயம் பிசாசு அவரைப் பலவிதமான சோதனேகட்கு உட்படுத்தியது. ஆனுல், அவர் அதற்கெல்லாம் பணியாது அஹுரமெஸ்டா என்ற தனிப்பெரும்

கடவுள் மீதிலேயே தமது கவனத்தையெல்லாம் நிலைநாட்டி வந்தார். அதைக் கண்ட அக்கடவுள் அவர் முன் தோன்றி அவஸ்தம் என்ற வேதத்தைக் கையில் கொடுத்து அதை உலகுக்குப் போதிக்கும்படி கூறிவிட்டு மறைந்தார். அங்ஙனமே அவர் அதை போதிக்கத் தொடங்கியபோது பலரும் அவரைக் கேலி செய்தனர். எனவே, அவர் கிழக்கு ஈரானை நோக்கிப் பயணம் செய்தார். இறுதியில் விஷ்டிஷ்பா (Vishtispa) என்னும் மன்னன் அவருடைய சீடராக மாறி அவரது மதம் பரவுவதற்கு உதவி செய்தார். விரைவிலேயே அது மக்களிடம் பரவலாயிற்று. தமது முப்பதாவது வயதில் போதனையைத் தொடங்கிய ஜொராஸ்டர் தமது எழுபத்திரண்டாவது வயதில் ஓர் மின்னலில் கலந்து வானுலகை அடைந்தாரெனக் கூறப்படுகிறது.

***ஜொராஸ்டிரியச் சமயப் போதனைகள்***

ஜொராஸ்டர் தமது போதனையைத் தொடங்கியபோது மக்கள் தமது முன்னோர்களின் ஆவிகளையும் இயற்கைச் சக்திகளையும் வழிபட்டு வந்தனர். மித்ரா என்ற கதிரவக் கடவுளும், அனைதா (Anaita) என்ற பூமாதேவியும், ஹோமா என்ற எருதுக் கடவுளும் அவர்களில் முக்கியமானவர்கள். மாஹி எனும் புரோகிதர்கள் அர்த்தமற்ற பல சடங்குகளைச் செய்துகொண்டிருந்தனர். அவற்றையெல்லாம் ஜொராஸ்டர் வன்மையாகக் கண்டித்தார்.

அஹுரமெஸ்டா என்ற ஒளிக்கடவுள் ஒருவரை மட்டுமே மக்கள் வணங்கவேண்டுமென்றும், ஏனைய கடவுள்கள் எல்லாம் அவரது பல்வேறு தோற்றங்களே என்றும் அவர் போதித்தார். முதலாம் டேரியஸ் மன்னர் அவரது போதனைகளை ஏற்றுக்கொண்டு ஜொராஸ்டிரிய மதத்தைத் தமது நாடெங்கும் பரப்பினார்.

ஜொராஸ்டரின் போதனைகள் அனைத்தையும் அவரது சீடர்கள் தொகுத்து அவஸ்தம் என்ற வேதமாக வெளியிட்டனர். அதில் இருக்கு வேதக் கருத்துகளும் பாபிலோனிய சமயக் கருத்துகளும் நிறையக் காணப்படுகின்றன. அஹுரமெஸ்டா என்ற ஒளிக்கடவுளுக்கும் அஹிரிமான் (Ahriman) என்ற இருட்கடவுளுக்கும் ஓயாத போராட்டம் இவ்வுலகில் பன்னிரண்டாயிரம் ஆண்டுகள் நடைபெற்றுக்கொண்டிருக்கு மென்றும் அதன் பின்னர் அஹுரமெஸ்டா வெற்றி பெற்று நல்லோர்களுக்கெல்லாம் சொர்க்கத்தை அளிப்பார் என்றும் அவ்வேதம் கூறுகிறது.

அஹுரமெஸ்டா என்ற கடவுள் ஆதியில் இப்புவனத்தையெல்லாம் உட்கொண்ட வானின் வடிவமாகக் கருதப்பட்டார்,

சூரியனும், சந்திரனும் அவரது இரு கண்களாகக் கருதப்பட்டன. பிற்காலத்தே அவர் ஒரு பேரரசர் வடிவத்தில் வணங்கப் பெற்ருர். சூரியன், சந்திரன், அக்னி, வருணன், வாயு போன்ற சிறு கடவுள்களின் உதவி கொண்டு அவர் இவ்வுலகத்தை ஆட்சி புரிவதாகக் கருதப்பட்டது. அவருக்கு ஏழு குணங்கள் இருப்ப தாக அவஸ்தம் கூறுகிறது. அவ்வேழு குணங்களையும் பிற்காலத் தவர் ஏழு கடவுளர்களாக வழிபட ஆரம்பித்தனர். மற்றும் இவ் வுலகில் வாழும் ஒவ்வோர் ஆண் பெண் குழந்தை யாவர்க்கும் ஒரு காவல் தெய்வம் இருப்பதாக நம்பப்பட்டது. அதேபோன்று மக்களுக்குத் தீமையை விளைவிக்கின்ற ஏராளமான துர்த்தேவதை கள் இருப்பதாகவும் நம்பப்பட்டது. அவைகளுக்கெல்லாம் தலை வரே அஹிரிமான் என்பவர். உலகத்தில் உள்ள கெட்ட சக்தி கள் அனைத்தும், அவரிடமிருந்து பிறந்தவைகளே ஆகும். பாம்பு, தேள் போன்ற விஷ ஜந்துக்களும், நோய்களும், இருளும் அவ ராலேயே தோன்றுகின்றன. ஆதாம் ஏவாள் முதல் மக்களைப் பாவ வழியில் தூண்டுபவனும் அவனே: அஹுரமிஸ்ரா என்ற கடவுள் இவ்வுலகிலுள்ள நன்மைகள் அனைத்தின் உருவகமு மாவார். ஒளியும் நீதியும் அவரிடம் இருந்து பிறக்கின்றன. அவ ரைத் தலைவராக ஏற்றுக்கொள்பவர்கள், தீய சக்திகளையெல்லாம் வென்றுவிடுவர். பன்னிரண்டாயிரம் ஆண்டுகள் கழித்து அஹுர மெஸ்டா, அஹிரிமானை முறியடித்து வெற்றி பெறுகின்றபோது நல்லவர்கள் அனைவரும் அவரது உதவியால் சொர்க்கத்தை அடைவர். கெட்டவர்கள் அனைவரும் இருள் நரகத்தில் வீழ்ந்து சதா நஞ்சினை உண்டு துன்புறுவர். இங்ஙனம் ஒருவன் சொர்க்கத்தை அடைவதும் நரகத்தை அடைவதும் அவனவனது விருப்பத்தைப் பொறுத்தது என்று ஜொராஸ்டர் கூறுவதால் மக்கள் அல்லவை நீங்கி நல்லனவற்றினில் நாட்டமுற வகை செய்தாரெனலாம்.

### *ஜொராஸ்த்திரிய அறநெறி*

ஜொராஸ்த்திரிய சமயத்தில் அறநெறியானது பைபிளில் காணப்படும் பொன்விதியை(Golden rule) மையமாகக் கொண்டது. தன் உயிர்போல் மன்னுயிர் பார்க்க வேண்டுமென்றும், தனக்குத் தீமை பயக்குமென்று தெரிகிற எதையும் மற்றவர்களுக்குச் செய்யக் கூடாதென்பதும் இவ்விதியின் உட்கிடக்கையாகும். ஒரு மனித னின் மூன்று கடமைகள் எவை என அவஸ்த வேதம் அறுதி யிட்டுக் கூறுகிறது. அவையாவன; (1) பகையாளியை நண்ப ஞக ஆக்கிக்கொள்ளல்; (2) கெட்டவனை நல்லவனுக மாற்றுதல்; (3) அறியாமையில் மூழ்கி உள்ளவர்களுக்குக் கல்வியைப் புகட்டு தல். இறைவன்மீது பக்தி, உண்மை பேசுதல், உண்மையாக

நடத்தல், கடனுக்கு வட்டி வாங்காமை முதலியவைகளையும் அவஸ்தம் வற்புறுத்துகிறது. அதே சமயத்தில் ஜொராஸ்டிரிய மதத்தில் நம்பிக்கை இல்லாதவர்களை ஈவு இரக்கமின்றிக் கொல்ல வேண்டுமெனவும், பாரசீக நாட்டைச் சேராதவர்கள் அனைவரும் பாவிகள் எனவும் அவ்வேதம் கூறுகிறது.

ஜொராஸ்டிரிய சமயத்தில் கோயில்களோ விக்ரகங்களோ இடம் பெறவில்லை. குன்றுகளின் உச்சியிலும் அல்லது உயர்ந்த மாளிகைகளிலும் கட்டப்பட்ட பலி பீடங்களில் அணையாமல் வளர்க்கப்படும் அக்கினியே அஹுரமெஸ்டாவின் வடிவமாக எண்ணி வழிபடப்பட்டது. ஒவ்வொரு வீட்டிலும் அக்கினி ஹோமம் வளர்க்கப்பட்டு அது அணையாமல் பாதுகாக்கப்பட்டது. அதுவே தெய்வமாகவும் வழிபடப்பட்டது. வானில் அணையாமல் திகழ்கிற கதிரவன் அஹுரமெஸ்டாவின் மறுவடிவமாகக் கருதி வழிபடப்பட்டது. பூக்களும் பழங்களும் இறைவனுக்குப் படைக்கப்பட்டன. சில சமயங்களில் மிருகங்களும் பலியிடப்பட்டன. ஒரு காலத்தில் நரபலியும் கொடுக்கப்பட்டதாக அறிகிறோம். பலியிடப்பட்ட பிராணிகளின் இறைச்சியைப் புரோகிதர்களும் ஏனையோரும் பகிர்ந்து உண்டனர். அதேபோல ஹோமா என்னும் மதுவையும் அவர்கள் இறைவனுக்குப் படைத்துவிட்டுத் தமக்குள் பகிர்ந்து கொண்டனர்.

மரணத்துக்குப் பின் வாழ்வு உண்டென்பதை ஜொராஸ்டிரியம் நன்கு வற்புறுத்துகிறது. மரணமடைந்த பின் ஆன்மாக்கள் ஒரு பாலத்தை அடைகின்றன. அங்குப் போனவுடன் உத்தம ஆன்மாக்கள் சுவர்க்கத்துக்குள் ஈர்க்கப்பட்டு விடும். சுவர்க்கத்தில் ஓர் ஆன்மா அனுபவிக்கக் கூடிய இன்பங்களைப் பற்றி அவெஸ்தம் பரக்கக் கூறுகிறது. அதே போன்று பாலத்தின் கீழே உள்ள நரகத்துக்குள் துராத்மாக்கள் ஈர்க்கப்பட்டுத் துன்புறும். ஊழிக்காலம் வரை அதாவது உலகத்தின் அழிவுக்காலம் வரை ஆன்மாக்கள் சுவர்க்கத்திலும் நரகத்திலுமாக வாழும். அதற்குள் உலகில் மூன்று தீர்க்கதரிசிகள் தோன்றி அஹுரமெஸ்டாவின் சமயத்தைப் பரப்புவர். எனினும், நன்மை தீமைப் போராட்டம் ஓயாது நடைபெற்றுக் கொண்டிருக்கும். கடைசியாக வரும் தீர்க்கதரிசியின் காலத்தில்தான் அப்போராட்டம் ஓயும். தீமை மாயும். நன்மை வெல்லும். நல்லான்மாக்கள் தத்தம் உடல்களோடு மீண்டும் கூடிச் சாகா வரம் பெற்று என்றென்றும் சுவர்க்கத்தில் வாழும். மரித்தோர் மீண்டும் எழுவர் என்ற கருத்தையும், கடைசியாக ஓர் தீர்க்கதரிசி தோன்றி யாவரையும் உய்விப்பார் என்ற கருத்தையும் யூதர்களும் கிறிஸ்தவர்களும்

ஏற்றுக் கொண்டனர். இஸ்லாம் மதமும் பாரசீக சமயத்தால் பெரிதும் பாதிக்கப்பட்டது.

ஜொராஸ்டிரிய மதத்தில் நாளடைவில் புரோகிதர்களின் ஆதிக்கம் வலுத்தது. மித்ரா, அனெய்தா போன்ற கடவுளர் களின் வழிபாடு வளர்ந்தது. சடங்குகள் அதிகரித்தன. கடுமை யான தூய்மையைக் கடைப்பிடித்தும், வேறு வகைகளிலும் மாகி (Magi) என்ற குருமார்கள் மக்களிடம் செல்வாக்குப் பெற்று மூடக்கொள்கைகளை வளர்த்தனர். எனவே, ஜொராஸ்திரிய அம்சங் கள் நாளடைவில் மக்களிடையே அருகிவிட்டன. முஸ்லிம்கள், டார்ட்டார்கள் படையெடுப்புக்குப் பின் அது பெரிதும் சீர்குலைந்தது. பர்ஸ் என்ற பிரதேசத்தில் மட்டுமே அது நிலைபெற்றுள்ளது. இந்தியாவுக்கு ஓடிவந்துள்ள பார்ஸிகளிடம் அது இன்றும் நன்கு வாழ்கிறது. பார்ஸிகள் அக்கினியை வீட்டில் அணையாமல் பாது காத்து வணங்கி வருகின்றனர். உபநயனச் சடங்கை அநுசரிக் கின்றனர். பிணங்களைப் புதைக்காமல் கழுகுகளுக்கு இரையாக்கு கின்றனர்.

***பாரசீக சமயத்தின் செல்வாக்கு***

ஸொராஷ்டிரியம் நாளடைவில் தனது தொன்மையை இழந்தது. மூடக் கொள்கைகளும், மாய்மாலங்களும், பொருளற்ற சடங்குகளும் அதில் வந்து புகுந்துகொண்டன. சாலடியர்களின் சமயக் கருத்துகள் அதனுள் நுழைந்து மற்றும் பல மாற்றங்கள் ஏற்பட்டன. இத்தகைய பல்வேறு கோட்பாடுகள் ஸொராஷ்டிரிய சமயத்தில் வந்து கலந்ததன் விளைவாக ஒருசில புதிய மதக் கோட்பாடுகள் தோன்றின. அத்தகைய கோட் பாடுகளில் மிகவும் பழைமையானது மித்ரேயிஸம் (Mithraism) என்பதாகும். மஸ்டா என்ற அறக் கடவுள் அஹ்ரிமான் எனும் சாத்தானோடு போரிடுவதற்குப் பெரிதும் உதவிய தெய்வம் மித்ராஸ் (Mithras) எனப்படும். ஆதியில் ஓர் சிறு தேவதையாக இருந்த மித்ராஸ் நாளடைவில் மக்களது நெஞ்சத்தில் நீங்காதவோர் இடத்தைப் பெற்ற ஒரு பெருங் கடவுளாக மாறிவிட்டார். அவரைப் பற்றிய புராணக் கதைகள் மக்களிடையே பெரிதும் செல்வாக்குப் பெற்றன. அக்கதைகளின்படி ஆதியில் அவர் இடையர்கள் மத்தியில் ஓர் பாறையினின்றும் பிறந்தார். இடையர்கள், உலகை உய்விக்க வந்தவர் அவர் என்று தெரிந்துகொண்டு அவருக்குப் பல காணிக்கைகள் வழங்கினர். அதன்பின் அவர் உலகினுள் சென்று பல வன விலங்குகளை அடக்கி அவைகளை வீட்டு மிருகங்களாக மாற்றி மனிதனுக்குப் பயன்படும்படி செய்தார். சூரியனோடு ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டு விவசாயத்திற்கு வேண்டிய அளவிற்கு வெப்பத்தையும், வெளிச்சத்தையும் பெற்றார். தெய்வீக எருது

ஒன்றைக் கொன்று அதன் தசையிலிருந்தும், இரத்தத்திலிருந்தும் உலகிலுள்ள தாவர வர்க்கங்களையெல்லாம் உண்டாக்கினர். அதைக் கண்டு பொறுமையுற்ற அஹ்ரிமான் உலகில் ஓர் பெரிய பஞ்சத்தை ஏவினர். மழையின்றி மக்கள் வாடினர். அப்போது மித்ராஸ் பாறைகளிடையே ஓர் ஈட்டியைப் பாய்ச்சினர். அதனின்றும் நீர் உடனே குபுகுபுவென்று பொங்கியெழுந்து நாட்டின் வறட்சியைப் போக்கியது. அதைக் கண்ட அஹ்ரிமான் ஒரு பெரும் வெள்ளத்தை ஏற்படுத்தி உலகத்தை அழிக்கப் பார்த்தான். ஆனல், மித்ராஸ் ஒரு வீட்டைக் கட்டி, அதில் ஓர் மனிதனையும், ஆடு, மாடுகளையும் தங்கச் செய்து வெள்ளத்தினின்றும் காப்பாற்றினர். அம்மனிதனைக் கொண்டு மீண்டும் உலகை அவர் உண்டாக்கினர். இறுதியில் புனிதமான உணவை சூரியனுடன் இருந்து உண்டுவிட்டுப் பின்னர் தேவருலகிற்குச் சென்றுவிட்டார். பிற்காலத்தில் ஏதோ ஓர் நாளைக்கு அவர் திரும்பிவந்து தனது பக்தர்களுக்குச் சாகா வரம் அருள்வார் என்று அனைவரும் நம்பினர். மித்ராஸ் வழிபாட்டில் நிறைய சடங்குகள் உள்ளன. அவற்றில் முதலாவது உபநயனம். ஏழு நிலைகளில் அது வழங்கப்பட்டது. இறுதி நிலையில் ஒருவன் மித்ராஸுடன் மானசீகமாக ஒன்றுபட்டுவிடுவதாக நம்பப்பட்டது. உடலை வருத்தும் தபஸ் பெரிதும் வற்புறுத்தப்பட்டது. இச் சமயத்தில் ஈடுபட்டவர்கள் புனிதப் பொருளைப் புசித்தல் என்ற சடங்கைச் செய்ய வேண்டும். ஞானஸ்நானம் பெறுதலும், ரொட்டி, தண்ணீர் அல்லது சாராயம் இவற்றைப் புனிதப் பொருளாக நினைத்து அருந்துதலும் இதன் முக்கிய கூறுபாடாகும். இறைவனுக்கு அபிஷேகம் செய்தலும், கற்பூரம் எரித்தலும், புனிதப் பாட்டுகள் மூலம் தோத்திரம் செய்தலும், புனித நாட்களாகிய ஞாயிறு, டிசம்பர் 25 ஆகிய தினங்களைக் கொண்டாடுவதும் இச் சமயத்தின் ஏனைய சடங்குகளாகும். கதிரவனை இவர்கள் மிக முக்கியமான கடவுளாக நம்பி வழிபட்டனர். மித்ராஸின் நெருங்கிய தோழனுக அவர் கருதப்பட்டார். எனவே, கதிரவனுடைய பெயர், வாரத்தில் புனிதமான நாளுக்கு வழங்கப்பட்டது. எனவே, ஞாயிற்றுக்கிழமை அவர்களுக்குப் புனித நாளாயிற்று. சாலடியர்களைப் பின்பற்றி ஏனைய வாரநாட்களுக்கும் இவர்கள் இங்ஙனமே வெவ்வேறு கோள்களின் பெயர்களைச் சூட்டினர். இன்றைக்கும் உலகெங்கும் அங்ஙனமே கோள்களின் பெயர்களே வாரநாட்களுக்குச் சூட்டப்பட்டிருத்தல் கண்கூடு. டிசம்பர் 25ஆம் நாளன்று கதிரவன் பூமத்தியரேகையைத் தாண்டி பூமியின் தெற்குப் பகுதிக்கு வருகின்ற நாளாதலால் அதுவும் ஓர் புனித நாளாகக் கருதப்பட்டது. ஏறக்குறைய நான்காம் நூற்றண்டில் மித்ராஸ் வழிபாடு பாரசீகத்தில் நன்கு வேரூன்றியது. அலெக்ஸாந்தரது படையெடுப்புக்குப்

பின் அஃது நாட்டில் வெகு வேகமாகப் பரவியது. நாளடைவில் ரோம் நகருக்குள்ளும் அஃது புகுந்தது. ராணுவ வீரர்கள், அடிமைகள், தாழ்ந்த வகுப்பினர் ஆகியோரிடையே இது பெரிதும் செல்வாக்குப் பெற்றது. கிறிஸ்தவ சமயத்திற்குப் போட்டியாகத் தோன்றிய சமயங்களுள் முதன்மையானது இதுவேயாகும். ஞானஸ்நானம் பெறுதல் (Baptism), புனிதப் பொருளைப் புசித்தல் (Sacrament), ஞாயிற்றுக்கிழமை விரதமிருத்தல் (Sabbath), கிறிஸ்துமஸ் பண்டிகை கொண்டாடல் (December 25) முதலிய கிறிஸ்தவ சமயச் சடங்குகள் மித்ரேயிஸத்திலிருந்து பெறப்பட்டவையே என்று பலராலும் நம்பப்படுகிறது. ஆனால், இரு சமயங்களும் இவற்றைத் தனித்தனியே கைக்கொண்டிருக்கவும் கூடும்.

*மனிக்கிசம்*

ஸொராஷ்டிரியத்திலிருந்து கிளைத்தெழுந்த இன்னொரு சமயப் பிரிவு மனிக்கிசம் (Manicheism) என்பதாகும். இதை உண்டாக்கியவர் மனி என்ற மதகுருவாவார். அவர் கி.பி. 250ஆம் ஆண்டு ஏக்படானு (Ekbatana) என்ற ஊரில் பிறந்தார். ஸொராஸ்டிரிய மதத்தைச் சீர்திருத்துவதே தமது பிறவிப் பெருங்கடன் என்று நினைத்து அதற்காக அவர் ஓயாது பாடுபட்டார். தன்னுடைய நாட்டில் கடுமையான எதிர்ப்பு தோன்றியதன் காரணமாக அவர் இந்தியா, சீனு போன்ற நாடுகளுக்குச் சென்று தமது கருத்துகளைப் பரப்பினுர். கி.பி. 276-ல் அவரது பாரசீக விரோதிகள் அவரைச் சிலுவையில் அறைந்து கொன்றுவிட்டனர். அதன்பின் அவரது சீடர்கள் திக்கெங்கும் சென்று அவரது கொள்கையைப் பரப்பினர். மேற்காசிய மக்கள் அனைவரும், இத்தாலியர்களும் இச்சமயத்தில் பெரிதும் மனத்தைப் பறிகொடுத்தனர். நாளடைவில் அவர்கள் கிறிஸ்தவர்களாக மாறினர்.

மனியின் போதனைகளுள் ஒருவகையான இருமைக் (Dualism) கொள்கை காணப்படுகிறது. ஸொராஷ்டிரியத்தில் கூறுகின்றபடி இரு கடவுளர்கள் இருப்பதை அவர் ஒப்புக்கொண்டாலும், அக் கொள்கையை அவர் மேலும் விரிவாக்குகிருர். அதன்படி இப் புவனத்தை இரு பிரிவுகளாக அவர் பிரிக்கிருர். ஒன்று புறவுலகம். மற்றொன்று அகவுலகம். புறவுலகம் வெறும் ஜடப்பொருளால் ஆகியது. அதன் தலைவன் சாத்தான். அவனிடமிருந்தே உலகத்தின் பாவங்களனைத்தும் பிறக்கின்றன. உடல், உலகம் இவை பற்றிய ஆசைகளுக்கும் துன்பங்களுக்கும் அவனே காரணம். அகவுலகம் மிகவும் நுண்ணியதாகும். அதன் தலைவரே கடவுளாவார். ஒளி, நேர்மை, நீதி, நியாயம் போன்றவற்றின் உறைவிடம் அவரே. அவரை

அடைய வேண்டுமானல் ஒருவன் புறவுலக வாழ்க்கையின் இன்பங்களினின்றும் விடுபட வேண்டும். சிற்றின்பம், புலால் உண்ணல், மது அருந்துதல் முதலியவற்றை ஒருவன் விலக்கினாலொழிய, சாத்தானின் பிடியிலிருந்து விடுபட முடியாது தொடர்ந்து பட்டினி கிடந்து உடம்பை வருத்தினாலொழிய ஒருவன் பரலோகத்தை அடைவது இயலாது. இத்தகைய தபஸுக்குத் தகுதி உள்ளவர்கள் சிலரே. அவர்கள் முழுமூட்சுகள் (Perfect) அல்லது பூரணத்துவம் பெற்றவர்கள் எனப்படுவர். ஏனையோர் சாதாரண உலகியலார் (Secular) எனப்படுவோர். பின்னால் சொல்லப்பட்டவர்கள் உண்மை பேசுதல், புலாலுணவைத் தவிர்த்தல், சிலை வழிபாட்டை விடுத்தல் போன்ற ஒரு சில கொள்கைகளைக் கடைப்பிடித்தாலே போதுமானதாகும். மக்களை சாத்தானிடமிருந்து காப்பாற்றவே கடவுள் தீர்க்கதரிசிகளை உலகிற்கு அனுப்புகிறார். ஆபிரகாம், ஸொராஷ்டிரர், இயேசு, பால் போன்றவர்கள் அத்தகைய தீர்க்க தரிசிகளேயாவர். ரோமானியப் பேரரசில் பல்வேறு வகுப்பினரும் இம் மதத்தைப் பின்பற்றினர். கிறிஸ்தவர்களிலேயே ஒருசிலர் இக் கொள்கைகளில் பெரிதும் கவர்ச்சியுற்றனர். கடவுள், சாத்தான், உலகம், ஆவியுலகம் இவை பற்றிய வாதங்கள் நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டே சென்றன. அகஸ்டின் என்ற துறவி இவற்றால் பெரிதும் ஈர்க்கப்பட்டவர். அவர் கருத்துப்படி கடவுளை அடையத் தக்க பக்குவம் பெற்றவர்கள் சந்நியாசிகளும், சந்நியாசினிகளுமே யாவர். ஏனையோர் சாதாரண இல்லறத்தார். அறநெறிகளைக் கடைப்பிடித்துத் துறவிகளை உபசரித்தலே அவர்களது கடமை யாகும்.

***கினுஸ்டிசிசம்***

கினுஸ்டிசிசம் (Gnosticism) என்பது மற்றுமோர் வழிபாட்டு முறையாகும். கி.பி. முதலாம் நூற்றாண்டில் தோன்றி, கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் அஃது பெரிதும் செல்வாக்குற்றது. இத்தாலியிலும், சமீபக் கிழக்கு நாடுகளிலும் அது பரவியது. வெறும் அறிவைக் கொண்டு இறைவனை அறிய முடியாது என்றும், அவரது கருணையைப் பெற்ற ஒரு சிலருக்குதான் அது கைகூடும் என்றும் இவர்கள் நம்பினர். ஆன்மீக ஞானத்தை இறைவன் ஒரு குறிப்பிட்ட சிலருக்கே அளிப்பார் என்பதும் இவர்களது நம்பிக்கை யாகும். இவர்களது சடங்குகள் அனைத்தும் பெரிதும் இரகசியம் பொருந்தியவை. மந்திர தந்திரங்கள் நிறைந்தவை.

அலெக்ஸாந்தரது பேரரசு குலைந்ததின் பின்னரே மேற்கூறிய சமயப் பிரிவுகள் பெரிதும் செல்வாக்குப் பெற்றன. இந் நிலவுலகில்

இன்பத்தையன்றி துன்பத்தையே அநுபவித்த மக்கள் மறு உலகிலும் அவ்வின்பத்தைப் பெற ஏங்கி அதற்கேற்ப சமயங்களைப் படைத்தனர். இவ்வுலகத் துன்பங்களைப் பொறுமையோடு சகித்துக் கொள்ளவும், இவர்கள் அச்சமயங்களைப் பயன்படுத்திக்கொண் டனர். இங்ஙனம் பாரசீகர்கள் சமயத்துறையில்தான் தங்களது செல்வாக்கைப் பலவிடங்களில் பரப்பியுள்ளனர். உலகியல் துறையில் அவர்களுடைய செல்வாக்கு ஓரளவே பரவியது. ரோமானிய அரசர்களின் தெய்வீக உரிமைக் கொள்கை பாரசீகர் களின் அரசியற் கருத்துகளை ஒத்துள்ளது. ஒருசில கிரேக்கத் தத்துவங்களில் பாரசீகர்களின் செல்வாக்கைக் காணலாம். மெய் யறிவுமிக்க கொள்கைகளைவிட கிரேக்கர்களின் சமயச் சடங்கு களிலேயே பாரசீகர்களின் செல்வாக்கு பரவலாகக் காணப்பட்டது.

## கலைகளின் நிலை

**கல்வி**

பணக்காரர்கள் மட்டுமே கல்வி கற்றனர். ஏனையோர் தத்தம் தொழில்களில் சிறுவயது முதற்கொண்டே ஈடுபட்டனர். கோயில் களில்தான் கல்விக்கூடங்கள் அமைந்திருந்தன. புரோகிதர்கள் தான் கல்வியைப் போதித்தனர். அவர்கள் தத்தம் வீடுகளிலேயே மாணவர்களை வைத்து சொல்லிக் கொடுப்பதும் வழக்கம். அவெஸ் தம் என்ற வேதத்தை மாணவர்கள் மனப் பாடம் செய்வர். குருக் கள் அவற்றை விளக்குவார்.

**கலைகள்**

பாரசீகர்கள் கலைகளைப் போற்றவில்லை. இலக்கியம் படிப்ப தும், ஓவியம் வரைவதும் பெண்களுக்கும், ஆண்மையற்ற மக்க ளுக்குமே பொருந்துமென அவர்கள் எண்ணினர். பாடல்களைப் புனைவதைவிட அவற்றைப் பாடுவதிலேயே ஊக்கம் காட்டினர். விஞ்ஞானத்தைப் பாபிலோனியர்களிடமிருந்து பெற்றுக்கொண்ட னர். தாமாகவே அதில் முன்னேற அவர்கள் விரும்பவில்லை.

**மருத்துவக் கலை**

மருத்துவக் கலையை அவர்கள் போற்றி வளர்க்கவில்லை. நோய் கள் பிசாசுகளால் ஏற்படுகின்றன என நம்பிய அவர்கள் மந்திர தந்திரங்களால் அவற்றைக் குணப்படுத்த முயன்றனரே யன்றி மருந்துகளை நம்பவில்லை. எனினும், நாளடைவில் மக்களிடையே மருத்துவர்கள் வளர்ந்தனர். அர்டாக்சஸ் காலத்தில் மருத்துவர் களும், அறுவை நிபுணர்களும் அடங்கிய குழு ஒன்று இருந்த

தாக அறிகிறோம். அக்குழு மருத்துவர்கள் பெறவேண்டிய கட்டணம் என்னவென்பது சட்டத்தால் நிர்ணயிக்கப்பட்டது. பாரசீகர்களுக்குச் சிகிச்சையளிக்குமுன் அந்நியர்கள், அடிமைகள் மீது மருந்துகளைப் பரிசோதனை செய்து, அவை நற்பயன் அளிக்கின்றனவா என்பதைப் பார்க்க வேண்டும்.

### அலங்காரக் கலை

போர் செய்வதிலேயே பெரும் நேரத்தைக் கழித்த பாரசீகர்கள் தமக்கு வேண்டிய கலைப் பொருள்களைப் பிற நாட்டவரிடமிருந்து வாங்கிக் கொண்டனர். அழகிய தோட்டங்களால் சூழப்பட்ட மாளிகைகளில் அவர்கள் வசித்தனர். அவர்தம் மேஜைகளின் மேற்பரப்பில் தங்க, வெள்ளித் தகடுகள் பதிக்கப்பட்டிருந்தன. தரையைப் பல்வேறு வண்ணங்களில் நெய்யப்பட்ட கம்பளி விரிப்புகள் அணி செய்தன. தங்கத்தாலாய குப்பிகளிலிருந்து அவர்கள் மதுபானம் அருந்தினர். பெண்டிர் அலங்காரமான ஆபரணங்களை அணிந்தனர். அவற்றுள் நீலம், மரகதம், வைரம், வைடூரியம், கோமேதகம் போன்ற விலையுயர்ந்த கற்கள் பதிக்கப்பட்டிருந்தன. அரசரது சிம்மாசனம் பொன்னால் செய்யப்பட்டிருந்தது. தங்கத்தாலான மேல் விரிப்பும் அதைத் தாங்க தங்கத்தாலான நான்கு தூண்களும் அதில் காணப்பட்டன.

### கட்டடக் கலை

கட்டடக் கலையில்தான் பாரசீகர்கள் தங்களது சொந்தத் திறனை நன்கு காட்டியுள்ளார்கள். மன்னர்களின் அரண்மனைகளிலும், கல்லறைகளிலும் பாரசீகக் கட்டடக் கலைஞர்களின் கைவினைத் திறமையை நன்கு காண்கிறோம். பாசர்கடே (Pasargadae) நகரில் சைரஸ் மன்னரின் கல்லறை ஒன்று மிக வனப்புடன் இன்றும் காணப்படுகிறது. உயர்ந்த மேடைமீது கட்டப்பட்டுள்ள அக்கல்லறை 35 அடி உயரமுள்ளது. கிரேக்கக் கட்டடக் கலைப் பாணியை அதில் காணலாம். தெற்கே பெர்சிபாலிஸ் நகருக்கருகிலுள்ள நக்சிரஸ்டம் நகரில் முதலாம் டேரியஸின் கல்லறை உள்ளது. ஒரே கல்லில் செதுக்கப்பட்டுள்ள அக்கல்லறையின் கதவுகள் அரண்மனைக் கதவுகள் போன்று அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன. மேலே உள்ள கூரையில் பாரசீக மக்களின் உருவங்களும், டேரியஸ் மன்னர் அஹுரமெஸ்டாவையும் சந்திரனையும் வணங்குவது போன்ற உருவமும் செதுக்கப்பட்டுள்ளன. எளிமையும், கலைப்பண்பும் அவற்றில் மிளிர்கின்றன. பெர்சியாலிஸ் நகரத்தில் அவரால் கட்டப்பட்ட அரண்மனை அழிந்துவிட்டது. ஆனால், அரண்மனைக்கு இட்டுச் செல்லும் படிக்கட்டுகள் இன்றும்

அப்படியே இருக்கின்றன. பத்து குதிரை வீரர்கள் ஒரே சமயத்தில் ஏறிச் செல்லக்கூடிய அவை விசாலமாக அமைந்துள்ளன. இரண்டு படிக்கட்டு வரிசைகள் இரு எதிர்ப் புறங்களில் அமைக்கப் பட்டுள்ளன. அவை ஒன்றுகூடுமிடத்தில் ஓர் பெரிய வாயில் காணப்படுகிறது. அவ்வாயிலின் ஓரங்களில் இறக்கைகளைக் கொண்ட இரு எருதுகள் நிறுத்திவைக்கப்பட்டுள்ளன. அவற்றுக்கு மனித முகங்கள் வைக்கப்பட்டுள்ளன. அதற்கு மேலே 50 அடி உயரமும், 1500 அடி நீளமும், 1000 அடி அகலமும் கொண்ட மேடை காணப்படுகிறது. அதன்மீதுதான் மன்னரின் அரண்மனை அக்காலத்தே கட்டப்பட்டிருந்தது. அதற்கு வலப்புறம் ஸெர்க்ஸீஸ் மன்னரின் அத்தாணி மண்டபம் காணப்படுகிறது. 100,000 சதுர அடி பரப்புள்ள மேடைமீது அது கட்டப்பட்டுள்ளது. அதை அடைய மற்றுமோர்ப் படிவரிசை கட்டப்பட்டிருந்தது. அதன் இருமருங்கிலும் பல்வேறு வகையான புடைப்போவியங்கள் காணப் படுகின்றன. அர்டாக்ஸஸ் மன்னரின் அரண்மனையும் சிதைந்த நிலையிலேயே உள்ளது. ஸெர்க்ஸீஸ் மன்னரது அரண்மனையில் எஞ்சியுள்ளவை சலவைக் கல்லாலான 13 தூண்களாகும். அவற்றில் கலையழகு கொழிக்கிறது. எகிப்திய, கிரீஸ் தூண்களுக்கு நிகராக அவற்றைக் கூறலாம். 64 அடி உயரமுள்ள அத்தூண்களின் தண்டுப் பகுதியில் 48 சிறுசிறு பள்ளங்கள் செதுக்கப் பட்டுள்ளன. அவற்றின் அடிப்பகுதிகள் கவிழ்த்து வைக்கப்பட்ட மணிகளைப்போல் காணப்படுகின்றன. அவற்றின் தலைப்பகுதியில் (Capitals) பூ வேலைப்பாடுகள் காணப்படுகின்றன. அவற்றின் உச்சியில் இரண்டு எருதுகளோ அன்றி காண்டாமிருகங்களோ அமைக்கப்பட்டுள்ளன. அவற்றின் கழுத்துகள்மீது தூலங்கள் வைக்கப்பட்டுள்ளன. அவை மரத்தினுல் செய்யப்பட்டிருந்தன. ஜன்னல் சட்டங்களிலும், கதவு ஓரங்களிலும் நன்கு வேலைப் பாட்டுடன் கூடிய கருங்கல்லில் அலங்காரம் செய்யப்பட்டுள்ளது. சுவர்கள் செங்கற்களால் கட்டப்பட்டன. ஆனுல், அவற்றின்மீது பளபளப்பாக்கப்பட்ட ஓடுகள் பாவப்பட்டிருந்தன. அவ்வோடுகள் மீது அழகிய மலர்களும், பிராணிகளும் ஓவியங்களாகத் தீட்டப் பட்டிருந்தன. தூண்களும் படிவரிசைகளும் வெள்ளிய சுண்ணும்புக் கல்லாலோ அன்றி நீல பளிங்குக் கற்களாலோ ஆக்கப்பட் டிருந்தன. இம் மண்டபத்துக்குப் பின்னே நூற்றுக்கால் மண்டபம் ஒன்று இருந்ததாகக் கூறுவர். அதில் தற்போது ஒரே ஒரு தூண் மட்டுமே எஞ்சியுள்ளது. எனினும் அது நின்ற இடம் நன்கு தெரி கின்றது. பண்டைக் காலத்தே அமைக்கப்பட்ட அரண்மனை களிலெல்லாம் தலைசிறந்த அழகிய அரண்மனையாக அது விளங்கி யிருக்கக் கூடுமென்பதில் ஐயமில்லை.

சூசா நகரில் இரண்டாம் அர்டாக்ஸஸால் கட்டப்பட்ட அரண்மனைகளும் அழிந்துவிட்டன. ஆனால், அங்கு நன்கு பளபளப் பாக்கப்பட்ட ஓடுகள் காணப்படுகின்றன. அரசரின் மெய்க்காப் பாளர்களின் உருவங்கள் வரையப்பெற்ற ஓர் ஓடு கிடைத்துள்ளது. அதில் காணப்படும் வீரர்கள் கண்கவர் வண்ணங்களை உடைய ஆடையை அணிந்துகொண்டுள்ளனர். அன்னாரின் முடியும், தாடிகளும் சுருட்டை சுருட்டையாக அமைக்கப்பட்டு அழகா யுள்ளன. கைகளில் செங்கோலும், வில்லும் அழகுடன் விளங்கு கின்றன. இவை யாவற்றிலும் வேற்று நாட்டுக் கலைப்பாணிகளே காணப்படுகின்றன. சைரஸின் கல்லறையில் லிடிய நாட்டுக் கட்டடக் கலையின் சாயலையும், ஒல்லியான தூண்களில் அசிரிய கலைப் பாங்கையும், தூண் வரிசைகளிலும், புடைப்போவியங்களிலும் எகிப்தியக் கலைப்பண்பையும், தூண் உச்சியிலுள்ள மிருக உருவங் களில் பாபிலோனிய கலைப் பாணியையும் காணலாம். ஆனால், இவற்றையெல்லாம் ஒன்றாகக் கலக்கும்போதுதான் பாரசீகர்கள் தமக்கே உரிய ஓர் தனிப் பண்பை வெளிப்படுத்தியுள்ளனர். பிற நாட்டுச் சிற்பங்களிலும், கட்டடங்களிலும் காண இயலாத ஓர் வழவழப்பும், எழிலும் பாரசீக உருவங்களிலும் அரண்மனைகளிலும் காணப்பட்டன.

# 6, ஹீப்ரு அல்லது யூத நாகரிகம்

விவிலிய நூலின் ஒரு பகுதியான பழைய ஏற்பாடு (Old Testament) ஓர் வரலாற்றுக் கருவூலமாகும். கிறிஸ்தவ சமயத்தின் அடிப்படைக் கொள்கைகளேயும், யூதமதக் கருத்துகளேயும் யூதர்தம் நாகரிகத்தையும் பற்றிய பல அரிய செய்திகள் அதில் பொதிந்து கிடக்கின்றன. கிறிஸ்தவ சமயத்தின் அடிப்படைக் கொள்கைகளே அமைத்தவர்கள் யூதர்கள் என்ருல் யூத சமயத்தின் அடிப்படைக் கோட்பாடுகளே ஏற்படுத்தியவர்கள் எகிப்தியர்களும், பாபிலோனியர்களுமாவர். கிறிஸ்துவர்களின் பத்துக் கட்டளேகள் (Ten Commandments), உலக உற்பத்தி, பிரளயம் பற்றிய கதைகள் முதலியன யூதர்களிடமிருந்து பெறப்பட்ட கருத்துகளே யாகும். அதேபோல யூதர்களின் சட்டமுறையும், பாபிலோனிய சட்டங்களின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன. யூதர்களின் தத்துவங்களில் எகிப்திய வாடை வீசுகிறது. ஆனுல், நுண்மாண் நுழைபுலம் வாய்ந்த யூதர்கள் இக் கருத்துகளேயெல்லாம் தனிப்பட்ட முறையில் சொந்தமாகச் சிந்தித்துக் கண்டுபிடித்திருக்கவும் கூடும்.

**யூதர்களின் வரலாறு**

பழைய ஏற்பாட்டின்படி யூதர்கள் ஆதியில் அரேபியாவிலும் பாபிலோனியாவிலும் ஆடு மாடுகளே மேய்த்து வாழ்ந்துவந்த ஒரு வகை செமிடிக் இனத்தவர்களாவர். கி.மு. 1800ஆம் ஆண்டளவில் அவர்கள் மெசபடோமியாவின் வடமேற்குப் பகுதியில் சென்று குடியேறினர். அவர்களின் தலேவராக நின்று வழிநடத்திச் சென்றவர் ஆபிரகாம் என்னும் பெருமகனுவார். ஆபிரகாமின் பேரனுன யாக்கோபு (Jacob) என்பாரின் தலேமையில் ஒரு யூதக் கூட்டம் பாலஸ்தீனத்தில் சென்று குடியேறியது (மேற்கே மத்திய தரைக் கடலுக்கும் கிழக்கே சாக்கடல், ஜார்டன் நதி இவைகளுக்கு இடைப்பட்ட நாடு). யாக்கோபின் மற்ருெரு பெயர் இஸ்ரவேல் என்பதாகும். எனவேதான் யூதர்கள் இஸ்ரேலியர் என்று அழைக்கப்படுவர். பாலஸ்தீனத்தின் மேற்குப் பாகம் அக்காலத்தில் காஞன் (Cannan) தேசம் என அழைக்கப்பட்டது. அங்கேதான் இஸ்ரேலியர் முதன்முதலில் வந்து குடியேறினர். அங்கு ஏற்கெனவே வாழ்ந்திருந்த பிலிஸ்தியர்களுக்கும், இஸ்ரேலியர்களுக்கும்

இடையருத போராட்டம் ஏற்பட்டது. எனவே, பிலிஸ்தியர்கள் குடியில்லாத பகுதியாகப் பார்த்துத் தங்கள் ஊர்களை இஸ்ரேலியர்கள் அமைத்துக்கொண்டனர். ஒரு சிலர் பிலிஸ்தியர்களுடன் திருமணத் தொடர்பு பூண்டு அவர்களுடன் இரண்டறக் கலந்து விட்டனர். ஒரு சமயம் கானன் தேசத்தில் பெரும் பஞ்சம் ஏற்பட்டது. அப் பஞ்சத்தின் கொடுமைக்கஞ்சி, யூதர்களின் ஒரு கிளையினர் எகிப்தை நோக்கிச் சென்றனர். எகிப்தில் அப்போது




கொடுங்கோன்மை செலுத்திவந்த ஹைக்ஸோஸ் (Hyksos) என்ற அன்னியர்களுக்கு யூதர்கள் பேருதவியாய் இருந்தனர். எனவே, அவர்களின் செல்வாக்கு அங்கே வளரலாயிற்று. ஆனால், நாளடைவில் ஹைக்ஸோஸுகள் எகிப்தைவிட்டுத் துரத்தப்பட்டனர்.

பரோவாக்கள் மீண்டும் தலைமை பெற்றனர். தங்களது எதிரிகளின் கையாட்களாக இருந்த யூதர்களை அவர்கள் வேம்பென வெறுத்தனர். அடிமைகள்போல் அவர்களை நடத்திப் பலவித இன்னல்களுக்கு ஆளாக்கினர். அதைப் பொறுக்கமுடியாத யூதமக்கள் மோசஸ் (Moses) எனும் ஒரு தீர்க்கதரிசியின் தலைமையில் எகிப்தை விட்டு வெளியேறினர். மோசஸ் இறைவனிடம் நிறைந்த பக்தி கொண்டவர். பாலும், தேனும் ஓடும் கானுன் தேசத்திற்கு யூத மக்களை அழைத்துச் செல்லும்படி கடவுள் தனக்குக் கட்டளையிட்டிருப்பதாக அவர் கூறினர். அவரது வாக்கை நம்பி யூதர்கள் அவரைப் பின்தொடர்ந்தனர். வழியில் எண்ணற்ற இடையூறுகள் நேர்ந்தன. எனினும் மோசஸின் உற்சாகம் நிறைந்த வார்த்தைகளாலும், தெய்வ நம்பிக்கையாலும், பத்துக் கட்டளைகள் என்ற நீதி போதனையாலும் அவர்கள் பொறுமையாக நடந்து இறுதியில் கானுன் தேசத்தைச் சென்றடைந்தனர். ஒரு மலை உச்சியினின்றும் செழிப்பான பிரதேசத்தைக் கண்குளிர மோசஸ் கண்டார். அவரது உள்ளத்தே ஓர் நிறைவு ஏற்பட்டது. தமது மக்களுக்குக் கொடுத்த வாக்கினை நிறைவேற்றிவிட்டோம் என்ற மனநிறைவுடன் அவரது உயிர் பிரிந்தது. கண்களால் காணக்கிடைத்த கானுன் தேசத்தில் காலெடுத்து வைக்கும் பேறு மோசஸுக்குக் கிட்டவில்லை. எனினும், அவரது மக்கள் கானுன் தேசத்தில் சென்று குடிபுகுந்தனர். ஆனால், அங்கு ஏற்கெனவே கானுனியர்கள் பலவிடங்களில் குடியேறியிருந்தனர். யூதர்களுக்கும், கானுனியர்களுக்கும் பலத்த போர் ஏற்பட்டது. ஒரு சில இடங்களை யூதர்கள் கைப்பற்றிக் கொண்டனர். நாளடைவில் கானுனியர்களோடு கலந்து அவர்களது நாகரிகத்தையும் உட்கொண்டனர். இச் சமயத்தில் பிலிஸ்தியர்கள் என்ற கூட்டத்தினர் கானுன்மீது படையெடுத்தனர். பிலிஸ்தியர்கள் என்ற பெயரின் அடிப்படையிலேயே கானுன் தேசம் பாலஸ்தீனம் என்று அமைக்கப்பட்டது.

**யூத அரசர்கள்**

பல நூற்றுண்டுகள்வரை யூதர்களுக்கும் பிலிஸ்தியர்களுக்கும் பலத்த போராட்டம் நடைபெற்றது. யூதர்கள் தமது எதிரிகளைச் சமாளிக்க ஒன்று சேர்ந்தனர். இங்ஙனம் ஒன்றுபட்ட பன்னிரண்டு யூதக் குழுவினர் தமக்குள் சௌல் (Saul) என்ற ஒரு தலைவனைத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர். அவரது தலைமையின் கீழ் யூதர்கள் செல்வாக்கடைந்தனர். ஆனால், இறுதியில் அவருக்குத் தோல்விக்கு மேல் தோல்வி ஏற்பட்டது. சாமுவேல் (Samuel) என்ற நீதிபதி அவருக்கு எதிராக மக்களைத் திரட்டினர். இதைக் கண்ட சௌல் தற்கொலை செய்துகொண்டார். சௌலுக்குப்பின் அவரது மருமகனை தாவீது (David) யூதர்களின் தலைவரானர். திறமை

சான்ற போர் வீரரான தாவீது பிலிஸ்தியர்களிடமிருந்து ஜெருசலேம் நகரைக் கைப்பற்றி அதைத் தனது நாட்டின் தலை நகராக ஆக்கிக் கொண்டார். யூதர்களின் தெய்வமான யாக்கோபிற்கு (Yacob) பெரிய கோயில் ஒன்றை அவர் ஜெருசலேத்தில் எழுப்பினார். ஆனால், அது கட்டிமுடிக்கப்படுமுன் அவர் இறந்து விட்டார்.

தாவீதுக்குப்பின் அவரது அருமைப் புதல்வர் சாலமன் (Solomon) அரியணை ஏறினார். கி.மு. 973 முதல் கி.மு. 935வரை அவர் அரசாட்சி புரிந்தார். அவர் காலத்தில் ஹீப்ரு மக்களின் பெருமை பல நாடுகளிலும் பரவியது. எத்தியோப்பியா இராணி ஷீபா (Queen of Sheba) அவரது புகழைக் கேள்வியுற்று நேரில் கண்டு அவரது அறிவைச் சோதித்து அவர் ஒரு பெரிய ஞானி என்று ஒப்புக்கொண்டு சென்றதாக ஓர் கதை உண்டு. தனது தகப்பனால் ஆரம்பிக்கப்பட்ட யாக்கோபின் ஆலயத்தைக் கட்டி முடித்தவர் அவரே. ஏழை எளிய மக்களுக்கு வேலை தரவேண்டி அவர் பல மாளிகைகளைத் தலைநகரில் எழுப்புவித்தார். அதற்கான கட்டடப் பொருள்கள் தனது நாட்டில் கிடைக்காததால் வேற்று நாடுகளிலிருந்து அவற்றை அவர் இறக்குமதிசெய்தார். பொன்னும், வெள்ளியும், வெண்கலமும், தேக்கு மரமும், சந்தனமும் கொண்டு வரப்பட்டன. முப்பதாயிரம் யூதர்களை பினீஷியாவிற்கு அனுப்பி அங்குள்ள காடுகளிலும், சுரங்கங்களிலும் இலவசமாகப் பணிபுரிய வைத்து அதற்குப் பிரதியாகத் தனது கோயில்களுக்கும், கட்டடங் களுக்கும் வேண்டிய பொருட்களை அவர் பினீஷிய மன்னரிடமிருந்து பெற்றார் என்று கூறப்படுகிறது. சாலமன் ஓர் செலவாளி. சிற்றின்பப் பிரியர். அவரது அரண்மனையில் நாலாயிரம் குதிரைகளும் ஆயிரம் மனைவியரும் இருந்தனர். இங்ஙனம் பணத்தைத் தண்ணீர்போலச் செலவு செய்ததால் அவரது நாட்டில் வறுமை ஏற்பட்டது. மக்கள் அதிருப்தி அடைந்தனர். வடக்கத்திய குடிகளும், தெற்கத்திய குலங்களும் ஒன்றையொன்று பகைத்துக்கொண்டன. கி.மு. 935-ல் சாலமன் இறந்தவுடன் வடக்கேயிருந்த பத்துக் குடியினர் நாட்டி னின்றும் பிரிந்து தனியே ஓர் அரசை அமைத்துக் கொண்டனர். அவர்கள் வெளிநாட்டினரின் செல்வாக்குக்கு உட்பட்டு நகரங்களை அமைத்துக்கொண்டு நாகரிகமாக வாழ்ந்தனர். தெற்கே இருந்த இரண்டு குடியினர் அன்னிய செல்வாக்கை வெறுத்துப் பண்டைய முறைப்படி வாழ்ந்தனர். ஆடு மாடுகளை மேய்த்தும், விவசாயம் செய்தும் அவர்கள் பட்டிக்காட்டில் தங்கி வாழ்ந்துவந்தனர். வடக்கத்தியர்கள் தங்கள் நாட்டை இஸ்ரேல் (Israel) என்று கூறிக் கொண்டனர். தெற்கத்தியர் தமது நாட்டை ஜுடா (Judah) நாடு என்று அழைக்கலாயினர். சாலமனின் மகன் ரெகோபா, ஜுடா

விற்கும், ஜெரோபாம் என்பார் இஸ்ரேலுக்கும் முறையே மன்னர் களாயினர். ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம் என்பதற்கேற்ப அன்னியர் பாலஸ்தீனத்தின்மீது படையெடுத்தனர். அசிரியர்கள் ஜுடா நாட்டினையும், சாலடியர்கள் இஸ்ரேல் நாட்டையும் வென்று கைப்பற்றிக்கொண்டனர். கி.மு. 586-ல் சாலடிய மன்னனுன நெபுகத்நேசார் என்பார் ஜெருசலேம் நகரைச் சூறையாடி ஏராளமான யூதர்களை அடிமைகளாக்கி பாபிலோன் நகருக்கு இட்டுச் சென்ருர். அங்கே அவர்கள் விலங்கினும் கேவல மாக நடத்தப்பட்டுப் பல இன்னல்களுக்கும் ஆளாயினர். கி.மு. 539-ல் பாரசீகர்கள் பாபிலோனைக் கைப்பற்றியபோது யூதர்கள் விடுவிக்கப்பட்டனர். விடுதலை பெற்ற பல யூதர்கள் தாய்நாடு திரும்பினர். பலர் பாபிலோனியாவிலேயே தங்கிவிட்டனர். கி.மு. 332-ல் அலெக்ஸாந்தர் பாலஸ்தீனத்தைக் கைப்பற்றினுர். எகிப்திய டாலமிகள் (Ptolemies) அதை ஆண்டுவந்தனர். பின்னர் கி.மு. 63-ல் ரோமானியர்கள் அதைத் தம் ஆட்சியின்கீழ்க் கொண்டு வந்தனர். அவர்களுக்கு எதிராகக் கலகம் செய்த யூதர்கள் அடக்கப்பட்டனர். ஜெருசலேம் தீக்கிரையாக்கப்பட்டது. யூதர்கள் பல்வேறு இடங்களுக்கு ஓடிப்போயினர். சொந்த நாடாகிய பாலஸ்தீனத்தை விட்டு அவர்கள் பல்வேறு நாடுகளுக்கும் சென்று வாழலாயினர். எங்குச் சென்ருலும் அவர்கள் தங்களது கூரிய அறிவைப் பயன்படுத்திப் பெரும் பொருள் ஈட்டி, சமுதாயத்தில் சிறப்படைந்தனர். இதனுல் பொருமையுற்ற அவ்வந்நாட்டு மன்னர்களும், குடிகளும் அவர்களைப் பல்லாற்ருனும் ஒறுத்தனர். இங்ஙனம் நாடற்றவர்களாய்த் திரிந்த யூதர்களுக்கு அமெரிக்கா ஒரு புகலிடமாய் விளங்கியது. அதன்பின் ஐ.நா. சபையின் தயவால் இஸ்ரேல் என்ற ஒரு தனி நாடு ஏற்பட்டு யூதர்கள் அங்குச் சென்று குடியேறினர்.

### *மோசேயின் சட்டத் தொகுதி* (Mosaic Code)

பாரசீக நாட்டின் ஆதிக்கத்தை ஏற்றுக்கொண்ட யூதர்கள், இராணுவ பலத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு வல்லரசை அமைக்க இயலாத நிலையிலிருந்தனர். அத்தகைய பலமிக்க அரசை அமைப்பதற்குப் போதுமான பணபலமோ, ஆள் பலமோ அவர்களிடம் இல்லை. எனவே, யூத சமுதாயத்தில் ஓர் ஒழுங்கையும், கட்டுப்பாட்டையும், தேசீய ஒருமைப்பாட்டையும் ஏற்படுத்த வேண்டி, புரோகிதர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து ஒரு சில சட்ட திட்டங்களை உருவாக்கினர். அவை யாவும் ஆண்டவனது அருளால் ஏற்பட்டவை என அவர்கள் கூறிக்கொண்டனர். அச் சட்டங் களினடிப்படையில் ஒரு சமயஞ்சார்ந்த அரசை (Theocratic State) அவர்கள் ஜுடேயா (Judea) நாட்டில் ஏற்படுத்தித் தந்தனர்.

கி.மு. 444-ல் எஸ்ரா (Ezra) எனும் ஓர் புலமைமிக்க புரோகிதர், யூதர்கள் அனைவரையும் ஒருங்கே திரட்டி, அவர்களது முன்னிலையில் 'மோசேயின் சட்ட நூல்' (Book of the Law of Moses) என்ற நூலைக் காலையிலிருந்து நண்பகல்வரை உரக்கப் படித்துக் காட்டினர். இங்ஙனம் ஏழு நாட்கள் வரை அவரும் அவரது சகாக்களும், சட்ட நூலின் ஏடுகளைப் படித்தனர். சட்ட நூல் முழுவதுமாகப் படிக்கப்பட்டு முடிந்ததும், வேதியர்களும், மக்களின் தலைவர்களும் ஒன்று சேர்ந்து மோசேயின் சட்டத்தைத் தாங்கள் ஏற்றுக் கொள்வதாயும், எந்நாளும் அதன் வழி ஒழுகுவதாயும் ஓர் உறுதிமொழி எடுத்துக்கொண்டனர். அன்றிலிருந்து இன்றுவரை அச் சட்டத் தொகுதியானது யூதமக்களின் வாழ்வு எனும் தேருக்கு ஓர் அச்சாணிபோல் திகழ்ந்துவருகிறது. செல்லுமிடமெல்லாம் யூதர்கள் அவற்றை உடன் கொண்டு செல்வதோடு, பயபக்தியோடு நடைமுறையில் கடைப்பிடித்தும் வருவது அறிந்து வியத்தற்பாலதொன்றுகும்.

மோசேயின் இச் சட்டத் தொகுதியானது, உலகியல் துறையில் சமயம் எத்தகைய சாதனைகளைப் புரிய வல்லது என்பதற்கு ஓர் பெருஞ்சான்ருகத் திகழ்கிறது. மனிதனது வாழ்வில் நடைபெறுகிற சிறு சிறு நிகழ்ச்சிகளையும்கூட அது விட்டுவைக்கவில்லை. மக்களது உணவு, உடை, மருந்து, சுகாதாரம், காதல், காமம் முதலிய பல்வேறு துறைகளைப்பற்றியும், அது விதிமுறைகளை ஏற்படுத்தியுள்ளது. சான்ருக அளவுக்குமீறிக் காம சுகத்தில் ஈடுபடுவதால் ஏற்படக்கூடிய பயங்கரமான தொத்து வியாதிகளால் பீடிக்கப்பட்டவர்களை எங்ஙனம் குணப்படுத்தவேண்டும், அவர்களை எவ்வாறு மற்றவர்களிடமிருந்து பிரித்துத் தனிப்படுத்தவேண்டும், அவர்கள் இருக்கும் அறையை எவ்வாறு துப்புரவாக்க வேண்டும், மற்றவர்களுக்கு அந் நோய் பரவாதவாறு என்னென்ன முன்னெச்சரிக்கைகளைக் கடைப்பிடிக்க வேண்டும், நோய் குணமானபின் அவன் தங்கியிருந்த அறை எவ்வாறு எரிக்கப்படவேண்டும் என்பதைப் பற்றி எல்லாம், மிக நுட்பமாக அச் சட்டத் தொகுதியில் விதிகள் செய்யப்பட்டுள்ளன. நோய் வந்தபின் அதைக் குணப்படுத்துவதைவிட, அது வராமல் காப்பதே மேல் என்பதை உணர்ந்த யூதர்கள் அதற்கெனப் பல சட்டங்களை யாத்தனர். இங்ஙனம் நோய் தடுப்புப் பண்டுவத்துக்கு (Prophylaxis) வித்திட்டவர்கள் அவர்களே. அறுவைச் சிகிச்சை முறையை (Surgery) அவர்கள் அரிதே கடைப்பிடித்தனர். உடல் தூய்மையை முன்னிட்டு, அவர்கள் ஆண்களுக்குச் சுன்னத்து செய்யும் (Circumcision) வழக்கத்தைமட்டும் கைக்கொண்டனர். இதனுல் யூதர்கள் தூய்மையடைந்ததோடு காமநுகர்ச்சியால் ஏற்படக்கூடிய நோய்களினின்றும்

தப்ப வழியேற்பட்டது. 'சுத்தம் சோறு போடும்' என்ற முது மொழி, மோசேயின் சட்டத் தொகுதியின் அடிப்படையாகத் திகழ்ந்தது. உடல் தூய்மை, உள்ளத் தூய்மை இவற்றை வழுவாது கடைப்பிடித்ததனால்தான் உலகமெங்கும் சிதறிப்போன காலத்தும், யூத இனம் அழியாமல் மேலும் மேலும் வளர்ந்து வருகிறது எனலாம்.

*பத்துக் கட்டளைகள்* (Ten Commandments)

மோசேயின் சட்டத் தொகுதியின் அடிப்படையாய்த் திகழ்வது அவர் வெளியிட்டுள்ள பத்துக் கட்டளைகளாகும். யூத மக்களின் நன்மைக்காக இறைவனால் அவை தம்மிடம் தரப்பட்டதாக மோசே கூறுகிறார்.

முதலாவது கட்டளையானது சமயஞ்சார்ந்த ஓர் சமுதாயம் (Theocratic community) யூதர்களிடையே அமைக்கப்பட வேண்டுவதன் அவசியத்தை வற்புறுத்துகிறது. அதன்படி யூதர்களின் நாட்டுக்குத் தலைவர் கட்புலனுக்கு அப்பாற்பட்ட கடவுளே யாவர். அவரது கட்டளைகளே சட்டங்கள். குற்றங்களுக்கேற்ற தண்டனைகளை ஏற்படுத்தியவரும் அவரே. இறைவனின் தனிப்பட்ட அன்புக்குப் பாத்திரமானவர்கள் யூதர்கள். அவர்கள் கடவுளின் பாதுகாப்பாளர்கள் (Defender of God) என்ற பொருள்படும் இஸ்ரேலியர் (Israel) என்று அழைக்கப்படவேண்டும். கடவுள் நிந்தனை (Blasphemy) என்பது மன்னிக்க முடியாத பெருங்குற்றம். அக் குற்றம் செய்தவனுக்குக் கொலைத் தண்டனையொன்றே தக்க தண்டனையாகும். இங்ஙனம் சமயம் எனும் சரடு கொண்டு யூத குருமார்கள், யூத மக்களை ஒன்றுசேர்த்துக் கட்ட முயன்றனர். உலகியல் மன்னர்களால் சாதிக்கமுடியாத ஒன்றை அவர்கள் சாதித்தனர். அதாவது நிலையான பலமிக்கதோர் அரசாங்கத்தை ஏற்படுத்தினர். சமயத்தை அடிப்படையாகக் கொண்ட அரசை அமைப்பதன் மூலமே அவர்கள் தம் கோரிக்கையை நிறைவேற்றிக் கொண்டனர்.

இரண்டாவது கட்டளை யூத சமயத்தைக் குறுகிய தேசீய நிலையிலிருந்து சர்வதேசீய நிலைக்கு உயர்த்துகிறது. யெகோவா ஜுடேயா நாட்டுக்கு மட்டுமின்றி ஏனைய நாடுகள் அனைத்துக்கும் சொந்தமானவர். எனவே, அவரை ஓர் உருவத்தில் வைத்து யாரும் வழிபடலாகாது. அருவ நிலையிலேயே அவரை அனைவரும் வழிபடவேண்டும். கோயில்களில் உருவச் சிலைகள் மருந்துக்கும் இருத்தலாகாது. ஆனால், இறைவனை வழிபடுதற்காகக் கோயில்கள் கட்டப்பெறலாம். அவனை மகிழ்விக்கப் பாடல்கள் பாடலாம்.

இங்ஙனம் கூறியதால் யூதர்களிடையே சிற்பக்கலை நசித்தது ஆனால், இசைக் கலையும் கட்டடக் கலையும் ஓங்க ஆரம்பித்தன.

மூன்றாவது கட்டளையின்படி, மக்கள் இறைவனின் நாமத்தை உச்சரிக்கத் தகுதியற்றவர்கள். எனவே, ஜெகோவா என்ற பெயர் வரும்போதெல்லாம் அவர்கள் பிரபு என்ற பொருள் கொண்ட அடோனை (Adonai) என்ற சொல்லையே பயன்படுத்த வேண்டும். இக் கட்டளையானது யூதர்களின் பயபக்தியையும், இறை விசுவாசத்தையும் தெள்ளிதின் புலப்படுத்துகிறது.

நான்காவது கட்டளை, சனிக்கிழமையை வாரத்தில் ஓய்வு நாளாகக் கருதி அனைவரும் ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டிய தன் அவசியத்தை வற்புறுத்துகிறது. அது ஷாபத் (Sabbath) நாளென்று அழைக்கப்படும். அன்று மக்கள் எவ்விதமான உலகியல் காரியங்களிலும் ஈடுபடக்கூடாது. இறைவனையே சிந்தித்து, அவன் புகழை மட்டுமே பாடிக்கொண்டும், பிரார்த்தனை செய்து கொண்டும் காலத்தைக் கழிக்க வேண்டும். அதுபோன்றே ஆண்டில் வருகின்ற பல்வேறு பண்டிகை நாட்களிலும் மக்கள் ஓய்வெடுத்துக் கொண்டு இறை வழிபாட்டிலீடுபடவேண்டும். அப் பண்டிகைகளாவன பார்லி அறுவடைக் கால ஆரம்பத்தில் கொண் டாடப்பெறும் மஸ்ஸோத் பண்டிகை (Mazzoth), கோதுமை அறுவடைக் காலத்தில் எடுக்கப்பெறும் பெந்தகோஸ்த் (Pentecots) திருவிழா, கொடி முந்திரிப் பழ விளைச்சல் காலத்தில் கொண்டாடப் படும் சுக்கோத் (Sukkoth) எனும் பண்டிகை, ஆடுகளினின்றும் முதன் முதல் உரோமம் களையப்பெறும் நாளைக் கொண்டாடும் பாஸோவர் (Passover) எனும் திருவிழா, புத்தாண்டு விழாவான ரோஷா சனுப் (Rosh-ha-Shanab) முதலியனவாகும். பாஸோவர் திருவிழாவின்போது ஆட்டுக்குட்டியொன்று பலியிடப் பட்டு அதன் இரத்தத்தை வீட்டுக் கதவுகளின் மேல் தெளிப்பது வழக்கம்.

ஐந்தாம் கட்டளையில் குடும்பத்தின் புனிதத் தன்மை நன்கு விளக்கப்படுகிறது. இந்துக்களின் கூட்டுக் குடும்பங்கள் (Joint family) போன்று யூதர்களின் குடும்பமும் மிகப் பெரிது. அதில் தாய் தந்தையரும் அவர்களின் புதல்வரும் புதல்வியரும் மட்டு மின்றி, பெயரப் பிள்ளைகளும் அவர்களின் குடும்பத்தினரும் அடிமை களும் அடங்கியிருந்தனர். சுயேச்சையாக நிருவகிக்கப்படக் கூடிய ஒரு சிறு பொருளாதார நிறுவனமாக அது விளங்கிற்று. அதன் ஒப்பற்ற தலைவராகத் திகழ்ந்தவர் தந்தையேயாகும். அவர் சொல்லுக்குக் குடும்பத்தார் அனைவரும் கட்டுப்பட வேண்டும்.

அங்ஙனம் கட்டுப்பட இயலாதவர்களை அடிக்கவும், உதைக்கவும், அவசியமானால் கொல்லவும் அவர் அதிகாரம் பெற்றிருந்தார். குடும்பச் சொத்துகளை அவர் தம் பிரியம்போல் நிருவகிக்கலாம். பிரியப்பட்டவர்களுக்குத் தமது நிலங்களை இனாமாகத் தந்துவிடலாம். அவர் சொல்லுகிற பெண்ணைத்தான் மகன் திருமணம் செய்துகொள்ள வேண்டும். அதேபோன்று அவரது மகளும் அவருக்குப் பிடித்தமான மாப்பிள்ளையையே மணந்துகொள்ள வேண்டும். பெண்டிர்க்கழகு எதிர் பேசாதிருத்தல் என்ற கொள்கையை அவர்கள் கடைப்பிடிக்க வேண்டும். எத்தனைக் குழந்தைகள் பெற இயலுமோ அத்தனை குழந்தைகளையும் பெற்றுக்கொள்ளவேண்டும். சிசுக் கலைப்பு (abortion), சிசுக் கொலை முதலியவற்றை அன்னார் கண்டித்தனர். திருமணம் செய்துகொள்ளாதது ஓர் பெருங் குற்றமாகக் கருதப்பட்டது. ஏராளமான குழந்தைகளைப் பெற்ற பெண்ணை அனைவரும் 'மக்களைப் பெற்ற மகராசி' எனப் பாராட்டினர். குழந்தைகளைப் பராமரிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொள்ள அரசே முன்வந்தது. ஆண்களின் ஆணைக்குக் கட்டுப்பட்டே பெண்கள் நடந்துகொள்வது வழக்கமாயிருந்தது. எனினும் பொதுவாகப் பெண்டிர்க்குச் சமுதாயத்தில் நல்ல மதிப்பு இருந்தது சாரா (Sarah), ராக்கேல் (Rachael), எஸ்தர் (Esther), மரியாம் (Mariam) போன்ற புகழ் பெற்ற மகளிர் பலர் யூதர்களிடையே மிகப் பெருமையுடன் வாழ்ந்தனர். டெபோரா (Deborah) என்ற பெண் நீதிபதி பற்றியும், ஹல்டா (Huldah) எனும் தீர்க்க தரிசினி பற்றியும் யூத நூல்கள் புகழ்ந்து பேசுகின்றன. ஓர் லக்ஷியப் பெண் எப்படியிருக்க வேண்டுமென்பதை யூதப் பழமொழி நூல் விரிவாக எடுத்துக் கூறுகிறது. கணவனுக்குக் கட்டுப்பட்டு நடப்பதோடு, அவனுக்கு வேண்டியதைச் சமைத்தல், துணி நெய்தல் தைத்தல் போன்ற பல்வேறு பணிவிடைகளைச் செய்வதிலேயே நாள் முழுவதையும் சுறுசுறுப்பாகக் கவனிப்பவளே உயர்ந்த பெண்மணி என அது உரைக்கிறது.

ஆறுவது கட்டளையானது கொலை செய்வதை வன்மையாகக் கண்டிக்கிறது. ஏனெனில், அக்காலத்தே யூதர்கள் தமக்குள் ஓயாது போரிட்டுக் கொள்வதிலும் ஒருவரை ஒருவர் கொல்வதிலும் பெரிதும் ஈடுபட்டிருந்தனர். தோற்றுப்போன ஊர்களைத் தரை மட்டமாக்குதல், மக்களை வாளுக்கிரையாக்குதல் முதலியன சர்வ சாதாரணமாக நடைபெறும் நிகழ்ச்சிகளாயிருந்தன. இறைவனின் செல்லப் பிள்ளைகளாக எண்ணிக்கொண்டு அவர்கள் பிற மக்களிடமிருந்து ஒதுங்கி வாழ்தலில் இன்பங் கண்டனர். இத்தகைய இறுமாப்பு நிறைந்திருந்ததாலேயே பல்வேறு இடுக்கண்களையும் ஆண்டாண்டு காலமாகத் தாங்கிக்கொண்டு அவர்கள் வாழ முடிந்தது.

ஏழாம் கட்டளை திருமணத்தின் பெருமையைப் புகலுகிறது. திருமணமென்பது இருமனங்கள் ஒன்று படுகின்ற ஓர் புனிதச் சடங்காகும். மணமகள் திருமணத்துக்கு முன் தனது தூய்மையை இழத்தல் பாவம். அப்படி அவள் கற்புநெறி தவறியவள் என நிரூபிக்கப்பட்டால், திருமண தினத்தன்றே அவளைக் கல்லாலடித்துக் கொலை செய்துவிட யூதச் சட்டம் இடம் தருகிறது. காதல் திருமணம் என்பது யூதர்களிடையே காணப்படாத ஒன்று. பெற்றோர்கள் பார்த்து நிச்சயித்த வண்ணமே மணமக்கள் திருமணம் செய்துகொண்டனர். போர் நடைபெற்ற காலங்களில் பெண்களைச் சிறைப்பிடித்துத் திருமணம் செய்வது அநுமதிக்கப்பட்டது. மகளிரைப் பலவந்தமாகக் கைப்பற்றித் திருமணம் செய்து கொள்ளும் வழக்கம் பொதுவாகக் கடைப்பிடிக்கப் படவில்லை. ஆனால், பெண்களின் பற்றுக்குறை இருந்தால் அத்தகைய மண முறை மூத்தோர்களின் சம்மதத்தைப் பெற்றது. பெண்டிரை விலை கொடுத்து வாங்கி மனைவியாக்கிக் கொள்ளும் வழக்கம் பரவலாகக் காணப்பட்டது. மனைவி கணவனின் உடைமையாகக் கருதப் பட்டாள். கணவன் மனைவியை விலைக்கு வாங்கியபோது பெண்ணின் தந்தை தன் மகளுக்கு ஸ்ரீதனமாக ஒரு தொகையைத் தருவது வழக்கம். ஒருவன் பல மனைவியரை மணந்துகொள்ளும் வழக்கம் பொதுவாகக் கடைப்பிடிக்கப்பட்டது. மனைவிக்கு மகப்பேறு இருக்காது எனத் தெரிந்தால் ஒருவன் உடனே வேறொரு மனைவியை மணந்து கொள்ளலாம். அல்லது வைப்பாட்டி ஒருத்தியை வைத்துக் கொள்ளலாம். குழந்தைகளை வரையறையின்றிப் பெறுவதில் யூதர்கள் கண்ணுங் கருத்துமாயிருந்தனர். குழந்தைகளைப் பெற்று ஓய்ந்துபோன மனைவிமார்கள், தங்களது வேலைக்காரிகளைக் கணவரிடம் அனுப்பிக் குழந்தைகளைப் பெற்றுத் தருமாறு கூறினர். கணவன் அகால மரணமடைந்துவிடின், அவனது மனைவி தன் கணவனின் சகோதரனையோ அன்றி நெருங்கிய உறவினரையோ மணந்துகொண்டு சந்தான விருத்தியிலீடுபடும்படி வற்புறுத்தப்பட்டாள். ஒருவன் பல மனைவியரை மணத்தல் போன்று ஒருத்தி பல ஆடவரை மணக்க உரிமை இல்லை. ஒருத்தி ஒரே ஒருவனைத்தான் கணவனாக வரித்துக்கொள்ள முடியும். சொத்துச் சிதருவண்ணம் பாதுகாக்க இம்முறை கையாளப்பட்டது. அதேபோன்று ஆண், பெண்ணை விவாகரத்துச் செய்வது எளிதாயிருந்தது போன்று பெண், ஆணை விவாகரத்துச் செய்வது எளிதாயில்லை. திருமணத்துக்கு முன் உடலுறவு கொள்வது பெண்ணுக்குக் கூடவே கூடாது. ஆனால், ஆண் அங்ஙனம் செய்தால் அது மன்னிக்கத்தக்க சிறு தவறாகக் கருதப்பட்டது. ஆணுக்கொரு நீதி, பெண்ணுக்கு ஒரு நீதி என்ற வழக்கம் இந்துக்களிடையே மட்டுமின்றி யூதர்களிடமும் காணப்பட்டது. பெண்

கள் விபசாரத்திலீடுபட்டால் அதற்கு மரணதண்டனை விதிக்கப் பட்டது. ஆனால், ஆண்கள் விபசாரத்திலீடுபடுவதைச் (அந்நியப் பெண்டிருடன்) சட்டம் அனுமதித்தது. அழகிய சிறுவர்களுடன் உறவு கொள்ளும் வழக்கமும் (Pederesty) ஆண்களுக்கு அனுமதிக் கப்பட்டது. சிரியா போன்ற பிற நாடுகளிலிருந்து வந்த விலை மாதர்கள் எருசலேம் நகருக்கு வெளியே கூடாரமடித்துக்கொண்டு வாழ்ந்து தமது தொழிலைச் செய்துவந்தனர். சாலமன் மன்னர் அவர்களை நகருக்குள் வந்து குடிபுகுவதற்கு அனுமதி அளித்தார். எனவே, விரைவிலேயே பொது மகளிர் நகரெங்கும் பரவியதோடு மெக்காபீஸ் (Maccabees) காலத்தில் கோயில்களுக்குள்ளும் புகுந்துவிட்டனர் என்று கூறப்படுகிறது.

எட்டாவது சட்டம் சொத்துரிமையின் புனிதத்வத்தை வற் புறுத்துகிறது. சாலமன் மன்னரின் ஆட்சிக் காலம் வரை, நிலமே மக்களின் முக்கிய உடைமையாயிருந்தது. ஆடு மாடுகளை வளர்த் தல், மண்பானை வனைதல், திராட்சை, அத்தி, ஆலிவ் முதலிய வற்றைப் பயிரிடல் இவையே முக்கிய தொழில்களாயிருந்தன. சிறு கூடாரங்களில் வதிந்து அவர்கள் அடிக்கடி இருப்பிடத்தை மாற்றிக் கொண்டிருந்தனர். அதன் பின் அவர்கள் நிலையாக ஓர் இடத்தில் வாழக் கற்றுக்கொண்டதோடு, அண்டை நாடுகளோடு வாணிபம் புரிந்து பெரும் பொருளீட்டவும் தெரிந்து கொண்டனர். தங்கமும், வெள்ளியும் பரிவர்த்தனைகளில் பயன்படுத்தப்பட்டன. ஆனால், நாணயங்கள் புழக்கத்துக்கு வரவில்லை. எனினும் தங்க, வெள்ளிக் கட்டிகளை வழங்கும் வங்கிகள் நாடெங்கும் பெருகின. அவை கடனாகப் பலருக்கு வழங்கப்பட்டன. யூதச் சட்டம் கடன் கொடுப்பதை அனுமதித்தது. ஆனால், கடன் வாங்குவதை அனுமதிக்கவில்லை. கடன் வாங்கியவர்கள் சிலர் கடன் கொடுத்த வர்களிடம் அடிமைகளாகத் தங்களை விற்றுக்கொண்டனர். ஆனால், கடன் தீர்ந்த உடன் அவர்கள் விடுதலை பெற்றனர். பல சீமான்கள் ஏராளமான அடிமைகளை விலை கொடுத்து வாங்கி வைத்திருந்தனர். சட்டப்படி அடிமைகளும் ஒருவனின் உடைமையாகக் கருதப் பட்டனர். ஆனால், அவர்கள் பணம் நிறையச் சம்பாதித்து, தங்களது சுயேச்சையை விலை கொடுத்து வாங்கிக்கொள்ள அனு மதிக்கப்பட்டனர். யூதச் சட்டம் அடிமைகளைக் கசக்கலாகா தெனவும், ஏழாண்டுகள் கழிந்தபின் அடிமைகள் விடுதலை செய்யப்பெற வேண்டுமெனவும் கூறுகிறது. நடைமுறையில் இது இயலாதென அறிந்த யூதப் பெருமக்கள், ஐம்பதாண்டு கள் கழிந்த பின்னர் கடன் பட்டவர்கள் அடிமைகள் யாவரும் விடுவிக்கப்படவேண்டும் எனச் சட்டமியற்றினர். வறியர்கள், வழிப் போக்கர்கள், அந்நியர்கள், அடிமைகள் முதலியோருக்கு இயன்ற

வரை, உணவும் உடையும் அளித்து உபசரிக்கவேண்டுமென்பது யூதர்களின் வேதங்களில் அடிக்கடி வற்புறுத்தப்படுகின்ற விதி களில் ஒன்ருகும்.

ஒன்பதாவது சட்டத்தில், சாட்சிகளின் நேர்மை பெரிதும் வற்புறுத்தப் பெறுகிறது. சாட்சியம் கூறுபவன் கடவுள் சாட்சி யாகத்தான் தனக்கு உண்மையென்று தெரிந்ததைக் கூறுவதாக அறிவிக்கவேண்டும். பொய் சாட்சி கூறுபவர்கள், அவர்களால் பொய்க்குற்றம் சாட்டப்பட்ட குற்றவாளிகளுக்கு எத்தகைய தண்டனை அளிக்கப்படுமோ அதே தண்டனையை அடைய வேண்டும். இஸ்ரேலியர்களின் சட்டம் முழுக்க முழுக்க சமயச் சார்புடையது. கோயில் குருக்களே வழக்குகளை விசாரிக்கும் நீதிபதி களாவர். கோயில்களே நீதிமன்றங்கள். குருக்களின் தீர்ப்புகளை ஏற்றுக் கொள்ளாதவர்களுக்கு மரண தண்டனை வழங்கப்பட்டது. குற்றம் செய்தார்களா இல்லையா என்பது ஐயப்பாட்டுக்குரியதா யிருந்தால், நஞ்சு கலந்த நீர் அன்னாருக்குச் சோதனையாக வழங்கப் பட்டது. நஞ்சால் பாதிக்கப்பட்டால் அவர்கள் குற்றவாளிகள் என்றும், பாதிக்கப்படாவிட்டால் நிரபராதிகள் என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது. சிறு குற்றங்களுக்குப் பிராயச் சித்தங்கள் விதிக்கப் பட்டன. ஆனல் கொலை, அபகரிப்பு (Kidnapping), விபசாரம், பெற்ருேர்களை அடித்தலும் சபித்தலும், அடிமைத் திருட்டு, மிருகப் புணர்ச்சி போன்ற பெருங்குற்றங்களுக்கு மரண தண்டனை வழங்கப் பட்டது. கொலை நிகழ்ந்துவிட்டால், அங்ஙனம் கொலை செய்யப் பட்டவரின் உறவினர்கள் சட்டத்தின் தீர்ப்புக்காகக் காத்திருக்க வேண்டியதில்லை. கொலை செய்தவன் எதிர்ப்பட்டால் அவனை அவ்விடமே கொலை செய்யும் உரிமையை, அக்கொலையால் பாதிக்கப்பட்டவர்கள் பெற்றிருந்தனர். பொதுவாகக் ‘கண்ணுக்குக் கண்—பல்லுக்குப் பல்’ என்ற பழிவாங்கும் முறை கையாளப் பட்டது. இம்முறைப்படி பார்க்கும்போது யூதச்சட்டம் ஹம்முராபி யின் சட்டத்தைவிட எவ்வாற்ருனும் உயர்வடையவில்லை என்று தெரிகிறது.

பத்தாவது சட்டமானது, அந்நியரின் உடைமையை அடைய ஒருவன் ஆசைப்படுவதைக் கண்டிக்கிறது. அண்டை வீட்டுக் காரனின் வீட்டையோ, அல்லது அவனது மனைவியையோ, அடிமையையோ, வேலைக்காரியையோ, எருதையோ, கழுதை யையோ எதையும் ஒருவன் அடைய விரும்பலாகாது என யூதச் சட்டம் அறுதியிட்டுக் கூறுகிறது. இச் சட்டப்படி ஒருவனின் மனைவி அவனது உடைமையாகிவிடுகிருள்.

மேலே கூறப்பட்டுள்ள பத்துச் சட்டங்களாலும் கூறப்படாத ஒரு சட்டத்தையும் யூதர்கள் கடைப்பிடித்தனர். அதாவது 'நீ உன்னை எப்படி நேசிக்கிருயோ, அதே முறையில் உன் எதிரியையும் நேசி' என்பதாகும்.

மேலே கூறப்பட்ட மோசேயின் சட்டத்தொகுதி யூதமக்களின், முக்கியமாக யூத குருமார்களின் உயர்ந்த குறிக்கோள்களையே படம் பிடித்துக் காட்டுகின்றது. நடைமுறை வாழ்க்கையில் அவற்றில் பெரும்பான்மையானவற்றைப் பொதுமக்கள் கடைப்பிடிக்கவில்லை. எனினும் செல்லுமிடமெல்லாம் யூதமக்களின் நன்னடத்தைக்கு அவை ஓர் வழிகாட்டும் ஒளி விளக்காய்த் திகழ்ந்தன. யூதமக்களின் ஒற்றுமைக்கும், ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமைக்கும் அவை வித்திட்டன. 1948-ல் இஸ்ரேல் நாடு என்ற ஓர் தனிநாடு தோன்றுவதற்கு அவை உறுதுணையாயிருந்தன வெனில் அது மிகையாகாது.

### ஹீப்ரு சமயம்

உலக சமயங்களின் வரலாற்றில் ஹீப்ருக்களின் சமயம் மிகச் சிறந்ததோர் இடத்தைப் பெறுகின்றது. ஏனெனில், உலகப் பெரு மதங்களாக விளங்கும் கிறிஸ்தவமும், இஸ்லாமும், ஹீப்ரு சமயத்துக்குப் பெருமளவு கடமைப் பட்டுள்ளன; அவற்றின் அடிப்படையான கொள்கைகளும் சடங்குகளும் ஹீப்ரு சமயத்திலிருந்து தோன்றியவைகளேயாம். மற்றெல்லாத் துறையிலும்விட. சமயத் துறையில்தான் யூதர்கள் உலக நாகரிகத்துக்குப் பெரும் நன்கொடை வழங்கியுள்ளார்கள். அத்தகைய சிறப்புவாய்ந்த சமயமானது மிக எளிய நிலையிலிருந்து படிப்படியாக வளர்ந்த தொன்ருகும். ஒரு பக்கம் ஓங்கி வளர்ந்த எகிப்திய நாகரிகத்தையும், மற்ருெரு பக்கம் நாகரிகத்தின் தொட்டில்கள் எனப்படும் மேற்காசிய நாகரிகங்களும் விளங்கிய காரணத்தால் யூதர்களின் சமய அறிவு மிக வேகமாக வளர்ச்சியுற்றதில் வியப்பொன்றுமில்லை.

ஏறக்குறைய ஐந்து படித்தரங்களை ஹீப்ரு சமய வரலாற்றில் நாம் காணலாம். முதலாவது கட்டத்தில் அதாவது மோசஸ் என்ற தீர்க்கதரிசியின் வருகைக்கு முன்னர் (கி.மு. 1100 வரை) யூதர்களின் மதம் எளிய பழங்குடி மக்களின் சமயத்தைப் போன்றே விளங்கியது. மிருகங்களையும், மரங்களிலும், மலைகளிலும் வசிப்பதாகக் கருதப்பட்ட ஆவிகளையும் அன்ஞர் வணங்கி வழிபட்டனர். மந்திரங்களும், மாய்மாலங்களும் அதில் செறிந்திருந்தன. தேவதைகளுக்குப் பலியிடும் வழக்கம் சாதாரணமாகக் கடைப் பிடிக்கப்பட்டது. கடவுள் புதர்களில் வசிப்பதாகப் பழைய

ஏற்பாட்டில் ஒரு வாசகம் காணப்படுகிறது. எலிஷா (Elisha) என்ற தீர்க்கதரிசி, மரக்கட்டை ஒன்றை நீரில் எறிந்து அதன்மூலம் கோடரி முனையை மிதக்கவிட்டார் என்று பழைய ஏற்பாடு பேசுகிறது. இவை எல்லாம் பண்டைய யூத மதத்தின் பண்புகளாகும். நாளடைவில் யூதர்கள் தெய்வங்களை மனித வடிவில் (Anthromorphic) வணங்கலாயினர். மனிதப் பண்புகளையே அவர்கள் கடவுளரிடமும் கண்டனர். 'எல்' (El) என்ற பொதுப் பெயரைக் கொண்டு அவர்கள் தங்களது தெய்வங்களனைத்தையும் குறிப்பிட்டனர். ஒவ்வொரு குலத்துக்கும், ஒவ்வோர் இடத்துக்கும் தனித்தனி கடவுளர்கள் இருப்பதாக அவர்கள் நம்பினர். அக்கடவுளர்களே அந்தந்தக் குலத்தையும் ஊரையும் பாதுகாத்துவரும் குல தெய்வங்களாகவும், கிராம தேவதைகளாகவும் கருதப்பட்டனர்.

இரண்டாவது கட்டத்தில் அதாவது கி.மு. 12ஆம் நூற்றுண்டு முதல் கி.மு. 9ஆம் நூற்றுண்டு வரையுள்ள காலத்தில் யூதர்கள் ஏக தெய்வ வணக்கத்தை (Monolatry) மேற்கொள்ளலாயினர். இக்காலத்தே அவர்கள் ஏனைய கடவுளர்களை மறந்துவிடவில்லை. ஆனால், ஒரே ஒரு கடவுளை மட்டும் அவர்கள் தனிப்பட்ட சிறப்புடன் வழிபடத் தொடங்கினர். மோசஸ் என்ற தீர்க்கதரிசியின் போதனை காரணமாக யகோவா (Yahweh) என்ற தெய்வத்தைப் பெரிதும் துதித்தேத்தினர். ஆனல், யூதர்கள் தங்கள் கடவுளுக்கு யகோவா என்ற பெயரை வழங்கவில்லை. கி.பி. 13ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த கிறிஸ்தவ ஹீப்ருக்களே இப் பெயரைப் படைத்தவர்கள். ஒரு மனிதனுக்குரிய பண்புகள் அனைத்தும் இத் தெய்வத்திற்கும் இருப்பதாக அவர்கள் நம்பினர். மனித உருவிலேயே அக் கடவுள் வழிபடப்பட்டார். மனிதரைப் போலவே அவரும் தீமை செய்பவர் பால் கடுங்கோபம் கொள்வதாகவும், அறியாமல் செய்த பாவத்துக்கும் கொடுந்தண்டனை வழங்குவதாகவும் அவர்கள் நம்பினர். ஆனல், எங்கும் நிறைந்த பரம்பொருளாக அவர் கருதப்படவில்லை. ஹீப்ருக்கள் வாழ்ந்த இடங்களில் மட்டுமே அவர் உறைவதாக அன்னர் கருதினர். சிரியா நாட்டைச் சார்ந்த நாமன் என்பவர் யகோவாவைப் பின்பற்ற விழைந்தபோது பாலஸ்தீனத்து மண்ணை இரண்டு கழுதைகளின்மீது ஏற்றிக்கொண்டு சென்று தனது நாட்டில் அதைக் கொட்டி அதன்மூலம் யகோவாவை வழிபட்டார் என்று அறிகிறோம். விதவைகளையும் அனாதைகளையும் காப்பாற்றுவோரும், மக்களை நல்வழிப்படுத்துவோரும் தீயோரை ஒறுப்போரும் அவரே என்பது யூதர்களின் கோட்பாடு. சமுதாயத்தின் சட்டங்களை ஆக்குவோரும் அவரே. மோசஸ் என்ற தீர்க்கதரிசிக்கு சினாய் மலையுச்சியில் தோன்றி அவர் பத்துக் கட்டளைகளை

அசரீரியாக வழங்கினர். அவரது கடவுள் வெறும் நன்னடத்தையை யும் அகத் தூய்மையையும் மட்டும் வேண்டவில்லை. பலியிடுதல், பூசை செய்தல் போன்ற பல்வேறு சடங்குகளையும் அவர் விரும் பினர். இத்தகைய காணிக்கைகளைச் செலுத்துவதன் மூலம் ஒருவன் இறைவனை மகிழ்விக்கலாம் என்றும், அதன் மூலமாக உடல் நலம், சுகபோகம், உலகியல் முன்னேற்றம் இவற்றைப் பெறலாம் என்றும் அவர்கள் நம்பினர். வெறும் ஆன்மீக லாபத்திற் காக அவர்கள் இறைவனை வழிபடவில்லை என்பது தெரிகிறது. இத்தகைய ஓரிறை வழிபாட்டோடுகூட, பண்டைய வழிபாட்டு முறைகளும் வழக்காற்றிலிருந்தன. பாம்புகளையும், மிருகங்களையும், மரங்களையும் பலர் வணங்கினர். மூடக் கொள்கைகள் பல மக்க ளிடையே மண்டிக் கிடந்தன. சிலை வணக்கம் எங்குப் பார்த்தாலும் நடைபெற்று வந்தது. நாளடைவில் யகோவாவின் வழிபாட்டை மக்கள் அநேகமாக மறந்தே போயினர். எனவே, யூத மதத்தைச் சீர்திருத்த வேண்டுமென்று ஒரு சில அறிஞர்கள் விரும்பினர். சந்நியாச தர்மத்தை வற்புறுத்திய நாசரைட்டுகள் (Nazirites), ரெக்கபைட்டுகள் (Rechabites) முதலியோர் பொருளற்ற சடங்கு களைக் கண்டித்துத் தூய எளிய வாழ்க்கையைப் போதித்தனர். கானானியர்களின் தெய்வமாகிய பால் (Baal) என்பாரை வழிபடும் வழக்கத்தை அவர்கள் வன்மையாகக் கண்டித்தனர். அவர்களைப் பின்பற்றி எலிஜா (Elijah) என்னும் தீர்க்கதரிசி பால் எனும் தெய்வ வழிபாட்டில் ஈடுபட்டிருந்த பூசாரிகளை எல்லாம் பலிபீடத்தி னின்றும் கீழே தள்ளி, காலால் மிதித்துத் தன் கைகளாலேயே கொன்றார். ஏனைய சிறு தெய்வங்களை வழிபாடு செய்வதை அவர் தடுக்கவில்லை. ஆனால், யகோவா என்ற ஒரு தெய்வம்தான் உண்மையிலேயே வழிபடக்கூடிய உயர்ந்த ஒரே தெய்வம் என்பது அவரது அசையாத கோட்பாடாகும்.

மூன்றாவது கட்டத்தில் யூத சமயமானது பல சீர்திருத்தங் களுக்கு உட்பட்டது. ஆமோஸ் (Amos), ஹொசியா (Hosea), ஐசாயா (Isaiah), மைக்கா (Micah) என்ற நான்கு பெரும் தீர்க்க தரிசிகள் பழைய யூத சமயத்தைச் சீர்திருத்தினர். மூன்று கோட் பாடுகளை அவர்கள் வற்புறுத்திக் கூறினர். ஒன்று ஓரிறை வழிபாடு. யகோவாதான் இப் புவனத்துக்கெல்லாம் தனித் தலைவர். ஏனைய மக்களிடையே காணப்படும் தெய்வங்கள் அனைத்தும் பொய் யானவை. யகோவா ஒன்றே உண்மையான தெய்வம். இரண்டாவ தாக அவரே நன்னெறிக்கெல்லாம் உறைவிடமானவர். நீதி, நேர்மை, நன்மை முதலியவைபற்றிய செயல்களில் மட்டுமே அவர் தமது ஆற்றலை வெளிப்படுத்த முடியும். ஏனைய துறைகள் எதிலும் அவருக்கு அதிகாரம் கிடையாது. இவ்வுலகில் காணப்படுகிற

தீமைகள் அனைத்தும் மக்களிடமிருந்தே பிறக்கின்றன. இறைவன் அதற்கு எவ்வகையிலும் காரணமானவர் அல்லர். மூன்றுவதாக நன்னெறியை உலகில் நிலைநாட்டுவது ஒன்றே சமயத்தின் குறிக்கோளாகும். சடங்குகளும், மிருக பலியும் யகோவாவிற்கு உகந்ததல்ல. பின் என்னவெனில், ஒருவன் நியாயத்தை நாடவேண்டும்; ஒடுக்கப்பட்டவர்களை மீட்கவேண்டும்; மக்களை நேசிக்கவேண்டும்; அதே சமயம் பணிவுடனும் இருக்கவேண்டும்; இதையே இறைவன் விரும்புகிருர்.

இத்தகைய போதனைகள் யூத சமயத்தில் புரட்சிகரமான மாறுதல்களை ஏற்படுத்தின. உண்மையில் பண்டைய மதத்தின் தூய்மையை நிலைநாட்டவும், அந்நிய சமயங்களின் செல்வாக்கை ஒழிக்கவுமே தாங்கள் பாடுபடுவதாக மேற்கண்ட தீர்க்கதரிசிகள் கூறிக்கொண்டனர். எனினும், நடைமுறையில் புதியதோர் புரட்சியை அவர்கள் சமயத்துறையில் சமைத்தனர் என்ருல் அது மிகையாகாது. அரசியல் துறையிலும், சமுதாயத் துறையிலும் காணப்பட்ட ஊழல்களும் இத்தகைய சீர்திருத்தங்களுக்கு அடிகோலின. சான்ருகக் கடன்காரன் ஒருவன் ஒரு ஜதை காலணிகளை நீதிபதிக்குக் கையூட்டாக வழங்குவதன்மூலம் கடனினின்றும் தப்பித்துக்கொள்ளலாம் என்று ஆமோஸ் கூறுகிருர். இத்தகைய சமுதாய ஊழல்கள் ஒருபுறமிருக்க அரசியல் துறையில் அசிரியர்களின் ஆதிக்கம் கொடிகட்டிப் பறந்தது. அவர்கள் யூதர்களுக்கு இழைத்த தீங்குகள் பலவாகும். அசிரியர்களின் கொடுமையினின்றும் விடுபட வேண்டுமாளுல், யூதர்களிடையே ஒழுங்கும், கட்டுப்பாடும் வேண்டுமென தீர்க்கதரிசிகள் நம்பியதன் விளைவாகவே சமயத்தைத் துப்புரவு செய்யும் பணியில் அவர்கள் இறங்கினுர்கள். இதன் விளைவாக அவர்கள் சமயத்தில் வந்து புகுந்த பிற மதச் சடங்குகளும், மூடப்பழக்கங்களும் மறைந்தன. எனினும், இக்காலத்தே இருப்பது போன்று யூத மதத்தில் மறு உலகத்தின் மகிமை அதிகமாகப் பேசப்படவில்லை. மனிதனுக்கு மனிதன் இழைக்கின்ற தீங்குகளைத் தடுக்கவும், ஒன்றுபட்ட சமுதாயத்தைப் படைக்கவும்தான் சமயம் முயற்சித்தது. பரலோகத்தைப்பற்றியோ, நரகத்தைப்பற்றியோ, சாத்தானைப் பற்றியோ அவர்கள் கவலைப்படவில்லை. இறந்தபின் மனிதனுடைய ஆவி ஷியோல் (Sheol) என்ற இடத்திற்குச் சென்று அங்குள்ள தூசியோடு தூசியாய்ச் சில நாள்கள் இருந்தபின் அது மறைந்துவிடுவதாகவே யூதர்கள் கருதினர்.

பாபிலோனில் யூதர்கள் பலர் சிறை வைக்கப்பட்டபோது (கி.மு. 586—கி.மு. 539) ஹீப்ரு மதத்தில் மீண்டும் சில மாற்றங்கள்

ஏற்பட்டன. அது யூத சமய வளர்ச்சியில் நான்காவது கட்டமாகும். இக் கட்டத்தில் வேற்றுச் சமயங்களின் செல்வாக்கு யூத சமயத்தில் வந்து புகுந்துவிட்டது. இறைவன் மனித சக்திக்கு அப்பாற்பட்டவர் என்ற எண்ணம் தலைதூக்கியது. அவர் எல்லாம் வல்லவர் என்றும், அவரைச் சாதாரண மனிதர்கள் நெருங்க முடியாதென்றும், அவரிடம் பூரண சரணாகதியடைவது ஒன்றினால் மட்டுமே மனிதன் அவரது அருளைப் பெறமுடியும் என்றும் யூதர்கள் கருதத் தலைப்பட்டனர். இங்ஙனம் தெய்வத்தை மனிதனினின்றும் வேறுபடுத்திக் காண்கின்ற பழக்கம் யூதர்களிடம் இக்காலத்திலிருந்து தொடங்குகிறது. இவ் வுலகம் துன்பமயமானதென்றும், எல்லாம் இறைவனால் விதிக்கப்பட்டபடியே நடைபெறும் என்றும் அவர்கள் நம்பினர். சமயத்தின் முழு அமைப்பிலும் அவர்கள் சில மாற்றத்தை ஏற்படுத்தினர். ஞாயிற்றுக்கிழமையைப் புனித நாளாகக் கொண்டாடுதல், சினகாக் (Synagogue) என்ற கோயிலில் இறைவனை வழிபடல், சிறு பிள்ளைகளுக்கு சுன்னத் செய்தல் (Circumcision), தூய உணவை மட்டுமே உண்டு, தூய்மையற்ற உணவை மறுத்தல் போன்ற பழக்க வழக்கங்கள் சமயத்தில் பெரிதும் முக்கியத்துவம் பெறலாயின. இத்தகைய சடங்குகள் காரணமாக அவற்றை இயற்றிவந்த குருமார்களின் செல்வாக்குப் பெரிதும் பெருகி வளர்ந்தது.

கடைசி கட்டத்தில் பாரசீக மதத்தின் செல்வாக்கு யூத சமயத்தைப் பெரிதும் பாதித்தது. கி.மு. 539முதல் கி.மு. 300வரை ஸொராஷ்டிரிய மதத்தின் செல்வாக்குக்கு யூத சமயம் பெரிதும் உட்பட்டது. அதன் விளைவாக இறைவனுக்கு நேர் விரோதியான சாத்தான் ஒருவன் இருப்பதாகவும், இவ் வுலகின் தீமைகளுக்கெல்லாம் அவனே காரணமென்றும், பாவிகளை இரட்சிக்க இறைவன் உலகுக்கு ஒரு தீர்க்கதரிசியை அனுப்புவார் என்றும், இறந்தவர்கள் மீண்டும் உயிர்த்தெழுவர் என்றும், அப்போது இறைவன் நல்லவர்களுக்கும், தீயோருக்கும் ஏற்ற இறுதித் தீர்ப்பை வழங்குவார் என்றும் யூதர்கள் நம்பலாயினர். இம்மை இன்பத்தைவிட மறுமை இன்பத்தையே அவர்கள் பெரிதும் நாடினர். மதம் என்பது கடவுளால் மனிதனுக்கு உணர்த்தப்படக் கூடியதே அன்றி, மனித முயற்சியால் ஏற்பட்டது அல்ல என்ற கருத்து மக்களிடையே தோன்றலாயிற்று. சான்றாக, எசக்கியல் (Ezekiel) என்பாரது வேத நூலானது இறைவனால் பரலோகத்திலிருந்து தயாரிக்கப்பட்டு மனிதனுக்கு வழங்கப்பட்டது என்று கூறப்படுகிறது. இதுபோன்றே வேறு பல நூல்களும், யகோவாவின் அசரீரியினின்றும் பிறந்தவையே என்ற நம்பிக்கையும்

வளர்ந்தது. இங்ஙனம் பழைய யூத சமயத்தில் பல மாற்றங்கள் நாளடைவில் ஏற்பட்டன.

**தல்முத் (Talmud)**

யூதர்களின் வேதம் தல்முத் எனப்படும். அதில் அவர்களின் சமயக் கொள்கைகள் மட்டுமன்றி, அவர்தம் வரலாறு, சமுதாயப் பழக்கவழக்கங்கள், பொருளாதார நடவடிக்கை முதலிய வாழ்க்கையின் பல்வேறு கூறுபாடுகளைப்பற்றிய தகவல்களும் இடம் பெற்றுள்ளன. தொரஹ் (Torah) அல்லது சட்டம் அதன் முக்கிய மான பகுதியாகும். அதில் மோசேயால் எழுதப்பெற்ற சட்டமும், வழிவழியாகக் கடைப்பிடிக்கப்படுகின்றதும் ஆனால் எழுதப் பெறாததுமான வாய்மொழி மரபும் அடங்கியுள்ளன. இவை யனைத்தும் யூதர்களால் கி.பி. 70ஆம் ஆண்டளவில், அதாவது தாய்நாட்டைவிட்டு அவர்கள் அகன்று கலைந்து சென்ற பின்னர் தொகுக்கப்பெற்றதென்பர்.

***சமயக் கொள்கை***

யூதர்கள் இயல்பாகவே சமயப்பற்று மிகுந்தவர்கள். தல் முதில் அவர்களது மத நம்பிக்கைகள்பற்றிய விவரங்கள் பரக்கக் கூறப்பட்டுள்ளன. அவற்றின்படி ஒன்றே கடவுள், ஒருவனே தேவன். அவன் எல்லாம் வல்ல இறைவன். எங்கும் நிறைந்த வன். இப் புவனமனைத்தின் உயிராக விளங்குபவன். அண்ட சராசரங்களை ஊடுருவி நிற்பவனும், அதே சமயம் அவை யனைத்தையும் கடந்து நிற்பவனும் அவனே. எங்கும் நிறைந்தவன் என்றாலும், தன்னைச் சதா சிந்தித்துத் தொழுது வரும் அடியார் களிடமும், புனித தலங்களிலும் அவனது அருள் பெருக்கெடுத்துப் பொங்கி வழியக் காணலாம். இத்தனை பெருமை பொருந்திய இறைவனது நாமத்தை வாயால் உச்சரிக்கக்கூட எவருக்கும் அருகதையில்லை என யூத சமயக் குருக்களான ரப்பிகள் (Rabbis) கூறினர். எனவே, யூதக் குடிமக்கள் இறைவனைப் பிரபு எனப் பொருள்படும் அடோனெய் (Adonai) என அழைத்தனர். பரிசுத்த மானவரும், காருண்யம் நிறைந்தவருமான பிரபுவே என அவரை அன்னார் விளித்தனர். அவரது அருளைப் பெற்ற ரப்பிகளால் சித்து கள் பலவற்றைச் செய்ய இயலும் என்றும், அங்ஙனம் செய்வது இயற்கைக்கு முரணானதன்று என்றும் பொதுவாக நம்பப்பட்டது.

இறைவனது படைப்புகளில் மனிதனே தலைசிறந்தவன். மனிதனின் உடல் மண்ணிலிருந்து உதித்தது. ஆனால், அவனது ஆன்மா கடவுளினின்றும் தோன்றியது. எனவே, மனிதன் சதா இரு வேறுபட்ட இயற்கையால் துன்புற்று இருதலைக் கொள்ளி எறும்புபோல் தத்தளிக்கிறான். தோன்றி நின்றழியும் இப்

புறவுலக ஆசைகள் அனைத்தும் உடலின் பாற்பட்டவை. அவை சாத்தான் எனும் கடவுளின் எதிரியால் தூண்டப்படுவனவாகும். ஆனால், அறம் எனப்பட்ட அனைத்தும் ஆன்மாவின்பாற்பட்டவை. அவை யாவும் இறையருளால் தூண்டப்பெறுபவையாகும். இறைவனது முன்னிலையிலேயே மனிதன் செயல்படுகிறான். அவனது ஒவ்வொரு சிறு செயலையும் கடவுள் உன்னிப்பாகக் கவனித்து வருகிறார். பாவம் செய்தவர்களை அவர் தண்டிக்கிறார். புண்ணியம் செய்தவர்களை அவர் ரட்சிக்கிறார். பாவம் செய்வதும் அதற்கேற்ற தண்டனையை அனுபவிப்பதும் மனிதனது இயற்கை. அதற்காக அவன் வருந்தவேண்டியதில்லை. ஆசைகளின்றேல் மனிதன் இவ்வுலகில் பிறந்திருக்கவே மாட்டான். எனவே, பிறப்பெடுத்த அனைவரும் பாவிகளேயாவர். அவர்கள் தங்களது பாவங்களின் விளைவாகவே மரணமடைகின்றனர். பாவமே இன்னதென்று அறியாதவர்கள் மரணமடைவதென்பதில்லை. மரணமடைந்த பின், பாபாத்மாக்கள் ஏழு அடுக்குகளைக் கொண்ட நரகத்திற் சென்று இடர்ப்படுவன. ஒவ்வோர் அடுக்கிற்கும், தண்டனையின் கடுமை அதிகமாகிக்கொண்டே செல்லும். புண்ணியாத்மாக்கள் சுவர்க்கத்துக்குச் சென்று இன்புறுவன. சுவர்க்கம் என்பது இன்பம் பூத்துக் குலுங்கும் ஓர் உல்லாசப் பூங்கா. அங்கு எங்குப் பார்த்தாலும் நறுமணம் கமழும். உடலுக்கும் ஆன்மாவுக்கும் இன்ப மூட்டும் பல்வேறு பொருள்களும் நிறைந்திருக்கும். எல்லாம் வல்ல இறைவன் நேரில் வந்து சுவர்க்கவாசிகளிடையே அமர்ந்து விருந்துண்பார். கோடி சூரியர்களைப் போல் பிரகாசிக்கும் அவரது திவ்ய வதனத்தைக் காணும் உயிர்கள் பரவசமடைந்து பேரின்பத்தில் திளைக்கும். இங்ஙனம் சுவர்க்கத்தில் இன்பம் துய்ப்பதும், நரகத்தில் இடர்ப்படுவதும் கொஞ்ச காலத்துக்குத்தான். அதன் பின்னர் இறைவன் எல்லாரையும் ஆசீர்வதித்துத் தம்வயமாக்கிக் கொள்வார்.

தனிப்பட்ட மனிதர்கள் முக்தியடைவதில் யூதர்களுக்கு நம்பிக்கை இல்லை. யூதர்கள் அனைவருமே, ஒரு காலத்தில் முக்தியடையப் பிறந்தவர்கள் என்பதும் இறைவனின் தனிப்பட்ட அன்புக்கும் ஆதரவுக்கும் பாத்திரமானவர்கள் இவ்வுலகில் யூதர்கள் மட்டுமேயாவர் என்பதும் அவர்களின் திடமான நம்பிக்கைகளாகும். பல்வேறு இடையூறுகள் வந்துற்றபோதும் எதிரிகளால் துன்புற்றபோதும், அவர்கள் இந்த நம்பிக்கையைக் கைவிடாமல் நின்றனர். என்றாவது ஒரு நாள் தாவீதின் மகனான மெசாயா என்ற தேவதூதன் இந் நிலவுலகில் வந்து அவதரிப்பார். யூத மக்களை எல்லாம் ஒருங்கிணைத்து ஒரு தேசிய சமுதாயமாக மாற்றியமைப்பார். பண்டைய தமது முன்னோர்களுக்குச் சொந்தமான

நாட்டுக்கு அவர்களை அழைத்துச் செல்வார். அங்கே பாலும் தேனும் பெருக்கெடுத்தோடும். இன்பமேயன்றித் துன்பம் மருந்துக்கும் இராது. அங்கிருந்து யூதர் அனைவரையும் இறைவன் மரணமிலாப் பெருவாழ்வுக்கு இட்டுச் செல்வார் என்று யூதர்கள் அனைவரும் நம்பினர். இந்த நம்பிக்கையின் அடிப்படையிலேயே அவர்கள் இறைவனது புகழைப் பாடியும், ஆடியும், பல்வேறு சடங்குகளைச் செய்துகொண்டும் உயிர் வாழ்ந்தனர்.

***சடங்குகள்***

யூதர்களனைவரையும் ஓர் சங்கிலிபோல் பிணைத்து ஒன்று படுத்தியவை, அவர்களால் இயற்றப்பெற்ற பல்வேறு சடங்குகளாகும். பிறந்தது முதல் இறக்கும் வரை அவர்களால் செய்யப் பெற்ற சடங்குகள் பலப்பல. அவற்றுள் முக்கியமானவை வருமாறு.

எல்லாம் வல்ல இறைவனை ஒவ்வொருவரும் முறையே தொழ வேண்டுமென்பது சடங்குகளிலெல்லாம் தலையாயதாய்க் கருதப்பட்டது. 'கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅரெனின்' என்பது யூதர்களின் நம்பிக்கை. காலையிலும், மாலையிலும், ஏன் ஒவ்வொரு நாழிகைக்குப் பின்னும் அவர்கள் இறைவனைப் பிரார்த்தித்தனர். புனித நூல்களிலிருந்து சில பகுதிகளைப் பாராயணம் செய்த பின்னரே தொழுகை ஆரம்பிக்கப் பட்டது. தொழுகையின் முடிவில், தங்களால் அநுபவிக்கப்படும் நன்மைகளுக்காக இறைவனுக்கு நன்றி சொல்லுதல் தவறாது நடைபெற்றது. இங்ஙனம் தனிப்பட்ட முறையில் தொழுகை புரிவதைவிடப் பலரோடும் சேர்ந்து கூட்டுப் பிரார்த்தனை செய்வது பெரிதும் பயனுடைத்தாகுமெனக் கருதப்பட்டது. எனவே, சினகாக் (Synagogue) எனும் கோயிலுக்குச் சென்று அங்கே அனைவரும் சேர்ந்து வேதங்களைப் படித்தும் பாடல்களைப் பாடியும், கூட்டாக இறைவழிபாடு நிகழ்த்துவதும் அடிக்கடி நடைபெற்றது. ஆனால், சிலை வணக்கத்தை (Idol-worship) அவர்கள் அடியோடு வெறுத்தனர்.

எக்காலத்தும் எதிலும் சுத்தம் பார்ப்பதில் யூதர்கள் அளவுக்கு மீறி அக்கறை காட்டினர். நம் நாட்டு வேதியர்களைப் போல் அவர்கள் பல்வேறு தூய்மை விதிகளைக் கடைப்பிடித்தனர். உடல் தூய்மையின் மூலமே ஆன்மீகத் தூய்மையை அடைய இயலும் என அவர்கள் நம்பினர். எனவே, உடலை அசுத்தப்படுத்தும் ஒவ்வொரு பொருளையும், அல்லது செயலையும் அவர்கள் வேம்பென வெறுத்தொதுக்கினர். உடலைத் துப்புர

வாக்க அவர்கள் அடிக்கடி குளித்தனர். ஆனால், வெந்நீரில் குளிப்பது அசுத்தமாகக் கருதப்பட்டது. எனவே, வெந்நீரில் குளித்த உடனேயே தண்ணீரில் அவர்கள் மூழ்கினர். கைகளை ஓயாது கழுவிக் கொண்டேயிருந்தனர். தூங்கி எழுந்த உடனும், உணவு உட்கொள்ளுமுன்பும், உட்கொண்ட பின்பும், சடங்குகள் அல்லது பிரார்த்தனையிலீடுபடுவதற்கு முன்பும், அவர்கள் கைகளை அலம்புவது வழக்கம். சவத்தைத் தீண்டுதல், புணர்ச்சியிலீடுபடுதல், மாதவிடாய் எய்துதல், கருவுயிர்த்தல் முதலிய செய்கைகள் உடலை அசுத்தப்படுத்துவதாக எண்ணப்பட்டது. எனவே, அவ்வசுத்தத்தைப் போக்கிக்கொள்ளப் பல தூய்மைச் சடங்குகள் விதிக்கப்பட்டன. குட்டம், சிறங்கு போன்ற தோல் வியாதிகளால் பாதிக்கப்பட்டவர்களும் அசுத்தமானவர்களாய்க் கருதப்பட்டனர். அவர்கள் தூய்மை பெற ஒரு சில சடங்குகள் கூறப்பட்டன. மகன் பிறந்து 40 நாள்கள் வரையும், மகள் பிறந்து 80 நாள்கள் வரையும் ஒரு பெண் தூய்மையற்றவளாகக் கருதப்பட்டாள். அதன் பின்னர் ஒரு சில சடங்குகளைச் செய்த பின்னரே அவள் எல்லாருடனும் பழக அனுமதிக்கப்பட்டாள். ஆண் குழந்தைகளின் தூய்மையைக் காப்பாற்ற அது பிறந்த எட்டாம் நாளன்று சுன்னத் (Circumcision) செய்யப்பட்டது. இங்ஙனம் யூதர்கள், ஏறக்குறைய இந்துக்களைப் போலவே, ஓரளவு தீண்டாமையைக் கடைப்பிடித்ததாகத் தெரிகிறது. ஆனால், நிரந்தரமாக யாரையும் தீண்டத் தகாதவராக அவர்கள் கருதவில்லை என்பதை நாம் கருத்திற் கொள்ளல்வேண்டும்.

தல்முத், நோய் தீர்க்கும் பல்வேறு மருந்துகளைப் பற்றியும் பரக்கக் கூறுகிறது. மந்திரங்கள் மூலம் நோய் தீர்க்கும் முறைகளும் கூறப்படுகின்றன. ஈக்கள் மூலமாகவும், எச்சில் மூலமாகவும் நோய் பரவுவதாக அது கூறுகிறது. எனவே, உண்கலன்களைச் சுத்தமாக வைத்துக்கொள்வதன் இன்றியமையாமையை அது பெரிதும் வற்புறுத்துகிறது.

எந்தெந்த உணவுகள் கொள்ளத்தக்கன? எவையெவை தள்ளத்தக்கன என்பதையும் தல்முத் வரையறுத்துக் கூறுகிறது. பழங்களும் காய்கறிகளும் நல்ல உணவுகளாகக் கருதப்பட்டன. ஆனால், பேரீச்சம் பழம் உண்ணத் தகாததாய் எண்ணப்பட்டது. பன்றியின் இறைச்சியை அவர்கள் பெரிதும் வெறுத்தனர். இரத்தம் தோய்ந்த இறைச்சியை உண்பது பாவமாகக் கருதப்பட்டது. தோலுரிக்கப்பட்ட முட்டை, வெங்காயம், வெள்ளைப் பூண்டு முதலியவற்றை உண்பதும் தகாததொன்றாக எண்ணப்பட்டது. குறித்த காலத்தில் மிதமாக உண்பதே வாழ்நாளை நீட்டிக்கும்

நற்பழக்கமாகும் எனக் கூறப்படுகிறது. நாற்பது வயது வரை கடினமான ஆகாரங்களை உண்ணலாம் என்றும், அதன்பின் திரவமான உணவுகளையே உட்கொள்ள வேண்டுமென்றும், மதுவை மிதமாக உட்கொள்ள வேண்டுமெனவும் தல்முத் வற்புறுத்துகிறது.

துறவு மார்க்கத்தை தல்முத் அவ்வளவாக வரவேற்கவில்லை. இல்லற வாழ்க்கையில் புகுந்து இவ்வுலகின் பல்வேறு இன்பங்களையும் அளவோடு துய்த்தலே அறம் என அது அறுதியிட்டுக் கூறுகிறது. ஆனால், சாபத் (Sabbath) நாள்கள் போன்ற புனித நாள்களில் விரதமிருப்பது வேண்டற்பாலது எனவும் அது கூறுகிறது. புனித நாள்களில் ஒருவன் கூடியவரை மௌன விரதம் பூணவேண்டும், வீட்டில் அடுப்பு மூட்டலாகாது, கோயிலுக்குச் சென்று இறை வழிபாட்டில் பெரும் பொழுதைக் கழிக்க வேண்டும் என்றெல்லாம் அது வலியுறுத்துகிறது.

யூதர்கள் தமது மூதாதையரின் கடந்தகால அநுபவங்களை நினைவுபடுத்திக்கொள்வான்வேண்டி பல விழாக்களைக் கொண்டாடினர். அவற்றுள் கடந்துசெல் விழா (Pass over festival) என்பது மிக முக்கியமானதாகும். ஒரு காலத்தே எகிப்து நாட்டை ஆண்டுவந்த பரோவா மன்னர் யூதர்களைத் துன்புறுத்தினர். நாட்டை விட்டு வெளியேறக் கூடாதெனவும் ஆணையிட்டார். அப்போது கடவுளின் தூதர் ஒருவர் வந்து, எகிப்தில் வாழ்ந்த ஒவ்வொரு குடும்பத்திலிருந்த தலைமகனையும் கொன்றுவிட்டுச் சென்றார். ஆனால், செம்மறியாட்டுக் குட்டியின் இரத்தம் தெளிக்கப் பெற்ற கதவுகளைக் கொண்ட யூதர்களின் வீடுகள் அருகே வந்த போது அத் தூதன் அவற்றைக் கடந்து மறு வீட்டுக்குச் சென்றாராம். இந் நிகழ்ச்சியையே கடந்துசெல் விழா என யூதர் கொண்டாடுகின்றனர். இப் பண்டிகை யூதர்கள் எகிப்திலிருந்து இரகசியமாக ஓட்டமெடுத்த நிகழ்ச்சியை நினைவு படுத்தியது. அடுத்து சினாய் மலைமீது மோசேக்குப் பத்துக் கட்டளைகள் இறைவனால் காட்டப்பட்ட நிகழ்ச்சியை அவர்கள் கொண்டாடினர். அது பெந்தகோஸ்த் விழா (Pentecost) அல்லது அறுவடை விழா எனப்படும். கடந்துசெல் விழாவுக்கு ஏழு வாரங்களுக்குப் பின்னர் இவ்விழா கொண்டாடப்பட்டது. தொடர்ந்து பதினைந்து நாள்கள் இது நடைபெற்றது. பத்தாவது நாளில் அனைவரும் நாள் பூராவும் பட்டினி கிடந்து, நோன்பு நோற்று இறைவனிடம் தாங்கள் செய்த பாவங்களுக்கெல்லாம் மன்னிப்புக் கேட்டுக்கொள்வது வழக்கம். பதினைந்தாவது நாள் யாவரும் நன்கு விருந்துண்டு மகிழ்வர். டிசம்பர் மாதத்தில் தத்தம் செய் விழா (Festival of

Dedication) என்னுமோர் பண்டிகை கொண்டாடப்பட்டது. அது ஆண்டியோகஸ் எபிகனிஸ் (Antiochus Epihanes) என்பவரால் தீட்டுப்பட்டுவிட்ட கோயிலை மெக்காபீஸ் (Maccabes) என்பவர் தூய்மையாக்கிய நிகழ்ச்சியை நினைவுபடுத்தக் கொண்டாடப் பட்டதொன்ருகும். மார்ச் மாதத்தில் புரிம் விழா (Purim fest val) கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. பாரசீக அமைச்சர் ஹமான் (Haman) என்பாரின் சதிகளிலிருந்து யூதர்கள் விடுபட்ட நிகழ்ச்சியை நினைவுபடுத்திக் கொள்ளவே அவ்விழா கொண்டாடப் பெற்றது.

**தல்முத் கூறும் அறநெறி**

தல்முத்தில் கூறப்பட்டுள்ள அறநெறிகள் இறைவனுல் வெளிப் படுத்தப்பட்டனவாகக் கருதப்பட்டன. அதன்படி ஒவ்வொரு வரும் தங்களது குடும்பங்களைப் புனிதமாகக் கருதி ஓம்ப வேண்டும். பெற்ருேர்களையும் மூத்தோர்களையும் மரியாதையோடு நடத்த வேண்டும். குழந்தைகளை அன்புடன் வளர்க்க வேண்டும். இயன்ற வரை ஏழைகளுக்குத் தானம் செய்யவேண்டும். வருமானத்தில் ஐந்தில் ஒரு பங்கு தர்மத்துக்காக ஒதுக்கப்படவேண்டும். திருமண மின்றி வாழ்வது பாவம். திருமணம் செய்துகொண்டு குழந்தை குட்டிகளுடன் வாழ்வதே அறம். ஆனுல், ஒரு சில சமயங்களில் கணவனும் மனைவியும் கருத்தடை முறைகளைக் கையாளலாம்.

ஆண்மக்கள் பிறந்தபோது யூதர்கள் களிப்புற்றனர். ஆனுல், பெண்மகவுகள் பிறந்தபோது பெரிதும் வருந்தினர். பிறனுக்கு வாழ்க்கைப்பட்டுக் குடும்பத்தை விட்டு வெளியேறும் பெண்ணுல் நஷ்டமேயன்றி லாபமொன்றுமில்லை என்பது அவர்களின் கருத் தாகும். எனினும், நடைமுறையில் ஆணும் பெண்ணும் பெற்ருேர் களால் சமமாகவே நடத்தப்பட்டனர். குழந்தைகள் பெற்ருேர்க்கு அடங்கி நடப்பது மிக இன்றியமையாததாகக் கருதப்பட்டது. குழந்தைகளை ஒழுக்கம் வழுவாது காப்பது பெற்ருேரின் கடமை யாகும்.

மிக இளவயதிலேயே தம் மக்களுக்கு யூதர்கள் திருமணம் செய்து வைத்தனர். பெண்கள் 14 வயது அடைந்த உடனும், ஆண்கள் 18 வயதை எட்டிய உடனும் திருமணம் நடைபெற்றது. கல்விக்காகத் திருமண வயதை ஒத்திப்போடலாம். போதிய வரு மானமில்லாதவர்களும், சொத்தில்லாதவர்களும் திருமணம் செய்துகொள்வதில் பயனில்லை. வெறும் அழகுக்காகவன்றி குணத் துக்காகவே ஒருவன் ஒரு பெண்ணை விரும்பவேண்டும். தன்னை விட உயர்ந்த இடத்தில் திருமண உறவு ஏற்படுத்திக்கொள்ளுதல்

நல்லதன்று. ஒன்று முதல் நான்கு மனைவியர் வரை ஒருவன் மணந்து கொள்ளலாம். ஆனால், ஒரு மனைவி இறந்த பின்னரே மற்றொரு மனைவியை ஒருவன் மணக்கலாம். குழந்தையின்றி இறந்துவிட்ட அண்ணனின் மனைவியைத் தம்பி மணந்துகொள்ளு தல் வற்புறுத்தப்பட்டது. குழந்தை பெறுதல் ஒவ்வொரு பெண்ணி னுடைய தலையாய கடமை எனக் கருதப்பட்டதாலேயே அப் பழக்கம் யூதர்களிடை ஏற்பட்டது. எனினும், பிறன்மனை விழை தலையும் விபசாரத்தையும் யூதச் சட்டம் பெரிதும் கண்டிக்கிறது. அத்தகைய பாவங்களுக்குக் கொலைத் தண்டனை விதிக்கப்பட்டது. விவாகரத்துச் செய்வதைச் சட்டம் அனுமதித்தது. கணவனது இசைவினைப் பெற்ற பின்பே மனைவி அவனை விவாகரத்துச் செய்ய லாம். ஆனால், மனைவியின் விருப்பமில்லாமலேயே கணவன் அவளை விவாகரத்துச் செய்துவிடலாம். விபசாரம், மலட்டுத் தன்மை இவைகளுக்காக ஒருவன் தன் மனைவியை விவாகரத்துச் செய்யலாம். ஆண்மையின்மை, உடற்குறை இவைகளுக்காக மனைவி தன் கணவனை நீக்கிவிடலாம். பொதுவாக விவாகரத்து கண்டிக்கப்பட்டது.

தல்முத்தில் வரும் சட்டங்கள் ஆணுக்குச் சாதகமாகவே இருந் தன. பெண்கள் சபல புத்தியுடையவர்கள் என்றும், விவேக மற்றவர்களென்றும், ஓயாது அர்த்தமின்றிப் பேசிக்கொண்டேயிருப் பவர்களென்றும் பழித்துரைக்கப்படுகின்றனர். அவர்களுக்குச் சொத்துரிமை மறுக்கப்பட்டது. அவர்களது வியாபார முயற்சி களால் பெறப்பட்ட ஊதியங்கள் கணவன்மார்களுக்கே சொந்தம் எனக் கருதப்பட்டது. வீடே கதி என்றும், கணவனே தெய்வ மென்றும் கிடப்பவளே நல்ல மனைவியாகக் கருதப்பட்டாள்.

தல்முத்தில் காணப்படும் சில முதுமொழிகளில் அறிவும் அனுபவமும் செறிந்திருக்கக் காண்கிறோம். மற்றவர்களின் அனுபவங்களிலிருந்து பாடங் கற்றுக்கொள்கிறவனே ஞானி; ஆசைகளை அடக்குபவனே பலவான்; நாவைக் கட்டுப் படுத்துபவன் நகரத்தை ஆள்பவனைவிட உயர்ந்தவன்; மற்றவர் களை மதிப்பவன், எல்லாராலும் மதிக்கப்படுகிறான்; யாரையும் எதையும் வெறுக்காதே, அலட்சியம் செய்யாதே; எப்படிப்பட்ட வனுக்கும் ஒருகாலம் வரும்; எத்தகைய பொருளுக்கும் ஓர் இடம் உண்டு என்பன அவற்றுள் ஒரு சிலவாகும்.

இங்ஙனம் தல்முத் யூதர்களின் வரலாற்றையும் வாழ்க்கை யையும் அடிப்படையாகக் கொண்டு திகழ்கிறது. பரம்பரை பரம்பரையாகத் தொன்றுதொட்டு வரும் மரபுகளை உட்கொண்டு

விளங்குகிறது. சடங்குகளுக்கு அதில் பெரிதும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. எனினும், வாழ்க்கைக்குத் தேவையான அறநெறிகள் அனைத்தும் அதில் அடங்கிக் கிடக்கின்றன. யூத இளைஞர்கள் அவற்றைத் தினமும் ஏழுமணிகள் வீதம் ஏழாண்டுகள் வரை கற்று அப்படியே மனப்பாடம் செய்து வந்தனர். எனவே, அவர்களது நினைவாற்றலும், புத்திகூர்மையும் நன்கு வளர்ந்தன. ஏது நல்லது, ஏது கெட்டது என உணரக்கூடிய பகுத்தறிவும் அன்னாரிடம் நன்கு வளர்ந்தது. அவர்கள் எங்குச் சென்றாலும், எந்தச் சூழ்நிலையிலிருந்தாலும், தல்முத் அவர்களின் உள்ளத்தில் உறுதியாய் இருந்து அல்வழி செல்வதினின்றும் தடுத்து, நல்வழி செல்லுமாறு ஊக்குவித்து வந்தது. அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு பேறுகளையும் தரவல்லதாய், உறும் கவலையொன்று உற்றக்கால் கைகொடுப்பதாய், ஒவ்வொருவரின் சிற்றுயிர்க்கும் உற்ற துணையாய் அது விளங்கிற்று. எனவேதான் யூதர்கள் தல்முத்தைத் தம் உயிரினும் பெரிதாய்ப் பேணிக் காத்தனர். எதிரிகள் அவற்றைக் கைப்பற்றி எரித்தபோதெல்லாம், அவர்கள் மனமுடைந்து அழுதனர்.

**இலக்கியம்**

யூதர்களின் இலக்கிய சேவை மாண்பு நிறைந்தது. பண்டைய உலகத்திலேயே சிறந்த கல்விமான்களைப் படைத்த நாடு பாலஸ்தீனமாகும். கி.மு. 850ஆம் ஆண்டிலேயே அவர்கள் நல்ல பல நூல்களை எழுதினர். தீர்க்கதரிசிகள் வழிவழியாகச் சொல்லி வந்த பல நல்ல கருத்துகளை ஒன்றுதிரட்டிப் பழைய ஏற்பாடு (Old Testament) என்ற ஓர் நூலாக அவர்கள் வடித்தனர். எக்ளீசியாஸ்டிஸ், எஸ்தர், டேனியல் போன்ற தீர்க்கதரிசிகள் எழுதிய நூல்கள் மிக அண்மைக் காலத்தவையே ஆகும். மூன்றும் நூற்றுண்டுக்குப் பின்னரே அவை எழுதப்பட்டிருக்கலாம். அப்போகிரிபா (Appocria) என்ற நூல் தொகுதிகளும் பிற் காலத்தவையே ஆகும். மெக்கபீஸ் (Macabes) என்ற வேத நூல் கி.மு. இரண்டாம் நூற்றுண்டில் எழுதப்பெற்றதாகும். சாலமன், ஈனுக் ஆகியோரால் எழுதப்பட்டதாகக் கருதப்படும் நூல்களும் கிரேக்கர்களால் தோன்றியவையே. எனினும், பல நூல்கள் பண்டைய நாளிலிருந்து யூத சமுதாயத்தில் வழிவழியாக வந்தவையாகும். அவற்றில் ஒருசில போரைப் பற்றியும், காதலைப் பற்றியும் எழுதப்பட்ட காவியங்களாகும். ஒரு சில நாடகங்களும் அக் காலத்தே எழுந்தன. அவற்றில் மனிதனின் உணர்ச்சிகள் நன்கு படம் பிடித்துக் காட்டப்படுகின்றன. ஆமோஸ் என்ற தீர்க்கதரிசி சமுதாயத்தின் ஊழல்களை நன்கு வெளிப்படுத்துகிறார். 'பாடல்

களிலெல்லாம் சிறந்த பாடல்' (The Song of the Songs) என்ற செய்யுள் தொகுதியானது காதல் காப்பியத்திற்கு நல்லதோர் எடுத்துக் காட்டாகும். சுலாமித் என்ற தேவதை தனது காதலனை நினைத்துப் புலம்புவதாக அது எழுதப்பட்டுள்ளது. 'ஜோபின் புத்தகம்' (The Book of Job) என்ற யூதநூல் யூத இலக்கியத்தின் சிகரமாக விளங்குகிறது. மனிதனுக்கும் விதிக்கும் நடைபெறுகிற போராட்டத்தை விளக்குவதாக அமைந்துள்ளதே இந் நாடகம். பலவித இடையூறுகளையும் அறம் எப்படி இறுதியில் வெல்லும் என்பதை இது நன்கு புலப்படுத்துகிறது. பாவத்தின் விளைவாகவே மனிதன் துன்பமடைகிறான் என்றும், இறைவனிடம் சரணாகதி அடைவதன் மூலம் ஒருவன் பரலோகம் சென்று பேரின்பம் எய்தலாம் என்றும், இப் புவனத்தின் (Universe) விரிவை நினைத்து ஒருவன் பணிவைப் பெறவேண்டும் என்றும் இந் நூல் வற்புறுத்துகிறது.

### தத்துவம்

யூதர்களின் தத்துவம் மனிதனின் வாழ்க்கையையும், விதியையும் பற்றியதாகும். ஏராளமான பழமொழிகள் யூதர்களின் அற வாழ்க்கையைப் புலப்படுத்துகின்றன. எதிலும் மிதமாக இருக்க வேண்டுமென்றும் முயற்சி இன்றியமையாததென்றும், அற வாழ்க்கையை நடத்தினால் நீண்ட ஆயுளையும் செல்வாக்கையும் இவ்வுலகிலேயே பெறலாம் என்றும் எக்ளீசியாஸ்டிஸ் (Ecclesiastis) என்ற நூல் இயம்புகிறது. அதன் ஆசிரியர் யார் என்று தெரியவில்லை. சாலமன்தான் அதை எழுதியவர் என்று சிலர் கூறுவர். கி.மு. மூன்றாம் நூற்றாண்டுக்குப் பின்னரே அது எழுதப்பட்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது. அதில் வரும் தத்துவக் கொள்கையின் சாரம் பின்வருமாறு: 'உலகம் ஓர் எந்திரத்தைப் போன்றது. அது ஓயாது ஓடிக்கொண்டே இருக்கும். நிகழ்ச்சிகள் மீண்டும் மீண்டும் இடைவிடாது நடைபெறுகின்றன (கதிரவன் தோன்றுவதும் மறைவதும் போலும்). எனவே, இவ்வுலகில் மனிதனைப் பார்த்துச் சாதிக்கக்கூடியது ஒன்றுமில்லை. எல்லாம் விதியின் விளையாட்டாகவே நடைபெறும். மனிதன் இவ்வுலகின் உண்மையை அறிந்துகொள்ள எத்தனிப்பது முடியாத காரியமாகும். ஆன்மா, மரணத்துக்குப் பின் மனித வாழ்க்கை முதலியவற்றுக்கெல்லாம் சான்று எதுவும் இல்லை. எனவே, இவ் வுலகம் மாயை நிறைந்தது. செல்வம், புகழ் அனைத்தும் கானல் நீரெனவே கருதத்தகும். ஆகையால் மனிதன் தனக்கு நியாயம் எனப்பட்டவைகளையே செய்து நல்ல பெயர் எடுக்க வேண்டும். அதில்தான் உண்மையான மகிழ்ச்சி அடங்கியுள்ளது. மனிதன் மிதமான வாழ்க்கையை வாழவேண்டும். சுகபோகங்களில் அளவுக்கு மீறித்

திளைத்தலும், கடுமையாக உடலை வருத்தித் தவம் செய்தலும் தடுக்கப்படவேண்டியவைகளாகும்'.

*ஹீப்ரு நாகரிகத்தின் செல்வாக்கு*

அறிவியல், சிற்பம், ஓவியம், கட்டடம் போன்ற கலைகளில் யூதர்கள் எதுவும் சாதிக்கவில்லை. சட்டம், சமயம், இலக்கியம், தத்துவம் ஆகிய துறைகளிலேயே அவர்கள் உலகுக்குப் பல கொடைகளை வழங்கிச் சென்றுள்ளனர். ஹீப்ருக்களின் நம்பிக்கைகள் என்ற அடிப்படையின் மீதே கிறிஸ்தவ சமயம் எனும் கட்டடம் கட்டப்பட்டுள்ளதெனலாம். முழுமைபெற்ற மதமே கிறிஸ்தவம். உலகத் தோற்றம் பற்றிய கதைகள், பத்துக் கட்டளைகள் முதலியவை யூத சமயத்தினின்றும் கடன் வாங்கப்பட்டவையே ஆகும். தீர்க்கதரிசிகளைப் போற்றுதல் தங்களைக் கடவுளின் செல்லப் பிள்ளைகளாகக் கருதிக்கொள்ளுதல், மரணத்திற்குப்பின் அவரவர் வினைப்படி, தண்டனையோ, பரிசோ கிடைக்குமென நம்புதல் இவை யாவும் யூத சமயத்தின் செல்வாக்கால் ஏற்பட்டவைகளே. எஸனிஸ் (Essenes) என்பவருடைய செல்வாக்கின் காரணமாகவே துறவு வாழ்க்கை கிறிஸ்தவ சமயத்தில் வற்புறுத்தப்படுகிறது. துறவிகளிடையே காணப்படும் பொதுவுடைமைக் கொள்கை அவர் போதித்த ஒன்றேயாம். இடைக்கால ஐரோப்பாவில் வழங்கப்பட்ட சடங்குகள் பல, முக்கியமாக எந்தெந்த உணவையும், இன்பங்களையும் தவிர்க்க வேண்டும் என்பதில் யூதர்களின் செல்வாக்குப் பெரிதும் காணப்படுகிறது. அரசியல் துறையில் யூதப் பண்பாட்டின் செல்வாக்கு வெவ்வேறு வகையில் வெளிப்பட்டுள்ளது. அரசாங்கம் மக்களுக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டும் என்பதையும், சட்டமே இறைமை வாய்ந்தது என்பதையும், தனிப்பட்ட மனிதர்களின் கண்ணியம் காக்கப்படவேண்டியது இன்றியமையாதது என்பதையும் முதன் முதல் வற்புறுத்தியவர்கள் யூதர்களேயாவர். இன்றைய ஜனநாயகக் கொள்கைகளுக்கு அவர்கள் வித்திட்டுச் சென்றனர் என்றால் அது மிகையாகாது. சமுதாயத்தில் தனி மனிதர்கள் சுயேச்சையாக வாழவேண்டும், மனிதனுக்கென்று சில உரிமைகள் உள்ளன என்பதை முதன் முதல் வற்புறுத்தியவர்கள் யூதர்களேயாவர். இங்ஙனம் பெரும்பாலும் சமயத் துறையிலும், ஓரளவு அரசியல், சமுதாயத் துறைகளிலும் யூதர்கள் ஆழ்ந்த பதிவினை ஏற்படுத்தி உள்ளனர் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை எனலாம்.

# 7. சிறு நாகரிகங்கள்

## பினீஷிய நாகரிகம்

எகிப்திலும் மெசபடோமியாவிலும் அரும் பெரும் நாகரிகங்கள் ஓங்கி வளர்ந்து வந்த நேரத்தில் அவற்றைப் பின்பற்றி ஒருசில நாகரிகங்கள் ஆங்காங்கே வளர்ந்தன. அவற்றுள் பினீஷிய நாகரிகமும் ஒன்ருகும். அவர்களுடைய நாகரிகம் உண்மையில் தனிப்பட்ட பண்புகள் எதையும் கொண்டதாக விளங்கவில்லை. எனினும், ஏனைய பெரு நாகரிகங்களின் பண்புகளை அவர்கள் ஏற்றுத் தமதாக்கிக்கொண்டு அவற்றை மேலும் மெருகடையச் செய்வதில் வல்லவர்களாய் விளங்கினர். ஆனல், வாணிபத் துறையிலும் கப்பல் ஓட்டும் துறையிலும் அவர்கள் தன்னிகரற்று விளங்கினர்.

ஒரு நாட்டின் புவியியல் அமைப்பு அதன் நாகரிகத்தைப் பெரிதும் பாதிக்கிறது என்பது பினீஷிய நாகரிகத்துக்குப் பெரிதும் பொருந்தும். அவர்களது நாடு சிரியாவிற்கு மேற்கே கடலோரத்தில் அமைந்துள்ளது. ஹெரடோடஸ் என்னும் வரலாற்றறிஞர் கூற்றுப்படி அவர்கள் பாரசீக வளைகுடாப் பகுதியிலிருந்து புறம் போந்து சிரியாவின் வடமேற்குப் பகுதியில் கி.மு. 2100ஆம் ஆண்டளவில் குடியேறினர். அங்ஙனம் அவர்கள் குடியேறி தமதாக்கிக் கொண்ட நிலப்பகுதி 120 மைல் நீளமும் 10 மைல் அகலமும் கொண்டிருந்தது. மேற்கே லெபனன் மலைகளாலும், கிழக்கே மத்தியதரைக் கடலாலும் அது சூழப்பட்டிருந்தது. 'பினீஷியர்கள்' என்ருல் கிரேக்க மொழியில் செந்நிறத்தவர்கள் என்று பொருள். எனவே, பினீஷியர்கள் செம்பட்டை நிறம் வாய்ந்த செமிடிக் இனத்தவர் என்பது நன்கு தெரிகிறது. போனிக்ஸ் (Phoenix) என்ருல் கிரேக்க மொழியில் சிவப்பு வண்ணம் எனப் பொருள்படும். பேரீச்ச மரம் என்ற மற்ருெரு பொருளும் அதற்குண்டு. பினீஷியக் கடற்கரையில் ஏராளமான பேரீச்ச மரங்கள் வளர்ந்திருந்த காரணத்தால் ஒருவேளை அந் நாடு இப் பெயர் பெற்றிருத்தல்கூடும். பினீஷியாவானது செழிப்பென்பது மருந்துக்கும் இல்லாத ஒரு வறண்ட நாடாகும். சாகுபடிக்குத் தகுதியான நிலங்கள் அங்கு ஏதும் கிடையாது. எனவே, மக்கள் கடற்பயணத்தில் இயற்கையாகவே நாட்டம் கொண்டவர்களா

யிருந்தனர். 'திரைகடலோடியும் திரவியம் தேடு' என்பதற் கேற்ப அவர்கள் அயல் நாடுகளுடன் கடல்வழி வாணிபத்தில் ஈடு பட்டனர். காடுகள் நிறைந்து விளங்கிய நாடாக பினீஷியா இருந் தமையால் அவர்கள் மரங்களை வெட்டிக் கப்பல் கட்டும் தொழிலில் ஈடுபட்டனர். அக் கப்பல்களில் எறும்புகள்போல் ஏறி அவர்கள் சாரி சாரியாகச் சென்று, பல்வேறு நாட்டினருடன் வாணிபம் புரிந்தனர். பினீஷியர்களுடைய கப்பல்களில் பாய்மரங்கள் காணப் படவில்லை. ஏனெனில், மத்தியதரைக் கடலில் வேகமாகக் காற்று வீசாததால் பாய்மரத்துக்கு அங்கே அவசியமில்லை. அலைகள் அதிகமின்றி, ஏறத்தாழ ஒரு பெரிய குளம் போலக் காட்சியளித்த மத்தியதரைக் கடலில் அவர்களது துடுப்புகளால் செலுத்தப்பட்ட கப்பல்கள், பாய்மரக் கப்பல்களைவிட வேகமாகச் சென்றன. முப்பதுக்கும் மேற்பட்ட ஆள்கள் துடுப்புகளை வலிக்க அக் கப்பல்கள் தீவு விட்டுத் தீவு விரைந்தோடிக்கொண்டிருந்தன. இரவில் அவர்கள் விண்மீன்களின் உதவி கொண்டு திசைகளைக் கண்டறிந் தனர். எனவேதான் துருவ நட்சத்திரமானது கிரேக்கர்களால் பினீஷிய நட்சத்திரம் என்று அழைக்கப்பட்டது. கடற்பயணத் தில் அவர்களுக்கிருந்த வல்லமையை விளக்கும் பல கதைகள் கிரேக்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. கி.மு. 520-ல் ஹானோ (Hanno) என்னும் மாலுமி ஜிப்ரால்டர் நீரிணைப்பிலிருந்து புறப்பட்டு ஏறக்குறைய லைபீரியா வரை சென்றதாக அறிகிறோம். நெக்கோ (Necho) என்ற எகிப்திய அரசரின் உத்தரவுப்படி சில பினீஷியர்கள் சூயஸ் குடாவிலிருந்து புறப்பட்டு அதற்குத் தெற்கே சென்று ஆப்பிரிக்காவை வலம்வந்து பின்னர் புறப்பட்ட இடத்தையே வந்தடைந்தனர் என்று ஹெரடோடஸ் குறிப்பிடு கிறார். கடலில் தங்களோடு போட்டி போடுபவர்களைப் பயமுறுத்த சில சமயங்களில் அவர்கள் கூசாது பொய்க் கதைகளைக் கட்டி விட்டனர். ஜிப்ரால்டர் நீரிணைப்பின் இரு பகுதியிலும் சில்லா (Scylla), காரிப்டிஸ் (Carrybidis) என்ற இராக்கதர்கள் இருந்து கொண்டு கப்பல்களை அழிக்கின்றனர் என்று கதைத்தவர்கள் இவர் களே.

**வாணிகம்**

எகிப்து, சைப்ரஸ் முதலிய இடங்களிலிருந்து செம்பு, வெண் கலம், கண்ணாடி முதலிய பொருள்களை வாங்கி பாபிலோனியாவின் தலைநகரான நினெவா நகரத்துக்குக் கொண்டுசென்று அவர்கள் விற்றனர். சிசிலியிலிருந்து தகரத்தை இறக்குமதி செய்தனர். நேர்த்தியான கம்பளங்களையும், அழகிய ஊதா நிற ஆடைகளையும் வெள்ளியாலும் வெண்கலத்தாலும் செய்யப்பட்ட வெவ்வேறு

ஆயுதங்களையும், பலவித ஆபரணங்களையும், பாத்திரங்களையும் ஏற்றுமதி செய்தனர். பினீஷியக் கடற்கரையில் ஏராளமாகக் கிடைக்கப்பெற்ற ஒருவகை நத்தையிலிருந்து நீலநிறம் பொருந்திய ஒருவகைச் சாயத்தை அவர்கள் உண்டாக்கினர். அச் சாயத்தில் அவர்கள் துணிகளைத் தோய்த்தெடுத்து அவற்றைப் பிற நாடுகளில் விற்றுப் பெரும் பொருளீட்டினர். இந்தியாவிலும், ஏனைய கீழை நாடுகளிலிருந்தும் அவர்கள் தானியங்கள், மது வகைகள், துணி மணிகள் முதலியவற்றை வாங்கி அவற்றை மத்தியதரைக் கடல் நாடுகளுக்கும், எகிப்துக்கும் அனுப்பி விற்றனர். கருங்கடற் பகுதியிலிருந்து அவர்கள் தங்கம், ஈயம், இரும்பு முதலிய உலோகங்களை வரவழைத்தனர். சைப்ரஸிலிருந்து செம்பையும், ஆப்பிரிக்காவிலிருந்து தந்தத்தையும், ஸ்பெயினிலிருந்து வெள்ளியையும், இங்கிலாந்திலிருந்து தகரத்தையும் அவர்கள் தருவித்து வியாபாரம் செய்தனர். பணம் சேர்ப்பது ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டிருந்தனர் பினீஷியர்கள். அதற்காக அறத்துக்குப் புறம்பான தீய வழிகளையும் கடைப்பிடித்தனர். பொய் பேசுவதும், ஏமாற்றுவதும் அவர்களுக்குத் தண்ணீர் பட்ட பாடம். ஒரு நாட்டிலுள்ள மக்களைப் பெரும் பொருள் தருவதாகக் கூறிக் கப்பலில் ஏற்றிக் கொண்டு சென்று வேறு ஒரு நாட்டில் அடிமைகளாக விற்று விடுவது அவர்களது வழக்கம். பிற நாட்டைச் சார்ந்த வாணிகக் கப்பல்களையும் அவர்கள் சர்வ சாதாரணமாகக் கொள்ளையடித்தனர். அதனால்தான் யூதர்களும், கிரேக்கர்களும் அவர்களை வஞ்சகர் என்று வருணித்துள்ளனர்.

நல்வழியிலோ, தீய வழியிலோ பினீஷியர்கள் பெரும் பொருள் சேர்த்து வலிமை மிக்கதோர் சேனையைத் திரட்டினர். அவற்றைக் கொண்டு அவர்கள் அண்டையிலிருந்த தீவுகளையெல்லாம் கைப்பற்றி அங்கே குடியேறினர். ஆப்பிரிக்காவின் வடகரையிலும் ஸ்பெயின், பிரான்ஸ் ஆகிய நாடுகளின் தென்கரை ஓரங்களிலும், சிசிலியிலும் அவர்கள் குடியேற்றங்களை ஏற்படுத்தினர். ஸ்பெயினில் தற்போது காடிஸ் (Cadiz) துறைமுகமாக விளங்கும் இடத்தையும், ஆப்பிரிக்காவின் வடகரையில் கார்த்தேஜ் (Carthage) என்ற பெரு நகரத்தையும், பிரான்ஸின் தென்கரையில் மார்சேய்ல்ஸ்ஸையும் (Marsailles) தோற்றுவித்தவர்கள் அவர்களே யாவர். மத்தியதரைக் கடலைச்சுற்றி அவர்கள் பல முக்கியத் துறைமுகங்களைக் கட்டினர். அவற்றுள் சிடான் (Sedon), டைர் (Tyre), பிப்லோஸ் (Byblos), ஆராடஸ் (Arades) என்பவை முக்கியமானவை. இத்துறைமுகப் பட்டினங்களில் மிகவும் முக்கியமானதும், பழைமை யானதும் பிப்லெஸ் என்பதாகும். எல் (EL) என்ற கடவுளால்அது நிர்மாணிக்கப்பட்டதென்று பினீஷியர்கள் நம்பினர்.

ஒவ்வொரு பட்டினமும் ஒரு சுயேச்சையான அரசனுல் ஆளப் பட்டது. எனவே, அவர்களிடையே சதா போராட்டம் நிகழ்ந்த வண்ணம் இருந்தது. எனினும், இப் பட்டினங்கள் சீரும் சிறப்பு முற்றுத் திகழ்ந்தன. இவற்றின் அரசர்கள் பெருமன்னர்களைக்கூட மதிக்கவில்லை. எகிப்திய மன்னரின் தூதுவனொருவன் பிப்லோஸ் நகருக்கு வருகை தந்தபோது நகரத்தில் வாயிலிலேயே பல நாட்கள் தவம் கிடந்த பின்னரே, நகர அரசனைப் பார்க்க அநுமதிக்கப்பட்ட தாகவும், அதன் பின்னரே, எகிப்தியப் பேரரசர் கேட்டனுப்பிய சீடார்(Cedar) மரக்கட்டைகள் அத் தூதுவனிடம் கொடுத்தனுப்பப் பட்டனவென்றும் கூறுவர். பிப்லோஸ் நகரத்திலிருந்து ஏற்றுமதி யான பொருள்களுள் மிக முக்கியமானது பெப்பைரஸ் (Papyrus) என்ற நாணற்புல்லாகும். அதன் தண்டுகளிலிருந்தே காகிதம் செய்யப்பட்டது. எனவே, கிரேக்கர்கள் நூல்களுக்குப் பிப்லோஸ் என்றே பெயரிட்டனர். விவிலிய நூலைப் பைபிள் என்று அவர்கள் அழைத்ததும் இதன் பொருட்டேயாம். சிடான் என்பது இன்னு மோர் முக்கியத் துறைமுகப் பட்டினமாகும். ஸெர்க்ஸிஸ் (Xerxes) என்ற பாரசீக மன்னருக்குச் சிறந்த கப்பல்களைக் கட்டித் தந்தவர்கள் இந்நகரத்தவர்களேயாவர். பாரசீகர்கள் பிற்காலத்தில் அதைக் கைப்பற்றியபோது அவர்கள் தங்கள் கப்பற்படை முழுவதையும் அப்படியே கொளுத்திவிட்டனர். ஆனல், அலெக்ஸாந்தர் வருவதற்குள் அவர்கள் மீண்டும் ஒரு சிறந்த கப்பற்படையை உருவாக்கிவிட்டனர். துணிவுமிக்க வணிகர்கள் பலர் அலெக்ஸாந்தரோடு இந்தியாவிற்குச் சென்றனர். டைர் என்ற இன்னொரு பெரு நகரம் அலெக்ஸாந்தருடைய படையெடுப்பு வரையிலும் சீரும் சிறப்புமாய் விளங்கிற்று. ஹீராம் (Hiram) என்ற அதன் அரசர் சாலமனின் உற்ற தோழராவார்.

பினீஷியர்கள் பல தெய்வங்களை வழிபட்டனர். ஒவ்வொரு நகரத்துக்கும் ஓர் அதிதேவதை இருப்பதாக அவர்கள் நம்பினர். சான்ருக டைர் என்ற நகரத்தின் தெய்வம் மெல்கார்ப் (Melkarph) எனப்பட்டது. ஹெர்குலிஸைப் போல அத்தெய்வம் மிகுந்த பலம் கொண்டதென்று அனைவரும் நம்பினர். அஸ்டார்டே (Astarte) என் பது ஒரு பெண் தெய்வம். காமம், கற்பு ஆகிய இரண்டுக்கும் அதுவே உறைவிடம். பிப்லோஸ் நகரத்துப் பெண்கள் அத்தெய்வத்துக்குத் தங்கள் முடியைக் காணிக்கையாகச் செலுத்தினர். அத் தெய்வத்தின் கோயிலில் அந்நியன் ஒருவனேடு கூடிக்குலாவுவதால் மட்டுமே ஒரு பெண் அத் தெய்வத்தை மகிழ்விக்க முடியும் என்று பெரிதும் நம்பினர். இத் தெய்வத்தின் காதலர் அடோனி (Adoni) என்ற கடவுளாவார். அக் கடவுளைக் கரடி ஒன்று கொன்றுவிட்டதாகவும், அதன்பின் மக்களனைவரும் பிரார்த்தனை செய்து அவரை உயிர்த்

தெழச் செய்ததாகவும் ஒரு நம்பிக்கை அவர்களிடையே நிலவியது. அவர் கொல்லப்பட்ட அந்நாளில் நகர மாந்தர் அனைவரும் மாரடித்துக்கொண்டு ஒவ்வோர் ஆண்டும் ஓலமிடுவது வழக்கம். முலாக் (Mulak) என்பது ஒரு பயங்கரமான தெய்வம். அதை மகிழ்விக்க பினீஷியர்கள் சிலசமயம் குழந்தைகளைப் பலி கொடுத்தனர். ஒரு சமயம் கார்த்தேஜ் நகரில் இருநூறு சிறுவர்கள் இத் தெய்வத்திற்காகக் கொளுத்தப்பட்டதாக அறிகிறோம்.

உலக நாகரிகத்துக்குப் பினீஷியர்கள் வழங்கிச் சென்றுள்ள ஒரு பெரும் பரிசு அவர்கள் கண்டுபிடித்த எழுத்துமுறையாகும். எகிப்திய சித்திர எழுத்துகளையும், சுமேரிய ஆப்பெழுத்துகளையும் எழுதிக்கொண்டிருக்க வியாபாரிகளான பினீஷியர்களுக்கு நேரமும் இல்லை; பொறுமையும் இல்லை. எனவே, அவர்கள் அவ்வெழுத்துகளைச் சுருக்கி 22 தனி எழுத்துகளை உண்டாக்கினர். அவ் வெழுத்துகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு மெய் எழுத்து (Consonantal) ஒலியைக் குறித்தன. இவற்றைக் கொண்டு அவர்கள் வேகமாகச் செய்திகளைக் குறித்துவைக்க முடிந்தது. இதனை கிரேக்கர்களும், ரோமானியர்களும் மகிழ்ச்சியுடன் வரவேற்றுப் பயன்படுத்திக்கொண்டனர். அதன் முதலெழுத்தை ஆல்ஃபா (Alpha) என்றும், இரண்டாம் எழுத்தை பீடா (Beta) என்றும் கிரேக்கர்கள் அமைத்தனர். இதிலிருந்தே ஆல்ஃபாபெட் (Alphabhet) என்ற எழுத்துகளைக் குறிக்கும் சொல் தோன்றியது. டைர் நகரத்து ஹீரான் (Hiran) என்ற அரசனும், மோவாப் (Moab) நகரத்து மேஷா (Mesha) என்ற அரசனும் பொறித்து வைத்துள்ள சாசனங்களில் பினீஷிய எழுத்துகளை இன்றும் காணலாம்.

இங்ஙனம் எழுத்துகள் கண்டுபிடிக்கப்பட்ட பின்னரே உண்மையான வரலாறு அதாவது திட்டவட்டமான எழுதப்பெற்ற வரலாறு (Recorded History) உலகில் தோன்றியது. எனவே, வரலாற்றுலகமும், கலையுலகமும் பினீஷியர்களுக்குப் பெரிதும் கடப்பாடுடையனவாகும். பினீஷியர்கள் கிழக்கிந்திய நாடுகளையும், மேற்கத்திய நாடுகளையும் இணைத்து வைக்கும் ஓர் பாலமாக விளங்கினர். எகிப்து, கிரீட் போன்ற இடங்களில் நிலவிய கலைகளையும், அறிவியல் நூல்களையும், கிரீஸ், இத்தாலி, ஸ்பெயின் போன்ற நாடுகளில் பரப்பியவர்கள் இவர்களேயாவர். சமீபக் கிழக்கு நாடுகளையும், மேலை நாடுகளையும் வாணிபம் என்ற பந்தத்தால் பிணைத்து ஐரோப்பாவின் நாகரிகத்துக்கே வித்திட்டவர்கள் பினீஷியர்களேயாவர்.

## 2. ஹிட்டைட்டுகளின் நாகரிகம்

அண்மைக் காலம் வரையில் ஹிட்டைட்டுகள் என்பாரைப் பற்றி உலகத்திற்கு அதிகமாக ஒன்றும் தெரியாமலே இருந்தது. விவிலிய நூலில் ஓரோவழி குறிப்பிடப்படுகின்ற அவர்கள் வரலாற்றில் விட்டுச் சென்ற எச்சம் எதுவும் பெருமைக்குரியதல்ல என்ற கருத்தே அறிஞர்களிடையே காணப்பட்டது. ஆனால், அண்மையில் கண்டெடுக்கப்பட்ட ஒருசில சாசனங்களிலிருந்து பல அரிய வரலாற்றுச் செய்திகள் தெரியவருகின்றன. ஆசியா மைனரிலும் சமீபக் கிழக்கு நாடுகளிலும் ஹிட்டைட்டுகளின் நினைவுச் சின்னங்களும், எழுத்துப் பலகைகளும் ஏராளமாகக் கிடைத்துள்ளன. சிரியாவில் உள்ள ஹாமத் என்னும் நகரில்தான் முதன் முதலாக கி.மு.1870ஆம் ஆண்டில் ஓர் நூதனமான சிலாசாசனம் கண்டுபிடிக்கப்பட்டது. அதைத் தொடர்ந்து பல களிமண் சாசனங்கள் அகழ்ந்தெடுக்கப்பட்டன. கி.பி. 1907ஆம் ஆண்டில் தொல்பொருள் நிபுணர்களால் போகாஸ்கோய் (Boghaz-koi) என்ற இடத்தில் ஹிட்டைட்டுகளின் தலைநகர் தோண்டியெடுக்கப்பட்டது. அதிலிருந்து 20,000-க்கும் மேற்பட்ட பத்திரங்களும், சாசனங்களும் கிடைத்தன. அவற்றில் எழுதப்பட்டுள்ள சட்டங்களையும் ஆணைகளையும் எழுத்து நிபுணர்கள் இப்போது கண்டுபிடித்து வெளியிட்டுள்ளனர்.

மேற்கூறிய ஆதாரங்களிலிருந்து பெரியதோர் பேரரசை ஹிட்டைட்டுகள் ஆசியா மைனர் பிரதேசத்தில் அமைத்திருந்ததாகத் தெரிகிறது. அப்பேரரசு வடக்கே கருங்கடலிலிருந்து தெற்கே மத்தியதரைக் கடல்வரை பரவியிருந்தது. ஆசியா மைனர், சிரியா, பாலஸ்தீனம், பினீஷியா ஆகிய நாடுகளின் ஒரு சில பகுதிகள் ஆகியவற்றை அப்பேரரசு உட்கொண்டிருந்தது. கி.மு. 2000 முதல் கி.மு. 1200 வரை அவர்களது ஆதிக்கம் உச்சநிலையிலிருந்தது. இக்காலத்தின் இறுதிப்பகுதியில் ஹிட்டைட்டுகள் எகிப்தைத் தாக்கி ஓயாது போரிட்டு வந்தனர். அதனால் இரு பேரரசுகளுமே நலிவுற்றன. அவற்றின் சீரழிவிற்கு இப்போரே காரணமாகும். கி.மு. 1200-ல் யூப்ரடிஸ் நதிக்கரையிலிருந்த கார்கமிஷ் (Carchemish) என்ற நகரமும் சிறந்த பேரும் புகழும் கொண்டு விளங்கியது. ஆனால், அது வாணிபத்துறையில் பெருஞ் சிறப்படைந்ததேயன்றி அரசியல் துறையிலன்று. கி.மு. 717ஆம் ஆண்டளவில் ஹிட்டைட்டுகளின் பேரரசை அசிரியர்கள், லிடியர்கள், ஃபிரிஜியர்கள் (Phrygians) போன்றவர்கள் இப்பேரரசின்மீது படையெடுத்து வந்து அதைத் தங்களுக்குள் பங்கு போட்டுக் கொண்டனர்.

ஹிட்டைட்டுகள் எங்கிருந்து வந்தனர், எவ்வினத்தைச் சார்ந்தவர் என்பது இன்னும் ஓர் புதிராகவே இருந்து வருகிறது. அவர்கள் இந்தோ-ஐரோப்பிய இனத்தைச் சார்ந்தவர்கள் என்றும், பாஸ்போரஸ் (Basphorus) காகஸஸ் (Caucasus) முதலிய பிரதேசங்களின் வழியாக வந்து அவர்கள் ஆசியா மைனரில் குடியேறினர் என்றும் பொதுவாக நம்பப்படுகிறது. அவர்களில் சிலர் மங்கோலியர்களைப் போல மீன் கண்களையும், வளைந்த மூக்கினையும் கொண்டிருந்தனர். துருக்கிஸ்தானம் தான் அவர்களது ஆதி உறைவிடம் என நம்பப்படுகிறது. அவர்களது மொழி இந்தோ-ஐரோப்பிய மொழி வகையைச் சேர்ந்தது என்று ஹிராஸ்னி (Hrozny) எனும் அறிஞர் கண்டுபிடித்துள்ளார். ஹிட்டைட்டுகள் எய்தியிருந்த நாகரிகத்தின் நிலை என்னவென்பதை இன்னும் சரிவர எவரும் கண்டுபிடிக்கவில்லை. எகிப்தியர்கள் அல்லது சுமேரியர்களின் நாகரிகத்தைப் போன்று அது விளங்கியது எனத் தற்கால வரலாற்றாசிரியர்கள் கருதுவர். விவசாயத்தில் அவர்கள் சிறந்து விளங்கியதாகத் தெரிகிறது. அதே சமயம் சுரங்கத் தொழிலிலும் அவர்கள் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தனர். வெள்ளி, செம்பு, ஈயம் ஆகிய உலோகங்களை அவர்கள் கனிகளிலிருந்து தோண்டியெடுத்துப் பதம் செய்து அண்டை நாடுகளுக்கு விற்றனர். இரும்பை முதன் முதல் தோண்டியெடுத்து அதை ஆயுதங்கள் செய்வதற்குப் பயன்படுத்தியவர்கள் இவர்களேயாவர். இவர்களிடமிருந்தே இரும்பின் பயனை ஏனைய நாட்டினர் அறிந்துகொண்டனர். வெண்கல காலம் ஒழிந்து இரும்புக்காலம் தோன்றியது. பல நாட்கள் இவர்கள் இரும்பின் பயனை ரகசியமாக வைத்திருந்தனர். இரும்பாலாய ஆயுதங்களைக் கொண்டு எதிரிகளை அவர்கள் எளிதில் முறியடித்தனர். பிற்காலத்தில் அசிரியர்கள் இந்த ரகசியத்தைத் தெரிந்து கொண்டு இரும்பினால் ஆக்கப்பட்ட கருவிகளைக் கொண்டு தம் எதிரிகளைத் தோற்கடித்தனர். அவர்களின் சட்டங்கள் பொதுவாக ஹம்முராபியின் சட்டங்களை ஒத்துள்ளது. ஆனால், சுமேரியர்களின் சட்டங்களைவிட கொடுமையில் அவை குறைந்தவையே ஆகும். எட்டுப் பெருங் குற்றங்களுக்கு மட்டுமே மரணதண்டனை விதிக்கப்பட்டது. மாயம், பில்லி சூனியம், திருட்டு இவற்றில் ஈடுபட்டோருக்குக் கொலைத் தண்டனை விதிக்கப்பட்டது. ஆனால், கொலை செய்தவர்களிடமிருந்து வெறும் அபராதத் தொகை மட்டுமே வசூலிக்கப்பட்டது. அசிரியர்களைப் போல மக்களை உயிரோடு எரித்தல், தோலுரிப்பு போன்ற கடுமையான தண்டனைகளை இவர்களுடைய சட்டங்கள் வழங்கவில்லை.

இதுகாறும் கிடைத்துள்ள களிமண் சாசனங்களிலிருந்து ஹிட்டைட்டுகளின் சமுதாயத்தைப் பற்றி ஓரளவு அறிய முடிகிறது. மக்கள் நல்ல நாகரிகத்தில் திளைத்தனர். ஆனல், அரசாங்கம் அவர்களது வாழ்க்கையைப் பெரிதும் கட்டுப்படுத்திற்று. அரசனே நிலங்கள் யாவற்றுக்கும் உரிமையாளன் எனக் கருதப் பட்டான். அரசனுக்கு ராணுவ சேவை செய்தவர்களுக்கு மட்டுமே நிலங்கள் மானியமாக அளிக்கப்பட்டன. அரசாங்கத்தின் விருப்பத்திற்கேற்பவே உழவர்கள் பயிரிடவேண்டும். இல்லெனில் அரசாங்கம் அவர்களது விளைபொருள்களைப் பறிமுதல் செய்து விடும். இன்றியமையாத பண்டங்களின் விலைகள் நிர்ணயிக்கப்பட்டிருந்தன. அவ்வாறேதான் கூலிகளும், கட்டணங்களும் வரையறுக்கப்பட்டிருந்தன. ஆண்களின் கூலி பெண்களின் கூலியைவிடச் சற்றே குறைவானதாய்த் தீர்மானிக்கப்பட்டிருந்தது.

இவர்களின் இலக்கியமானது புராணங்களால் நிறைந்திருந்தது. கில்கமிஷ் பற்றிய கதைகளும், பிரளயம் பற்றிய கதைகளும் அதில் வெகுவாகக் காணப்பட்டன. மெய்யறிவில் அவர்களுக்கு அதிகமான ஈடுபாடு இருந்ததாகத் தெரியவில்லை. எழுத்துக் கலையில் அவர்கள் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தனர். எகிப்திலும் சுமேரியாவிலும் காணப்பட்ட எழுத்துகளை இணைத்து ஓர் புதிய புனித எழுத்தைக் கண்டுபிடித்தனர்.

ஹிட்டைட்டுகளின் கலை அவ்வளவாக வளரவில்லை. சிற்பம், கட்டடக்கலை ஆகியவற்றில் மட்டுமே அவர்கள் ஓரளவு முன்னேறியிருந்தனர். அவர்தம் கட்டடங்கள் பார்வைக்கு அழகாக இல்லாவிட்டாலும் கம்பீரத்தை இழக்கவில்லை. ஆலயங்களும், அரண்மனைகளும் மிகப்பெரிதாயும் விசாலமானதாயும் இருந்தனவேயன்றி அலங்காரமான வளைவுகளைக் கொண்டிருக்கவில்லை. இரண்டு தூண்களின் மேல் அமைந்த சிறு தாழ்வாரங்களும் அவற்றின் முன்னல் அமைந்திருந்தன. கல்லால் ஆகிய பெரிய சிங்கங்கள் அரண்மனை வாயிலின் இரு மருங்கிலும் வைக்கப்பட்டிருந்தன. அவர்களின் சிற்பங்கள் பரந்த பாறைகளின்மீது செதுக்கப்பட்டிருந்தன. மிருகங்களின் கால்களைக் கொண்ட மனிதர்களின் உருவங்கள் பல அவற்றில் காணப்படுகிறது. அவற்றில் காணப்படும் சிகையலங்காரமும், ஜாடியின் அமைப்பும் பாபிலோனியர்களிடமிருந்தே பெறப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

ஹிட்டைட்டுகளின் சமயம் பல தெய்வ வணக்கத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தது. புயற் கடவுளான அட்டு (Addu)

அவர்களின் முக்கிய ஆண் கடவுளாகும். அவரது கைகளிலிருந்து மின்னல் வெளிவருவது போன்று சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அவர்கள் மகப்பேற்றுக்கு அதிபதியான ஒரு பெண் தெய்வத்தையும் வணங்கினர். அதன் பெயர் இன்னதென்று தெரியவில்லை. சூரியனையும், மற்றும் பல சிறு தேவதைகளையும் அவர்கள் வணங்கினர். தங்களால் வெல்லப்பட்ட மக்களால் தொழப்பட்ட கடவுளர் களையும் அவர்கள் ஏற்றுக்கொண்டனர். பல சமயச் சடங்குகளை அவர்கள் கடைப்பிடித்தனர். பிராயச்சித்தச் சடங்குகளும், பலியிடுவதும், பிரார்த்தனை செய்வதும் அவர்களது சமய வழிபாட்டில் இடம் பெற்றிருந்தன. அறநெறிக்கும், சமயத்துக்கும் யாதொரு சம்பந்தமும் இருந்ததாகத் தெரியவில்லை.

ஹிட்டைட்டுகள் மெசபடோமிய நாகரிகத்தின் தூதுவர்களாக விளங்கினர். அவற்றின் சிறந்த கூறுபாடுகளைப் பல இடங்களிலும் முக்கியமாக சமீபக் கிழக்கு நாடுகளுக்கும், மெசபடோமிய நாடுகளுக்கும் இடைப்பட்ட பிரதேசங்களில் பரப்பினர். கானனைட்டுகள், ஹைக்ஸோஸஸுகள், கிரீட்டன்கள் ஆகியோர் இவர்களிடமிருந்தே நாகரிகக் கூறுபாடுகளைத் தெரிந்துகொண்டனர்.

## 3. ஃபிரிஜியர்களின் நாகரிகம்

ஃபிரிஜியர்கள் என்போர் கி.மு. ஒன்பதாம் நூற்றுண்டில் ஆசிய மைனரில் தோன்றிய ஓர் இனத்தவராவர். கி.மு. 300ஆம் ஆண்டுவரை அவர்கள் ஆதிக்கம் செலுத்தினர். அவர்களை ஹிட்டைட்டுகளின் வழித் தோன்றல்கள் என்று கூறலாம். ஹிட்டைட்டுகளின் சமுதாயப் பழக்க வழக்கங்களை ஃபிரிஜியர்கள் அப்படியே மேற்கொண்டனர். சிபில் (Cybele) என்ற தாய்க்கடவுளை அவர்கள் வழிபட்டனர். பூமியையும் கூட அவர்கள் தாய்க் கடவுளாகத் துதித்தேத்தினர். சபேஸியஸ் (Sabazius), ஸோன் (Son) ஆகிய தெய்வங்களும் அவர்களால் வணங்கப்பெற்றன. சிபில் என்ற பெண் தெய்வம் இயற்கையின் உற்பத்திச் சக்திகளின் உருவகமாக எண்ணப்பட்டது. பாபிலோனியாவில் காணப்பட்டபடி மங்கையர் தம் கற்பைப் பறிகொடுப்பதன் மூலம் சிபில் தெய்வத்தை மகிழ்விக்கலாம் என்று நம்பப்பட்டது. சிபிலைப் பற்றி ஓர் கதை இவர்களிடையே உலாவியது. அதன்படி அடிஸ் என்ற வாலிபக் கடவுளை சிபில் நேசித்தது. அதன் பின் அடிஸை வற்புறுத்தி ஆண்மையை இழக்கும்படி செய்து, அதன் மூலம் தன்னை கௌரவிக்கும்படி அப் பெண் தெய்வம் கூறியது. அடிஸும் அதற்கு இணங்கினர். எனவே ஃபிரிஜியர்களின் பூசாரிகள் தங்களை வேண்டுமென்றே அலியாக்கிக்

கொள்ளுவது வழக்கம். ரோமானியர்கள் சிபில் தெய்வத்தை ஏற்றுக்கொண்டனர். காமக் களியாட்டங்களில் ஈடுபடுவது சிபில் தெய்வத்திற்கு உகந்தது என்பதை ரோமானியர்கள் ஃபிரிஜியர் களிடமிருந்தே கற்றுக்கொண்டனர்.

ஃபிரிஜியர்களின் முதல் மன்னனைப் பற்றிய ஓர் கதை வழக்கத் தில் உண்டு. யார் ஒருவன் பெரியதோர் வண்டியில் அமர்ந்து ஒரு குறிப்பிட்ட கோயில்வரை வெற்றிகரமாகச் செல்கின்றானோ, அவனே அரசனாக ஏற்றுக்கொள்ளப்படத்தக்கவன் என்று கடவுளின் அசரீரி கூறிற்றாம். அப்படிச் சென்ற கார்டியாஸ்(Gordios) என்பவரே ஃபிரிஜியர்களின் முதல் அரசரானார். அதன்பின் அவர் தனது வண்டியைக் கடவுளுக்கே காணிக்கையாக்கினார். அவ்வண்டியின் நுகத்தடியில் உள்ள ஓர் முடிச்சை அவிழ்ப்பவர் எவரோ அவரே ஆசியாவனைத்தையும் அரசாள்வார் என்று மற்றும் ஓர் அசரீரி கூறிற்றாம். அதை நம்பிய அலெக்ஸாந்தர் அம்முடிச்சை அவிழ்க்க முயன்று, முடியாமல் போகவே தமது வாளால் அதை வெட்டி முடிச்சை அவிழ்த்தார் என்பர். குறுக்கு வழியில் காரியத் தைச் சாதிப்பவர்கள் கார்டியன் முடிச்சை (Gordion knot) வெட்டு பவர்கள் எனக் கருதப்படுதல் இந்நிகழ்ச்சியின் விளைவினாலேயே ஆம்.

ஃபிரிஜியர்களின் அடுத்த அரசர் மைதாஸ் (Midas) என்பவ ராவார். அவர் பணத்தை ஊதாரித்தனமாகச் செலவு செய்து செல்வத்தையெல்லாம் இழந்து ஏழையானார். அதன்பின் இறைவனை வேண்டித் தவமியற்றி, தொட்டதெல்லாம் பொன் னாகும் வரத்தைப் பெற்றார். ஆனால், அது எவ்வளவு மூடத்தன மானது என்பதை விரைவிலேயே அவர் தெரிந்துகொண்டார். ஏனெனில், அவர் தொட்ட உணவுப் பொருள்கள் அனைத்தும் தங்க மாக மாறிவிட்டன. புனிதமான ஆறு ஒன்றில் குளித்த பின்னரே அவர் ஆசாபாசத்தினின்றும் விடுபட்டார் என்பர்.

## 4. லிடியர்களின் நாகரிகம்

ஃபிரிஜியர்களை [லிடியர்கள் என்ற இனத்தவர்க கி.மு. 610ஆம் ஆண்டில் வென்றனர். ஏறத்தாழ அடுத்த இரண்டு நூற்றாண்டு களுக்கு அவர்கள் ஆசியா மைனரை ஆண்டனர். அதன் முதல் அரசர் சைஜஸ் (Cygus) என்பவராவார். சார்டிஸ் என்னும் தலைநகரில் இருந்துகொண்டு அவர் நாட்டை அரசாண்டார். குரோஷஸ் (கி.மு. 570—கி.மு. 546 வரை) என்பவர் லிடிய மன்னர் களிலேயே சிறந்தவர். அவர் ஆசிய மைனரையும் வேறு சில

சிறிய நாடுகளையும் வென்றார். ஆனால், பாரசீகர்களிடம் தோற்று ஆசிய மைனர் பகுதியை அவர்கட்குக் கொடுத்துவிட்டார். அவர் தாம் வென்ற நாடுகளில் வணங்கப்பட்ட தெய்வங்களையெல்லாம் ஏற்றுக்கொண்டு அவற்றுக்குப் பூசனைகள் நிகழ்த்தினார். கடவுளர் களின் செல்லக் குழந்தை என்று தம்மை அழைத்துக்கொண்டார். நிலையான மதிப்புடைய நாணயங்களை அவர் வெளியிட்டார். லிடியர்கள் உலகுக்களித்த பரிசு இந்நாணய முறையே ஆகும். கிரேக்கர்கள் இவர்களிடமிருந்தே நாணயப் புழக்கத்தைக் கற்றுக் கொண்டனர். லிடியர்களின் நாகரிகம் ஏறக்குறைய கிரேக்கர் களின் நாகரிகத்தைப் பெரிதும் ஒத்திருந்தது என்று ஹெரடோடஸ் என்ற கிரேக்க வரலாற்றறிஞர் குறிப்பிடுகின்றார். லிடியக் கல்லறை களில் கண்டெடுக்கப்பட்ட ஜாடிகளில் அழகிய சிற்ப வேலைப் பாடுகள் நிறைந்துள்ளன. அவை அவர்தம் நாகரிகத்தின் மேன்மையைப் புலப்படுத்துகின்றன. குரோஷஸ் என்பார் குபேரனைப் போன்ற பெருஞ் செல்வந்தராவார். ஒருசமயம் அவர்தம் செல்வத்தைச் சோலன் (Solon) எனும் மெய்யறிஞர் முன்னால் வைத்து இவ்வுலகிலேயே மகிழ்ச்சி நிறைந்த மனிதன் எவன் என்று கேட்டாராம். அதற்கு அவர் இறந்துபோன சில மனிதர் களின் பெயரைக் கூறி குரோஷஸ் மகிழ்ச்சியுடைய மனிதர் அல்லர் என்று கூறிவிட்டார். இதைக் கேட்ட குரோஷஸ் ஒன்றும் தெரியாத பேதை என்று சோலனைக் கேலி செய்து அனுப்பி விட்டார். அதன்பின் அவர் பாரசீகத்தின்மீது படையெடுத்து சைரஸ் என்ற மன்னரிடம் தோற்றார். சைரஸ் அவரைத் தீயிலிட முயன்ற போதுதான் குரோஷஸ், சோலன் கூறிய மொழிகளின் உண் மையை அறிந்தார். அவர் மனம் அமைதி அடைந்தது. பணமும், பதவியும் ஒரு மனிதனை மகிழ்ச்சியடைவிக்க முடியாது என்ற உண் மையை அவர் சைரஸிடம் கூறினார். அதைக் கேட்ட சைரஸ் குரோ ஷஸை விடுவித்து நண்பராக்கிக் கொண்டார் என்று கூறப்படுகிறது.

## 5. ஈஜிய நாகரிகம்

மேலை நாட்டு ஐரோப்பிய நாகரிகத்திற்குக் கிரேக்க நாகரிகம் எங்ஙனம் ஓர் அடிப்படையாய் அமைந்துள்ளதோ, அதே போன்று பழம் பெருமை வாய்ந்த கிரேக்க நாகரிகத்திற்கும் அடிப்படையாய் அமைந்துள்ள ஒரு நாகரிகத்தைத் தொல்பொருள் ஆராய்ச்சி யாளர்கள் தங்கள் அரிய முயற்சியினால் கண்டுபிடித்துள்ளனர். அதுவே 'ஈஜிய நாகரிகம்' என்று சொல்லப்படுகிறது. ஈஜியத் தீவுகளிலும் சிறப்பாகக் கிரீட் தீவிலும் அது பரவியிருந்த காரணத் தால் அது ஈஜிய நாகரிகம் அல்லது கிரீட்டன் நாகரிகம் என அழைக்கப்படுகிறது.

கிரீட்டன் நாகரிகச் சின்னங்களைப் பூமியினின்று அகழ்ந்தெடுத்து உலகுக்கு அளித்த பெருமை ஸ்லீமன் (Schlismann) என்ற ஜெர்மன் அறிஞருக்கே உரியது. 1876ஆம் ஆண்டில் ஸ்லீமன், மைசினி (Mycenae), டிரின்ஸ் (Tiryns), ஆர்கோமினஸ் (Orchomenes) ஆகிய இடங்களுக்குச் சென்று அகழ்வாராய்ச்சியில் ஈடுபட்டு அங்கேயும் ஒரு பழம் பெரும் நாகரிகம் ஒரு காலத்தே நிலவியிருக்க வேண்டுமென்பதைக் கண்டறிந்தார். 1899—1900ம் ஆண்டுகளில் சர் ஆர்தர் ஈவான்ஸ் (Sir Arthur Evans) என்ற ஆங்கிலேய ஆராய்ச்சியாளரின் அரும் பெரும் முயற்சியால் கிரீட் தீவில் மேலும் பல பழைய வரலாற்றுச் சின்னங்கள் கிடைத்தன. அவைகளினின்றும் கிரீட்டை மையமாகக் கொண்டு ஈஜியத் தீவுகளிலும் சிசிலி (Sicily), சார்டினியா (Sardinia), ஸ்பெயின் (Spain) ஆகிய பல மத்தியதரைக் கடல் பிரதேச நாடுகளிலும் பரவியிருந்த ஒரு பழம் பெரும் நாகரிகம் கிரேக்கர்களின் வருகைக்கு முன் இருந்திருக்க வேண்டுமென்பதை அவர் ஊகித்தறிந்து வெளியிட்டார். கிரேக்கக் கதைகளின்படி அத்தீவில் முதன் முதலில் மீனாஸ் (Minos) என்ற மாமன்னர் ஆட்சி புரிந்ததாகக் கருதப்பட்டதால் அதனை 'மீனோவன்' நாகரிகம் என்றும் ஒரு சிலர் அழைப்பர்.

### ஈஜிய நாகரிகத்தின் சிறப்பியல்புகள்

கிரீட் தீவில் இருபெரும் புதை நகரங்கள் தோண்டி எடுக்கப்பட்டுள்ளன. நாஸஸ் (Knossus), ஃபீஸ்டஸ் (Phaestus) ஆகிய இவ்விரு நகரங்களில் கி.மு. 2000 ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்டதாகக்கருதப்படும் பெரிய அரண்மனைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவைகளைக் காணும்போது நாஸஸைத் தலைநகராகக் கொண்ட பேரரசு ஒன்று அங்கு நிலவியிருந்திருக்க வேண்டும் என்று ஈவான்ஸ் என்னும் அறிஞர் கருதினர். அவ்வரண்மனையின் சுவர்களில் கண்கவர் ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. காளைச் சண்டை ஒன்றை மக்கள் கண்டு களிப்பதைப் போல் ஓர் ஓவியம் வரையப்பட்டுள்ளது. பொருள்களைச் சேகரித்து வைப்பதற்கான பெரும் பெரும் கிடங்குகள் ஆங்காங்கே காணப்படுகின்றன. அரண்மனை நடுவில் அத்தாணி மண்டபம் ஒன்று அழகுற அமைந்துள்ளது. அதன் நடுவில் கல்லாலான அரியணை ஒன்றும், அதற்கு இரு மருங்கிலும் அமைச்சர்கள் அமர்ந்து அறிவுரை கூறுவதற்கான கல்லாலாய இருக்கைகளும் காணப்படுகின்றன. ஏறக்குறைய நானூறு பேர்கள் ஒரே சமயத்தில் அமர்ந்து நாடகத்தைக் கண்டு களிப்பதற்கேற்ற ஓர் நாடக அரங்கமும் அவ்வரண்மனையின்கண் அமைந்துள்ளது. நாடகங்களும், நடனங்களும், மற்போர்களும்,

குத்துச் சண்டைகளும், அவ்வரங்கில் நடைபெற்றிருக்கக்கூடும். தந்தத்தாலான சொக்கட்டான் பலகை ஒன்றும் அங்குக் கிடைத்துள்ளது. ஓய்வு நேரங்களில் அரண்மனை வாசிகள் சொக்கட்டான் ஆடி மகிழ்ந்திருந்தனர் போலும்! சிந்து சமவெளியில் அகழ்ந்தெடுக்கப்பட்ட நகரங்களில் காண்பது போன்றே இங்கேயும் ஆங்காங்கே குளியலறைகளும், பெரும் பெரும் கழிவு நீர்க் குழாய்களும், நகரம் துப்புரவாய் இருப்பதற்கான சாதனங்களும் காணப்படுகின்றன. எனவே, கிரீட் மக்கள் சுகாதார உணர்ச்சி மிக்கவர்களாகவும், துப்புரவு நிறைந்த நகர வாழ்க்கையை மேற்கொண்டவர்களாயும் வாழ்ந்தனர் என்பது நன்கு தெரிகிறது.

**சமுதாய வாழ்க்கை**

மக்கள் இங்ஙனம் வாழ்ந்த நகரங்கள் நன்கு திட்டமிட்டு அமைக்கப்பட்டிருந்தன. கட்டடங்கள் யாவும் சுட்ட செங்கற்களால் நன்கு கட்டப்பட்டிருந்தன. சில கட்டடங்களில் நான்கு அல்லது ஐந்து மாடிகள்கூட அமைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு வீட்டிற்கும் இரண்டு கதவுகளும், பல சாளரங்களும், தாழ்வாரங்களும், நிலா முற்றங்களும் அமைக்கப்பட்டிருந்தன. தற்காலத்தே எகிப்தில் காணப்படும் வீடுகள் போன்றே அவை அமைந்திருந்தன. ஒவ்வொரு வீட்டிலும் வெந்நீரிலும், தண்ணீரிலும் குளிப்பதற்கான வசதி பொருந்திய குளியலறைகள் காணப்பட்டன. சாக்கடை வசதிகளும் சுகாதார முறையில் அமைக்கப்பட்டிருந்தன. ஒரு பெரிய வீட்டில் தச்சர்கள் பயன்படுத்தக்கூடிய ரம்பம், உளி, ஆணிகள் போன்ற பல்வேறு பொருள்களும் காணக் கிடைத்துள்ளன.

இந்நகரங்களில் வாழ்ந்த மக்கள் எந்த இனத்தவர் என்பது சரிவரத் தெரியவில்லை. அவர்கள் காகேசியன் வகுப்பினராய் இருக்கக் கூடுமென ஹால் (Hall) போன்ற ஆசிரியர்கள் கருதுகின்றனர். அவர்கள் உடை பெரும்பாலும் எகிப்தியர் உடையை ஒத்திருந்தது. ஆண்கள் இடையில் ஓர் கச்சையைக் கட்டியிருந்தனர். ஆனுல், உடம்பின் மேற்பகுதியில் ஆடையொன்றும் அணியாமலேயே அவர்கள் உலவினர். அரண்மனை ஓவியங்களிலிருந்து பெண்களின் உடையைப் பற்றி ஒருவாறு அறிகிறோம். ஏறக் குறைய 19ஆம் நூற்றாண்டுப் பெண்களைப் போன்றே, மகளிர் உடையணிந்திருந்ததாகத் தெரிகிறது. தரையைத் தொடுகின்ற அளவிற்கு நீண்ட பாவாடைகளையும், இறுக்கமான இடைக் கச்சைகளையும், தோள்பட்டைகளுக்கருகில் புறத்தே பெரிதும் உப்பலாய்க் காணப்பட்ட சட்டைகளையும் அவர்கள் அணிந்திருந்தனர். அழகிய பல ஆபரணங்களை மகளிர் அணிந்திருந்தனர்.

பலவகையான தலை அலங்காரமும் அவர்களுக்குத் தெரியாத தொன்றன்று. ஓய்வு நேரங்களில் ஆடவரும், மகளிரும் நாடகங் களையும் கேளிக்கைகளையும் கண்டுகளித்தனர். நாடக அரங்குகள் நாற்சதுரமாக அமைந்திருந்தன. சில சமயங்களில் அவர்கள் காளைச் சண்டைகளையும் பார்த்து மகிழ்ந்தனர். ஒரு காளையின் கொம்புகளுக்கிடையில் மங்கை ஒருத்தி சிக்கித் தவிப்பதைப் போன்ற ஓர் ஓவியத்தினின்றும் மகளிரும் இத்தகைய கேளிக்கை களில் கலந்து கொண்டனர் என்று தெரியவருகிறது. சொக்கட் டான் போன்ற ஒருவகை விளையாட்டிலும் அவர்கள் பொழுது போக்கினர் என்பதை அங்கு அகப்படும் எண்ணற்ற தந்தங்களா லான சொக்கட்டான் காய்களினின்றும் அறியலாம்.

### சமய வாழ்க்கை

கிரீட் மக்கள் இறைவனை வழிபடுவதற்காகத் தனிப்பட்ட கோவில்களைக் கட்டிக் கொள்ளவில்லை. ஒவ்வொரு வீட்டிலும் இறைவழிபாட்டிற்கென ஓரிடம் ஒதுக்கப்பட்டிருந்தது. அங்கே அவர்கள் ரீயா (Rhea) என்னும் பெண் - தெய்வத்தை வைத்து வணங்கினர். இந்தத் தெய்வத்தைச் சுற்றிலும் சிங்கங்களும், புருக் களும் இருப்பதுபோல் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. பெண் தெய்வமே உயர்ந்த தெய்வமெனக் கருதப்பட்டதாகத் தெரிகிறது. ஏனெனில், ஆண் தெய்வம் தனியாக வணங்கப்படவில்லை. அஃது பெண் தெய்வத்துள் அடங்கி இருப்பதொன்றுகவே கருதப்பட்டது. இவ் விரு தெய்வங்களும் சேர்ந்து லாப்ரிஸ் (Labrys) என்ற இரட் டைக் கோடரியில் வசிப்பதாகவே நம்பப்பட்டது. இந்தக் கோடரிச் சின்னங்கள் நாஸஸ் அரண்மனைச் சுவர்களில் ஏராளமாகக் காணப் படுகின்றன. பொதுக் கோயில்கள் கட்டப்படாததிலிருந்து கிரீட் மக்கள் சமயத்திற்கும் மத குருமார்களுக்கும் கட்டுப்படாத உலகியல் வாழ்க்கையையே மேற்கொண்டு வந்தனர் என்பது தெரிகிறது.

### பொருளாதார வாழ்க்கை

கிழக்குக் கிரீட்டில் அகழ்ந்தெடுக்கப்பட்ட பல்வேறு புதை நகரங்களில் இருந்து கிரீட் மக்கள் சீரும் சிறப்புமிக்க பொருளாதார வாழ்க்கையில் திளைத்திருந்தனர் என்பது நன்கு தெரிய வருகின் றது. வேளாண்மை, தொழில், வாணிகம் ஆகிய ஒவ்வொரு துறையிலும் அவர்கள் பெரிதும் சிறப்புற்று இருந்தனர். ஒலிவ எண்ணெய், திராட்சை ரசம் (wine) ஆகியவைகளை அவர்கள் பெருமளவிற்கு உற்பத்தி செய்து வெளி நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்தனர். அன்னார் கலங்கள் மத்தியதரைக் கடல் முழுவதிலும் சென்று வாணிகம் செய்தன. கைவண்ணமிக்க மட்பாண்டங் களைச் செய்வதில் அவர்கள் வல்லுநர்களாகத் திகழ்ந்தனர். பற்

பல உருவங்களில் செய்யப்பட்ட மட்பாண்டங்கள், மத்திய தரைக்கடல் நாடுகளில் போற்றப்பட்டு வாங்கப்பட்டன. உலோகப் பொருள்கள் செய்வதிலும் அவர்கள் வல்லுநர்களாகத் திகழ்ந்தனர். சைப்ரஸ் தீவினின்றும் செம்பையும், ஐரோப்பாவி லிருந்து தகரத்தையும் வாங்கி வந்து கலந்து அவற்றை வெண்கல மாக்கி அதைக் கொண்டு அழகிய வாளாயுதங்களையும், பிச்சுவாக் களையும், ஆபரணங்களையும் அவர்கள் செய்தனர். வெள்ளியாலும் வெண்கலத்தாலும் செய்யப்பட்ட பல பொருள்களை அவர்கள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்தனர்; நாணயங்களைச் செய்வதற் கும் அவர்கள் அவற்றைப் பயன்படுத்தினர். ஒலிவ எண் ணெயை வடிப்பதற்கான மட்பாண்டங்களும் நாஸஸ் அரண்மனை யில் காணப்படுவதால் எண்ணெய் ஏற்றுமதியில் அரசரும் ஈடு பட்டிருந்தனர் என்பது நன்கு தெரிகின்றது. சமையலுக்கும், விளக்கு எரிப்பதற்கும் அந்த எண்ணெய் பெரிதும் பயன்பட்டது. சிசிலி, இதாலி, ஸ்பெயின் ஆகிய நாடுகளில் கிடைத்துள்ள சின்னங்களிலிருந்து கிரீட் தீவினர் தங்களுடைய செய்பொருள்களை அங்கெல்லாம் அனுப்பி வாணிகம் புரிந்தனர் என்பதை அறியலாம். பல்வேறு வண்ணங்களையும் அவர்கள் உற்பத்தி செய்தனர். சிற்பி களின் கூடம் ஒன்றும் நாசஸ் நகரில் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளது. ஒரே மாதிரியான எடைக் கற்களையும் அளவைகளையும் கிரீட் மக்கள் பயன்படுத்தினர். பாபிலோனியர்களின் எடையையும், அளவைகளையும் அவை ஒத்திருந்தன. பொன், வெள்ளி இவை களாலான உலோகக் கட்டிகளை அவர்கள் வாணிகத்தில் பயன் படுத்தியதாகத் தெரிகிறது.

**அரசியல் வாழ்க்கை**

நாஸஸ் நகரத்தில் காணப்படும் அரண்மனையின் பரப்பைக் காணுமிடத்து அஃது ஒரு மன்னனது உறைவிடமாக மட்டுமின்றி அரசாங்கத்தை நடத்திவந்த பல செயலகங்கள் அடங்கியதோர் கூடமாகவும் விளங்கியிருக்க வேண்டுமென்பது தெரிய வருகிறது. கிரீட்டை ஆண்ட மன்னன் ஒரு கடலரசுக்குத் தலைவனாக இருந் திருத்தல் வேண்டும். நாட்டின் நிர்வாகம் மிக விழிப்புடனும் கட்டுப்பாட்டுடனும் நடைபெற்றது என்பதை அங்கு அகப்பட் டுள்ள பொருளாதாரக் குறிப்பேடுகளிலிருந்து நன்கு அறியலாம். பொதுமக்கள் செலுத்திய வரிகள் பெரும்பாலும் பண்டங்களாகவே இருந்தன. மன்னனுக்கும் பிரபுக்களுக்கும் வேண்டிய ஆடம்பரப் பொருள்கள் அங்கேயே உற்பத்தி செய்யப்பட்டன. அரசன் தன் அமைச்சர்களுடன் பெரிய மண்டபம் ஒன்றில் அமர்ந்து அரசாங்க வேலைகளைக் கவனித்து வந்ததாகத் தெரிகிறது. அவர்களது இருக்கைகள் எல்லாம் கல்லிலேயே செய்யப்பட்டன என்பதை

நாம் முன்னரே கண்டோம். இங்ஙனம் மதில்களால் சூழப்பட்ட அரண்மனையில் வாழ்ந்து அரசோச்சி வந்த மன்னன், பிற நாடு களோடு போர் புரிந்ததாகத் தெரியவில்லை. ஏனெனில், போர் சம்பந்தப்பட்ட ஓவியங்கள் எதுவும் அரண்மனையில் காணப்பட வில்லை. தமது நாட்டின் சுதந்திரத்தைக் காப்பாற்ற மன்னர்கள் ஒரு பெருங் கப்பற்படையை வைத்திருந்தனர் என்று நம்பப்படு கிறது. நாஸஸ் நகரில் வாழ்ந்த மன்னர்கள் பிற நாடுகளோடு போர் புரிந்ததற்கான சான்றுகள் இல்லையெனினும் அவர்கள் பீஸ்டஸ் நகரத்தையும் பிற அண்டை நாடுகளையும் வென்று அடக்கித் தங்கள் ஆளுகையின் கீழ்க் கொண்டுவந்து பெரும் கடல் வல்லரசை நிறுவியதாக வரலாறு கூறுகிறது. தலஸோக்ரஸி (Thalassocracy) என்றழைக்கப்பட்ட அவ்வல்லரசு பல நூற்றாண்டு கள் நிலைத்துச் செழித்திருந்ததாகவும் தெரிகிறது. அவர்கள் தங்கள் வல்லரசின் தலைநகரைக் காக்கப் பெரும் சுற்றரண்களை எழுப்பாததற்குக் காரணம் அவர்கள் நாட்டின் பாதுகாப்பைத் தங்கள் கடற்படையிடம் ஒப்படைத்ததேயாகும். அக்கடற் படை தன்னிடம் ஒப்புவிக்கப்பட்ட பணியைச் செவ்வனே செய்த தாகச் சான்றுகள் பகர்கின்றன.

**கலை வாழ்க்கை**

கிரீட் மக்கள் நன்கு எழுதவும் படிக்கவும் கற்றிருந்தனர். அவர்களது எழுத்துகளடங்கிய தந்தத்தாலாகிய முத்திரைகள் பல ஈஜியத் தீவுகளில் கிடைத்துள்ளன. முதலில் அவர்கள் ஓவிய எழுத்தைப் பயன்படுத்தினர். ஒவ்வோர் ஓவியமும் ஒரு பொருளைக் குறித்தது. கி.மு. இரண்டாயிரமாண்டிலேயே அவர் கள் இவ்வித ஓவிய எழுத்துகளைப் பயன்படுத்தியதாகத் தெரி கிறது. கி.மு. 1600ஆம் ஆண்டளவில் அவர்கள் கோடுகளா லாகிய எழுத்துகளைப் பயன்படுத்தினர். சொற்களும், சொற் பகுதி களும் இக்கோடுகளால் குறிக்கப்பட்டன. இந்த எழுத்துகளை இன் னும் எந்த அறிஞராலும் படித்துப் பொருள் சொல்ல இயலவில்லை. கிரீட் மக்களின் மொழி அழிந்துவிட்டது. கிரேக்க மொழி அவர் களது மொழியை வென்று ஆட்கொண்டது. அவர்கள் பயன் படுத்திய எண்ணிக்கை முறை தசாம்ச முறை என்று ஒருவாறு நமக்குப் புரிகிறது. ஏனைய கலைகளில் கிரீட் மக்கள் பெரிதும் முன் னேறியிருந்தனர். பல்வேறு நிறங்களைக் கலந்து புதிய வண்ணக் கலவைகளை உண்டாக்குவதில் அவர்கள் வல்லுநர்களாய்த் திகழ்ந் தனர். அவ்வண்ணங்களைக் கொண்டு கண்கவர் சுவரோவியங் களை அவர்கள் வரைந்து வைத்துள்ளனர். விருந்துகள், சமய ஊர்வலங்கள், விளையாட்டுப் போட்டிகள், மிருகங்கள், மீன்கள்,

அழகிய பூக்கள், இவைகளையே ஓவியர்கள் திறம்படத் தீட்டியுள்ளனர். மட்பாண்டங்களில் பல்வேறு உருவங்கள் வரையப்பட்டுள்ளன. அவைகளில் ஒரு தனித் தன்மையையும், கலையுணர்ச்சியையும், உள்ளதை உள்ளபடியே படம் பிடித்துக் காட்டும் திறமையையும் நாம் நன்கு காணலாம். ஓவியத்தோடு சிற்பக் கலைகளிலும் அவர்கள் திறமை மிக்கவர்களாகத் திகழ்ந்தனர். உலோகத்தாலான தட்டுகள், அழகிய பூக்கோப்பைகள், வாள்கள் முதலியன அவர்களுடைய கலைநுட்பத்திற்கு நல்ல எடுத்துக் காட்டுகளாய்க் காணப்படுகின்றன. எகிப்தியர்களைப் போலப் பெரும் கோயில்களைக் கட்டவில்லையாயினும் அவர்களது பிரம்மாண்டமான கோட்டைச் சுவர்களும் அரண்மனைகளும் அவர்களது கட்டடக் கலைச் சிறப்பிற்குத் தக்கதோர் சான்று பகர்கின்றன. கிரீட்டில் இருந்த நாஸஸ் அரண்மனையில் சிக்கலான பல சுரங்கப் பாதைகள் அமைந்திருந்தன. அவற்றுள் புகுந்தவர் வெளியே வர இயலாது என்று கிரேக்கர்கள் நம்பினர். அவற்றை லாபிரிந்த் (Labyrinth) எனக் கிரேக்கர்கள் நம்பினர். இந்தச் சுரங்கத்தில் பாதி மாடாகவும் பாதி மனிதனாகவும் இருந்த மினோட்டார் (Minotaur) என்ற இராக்கதன் இருந்ததாகவும், கிரேக்க யுவர்களையும், யுவதிகளையும் கிரீட் மன்னனான மினாஸ் (Minos) என்பான் கிரேக்ர்களிடம் இருந்து திறையாகப் பெற்று அந்த இராக்கதனுக்கு உணவாகப் படைத்து வந்ததாகவும், இறுதியில் தீஸியஸ் (Thesaus) என்ற கிரேக்க மன்னன் கிரீட் மன்னன் மகளான அரியாதினா (Ariadne) என்பாளின் துணைகொண்டு அந்த இராக்கதனைக் கொன்று வீழ்த்தியதாகவும் கிரேக்க இலக்கியங்கள் கூறுகின்றன. இதிலிருந்து மினாஸ் மன்னனின் அரண்மனைச் சிறப்பு மட்டுமின்றிக் கிரேக்கர் மீது அவன் செலுத்திவந்த ஆதிக்கமும் நன்கு புலனாகிறது. கிரேக்க இளைஞர்களையும் இளமங்கையர்களையும் அம் மன்னன் திருட்டுத்தனமாகத் தனது நாட்டிற்குக் கடத்திச் சென்றிருக்க வேண்டுமென்றும் இதைக் கண்டு பொருத கிரேக்க மக்கள் இறுதியில் ட்ராய், நாஸஸ் போன்ற நகரங்களைத் தாக்கி ஈஜிய நாகரிகத்தை அழித்திருக்கக்கூடுமென்றும் ஒருவாறு யூகிக்கலாம்.

ஈஜிய நாகரிகம் ஒருவகையில் ஏனைய பண்டைய நாகரிகங்களுக்குக் கடன்பட்டுள்ளதெனக் கருதலாம். அவர்கள் பயன்படுத்திய எடைகளும் அளவைகளும் பாபிலோனியரிடமிருந்து கற்றுக்கொண்டவையாகும். அவர்களது ஓவிய எழுத்து முறை எகிப்தியர்களிடமிருந்தே வந்திருக்க வேண்டும். அவர்களது வீடுகள் பெரும்பாலும் எகிப்திய வீடுகளைப் போன்றே அமைந்து இருந்தன. உருவச்சிலைகள்கூட எகிப்திய சிலைகளைப் போலவே காணப்படுகின்றன. நாஸஸ் அரண்மனையில் காணப்படும்

ஓவியங்கள் பல எகிப்திய இயற்கைக் காட்சிகளைச் சித்திரிப்பன போல் அமைந்துள்ளன. கிரீட் உண்மையில் ஆப்பிரிக்காவிற்கும் ஐரோப்பாவிற்கும் ஒரு பாலமென அமைந்திருந்தது. எகிப்திய நாகரிகம் கிரீட் தீவின் மூலமாகத்தான் கிரேக்கர்களுக்கு எட்டியது. கிரேக்கர்கள் மூலமாக ஐரோப்பியர்கள் அந்த நாகரிகத்தின் சிறப்பியல்புகளைப் பெற்றனர். இங்ஙனம் ஒரு நாகரிகம் இன்னொரு நாகரிகத்தோடு பெரிதும் பின்னிப் பிணைந்து கிடப்பதை நாம் காணுகின்றோம்.

*ஈஜிய நாகரிகத்தின் வீழ்ச்சி*

பல்லாற்றானும் பெருமையுடன் விளங்கிய ஈஜிய நாகரிகமானது கி.மு. 1400ஆம் ஆண்டளவில் அழிந்தொழிந்து போயிற்று. கிரேக்கர்களின் படையெடுப்பே அவ் வழிவிற்குக் காரணமாக இருந்திருக்கவேண்டுமெனப் பொதுவாக நம்பப்படுகிறது. படையெடுப்பாளர்கள், நாஸஸ் நகரத்து அரண்மனையையும் வேறு பல நகரங்களையும் இடித்துத் தரைமட்டமாக்கிவிட்டனர். இங்ஙனம் ஈஜிய மக்களை வென்ற கிரேக்கர்கள் நாள் செல்லச் செல்ல அவர்களது நாகரிகத்தையும் உட்கொண்டு புதியதோர் கலப்பு நாகரிகத்தையும் படைத்தனர். அதுவே பண்டைய கிரேக்க நாகரிகமாகும்.

## 6. மைசீனிய நாகரிகம்

ஈஜிய நாகரிகம் மறைந்த ஒரு சில நூற்றாண்டுகளுக்குப் பின்னர் கிரீஸ் நாட்டின் தென் பகுதியில் தோன்றிய பழம்பெரும் நாகரிகம் மைசீனிய நாகரிகம் என அழைக்கப்படுகிறது. ஆர்காஸ் (Argos) என்னும் நகரத்திற்குக் கிழக்கே சற்றுத் தொலைவில் அமைந்துள்ள டிரின்ஸ் (Tiryns), மைசினி (Mycenae) ஆகிய இரு பெரும் புதை நகரங்களில் அகழ்ந்தெடுக்கப்பட்ட பொருள்களைக் கொண்டே இந் நாகரிகத்தின் பெருமையை நாம் ஊகித்தறிய முடிகிறது. இங்கு நிலவிய நாகரிகம் வெண்கலக் கால நாகரிகம் (Bronze Age) என்று அழைக்கப்படுகிறது. செம்பாலும் வெண்கலத்தாலும் செய்யப்பட்ட பொருள்கள் ஏராளமாக இங்குக் கிடைப்பதே இதற்குக் காரணம் ஆகும். இந் நாகரிகக் காலத்தை இரு பகுதிகளாகப் பிரிக்கலாம். கி.மு. 1600 முதல் 1400 வரை கிரீட் தீவில் இருந்து கிரீஸில் பரவியிருந்த நாகரிகம் முதற் பகுதியையும் கி.மு. 1400 முதல் 1200 வரை அங்கு நிலவிய நாகரிகம் இரண்டாம் பகுதியையும் சார்ந்தனவாகும். மைசினி நகரம் முதலாம் காலப் பகுதியிலும், டிரின்ஸ் நகரம் இரண்டாம் காலப் பகுதியிலும் கட்டப்பட்டனவாகத் தெரிகின்றன.

கி.மு. 1210 ஆம் ஆண்டளவில் அக்கீயர்களுடைய படையெடுப்பால் மைசீனிய நாகரிகம் குன்றத் தலைப்பட்டது. கி.மு. 1100-ல் டோரியர்கள் படையெடுப்பால் அந் நாகரிகம் அழிந்தது.

டிரின்ஸ் நகரத்தில் காணப்படும் அழிபாடுகள், திண்மை செறிந்த மதிற்சுவர் ஒன்று அதைச் சுற்றிலும் அமைந்திருந்தது என்பதைக் காட்டுகின்றன. அம் மதிற்சுவர் ஒன்றன்மேல் ஒன்றுய் அடுக்கப்பட்ட பிரம்மாண்டமான கற்களால் திறன்படக் கட்டப் பட்டுள்ளது. அக் கற்களில் பெரும்பாலானவை 2 மீட்டர் நீளமும் 1 மீட்டர் அகலமும் உயரமும் உடையவை. இரண்டு கோவேரிக் கழுதைகளால்கூட அசைக்க இயலாத அப்பெரும் பாறைகளை எங் ஙனம் அக்கால மக்கள் ஒன்றன் மீது ஒன்ருக அடுக்கி வைத்தனர் என்பது வியப்பிற்குரியதொன்ருகும். சைக்ளோப்புகள் (Cyclopes) என்ற ஒற்றைக்கண் இராக்கதர்கள் ஸிகியாவிலிருந்து (Cycia) வந்து இச் சுவர்களை எழுப்பினர் எனக் கிரேக்கர்கள் கூறுவர். அங்ஙனம் அமைந்த மதிற் சுவர்களுக்குள் கற்றூண்கள் நிறைந்த அத்தாணி மண்டபம் ஒன்றும், அதைச் சுற்றிலும் ஏராளமான சிறு சிறு அறைகளும் அமைக்கப்பட்டுள்ளன. அத்தாணி மண்ட பம் மட்டும் 120 சதுர மீட்டர் பரப்பளவுடையது. அதன் தளத் தின் மீது வண்ணங்கலந்த ஒருவகைச் சிமிண்டு பூசப்பட்டுள்ளது. அம்மண்டபத்தில் அரண்மனை வாசிகளின் குளிர்காயும் அடுப்பங் கரை (hearth) ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. கிரீட் தீவில் காணப்படும் அரண்மனைகளுக்கும் இங்கே காணப்படும் அரண்மனை களுக்கும் ஒரு முக்கிய வேறுபாடு என்னவெனின், ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியே அறைகள் அமைக்கப்பட்டிருப்பதே யாகும். அரசனுக்கும் அரசிக்கும் கூடத் தனித்தனி அறைகளே கட்டப்பட்டுள்ளன. ஒன்றிலிருந்து மற்ருென்றிற்குப் போவதற்கு வழி எதுவும் வைக்கப்படவில்லை. மலைக்கோட்டைக்குக் கீழே செங்கற்களால் கட்டப்பெற்ற வீடுகளும் பாலங்களும் காணப்படு கின்றன. வீடுகளில் ஏராளமான உடைந்த மட்பாண்டங்கள் அகப்பட்டுள்ளன.

டிரின்ஸ் நகருக்கு வடக்கே பதினைந்து கிலோ மீட்டர் தொலை வில் மைசீனிய நகரம் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளது. இந் நகரி லும் மலைமீது கட்டப்பெற்ற திண்மையான மதிற்சுவர் ஒன்று காணப் படுகிறது. தங்கம் இங்குத் தண்ணீர் போல் ஏராளமாகக் கிடைத்த தாய்த் தெரிகிறது. கல்லறைகளிலுள்ள சவங்களின் முகங்களை மூடுவதற்கும் பொன்னுலான முகமூடி ஒன்றை இவர்கள் பயன்படுத் தினர் என்ருல் அவ்விலையுயர்ந்த உலோகம் இங்கே எவ்வளவு மலி வாகக் கிடைத்திருக்க வேண்டுமென்பது சொல்லாமலே விளங்கும். மைசீனிய மதிற்சுவரிலும், சாதாரண மனிதர்களால் தூக்க

இயலாத பெரும் பாறைகள் காணப்படுகின்றன. அச்சுவரின் ஒரு மூலையில் புகழ் பெற்ற சிம்ம வாசல் (Lion gate) அமைந்துள்ளது. வாசற்படி உத்தரத்துக்கு மேல் முக்கோண வடிவில் அமைந்துள்ள ஒரு கற்சட்டத்தின் ஓரங்களில் இரண்டு சிம்மங்கள் அழகுற அமைக்கப்பட்டுள்ளன. மலையின் மீது அமைந்துள்ள நகரில் டிரின்ஸ் நகரில் காணப்படுவது போலவே வரவேற்பறைகள், குளியலறைகள், கிடங்குகள், வழிபாட்டறை, அரியணையறை முதலியன தனித் தனியே காணப்படுகின்றன. சிம்ம வாயிலுக்கு அருகில் கல்லறையொன்றை ஸ்லீமன் கண்டுபிடித்தார். வட்டமாய் அமைந்த அக் கல்லறையுள் பத்தொன்பது நபர்களின் எலும்புக் கூடுகளை அவர் கண்டார். அவ் வெலும்புக் கூடுகளின் கழுத்தின்மீதும் உடம்பின் மீதும் ஏராளமான தங்க நகைகள் காணப்பட்டன. தங்க மயமான மைசீனிய நகரம் எனக் கவிஞர் ஹோமர் கூறியிருப்பது முற்றிலும் உண்மையென்பதை ஸ்லீமன் நேரிலேயே கண்டறிந்தார். அக் கல்லறையுள் வண்ணம் பூசப்பட்ட மட்பாண்டங்கள், வெண்கலப் பாத்திரங்கள், வெள்ளி ஆயுதங்கள், விலையுயர்ந்த கற்களாலாய மாலைகள், தந்தத்தாலாகிய கருவிகள், சொக்கட்டான் பலகைகள், வாள்கள், பிச்சுவாக்கள், முத்திரைகள், பற்பல விதமான ஆபரணங்கள், விலையுயர்ந்த உடைகள் முதலியனவும் கண்டெடுக்கப்பட்டன.

மலைக் கோட்டைக்கு நேர் எதிரில் ஸ்லீமன் மேலும் ஒன்பது கல்லறைகளைக் கண்டெடுத்தார். அவை யாவும் ஒரு மலைச்சரிவில் ஒன்றன்மீதொன்றாகச் செங்குத்தாகக் குடையப்பெற்ற உருளை வடிவமான கல்லறைகளாகும் (Shaft Graves). இக் கல்லறைக்கு உள்ளே புகின் உச்சியில் ஒரு பெரிய குவிமாடம் (Dome) இருப்பதை ஒவ்வொருவரும் காணலாம். ஒவ்வொரு மாடமும் 15 மீட்டர் உயரமும் அதேயளவு அகலமும் உடையது. கல்லறையின் சுவர்களின் மீது வெண்கலத் தட்டுகள் அழகுற வேயப்பட்டுள்ளன. இக் கல்லறையை அட்ரியஸ் (Atreus) என்பாருடைய நிதியறை என்றும், அகமெம்னன் (Agamemnon) என்ற கிரேக்க மன்னருடைய கல்லறை என்றும் தவறாக ஸ்லீமன் கருதினார். இக் கல்லறைகளைத் தேன்கூட்டுக் கல்லறைகளெனவும் (Beehive tombs) ஒருசிலர் அழைப்பர். ஏனெனில், அவைகள் அமைப்பில் தேன்கூட்டை ஒத்துள்ளன. இக் கல்லறைகளுள் புதைக்கப் பெற்றிருந்த விலையுயர்ந்த பொருள்களை எல்லாம் கள்ளர்கள் கவர்ந்து சென்றுவிட்டனர். எனவே, அகழ்வாராய்ச்சியாளர்கள் காலி அறைகளையே இங்குக் காண முடிந்தது. உருளை வடிவமான கல்லறைகள் கி.மு. 1500ஆம் ஆண்டளவிலும், தேன்கூடு வடிவமான கல்லறைகள் கி.மு. 1400ஆம் ஆண்டளவிலும் கட்டப்பட்

டிருக்க வேண்டுமெனத் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் கருது கின்றனர்.

டிரின்ஸ், மைசீனியா ஆகிய நகரங்களில் கண்டுபிடிக்கப் பட்டுள்ள அரண்மனைகள் பெரும்பாலும் ஈஜிய நாகரிகக் காலத்து அரண்மனைகளைப் போலவே அமைந்துள்ளன. பெண்களுக்கென்று தனி மாடங்கள் அமைக்கப்பட்டிருப்பதொன்றே இங்குக் காணப் படும் புதுமையாகும். கிரீட் தீவில் கண்டெடுக்கப்பட்டுள்ள மட் பாண்டங்கள் இங்கேயும் காணப்படுகின்றன. கிரீட் நகரத்தின் கலைப்பண்பு இங்குள்ள கல்லறைகளில் காணப்படுகிறது. மைசீனிய நகரில் காணப்படும் சிம்மச் சிலைகளில் மெசபடோமிய நாகரிகத்தின் மணம் கமழ்வதைக் காண்கிறோம். இங்ஙனம் தன்னினும் முற்பட்ட நாகரிகங்களின் தொடர்புகளினாலேயே மைசீனிய நாகரிகம் தனது உச்சநிலையை எய்தியிருக்கக் கூடுமென்பதில் சிறிதும் ஐயமில்லை.

*அரசியல் வாழ்க்கை*

அகழ்வாராய்ச்சியில் கிடைத்துள்ள பொருள்களைக் கொண்டு மைசீனிய நாகரிகத்தில் திளைத்தோர் எத்தகைய அரசியல் அமைப்பைக் கொண்டிருந்தனர் என்பதை ஒருவாறு ஊகித்தறிய லாம். டிரின்ஸ், மைசீனி போன்ற நகரங்களில் காணப்படும் பெரும் மதிற்சுவர்களைக் காணும்போது, அங்கு வலிமை பெற்ற அரசர்கள் தங்கி அரசோச்சி வந்திருக்கவேண்டுமென்பது நன்கு புலனாகிறது. அவ் வரசர்கள் பெருஞ் செல்வர்களாயிருந்திருக்க வேண்டுமென்பது, அன்னாரது கல்லறைகளில் கண்டெடுக்கப்பட்ட தங்கம் போன்ற விலையுயர்ந்த பொருள்களினின்றும் நன்கு அறியக் கிடக்கின்றது. அரசனுக்கு உதவியாகப் பல பிரபுக்கள் இருந்தனர். அவர்களும் தமக்கெனத் தனியே கல்லறைகள் பலவற்றைக் கட்டிக்கொண்டனர். இரு குதிரைகள் பூட்டப்பட்ட இரதங்களில் அவர்கள் சவாரி செய்தனர். அரசனும், அரசியும் அவ்வப்போது பிரபுக்களும் இனைய பெருமக்களும் விருந்துகள் அளித்து மகிழ்ந் தனர். அத்தகைய விருந்துகளின்போது உணவுப் பண்டங்களோடு செவிக்கின்பம் பயக்கக்கூடிய இன்னிசையும் வழங்கப்பட்டது.

இத்தகைய கோனாட்சிக்கு உட்பட்டிருந்த நாடுகள் அளவில் மிகச் சிறியனவாகவே இருந்ததாகத் தெரிகிறது. மலைமீது கட்டப் பட்ட ஓர் அரண், அதைச் சுற்றிலும் ஒரு நகர், அதையொட்டி மலை யடிவாரத்திலே இன்னொரு நகர், அதைச் சுற்றியும் ஒரு சில கிராமங் கள் ஆகிய இவைகளே அக்கால அரசு ஒன்றுள் உட்பட்ட இடங் களாகும். இவைகளைப் பாதுகாக்கப் படையேந்திய போர்வீரர்கள் கோட்டைக்குள் எப்போதும் தயாராக வைக்கப்பட்டிருந்தனர்.

மைசீனி நகர் ஓவியங்களிலும், சிற்பங்களிலும் இராணுவம் பற்றிய பல்வேறு காட்சிகள் சித்திரிக்கப்பட்டுள்ளன. கல்லறை ஒன்றில் கண்டெடுக்கப்பட்ட வெள்ளிப் பாத்திரத்தின் உடைந்த பகுதியில் செதுக்கப்பட்டுள்ள ஒரு சிற்பத்தில் போர்க்களம் ஒன்று விரிவாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது. மலைக்கருகிலுள்ள கோட்டைச் சுவரைப் பலர் முற்றுகையிடுகின்றனர். கோட்டை கொத்தளங்களில் காணப்படும் சாளரங்கள் மூலம் அக் காட்சியைக் காணும் இள மங்கையர்கள் தங்கள் கைகளை ஆட்டிப் படைவீரர்களுக்கு உற்சாக மூட்டுகின்றனர். நேரில் காண்பதுபோன்று இக் காட்சி அமைக்கப் பட்டுள்ளது. மைசீனியில் கண்டெடுக்கப்பட்டுள்ள பெரிய மண் ஜாடி ஒன்றின்மீது வரையப்பட்டுள்ள ஓவியத்தில் தலை முதல் பாதம்வரை கவசம் அணிந்த போர்வீரர் அறுவர், வட்டவடிவமான கேடயங் களைக் கையிலேந்திக்கொண்டு படைக்களம் நோக்கி அணிவகுத்துச் செல்லும் காட்சி விலையுயர்ந்த மணிகளிலும், முத்திரைக் கற்களிலும் கூடப் பொறிக்கப்பட்டுள்ளன. கல்லறை மூடி ஒன்றில் ஐந்து போர் வீரர்கள் ஈட்டிகளை ஏந்திச் செல்வதுபோல் தீட்டப்பட்டுள்ள தலை சிறந்த ஓவியமானது மைசீனியில் கண்டெடுக்கப்பட்டுள்ள ஓவியங் களில் ஒன்றாகக் கருதப்படுகிறது. இத்தகைய காட்சிகளிலிருந்து மைசீனியர்கள் பெரிதும் போர்ஆர்வம் நிறைந்தவர்கள் என்பதை நாம் தெள்ளிதின் உணரமுடிகிறது.

போர்வீரர்கள் பொதுவாகப் பயன்படுத்திய போர்க் கருவிகள் வில், வேல், வாள், ஈட்டி முதலியனவேயாகும். அவர்கள் பயன் படுத்திய அம்புகளின் முனையில் தொடக்கத்தில் நன்கு கூராகச் செதுக்கப்பெற்ற ஒருவகைக் கருங்கற்களே (Obsidian) செருகப் பட்டிருந்தன. நாளடைவில் உலோகம் பழக்கத்துக்கு வந்த பின் அம்புகளின் முனைகளில் வெண்கலத் துண்டு ஒன்று செருகப்பெற்றது. அவர்கள் உச்சிமுதல் உள்ளங்கால்வரை நீண்ட கவசங்களை அணிந்திருந்தனர். அவர்களது கேடயங்கள் எருதுகளின் தோலி னால் நன்கு வலிவுறச் செய்யப்பெற்றிருந்தன. தோலால் ஆக்கப் பெற்ற தலைச் சீராக்களையும் (Helmet) அன்னார் அணிந்துகொண் டனர். பிரபுக்களே பெரும்பாலும் போர்த் தளபதிகளாகப் பணி யாற்றினர். அவர்கள் இரட்டைக் குதிரை பூட்டிய இரதங்களில் இவர்ந்து சென்றே எதிரிகளைச் சாடிவந்தனர். அத்தகைய இரதங் களில் அவர்கள் நின்று போரிடுதற்கென்று ஒரு மரப்பலகையும், அதற்கு எதிரே அம்புகளைத் தடுப்பதற்கெனப் பிரம்பினால் பின்னப் பட்ட ஒரு தடுப்பும் அமைந்திருந்தன.

*சமுதாய வாழ்க்கை*

மைசீனியச் சமுதாயத்தில் ஏற்றத் தாழ்வுகள் நிறைந்திருந்தன அரசர்கள், பிரபுக்கள், போர் வீரர்கள், சாதாரணக் குடிமக்கள்

அடிமைகள் எனப் பல்வேறு பிரிவினர் சமுதாய மாடியின் பல்வேறு தளங்களில் காணப்பட்டனர். அதன் அடித்தளத்தில் மண்டிக்கிடந்த பல்லாயிரக்கணக்கான அடிமைகளின் உதவி யின்றி அரசர்களும், பிரபுக்களும் காண்போர் வியக்கும் வண்ணம் கம்பீரமான அரண்மனைகளையும், திண்மை செறிந்த மதிற்சுவர் களையும் எழுப்பியிருக்க ஒண்ணுதென்பது தேற்றம். சாதாரண மக்களும் அடிமைகளும் எளிய வாழ்க்கையே வாழ்ந்தனர். ஓய்வு நேரங்களில் காளைச் சண்டை, குத்துச் சண்டை, வேட்டை யாடுதல், தேரோட்டப் பந்தயம் போன்ற களியாட்டங்களைக் கண்டு களிப்புற்றனர். முரட்டுத்தனமிக்க காளைகளை அடக்குவதில் பண்டைய தமிழர்கள் போன்றே கிரேக்கர்களும் தனி இன்பம் கண்டனர். காட்டு மாடுகளைச் சில சமயம் அவர்கள் வலை போட்டுப் பிடித்துப் பின் பழக்கினர். கோப்பை ஒன்றில் பொறிக் கப்பட்டுள்ள ஓவியத்தில் காளை ஒன்று வலையில் சிக்கித் தவிக்கின்ற காட்சி நன்கு சித்திரிக்கப்பட்டுள்ளது. சிக்குண்ட காளையின் கண் களில் கோபக்கனல் பொறி பறக்கின்றது. மூக்கில் மூச்சு வாங்கு கின்றது. வாயில் நுரை தள்ளுகின்றது. எப்படியாவது தப்பித்துக் கொள்ள வேண்டும் என்ற உணர்ச்சியால் உந்தப்பட்டு அது வலைக்குள் அலைமோதுகிறது. இத்தனையும் ஒரே ஓவியத்தில் ஒருங்கே காட்சியளிக்கின்றன. இன்னேர் ஓவியத்தில் சிறுவன் ஒருவன் காளையின் இரு கொம்புகளையும் பிடித்து அதை அடக்கு வது போல் காட்டப்பட்டுள்ளது. மற்றுமோர் ஓவியத்தில் மனிதன் ஒருவன் காளை ஒன்றை நடத்திக்கொண்டு செல்வது போன்று வரையப்பெற்றுள்ளது. பின்னுமோர் ஓவியத்தில் ஒரு காளையும் பசுவும் காதல் புரிவதுபோல் காட்சியளிக்கின்றன. காளையைக் கட்டுப்படுத்தும் விளையாட்டு மைசீனிய மக்களிடையே எவ்வளவு செல்வாக்குடன் விளங்கியதென்பதையே இத்தகைய ஓவியங்கள் பறைசாற்றுகின்றன.

உயர்குலப் பெண்டிர் சிங்காரமாக உடையணிந்தனர்; இறுக்க மான மார்புக் கச்சைகளையும், அகன்ற பாவாடைகளையும் அணிந் தனர். ஆனால், மார்புகளை மறைக்கத்தக்க மாராக்குச் சேலைகளை அவர்கள் அணியவில்லை. திறந்த மார்புடன் திரிவதென்பது அக் காலப் பெண்களுக்கு ஒரு நாணத்தக்க செயலாகத் தெரியவில்லை போலும்! நெற்றியில் பட்டம் கட்டிக்கொள்ளுவது பல பெண் களின் வழக்கமாயிருந்தது. அவர்கள் காதிலும், கழுத்திலும் அழகு செறிந்த தங்க ஆபரணங்கள் மின்னிக்கொண்டிருந்தன. கூந்தலை அன்னுர் வளையங்களாகத் திரித்து உச்சியில் கொண்டை யாக அமைத்துக்கொள்வர். இங்ஙனம் அமைந்ததுபோக எஞ்சி யுள்ள முடி கீழே தொங்கிக்கொண்டிருக்கும். ஆண்கள் பொதுவாக

நீண்ட முடியை வைத்திருந்தனர். அரையில் கச்சை மட்டுமே அவர்கள் பெரும்பாலும் அணிவது வழக்கம். ஆனால், ஒரு சிலர் இறுக்கமான மேலாடை ஒன்றையும், உட்சட்டை (Tunic) ஒன்றையும் அணிந்துவந்தனர். கிரீட் மக்களைப்போல் அல்லாது நீண்ட தாடி வைத்துக்கொள்வதை மைசீனியர்கள் விரும்பினர். முகச்சவரம் செய்துகொள்ளும் பழக்கமும் அன்னாரிடம் இருந்தது என்பதற்குக் கல்லறைகளில் கண்டெடுக்கப்பட்டுள்ள சவரக் கத்திகளே ஒரு பெருஞ் சான்றாகுமென்க.

இறந்தவர்களை எரிக்கும் வழக்கம் அவர்கள்பால் காணப்படவில்லை. எகிப்தியர்களைப்போல் அன்னார் இறந்தாரைப் பெரும் கல்லறைகளில் இட்டுப் புதைத்தனர். மாண்டோர் பயன்படுத்திய கருவிகளும், நகைகளும் கல்லறைகளில் காணப்படுகின்றன. இதிலிருந்து அவர்கள் மரணத்தின் பின்னும் மக்கள் ஆவியாக இருந்து வாழ்கின்றனர் என்ற நம்பிக்கை கொண்டிருந்ததாக ஊகிக்கமுடிகிறது.

இங்ஙனம் இறந்துபோன முன்னோரை வழிப்பட்டதோடன்றி அன்னார் வேறுபல கடவுளர்களையும் வணங்கியதாகத் தெரிகிறது. கிரீட் மக்களைப் போன்று இவர்களும் இரட்டைக் கோடரியையும், புனிதத் தூணையும், தூய புறாவையும் வணங்கினர். ஆனால், சக்தி வழிபாட்டில்தான் இவர்கள் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்தனர். பெண்தெய்வத்தை வழிபடும்போது கூடவே அதன் கணவர் அல்லது மகனையும் சேர்த்து அன்னார் வணங்கினர். பெண் தெய்வத்தின் அங்கங்களைப் பாம்புகள் அணி செய்தன. தெய்வீகமானதெனக் கருதப்பட்ட ஒரு சில மரங்களையும் அவர்கள் வணங்கினர்.

*பொருளாதார நிலை*

மைசீனிய மக்கள் கிரீட் தீவு வாசிகளை விடப் பொருளாதாரத் துறையில் ஒருபடி முன்னேறியிருந்தனர். மிருகங்களை வேட்டையாடும் கலையில் அவர்கள் கிரீட் வாசிகளைக் காட்டிலும் திறமை மிக்கவர்களாயிருந்தனர். கற்களாலாகிய கருவிகளில் துளை போட்டுக் கைப்பிடி அமைத்து அவற்றை நன்கு பயன்படுத்த அவர்கள் கற்றிருந்தனர். கற்கருவிகளையேயன்றி வெண்கலத்தாலாய கருவிகளையும் அவர்கள் பயன்படுத்தினர். அக் கருவிகளைக் கொண்டு அவர்கள் மான்கள், கரடிகள் போன்ற வனவிலங்குகளை வேட்டையாடினர். தங்கம், வெள்ளி ஆகிய விலையுயர்ந்த உலோகங்களை அவர்கள் தாராளமாகப் பயன்படுத்தினர். கோப்பைகள், வீட்டுப் பாத்திரங்கள் ஆகிய தட்டுமுட்டுச் சாமான்

கள் யாவும் தங்கத்தாலும், வெள்ளியாலும் சர்வசாதாரணமாகச் செய்யப்பட்டன. கல்லறைகளில் புதைக்கப்பட்ட சவங்களுக் கருகில் அத்தகைய பாத்திரங்கள் வைக்கப்பட்டன என்று தெரிகிறது. ஏனெனில், பல கல்லறைகளில் எலும்புக் கூடுகளுடன் அவைகள் ஏராளமாகக் கண்டெடுக்கப்பட்டுள்ளன. சவங்களின் முகங்களிலும், தலைகளிலும் தங்கத்தாலான மூடிகள் போர்த்தப் பட்டனவாகவும் தெரிகின்றன. எலும்புக் கூடுகளுடன் அத்தகைய முகமூடிகளும் ஏராளமான தங்க நகைகளும் அகப்பட்டுள்ளன. எனவே, மைசீனிய உயர்குலப் பெண்டிர் இறந்தபோது, அவர்களது சடலங்களோடு அன்னார் அணிந்து வந்த பொன் னுபரணங்களும் சேர்த்துப் புதைக்கப்பட்டிருக்க வேண்டுமென்பது நன்கு புலனாகிறது. பல குழந்தைகளின் எலும்புக் கூடுகளின் மேல் பொன்னாலான தகடுகள் காணப்பட்டன. பொன் போன்ற மேனியை உடைய குழந்தை ஒன்று இறந்துவிட்டால் அதைப் பொன் தகட்டில் வைத்துச் சுருட்டிப் புதைக்கும் பழக்கம் மைசீனிய மக்கள்பால் காணப்பட்டதென்பது இதனால் நன்கு போதருகின்றது. தங்கமும், வெள்ளியும், வெண்கலமும், கிடைத்த அளவுக்கு இரும்பு அங்குக் கிடைக்கவில்லை எனத் தெரிகிறது. மைசீனியர்கள் இரும்பை மோதிரங்கள் போன்ற ஒரு சில இன்றியமையாத ஆபரணங்களைச் செய்வதற்கு மட்டுமே பயன்படுத்தினர்.

மைசீனியர்களிடத்தில் தொழில் வளர்ச்சி அதிகமாகக் காணப் படவில்லை. தொழில் துறையில் முன்னேற்றமடைந்த நகர்கள் மிகக் குறைவாகவே அங்குக் காணப்படுகின்றன. அழகிய மட் பாண்டங்களை வனைவதில் அவர்கள் வல்லவர்களாயிருந்தனர். அவர்களால் வனையப்பெற்ற மட்பாண்டங்கள் கிரீட் தீவில் காணப்பட்ட பாண்டங்களைவிடப் பளபளப்பில் பன்மடங்கு விஞ்சியவைகளாய்க் காட்சியளிக்கின்றன. ஒலிவ எண்ணெய் உற்பத்தித் தொழிலிலும், அன்னார் கைதேர்ந்தவர்களாயிருந்தனர். மைசீனிய மட்பாண்டங்களும், ஒலிவ எண்ணெயும் வெளிநாடு களுக்குப் பெருமளவில் ஏற்றுமதி செய்யப்பட்டன. எகிப்து, சிசிலித்தீவு, ஸ்பெயின் போன்ற நாடுகளோடு மைசீனிய மக்கள் வாணிபம் புரிந்தனர். இங்ஙனம் அவர்கள் வாணிபத்தில் ஈடு பட்டபோது அவர்களைக் கடற்கொள்ளைக்காரர்களிடமிருந்து காப்பாற்றிக்கொள்ளத் துணையாயிருந்தது அவர்களது கப்பற் படையேயாகும். கடற்கொள்ளை அடித்தலென்பது அக்காலத்தே சர்வசாதாரணமாய் நிகழ்ந்துவந்ததாகத் தெரிகிறது. ஏனெனில், கடற்கொள்ளைபற்றிய காட்சிகள் பல, சாதாரணப் பாத்திரங் களிலும், மோதிரங்களிலும் சித்திரிக்கப்பட்டுள்ளன.

வாணிகத்தில் பெரும் பொருளீட்டிய மக்கள் நாளடைவில் ஆங்காங்கே பெரும் நகரங்களைக் கட்டிக்கொள்ளலாயினர். கடலின் மூலம் ஏற்படக்கூடிய திடீர்த் தாக்குதல்களினின்றும் காப்பாற்றிக் கொள்வான்வேண்டி அவர்கள் தங்களது நகரங்களைக் கடற்கரைக்குச் சற்றுத் தொலைவினில் அமைத்தனர். அதே சமயத்தில் அவசியமானபோது எளிதில் தங்களது கப்பல்களைச் சார்ந்து ஓடித் தப்பித்துக் கொள்வதற்கேற்றவாறு, நகரம் கடற்கரையிலிருந்து அதிக தொலைவில் அமைந்துவிடாதபடியும் அவர்கள் பார்த்துக் கொண்டனர். கி.மு. 1400ஆம் ஆண்டளவில் மைசீனிக்கென்று ஒரு தனிப்பட்ட கப்பற்படை இருந்ததாகத் தெரிகிறது. அக் கப்பற்படை கிரீட் வாசிகளின் கப்பற்படையைவிட வலிமை மிக்கதாய் இருந்திருத்தல் வேண்டும். இல்லெனில் கிரீட்டின் நாகரிக நிலையங்களை அன்னூர் அவ்வளவு எளிதில் அழித்திருத்தலென்பது முடியாத காரியம். இங்ஙனம் ஓர் அளவு பயிர்த்தொழிலிலும், பெருமளவுக்கு வாணிபத்திலும் சிறந்து விளங்கிய மக்களைக்கொண்ட நகர அரசுகளே மைசீனிய நாகரிகத்தின் உறைவிடங்களாய்த் திகழ்ந்தன.

***கலைகளின் நிலை***

மைசீனிய மக்கள் பொருளாதாரத்துறையில் வளர்ச்சியடைந்திருந்த அளவுக்குக் கலைத்துறையில் முன்னேற்றமடையவில்லை. படிப்பு வாசனையும், எழுத்து வாசனையும் அவர்களுக்குச் சற்றுக் குறைவென்றே தெரிகிறது. ஏனெனில், டிரின்ஸ் நகரில் கண்டெடுக்கப்பட்டுள்ளனவும், கிறுக்கெழுத்துகள் நிறைந்தனவுமான ஓரிரு ஜாடிகளைத் தவிர, அன்னூரின் எழுத்தறிவைப் புலப்படுத்தக்கூடிய வேறு சான்றுகள் எவையும் கிடைக்கவில்லை. எளிதில் அழிந்து போகக்கூடிய பொருள்களின் மீது அன்னூர் தம் எழுத்துகளை ஒருவேளை பொறித்திருக்கக் கூடும். ஆனால், திட்டவட்டமாக அங்ஙனம் கூறுவதற்கேற்ற ஆதாரங்கள் எதுவும் இலலை.

மைசீனியர்களின் ஓவியங்கள் பெரும்பாலும் கிரீட்டின் சித்திரங்களையே ஒத்துள்ளன. வாழ்க்கையில் நடப்பவைகளை அப்படியே சித்திரிக்கக்கூடிய உயிரூட்டமுள்ள சுவரோவியங்கள் (Frescoes) பல அங்குக் காணப்படுகின்றன. டிரின்ஸ் நகர அரண்மனைச் சுவர்களில் கரடி வேட்டை ஒன்று மிகவும் தத்ரூபமாக வரையப்பட்டுள்ளது. நாய்களால் துரத்தப்படுகிற கரடி ஒன்று தலைதெறிக்க ஓடுவதையும், அதைக் குத்திக் கொல்ல மனிதன் ஒருவன் கூரிய ஈட்டியுடன் நிற்பதையும் அவ் வோவியம் சித்திரிக்கின்றது.

மைசீனியர்களின் கலைத்திறன் உலோக வேலைப்பாடுகளில் தான் உச்சநிலையை எய்தியுள்ளது. உருவிலும், திருவிலும் அவை கிரீட் தீவில் காணப்பட்ட கலைப்பொருள்களைப் பெரிதும் ஒத்துள்ளன. எனினும், தமக்கே உரிய தனிப்பண்புகளுடன் அவை மிளிர்கின்றன. தங்கத்தாலும், வெள்ளியாலும் செய்யப் பட்ட அணிகலன்களில், அழகு நடனம் புரிவதைக் காணலாம். வேட்டையாடுதல், கடற்கொள்ளையடித்தல், போர் புரிதல் ஆகிய நிகழ்ச்சிகளைச் சித்திரிக்கின்ற சிற்பங்கள் பல தங்கத் தாம் பாளங்களில் பொறிக்கப்பட்டுள்ளன. பளபளக்கும் வெள்ளித் தகடொன்றில் கொம்புகளையுடைய பசுவின் உருவம் ஒன்று செதுக்கப்பட்டுள்ளது. அதன் முகத்தில் தங்கத்தாலாய முகப் படாமொன்று காணப்படுகிறது. வெண்கலத்தாலான குத்துவாட்கள் இரண்டில் காட்டுப்பூனைகள் வாத்துகளைத் துரத்துவது போன்றும்; மாந்தர் ஒருவரோடொருவர் மலைவது போன்றும் பல காட்சிகள் பொறிக்கப்பட்டுள்ளன. வேஃபியோ கல்லறையில் கண்டெடுக் கப்பட்டுள்ள தங்கக் கோப்பைகளின் மீது காளைகளைப் பிடித்துப் பழக்குகின்ற காட்சியானது நன்கு பொறிக்கப்பட்டுள்ளது. கிரீட் தீவிலும் இதை ஒத்த கோப்பைகள் பல காணப்படுகின்றன. இங்ஙனம் வளர்ச்சிபெற்றுள்ள மைசீனியக் கலையில் ஒரு முழு மையை நம்மால் காண இயலவில்லை. ஏதோ ஒன்று அதில் இல்லாதது போன்றே அது காட்சி தருகின்றது.

### மைசீனிய நாகரிகத்தின் பரப்பு

மைசீனிய நாகரிகச் சின்னங்கள் கிரீஸ் நாட்டின் பல்வேறு பாகங்களில் அகப்பட்டுள்ளதைக் கொண்டு அஃது எவ்வளவு தூரம் அக்காலத்தே பரவியிருக்க வேண்டுமென்பதை ஒருவாறு ஊகிக் கலாம். ஸ்பார்டா நகரக் கல்லறைகளிலும், லெக்கோனியாப் பள்ளத்தாக்கிலும், ஏதென்ஸ் நகரக் கோட்டைச் சுவர்களிலும், தீப்ஸ் (Thebes) நாட்டு அரண்மனைகளிலும், ரோட்ஸ் (Rhodes) தீவிலும், தெஸலி (Thessaly) நாட்டிலும் மைசீனிய நாகரிகத்தின் மணங் கமழும்படியான நினைவுச் சின்னங்கள் பல கிடைத் துள்ளன. எனவே, கிரேக்க நாகரிகத்தின் அடிப்படையாக விளங்கிய மைசீனிய நாகரிகமானது ஒரு காலத்தே கிரீஸ் நாடு அனைத்திலும் பரவி இருந்ததோடு அதன் அருகிலிருக்கும் தீவு களிலும் பரவி இருந்ததாகத் தெரிகிறது.

### ஏனைய நாகரிகங்களுடன் தொடர்பு

தனக்கே உரிய தனிப் பண்புகளுடன் மைசீனிய நாகரிக மானது விளங்கியபோதிலும், கிரீட், எகிப்து போன்ற இடங்களில்

பொலிவுடன் திகழ்ந்த பண்டைய நாகரிகங்களின் சாயை அதன் பால் பெரிதும் படர்ந்துள்ளதை நாம் எளிதில் கண்டு கொள்ளலாம். தீம்ஸ் நகரச் சுவரோவியங்களில் வரையப்பெற்றுள்ள ஜாடிகள் எகிப்தில் கி.மு. 16ஆம் நூற்றுண்டில் புழக்கத்திலிருந்த ஜாடிகளைப் பெரிதும் ஒத்திருந்தன. மைசீனிய நகரத்துக் கல்லறைகளில் கிடைத்துள்ள பீங்கான் துண்டுகளில் எகிப்திய மன்னனை மூன்றும் அமன்ஹோடெப் (Amenhotep III) என்பாரின் பெயரும், அவரது இராணியாரின் பெயரும், அவரது புனித அடையாளச் சின்னமான வண்டின் உருவமும், ரோண்ட்ஸ் தீவிலும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. எனவே, இம் மன்னனது ஆட்சிக் காலத்தே எகிப்துக்கும், கிரீசுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்திருக்க வேண்டுமென்பது நன்கு புலப்படுகின்றது. மைசீனியாவில் தொடக்கத்தில் எழுந்த கல்லறைகளில் எகிப்திய ஓவியமொன்று ஆற்றில் செம்படவர்கள் வாத்துகளைக் கண்ணி வைத்துப் பிடிப்பதுபோன்று வரையப்பட்டுள்ளது. அந்த ஆறு, நைல் நதியையே நமக்கு நினைவூட்டுகிறது. மைசீனியா, டிரின்ஸ் ஆகிய இரு பட்டணங்களிலும் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ள இரு அரண்மனைகள் பண்டைய எகிப்திய அரண்மனைகளின் வடிவிலேயே கட்டப்பட்டுள்ளன. மைசீனிய அரண்மனையில் காணப்படும் சிம்ம வாசலில் சமைக்கப்பட்டுள்ள சிங்கங்கள் எகிப்திய சிம்மச் சிலைகளை ஒத்துள்ளன. எகிப்திய கல்லறைக் கூரைகளின் அமைப்பும் அவற்றில் வரையப்பட்டுள்ள ஓவியங்களும் மைசீனியா, டிரின்ஸ் நகர அரண்மனைகளில் அப்படியே எடுத்துக் கையாளப் பட்டுள்ளன.

எகிப்திய நாகரிகத்தைவிட, கிரீட் தீவின் நாகரிகப் பண்புகளே மைசீனிய நாகரிகத்தில் பெரிதும் விரவியிருக்கக் காண்கிறோம். டிரின்ஸ் நகர அரண்மனையில் காணப்படும் சுவரோவியங்கள் கிரீட் தீவின் கல்லறைகளில் காணப்படும் ஓவியங்களைப் பெரிதும் ஒத்துள்ளன. அரண்மனையைச் சுற்றியுள்ள மதிற் சுவர்கள் கிரீட்டிலிருந்து வந்த சிற்பிகளாலேயே கட்டப்பட்டிருக்க வேண்டுமெனத் தெரிகிறது. மைசீனியக் கல்லறைகளின் அமைப்பும் கிரீட் தீவுக் கல்லறைகளின் அமைப்பும் ஏறக்குறைய ஒன்றுகவே இருக்கின்றன. உருளைவடிவமாகப் பாறைகளில் குடைந்தெடுக்கப்பட்டுள்ள கல்லறைகள், பளபளப்பில்லாத மட்பாண்டங்கள், குராப் (Gurab) நகரத்தில் காணப்படும் போலிக் கழுத்துடைய ஜாடிகள், காளைச் சண்டைகளைச் சித்திரிக்கும் சுவரோவியங்கள் ஆகியவை எல்லாம் கிரீட் தீவுகளிலிருந்து வந்தவைகளேயன்றி வேறல்ல. கி.மு. 1600 முதல் 1400 வரை இங்ஙனம் கிரீட்டின் நாகரிகப் பண்புகள் கிரீஸில் விரைந்து பரவிவந்தன. கி.மு. 1400-லிருந்து 1200-க்குள் மைசீனியா தனக்கே உரிய சில சிறப்பியல்புகளை ஏற்படுத்திக்

கொண்டது. எனினும், கிரீட்டின் செல்வாக்கை நினைவுபடுத்தும் பெயர்கள் பல கிரீஸில் இன்றும் காணப்படுகின்றன. மெகாராவுக்கு எதிரிலுள்ள மினோவா (Minova) தீவு, மினுஸ் என்னும் ஈஜியத் தீவிலிருந்து வந்தவர்களின் குடியேற்ற நாடெனவே தோன்றுகிறது. கிரேக்கப் புராணப்படி, தீப்ஸ் நாட்டை உருவாக்கியவர்களாகக் கருதப்படுபவர்கள் கேட்மஸ் (Cadmus) என்பவரும், அவரது மனைவியான யூரோபா (Europa) என்பவருமாவார். யூரோபா என்பார் மினுஸ்(Minos) என்பவரின் தாய்; ஃபோனிக்ஸ் (Phoenix) என்பவரின் மகள். கிரீட் மக்களுக்கு இன்னொரு பெயர் போனிக்ஸ் என்பதாகும். 'சிவந்த கேசத்தை உடையவர்' என்பது அதன் பொருள். எனவே, ஃபோனிக்ஸ், யூரோபா முதலியவர்கள் கிரீட்தீவு தேவதைகளின் உருவகமென்றே தெரிகிறது. கேட்மஸ் என்பவரே தீப்ஸில் எழுத்துகளை உருவாக்கினர் என்ற கதையிலிருந்து கிரீட் மக்களே கிரீஸில் எழுத்துகளைப் புகுத்தினர் என அறியலாம். கிரீட்மன்னர்களின் ஆதரவிலேயே மைசீனிய நாகரிகத்தின் உறைவிடங்கள் பலவும் கிரீஸ் நாட்டில் தோன்றியிருக்கக் கூடும். ஆரம்பத்தில் அவை கிரீட் அரசருக்குக் கப்பம் கட்டிக் கொண்டு இருந்திருக்கலாம். நாளடைவில் அவை கிரீட்டைவிட வலிமை பெற்று, அதன் மேலாண்மையைப் புறக்கணித்துவிட்டுச் சுயேச்சையை அடைந்திருக்கக் கூடும். எனவே, வெண்கலக் காலத்தைச் சேர்ந்த மைசீனிய நாகரிகமானது, கற்காலத்தைச் சேர்ந்த கிரீட்டன் நாகரிகத்திற்குப் பல்லாற்றுனும் கடமைப்பட்டுள்ளதென்பதில் சிறிதும் ஐயமில்லை.

# 8. பண்டைய சீன நாகரிகம்

நதிதீரங்களில் தோன்றி வளர்ந்த பண்டைய நாகரிகங்களுள் சீன நாகரிகமும் ஒன்றாகும். நமது அண்டை நாடான சீனா நமது இந்தியாவைப் போன்றே மிகப் பழங்காலத்திலேயே உயர்ந்த நாகரிகத்தில் திளைத்தது என்பது வரலாறு கண்ட உண்மையாகும். ஐரோப்பிய நாகரிகத்துக்கு அடிகோலிய கிரேக்கர்கள் காட்டு மிராண்டிகளாய்க் காடுகளில் திரிந்துவந்த காலத்தில் சீனாவில் நல்லதொரு நாகரிக அடிப்படையில் சமூகம் அமைந்திருந்தது என அறிகிறோம். அதனாற்றான் சீனர்கள் தங்களை உலகிலுள்ள எந்த மக்களையும் விட உயர்ந்த பண்பாடும் நாகரிகமும் உடையவர்கள் என்று கூறிக் கொண்டனர். அது மட்டுமின்றி உலகிலுள்ள ஏனைய மக்கள் யாவரும் தங்களைவிட நாகரிகத்தில் குறைந்தவர்கள் என்பதும் அவர்களது எண்ணமாகும். கி.பி. 1860ஆம் ஆண்டு வரை சீனாவின் ஏடுகள் அன்னியர்களைக் 'காட்டுமிராண்டிகள்' என்ற சொல்லாலேயே குறித்தன. ஒருவகையில் இது ஓர் தற்பெருமையே என்றாலும் ஓரளவு உண்மையும் அதில் அடங்கி யுள்ளது என்பதில் ஐயமில்லை.

கி.மு. 1700ஆம் ஆண்டளவிலேயே சீனர்கள் அழகிய கவிதைகளை இயற்றும் வன்மை பெற்று விளங்கினர். அவர்க ளுடைய தத்துவங்கள் மிகப் பழமையானவை. அநுபவத்துக்கு ஏற்றவை. அவர்களுடைய மட்பாண்டங்களும், ஓவியங்களும், சிற்பங்களும் உலகப் பிரசித்தி பெற்றவை. நன்கு அமைக்கப் பெற்ற ஒரு சமுதாயத்தையும் அதை ஒழுங்குபடுத்தும் நல்ல அறநெறிகளையும் அரசாங்கத்தையும் அவர்கள் மிகப் பழங்காலத் திலேயே பெற்றிருந்தார்கள். மேலை நாடுகளின் தொடர்பு ஏற்படாத காரணத்தால் அவர்களது நாகரிகம் ஓரளவு தேக்கமுற்றது. மற்றபடி பண்டைய நாகரிகங்களுள் சீன நாகரிகம் ஒரு பெருமைக் குரிய இடத்தைப் பெற்றுள்ளது என்பதில் ஐயமில்லை.

***பண்டைய சீனாவின் வரலாறு***

'வரலாற்றாசிரியர்களின் சொர்க்கம்' என்று சீனாவை அழைப்பது வழக்கம். ஏனெனில், ஆதிகாலத்திலிருந்தே சீனப் பேரரசர்கள் அதிகாரபூர்வமான வரலாற்றாசிரியர்களைத் தங்களது

அரண்மனைகளில் வைத்திருந்தனர். அவர்கள் சீன வரலாற்றை முறையே எழுதி வைத்திருக்கிறார்கள். ஆனால், அவற்றில் நம்பத் தகாத பல மிகைப்படுத்தப்பட்ட நிகழ்ச்சிகள் பேசப்படுகின்றன. இன்றைய சீன மக்களின் மூதாதையர் ஹ்வாங்கோ (Hoang-ho) யாங்க்ட்-சிகியாங் (Yang-tze-Kiang) என்ற இரு பெரும் நதிகளின் செழிப்பான பள்ளத்தாக்குகளிலேயே ஆதியில் வாழ்ந்தனர். அவர்கள் எங்கிருந்து எப்போது சீனாவுக்கு வந்தனர் என்பதைத் திட்டவட்டமாகக் கூறுவதற்கான சான்றுகள் இன்னும் கிடைக்க வில்லை. அநேகமாக அவர்கள் மத்திய ஆசியாவிலுள்ள தாரிம் (Tarim) நதிப் பள்ளத்தாக்கிலிருந்து புறப்பட்டு வந்த ஒரு நாடோடிக் கும்பலாக இருக்கக்கூடும் என்று ஒருசிலர் கருது கின்றனர். ஆனால், அவர்கள் நாடோடிகளாய்த் திரிந்தார்கள் என்பதற்குத் தக்க சான்றுகள் எதுவுமில்லை. ஆதியிலிருந்தே அவர்கள் நிலைத்த வாழ்க்கையினராக வாழ்ந்துவந்ததாகவே நாம் அறிகிறோம். மஞ்சள் நதி எனப்படும் ஹ்வாங்கோ நதிதீரத்தில் தான் சீன நாகரிகம் அரும்பியது. மனிதனது நாகரிகப் பண்பை வெளிக்கொணரத்தக்க சூழ்நிலைகள் அங்குதான் இருந்தன என்பது டாயின்பி (Toynbee) போன்ற ஆசிரியர்களின் கருத் தாகும். அங்குதான் இயற்கை மனிதனுக்குச் சவால் (challenge) விடுத்தது. இருண்ட காடுகளும், கொடிய விலங்கினங்களும், சதுப்பு நிலங்களும், வெள்ளங்களின் கொடுமைகளும் சேர்ந்து மனிதனது முயற்சியைத் தூண்டிவிட்டன. முயற்சியின் விளைவாகவே வேளாண்மையும், நிலைத்த சமுதாய வாழ்க்கையும் நாளடைவில் ஏற்பட்டது. ஆனால், யாங்க்ட் - சிகியாங் நதிக்கரை யில் வாழ்க்கை மிக எளிதில் நடைபெறக் கூடியதாய் இருந்தது. எனவே, அங்கு வாழ்ந்த மனிதன் சோம்பேறியாயும், சுகபோகி யாயும் மாறினான். ஒரு நாகரிகத்தை அவனால் தோற்றுவிக்க முடியவில்லை. மிக ஆதிகாலத்திலேயே மக்களினம் சீனாவில் வாழ்ந்ததென்பதற்குப் பல சான்றுகள் பீகிங் நகருக்கருகில் கிடைத் துள்ளன. சீன வரலாற்றின்படி கி.மு. மூவாயிரத்தில்தான் சீனாவில் மனிதன் தோன்றுகிறான். முதன்முதல் தோன்றிய மனிதன் பங்கூ (Panku) என்ற பெயர் கொண்டவன். அவனே சீனாவின் முதல் அரசனுமாவான். இவ் வுலகிலுள்ள பொருள்கள் அனைத்தையும் அவனே உண்டாக்கினான் எனக் கருதப்படுகிறது. அவனுக்குப்பின் ஹிசியா (Hsia) வமிசத்தைச் சேர்ந்த அவனது சகோதரர்கள் சீனாவில் ஆட்சி புரிந்தனர். அவர்கள் 'விண்ணுலக வேந்தர்கள்' (Celestial Emperors) என்று அழைக்கப்படு கின்றனர். அவர்கள் ஒவ்வொருவரும் பதினெட்டாயிரம் ஆண்டுகள் சீனாவை ஆண்டதாகக் கூறப்படுகிறது. அப்போது மக்கள்

யாவரும் நீதியும் நேர்மையும் கொண்டவர்களாயிருந்தனர். விண்ணுலக வேந்தர்கள் பதினெட்டு பேர் ஆண்டனர். அவர்களுக்குப்பின் பதினொரு மண்ணுலக வேந்தர்கள் (Terrestrial Emperors) சீனாவை ஆண்டார்கள். அவர்களுக்குப்பின் ஒன்பது மானுடப் பேரரசர்கள் நாட்டை ஆண்டார்கள். இத்தகைய புராணக் கதைகள், சீன சமுதாயமானது பழங் கற்கால நாகரிகத்திலிருந்து புதிய கற்கால நாகரிகத்துக்கு எவ்வாறு சிறிது சிறிதாக மாறியது என்பதையே நமக்கு எடுத்துக்காட்டுகின்றன.

***விண்ணுலக வேந்தர்கள்* (Celestial Emperors)**

சீனாவின் ஆதி அரசர்களான விண்ணுலக வேந்தர்கள்தான் சீனாவில் நாகரிக வாழ்க்கையைத் தோற்றுவித்தவர்கள் எனக் கூறப்படுகிறது. காடுகளில் ஆடுமாடுகள் போல் அலைந்துகொண்டிருந்த சீனக்குடிமக்கள் இவர்கள் காலத்தில்தான் நாகரிகப் பாதையில் நடைபோட ஆரம்பித்தனர். நெருப்பின் பயனையும் விவசாய முறையையும் நாட்டில் புகுத்தியவர்கள் இவர்களே யாவர். விண்ணுலக வேந்தர்களில் முக்கியமானவர்கள் ஐந்து பேராவர். அவர்களுள் முதற் பேரரசரான ஃபுஹ்ஸ் (Fu Hs) என்பாரும் அவரது இராணியும் மக்களுக்கு இசை, ஓவியம், எழுத்துக்கலை, திருமணமுறை, காட்டுமிருகங்களை வீட்டு மிருகங்களாகப் பழக்கும் திறமை, பட்டுப் புழுக்களை வளர்க்கும் வகை முதலியவற்றைக் கற்பித்தார்கள். இரண்டாவது பேரரசரான ஷென்நுங் (Shen Nung) காலத்து விவசாயம், வாணிபம், மருத்துவக்கலை முதலியன நாட்டில் வளர்க்கப்பட்டன. ஹுயாங்டி (Huang - Ti) என்ற மூன்றும் பேரரசர் செங்கல்லாலாய வீடுகளையும், வானியல் ஆராய்ச்சிக் கூடங்களையும் கட்டினார். சக்கரங்கள், காந்தக்கல் இவற்றின் பயனை மக்களறியுமாறு செய்தவரும், நாள்காட்டியைத் (Calender) திருத்தி அமைத்தவரும் அவரே. நான்காம் பேரரசரான யாவ் (Yao) என்பார் நீதிவழுவா நெறியினர். சீனா நாட்டு மனுநீதிச் சோழனென அவரை அழைத்தல் தகும். அவரது அரண்மனையின் முற்றத்தில் ஒரு முரசு சதா வைக்கப்பட்டிருந்தது. மன்னனிடம் முறையிட்டுக்கொள்ள விரும்புகிறவர்கள் அம் முரசை அடித்தால் போதும். அக்கணமே அரசன் ஓடோடியும் வந்து அவர்களுக்கு முறை செய்வான். ஐந்தாவது அரசரான ஷன் (Shun) என்பார் யு (Yu) எனும் பொறியியல் வல்லுநரின் துணைகொண்டு ஒன்பது நதிகளின் வெள்ளங்களைக் கட்டுப்படுத்தி நாட்டில் நீர்ப்பாசன வசதியைப் பெருக்கினார். நெல், திராட்சை முதலியன நாட்டில் முதன்முதலாகப் பயிர்செய்யப்பட்டன. இவ் வைந்து தெய்வீகப் பேரரசர்களும் ஆளுக்கு நூறு நூறு ஆண்டுகள்

நாட்டை ஆண்டனர். கி.மு. 3000லிருந்து கி.மு. 2500 வரை இவர்கள் ஆண்டதாக எண்ணப்படுகிறது. அவர்களுக்குப் பின் நாட்டில் குழப்பம் மேலிட்டது. அதன் முடிவில் ஷாங் (Shang) வமிசத்தவர் ஆட்சியைக் கைப்பற்றினர்.

### ஷாங் வமிசம்

ஷாங் மன்னர்கள் கி.மு. 1700 முதல் கி.மு. 1125 வரை அரசாண்டனர். அவர்கள் மது, மங்கை ஆகிய இருவகை சிற்றின்பங்களில் பெரிதும் ஈடுபட்டனர். அன்னாரின் ராணிகளிடம் குரூரமும், ஒழுக்கமின்மையும் தலைவிரித்தாடின. வூயி (Wuyi) என்ற ஒரு ராணி நாத்தழும்பேற நாத்திகம் பேசினாள். தோற்பை ஒன்றை இறைவனுக்குப் படைத்து அதன் மீது அம்புகளை எய்யுமாறு செய்தாள். சௌஹிசின் (Chow Hsin) என்ற மன்னர், சீனர்கள் இன்றைக்கும் உணவுண்ணப் பயன்படுத்தி வருகிற தந்தத்தாலாய குச்சிகளைக் கண்டுபிடித்தார். அவரது ராணி தனது விரோதிகளைத் தீயிலிட்டுக் கொளுத்தினார். நிர்வாண நடனங்களை நாடெங்கும் ஏற்படுத்தினாள்.

### சௌ வமிசம்

ஷாங் வமிசத்துக்குப் பின்பு சௌ (Chow) வம்சம் ஆட்சியைக் கைப்பற்றியது. அது கி.மு. 1122 முதல் கி.மு. 225 வரை நாட்டை ஆண்டது. இக்காலத்தே சீனாவை, மங்கோலியர், டார்ட்டார்கள், ஹன்கள் முதலிய முரட்டு வகுப்பினர் தாக்கிய வண்ணமிருந்தனர். நாடு அல்லோலகல்லோலப்பட்டது. எல்லைப்புற கனவான்கள் மீதே அவ் வகுப்பினரைத் தடுக்கும் பெரும்பொறுப்பு வீழ்ந்தது. எனவே, அவர்களது கைகள் வலுத்தன. மத்திய அரசரது மதிப்புக் குறைந்தது. ஒருவகையான நிலமானிய முறை நாடெங்கும் தோன்றியது. நிலமானியப் பிரபுக்களுடைய ஆதிக்கம் வளர்ந்தது. இக் காலத்தை நிலமானிய காலம் என்றும் குழப்பமான காலம் என்றும் வரலாற்றாசிரியர்கள் கூறுவர். ஆனால், இக்காலத்தில்தான் சீன நாகரிகத்தின் அடிப்படைகள் அமைக்கப்பட்டன. லாவோசே (Lao-Tse), கன்பூஷியஸ் (Confucius) போன்ற தத்துவ மேதைகள் தோன்றிய காலம் இதுவே. உலகப் பிரசித்தி பெற்ற சீனப்பட்டும், வெண்கலப் பாத்திரங்களும் இக்காலத்தே உற்பத்தி செய்யப்பட்டன. கல்வி மக்களிடையே நன்கு பரவியது. ஆனால், நாளடைவில் சௌ வம்சம் சீர்குலைந்தது. நிலமானிய சிற்றரசர்கள் ஓயாது தமக்குள் போரிட்டனர். நாட்டில் அமைதியும், ஒழுங்கும் குலைந்தது. அச்சமயத்தே ஷிஹ் ஹுவாங் டி (Shih Hung Ti) என்ற ஓர் தளபதி தோன்றி, மற்றப் பிரபுக்களையெல்லாம் வென்று

அரசைக் கைப்பற்றிக்கொண்டார் (கி.மு. 249). அவர் சின் என்ற மாகாணத்தைச் சேர்ந்தவர். எனவே, அவரது வமிசம் சின் வமிசம் (Chin Dynasty) எனப்பட்டது. சீனு என்ற நாட்டின் பெயர் அதிலிருந்தே தோன்றியது.

*ஷிஹ்-ஹுவாங்-டி* (Shih Hwang Ti) (250—210 கி.மு.)

ஷிஹ் ஹுவாங் டி என்பார் சீனுவின் சந்திரகுப்தர் என அழைக்கப்படுகிருர். அவரே சீனுவின் முதற் பேரரசர். அவர் காலத்தே நிலமானிய முறை நாட்டில் ஒழிந்தது. பிரபுக்கள் யாவரும் ஒடுக்கப்பட்டனர். நாட்டை முப்பத்தாறு மாநிலங்க ளாகப் பிரித்து ஒவ்வொன்றிலும் தனக்கு வேண்டியவர்களே ஆளுந ராக நியமித்துத் தனிப்படை ஒன்றை நிறுவி அதன் மூலம் நாட்டில் அமைதியை நிலைநாட்டினுர். வலிமை மிக்க மத்திய சேனையை அவர் ஏற்படுத்தி அதன் துணைகொண்டு யாங்க்ட்சி நதிக்குத் தெற்கே உள்ள பகுதிகளை அவர் வென்ருர். அணைகளையும், பாதை களையும், கால்வாய்களையும் நாடெங்கும் ஏற்படுத்தி நாகரிகத்தைப் பெருக்கினுர். நாடனைத்துக்கும் ஒரே மொழி, ஒரே நாணயம், ஒரே சட்டம், ஒரே ஆட்சிமுறை என்ற நிலையை ஏற்படுத்தியவர் அவரே. எனவே, நாட்டில் ஒற்றுமை வளர்ந்தது. மற்றும் டார்டார்கள், ஹுன்கள் போன்ற முரட்டு வகுப்பினரின் படையெடுப்புகளைத் தடுக்க அவர் சீனுவின் பெருமதிற்சுவர் (The Great Wall of China) என்று அழைக்கப்படும் நீண்ட சுவரை சீன எல்லையில் கட்டுவித் தார். அதன் நீளம் 2250 மைல்களாகும். உயரம் 15 முதல் 20 அடிகளாகும். ஆயிரக்கணக்கான அடிமைகளைக் கொண்டு அச் சுவர் கட்டப்பட்டது. ஏராளமான அடிமைகள் அதற்கு பலிகொடுக்கப் பட்டனர். எனினும், அதனுல் முரட்டு வகுப்பினரின் அபாயம் ஒரு வாறு ஓய்ந்தது. இத்தகைய நன்மைகளைச் செய்த ஹுவாங்டி ஒரு தீமையையும் புரிந்தார். நாட்டில் ஒழுங்கின்மை தாண்டவ மாடியதற்குக் காரணம் கன்பூஷியஸின் போதனைகளே என்று நினைத்து அவரது நூல்களையெல்லாம் தீயிட்டுக் கொளுத்தும்படி அவர் உத்தரவிட்டார். கன்பூஷியஸைப் பின்பற்றிய பலர் கொல்லப்பட்டனர். அல்லது நாடு கடத்தப்பட்டனர். அவர் உயிரோடு இருக்கும்வரை யாரும் அவரை எதிர்க்க முன்வரவில்லை. ஆனுல், அவர் இறந்தவுடன் நாட்டில் எங்குப் பார்த்தாலும் கலவரம் தலைதூக்கியது. அரியணையைக் கைப்பற்றப் பலர் போட்டியிட் டனர். இதன் விளைவாக ஹான் (Han) நாட்டைச் சேர்ந்த ஒரு குடியானவர் நாட்டின் அரசரானுர். அவரும் அவரது சந்ததி யினரும் நான்கு நூற்ருண்டுகள் வரை நாட்டை ஆட்சி புரிந்தனர்.

**ஹான் வமிசம் (கி.மு. 256— கி.பி. 220)**

ஹான் வமிசத்து அரசர்களின் காலத்தில் நாடு பலவகையிலும் முன்னேறியது. கன்பூஷியஸின் கொள்கைகள் மீண்டும் தலையெடுத்தன. போட்டித் தேர்வு மூலம் அதிகாரிகள் பொறுக்கப் பட்டனர். தகுதிக்கேற்றபடியே பதவிகள் வழங்கப்பட்டன. வாணிபமும், பொருளாதாரமும் நன்கு வளர்ச்சியடைந்தது. சீன வரலாறு முறையாக எழுதப்பட்ட காலம் இதுவேயாம். சீன மொழியில் ஓர் பேரகராதி இக் காலத்தில் தொகுக்கப்பட்டது. வூ-டி (Wu-ti) என்ற பேரரசர் காலத்தில் யாங்க்ட்சி நதிக்குத் தெற்கே உள்ள பகுதியும், கொரியாவும் சீனாவுடன் சேர்க்கப்பட்டன. மேலை நாடுகளுடன் வாணிபம் இக்காலத்தே நன்கு வளர்ந்தது. சீனாவின் பட்டு கிரேக்க, ரோமானிய நாடுகளில் நன்கு விலைபோகியது. குதிரைகள், விலையுயர்ந்த கற்கள் முதலியவை மேல் நாட்டிலிருந்து சீனாவிற்கு இறக்குமதி செய்யப்பட்டன. இந்தியாவுடனும் சீனர் களுக்குத் தொடர்பு ஏற்பட்டது. பௌத்த மதம் சீனாவில் பரவ ஆரம்பித்தது. காகிதமும், எழுதுகோலும், மையும் இவர்கள் காலத்தே நன்கு வழக்காற்றுக்கு வந்ததன் விளைவாக சீன இலக்கியமும் நன்கு வளரலாயிற்று. போட்டித் தேர்வுகள் மூலமே அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். எனினும் நாளடைவில் பலமற்ற அரசர்களின் வருகையின் காரணத்தால் ஹான் வமிசம் கி.பி. 220-ல் வீழ்ச்சியுற்றது. உள்நாட்டுப் போர்கள் மீண்டும் தலையெடுத்தன. காட்டுமிராண்டிகள் நாட்டை அலைக்கழித்தனர். ஆறும் நூற்றாண்டு வரை சீன வரலாற்றில் ஓர் இருண்டகாலம் ஏற்பட்டது. ஏழாம் நூற்றாண்டில்தான் மீண்டும் சீனா எழுச்சியுற்றது.

**டாங் வமிசம் (Tang Dynasty)**

டாங் (Tang) வமிசத்தினர் கி.பி. 608 முதல் கி.பி. 907 வரை சீனாவில் கோலோச்சினர். இவர்களது காலத்தில் சீனாவின் எல்லை பெரிதும் விரிந்தது. அரேபியா, பாரசீகம் போன்ற நாடுகளோடு வாணிபம் பெருகியது. இலக்கியம், கவிதை, சிற்பம், ஓவியம் முதலிய கலைகளில் பெருத்த முன்னேற்றம் ஏற்பட்டது. பட்டு உற்பத்திக் கலையை ஐரோப்பியர்கள் சீனர்களிட மிருந்து அறிந்த காலமும் இதுவே. நிலமார்க்கமாக வணிகர்களின் கூட்டங்கள் ஆசியாவிற்கும் ஐரோப்பாவிற்கும் இடையே சதா போய்க்கொண்டிருந்தன. கடல் மூலமாகவும், வாணிபம் நடைபெற்றது. கல்வித்துறையில் பெரிதும் முன்னேற்றம் காணப் பட்டது.

லி போ, டுஃபூ (Li-Po, Tu-Fu) போன்ற பெருங் கவிஞர்கள் இக்காலத்திலேயே சீனாவில் வாழ்ந்தனர். பீங்கான், தங்கம்,

வெண்கலம் ஆகிய பொருள்களின்மீது அழகிய சித்திரங்கள் பொறிக்கப்பட்டதும், பட்டுத் துணிகளின்மீது அழகிய ஓவியங்கள் எழுதப்பட்டதும் இக்காலத்தில்தாளுகும். நூல்களை அச்சிட்டு வெளியிடும் முறையை சீனர்கள் கண்டுபிடித்தனர். எனினும், செல்வந்தர்கள் சேர்ந்துகொண்டு ஏழைகளை வருத்திய காரணத்தால் பல கலவரங்கள் தோன்றி டாங் வமிசம் வீழ்ச்சியுற்றது. அதன்பின் சுங் (Sung) வமிசம் கி.பி. 960 முதல் கி.பி. 1280 வரை ஆட்சி புரிந்தது. இக்காலத்தே ஏராளமான நூல்கள் அச்சிடப்பட்டன. பீங்கான் பாத்திரங்களும், இயற்கை ஓவியங்களும், உலகப் புகழ் பெற்றன. செல்வத்துக்கு ஏற்றபடி வரிபோடும் வழக்கத்தை வாங் (Wang) எனும் சீர்திருத்தவாதி கொண்டு வந்தார். ஆனுல், அது நடைமுறையில் நிறைவேற்றப்படவில்லை. இவர்கள் காலத்தில் டார்டார்கள் சீனுவைத் தாக்கினர். அவர்களை விரட்டியடிக்க மங்கோலியர்களின் உதவியை சீன அரசர்கள் வேண்டினர். செங்கிஸ்கான் (Chengizkhan) எனும் மங்கோலியத் தலைவர் டார்டார்களை விரட்டியடித்து சீனுவைக் காப்பாற்றினுர். அவரது பேரனுன குப்ளேகான் (Kublaikhan) சுங் வமிசத்தினரை வென்று சீனுவைக் கைப்பற்றிக் கொண்டார். அவர் காலத்தில் தான் பீகிங் (Peking) சீனுவின் தலைநகராயிற்று. ஐரோப்பிய மதகுருமார்களையும், வியாபாரிகளையும் அவர் தாராளமாக நாட்டுக்குள் அனுமதித்தார். மார்க்கோபோலோ (Marco Polo) எனும் வெனீஷியப் பயணி இவர் காலத்தே சீனுவிற்கு வந்து பல நாட்கள் தங்கி, பின்னர் அந் நாட்டின் பெருமைகளைப்பற்றி ஒப்பற்ற குறிப்புகளை எழுதிவைத்துள்ளார். அதைப் படித்த ஐரோப்பியர்கள் சீனுவோடு வியாபாரம் செய்யத் துடித்தனர். அதன் விளைவாகவே பின்னர் கடல் வழிகள் பல சீனுவுக்குக் கண்டுபிடிக்கப்பட்டன. கி.பி. 1368-ல் மங்கோலியர்களை மிங் (Ming) வமிசத்தவர்கள் துரத்தி விட்டு சுதேசி ஆட்சியை ஏற்படுத்தினர். கி.பி. 1644வரை அவர்கள் சீனுவை ஆண்டனர்.

*நிலமானிய கால சீன நாகரிகம்*

நிலமானிய முறை சீனுவில் ஏறக்குறைய 1000 ஆண்டுகள் நீடித்தது. 1700க்கும் மேற்பட்ட விவசாய சமுதாயங்கள் அதில் காணப்பட்டன. ஒவ்வொரு சமுதாயமும் மதிலால் சூழப்பட்ட ஓர் நகருக்குள் வசித்தது. மதிலைச் சுற்றியும் வயல்வெளிகள் இருந்தன. இச் சமுதாயங்கள் நாளடைவில் ஒருங்கிணைந்து 55 சிறு சிறு அரசுகளாக மாறின. அவற்றுள் ட்சி (Ts'i) எனும் அரசு மிகப் புகழ் பெற்றது. சீன அரசாங்கத்தின் அடிப்படைகள் அங்குதான் தோன்றின. அதை ஆண்ட ஹுவான் (Huan) என்ற மன்னரும் குயான் சுங் (Kuan Chung) என்ற அவரது அமைச்சரும் நாட்டில்

பல முன்னேற்றங்களை ஏற்படுத்தினர். வெண்கலத்துக்குப் பதிலாக இரும்பை அவர்கள்தான் புழக்கத்துக்குக் கொணர்ந்தவர்கள். படைக் கருவிகள் யாவும் இரும்பாலேயே செய்யப்பட்டன. செல்வந்தர்கள்மீது வரி விதித்து அப் பணத்தைக் கொண்டு ஏழைகளின் நலனை அவர்கள் ஓம்பினர். மீன், உப்பு ஆகியவைமீது வரிகள் விதிக்கப்பட்டன. நிலையான மதிப்புடைய நாணயங்கள் வியாபாரத்தில் பயன்படுத்தப்பட்டன. ஆட்சிமுறை மிகத் திறம்பட இக்காலத்தே நடைபெற்றது.

### மரபும் சட்டமும்

நிலமானிய நீதிமன்றங்கள் சீன கனவானுக்குரிய பல மரியாதை முறைகளையும் சடங்குகளையும் ஏற்படுத்தின. மக்களின் பண்டைய பழக்க வழக்கங்களை அவை ஏற்று அவற்றின்படி தீர்ப்புகளை வழங்கின. ஒரு சில அரசுகள் சட்டத் தொகுதிகளை ஏற்படுத்தின. பழங்கால மரபுகளுக்கு அவை முரண்பட்டவை எனக் கூறி மக்கள் அவற்றை எதிர்த்தனர். மற்றும் செல்வாக்கு மிக்கவர்களுக்குத் தண்டனைகளினின்றும் விலக்கு அளிக்கப்பட்டது. அவர்கள் தங்களைத் தாங்களே கட்டுப்படுத்திக் கொண்டார்கள். மானமிழந்தவுடன் அவர்கள் தற்கொலை செய்துகொண்டு இறந்தனர். இங்ஙனம் பாரபட்சமான நீதி முறையைச் சாதாரண மக்கள் எதிர்த்தார்கள். இறுதியில் சட்டங்களுக்கும் மரபுகளுக்கும் ஓர் சமரசம் ஏற்பட்டது. அன்றாட காரியங்கள் பற்றிய வழக்குகளில் பண்டைய மரபுகளும், நாடு பற்றிய பெரிய வழக்குகளில் சட்டங்களும் கடைப்பிடிக்கப்பட வேண்டுமென ஓர் ஏற்பாடு செய்யப்பட்டது. அதை எல்லாச் சிறிய அரசுகளும் ஏற்றுக்கொண்டன.

### அரசாங்கம்

நிலமானிய அரசர்கள் தமக்குள் ஓயாது போரிட்ட வண்ணமிருந்தனர். இதனால் பலர் உயிரிழந்தனர். எங்கும் குழப்பமே நிலவியது. எனினும், சீனப் பேரரசர், சிற்றரசர்களால் மதிக்கப்பட்டார். 'விண்ணுலகின் மைந்தன்' (Son of Heaven) என அவர் அழைக்கப்பட்டார். அவருக்கு உதவியாக ஆறு அமைச்சரவைகள் இருந்தன. அவை முறையே பேரரசரின் அன்றாட கடமைகளையும், மக்களின் நலன்களையும், சமயச் சடங்குகளையும், போர் நடத்தலையும், நீதி வழங்குவதையும், பொதுப் பணிகளையும் கவனித்துக் கொண்டன.

### மக்கள் வாழ்க்கை

நாட்டுப் புறங்களில் குடியானவர்கள் அமைதியாக நிலத்தை உழுது வாழ்ந்தனர். அரசியல் குழப்பம் அவர்களைப் பாதிக்கவில்லை.

உழுபவனுக்கே நிலம் சொந்தமாயிருந்தது. பெரும் பண்ணைகளுக்குச் சொந்தக்காரராயிருந்த நிலக்கிழார்கள் குடியானவர்களைக் கொண்டு நிலத்தை உழுதனர். அவர்களைக் கொண்டே கால்வாய்களை வெட்டிக்கொண்டனர். பாதைகளை அமைத்துக்கொண்டனர். பட்டு உற்பத்தித் தொழிலை, அன்னார் வளர்த்தனர். மீன் பிடித்தல், சுரங்கத் தொழில், உப்புக் காய்ச்சல் போன்ற தொழில்கள் அரசின் தனியுரிமைகளாய் விளங்கின. உள் நாட்டு வாணிபம் நன்கு வளர்ச்சியடைந்தது. செல்வந்தர்கள் தோலாலாய மிதியடிகளையும், பட்டாலாய துணிகளையும் அணிந்து கொண்டனர். வண்டிகளிலும், ரதங்களிலும் அவர்கள் பயணம் செய்தனர். ஆறுகளைக் கடக்கப் படகுகள் பயன்படுத்தப்பட்டன. அவர்களின் வீடுகளில் மேஜைகளும், நாற்காலிகளும், அழகான மட்பாண்டங்களும் இருந்தன. அழகிய பூவேலைப்பாடுகள் நிறைந்த தட்டுகளில் அவர்கள் உணவருந்தினர்.

**கலை வளர்ச்சி**

இக்காலத்தில்தான் சீனர்களின் மொழி வளம் பெற்றது. இலக்கியங்கள் பல படைக்கப்பட்டன. தத்துவ முறைகள் பல எழுந்தன. கவிஞர்கள் கவி பாடினர். குயவர்கள் அழகிய பாண்டங்களை வனைந்தனர். தச்சர்கள் பெரிய வீடுகளைக் கட்டினர். கன்னார்கள் பல பெரும் பெரும் பாத்திரங்களைச் செய்தனர். எழுத்தர்கள் கண்களில் ஒற்றிக்கொள்ளத்தக்க அழகிய சித்திர எழுத்துகளை எழுதினர். இக்காலத்திய நாடக இசைப் பாடல்களை (Odes) கன்பூஷியஸ் என்ற அறிஞர் தொகுத்துவைத்துள்ளார். அவை இக்காலப் புலவர்களின் படைப்பாற்றலை நன்கு புலப்படுத்துகின்றன. இவை யாவற்றுக்கும் மேலாக இக்காலத்தே பல ஒப்புயர்வற்ற தத்துவ மேதைகள் தோன்றினார்கள். உலக அறிஞர்கள் பலரால் போற்றப்படுகின்ற உயர்ந்த தத்துவக் கொள்கைகளை அவர்கள் அரிதின் முயன்று எழுதி வைத்துள்ளார்கள். அரசியல் கொந்தளிப்புகளில் சிக்கித் தவித்த மக்களுக்கு அத்தகைய தத்துவங்கள், நீரில் மூழ்கித் தத்தளிப்போர்க்குக் கிடைத்த தெப்பம்போல் பயன்பட்டன.

**தத்துவ மேதைகள்**

கி.மு. 1250ஆம் ஆண்டிலிருந்தே சீனாவில் ஞானிகள் தோன்ற ஆரம்பித்துவிட்டனர். அப்போது வாழ்ந்த யூ ட்சை (Yu Tze) எனும் அறிஞர் 'புகழைத் துறப்பவன் கவலையை ஒழித்தவனாகிறான்...தனக்கென ஓர் வரலாறு இல்லாதவன் மகிழ்ச்சியையடைகிறான்' என்று கூறினார். வென்-வாங் (Wen Wang) என்ற ஞானி 'மாற்றங்களின் நூல்' (Book of Changes) என்ற ஓர் தத்துவ நூலை எழுதினார். இயற்கையில் காணப்பெறும் பூதங்களை

யும், விதிகளையும் விளக்க அவர் எட்டு முக்கோட்டுப் படங்களைக் (Trigram) கண்டுபிடித்தார். அவற்றில் ஒவ்வொன்றிலும், தொடர்ந்தாற்போல் செல்லும் கோடுகள் மூன்றும், விட்டு விட்டுச் செல்லும் கோடுகள் மூன்றும் இருந்தன. முந்தையது ஆண் தன்மையையும், பிந்தையது பெண் தன்மையையும் குறிப்பதாக அவர் கூறினர். கோடுகளை இரட்டிப்பாக்குவதன் மூலம் அவர் 64 வகைக் கோடுகளை உண்டாக்கி அவை ஒவ்வொன்றும் ஓர் இயற்கை விதியைக் குறிப்பதாகக் கூறினர். உலகிலுள்ள எல்லாக் கருத்துகளும் அவற்றில் அடங்கிவிடுவதாக அவர் எடுத்துரைத் தார். 'ஆண் இயல்பும் பெண் இயல்பும் பல்வேறு வகைகளில் சேர் வதால் ஏற்பட்டதே இவ்வகில உலகமுமாகும்' என்பது அவர் கருத்தாகும். சுமேரியர்கள், திராவிடர்கள் ஆகியோரும் இத் தகைய கருத்தையே கொண்டிருந்தனர் என்பது ஈண்டு நினைவு கூர்தர்பாற்று. இந்நூல் ஓர் மாந்திரீக நூலாகவும், ஜோசிய நூலாகவும் எண்ணப்பட்டது. கன்பூஷியஸ் இதற்கு ஓர் உரை எழுதியுள்ளார். இதன் பெருமையை அவர் வாயாரப் புகழ்கின்றுர்.

நாட்டில் நிலவும் சட்டதிட்டங்களையும், அரசாங்க முறையை யும் குறைகூறிக்கொண்டும், லட்சிய அரசைப்பற்றிப் பேசிக் கொண்டும் இருந்த பல அறிஞர்கள் இக்காலத்தே தோன்றினர். அவர்களில் பலரை அரசாங்கம் அடக்கு முறைகளால் ஒடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. டென்சிஹ் (Ten-Shih) என்பவர் அத்தகைய அறிஞர்களுள் ஒருவர். இவ் வுலகில் எதுவுமே தனிப் பட்ட குணமுடையதல்ல வென்றும், ஒன்றை ஒன்று சார்ந்தே (Relativity) எதுவும் இருக்கிறதென்றும் அவர் கூறினர். சூழ் நிலைக் கேற்ப நன்மை தீமையாகவும், தீமை நன்மையாகவும் மாறக்கூடும் என்றும், இதுதான் சரி என எதையும் திட்ட வட்ட மாகச் சாதிக்கக் கூடாதென்றும், அவர் வற்புறுத்தினர். அவரது கொள்கையை விளக்கும் கதை ஒன்று சீனநாட்டில் உலவுகிறது. அதாவது செல்வந்தன் ஒருவன் ஆற்றில் வழுக்கி விழுந்து மூழ்கி விட்டான். அவனது பிரேதத்தை ஒரு முரடன் தூக்கிவந்து தனது வீட்டில் வைத்துக்கொண்டு, ஏராளமான தொகை கொடுத் தாலன்றிப் பிரேதம் கிடைக்காது என இறந்தவர்களின் உறவினர் களுக்குச் சொல்லிவிட்டான். அவ்வளவு பணம் கொடுக்க இயலாத உறவினர்கள் டென்சிஹ்ஹிடம் முறையிட்டுக் கொண் டார்கள். அப்போது அவர், 'பொறுங்கள் வேறு எந்தக் குடும்ப மும் அப்பிரேதத்தை எடுத்துக்கொள்ளப் போவதில்லை' என்று அவ்வுறவினர்களுக்குக் கூறி அனுப்பிவிட்டார். சற்று நேரம் கழித்துப் பிணத்தை மறைத்து வைத்தவன் வந்து அவரிடம் நியாயம் கேட்டான். 'சற்றே பொறும். பிணத்தின் சொந்தக்

காரர்கள் யாரும் வேறெவரிடமும் சென்று அதை வாங்கிவிடமுடியாது' என்று அவனிடம் கூறினர். பிணம் அழுக ஆரம்பிக்கவே இருவரும் சமாதானம் செய்து கொண்டார்களாம். குற்றங்கள் பற்றி இவர் எழுதிய நூலை மக்களிடம் காட்டக்கூடாது என்று அரசு தடுத்தது. இருந்தும் மறைவாக அவர் அதை மக்களிடம் கொடுத்துவந்தார். எனவே, அவர் அரசின் ஆணைப்படி கொல்லப்பட்டார்.

**லாவோசே (Lao-Tse)**

கன்பூஷியஸுக்கு முற்பட்ட அறிஞர்களுள் தலைசிறந்தவர் லாவோசே என்பவராவார். லாவோசே என்றால் முதிய ஆசான் (Old Master) என்று பொருள். அவரது இயற்பெயர் ப்ளம் என்ற பொருள் கொண்ட 'லி' (Li) என்பதாகும். சீன வரலாற்றின்படி 'லி' முதலில் அரண்மனை நூலகத்தின் தலைவராய் இருந்தவர். அங்கிருந்தபோது அரசாங்க ஊழியர்களின் ஊழல்களையும், உளுத்த குணத்தையும் கண்டு அவர் தனது வேலையை ராஜிநாமா செய்துவிட்டு மக்கள் நடமாட்டம் குறைவாக இருந்த தூரப் பிரதேசத்திற்குச் சென்று அங்கே அமைதியாகத் தமது வாழ்நாட்களைக் கழித்தார். அங்ஙனம் ஓய்வுற்றிருந்த காலத்தில்தான் டா-டி-சிங் (Tao-Te-Ching) என்ற அவரது நூலை எழுதினர். 'டா' என்றால் வழி என்று பொருள். 'டி' என்பது நற்குணத்தைக் குறிக்கும். நல்வழி காட்டும் நூலென அவரது நூலை அழைக்கலாம். அவரது போதனைகள் பிற்காலத்தே டாயிஸம் (Taoism) என்ற மதமாக மாறியது. மக்கள் எவ்வாறு வாழ்ந்தால் மன அமைதி பெறலாம் என்பதை அவர் தமது நூலில் எடுத்துக் காட்டுகிறார். கல்வியையும் அதனால் வரும் அறிவையும் அவர் பெரிதும் கண்டிக்கிறார். கல்வியினால் உலகியல் அறிவு வளர்லாமேயன்றி ஆன்ம ஞான முதிர்ச்சியோ நற்குணமோ ஏற்படாது என்றும், கல்வியைத் துறந்து இயற்கையோடு இயைந்த வாழ்க்கையை வாழ்வதால் மட்டுமே ஒருவன் மகிழ்ச்சியாக வாழ முடியும் என்றும் அவர் அறுதியிட்டுக் கூறுகின்றார். மக்களிடத்தில் படிப்பறிவு அதிகம் பரவியிருப்பதாலேயே அவர்களை ஆள்வதென்பது கடினமாக இருக்கிறதென்றாலும் மக்கள் அறிவாளிகளாக இல்லாமலிருந்தால் சட்டங்களே தேவையில்லை என்றும் அவர் கருதினர். நன்மக்கள் நிறைந்த நாட்டில் அரசாங்கம் தேவையில்லை. அப்படியே இருப்பினும் அது மக்கள் வாழ்க்கையில் அதிகமாகத் தலையிடக்கூடாது. அதிகக் கட்டுப்பாடுகளை ஏற்படுத்துவதன்மூலம் அரசாங்கம் கட்டுப்பாடுகளை மீறும் மனப்பான்மையை வளர்க்கிறது; திருடர்களை அதிகமாக உற்பத்தி செய்கிறது என்பது அவரது கோட்பாடு.

ரூஸோ என்ற பெரியாரைப் போன்று இவரும் எளிய கிராமப் புற வாழ்க்கையையே பெரிதும் வற்புறுத்துகிறார். நகர்ப்புற வாழ்க்கை பாபகரமானது என்றும் ஒரு ஞானியானவன் சிக்கல்கள் நிறைந்த நகர்ப்புறங்களை விட்டு ஆரவாரமற்ற நாட்டுப்புறங் களுக்குச் சென்று அமைதியான வாழ்க்கையை வாழ்வதே சாலச் சிறந்ததாகும். இயற்கையானது எங்ஙனம் தனது கடமைகளை அமைதியாகச் செய்துகொண்டு செல்லுகிறதோ, அது போலவே மனிதனும் இயற்கையோடு இயைந்து அமைதியான வாழ்க் கையை நடத்த வேண்டும். இயற்கையின் பருவங்கள் எங்ஙனம் ஒழுங்காக வருகின்றனவோ அதே போன்று கடமைகளை ஒழுங் காகச் செய்யவேண்டும். யாருக்கும் நன்மையே செய்தல் வேண்டும். அதுவும் இன்னா செய்தார்க்கும் கூட இனியவே செய்தல் வேண்டும். இனிய வார்த்தைகளையே பேச வேண்டும். நீர் நெருப்பை அணைப்பது போன்று இனிய சொற்கள் கோபக்காரனை யும் மாற்றிவிடும். கூடியவரை எந்தக் காரியத்திலும் ஈடுபடாது **சும்மா இருப்பதே சுகம்** என்பவைகளே அவரது முக்கிய போதனை களாகும். அவரது போதனைகள் பெரிதும் புத்தருடைய போதனை களை ஒத்தவை. ஆசைகளே எல்லாத் துன்பங்களுக்கும் காரண மென்பதை இருவருமே நம்பினர். உள்ளதைக் கொண்டு மனநிறை வுடன் வாழவேண்டும்; பேராசை பெருந்துன்பம் தரும் என்பதை இருவருமே வற்புறுத்தினர். துறவு வாழ்க்கையை இருவருமே வெவ்வேறு வகையில் வலியுறுத்தினர். ஆனால், இவருக்குப் பின் வந்த கன்பூஷியஸ் செயலற்ற வாழ்க்கைத் தத்துவத்தைக் கண்டித்துச் செயல்மிக்க வாழ்க்கையை வற்புறுத்தினார்.

***கன்பூஷியஸ்*** (Confucius) (கி.மு. 551—கி.மு. 479 வரை)

கன்பூஷியஸ் என்பார் வடசீனாவில் உள்ள லூ (Lu) எனும் சிறிய இராஜ்ஜியத்தில் அரசாங்க அதிகாரியாய் இருந்த குங் (Kung) என்பாருடைய மைந்தனாவார். குங்-பு-ட்சு (Kung-Fu-Tsu) என்பது அவரது இயற்பெயராகும். குங் என்பது அவரது குடிப் பெயர். புட்சு என்றால் தலைவன் என்பது பொருள். அவர் தமது மூன்றாவது வயதிலேயே தகப்பனை இழந்தார். எனினும், வில் வித்தை, இசை முதலியவற்றை அவர் நன்கு பயின்றார். இசையை நன்கு பயில்வதற்காக மூன்று மாதங்கள் அவர் வெறும் மரக்கறி உணவையே உட்கொண்டார். பத்தொன்பதாம் வயதில் அவரது திருமணம் நடைபெற்றது. ஆனால், இருபத்தி மூன்றாம் வயதில் அவர் தமது மனைவியை விவாகரத்துச் செய்துவிட்டார். அதற்குப் பின் அவர் மறுமணம் செய்துகொள்ளவில்லை. கடைக் காப்பாளனாகவும், பூங்கா காவலனாகவும், இடையனாகவும் அவர்

சில நாட்கள் தொழில் புரிந்தார். அவ்வமயம் நாட்டில் எங்குப் பார்த்தாலும் ஒழுங்கின்மையும், கட்டுப்பாடின்மையும் தலைவிரித் தாடியதைக் கண்டு அவர் உளம் வெதும்பினார். நாட்டைச் சீர் திருத்தும் பெரும்பணிக்காக அவர் தம்மை அர்ப்பணித்துக் கொண்டார். தமது இருபத்திரண்டாம் வயதிலேயே அவர் தமது வீட்டில் ஒரு பள்ளியைத் துவக்கினார். மாணவர்களுக்கு வரலாறு, கவிதை, நன்னெறி ஆகியவற்றைப் போதித்தார். சாக்ரடிஸ் போன்று கேள்விகள் கேட்டு மாணவர்களின் அறிவைப் பெருக் கினார். அறிவின் ஒரு பகுதியைத்தான் ஆசிரியர் காட்ட முடியும் என்றும் ஏனைய மூன்று பகுதிகளை மாணவர்கள் தமக்குத் தாமே முயன்று பெற்றுக்கொள்ள வேண்டுமென்றும், வீண் வாதங்களில் காலத்தைக் கழிக்கக்கூடாது என்றும் அவர் வற்புறுத்தினார். முதலில் அவரிடம் ஒரு சில மாணவர்களே பயின்றனர். ஆனால், நாள் செல்லச் செல்ல மூவாயிரம் மாணவர்கள் அவரிடம் வந்து கல்வி பயின்றனர். அவரது புகழ் நாடெங்கும் பரவிற்று. அவரது காலத்தே மன்னரது கொடுங்கோன்மையை எதிர்த்துக் கலகம் செய்து அவனை அரியணையினின்றும் நீக்கி விட்டனர். அதிகாரத்துக்குக் கட்டுப்படாத மக்களுடன் வாழ இசை யாமல் அவர் தனது மன்னனோடு அருகிலுள்ள இ'ட்சி (I'-tsi) எனும் நாட்டுக்குச் சென்றுவிட்டார். ஆனால், அங்கு நீதியும், நேர் மையும் சிறிதும் இல்லாததைக் கண்டு மீண்டும் தனது நாட்டிற்கே திரும்பிவந்து பதினைந்து ஆண்டுகள் மக்களுக்குப் பல வகையிலும் தொண்டு செய்தார். அவரது ஐம்பத்திரண்டாவது வயதில் முக்கிய நீதிபதியாக அவரை லூ நாட்டு மன்னர் நியமித்தார். நாளடைவில் நிலங்களை அளக்கும் அதிகாரியாகவும், பொதுமராமத்து அதிகாரி யாகவும் பின்னர் முக்கிய மந்திரியாகவும் அவர் நியமிக்கப்பட்டார். அப்போது அவர் செய்த சீர்திருத்தங்கள் பலப்பல. விலைவாசிகள் நிர்ணயிக்கப்பட்டன. திறமைக்கேற்றபடி பதவி வழங்கப்பட்டது. வேலைக்கேற்றபடி கூலியும் உணவும் வழங்கப்பட்டன. செல்வருக் கும் வறியருக்கும் ஒரேமாதிரியான நீதி வழங்கப்பட்டது. இதைக் கண்ட பெரும் பிரபுக்கள் அவர்மீது பொறாமை கொண்டனர். எனவே, அவர்கள் அண்டை நாட்டு அரசனை அணுகி கன்பூஷி யஸை லூ நாட்டில் விட்டுவைத்தால் இ-ட்சி நாட்டுக்கு ஆபத்து என்று எச்சரித்தனர். கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையு மன்றோ? இ'-ட்சி நாட்டு மன்னன் கன்பூஷியஸைக் கவிழ்க்கச் சதி செய்தான். லூ நாட்டு மன்னருக்கு அழகிய 120 வனப்பு மிக்க நங்கைகளையும், பல வலிமை மிக்க குதிரைகளையும், சுவை மிக்க மதுவையும் அனுப்பி அவரது மதியை மயக்கினான். கன்பூஷியஸ் மீது இல்லாததையும் பொல்லாததையும் கூறி அவரைப் பதவி யினின்றும் நீக்குமாறு செய்தான். பதவியிழந்த கன்பூஷியஸ் மன

மொடிந்து சீனுவின் வடகிழக்குப் பாகத்திற்குப் போய்விட்டார். தனது பேச்சைக் கேட்கக்கூடிய அரசனைத் தேடித் தேடி அலைந்து அவர் அலுத்துப் போனுர். அவரது மனதுக்கினிய அரசன் இறுதி வரையில் அவருக்குக் கிடைக்கவேயில்லை.

*கன்பூஷிய தத்துவங்கள்*

கன்பூஷியஸின் வாழ்க்கைத் தத்துவங்கள் மிக உன்னத மானவை. மத்திய மார்க்கம் (Doctrine of the Mean) என்று அழைக்கப்பட்ட அவரது தத்துவங்கள் பெரிதும் புத்தரது உபதேசங்களை ஒத்திருந்தன. புத்தரைப் போலவே அவர் நன்னடத்தைக்கும் ஒழுங்குக்கும் முதலிடம் தந்தார். வாழ்க் கைக்கு உதவாத வறட்டு வேதாந்தத்தை அவர் அறவே வெறுத் தார். கடவுளைப் பற்றிய சர்ச்சைகளிலும், மரணத்துக்குப் பின் மனிதனது வாழ்க்கையைப்பற்றிய ஆராய்ச்சிகளிலும் அவர் ஈடு பட மறுத்தார். கண்ணுல் காண இயலாத ஆவிகளைப் பற்றியும், அவர் கவலைப்படவில்லை. கண்ணுல் காணப்பெறும் மனிதருக்கே சேவை செய்யத் தெரியாதவன் எவ்வாறு கண்ணுக்குத் தெரியாத கடவுளுக்கும், ஆவிகளுக்கும் சேவை செய்ய முடியும் என்று அவர் கேட்பது வழக்கம். அதே போன்று வாழ்க்கையைப் பற்றியே முழுமையும் தெரிந்துகொள்ளாத ஒருவன் மரணத்தைப் பற்றி ஏன் கவலைப்படவேண்டும் என்றும் அவர் வினவுவது வழக்கம். இருப்பினும் அவர் ஓர் நாத்திகர் அல்லர். கடவுள், பரலோகம், வழிபாடு இவற்றில் அவருக்கு நம்பிக்கை இருந்தது. ஆனுல், அவற்றில் அளவுக்கு மீறி அக்கறை செலுத்தவேண்டிய தில்லை என்பதே அவரது கோட்பாடாகும். நடைமுறைக்கு இன்றியமையாத நடத்தைகளையே அவர் பெரிதும் வற்புறுத்திஞர்.

ஞானம் என்பது என்ன என்று அவரை ஒருவர் கேட்டபோது ஒவ்வொருவரும் அவரவருக்கு உரிய கடமையைச் செய்வதே ஞானம் என மறுமொழி புகன்ருர். சமுதாயத்தில் ஒழுங்கு நிலவ வேண்டுமாஞல் மரியாதைக் கோட்பாடுகள் முட்டின்றி கடைப் பிடிக்கப்பட வேண்டுமென்று அவர் கருதிஞர். மக்கள் அரசனுக்கும், மனைவி கணவனுக்கும், குழந்தைகள் பெற்ருேருக்கும், சிறியவர்கள் பெரியவர்களுக்கும் அடங்கி ஒடுங்கி நடந்தால்தான் சமுதாயம் நிலைக்கும் என்ற உண்மையை அவர் வலியுறுத்திஞர். பொங்கிவரும் ஆற்றுநீரை அணை எவ்வாறு தடுத்து நிறுத்துகிறதோ அதே போன்று அவரவரது தரத்துக்கேற்ற நீதி நியமங்கள், அவர்கள் அத்துமீறிய செயல்களைச் செய்யாதவாறு தடுக்கும். ஒழுங்கு தாஞகவே ஏற்படும் என்று அவர் கருதிஞர்.

முதலில் தனிமனிதனை ஒழுங்குபடுத்த வேண்டும். பின்னர் குடும்பத்தில் ஒழுங்கு ஏற்படுத்த வேண்டும். அதன் பின்னர் நாட்டில் கட்டுப்பாட்டை ஏற்படுத்துவது எளிது என்று அவர் இடித்துரைத்தார். ஒழுக்கமுள்ள தனிப்பட்ட மனிதன் மற்றவர்களுக்கு முன்மாதிரியாக நடந்துகொள்ள வேண்டும். மற்றவர்களது குறைகளை எடுத்துக்காட்டுமுன் தனது குற்றங்களை அவன் களைதல் வேண்டும். மற்றவர்கள் தனக்கு எதை எதை செய்யக் கூடாது என்று ஒருவன் விரும்புகிருனே அதையதை அவன் பிறர் மாட்டும் செய்யக் கூடாது என்பது அவரது பொன் விதியாகும் (Golden Rule). மற்றும் ஒருவன் மற்றவர் நன்னிலை குறித்துப் பொருமைப் படலாகாது. அவர்களுக்குச் சமமாக உயரப் பாடுபடவேண்டும். தனக்குக் கீழே உள்ளவர்களை ஒருவன் ஏளனம் செய்யக்கூடாது. யாரைப்பற்றியும் புறங்கூறுதல் ஒழிதல் வேண்டும். இவையே தனிப்பட்ட மனிதருக்கு கன்பூஷியஸ் வழங்கும் அறிவுரையாகும்.

அடுத்தபடியாகக் குடும்பத்தில் மனைவியும் குழந்தைகளும் குடும்பத் தலைவனுக்குக் கட்டுப்பட்டிருக்க வேண்டுமென்றும், எதிர்க்கக்கூடாது என்றும் வற்புறுத்தினர். அதேபோலப் பெற்ருேர்கள் உண்மையன்புள்ள பெற்ருேர்களாக நடந்துகொள்ள வேண்டுமென்பதையும் சுட்டிக் காட்டினர்.

அரசாங்கம் எப்படி இயங்க வேண்டுமென்பதைப் பற்றிய நல்ல பல கருத்துகளை அவர் எடுத்துக் கூறினர். மக்கள் விருப்பத்தின் அடிப்படையில்தான் அரசாங்கம் இயங்க வேண்டும். அவர்களது நம்பிக்கைக்குப் பாத்திரமாகாத அரசாங்கத்தைக் கண்டிக்கவோ, திருத்தவோ அரசாங்கத்துக்கு அதிகாரம் உண்டு. எனவே, மன்னன் ஒழுக்க நெறியினின்றும் சிறிதும் பிறழாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். மக்களுக்கு முன்மாதிரியாகத் திகழ வேண்டும். ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கையை வாழ வேண்டும். அவனுடைய நீதியையும், நேர்மையையும் கண்டு மக்கள் அவனுக்குக் கீழ்ப்படிய வேண்டுமேயன்றி அவனது ஆயுத பலத்தைக் கண்டல்ல. மன்னன் நாட்டின் செல்வம் ஓரிடத்தில் குவியாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். நேர்மையுள்ளவர்களை அதிகாரிகளாக நியமிக்க வேண்டும். கல்வி, ஒழுக்கம் இவற்றைக் கொண்டே ஓர் அதிகாரியின் தரத்தை மன்னன் மதிப்பிட வேண்டும். இத்தகைய அதிகாரிகளைக் கொண்டு மக்களிடத்தே நன்னடத்தைகளை மன்னன் வளர்க்க வேண்டும். மக்களைப் பண்படுத்த இசையை மன்னன் பயன்படுத்த வேண்டும் என்ற புதுமைக் கருத்தைக் கன்பூஷியஸ் கூறுகிருர். இசைப் பயிற்சி ஏற ஏற மனிதர்களது நடத்தைகளில் தாளுகவே மெருகு ஏற்படு

கிறது என்பது அவரது கோட்பாடு. எந்தெந்த இசைகளைக் கொண்டு எங்ஙனமெல்லாம் மக்களைக் கட்டுப்படுத்த முடியும் என்று அவர் கூறுகின்ற பான்மை உண்மையில் விந்தைக்குரியதொன் ருகவே இருக்கின்றது.

*உயர் மனிதர்* (Super man)

தலைசிறந்த மனிதர்களே நாட்டை நல்வழிப்படுத்த முடியு மென்றும், அத்தகைய மனிதர்கள் ஒரு சில தனிப் பண்புகளை உடையவர்களென்றும் அவர் கூறுகிருர். மனிதர்களுள் மாணிக்க மெனக் கருதத்தக்க அவர்களிடம் மூன்று பெருங் குணங்கள் காணப்படும். அவை, நுண்ணறிவு, தைரியம், நல்லெண்ணம் என்பனவாகும். அவன் வெறும் அறிவுடையவனுக மட்டும் இருக்க மாட்டான். நல்ல ஒழுக்கமுடையவனுகவும் அவன் விளங்குவான். சிந்தையிலும், பேச்சிலும், செயலிலும் அவன் வாய்மையைக்கடைப் பிடிப்பான். தனது தோல்விகளுக்குப் பிறரைக் குறை கூறுவதற்குப் பதிலாகத் தன்னையே நொந்து கொள்வான். அவன் பேச்சு குறைவாயிருக்கும். செயல்கள் அதிகமாயிருக்கும். எதிலும் அவன் மிதமாக இருப்பான். பொன் விதியை அநுதினமும் கடைப் பிடிப்பான். நல்லோர்க்கு நன்மை செய்வான். தீயோர்க்குப் பணியமாட்டான். தக்கபடி அவர்க்கு நியாயம் வழங்குவான். எல்லார் மாட்டும் அவனுக்குக் கருணை பொங்கி வழியும். தாழ்ந்த குணமுள்ளவர்களை அவன் வெறுக்கமாட்டான். தன்னிடத் திலேயே அத் தாழ்ந்த குணங்கள் ஓரளவாவது இருப்பதை உணர்ந்து அவர்கள்மீது அநுதாபப்படுவான். தன்னிலும் திறமை மிக்கோர்களைக் கண்டு பொருமைப்படமாட்டான். ஆனல், அவர் களுக்குச் சமமான நிலையை எய்த மௌனமாகப் பாடுபடுவான். தனக்கு மேலானவர்களைப் புகழ்ந்து முகமன் செய்யமாட்டான். தன் நிலைக்குக் கீழானவர்களை இகழ்ந்தொதுக்கமாட்டான். நடத்தையில் கண்ணியம், பேச்சில் செட்டு, யாவர் மாட்டும் மரியாதை இவற்றை அவன் எஞ்ஞான்றும் கடைப்பிடிப்பான். அவனிடம் 9 குணங்கள் மிகுந்து காணப்படும். அவை (1) தெளிவான கண்கள், (2) கருணை நிறைந்த முகம், (3) மரியாதை நிறைந்த நடத்தை, (4) உண்மையான பேச்சு, (5) விழிப்பான செயல், (6) எதையும் துருவி ஆராயும் மனப்பான்மை, (7) சகிப்புத் தன்மை, (8) நியாய மனப்பான்மை, (9) எல்லாருக்கும் முன் மாதிரி யாக நடந்து கொளல் என்பனவாம்.

*சிறந்த அரசு*

சிறந்த அரசு எப்படியிருக்க வேண்டுமென்பதையும் கன்பூஷி யுஸ் கூறியுள்ளார். நல்ல அரசு கூடியவரை வெளிநாடுகளோடு

தொடர்பு கொள்ளக்கூடாது. வேற்றுநாட்டின் துணையின்றி வாழக்கூடிய தன்னிறைவு பெற்றதாக அது இருக்க வேண்டும். நாடென்ப நாடா வளத்தன என்பதற்கு இலக்கணமாக அது திகழ வேண்டும். மற்றும் அது பிற நாடுகளோடு போரிடுதலும் கூடாது. ஆடம்பரத்தைவிட்டு எல்லாவகையிலும் அது சிக்கனத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். நாட்டின் செல்வம் ஓரிடத்தில் குவியாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். கூடியவரை செல்வம் சமமாக மக்களிடம் பிரிக்கப்பட வேண்டும். மக்களை அதிகம் தண்டிப்பதற்குப் பதிலாக அவர்களுக்கு அதிகமான அறிவை ஊட்ட வேண்டும். உயர்ந்த கல்வியறிவுகளைச் சாதாரண மக்களுக்குத் தரக்கூடாது. ஆனால், இசைப் பயிற்சியை யாவருக்கும் அளிக்க வேண்டும். இசையின் நயத்துக் கேற்பவே மக்களின் நடையுடை பாவனைகள் அமையும். நடையுடை பாவனைகளை மக்களிடம் மெருகூட்டி வளர்க்க வேண்டும். பழக்க வழக்கங்கள் கெட்டால் நாடும் கெட்டுவிடும்.

*லட்சிய நாடு*

அவர் கனவு கண்ட லட்சிய நாட்டில் குடியாட்சியே நிலவும். மக்கள் அறிவும் திறமையும் ஒழுக்கமும் உள்ளவர்களைத் தேர்ந்தெடுத்து ஆட்சி பீடத்தமர்த்துவர். நெறி பிறழாத ஒப்பந்தத்தின் மூலம் எல்லாக் காரியங்களும் நடைபெறும். எங்கும் அமைதியும் சமாதானமும் நிலவும். மக்கள் தத்தம் குடும்பத்தினரை நேசிப்பது போல் பிறரையும் நேசிப்பர். முதியோர், விதவைகள் அநாதைகள், நோயாளிகள், அங்க ஊனமுற்றோர் யாவரும் பாதுகாக்கப்பெறுவர். வேலை செய்யக்கூடிய யாவருக்கும் வேலை கிடைக்கும். தன் சொந்த நலனுக்காக அன்றி நாட்டின் நலனுக்காக மக்கள் உழைத்துச் செல்வத்தை உற்பத்தி செய்வர். திருட்டு எங்கும் இருக்காது. வீடுகளில் பூட்டு காணப்படாது. ஒவ்வோர் ஆணும் பெண்ணும் அவரவர்க்குரிய உரிமைகளைப் பெற்று அநுபவிப்பர். அதே சமயம் அவரவர்க்குரிய கடமைகளையும் அவர்கள் செய்து முடிப்பர்.

கன்பூஷியஸின் தத்துவமானது சீன வரலாற்றைப் பெரிதும் பாதித்தது. அவரது தத்துவத்தைப் படித்தவர்களே அரசாங்க வேலைக்குத் தகுதியானவர் என்று நம்பப்பட்டது. அரசாங்க ஊழியர்களுக்கான போட்டித் தேர்வுகளில் கன்பூஷியஸின் போதனைகள் கட்டாயமாகப் புகுத்தப்பட்டன. அவரது கொள்கைகளைக் கற்றுத் தேர்ச்சிபெறப் பல பள்ளிகள் சீனாவில் தோன்றின. அரசியல் துறையில் குழப்பம் ஏற்பட்டபோது சீனப் பண்பாட்டை உயிரோடு வாழ வைத்திருந்த பெருமை கன்பூஷியஸின் தத்துவங்

களையே சாரும். இத் தத்துவத்தின் துணைகொண்டே சீனர்கள் ஒருமித்த ஒரு சமுதாய வாழ்க்கையையும், திறமைமிக்க ஓர் ஆட்சித் துறை அமைப்பையும், அறிவு செறிந்த ஒரு கல்வி முறையை யும், நிலைபெற்ற ஒரு பண்பாட்டையும் பெற்றார்கள் என்றால் மிகை யாகாது. ஒழுக்கமும், கட்டுப்பாடும் சிதைவுற்ற எந்தவொரு சமுதாயத்துக்குமே கன்பூஷியஸின் தத்துவங்கள் சிறந்ததோர் மருந்தாக அமைந்தது என்பதில் ஐயமில்லை. ஆனால், புரட்சிகர மான மாறுதல்களை விரும்பும் ஒரு சமுதாயத்திற்கு அவரது தத்து வங்கள் அவ்வளவு ஏற்றதல்ல. இயற்கையான கட்டுப்பாடற்ற வளர்ச்சிக்கு அது ஓரளவு தடை விதிக்கிறது. இன்பங்கள், கேளிக்கைகள், காதல், நட்பு, ஆகிய உணர்ச்சிகளின் வளர்ச் சியை அது தடை செய்கிறது. பெண்களுக்கு அது சமுதாயத்தில் தாழ்ந்த ஒரு நிலையையே அளிக்கிறது. இங்ஙனம் ஒரு சில குறை களைக் கொண்டிருந்தாலும் ஹான் வமிசத்தின் தொடக்கத்தி லிருந்து மஞ்சூ (Manchu) வமிசத்தின் வீழ்ச்சிவரை அதாவது ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகள் வரை கன்பூஷியஸின் கோட்பாடுகளே சீன மக்களின் உள்ளங்களில் தனியாதிக்கம் செலுத்தி வந்ததோடு அவர்களது வாழ்க்கை முறையையே பெரிதும் பண்படுத்தி வந்தது. அதன் பின்னும் வெவ்வேறு உருவில் அவரது கொள்கைகள் மக்களை ஆட்கொண்டிருந்தன. சீனக் கல்வியில் அவரது கருத்துகள் பரவலாகப் புகுத்தப்பட்டன. அரசரது ஆணைப்படி அவரது வாசகங்கள் கற்பாறைகளில் பொறிக் கப்பட்டன. அவரை கௌரவிக்கும் முகத்தான் கோயில்களில் பலி கொடுக்கப்பட்டன. நாட்டின் அதிகார பூர்வமான ஓர் மத மாக அவரது நெறிகள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. டாங் வமிசத் தாரின் ஆட்சிக்காலத்தில் அவருக்குக் கோயில்கள் கட்டப்பட்டு அவற்றில் வழிபாடுகள் நிகழ்த்தப்பெற்றன. சுங் வமிச ஆட்சிக் காலத்தில் அவரது நெறிமுறைகள் எளிதாக்கப்பட்டு கொரியா, ஜப்பான் போன்ற அண்டை நாடுகளிலும் பரவின. இன்றைய கம்யூனிஸ்ட் ஆட்சியில்தான் அவை பெரிதும் ஒழிக்கப்பட்டு விட்டன. எனினும், அவற்றின் செல்வாக்கு மறைமுகமாக மக்களது எண்ணங்களிலும் செயல்களிலும் இன்றும் வெளிப்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன எனில் மிகையாகாது.

*மென்சியஸ் (Mencius)*

கன்பூஷியசுக்கு அடுத்தபடியாகச் சீனாவில் புகழ் பெற்ற தத்துவ ஆசிரியர் மென்சியஸ் என்பவராவார். அவரை அவரது தாயார் 'ஈன்று புறந்தந்ததோடு' மட்டுமின்றி சான்றோனாகவும் ஆக்கினாள். தனது மகனுடைய சுற்றுப்புறங்கள் நன்கு அமைய வேண்டும்

என்பதற்காக அவள் அடிக்கடி தன் வீட்டை மாற்றிக்கொண்டிருந்தாள். முதலில் அவள் ஓர் இடுகாட்டுக்குப் பக்கத்தில் குடியிருந்தாள். அப்போது மென்சியஸ், பிணங்களைப் புதைக்கும் வெட்டியார்களைப் போன்று நடந்துகொண்டான். இதைக் கண்டதும் அவள் தனது வீட்டை மற்ரோரிடத்திற்கு மாற்றினுள். அவ்வீட்டிற்கருகே கசாப்புக் கடை ஒன்று இருந்தது. அதில் வெட்டப்படும் ஆடு மாடுகளை உற்றுக் கவனித்த மென்சியஸ், வெட்டப்படும்போது அவை அலறியதைப்போன்று கத்த ஆரம்பித்தான். எனவே, மென்சியஸின் தாயார் மூன்ருவது முறையாகத் தனது வீட்டை மாற்றினுள். இப்போது அவனது இல்லம் ஓர் பள்ளிக்கூடத்தருகே இருந்தது. எனவே, மென்சியஸ் கல்வி கற்கத் தொடங்கினுன். விளையாட்டுத்தனம் காரணமாக மென்சியஸ் ஓரோவழிப் பள்ளிக்குச் செல்வதை நிறுத்திவிட்டால், அவனது தாயார் திலகம் ஏனைய தாயார்களைப் போல அவனைத் திட்டி அடிக்க மாட்டாள். அதற்கு மாருகத் தனது நெசவுத்தறியின் நூலை அறுத்துவிட்டுச் சும்மா உட்கார்ந்திருப்பாள். 'ஏனம்மா இப்படி உம்மென்று உட்கார்ந்திருக்கிறீர்கள்' என்று மென்சியஸ் வினவுங்கால் 'மகனே! நூல் அறுபட்டால் ஆடையை எவ்வாறு நெய்ய முடியாதோ அப்படித்தான் கல்வியை நடுநடுவே நிறுத்திவிட்டால், அதன் தொடர்பு அறுபட்டு முன்னேற்றம் தடைபடும்' என விளக்குவாள். இத்தகைய அறிவுமிக்க தாயாரின் அரவணைப்பில் வளர்ந்த மென்சியஸ் பிற்காலத்தில் பெரிய தத்துவ மேதையாகத் திகழ்ந்ததில் வியப்பொன்றுமில்லை.

மென்சியசின் புகழ் விரைவில் நாடெங்கும் பரவியது. இனிப்புப் பண்டத்தை மொய்க்கும் எறும்புகள் போல, அறிவுப் பசி கொண்ட மாணவர்கள், அவரை நாடி அறிவுரை கேட்டனர். அரசிளங்குமரர்கள் சிலர் அவரைத் தங்களது அரண்மனைக்கு வந்து அறிவுரை நல்குமாறு வேண்டினர். ஆனுல், முதுமை அடைந்துவிட்ட தனது தாயை விட்டுப் பிரிய மென்சியஸ் தயங்கினுர். அதைக் கண்ட அத் தாய்ப் பெருந்தகை தன்னைப் பற்றிக் கவலைப்படாமல், உலகுக்குச் சேவை செய்யும்படி தன் மகனைப் பணித்தாள்.

மென்சியஸ் பல இளவரசர்களைச் சந்தித்து நல்லறிவைப் போதித்தார். போர் புரிவதன் மூலம் பூசல்களைத் தீர்த்துக் கொள்ளும் முறையை அவர் கண்டித்தார். ஆனுல், அவரது பேச்சைக் கேட்டு அதன்படி நடைமுறையில் நடக்க ஒருவரும் முன் வரவில்லை. எனவே, அவர் மனமொடிந்து தனது இல்லத்துக்கே திரும்பினுர். தனது அருமை அன்னையைக் கடைசிவரை

காப்பாற்றினர். அன்னையின் மரணத்துக்குப் பின் அவர் தமது கருத்துகளை எல்லாம் 'மென்சியஸின் புத்தகம்' (Book of Mencius) என்ற நூலாக வடித்துத் தந்துள்ளார். அதில் அவர் பல உயரிய எண்ணங்களை வெளியிட்டுள்ளார். மன்னராட்சியே மக்களாட்சியை விடச் சிறந்தது என்பது அவரது முடிபாகும். நாட்டை ஆள்பவர்கள் ஞானிகளாயும் நல்லவர்களாயுமிருக்க வேண்டும் என்றும், மக்களின் துன்பங்களுக்கெல்லாம் மூல காரணம் அரசாங்கங்களின் கொடுமையேயென்றும், குடிமக்கள் இயல்பாகவே நல்லவர்களென்றும், அன்னார் தீயவர்களாக மாறுவது அரசாங்கத்தின் நடவடிக்கைகளைப் பொறுத்ததே என்றும் அவர் கட்டுரைத்தார். மக்கள் வேலையின்மையாலும், வறுமையாலுமே குற்றம் புரிகின்றனர் என்றும், எனவே அரசாங்கம் ஏழ்மையையும் அறியாமையையும் அகற்ற முதலில் பாடுபட வேண்டுமென்றும், ஏழ்மை ஒழியக் கட்டுப்பாடற்ற வாணிபமே சிறந்தது என்றும், கட்டாயக் கல்வியே மக்களை அறியாமையிலிருந்து அகற்றி நாகரிகப் பாதையில் நடைபோடச் செய்யுமெனவும் அவர் நம்பினர். நன்கு கல்வி பயின்றவர்களே நாட்டை ஆளத் தகுதி படைத்தவர்களென்றும், படிப்பறிவற்ற தொழிலாளிகள் கைகளில் ஆட்சி சிக்கினல் மக்கள் கதி அதோகதிதான் என்றும் அவர் அறுதியிட்டுக் கூறினர். சுயநல மிக்க சமுதாயத்தை அவர் பெரிதும் கண்டித்தார். அரசாங்கம் நல்வழி விட்டு அல்வழி நடந்தால் அதை அகற்ற மக்களுக்கு உரிமை உண்டு என்றும் அவர் அறிவித்தார்.

**மோ-டி** (Mo-Ti) எனும் மெய்யறிஞர், சுயநலமே எல்லாத் தீமைகளுக்கும் காரணம் என்றும், மக்கள் ஒருவர் மீது ஒருவர் உண்மையான சுயநலமற்ற அன்பு செலுத்துவதன் மூலமாகவே எல்லாத் தீங்குகளும் உலகிலிருந்து நீங்கும் என்றும் அவர் போதித்தார். அரசு போரில் இறங்குவதை அவர் வன்மையாகக் கண்டித்தார். காந்திஜி, டால்ஸ்டாய் போன்று அவர் பலாத்காரம் சிறிதுமற்ற அன்புச் சமுதாயத்தைப் படைக்க விரும்பினர். அவரை அராஜகவாதி (Anarchist) எனப் பலரும் ஏசி நையாண்டி செய்தனர்.

*ஹூசுன் ட்ஸி* (Hsun-Tze) என்பார் மக்கள் இயல்பாகவே நல்லவர்கள் என்ற மென்சியஸின் கொள்கையை மறுத்தார். மக்கள் இயல்பாகவே ஆசையும் பொறுமையுமிகுந்த சுயநல வாதிகள் என்றும், சட்டத்தின் மூலமும், பலாத்காரத்தின் மூலமுமே அவர்களை நல்வழிப்படுத்தலா மெனவும் அவர் எடுத்துக் கூறினர்.

*யாங்க் சு* (Yang Chu) என்ற அறிஞர், வாழ்க்கை இன்பமாய் வாழ்வதற்கே என்ற உலோகாயதக் கொள்கையினர். கடவுள்,

மறுமை இவையெல்லாம் பொய் என்றும், மறுமைக்காக இம்மையில் அல்லல்படுவது அறியாமை என்றும், ஒழுக்கம், அன்பு இவை எல்லாம் மக்களை ஏமாற்ற நினைக்கும் எத்தர்களின் செப்பிடுவித்தை எனவும் அவர் கூறினர். நல்லோர்கள் துன்பமடைவதையும், தீயோர்கள் மகிழ்ச்சியாயிருப்பதையும் சுட்டிக் காட்டி, ஐம்புல இன்பங்களைத் தடையற நுகரும்படி யாவரையும் தூண்டினர். இறந்தபின் வருகின்ற புகழைவிட இருக்கும்போது இன்பத்தைத் தரும் புகழ் அற்ற வாழ்வே சிறந்தது என அவர் பறைசாற்றினர். எனவே, சமுதாய விரோதி எனப் பலர் அவரை வைதனர்.

*சுயாங்க் ட்ஸி* (Chuang-Tze) என்பார் ரூஸோவைப் போன்ற உணர்ச்சி மிக்க கவிஞர். அதே சமயம் வால்ட்டேரைப் போன்று கூரிய நாக்குப் படைத்தவர். அரசு (State) என்பதே ஒரு விரும்பத்தகாத நிறுவனம் என்று அவர் கருதினர். மக்கள் சுயேச்சையாக அமைத்துக் கொள்ளும் நிறுவனங்களே நல்லவை என்றும், பறவைகள் மிருகங்கள்போல் மனிதனும் கட்டுப்பாடற்ற வாழ்க்கை வாழவேண்டுமெனவும் அவர் போதித்தார். 'ஒரு மன்னனது கட்டுப்பாடுகளுக்கு அடங்கி நடப்பதைவிட, அசுத்த மிக்க சாக்கடையில் கிடந்து உழல்வதே இன்பம்' என அவர் கூறுவது வழக்கம். இயற்கையில் ஓர் ஒருமையை அவர் கண்டார். எல்லையற்ற அவ்வொருமையில் வேற்றுமைகள் யாவும் மாய்ந்துவிடும் என்றும் ஒன்றுக்கொன்று முரண்பட்ட கொள்கைகள் அதில் சந்திக்கும் என்றும் அவர் கருதினர். இயற்கையின் பரிணமத்தில் உயிரினங்கள் பல்வேறு உருவங்களை எடுக்கின்றன என்று அவர் நம்பினர். இந்துக்களின் மறுபிறப்புக் கொள்கையை அவர் ஒப்புக்கொள்கிறர். உறங்குவது போலும் சாக்காடு என்றும், உறங்கி விழிப்பது போலும் பிறப்பு என்றும், மரணத்தின் மூலம் ஒருவன் தான் ஏற்கெனவே இருந்ததைவிட மேம்பட்ட ஓர் நிலையை அடைகிறன் எனவும் அவர் கருதினர். விசித்திரமான இயற்கையை ஒருவன் தனது சிற்றறிவால் அறிய முயல்வது வீண் என்றும், அதனுடன் அப்படியே ஒன்றித்து அதன் விதிகளின் வழி வாழ்வதே சிறந்தது என்றும் அவர் போதித்தார்.

சீனர்களின் தத்துவம் நம்நாட்டு உபநிடதத் தத்துவங்கள் போன்று உலகப் பிரசித்தி பெற்றவை. இக்காலப் பிரச்சினைகளுக்கெல்லாம் கைகண்ட மருந்து சீனத் தத்துவங்களே என்று லீப்னிட்ஸ் (Leibnitz) என்ற அறிஞர் (1697) கூறியதோடு மட்டுமின்றி, கீழை மேலை நாடுகளிடையே நல்லுறவை வளர்க்கப் பல கழகங்களை அவர் மாஸ்கோவிலும் பெர்லினிலும் நிறுவினர். சீனவுக்கு ஓர் பாதையை அமைக்குமாறு அவர் பீட்டர் என்ற ருஷ்யப்

பேரரசரை வேண்டிக் கொண்டார். கிரிஸ்டியன் வுல்ஃப் (Christian Wolff) என்ற அறிஞர் சீனரின் தத்துவங்கள் நடைமுறைக் கொத்தவை என்று புகழ்ந்தார். அவரை நாஸ்திகரென்று பலர் ஏசினர். ஆனால், பிரடரிக் மாமன்னர் (Frederick the Great) அவரை ஆதரித்தார். ஐரோப்பாவில் வளர்ந்த பகுத்தறிவு இயக்கம் (Enlightenment movement) சீனத் தத்துவ மேதைகளுக் குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளது. ரூஸோ (Rousseau) எனும் பிரெஞ்சு அறிஞர் லாவோசேயின் கருத்துகளையும், வால்ட்டேர் (Voltaire) எனும் மற்ரோர் அறிஞர் கன்பூஷியஸ், மென்சியஸ் போன்ற சீன அறிஞர்களின் அடிச்சுவடுகளையும் பின்பற்றியுள்ளனர். கதே (Goethe) எனும் ஜெர்மன் மெய்யறிஞர் சீனத் தத்துவங்களில் பெரிதும் ஈடுபாடு கொண்டவர். நவீன காலத்தே தோன்றிய தடையற்ற வாணிபக் கொள்கை (Laissez faire theory) லாட்-சே, சுவாங்-ட்ஸி போன்ற சீன அறிஞர்களின் கொள்கைகளையே பிரதி பலிக்கிறது. இங்ஙனம் பண்டைய சீன, தத்துவத்துறையில், உலகுக்கு வழங்கியுள்ள நன்கொடை உண்மையிலேயே பாராட்டத் தக்கதொன்றாகும்.

### பண்டைய சீன அரசாங்கம்

பண்டைய சீனவை மன்னர்களே பரம்பரை பரம்பரையாக ஆண்டு வந்தனர். மன்னர்களை மக்கள் தெய்வத்தின் பிரதிநிதி யாக மதித்தனர். ஷிஹ் ஹுவாங்டி என்ற அரசர் தன்னைத் தெய்வமாகவே மதித்து வழிபடும்படி மக்களை வற்புறுத்தினார். மாறுவேடத்தில் அவர் நாட்டை வலம் வந்து தமது எதிரிகளைக் கண்டுபிடித்துத் தண்டித்தார். ஏராளமான உளவாளிகளைக் கொண்டு அவர் தனக்கு எதிராக ஏற்பட்ட சதிகளைக் கண்டு பிடித்து ஒடுக்கினார். அவர் கட்டிய பெருமதிற் சுவரில் 10,000 கண்காணிப்புக் கோட்டைகள் இருந்தன. அவற்றில் ஒவ்வொன்றி லும் 100 வீரர்கள் இரவும் பகலும் தங்கி முரட்டு வகுப்பினர் படை யெடுத்து வருகிறார்களா என்பதைக் கண்டு அரசனுக்கு அறிவித்த னர். அவர் காலத்து மத்திய அரசாங்கத்தின் கை ஓங்கியிருந்தது. மாநில ஆளுநர்களைக் கட்டுப்படுத்த அங்குத் தனக்கென ஓர் சேனையை ஒவ்வொரு மாநிலத்திலும் வைத்திருந்தார். நாடனைத் துக்கும் ஒரே மாதிரியான சட்டம், நாணயம், எடைமுறை முதலிய வற்றை ஏற்படுத்தி அவர் நாட்டில் ஒற்றுமையை ஏற்படுத்தினார்.

ஹான், டாங், சுங் வமிச ஆட்சிக் காலத்தில் மன்னர்களின் அதிகாரங்கள் குறைந்தன. மாநில ஆளுநர்கள் ஏறக்குறைய சுயேச்சையாக நின்று ஆட்சி புரிந்தனர். நாடு ஷாங் (Shang)

எனும் பெரு மாநிலங்களாயும், டா (Tao) எனும் சிறு மாநிலங்களாகவும், ஃபு (Fu) எனும் மாவட்டங்களாயும் பிரிக்கப்பட்டிருந்தது. மாவட்டங்கள், வட்டங்களாகவும், கிராமங்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தன. சட்டங்களை விட மரபுகளே நாட்டில் ஆதிக்கம் பெற்றிருந்தன. கிராமங்களிலும், ஏனைய பகுதிகளிலும் செல்வாக்கு மிக்க ஒரு சில கும்பல்கள் ஏறக்குறைய சுயேச்சையுடன் வாழ்ந்தன. நம் நாட்டுச் சாதிகளைப் போல் அவை தமக்கே உரிய விதிகளையும் கட்டுதிட்டங்களையும் கொண்டிருந்தன. அவற்றை மீறினோர் கும்பல்களிலிருந்து வெளியேற்றப்பட்டனர். மன்னர்களும், மாநில ஆளுநர்களும் மக்களின் நலன்களை ஓம்பினர். நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்கி வேளாண்மையை வளர்த்தனர். பல கல்விமான்களை ஆதரித்தனர். தகுதிக்கேற்ப யாவருக்கும் வேலை வழங்கினர். மிங் வமிசத்தரசர்கள் இலக்கியம், இசை போன்ற கலைகளை ஓம்பினர். மரண தண்டனையை ஓர் அரசர் ஒழித்துவிட்டார். சுங் வமிச மன்னர்கள் முதியோருக்கும், வேலையில்லாதாருக்கும் உதவிப் பணம் வழங்கினர். தேர்வு முறைகளை அவர் சீர்திருத்தினர். ஆண்டுக்கு ஒருமுறை வரவு செலவுத் திட்டத்தை (Budget) வகுக்கும் முறையை அவர்கள் கொணர்ந்தனர். ஒரு வகையான சமதர்ம சமுதாயத்தைப் படைக்க அவர் முயன்றார். ஆனால், அது முடியவில்லை.

*பண்டைய சீன சமுதாயம்*

பண்டைய சீனமக்கள் பெருங் குடும்பங்களாக வாழ்ந்தனர். குடும்பத் தலைவர்கள் அதன் அளவுக்கேற்றபடி பெருமை தரப்பட்டதால் ஒரு குடும்பத்தில் ஏராளமான நபர்கள் இருப்பது வழக்கமாக வளர்ந்தது. மக்கள் தொகை இயல்பாகவே பெருகியது. கூடவே உணவுப் பிரச்சினையும் இருந்தது.

ஒரு குடும்பத்தில் தந்தையே தலைவனாக மதிக்கப்பட்டான். கன்பூஷியஸ் காலத்துக்கு முன் தாயே குடும்பத் தலைவியாகக் கருதப்பட்டாள். பெண்கள் ஆண்களை விடச் சற்று மதிப்புக் குறைவாகவே நடத்தப்பட்டனர். ஒரு தந்தை தனது மகளை விலைக்கு விற்கவும், கொன்று விடவும் உரிமை பெற்றிருந்தார். கணவன் தன் மனைவியைப் போகப் பொருளாயும் பிள்ளை பெறும் இயந்திரமாகவுமே கருதினான். பலதார மணம் பணக்காரரிடை பரவலாக இருந்தது. ஆனால், பொதுவாக ஏகபத்தினி விரதமே ஆண்களால் கடைப்பிடிக்கப்பட்டது. வாயாடிப் பெண்களையும், ஆண்மகவு பெறாத பெண்களையும், விவாகரத்துச் செய்ய ஒரு கணவன் உரிமை பெற்றிருந்தான். பெண்களுக்கு மட்டுமே கற்பு வற்புறுத்தப்பட்டது. அந்நியர்கள் கைபட்டுவிட்டதால் தற்கொலை செய்து

கொண்ட மகளிர் பலராவர். பெற்றோர்களே திருமணங்களை நிச்சயித்தனர். காதல் திருமணம் பொதுவாக வழக்காற்றிலில்லை. திருமணத்துக்கு முன் உடலுறவு கொள்ளுதல், நிச்சயதார்த்தம் நடைபெற்றுவிட்ட ஆண் பெண்களிடை அநுமதிக்கப்பட்டது. ஒவ்வோர் ஆணும் திருமணத்துக்குப் பின் ஆண் மகவையே எதிர்பார்த்தான். பெண் மகவு பிறந்தால் அதைப் பலர் கொன்று விட்டனர். சீனப் பெண்களும் ஆண்களும் வலிமையான உடற் கட்டைப் பெற்றிருந்தனர். ஆனால், உயர்குலப் பெண்டிர் உடல் மெலிந்து காணப்பட்டனர். மெலிந்த பாதங்கள் அழகின் அறிகுறியாகக் கருதப்பட்டதால் பல பெண்கள் காலை இறுகக் கட்டிக் கட்டிப் பாதங்களைச் சுருக்கினர். அதனால் அவர்கள் ஓரளவு விந்தி விந்தி நடந்தனர். அத்தகைய நடையே ஒய்யார நடையாகச் சீனர்களால் கருதப்பட்டது. ஆனால், காலில் வலிமையின்மையால் நங்கையர் பலர் தட்டுத் தடுமாறி தரையில் வீழ்ந்தனர். முகத்தூள் பூசிக்கொள்ளல், உதட்டுக்குச் சாயமேற்றுதல், கண்ணுக்கும் புருவங்களுக்கும் மைதீட்டுதல் போன்ற அழகு முறைகளை உயர் குடிப் பெண்கள் கடைப்பிடித்தனர். நீண்ட சடைகளைப் பின்னித் தொங்கவிடுவது ஆண்கள் பெண்கள் இரு சாராரிடமும் காணப் பட்டதோர் வழக்கமாகும். ஆண்கள் சிறு தாடிகளை வைத்துக் கொண்டனர். இரு பாலாருமே கால் சட்டைகளையும் மேல் சட்டைகளையும் அணிந்தனர். பெண்டிர் மார்க் கச்சைகளை அணிந்தனர். பாதங்களை அழகாக வைத்துக்கொள்வதில் அன்னார் தனி அக்கறை எடுத்துக் கொண்டனர். ஆண்கள், பெண்களின் பாதங்களைப் பார்ப்பதும், அவற்றைப் பற்றிப் பேசுவதும் குற்றமாகக் கருதப்பட்டது.

சீன சமுதாயத்தில் ஏற்றத் தாழ்வுகள் இல்லாமலில்லை. அரசரும் அவரைச் சார்ந்தோரும் பிரபுக்களும் உயர்குடியைச் சேர்ந்தவர்களாயும், ஏனையோர் சாதாரண மக்களாயும் கருதப்பட்டனர். அவர்களில் சிலர் அடிமைகளைப் போல் நடத்தப்பட்டனர். பெரும்பான்மையான மக்கள் கல்வியறிவற்றவர்களாயிருந்தனர்.

**சமய வாழ்க்கை**

பண்டைய சீன மக்களிடம் சமய நம்பிக்கைகள் மண்டிக் கிடந்தன. ஷாங்-ஷி (Shang-Zi) என்ற அருவக் கடவுளே எல்லாக் கடவுளரிலும் மேம்பட்டவராகக் கருதப்பட்டார். அவருக்குப் பேரரசர் மிருகங்களைப் பலிகொடுத்தார். சாதாரண மக்கள் இறந்துபோன முன்னோரின் ஆவிகளையும், சில விலங்குகளையும் வணங்கினர். இறந்தோரை மகிழ்விக்க உணவும் உடையும்

அன்னூர்க்குப் படைக்கப்பட்டன. மந்திரம், தந்திரம், ஜோசியம் முதலியவைகளில் அவர்களுக்குப் பலத்த நம்பிக்கை இருந்தது. சிப்பிகள், ஆமை ஓடுகள் இவற்றை வைத்துக்கொண்டு அவர்கள் வருங்காலப் பலன்களைக் கணித்தனர். நல்ல நாள் பார்க்கும் வழக்கமும் அவர்களிடம் காணப்பட்டது. நல்ல காரியங்கள் யாவும் நல்ல நேரங்களிலேயே தொடங்கப்பட்டன. கெட்ட நேரத்தில் பிறந்த குழந்தைகள் கொல்லப்பட்டனர். கன்பூஷியஸ், லாட்சே ஆகிய அறிஞர்கள் நாளடைவில் தெய்வங்களாக வழிபடப்பட்டனர். அவர்களுக்குக் கோயில்கள் எழுப்பப்பட்டன. ஆடுமாடுகள் பலி கொடுக்கப்பட்டன. அன்னூரின் கொள்கைகள் தனி சமயங்களாக வடிவெடுத்தன. அவைகட்கென்று தனிப்பட்ட குருமார்களும், சடங்குகளும் பெருகின. மிங் டி (Ming-Ti) என்ற பேரரசர் காலத்தில் பௌத்த சமயம் சீனுவில் புகுத்தப்பட்டது (கி.பி. 381). காஸ்யபர், தர்மராக்சிதர் முதலிய பௌத்த துறவிகள் அவரது அரண்மனையில் தங்கி உபதேசம் செய்தனர். ஹெய்ன் லு (Hein Lu) எனும் அரசர், நான்கிங் நகரில் புத்தருக்கு ஆலயமொன்றை எழுப்பினுர். பாஹியன், யுவான் சுவாங் போன்ற சீனத் துறவிகள் இந்தியாவிற்கு வந்து பல அரிய பௌத்த நூல்களை எடுத்துச் சென்று சீனமொழியில் பெயர்த்தனர். சீனரின் சிற்பமும் கட்டடக் கலையும் பௌத்த சமயத்தால் பெரிதும் பாதிக்கப்பட்டன. டுன்குயாங் (Tunhuang) யுன் கங் (Yun Kung) போன்ற இடங்களிலுள்ள பௌத்த சிற்பங்களில் இந்திய சாயை தென்படுகிறது. பல அடுக்கு கொண்ட கோயில் கோபுரங்களைக் கட்டல், பெரிய மணிகளை அவற்றில் தொங்கவிடுதல், தங்கக் கலசங்களைக் கோபுரங்களின் உச்சியில் அமைத்தல் போன்ற இந்திய முறைகளைச் சீனர்கள் தெரிந்திருந்தனர். புத்தர் ஓர் கடவுளாக வழிபடப்பட்டார். அவருடைய சீடர்களான லோகன்களும் தெய்வங்களாக வணங்கப்பட்டனர். சுவர்க்கத்தின் தலைவரான அமிதபா (Amitaba) என்பாரும், கருணை மாதாவான குயான்யுவும் (Kuanyu) பௌத்த கடவுளரேயாவர்.

### பொருளாதார வாழ்க்கை

விவசாயமே பண்டைய சீனமக்களின் முக்கிய தொழிலாயிருந்தது. யாங்க்ட்ஸிகியாங் நதியிலிருந்து பல கால்வாய்களை வெட்டி நீர்ப்பாசன வசதியை அவர்கள் பெருக்கிக் கொண்டார்கள். பரந்த நிலங்களைச் சொந்தமாகக் கொண்ட பெருநிலக்கிழார்கள் இருந்தனர். அவர்கள் நிலங்களைக் குடியானவர்களிடம் குத்தகைக்கு விட்டிருந்தனர். சிறிய நிலங்களைச் சொந்தமாக வைத்திருந்த குடியானவர்களும் இருந்தனர். அவர்கள் மரத்தாலும் இரும்பாலு

மான கலப்பைகளைக் கொண்டு நிலத்தை உழுது பயிரிட்டனர். அரிசி, கோதுமை, பார்லி, தினை போன்ற தானியங்களை அன்னுர் விளைத்தனர். ஆண்டுக்கு மும்முறை நிலம் பயிரிடப்பட்டது. உரமிடுதல், மாற்றுப் பயிர் செய்தல் ஆகியவற்றை அவர்கள் அறியவில்லை. நிலத்தைச் சுயேச்சைத் தொழிலாளிகளே உழுதனர். அடிமைகள் அதற்குப் பயன்படுத்தப்படுவதில்லை.

நிலத்தில் விளைந்த அரிசி முதலிய தானியங்களையும் அவற்ருல் செய்யப்பட்ட சேமியாவையும், காய்கறிகள், மீன் இவற்ருேடு சேர்த்து மக்கள் உண்டனர். பறவை, விலங்குகளில் எதை வேண்டுமாளுலும் அவர்கள் அடித்து அவற்றின் இறைச்சியை அருவருப்பின்றி உண்டனர். வெட்டுக்கிளி, பட்டுப்புழு, பாம்பு, எலி முதலியவைகளைக் கூட அவர்கள் விரும்பி உண்டனர். பசும் பால் அரிதே அருந்தப்பட்டது. சோயா அவரையின் பால் அதற்குப் பதிலாகப் பயன்படுத்தப்பட்டது. செல்வந்தர்களின் விருந்துகளில் 40 வகை உணவுகள் பரிமாறப்பட்டதாகத் தெரி கிறது. விருந்து சில சமயம் 4, 5 மணிநேரம் நடைபெறுவதுண்டு.

துணிநெய்தல், முக்கியமாகப் பட்டுத்துணி நெய்தல் சீனர் களின் முக்கிய தொழில்களிலொன்ருகும். சீனப்பட்டு இந்தியா, ஐரோப்பா ஆகிய நாடுகளிலெல்லாம் பெரிதும் வேண்டப்பட்டது.

வாணிபம் மற்றுமோர் முக்கிய தொழிலாகும். ஆனுல், வாணிபத்திலீடுபட்டோரை மக்கள் தாழ்வாக எண்ணினர். வியாபாரிகள் பிறரது உழைப்பில் வாழ்பவர்கள் என்ற எண்ணம் மக்களிடையே குடிகொண்டிருந்தது. எனினும், வணிகர்கள் மிக்க செல்வந்தர்களாக வாழ்ந்தனர். வழிப்பறி செய்வோர் அவர் களுக்குத் தொல்லை கொடுத்தனர். எனினும் அவர்கள் நாளடைவில் பெரும் பொருள் ஈட்டினர். பண்டங்களை இடத்துக்கிடம் தூக்கிச் செல்ல ஆட்களையே அவர்கள் பயன்படுத்தினர். பீங்கான் சாமான்கள், காகிதம், பழங்கள், சீட்டுக்கட்டுகள் இவை பிறநாடு களுக்கு ஏற்றுமதியாயின. கண்ணுடி, புகையிலை, அல்ஃபால்ஃபா போன்ற பொருள்கள் இறக்குமதியாயின. கடற்சிப்பிகள், கத்திகள், பட்டு இவையும், பின்னர் பொன், வெள்ளி, செம்பு, தோல் இவற்ருலான நாணயங்களும் வியாபாரப் பரிவர்த்தனையில் பயன்படுத்தப்பட்டன. கடன் கொடுத்தல், வட்டி வசூலித்தல் ஆகிய வழக்கங்கள் வாணிபத்தில் கடைப்பிடிக்கப்பட்டன.

தொழில்களும், வாணிபமும் தமக்கெனத் தனித்தனிக் குழுக்களைக் கொண்டிருந்தன. விலைகள், கூலிகள் ஆகியவற்றை

நிர்ணயிப்பதும், வணிகர்கள் வழக்குகளைத் தீர்த்துவைப்பதும் அவற்றின் கடமைகளாகும். இவ்வாணிபக் குழுக்கள் தங்களைத் தாங்களே ஆண்டுகொண்டன. அவை ஒவ்வொன்றுக்கும் தனித் தனி விதிமுறைகள் இருந்தன. அவற்றைக் கடைப்பிடிக்காதவர்கள் குழுவினின்றும் வெளியேற்றப்பட்டனர். சமையல்காரர்கள், நாவிதர்கள் போன்றோரும் தனித்தனியே குழுக்களை அமைத்துக் கொண்டிருந்தனர்.

### கலைகளும் அறிவியலும்

பண்டைய சீனர்கள் படைப்பாற்றல் மிக்கவர்களாயிருந்தனர். டாங் வமிசத்தாரின் ஆட்சிக் காலத்தில் வெடிமருந்தைப் போர் களில் பயன்படுத்த அன்னார் அறிந்திருந்தனர். பட்டாசுகளை முதன்முதல் செய்தவர்கள் அவர்களே. சிவகாசிப் பட்டாசுகள் வருமுன் நம் நாட்டுக்குப் பட்டாசுகள் சீனுவிலிருந்தே வந்து கொண்டிருந்தன. மாலுமி திசையறி கருவி (Compass), காகிதம், பீங்கான், பட்டு, அச்சுப்பொறி இவற்றின் பயனை அவர்கள் முன்பே தெரிந்திருந்தனர். இவற்றை அராபியர்கள் கற்றுச் சென்று ஐரோப்பாவில் பரப்பினர்.

சீனரின் எழுத்துகள் சித்திர எழுத்துகளாகும். அவற்றைக் கற்பதென்பது வெகு கடினம். உயர்குடிப் பெருமக்களில் ஒரு சிலரே அதில் பாண்டித்யம் பெற்றிருந்தனர். நூல்கள் பலவற்றை மெய்யறிஞர்கள் எழுதிக் குவித்தனர். புவியியல், குறியீட்டுக் கணக்கியல் (Algebra), மருத்துவம் ஆகிய துறைகளில் அவர்கள் நன்கு பயிற்சி பெற்றிருந்தனர். மயக்க மருந்து கொடுத்து நோயாளிக்குத் துன்பம் ஏற்படாமல் அறுவை சிகிச்சை செய்யும் முறையை அவர்கள் கடைப்பிடித்தனர். வான இயலில் (Astronomy) அவர்களுக்கு நல்ல அறிவு இருந்தது. கிரஹணங்களின் காலத்தையும் $\pi$ என்ற குறியீட்டின் மதிப்பையும் அவர்கள் கணித் தனர். எனினும், சுகாதாரம், கழிவுநீரகற்றல், தடுப்பு மருந்து கொடுக்கு முறை இவற்றில் அவர்களுக்கு அதிகம் பரிச்சயமில்லை.

டாங் வமிசத்தாரின் ஆட்சிக் காலத்தில் பல அரிய கவிஞர்கள் தோன்றினுர்கள். லி போ (Li Po) என்ற அறிஞர் ஓர் பிறவிக் கவிஞர். தனது பத்தாவது வயதிலேயே அவர் கவி பாட ஆரம்பித்துவிட்டார். 'வு நாட்டு மடந்தை' (The Maid of Wu) என்ற அவரது கவிதை, இயற்கையில் அவருக்கிருந்த ஆர்வத்தை யும், மனிதாபிமானத்தையும் நன்கு வெளிக் காட்டுகிறது. சில பிரபுக்களின் ஆதரவை அவர் பெற்ருர். மது, மங்கை, போர், நாடு கடத்தல் போன்ற பொருள்கள்பற்றி அவர் ஏராளமான

கவிதைகளை இயற்றியுள்ளார். டாவ் சியன் (Tao Chien) என்ற கவிஞர் வோர்ட்ஸ்வொர்த் என்ற ஆங்கிலக் கவிஞரைப் போன்று இயற்கையின் அழகைக் கவிதைகளில் வடித்தார். போ சௌ (Po Chou) என்பார் மற்றுமோர் இயற்கைக் கவிஞராவார். டூஃபு (Tufu) என்பார் ஓர் மகாகவிஞர். மக்களின் துயர்பற்றியே அவர் பெரிதும் பாடினார். போரில் மடிந்த காளைகளை நினைந்து கண்ணீர் விட்டுப் பாடினார். அவரது பாடல்களில் சோகரசம் ததும்பி வழிகிறது. சீனக் கவிதைகள் சுருக்கமானவை. ஆனால், ஆழ்ந்த கருத்துடையவை. உட்பொருள் நிறைந்தவை. உணர்ச்சி நிரம்பியவை. கடந்த காலத்தை நினைத்துக் கண்ணீர் வடிப்பவை. இளமையின் வனப்பையும் முதுமையின் வாட்டத்தையும், காலத்தின் கோலத்தையும் அவை நன்கு சித்திரிக்கின்றன.

சீன உரைநடை நூல்கள் பல இக்காலத்தே எழுந்தன. வரலாறு, சிறுகதை இலக்கியம், கட்டுக்கதை புனைதல் போன்றவைகளில் அன்னார் தேர்ச்சி பெற்றிருந்தனர். சீன நாவல் ஒன்று 24 நூல்களாக வெளியிடப்பட்டன. சீன வரலாறு 291 நூல்களாக வெளியிடப்பட்டன. உண்மையை அறிய அவை பாடுபட்டுள்ளன. கட்டுரைகள் எழுதுவதிலும் அன்னார் சிறப்பெய்தினர்.

**இசை**

சீனரின் இசைக்கலை அவ்வளவாக வளர்ச்சியடையவில்லை. சமயம்பற்றிய பல பாடல்கள் புனையப்பட்டன. நாடகங்களில் பாடல்கள் பல இசைக்கப்பட்டன. அவற்றோடு, குழல், யாழ், மத்தளம் போன்ற இசைக்கருவிகளும் பெரிதும் பயன்படுத்தப் பட்டன. மங்கோலியர், கிரேக்கர், பாக்டீரியர் ஆகியோரின் இசை நயங்கள் அவர்தம் பாடல்களில் விரவிக் கிடப்பதைக் காணலாம்.

**நாடகம்**

சீன நாடகமும் அவ்வளவாக வளர்ச்சியடையவில்லை. நாடக மாந்தர்கள் சமுதாயத்தில் நன்கு மதிக்கப் பெறவில்லை. பொதுவாக நன்னெறிகளை வற்புறுத்தும் முகத்தான் நடிக்கப்பட்ட நாடகங்களே அதிகம். வரலாறு பற்றிய நாடகங்களும் சில இருந்தன. தீமை மாயும், நன்மை வெல்லும் என்ற உண்மையையே பல நாடகங்கள் புலப்படுத்தின. நடிகர்கள் மேடையிலேயே முகமூடி அணிந்து கொண்டு அமர்ந்திருந்தனர். தங்களது முறை வரும்போது ஒவ்வொருவராக எழுந்து வசனம் பேசினர். நடனமாடுவதிலும், வித்தைகள் செய்வதிலும் அவர்கள் நல்ல பயிற்சி பெற்றிருந்தனர்,

*அச்சுக்கலை*

சுங் வமிசத்தாரின் ஆட்சிக் காலத்தில், அச்சிடும் கலை கண்டு பிடிக்கப்பட்டதும், காகிதம், மை, எழுதுகோல் போன்றவை வழக்காற்றுக்கு வந்தன. எனவே, நூல்கள் ஏராளமாக வெளிவர ஆரம்பித்தன. ஆரல் ஸ்டீன் (Aurel Stein) என்பார் 1907-ல் பௌத்த குகைகளிலிருந்து 15,000 நூல்களைக் கண்டு பிடித்தார். பொழுதுபோக்காகச் சூதாடப் பயன்படும் சீட்டுக் கட்டுகளை, சீனர்களே முதலில் உண்டாக்கினர். தாள் நாணயங் களைப் பத்தாம் நூற்றாண்டிலேயே அவர்கள் வெளியிட்டனர். தொகை நூல்கள், அகராதிகள், கலைக் களஞ்சியங்கள் போன்ற வற்றை அவர்கள் வெளியிட்டனர். கன்பூஷியஸின் நூல்களும் ஏராளமாக வெளியிடப்பட்டன.

சுங் வமிசத்தாரின் ஆட்சிக் காலத்து அழகு தெய்வமாக வழி படப்பட்டது. கலைகள் அனைத்திலும் அழகு கொழிக்கலாயிற்று. டாங் வமிசத்தாரும் அழகைப் போற்றினர். அழகிய சித்திரங்கள் நிறைந்த துணிகளும், உலோகப் பாத்திரங்களும், இரத்தினங் களும் இவர்கள் காலத்தே தோன்றின. வீட்டு மேஜை நாற்காலி போன்ற பொருள்களில் பல அழகிய வடிவங்களில் ஆக்கப்பட்டன. கண்கவர் வனப்பு வாய்ந்த அணிகலன்களும், இறகுகளாலான விசிறிகளும், வண்ணம் தீட்டப்பட்ட காகிதங்களும், பட்டுகளும் ஏராளமாக உற்பத்தி செய்யப்பட்டன. மரத்தில் மெருகெண்ணெய் பூசி அதை அழகுபடுத்தும் கலை (Lacquer) சீனாவில்தான் முதலில் தோன்றியது. பின்னர் அது ஜப்பானுக்குப் பரவியது. டாங், மிங் வமிசத்தார் காலங்களில் இக்கலை நன்கு முன்னேற்றமடைந்தது. விலையுயர்ந்த நீலமணிக் கற்களை (Jade) சாணைபிடித்து ஒளியூட்டு வதில் சீனர்கள் வல்லவர்களாயிருந்தனர்.

*சிற்பம்*

செம்பாலும், பித்தளையாலும், வெண்கலத்தாலும் அழகிய பல உருவங்கள் செதுக்கப்பட்டன. அவை பொதுவாக சமய சம்பந்த மாகவே அமைந்திருந்தன. விலங்குகளின் உருவங்களே அதிக மாகச் செய்யப்பட்டன. பௌத்த சமயம் நாட்டில் புகுந்த பிறகு புத்தர், போதிசத்துவர்கள் பற்றிய உருவங்கள் ஏராளமாகச் செய்யப் பட்டன. அவற்றில் காந்தாரக் கலையின் சாயல் நன்கு தென்படு கிறது. ஷான்ஸி (Shanshi) மாவட்டத்திலுள்ள யுன் கான் (Yun Kan) குகைக் கோயில்களில் இத்தகைய சிற்பங்கள் நிறைய காணப்படுகின்றன. அங்கு பத்மாசனத்தில் அமர்ந்துள்ள புத்தரின்

உருவம் மிக அருமையானது. அது டாங் வமிசத்தாரின் ஆட்சிக் காலத்து ஏற்பட்டதாகும். டாங் வமிசத்துக்குப் பின் சீனச் சிற்பங்களில் உலகியல் தன்மைகள் புலப்படுகின்றன. காம உணர்ச்சிகள் அவற்றில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

*கட்டடக் கலை*

சீனர்கள் கட்டடக் கலையில் அவ்வளவாக அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. சிறிய சிறிய கட்டடங்களையே அவர்கள் கட்டினர். மரத்தையே அவர்கள் கட்டடங்களில் பயன்படுத்தினர். சுங் வமிச ஆட்சிக்காலத்து எழுதப்பட்டுள்ள எட்டுக் கட்டடக்கலை நூல்களும் மரக் கட்டடங்கள் கட்டுவதைப்பற்றியே கூறுகின்றன. புத்தரது ஆலயங்களே சீனக் கட்டடங்களில் சிறந்தவை. அவற்றில் வாயில்கள் அலங்காரமாக ஜோடிக்கப்பட்டு அழகிய பல படிமங்களைக் கொண்டு விளங்கின. பீகிங் நகருக்கருகிலுள்ள 'தூங்கும் புத்தரின் கோயில்' (Temple of Sleeping Buddha) பண்டைய சீனக் கட்டடக் கலையின் சிறப்புக்குச் சிறந்ததோர் சான்றாகும். சீன நகரங்கள் பலவற்றை, பல்வேறு கோணவடிவங்களில் அமைக்கப் பெற்ற கோபுரங்கள் அலங்கரிக்கின்றன. எண்கோண வடிவத்தில் அமைந்ததும், 13 மாடிகளையும் கொண்ட ஒரு கோபுரம் சுங் யுச் சு (Sung Yuch Ssu) நகரில் கம்பீரமாக நிற்கின்றது. அது கி.பி. 523-ல் கட்டப்பட்டதாகும். பீகிங் நகரிலுள்ள கோடைக்கால அரண்மனையும், கன்பூஷியஸ் ஆலயமும் அக்காலக் கட்டடங்களுள் புகழ் பெற்றவையாகும்.

சீனக் கட்டடங்கள் யாவும் ஒரு கோட்டைக்குள்ளேயே அமைக்கப்பட்டன. வெளியிலுள்ளோர் அவற்றைப் பார்க்க முடியாது. சீன அரண்மனை என்பது பெரும்பாலும் பல கட்டடங்கள் சேர்ந்த ஓர் கட்டடத் தொகுதியாகும். மரத்தாலும் செங்கல்லாலும் கட்டப்பட்ட அவைகளின் கூரையை மெருகிடப்பட்ட ஓடுகள் அணிசெய்தன. ஜன்னல்களோ புகைபோக்கிகளோ அவற்றில் இல்லை. காகிதத்தாலான விளக்குகள் இரவில் பயன்படுத்தப்பட்டன. சாதாரண மக்களின் வீடுகள் மிக எளிமையாகவே தோன்றின. பாய்களே தரையில் விரிக்கப்பட்டிருந்தன. செல்வர்கள் மேஜை நாற்காலிகளைப் பயன்படுத்தினர். கீழை நாடுகளில் சீனர்களே முதன் முதலில் நாற்காலியில் உட்காரப் பழகியவர்களாவர். சீனக் கட்டடங்களில் திண்மை இல்லை. எளிதில் இடிந்துவிடக் கூடியதாய் அவை அமைந்திருந்தன. அவற்றில் வண்ண நிறங்கள் நன்கு தீட்டப்பட்டிருந்தன. ஆனால், அவற்றில் ஓர் வனப்பு இல்லை. தெய்வீகமும் இல்லை. மிகச் சாதாரணமாகவே அவை கண்களுக்குத் தென்பட்டன.

**ஓவியம்**

டாங் வமிசத்தாரின் ஆட்சிக் காலத்தில் ஓவியம் நன்கு வளர்ச்சி யுற்றது. டாங் மன்னர்கள் ஓவியர்களைப் பொன்னும் பொருளும் கொடுத்துப் போற்றினர். ஹான் யு (Han Yu) என்ற அறிஞர் தமது நண்பரொருவரிடமிருந்து பெற்ற சிற்றோவியத்தில் 123 மனிதர் களும், 83 குதிரைகளும், 34 வேறு மிருகங்களும், 3 ரதங்களும், 251 வேறு பல பொருள்களும் இருந்ததாகக் கூறுகிறார். சாங்-யென்-யுவான் (Chang Yen Yuan) என்பார் எழுதியுள்ள 'புகழ்பெற்ற ஓவியர்கள்' (Eminent Painters) என்ற நூலில் 370 ஓவியர்களைப் பற்றிக் கூறுகிறார். ஒரு படத்தை 20,000 வெள்ளிக் காசுகளுக்கு விற்க்கக்கூடிய அளவுக்கு மக்கள் ஓவியக் கலையை ஓம்பினர் எனவும் அவர் கூறுகிறார்.

பண்டைய சீன ஓவிய முறை இருவகைத்தாகும். ஒன்று பழமை சார்ந்தது (Classical); மற்றொன்று புத்துணர்ச்சி நிரம்பியது (Romantic). அவை முறையே வடகலை, தென்கலை எனவும் அழைக்கப்பட்டன. சீனாவின் வடபாகத்தில் ஓவியம் பழைய பாணியிலேயே போய்க்கொண்டிருந்தது. தென் சீனாவில்தான் புதுமையான ஓவியங்கள் முளைத்தன. மிங் ஹுயாங் (Ming Huang) என்ற மன்னரது அரண்மனையில் வாழ்ந்த லி-ஷு-ஷன் (Li Ssu-Shun) என்பார் முதல் வகை ஓவியத்தின் தந்தையாவார். அவரது படங்களில் பொருள்கள் உள்ளது உள்ளபடியே சித்திரிக்கப் பட்டன. அவை மிகத் தெளிவாகவும் துல்லியமாகவும் வரையப் பட்டன. வாங் வெய் (Wang Wai) என்ற ஓவிய விற்பன்னரே தென்கலையின் தந்தையாவார். அவரது ஓவியங்களில் பொருள் களின் உண்மையான தன்மை (Realism) புலப்படுத்தப்படவில்லை. பொருள்களைப் பார்க்கின்றபோது ஓவியக்காரனின் உள்ளத்தில் எழுகின்ற ஆன்மாநுபவங்களே சித்திரங்களாக வடிக்கப்பட்டன. அவற்றில் கற்பனை கலந்திருந்தது. 'ஒவ்வோர் ஓவியமும் ஒரு காவியம். ஒவ்வொரு காவியமும் ஓர் ஓவியம்' என அவர் கூறு வது வழக்கம்.

வு-டாய்-டிஜெ (Wu Tai Tze) என்பார் டாங் மன்னர்களால் ஆதரிக்கப்பட்ட ஓவியர்களுள் தலை சிறந்தவராவார். அவர் புத்தர் களையும் தெய்வங்களையும் மட்டுமின்றி, இவ் வுலகில் காணப்படும் மிருகங்கள், பறவைகள், கட்டடங்கள், இயற்கைக் காட்சிகள் முதலிய பல்வேறு பொருள்களையும் தமது ஓவியங்களில் சித்திரித் தார். பட்டு, காகிதம், சுவர் ஆகியவற்றின்மீது அவர் வரைந்தார். பௌத்த ஆலயங்களில் அவர் 300க்கு மேற்பட்ட ஓவியங்களை வரைந்துள்ளார். அவரால் வரையப்பட்டுள்ள புத்தர்களின்

முகங்களில் ஆழங்காண இயலாத ஒருவித தெய்வீக ஒளி வீசுகிறது. நரகத்தின் கொடுமைகளைச் சித்திரிக்கும் சித்திரங்களைப் பார்த்த பல வேடர்களும், மீன் பிடிப்பவர்களில் பலரும் தமது தொழில்களையே விட்டுவிட்டனராம். இறுதியில், அவர் வரைந்த பிரம்மாண்டமான இயற்கைக் காட்சி ஓவியத்தில் (Landscape Painting) காணப்பட்ட ஒரு குகைக்குள் புகுந்து அவர் மாயமாய் மறைந்துவிட்டார் என மக்களிடையே ஓர் கதை வழங்குகிறது.

சுங் மன்னர்களும் ஓவியங்களைப் பெரிதும் ஓம்பினர். ஹுய் சுங் (Hui Tsung) என்ற சுங் பேரரசர் ஓர் ஓவியப் பித்தர். அவரே பல படங்களை வரைந்துள்ளார். அவர் காலத்து 800 ஓவியர்கள் சீன நாட்டில் வாழ்ந்தனர். அவர்களை எல்லாம் திரட்டி ஓர் ஓவியக் கலைக் கூடத்தை அவர் ஏற்படுத்தினார். லி-லங்-மியன் (Li-Lung-Mien) என்பார் அக்கால அவைக்கள ஓவியராகத் திகழ்ந்தார். அவர் வடகலைப் பாணியில், பொருள்களை உள்ளது உள்ளபடியே தீட்டினார். ஒரு பிராணியை அவர் வரைந்தால், அதன் ஆன்மாவை அப்படம் கவர்ந்துகொள்ளும் என்று மக்கள் நம்பினார்கள். அவரால் வரையப்பட்ட குதிரைகள் பல இறந்து போயினவாம். அரண்மனைக்காக அவர் 107 ஓவியங்களை வரைந்தளித்தார்.

கு-கெய்-சிஹ் (Ku-Kai-Chih) என்பார் தலைசிறந்த ஓவியர்களில் ஒருவர். டாயிஸம், பௌத்தம் இவ்விரண்டு சமயங்களும் அவரது ஓவியங்களின்மீது பெரிதும் செல்வாக்குச் செலுத்தின. அவரது ஓவியத் திறன்பற்றி நாட்டில் பல கதைகள் ஏற்பட்டன. அவர் ஓர் அழகிய நங்கையைக் காதலித்ததாகவும், ஆனால் அந்நங்கை அவரை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டதாகவும், அதனால் கோபமுற்ற ஓவியர் அப்பெண்ணின் படத்தை வரைந்து அதன் இதயப் பகுதியில் ஒரு முள்ளைக் குத்திவிட்டாரென்றும், அதன் விளைவாக அப்பெண் சாகுந்தறுவாயை எட்டிவிட்டதாயும், அதைக் கண்ட அம்மாது அவரை ஏற்றுக்கொண்டதாயும், அதன் பின் ஓவியர் முள்ளை ஓவியத்திலிருந்து எடுத்துவிட்டதாயும், பெண் உடனே குணமடைந்துவிட்டாளென்றும் கூறப்படுகிறது. தனது சித்திரங்களை விற்று நான்கிங் கோயில் கட்டும் நிதிக்கு ஏராளமாகப் பணம் திரட்டித் தந்தாராம் அவர்.

# 9. பண்டைய ஜப்பானிய நாகரிகம்

*நாடும் மக்களும்*

ஆசியாவிலேயே இன்றைக்கு மிகவும் முன்னேற்றமடைந்துள்ள ஜப்பான் 4223 தீவுகளை உட்கொண்ட ஒரு நாடாகும். அவற்றுள் 600 தீவுகளில்தான் மக்கள் வசிக்கின்றனர். அவ்வறுநூறு தீவுகளிலும் ஐந்துதான் மிகப் பெரியவை. அவற்றுள் எல்லாவற்றுக்கும் பெரிய தீவு ஹொன்சு (Honshu) எனப்படும்.

புவியியல் (Geography) ஒரு நாட்டின் மக்கட் பண்பையும், வரலாற்றையும் பெரிதும் பாதிக்கின்றது என்ற உண்மை ஜப்பானுக்கு மிகவும் பொருத்தமானது. தீவுகள் அளவில் சிறியனவாக இருப்பதால், அவற்றில் வாழும் மக்கள் கடலுக்கு வெகு அருகில் வாழும் வாய்ப்பைப் பெற்றுள்ளார்கள். எனவே, அவர்கள் கடல் பயம் கிஞ்சிற்றும் இல்லாதவர்களாய், திரை கடலோடியும் திரவியம் தேடுகின்ற முயற்சி நிறைந்தவர்களாய் விளங்குகின்றனர். மற்றும் அங்கு அடிக்கடி பூகம்பங்கள் ஏற்படுவது வழக்கம். எனவே, மக்கள் பெரிய வீடுகளைக் கட்டிக் கொள்வதற்குப் பதிலாக இடிந்து விழுந்தாலும் பரவாயில்லை என்று கருதுதற்கேற்ற சிறிய மனைகளையே கட்டிக்கொள்கின்றனர். வீடுகள் எளிமையாயிருந்தாலும் துப்புரவாயும் அழகாயுமிருக்கின்றன. ஜப்பானில் நல்ல விளைச்சலைத் தரக்கூடிய செழிப்பான நிலங்கள் மிகக் குறைவு. எனவேதான் அவர்கள் இயல்பாகவே பல செய்பொருள்களை (Manufactured articles) உண்டாக்குகின்ற திறமையைப் பெற்றுள்ளனர். அங்ஙனம் உண்டாக்கிய பொருள்களைப் பிறநாடுகளில் விற்று உணவு தானியங்களை வாங்கிக்கொள்கின்றனர். மூர்த்தி சிறிதெனினும் கீர்த்தி பெரிது என்ற பழமொழிக்கிணங்க, உருவில் சிறியவர்களான ஜப்பானியர்கள் அறிவிலும் திருவிலும் சிறந்து விளங்குகின்றனர். இயற்கையில் ஏற்பட்டுள்ள குறைகளை அவர்கள் செயற்கையாக நீக்கி ஈடு செய்துகொள்கின்றனர். மற்றும் அவர்கள் அழகுணர்ச்சி மிக்கவர்களாயிருக்கின்றனர். ஏனெனில் இயற்கை அன்னையே அங்கு எழில் கொழிக்கக் கொலு வீற்றிருக்கிறாள். எங்குப் பார்த்தாலும் கண்களைப் பறிக்கும் பூக்களும் செடிகளும் நிறைந்து தோன்றுவதால் ஜப்பான் ஓர் பூங்காபோல் என்றும் தோற்றமளித்தவண்ணம் இருக்கின்றது.

ஜப்பானியப் பண்டைய மக்கள் ஆமூர் நதிக்கரையில் வாழ்ந்த அய்னஸ் (Ainus) என்ற ஒருவகை வெள்ளை இனத்தைச் சேர்ந்தவ ராவர். அவர்கள் உடம்பில் உரோமம் மிகக் குறைவு. எனவே உரோமம் மிகுதியாக உள்ள காட்டுமிராண்டிகளைக் காட்டிலும் தாங்கள் பெரிதும் உயர்ந்த நாகரிகமடைந்தவர்கள் என்று கூறிக் கொள்கின்றனர். கி.மு. 7ஆம் நூற்றுண்டில் கொரியா தீபகற்பத்தி லிருந்து மஞ்சள் நிறம் பொருந்திய மங்கோலிய இனத்தினர் ஜப்பானில் புகுந்தனர். அதற்கப்புறம் மலேயா, இந்தோனீஷியா முதலிய தென்கிழக்கு ஆசிய நாடுகளிலிருந்து ஒருவகைக் கறுப்பு நிறத்தவர்கள் வந்து ஜப்பானுக்குள் நுழைந்தனர். இவர்கள் யாவரும் கலந்ததனுல் ஏற்பட்ட ஓர் கலப்பு இனமே ஜப்பானிய இனமாகும். அவ்வினத்தவர்கள் ஓரளவு மஞ்சள் நிறம் பொருந்திய வர்கள். நல்ல உடற்கட்டு வாய்ந்தவர்கள். மது அருந்துவதில் பெரிதும் இன்பம் காண்பவர்கள். பெண்கள் உடம்பெல்லாம் பல நிறங்கள் கொண்ட சாயத்தைப் பூசிக்கொள்வர்.

### சமுதாய அமைப்பு

பண்டைய ஜப்பானிய சமுதாயத்தில் பலர் பழங்குடி மரபுகளைச் சார்ந்து ஒழுகினர். சிலர் நிலமானிய மரபுகளைக் கைக்கொண்டு ஒழுகினர். பெரும் பிரபுக்கள் பலர் ஏராளமான நிலங்களை வைத் திருந்தனர். அவர்களிடம் ஏராளமான மானியதாரர்கள் இருந் தனர். வயலில் சுயேச்சையாக வேலை செய்துவிட்டுக் கூலி வாங்கிச் சென்று வாழ்க்கையை அநுபவித்தோர் பலர் இருந்தனர். ஒருவித உரிமையுமின்றி நிலமே கதி என உழைத்துக்கொண்டு கிடந்த வர்கள் அடிமைகள் ஆவர். விவசாயமேயன்றி நாளடைவில் (கி.பி. 3ஆம் நூற்றுண்டு) பல சிறு கைத்தொழில்கள் வளர்ந்தன. அத்தொழில்களில் ஈடுபட்டோர் பலரும் சிறுசிறு குழுக்களாகத் தம்மை அமைத்துக்கொண்டனர். அத்தகைய தொழில் குழுக் களும் சமுதாயத்தில் தனிப்பட்ட உறுப்புகளாய் மாறின.

### சமயம்

ஜப்பானியர்கள் ஆதியில் பிராணிகளையும், இறந்துபோன முன்னோர்களையும், ஆண், பெண் குறிகளையும் வணங்கினர். கட்புலனுக்குப் புலப்படாத ஆவிகள் உலகமெங்கும் வசிப்பதாக அவர்கள் நம்பினர். எதிர்காலத்தைப் பற்றி குறிசொல்வதில் அவர்கள் பெரிதும் அக்கறை காட்டினர். மானின் எலும்பைத் தீயிட்டுக் கொளுத்தி, தீயினுல் அவ் வெலும்பில் ஏற்பட்ட வடுக்களைக் கொண்டு அவர்கள் சிலசமயம் எதிர்காலத்தில் நடக்கப் போகிறவைகளைப்பற்றி ஜோசியம் கூறினர்.

ஷிண்டோயிஸம் (Shintoism) என்ற ஓர் வழிபாட்டு முறையை அன்னோர் பலரும் கடைப்பிடித்தனர். அம்முறையில் குறிப்பிட்ட கொள்கைகளோ, சடங்குகளோ எதுவும் கிடையாது. இன்னின்ன ஒழுக்கமுறைகளைக் கடைப்பிடிக்க வேண்டுமென்ற நியதியும் கிடையாது. மறுமை, பரலோகம், மரணமிலாப் பெருவாழ்வு போன்ற கொள்கைகளைப்பற்றியும் அதில் பேசப்படவில்லை. அதில் நம்பிக்கையுள்ளவர்கள் செய்ய வேண்டுவதெல்லாம் ஷிண்டோ மத சம்பந்தமான ஓர் புனித தலத்திற்குச் சென்று, தமது முன்னோர்கள், தாம் பிறந்த குலம், தம்மை ஆளும் பேரரசர் ஆகியோர்களை உளமார வழிபட வேண்டும். அவ்வளவுதான்.

கி.பி. 522ஆம் ஆண்டளவில் ஜப்பானில் மஹாயான பௌத்த மதம், சீனாவிலிருந்து மெல்ல வந்து புகுந்துகொண்டது. பௌத்த மதக் கடவுளர்களான அமிதபர் (Amitaba), குவானன் (Kwannon) ஆகியோர்களை ஜப்பானியர் வழிபடலாயினர். அத் தெய்வங்களின் சாந்த குணம் அவர்களுக்குப் பெரிதும் பிடித்திருந்தது. மக்கள் பயபக்தியோடும்,அமைதியாகவும்,கட்டுப்பாட்டுடனும் வாழ்வதற்கு பௌத்த மதம் பெரிதும் துணைபுரிந்தது. வாழ்க்கையில் துயர் ஏற்பட்டபோது தம்மைத்தாம் தேற்றிக்கொள்ளவும் அது மக்களுக் குக் கற்பித்தது. எனவே, மன்னர்கள் எளிதாக மக்களைக் கட்டுப் படுத்தவும் அமைதியை நிலைநாட்டவும் முடிந்தது. கி.பி. 592-ல் சூய்கோ (Suiko) எனும் பௌத்த அரசர் அரியணையைக் கைப்பற்றினார். ஜப்பானின் அசோகர் என அழைக்கப்படும் அப்பேரரசர் பல பௌத்த ஆலயங்களை எழுப்பினார். பௌத்த தர்மத்தைப் பரப்ப அவர் பலவகையிலும் பாடுபட்டார். கலைகளையும் கைத்தொழில்களையும் ஓம்பினார். கொரியாவிலிருந்து பல கலைஞர் களை வரவழைத்து அவர்களுக்குப் பலவித வசதிகளையும் செய்து தந்து ஆதரித்தார். கி.பி. 645-ல் கமதரி (Kamatari) என்ற வலிமை மிக்க பிரபு, பரம்பரையாக வந்த அரசிளங்குமரனை அரியணையி லிருந்து அகற்றிவிட்டுத் தனக்குப் பிடித்தமான ஓர் அரசனை அதிகார பீடத்திலமர்த்தினார். அதிலிருந்து ஜப்பானிய அரசனின் அதிகாரமும் பலமும் நாளுக்குநாள் வளர ஆரம்பித்தது.

*பேரரசு காலம்*

கி.பி. 794 முதல் 1192 வரை ஜப்பானில் வலிமைமிக்க பேரரசர்கள் பலர் ஆண்டனர். இக் காலத்தைப் பேரரசு காலம் (Imperial age), ஜப்பானின் பொற்காலம் (Golden age of Japan) என்றெல்லாம் வரலாற்றாசிரியர்கள் அழைப்பர். இக் காலத்தே மக்கள் நலனில் அக்கறை கொண்ட நல்லரசர்கள்

பலர் செங்கோலோச்சினர். எனினும் யோசெய் (Yozei) போன்ற கொடுங்கோலர்களும் ஒரு சிலர் இருந்தனர். யோசெய் என்பார் ஒரு கல்நெஞ்சர். மக்களை மரங்களின்மீது ஏறும்படி வற்புறுத்தி, அங்ஙனம் அவர்கள் ஏறிக்கொண்டிருக்கையிலேயே அவர்கள்மீது அம்பெய்திக் கொல்வதில் தனி மகிழ்ச்சியடைவார். இளம் மங்கையரைப் பிடித்துக் குளத்தில் தள்ளி அவர்கள் சாவதைக் கண்டு களிப்புறுவார். இத்தகைய கொடுங்கோலரைப் பிரபுக்கள் விரைவிலேயே அரியணையிலிருந்து அகற்றினர். தலைநகரும் மாற்றப்பட்டது. ஜனராவிலிருந்து நகோக்காவுக்கும் அதன்பின் கியோடோ (Kyoto)வுக்கும் தலைநகர் மாறியது. புதிய பேரரசர்களைப் பிரபுக்கள் நியமித்தனர். அவர்களுள் டெய்கோ (Daigo) என்பார் மிகச் சிறந்தவர். அவரது ஆட்சிக் காலத்தே (கி.பி. 898-930) சீன நாகரிகம் ஜப்பானுக்குள் புகுத்தப்பட்டது. கியோடா நகரம் ஜப்பானிய நாகரிகத்தின் உறைவிடமாக மாறியது. அங்கு நிலவும் நடையுடை பாவனைகள் நாடெங்கும் கடைப்பிடிக்கப்பட்டன. இசை, நாட்டியம், கட்டடக்கலை, சிற்பம் போன்ற நுண்கலைகளும், இலக்கியமும் நன்கு வளர்ந்தன. பருத்திக்குப் பதிலாகப் பட்டு மக்களின் ஆடைகளுக்காகப் பயன்படுத்தப்பட்டது. ஆடம்பரமும் கோலாகலமும் தலைநகரில் தலைவிரித்தாடின. ஆனால், விரைவிலேயே சாயம் வெளுத்துவிட்டது. வீண் ஆடம்பரங்களின் விளைவாக நாட்டில் பஞ்சமும் வறுமையும் ஏற்பட்டன. எங்குப் பார்த்தாலும் லஞ்சமும், கொலைகளவு போன்ற பெருங்குற்றங்களும் காணப்பட்டன. பிரபுக்களிடையே ஒழுக்கமும் நேர்மையும் குறைந்தது. அவர்கள் தமக்குள்ளேயே சச்சரவிட்டுக் கொண்டனர். தடியெடுத்தவன் தண்டல்காரன் என்ற நிலை ஏற்பட்டது. இக் குழப்பநிலையைப் பயன்படுத்திக்கொண்டு ஷோகுன்கள் (Shoguns) என்ற இராணுவப் பிரபுக்கள் அதிகாரங்களைக் கைப்பற்றிக்கொண்டனர். பேரரசர்களை அவர்கள் கைப்பாவைகளாக ஆட்டிப் படைத்தனர். மக்கள் பேரரசர்களை மதிப்பதை விட்டுவிட்டு நேரடியாக ஷோகின்களையே வணங்கலாயினர். வரிகளையும் நேராக ஷோகுன்களுக்கே மக்கள் கட்டினர்.

***நிலமானியக் காலம்* (Feudal age)—ஷோகுனேட் வல்லரசு**

கி.பி. 1192-ல் யோசிடோமோ (Yositomo) என்பாரது தலைமையில் ஷோகுனேட்டுகள் ஓர் சுதந்திர அரசைக் காமகுரா எனுமிடத்தில் அமைத்தனர். அதற்கு எதிராக 1199-ல் கிளம்பி ஹோஜோக்கள் (Hojos) ஓர் தனியரசை ஏற்படுத்தினர். அவர்கள் ஏறத்தாழ 134 ஆண்டுகள் நாட்டை ஆண்டனர். 1291-ல், குப்ளேகான் (Kublai Khan) எனும் மங்கோலிய அரசன் ஜப்பானைத்

தாக்கினர். ஆனால், புயல் காரணமாக அவர் வந்தவழியே திரும்பி விட்டார். டகாடோகி (Takatoki) எனும் அரசர் காலத்து ஆட்சி பெரிதும் சீர்குலைந்தது. நாய்கள் என்றால் அவ்வரசருக்கு உயிர் வரிகளுக்கும் கப்பங்களுக்கும் பதிலாக நாய்களை அவர் கேட்டுப் பெற்றுக்கொண்டார். எனவே, அஷிகாகா (Ashikaga) எனும் பிரபுக்கள் அவரை ஒழித்துவிட்டுப் புதிய அரசை அமைத்தனர். அவரது வமிசத்தவர்கள் 250 ஆண்டுகள் ஜப்பானை ஆண்டனர். அதன்பின் மீண்டும் குழப்பநிலை ஏற்பட்டது. ஒழுங்கும் கட்டுப் பாடும் நிலைகுலைந்தன. மக்களை நல்வழிப்படுத்தி நாட்டின் ஒற்றுமையைநிலைநாட்ட வேண்டுமென்றுநொபுநாகா (Nobunaga), ஹிடயோசி (Hideyoshi), இயயாசு (Iyayasu) ஆகிய மூவ்வீரர்கள் கிளம்பினர். அவர்களில் முதல் இருவரும் தமது குறிக்கோளி னின்றும் தவறினர். மூன்றும் வீரன் டொக்குகாவா ஷோகுனேட் (Tokugawa) என்ற வமிசபரம்பரையை நாட்டில் தோற்றுவித்தான். அவ் வமிசத்தாரின் ஆட்சியில்தான் ஜப்பானிய நாகரிகம் நன்கு பல துறைகளிலும் மலர்ச்சி அடைந்தது.

### பேரரசு காலத்து நாட்டின் நிலை, அரசியல் நிலை—பேரரசர்

ஜப்பானின் தனிப்பெருந் தலைவராக இக்காலத்தே விளங்கிய வர் அதன் பேரரசர் (Emperor) ஆவார். அவர் தெய்வீகம் பொருந்தியவராக மக்களால் மதிக்கப்பட்டார். அவரும் தமது தெய்வீகத்தை நிலைநாட்டும் வகையில், தம்மை ஆடை அணிக ளால் அலங்கரித்துக் கொண்டு, கம்பீரமாகக் கொலுவீற்றிருந்தார். அவர் கூடியவரை பொதுமக்களின் கண்களுக்குப் படாமலேயே வாழ்ந்தார். ஆண்டுக்கு ஓரிரு முறையே அவர் மக்கள் காணும் வகையில் வீதிகளில் பவனி வருவார். அப்போது அவர் ஓர் தெய்வம் போன்று தம்மை அலங்கரித்துக்கொண்டு ஆடம்பரமாக உலா வருவார். மக்கள் அவரது பாதங்களில் சாரிசாரியாக வீழ்ந்து வணங்குவர். இங்ஙனம் வெளிப்பார்வைக்குப் பேரரசரே சர்வ வல்லமை பொருந்தியவராகக் காணப்பட்ட போதிலும் உண்மை யான அதிகாரம் ஷோகுன்கள் என்ற பிரபுக்கள் கைகளிலேயே இருந்தது. அவர்களின் வெறும் கைப்பாவையாகவே பேரரசர் விளங்கினர். அவர்களின் விருப்பப்படியே நாட்டின் ஆட்சிமுறை நடைபெற்று வந்தது.

### மந்திராலோசனைக் குழு

பேரரசருக்கு ஆலோசனை கூறப் பன்னிருவர் அடங்கிய சபை (Council) ஒன்று இருந்தது. அவ் வாலோசனைகளைச் செயற்படுத்த ஒரு கண்காணிப்பாளர் குழு (Board of Censors) அமைக்கப்பட்டிருந்

தது. டெய்மியோக்கள் (Daimyos) என்ற பெரும் பிரபுக்களே இத்தகைய ஆட்சிக்குழுக்களில் இடம்பெற்றிருந்தனர். ஒவ்வோர் ஆட்சித்துறைக்கும் ஒவ்வொரு பிரபு தலைமை வகித்தார். அவருக்குக் கீழ் பேரன்கள் (Barons) ஸ்கொயர்கள், (Squires) போன்ற சாதாரண பிரபுக்கள் இருந்தனர். இத்தகைய பிரபுக்கள் சமுதாயத்தின் கடைநிலையில் வாழ்ந்தவர்கள் (Samurai) என்ற வாளேந்திய வீரர்களாவர். இவ்வாட்படை வீரர்களை இடைக்கால ஐரோப்பாவின் நைட்டுகளோடும் (Knights) நம்நாட்டு இராஜபுத்திர வீரர்களோடும் ஒப்பிடலாம். அவர்கள் நாட்டுக்காகவே தம்மை முற்றிலும் அர்ப்பணித்துக் கொண்ட தியாகிகளாவர்; தமக்கென வாழாது பிறர்க்கெனவே வாழ்ந்த அப்பெருமக்கள் ஆபத்துக் காலத்தே, தம்மை அடுத்தார் அனைவருக்கும், குறிப்பாகத் தமது ஆண்டையர்க்கு (Masters) உடுக்கை இழந்தவன் கைபோல் ஓடோடியும் வந்து இடுக்கண் களைந்தனர். பொருள்மீது சிறிதும் ஆசையற்றவர்கள்; தமக்கெனச் சொத்து எதையும் சேர்த்துவைத்துக்கொள்ளாதவர்கள். ஆனால், கையிலிருப்பதைக் கரவாமல் பிறர்க்குக் கொடுத்து உதவுபவர்கள்; ஒரு நாளைக்கு ஒரு போதே உண்பர். மிகச் சிக்கனமாக வாழ்வர்; கண்ணிய மிக்கவர்கள்; உயிரைவிட மானத்தையே பெரிதென மதிப்பவர்கள். எதிரிகளின் கைகளில் சிக்குவதைவிட இறப்பதே மேல் எனக் கருதுபவர்கள்; தமது எஜமானர்களிடம் மாறுத விசுவாசமுடையவர்கள்; எஜமானர் போரில் இறந்துவிட்டால் உடனே அவரைச் சேர்ந்த சாமுராய் வீரர்கள் அனைவரும் வாளையுருவி வயிற்றில் குத்திக்கொண்டு தற்கொலை புரிந்துகொள்வர். இத்தகைய தற்கொலை முறைக்கு ஜப்பானிய மொழியில் சப்புகு (Sappuku) எனப் பெயர். சப்புகு என்றால் வயிற்றை அரிந்து கொண்டு சாதல் என்பது பொருள். ஹரகிரி (Harakiri) என்றும் அது அழைக்கப்படும். ஜப்பானியர்கள் ஹரகிரிக்கு அஞ்சாதவர்கள். தமது விரோதிகளைக் கொன்று பழிதீர்த்துக் கொண்டபின் அவர்கள் சப்புகு முறையில் தம்மை அழித்துக் கொள்வது வழக்கம். தங்களது எஜமானர்களைக் காக்கத் தங்களது உயிரைத் தியாகம் செய்வதை அவர்கள் ஒரு கடமையாக எண்ணினர். இரண்டாம் உலகப் போரின்போது எதிரியின் கப்பல்களை நாசம் செய்யக் குண்டுகளை வயிற்றில் கட்டிக்கொண்டு சென்று அவற்றின் மீது மோதிக் கப்பலோடு தம்மையும் அழித்துக்கொண்ட ஜப்பானிய வீரர்கள் பலராவர். மரண தண்டனை விதிக்கப்பெற்ற குற்றவாளிகள் சிறையிலேயே உயிரை மாய்த்துக்கொள்வது சாதாரணமாக ஜப்பானில் நடைபெறுவதொன்றாகும். போரில் தோல்வியுற்ற வீரர்களும் இங்ஙனம் தற்கொலை புரிந்து கொள்வது வழக்கம். 1895-ல் லியோடுங் (Liotung) எனுமிடத்தைப் பிரிட்டிஷார் கைப்

பற்றிக் கொண்டபோது 40 ஜப்பானியத் தலைவர்கள் சப்புகு முறைப் படி தம் உயிரையே மாய்த்துக்கொண்டனராம். சாமுராய் வீரர் களின் மனைவியரும் உயிர்க்கஞ்சா வீராங்கனைகளாவர். போரில் புறங்கண்டு திரும்பும் கணவரை அவர் திரும்பிப் பாரார்; தம் கணவர் போரில் மாய்ந்தார் எனக் கேட்டால் உளம் பூரிப்பர். கணவர்களுடன் தாமும் உயிர்விடுவதில் மட்டற்ற மகிழ்ச்சியடை வர். கணவரை இழந்த உடன் தீக்குளித்த இராஜபுத்திரப் பெண்டிரையும் போரில் மாய்ந்தான் தன் மகன் எனக் கேட்டு உளம் பூரித்த தமிழ்ப் பெண்டிரையும், ஜப்பானியச் சாமுராய்ப் பெண்கள் நமக்கு நினைவூட்டுகின்றனர்.

***சட்டம்***

ஜப்பானியர்களின் சட்டங்கள் சீனர்களின் சட்டங்களைப் பின் பற்றியே அமைந்திருந்தன. அவற்றை ஒழுங்குபடுத்தியவர் டென்ச்சி டின்னோ (Tenchi Tinno) எனும் அறிஞராவார். அவர் மொம்மு (Mommu) என்ற பேரரசரின் காலத்து வாழ்ந்தவர். கி.பி. 702-ல்தான் அவர் தமது சட்ட நூலை வெளியிட்டார். ஆனால், இச்சட்டங்களெல்லாம் நிலமானியமுறை நாட்டில் நிலவியபோது அவ்வளவாக எடுபடவில்லை. தடியெடுத்தவன் தண்டல்காரன் என்ற நிலையே எங்கும் காணப்பட்டது. சாமுராய் வீரர்கள் எத்தகைய சட்டமுறையையும் ஏற்றுக்கொள்ள மறுத்தனர். ஆனால், அவர்கள் தங்களது எஜமானர்கள் சொல்வதையே சட்ட மாக எண்ணினர்.

ஜப்பானியக் குற்றவியல் சட்டம் (Criminal law) மிகவும் கடுமை யானது. ஒரு குடும்பத்தின் தலைவன் ஒரு குற்றத்தைச் செய்ததாக மெய்ப்பிக்கப்பட்டால், அக்குடும்பத்திலிருந்த வயது வந்த ஆண் கள் யாவரும் சிரச்சேதம் செய்யப்பட்டனர். வயது வராத இளைஞர் கள், வயது வந்த உடன் நாடு கடத்தப்பட்டனர். குற்றவாளிகளிட மிருந்து உண்மையை வெளிப்படுத்த சித்திரவதை (Torture) முறை களும் கடுஞ்சோதனை முறைகளும் (Ordeel) கடைப்பிடிக்கப்பட்டன. குற்றவாளிகளுக்கு அளிக்கப்பட்ட தண்டனைகளும் சில சமயங்களில் மிகவும் கொடூரமாயிருந்தன. கழுத்தை நெறித்துக் கொல்லுதல், எரித்தல், கொதிக்கும் எண்ணெய்க் கொப்பறைக்குள் தூக்கிப் போடல், உடலை இரண்டாக அரிந்து, வீதிகளின் ஓரத்தில் எறிதல் போன்ற முறைகளால் பலர் தண்டிக்கப்பட்டனர்.

***நிலமானியமுறைக் காலத்து அரசியல் நிலை***

*ஹிடயோஷி*(Hideyoshi): ஜப்பானில் நிலமானிய முறை நிலவிய காலத்தே ஹிடயோஷி என்ற புகழ்பெற்ற தலைவர் ஒருவர் தோன்றி

னர். இளவயதிலேயே அவர் ஓர் கட்டுக் கடங்காத காளையாகத் திகழ்ந்தார். ஓர் பௌத்த மடத்தில் அவரது பெற்றோர்கள் அவரைச் சேர்த்தனர். ஆனால், மடத்தின் விதிகளுக்கு அடங்காத காரணத்தால் அவர் அங்கிருந்து விரைவிலேயே வெளியேற்றப் பட்டார். அதன் பின் அவர் ஏறத்தாழ 37 முறை வெவ்வேறு தொழில்களில் சேர்ந்து அவற்றினின்றும் விரட்டியடிக்கப்பட்டார். இறுதியில் அவர் பட்டாளத்தில் சாமுராய் வீரராகச் சேர்ந்தார். நொபுநகா (Nobunaga) என்ற மன்னரின் நன்மதிப்பைப் பெற்று விரைவிலேயே நாட்டின் தளபதிகளுள் ஒருவரானர். கலகம் செய்த பிரபுக்களை அடக்கி நாட்டில் ஒற்றுமையை நிலைநாட்ட அவர் மன்னருக்குப் பேருதவியாக இருந்தார். 1582-ல் நொபுநகா இறந்தபோது, அவர் ஆட்சியைக் கைப்பற்றிக்கொண்டார். மூன்றே ஆண்டுகளில் நாட்டில் பாதிக்கு மேல் அவருக்கு அடிபணிந்தது. சீனவையும், கொரியாவையும் கூடத் தாம் வெல்லப் போவதாக அவர் மார்தட்டிப் புறப்பட்டார். ஆனல், கொரியர்கள் அவரது கப்பற்படையை வென்று மூழ்கடித்து விட்டனர். எனவே, அவர் வெறுங் கையோடு நாடு திரும்பினர்.

ஹிடயோஷி ஓர் நல்ல ஆட்சியாளர். அவரது காலத்தே நாட்டில் அமைதி நிலவியது. அறம் தழைத்தது. கலைகள் ஓம்பப் பட்டன. ஜப்பானின் சிறப்பியல்பான தேனீர்ச் சடங்கு (Tea Ceremony) இவரது காலத்தில்தான் தோன்றிற்று. பானை வனையும் கலை நன்கு வளர்ச்சியடைந்தது இவரது காலத்திற்றாகும். பிரான்ஸிஸ் ஸேவியர் என்ற கிறிஸ்தவப் பாதிரியார் இவரது காலத்திற்றான், ஜப்பானுக்குள் புகுந்து தமது மதத்தைப் பரப்பினர். இயேசு சபையைச் சேர்ந்த 70 பாதிரிகள் நாட்டில் சமயப் பிரசாரம் செய்தனர். விரைவிலேயே 150,000 கிறிஸ்தவர்கள் நாட்டில் தோன்றினர். ஆனல், அவர்கள் பௌத்தர்களைப் பழித்தனர். பௌத்த மடங்களைத் தீக்கிரையாக்கினர். அதைக் கண்ட ஹிடயோஷி வெகுண்டு கிறிஸ்தவப் பாதிரிகளையெல்லாம் நாட்டை விட்டே விரட்டிவிட்டார். சாமுராய் வீரர்களின் வாள்களை எல்லாம் பிடுங்கி ஓர் பிரம்மாண்டமான புத்தர் சிலையை உருவாக்கினர். மக்கள் அதை வழிபடுமாறு செய்து பௌத்த மதத்தைப் பரப்பினர்.

***அயயாசு* (Iyeyasu):** ஹிடயோஷிக்குப் பின் அயயாசு என்ற ஷோகுன் வீரர், தமது தலைவரின் மகனை ஹிடயோரியைச் சிறையிலடைத்து விட்டுத் தாமே ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டார். தம்மை எதிர்க்கக் கூடியவர்களையெல்லாம் கொன்று ஒழித்தபின் அவர் சமாதானப் பிரியராக விளங்கினர். சாமுராய் வீரர்களை

எல்லாம் அழைத்துப் போர்த்தொழிலை விட்டு விட்டு இலக்கியத்தையும், தத்துவத்தையும் கற்குமாறு ஆணையிட்டார். விதவைகளையும், அநாதைகளையும் ஆதரித்தார். நிலமானிய முறைப்படி நாட்டில் பல்வேறு வகுப்புகள் வளர்வதை அவர் தடுக்கவில்லை. தல அதிகாரிகள் அத்துமீறிப் போகாதபடி பார்த்துக் கொண்டார். பௌத்தம், ஷிண்டோயிஸம் ஆகிய இரு சமயங்களையும் கலந்து ஓர் பொது மதத்தை உண்டாக்கி மக்கள் யாவரையும் அதைப் பின்பற்றுமாறு கூறினர். இவ்வகையில் அவரை அக்பருக்கு நாம் ஒப்பிடலாம். அவர் கிறிஸ்தவ மதத்தையும் நாட்டில் தடைசெய்ய வில்லை. சமயப் பொறையைக் கடைப்பிடித்தார். தமது தனி நலனைக் காட்டிலும் நாட்டு நலனே பெரிது என எண்ணினர். தனக்குப்பின் தனது மகன் ஒழுங்காக இல்லை எனில் அவனை நீக்கி விட்டுப் பிரபுக்களே ஆட்சியை நடத்தலாம் என அவர் தமது மரணத்தறுவாயில் கூறினர் எனில் அவரது உள்ளம் எவ்வளவு பரந்தது என்பது சொல்லாமலே பெறப்படும்.

அவரது வழிவந்தோர் டொகுகாவா ஷோகுன்கள் (Tokugawa Shogunate) எனப்பட்டனர். அவர்கள் மிகவும் சிக்கனமாக வாழ்ந்து நாட்டு நலனை ஓம்பினர். வறுமையைப் போக்கிக் கலைகளை வளர்த்தனர். இலக்கியத்தையும் ஓவியத்தையும் ஆதரித்தனர். குடிமக்கள் தமது குறைகளை விண்ணப்பித்துக் கொள்ள, குறை விண்ணப்பப் பெட்டி ஒன்றை அவர்கள் உயர்நீதி மன்றத்தருகே வைத்திருந்தனர். மக்கள் இவர்கள் காலத்தே மிகவும் மகிழ்ச்சி யாகவும், சிறப்பாகவும் வாழ்ந்தனர்.

## ஜப்பானிய மக்களின் வாழ்க்கை முறை

*பொருளாதார வாழ்க்கை*

ஜப்பானிய மக்கள் பல்வேறு தொழில்களில் ஈடுபட்டிருந்தனர். வேளாண்மையே அவற்றுள் மிக முக்கியமான தொழிலாகும். ஆரம்பத்தில் நிலங்கள் யாவும் தேசிய உடைமையாகவே இருந்தன. ஆனல், நாள்டைவில் தனிப்பட்ட நிலக்கிழார்கள் ஆங்காங்கே தோன்றினர். அரசாங்கத்தின் தலையீடின்றி அவர்கள் சுயேச்சையாக நிலத்தைப் பயிரிட்டனர். நில உரிமையற்ற குடியானவர்கள் பலர் அவர்களுடைய நிலங்களை உழுது பயிரிட்டனர். அக்குடியானவர்கள் சற்றே சோம்பினும் அவர்களைத் துன்புறுத்தவும், கொன்றுவிடவும் நிலக்கிழார்கள் உரிமை பெற்றிருந்தனர். நிலத்தை உண்மையிலேயே உழுது பயிரிட்ட குடியானவர்கள் ஏழ்மையில் மூழ்கிக் கிடந்தனர். கூலி மிகவும் குறைவாயிருந்தது. அவர்கள் தங்களது ஆண்டையர்களின் சொந்த நிலங்களில் 30

நாட்கள் வரை இலவசமாக உழைக்குமாறு வற்புறுத்தப்பட்டனர். மீதி நாட்களில் அவர்கள் தமக்கென அளிக்கப்பட்ட நிலங்களில் உழுது பயிரிட்டு அதில் கிடைத்த விளைச்சலில் ஒரு பகுதியைத் தமது ஆண்டையர்களுக்கு வரியாகச் செலுத்தினர். ஆறு முதல் நாற்பது சதவிகிதம் வரை வரி வசூலிக்கப்பட்டது. நாட்டில் அவ்வப் போது பஞ்சம் ஏற்படுவதுமுண்டு. 1181ஆம் ஆண்டில் குயோடோ (Kyoto) நகரில் ஏற்பட்ட பஞ்சத்தின் விளைவாக 42,300 பேர்கள் இறந்துபட்டதாகத் தெரிகிறது.

விவசாயமே அன்றி வேறு பல தொழில்களும் நாட்டில் வளர்ச்சியடைந்தன. செம்பு, பித்தளை, வெள்ளி, தங்கம்போன்ற உலோகங்கள் சுரங்கங்களிலிருந்து வெட்டியெடுக்கப்பட்டு சுத்திகரிக் கப்பட்டன. எனவே சுரங்கத் தொழில் ஓர் முக்கியத் தொழிலாக வளர்ந்திருந்தது. நெய்தற்றொழிலில் ஜப்பானியர் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தனர். சீனர்களைப் போன்றே அவர்களும் பட்டுத் துணி நெய்வதில் வல்லவர்களாயிருந்தனர். மரத்தினால் செய்யப்பட்ட அழகிய பெட்டிகள், கதவுகள், அலமாரிகள், இசைக் கருவிகள், படச்சட்டங்கள் முதலியவைகளும் ஏராளமாக உற்பத்தி செய்யப் பட்டன. ஒவ்வொரு தொழிலில் ஈடுபட்டிருந்த அனைவரும் தனித் தனி தொழிற் குழுக்களை ஏற்படுத்திக் கொண்டனர். அவற்றில் ஒரு சில குழுக்கள் இக்காலத்திய பாங்குகள் போல் தொழில் புரிந்தன. தொழில்'விற்பன்னர்களுக்கு அவை கடன் கொடுத்து உதவின. வாணிபத்தால் செல்வம் திரட்டிய பல பிரபுக்கள் நிலப் பிரபுக்களுக்கு நிகராக ஆடம்பர வாழ்க்கையை மேற்கொண்டனர்.

### சமுதாய வாழ்க்கை

பேரரசு காலத்தே ஜப்பானிய சமுதாயத்தில் எண்வகையான வகுப்புகள் இருந்தன. ஆனால், நிலமானியக் காலத்தில் அவை நான்காகக் குறைந்துவிட்டன. சாமுராய் (Samurai) என்ற பிரபுக்கள், கைவினைஞர்கள், உழவர்கள், வணிகர்கள் ஆகியோரே இந்நால்வகை வகுப்பினராவர். ஜப்பானிய மகளிர் உருவில் சிறியவர்களாய் தென்பட்டாலும் நல்ல உளவுறுதி கொண்டவர் களாய் விளங்கினர். ஏனைய மகளிரைப் போலவே அவர்கள் தங்கள் மேனிகளைப் பலவகையிலும் அலங்கரித்துக் கொண்டனர். நகங்களிலும், உதடுகளிலும் அவர்கள் பல்வேறு நிறமுள்ள சாயங் களைப் பூசிக்கொண்டனர். இமையை மழித்துவிட்டு அதற்குப் பதிலாகக் கறுப்பு மையினால் செயற்கைப் புருவத்தை வில்வடிவத்தில் வரைந்து கொண்டனர். ஆண்கள் தங்கள் தலையை முற்றிலும் மழித்துக்கொண்டனர். ஆனால், தாடிகளை நீளமாக வளர்த்துக்

கொண்டனர். பட்டாலும் பருத்தியாலும் ஆன நேர்த்தியான ஆடைகளை அணிந்தனர்; படாடோபமான பட்டாடைகளைவிட எளிய பருத்தி ஆடைகளையே நாளடைவில் தேசிய உடையாக மாற்றிக்கொண்டனர். டொக்குகாவா ஷோகுன்கள் காலத்தில் பட்டாடைகளை அணியக்கூடாதென்ற கட்டுப்பாடு கொண்டுவரப் பட்டது. ஆனால், நடைமுறையில் செல்வந்தர் பலர் பட்டாடைகளை மறைமுகமாக அணிந்துகொண்டே வந்தனர்.

ஜப்பானியர்களின் முக்கிய உணவுப் பொருள்கள் அரிசி, மீன், காய்கறிகள் முதலியவைகளாகும். அவ்வப்போது சிறிதளவு இறைச்சியையும் அவர்கள் உட்கொண்டனர். பௌத்த மதத்தைத் தழுவிய பேரரசர்கள் சிலர் ஊன் உணவை அறவே ஒழிக்க முயன்றனர். ஆனால், அவர்களது முயற்சி தோல்வியுற்றது. சந்நியாசிகளும்கூட மறைமுகமாக இறைச்சியை உண்ண ஆரம்பித்தனர். ஜப்பானியர்கள் மிக விரும்பிப் பருகிய பானம் தேனீராகும். மிக நேர்த்தியான தட்டுகளையும், கோப்பைகளையும் கொண்டு அவர்கள் விருந்தினர்களுக்குத் தேநீர் அளித்து உபசரிப்பதை ஓர் கலையாக வளர்த்தனர். அவ்வப்போது தேனீர் விருந்து பல்வேறு சடங்குகளுடன் ஜப்பானியக் குடும்பங்களில் நடைபெற்றவண்ண மிருந்தன. அமைதியும், மரியாதையும், அழகும் அத்தகைய சடங்குகளில் பூத்துக் குலுங்குவதைக் கண்டு ஆச்சரியப்படாத அந்நியர்கள் ஒருவரும் இல்லையெனலாம்.

ஜப்பானியர்களால் பெரிதும் போற்றி வளர்க்கப்பட்ட மற்றொரு கலை பூக்களை நேர்த்தியாகக் கோத்து வரிசைப்படுத்தும் முறை யாகும். அலங்காரமாகப் பூக்களை வரிசைப்படுத்தி வீடுகளை அழகுபடுத்துவதில் ஜப்பானியர்களுக்கு நிகர் ஜப்பானியரே எனலாம். பூக்களை ஜோடிப்பது எப்படி என்பதைக் கற்றுக் கொடுப்பதற்கென்றே பல ஆசிரியர்கள் இருந்தனர். பல்வேறு பூக்களைத் தோட்டங்களில் எவ்வாறு வளர்ப்பது என்பது பற்றியும் அத்தகைய ஆசிரியர்கள் கற்பித்தனர். எங்கெங்கு அழகிய பூந்தோட்டங்கள் இருந்தனவோ அங்கெல்லாம் ஜப்பானியர்கள் கால்கடுக்க நடந்து சென்றேனும் அவற்றைக் கண்டு ரசித்து மகிழ்ந்தனர். பூ என்றால் வெறிபிடித்து அலையும் ஒரு மக்கட் சமுதாயத்தை ஜப்பானில்தான் நாம் காணலாம். ஜப்பானியர்கள் சிறுசிறு தோட்டங்களை வளர்ப்பதில் பெரிதும் நாட்டமுடையவரா யிருந்தனர். தோட்டக்கலை அவர்களது கைவந்த கலைகளில் ஒன்றாகும். ஒவ்வொரு வீட்டைச் சுற்றிலும் ஒரு சிறிய தோட்டம் இருக்கும். வீடுகளும் சிறியனவாகவும் கலையழகு நிறைந்தன வாகவும் காணப்படும். வீட்டின் சுவர்கள் அழகாகச் சாயம் பூசப்

பட்டிருந்தன. தட்டுமுட்டுச் சாமான்கள் அதிகம் இரா. ஒரு சில பாய்கள், சிறிய அலமாரி, புத்தகச் சட்டம் முதலிய ஒரு சில பொருட்களே ஜப்பானிய இல்லங்களில் காணப்பட்டன. படுக்கை, அமருவதற்கான ஆசனங்கள் முதலியவை வேண்டாதபொழுது மடித்து ஓர் மூலையில் வைக்கத்தக்க விதத்தில் செய்யப்பட்டிருந்தன. வீடுகள் பெரும்பாலும் மரத்தாலும் காகிதத்தாலுமே கட்டப்பட்டன. எந்த நிமிடத்திலும் பூகம்பம் ஏற்படுமாதலால் நினைத்த நேரத்தில் தங்கள் வீடுகளைக் கலைத்து அபாயமற்ற வேறோர் இடத்திற்குக் கொண்டுபோய் புதிய வீடுகளை அவர்கள் கட்டிக்கொண்டனர். ஜப்பானிய வீடுகள் உண்மையில் சிறு கலைக் கூடங்களாகவே திகழ்ந்தன. ஜப்பானியர்களுடைய அழகு உணர்ச்சி அவர்தம் இல்லங்களில் மூலைமுடுக்குகளிலெல்லாம் வெளிப்பட்டுத் தோன்றியதெனின் மிகையாகாது.

### குடும்ப வாழ்க்கை

ஜப்பானியர்கள் தனி மனித சுதந்திரத்திற்கு அவ்வளவாக வாய்ப்பளிக்கவில்லை. குடும்ப சுதந்திரம் ஒன்றையே அவர்கள் பெரிதாகக் கருதினர். குடும்பத்தின் நன்மைக்காக அதன் உறுப்பினர்கள் பலரும் தமது சொந்த சௌகரியங்களையும் தியாகம் செய்ய வேண்டுமென்பதே அவர்களது கோட்பாடாகும். தந்தையே ஒவ்வொரு குடும்பத்தின் தலைவராகத் திகழ்ந்தார். ஏனைய உறுப்பினர்கள் அனைவரும் அவரது தனியதிகாரத்திற்குக் கட்டுப்பட்டே வாழ்ந்தனர். விரும்பினால் ஒருவரை வாழ்விக்கவும் அல்லது கொன்றுவிடவும் தந்தைக்கு அதிகாரம் உண்டு. பெரும்பாலும் மக்கள் ஏகபத்தினி விரதத்தையே கடைப்பிடித்தனர். ஆனால், செல்வந்தர்களில் சிலர் பல மனைவியர்களையும், காமக் கிழத்தியர்களையும் வைத்துக்கொள்ளுவதும் வழக்கிலிருந்தது. பெண்கள் கற்பைப்பற்றி அதிகம் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. ஆண்களும் பெண்களும் வரம்புமீறிய காமக்களியாட்டத்தில் திளைப்பதில் ஒருவரோடு ஒருவர் போட்டி போட்டனர். பெண்கள் நல்ல கல்வியறிவு பெற்றிருந்தனர். பேரரசர்கள் காலத்தில், இருந்த இத்தகைய நிலையானது நிலமானிய முறைக் காலத்தில் பெரிதும் மாறியது. பெண்களின் சுதந்திரம் பறிக்கப்பட்டது. அவர்களுக்குக் கல்வி அளிப்பது நிறுத்தப்பட்டது. கற்பு நெறியோடு வாழும்படி அவர்கள் வற்புறுத்தப்பட்டனர். சோரம் போன மனைவியரைக் கொன்றுவிடுகின்ற உரிமையைக் கணவர்கள் பெற்றிருந்தனர். அடங்காப்பிடாரிகளையும், வாயாடிகளையும் விவாகரத்துச் செய்துவிடும் உரிமையையும் அவர்கள் பெற்றிருந்தனர். எனவே நாளடைவில் ஜப்பானியப் பெண்கள்

மிகமிக விசுவாசமும் கீழ்ப்படிதலும் மிக்கவர்களாக மாறினர். அதோடு குடும்பத்தை நிருவகிப்பதிலும் அவர்கள் திறமையும் சுறுசுறுப்பும் மிக்கவர்களாக விளங்கினர். கற்புநெறி தவறுவதை விட உயிரை இழப்பதையே மேலென அவர்கள் கருதலாயினர். இத்தகைய கற்புடை மகளிர் ஒருபுறம் இருக்க தங்கள் உடலை விற்று வயிறு வளர்த்த பரத்தையர்களும் ஏராளமாக இருந்தனர். டோக்கியோ நகரத்தில் யோஷிவாரா என்ற பூங்காவனத்தில் மட்டும் 15,000 கணிகையர்கள் இருந்ததாகத் தெரிகிறது. அவர்கள் இசையிலும், நடனக் கலையிலும் மாந்தரை மகிழ்விக்கும் பல்வேறு உத்திகளிலும் சிறந்த பயிற்சியைப் பெற்றிருந்தனர். இத்தகைய கெய்ஷா (Geisha) மகளிரின் சேவைகளைச் செல்வந்தர்கள் பலர் ஏராளமாகப் பொருள் கொடுத்துப் பெற்றனர். சாதாரணமாகப் பெற்றோர்கள் பார்த்து நடத்திவைக்கும் திருமணங்களே அதிகமாகக் காணப்பட்டன. ஆனால், ஒருவரை ஒருவர் காதலித்து மணந்துகொண்ட இளைஞர்களும், ஆங்காங்கே காணப்பட்டனர். பெற்றோர்கள் அத்தகைய காதலுக்குத் தடையாய் இருந்தபொழுது அவர்களில் சிலர் தற்கொலை செய்து கொண்டதாகவும் கேள்விப்படுகின்றோம். ஜப்பானியர்கள் குழந்தைகளைப் பெறுவதில் அதிகமாக அக்கறை காட்டவில்லை. சாமுராய் வகுப்பைச் சார்ந்த கனவான்கள் இரண்டு குழந்தைகளோடு திருப்தி அடைந்தனர். பெண்களுக்குச் சொத்துரிமை இல்லாத காரணத்தால் ஒவ்வொரு பெற்றோரும் ஆண்மகவுகளையே பெரிதும் விரும்பினர். ஆண் குழந்தைகள் இல்லாத பெற்றோர்கள் தமது உறவினர்களின் குழந்தைகளைத் தத்தெடுத்துக்கொள்ளும் வழக்கமும் காணப்பட்டது.

### *சமய வாழ்க்கை*

ஜப்பானியர்கள் பெரிதும் சமயப்பற்று மிக்கவர்களாய் விளங்கினர். சொர்க்கம், நரகம் ஆகியவற்றில் அவர்களுக்கு ஆழ்ந்த நம்பிக்கை இருந்தது. நரபலி கேட்கின்ற ஓனி (Oni) போன்ற பிசாசுகள் இருப்பதாகவும் அவர்கள் நம்பினர். அதே போன்று மக்களை நல்வழிப்படுத்துகின்ற போதி சத்துவர்கள் போன்ற பல நல்ல தேவதைகளும் இருப்பதாக அவர்கள் நம்பினர். குவானன் (Kwannon) நகரத்துத் தேவதை ஜிஸ்ஸோ (Jisso) போன்றவைகள் அத்தகைய நற்றேவதைகளாம். ஜப்பானியர்கள் பலர் பௌத்த சமயத்தைப் பின்பற்றினர். அவற்றில் ஸென் பௌத்தம் (Zen Buddhism) என்பது மிகவும் பிரசித்தமானது. நிர்வாணம் என்ற கைவல்ய நிலையை அடைவதற்கு தியானம் ஒன்றே உற்றவழி என்று ஸென் பௌத்தர்கள் போதித்தனர். வேறு பல சிறிய பௌத்தப் பிரிவுகளும்

இருந்தன. அப் பிரிவினைச் சேர்ந்தோர் புத்தர் மறுபடியும் உலகில் தோன்றுவார் என்றும் அதுவரையில் மக்கள் விரதம் முதலிய நற்கிரியைகளில் ஈடுபட்டுத் தம்மைத் தூயோர்களாக வைத்துக்கொள்ள வேண்டுமென்றும் போதித்தனர். புனிதத் தலங்களில் சென்று உயிர்விட்டால் சொர்க்கத்தை அடையலாம் என்று பலர் நம்பினர். காசிக்குச் சென்று உயிர்விட்டால் மோட்சம் கிடைக்குமென்று இந்துக்கள் நம்புவதுபோல் கோயாசான் (Koyason) என்ற மடாலயத்திற்குச் சென்று அங்கேயே உயிர் விட்டால் சொர்க்கத்தை அடையலாமென பௌத்தர்கள் கருதினர். ஷிண்டோயிஸம் (Shintoism) என்பது இன்னொரு வகையான பௌத்தமாகும். ஒவ்வொரு பௌத்தக் கோயில்களிலும் ஷிண்டோ கோயிலொன்று கண்டிப்பாக இடம் பெற்றது. பதினெட்டாம் நூற்றாண்டில் கன்பூஷியம், ஷிண்டோயிஸம் ஆகிய இரண்டு மதங்களும் வலிமை பெற்றன. பௌத்தம் நலிந்தது.

### தத்துவம்

தொடக்கத்தில் ஜப்பானியர்கள் சீனர்களின் தத்துவத்தையே பின்பற்றினர். நாளடைவில் அவர்கள் தமக்கென ஒரு தனிப்பட்ட தத்துவத்தைப் படைத்துக்கொண்டனர். ராஸன் (Razan) போன்ற தத்துவஞானிகள் பௌத்தமதத்தை எதிர்த்தனர். புத்தரின் துறவுக்கொள்கையை அவர் கண்டித்தார். உலகமும் ஆன்மாவும் மாயை அல்ல என்றும், அவை என்றும் நிலைபெற்றிருப்பன வென்றும், இல்லற வாழ்க்கையை நெறிப்பட வாழ்வதொன்றே அறமென்றும் அவர் போதித்தார். கியூஸோ (Kyuso), எக்கான் (Ekkan) போன்ற அறிஞர்கள் ஞானத்தைவிட ஒழுக்கமே பெரிதென வற்புறுத்தினர். இயற்கையின் இன்பங்களை அளவோடு துய்த்தலால் தீங்கொன்றுமில்லை என்று அவர்கள் போதித்தனர். இயற்கையில் காணும் எழிலையும் இன்பத்தையும் அநுபவிப்பது ஒன்றே உண்மையான வாழ்க்கை என்றும், அவற்றை வெறுத்தோர் உண்மையில் வாழத் தெரியாதவர் என்றும் அவர்கள் போதனை செய்தனர். மனசாட்சி கூறுவதுபோல் ஒவ்வொருவரும் நடக்கவேண்டுமென்றும் அவர்கள் வற்புறுத்தினர். தொன்று தொட்டு வருகின்ற மரபாக இருந்தாலும் பகுத்தறிவுக்கும் மன சாட்சிக்கும் ஒத்தவைகளையே மக்கள் பின்பற்ற வேண்டுமென்று தோஜு (Toju), பாஸான் (Bazan) போன்ற அறிஞர்கள் கூறலாயினர். மபூசி (Mabuchi) போன்ற தத்துவ ஞானிகள் சீனத் தத்துவங்களைப் பெரிதும் கண்டித்தனர். பௌத்த சமயத்திற்குப் பதிலாக ஷிண்டோயிஸம் என்ற தத்துவத்தை மக்கள் பின்பற்ற வேண்டுமென்று அவர்கள் வற்புறுத்தலாயினர். மோட்டோ ஓரி

(Moto-ori) எனும் அறிஞர் சூரியனே ஜப்பானியரின் தெய்வமென வும், அதை வணங்கினல் அவர்கள் உலகனைத்தையும் வெல்லக் கூடுமென்றும் போதித்தார்.

**கல்வி**

ஜப்பானிய சமுதாயத்தில் செல்வம் படைத்த ஒருசிலரே கல்வியைப் பெறும் வாய்ப்பைப் பெற்றிருந்தனர். டென்சி (Tenchi), மொம்மு (Mommu) போன்ற பேரரசர்கள் எட்டாம் நூற்றுண்டில் கியோடோ நகரத்தில் ஒரு பெரும் பல்கலைக்கழகத்தைத் தோற்று வித்தனர். அதில் கற்றுத் தேர்ந்தவர்கள்மட்டுமே அரசாங்கத்தில் பெரும் பதவிகளை வகித்தனர். பேரரசு ஒழிந்து நிலமானிய முறை ஏற்பட்டபோது கல்வி ஓரளவு சீரழிந்தது. அதன்பின் டொக்குகாவா ஷோகன்கள் (Tokugawa-Shogunate) தலையெடுத்த போது கல்வி மீண்டும் மலரத் தொடங்கியது. அரசு ஊழியர் களுக்குப் பயிற்சியளிப்பதற்கென 1630ஆம் ஆண்டில் ஒரு கல்வி நிலையம் அவர்களால் தோற்றுவிக்கப்பட்டது. அதில் சாமுராய் வகுப்பு கனவான்களின் மக்கள்மட்டுமே சேர்த்துக்கொள்ளப் பட்டனர். வணிகர்கள் உழவர்கள் போன்றவர்களின் குழந்தை களுக்கு அதில் இடம் கிடையாது. இக் கல்வி நிலையம்தான் பிற்காலத்தில் டோக்கியோ பல்கலைக்கழகமாக வளர்ந்தது.

ஜப்பானிய மொழி மங்கோலிய சீன மொழிகளைத் தழுவியது. அஃது 47 எழுத்துகளைக் கொண்டு விளங்கியது. ஜப்பானியர்கள் கவிதை புனைவதில் வல்லுநர்களாகத் திகழ்ந்தனர். மன்யோஷு (Manyoshu) என்ற கவிதைத் திரட்டில் ஹிடோமாரோ (Hitomaro), அஹாஹிடோ (Akahito) போன்ற பெரும் புலவர்கள் இயற்றிய நாலாயிரத்து ஐந்நூறு கவிதைகள் அடங்கியுள்ளன. ஹிடோமாரோ எனும் கவிஞர் தமது மனைவி இறந்துபட்டபோது புனைந்த ஓர் இரங்கற்பாடல் (Elegy) மிகவும் புகழ்பெற்றது. டெய்கோ (Daigo) எனும் பேரரசரின் காலத்தில் கோகின்ஷு (Kokinshu) என்ற கவிதைத் திரட்டு வெளியிடப்பட்டது. ஜப்பானியக் கவிதைகள் இயற்கையின் பல்வேறு வெளித்தோற்றங் களைப் படம் பிடித்துக் காட்டின. ஆறுகள், ஏரிகள், காடுகள், பறவைகள், விலங்குகள், மீன்கள் முதலியவைகளைப்பற்றியே பெரும்பாலும் கவிதைகள் புனையப்பட்டன. கவிதைகளில் சாதா ரணமாகக் காணப்படும் சந்தங்களை ஜப்பானியர்கள் கையாள வில்லை. ஆனல், வேறுசில உத்திகளைக் கையாண்டு அவர்கள் ஒரு வாக்கியத்திற்கும் மற்றொரு வாக்கியத்திற்கும் தொடர்பை ஏற்படுத்தினர். ஜப்பானியக் கவிதைகளில் உணர்ச்சிகள் அவ்வள

வாகப் பிரதிபலிக்கவில்லை. கவிதைகளில் பொருள் வெளிப்படையாகத் தெரியாதவாறு அமைந்திருந்தன. கவிதைகள் பெரும்பாலும் சிறியதாயும் சுருக்கமாகவும் இருந்தன. மிகச் சிறிய கவிதைகளுக்கு தன்கா (Tankas) என்பது பெயர். அதைவிடச் சிறியதும், மூன்று வரிகளைமட்டுமே கொண்டதுமான கவிதைகள் ஹொக்கு (Hokku) என அழைக்கப்பட்டன. இத்தகைய குறுங் கவிதைகளைப் பாடுவதில் பாஷோ (Basho) என்னும் புலவர் ஈடுமெடுப்பு மற்றுத் திகழ்ந்தார் (1643—1694). வள்ளுவரின் குறள் போன்று அவரது கவிதைகள் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் பான்மையுடன் திகழ்ந்தன.

**கட்டடக்கலை**

பேரரசர்கள் காலத்தில் கட்டடக்கலை பெரிதும் ஓங்கியது. யோஷிமிட்சு (Yoshimitsu) பேரரசர் 360 அடி உயரமுடைய கோபுரமொன்றைக் கட்டினர். அழகிய மண்டபங்களைக் கொண்ட பெரிய மாளிகைகளையும் அவர் கட்டுவித்தார். பூ மாளிகை (Flower Palace) என்பது அவற்றில் மிகச் சிறந்ததொன்ருகும். ஹிடயோஷி (Hidayoshi) என்ற தலைவர் ஓஸாகா நகரத்துக் கோட்டையைக் கட்டினர். இயாமிட்சு (Iya itsu) என்னும் பேரரசர் தனது தந்தையின் நினைவாக ஒரு குன்றின் மேலெழுப்பிய மாளிகையானது ஜப்பானியக் கட்டடக் கலைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். ஜப்பானியக் கோயில்கள் மரத்தால் கட்டப்பட்டவை. அவற்றில் ஒரு பெண்மை நயம் காணப்பட்டது. கோயில்களுக்கு இட்டுச் சென்ற பாதைகளின் இருமருங்கிலும் மரங்களும், பூச்செடிகளும் ஏராளமாக வளர்க்கப்பட்டன. பச்சைப் பசேலென்ற தாவரக் கூட்டத்தினிடையே சிவந்த கோயிற் கட்டடங்கள் பெரிதும் எடுப்பாகவும் காண்பதற்கு இனியனவாகவும் விளங்கின.

**சிற்பக்கலை**

ஜப்பானியர்கள் மரத்தாலும் உலோகத்தாலுமான ஏராளமான உருவங்களை உண்டாக்கினர். கல்லாலாய சிலைகள் மிகவும் அரிதாகவே செய்யப்பட்டன. ஹொரியூஜி (Horiuji) என்னுமிடத்தில் காணப்படுகின்ற வெண்கலச் சிலையானது ஜப்பானியச் சிற்பக் கலைக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். அதில் ஒரு பெரிய தாமரைப் பூவும் அதன் நடுவில் புத்தரது சிலையும் அமைக்கப்பட்டுள்ளது. அவரது இருமருங்கிலும் இரண்டு போதிசத்துவர்களின் உருவங்கள் காணப்படுகின்றன. பௌத்தர்களின் திரிமூர்த்தியாக இச் சிற்பம் விளங்குகின்றது. ஷோமு (Shomu) என்ற பேரரசர் 8ஆம் நூற்றுண்டில் ஒரு பிரம்மாண்டமானபுத்தர் சிலையை உண்டாக்

கினர். நாட்டை அம்மை நோயினின்றும் காப்பதற்காக இச் சிலை எடுக்கப்பட்டதாம். இதன் தலை முழுவதும் ஒரே அச்சில் வார்க்கப்பட்டதாகக் கூறுவர். இதன் உடல் பல்வேறு தங்கத் தகடுகளால் செய்யப்பட்டதாகும். ஹியோஷி என்ற மன்னர்கியோடோ நகரத்தில் ஐம்பதாயிரம் ஊழியர்களைக் கொண்டு ஒரு பிரமாண்டமான புத்தர் சிலையை நிறுவினர். ஆனால் பூகம்பத்தால் அது அழிந்து போய்விட்டது. இத்தகைய பெரும் சிலைகளேயன்றி கலைப்பண்பு செறிந்த சிறிய சிலைகளையும் ஜப்பானியர்கள் செய்யக் கற்றிருந்தனர். டாகுமுரா (Takumura) என்ற சிற்பி இத்தகைய சிறிய சிலைகளைச் செய்வதில் வல்லவர். ஓரடி உயரம் கூட இல்லாத அவரது சிலைகளில் கற்பனை நயமும், உயிரூட்டமும் பெரிதும் காணப்பட்டன. பெரிய சிலைகளைவிட இத்தகைய சிறிய சிலைகளில்தான் ஜப்பானிய மக்களின் ஆக்கத்திறன் பெரிதும் வெளிப்பட்டது.

உலோகத்தாலாய பல்வேறு பொருட்களை ஜப்பானியர்கள் செய்து பயன்படுத்தினர். இரும்பால் செய்யப்பட்ட கூரிய வாள்கள், பித்தளையில் அமைந்த கண்ணாடிகள், அழகிய பெரிய மணிகள் முதலியவைகள் ஏராளமாகச் செய்யப்பட்டன. நரா எனும் நகரத்திலுள்ள மணி 49 டன் நிறையுள்ளதாகும். ஜப்பானியர்களுடைய மண்பாண்டகளும், பாத்திரங்களும், கண்கவர் வனப்பின. சீனர்களைப் பின்பற்றி அவர்கள் மண்பாண்டகளை வனைந்தனர். என்றாலும் தமக்கே உரிய அழகுணர்ச்சியை அவற்றில் அவர்கள் பெரிதும் புகுத்தியிருந்தனர். எட்டாம் நூற்றாண்டுக்கு முன்னர் அவர்களுக்கு ஒளிமிக்க பட்டை தீட்டப்பெற்ற கோப்பைகளையும், தட்டுகளையும் செய்யத் தெரியாது. அதற்குப் பின்னர்தான் சீனர்களின் துணைகொண்டு அவர்கள் அத்தகைய மட்பாண்டங்களைச் செய்யக் கற்றுக்கொண்டனர். பதின்மூன்றும் நூற்றாண்டில் கேடோ (Kato) என்ற கலைஞர் சீனர்களின் மட்பாண்டக் கலையைப் பெரிதும் நாட்டில் புகுத்தினர். வேறுபல கலைஞர்கள் முகமதியர்களின் நீல நிற மட்பாண்டங்களையும் அலங்கரிக்கப்பட்ட போர்சலின் அல்லது பீங்கான் கோப்பைகளையும் நாட்டில் புகுத்தினர். கியோடோ நகரத்தைச் சார்ந்த நின்ஸி (Ninsci) என்பாரும், கோடோ (Goto) என்பாரும் மண்பாண்டம் வனையும் கலையில் புகழ்பெற்றவர்கள். அவர்களது பாண்டங்களில் அழகிய வண்ண ஓவியங்களும் தீட்டப்பட்டிருந்தன.

**ஓவியக்கலை**

தொடக்கத்தில் ஜப்பானியர்கள் சீனர்களைப் பின்பற்றியே ஓவியங்களை வரைந்தனர். இடைக்காலத்தே அவர்கள் தமக்கே

உரிய தனிப்பட்ட ஓவிய முறையைக் கையாண்டனர். ஆனால், நாளடைவில் மீண்டும் சீனர்கள், கொரியர்கள் ஆகியோரின் முறையை அவர்கள் பின்பற்றினார்கள். அவர்களது பெரும்பாலான ஓவியங்கள் இயற்கையின் எழிலைப் படம் பிடித்துக் காட்டின. அரசர்களின் வீரதீரச் செயல்களும் அவ்வப்போது வரையப் பெற்றன. தனிப்பட்ட மனிதர்களின் உருவங்களை வரைவதில் அவர்கள் அவ்வளவாக அக்கறை எடுத்துக்கொள்ளவில்லை. ஜப்பானிய ஓவியங்களில் உணர்ச்சிகள் வெளிப்படையாகத் தோற்றுவிக்கப்படவில்லை. காண்போர் ஊகித்து அறிந்துகொள்ளும் முறையிலேயே அவை பெரும்பாலும் வரையப்பெற்றன. ஓர் காட்சியை முழுமையாக எந்த ஓவியமும் படம்பிடித்துக் காட்டாது. காட்சியின் ஒரு சில கூறுபாடுகள் மட்டுமே அதில் வரையப் பட்டிருக்கும். அவற்றைக் கொண்டு கற்பனையைப் பயன்படுத்தி ஒருவன் முழு காட்சியையும் ஊகித்துக் கொள்ளவேண்டும். புத்தரது உருவங்கள் பெரும்பாலான ஓவியங்களுக்கு இலக்காக அமைந்தன. அதன் பின்னர் விலங்குகள், பூக்கள், மரங்கள் போன்ற உலகியல் பொருட்கள் வரையப்பெற்றன. கி.பி. 806ஆம் ஆண்டில்தான் சீன ஓவிய முறையானது ஜப்பானில் புகுத்தப்பட்டது. அது பெரும்பாலும் மத சம்பந்தமானதாகவே அமைந்திருந்தது. 12ஆம் நூற்றாண்டில்தான் ஜப்பானியர்கள் ஓவியத்தில் தமது தனித்தன்மையைக் காட்ட ஆரம்பித்தார்கள். டகாயோஷி (Takayoshi), டோபோஷோஜோ (Tobosojo) போன்ற ஜப்பானிய ஓவியர்கள் குரங்குகள், தவளைகள் வடிவத்தில் ஒழுக்கமற்ற துறவிகளைப் படம்பிடித்துக் காட்டினர். ஃபியூஜிவாரா (Fujiwara) எனும் கலைஞரும் அவரது மகனும் உலகியல் சம்பந்தமான பல ஓவியங்களை வரைந்தனர். பதின்மூன்றாம் நூற்றாண்டுக்குப் பின்னர் ஜப்பானியர்கள் மீண்டும் சீனர்களைப் பின்பற்றலாயினர். பழைய ஓவியமுறை மீண்டும் கையாளப்பெற்றது. கேனோ (Kano) போன்ற ஓவியர்கள் இவ்வகையைச் சார்ந்தவர்கள். பதினேழாம் நூற்றாண்டில் ஒரு புதிய ஓவிய முறை ஜப்பானில் தோன்றியது. குடும்ப வாழ்க்கையும் இல்லத்திலுள்ள பொருள்களும் அவற்றில் பெரும்பாலும் சித்திரிக்கப்பெற்றன. உள்ளதை உள்ளபடியே படம் பிடித்துக் காட்டுகின்ற மறுயாமி (Maruyami) என்ற ஓவிய முறை நாட்டில் மெல்ல மெல்ல வளரலாயிற்று. ஓகியோ (Okyo) என்பார் இத்தகைய உயிரூட்டமுள்ள மெய்ம்மை ஓவியங்களை வரைவதில் வல்லவராகத் திகழ்ந்தார்.

**இலக்கியம் (Literature)**

கற்பனைகள் நிறைந்த புதினங்கள் (Novels) பலவற்றை ஜப்பானியர்கள் படைத்தனர். முரஷாகி / எனும் சீமாட்டியால்

எழுதப்பெற்ற ஜென்ஜி மானோ கடாரி (Genji Mono Gatari) புதினம் மிகவும் புகழ்பெற்றதொன்றாகும். கி.பி. 1001-ல் எழுதப் பெற்ற அந் நூல் 4,234 பக்கங்களைக் கொண்டது. பேரரசர் ஒருவருடைய மகனான ஜென்ஜி என்பாரது ஒழுக்கமற்ற வாழ்க்கையைச் சித்திரிப்பதே இந் நூலாகும். வாழ்க்கையில் வெறுப்புற்று அவர் துறவியாகப் போகும் சமயத்தில் அழகிய ஒரு மங்கை அவரை மீண்டும் உலக வாழ்க்கையில் ஈடுபடுத்துவதாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது. மக்களின் பழக்க வழக்கங்கள் முக்கியமாக உயர்குடிப் பெருமக்களின் வழக்கங்கள் இதில் நன்கு சித்திரிக்கப் பட்டுள்ளன.

நாவல்களேயன்றி வரலாற்று நூல்களையும் ஜப்பானியர்கள் ஏராளமாக வரைந்தனர். ஆரம்பத்தில் அவை மிகைப்பட்ட வருணனைகள் நிறைந்து விளங்கின. நாளடைவில் அவற்றில் உண்மைகள் மிளிர்ந்தன. 1334ஆம் ஆண்டில் ஹிதா பதாகா என்பார் பேரரசர்களின் வரலாற்றை வரைந்தார். அரை ஹாகுஷாகி என்பார் எழுதிய ஹன் கம்ப்பு (Han Kamphu) என்ற ஜப்பானிய வரலாறு ஓர் ஒப்பற்ற நூலாகும். அதில் முப்பது பெரும் பகுதிகள் (Volumes) அடங்கியிருந்தன. கட்டுரைகள், நாடகங்கள் முதலியவைகளையும் ஜப்பானிய அறிஞர்கள் இயற் றினர். நாடகங்கள் பெரும்பாலும் ஷிண்டோ மதத்தைச் சித்திரிப் பவைகளாய் அமைந்திருந்தன. மூன்று வகையான பொம்மலாட் டங்களைக் கொண்டு நாடகங்கள் நடைபெற்றன. அதன் முதல் வகையில் மத சம்பந்தமான பொம்மைகள் இடம் பெற்றன. இரண்டாவது பகுதியில் கவசம் பூண்ட போர்வீரர்கள் பிசாசுகளைத் துரத்துவதுபோன்று நடித்தனர். மூன்றும் பகுதியில் மட்டுமே ஒரு சிறிய உலகியல் நிகழ்ச்சி நாடகமாக நடிக்கப்பட்டது. பொய்யான முகமூடிகளை அணிந்துகொண்டு நாடக மாந்தர்கள் நடித்தனர். நாளடைவில் பொம்மலாட்டங்கள் யாவும் மறைந்து உண்மையான நாடக அரங்கங்கள் தோன்றின. ஆண்களும் பெண்களும் அதில் நடித்தனர். பாட்டும், நடனங்களும் அவற்றில் இடம்பெற்றன. கொரியாவிலிருந்தும், சீனுவிலிருந்தும் வரவழைக்கப்பட்ட பாடகர்கள் அரங்குகளில் இசை பாடினர். இசைக்கேற்ற நடனங்கள் நடைபெற்றன. சிகமட்சு (Chikamatsu) என்பார் ஒரு பெரும் நாடகாசிரியராவார். அவரைச் சிலர் ஷேக்ஸ்பியருக்கு ஒப்பிடு வார்கள்.

இங்ஙனம் பண்டைய ஜப்பானிலும், இடைக்கால ஜப்பானிலும் இசை, நடனம், நாடகம், சிற்பம், ஓவியம், கட்டடக்கலை, இலக்கியம் போன்ற பல்வேறு கலைகளும் நன்கு வளர்ச்சியுற்றிருந்த

தைக் காண்கின்றோம். தொடக்கத்தில் அவர்கள் சீனர்களையும், கொரியர்களையும் பின்பற்றி இருந்தாலும், நாளடைவில் அவர்கள் தமக்கே உரிய தனிப் பண்பினைத் தமது கலைகளில் பெய்து அவற்றுக்கு ஒரு மெருகூட்டினார்கள்.

# 10. பண்டைய அமெரிக்க நாகரிகங்கள்

ஒரு காலத்தே பெருஞ்சீரும் சிறப்புமுற்றுத் திகழ்ந்து பின்னர் ஆய்ந்து ஓய்ந்து இவ் வுலகைவிட்டே மாய்ந்துபோன பழம்பெரும் நாகரிகங்களுள் பண்டைய அமெரிக்க நாகரிகங்களும் ஒன்ருகும். அவை ஸ்பானியர்களின் பீரங்கிக் குண்டுகளுக்கு இரையாகி மடிந்தன என்பது வரலாறு. இங்ஙனம் வெளிப்பார்வைக்கு அவை ஸ்பானியர்களால் அழிக்கப்பட்டனவாகத் தோன்றினும் உண்மையில் அவற்றின் அழிவுக்குக் காரணம் அவற்றுக்குள்ளேயே புரையோடிக் கிடந்த ஒரு சில ஊழல்களே என்பது டாயின்பி என்ற ஆசிரியரின் கருத்தாகும். எங்ஙனம் ஒரு மனிதனின் உடல் நலிவுற்றிருக்கும் சமயம் பார்த்துப் புறக்கிருமிகள் அவனைத் தாக்கி மடியச் செய்கிறதோ அங்ஙனமேதான் ஒரு சமுதாயம் தனது கட்டுக்கோப்பை இழந்து பலவீனமுறும் பொழுதில்தான் அது அந்நியப் படைஎடுப்புக்கு ஆளாகி மடிகிறது என்பது அவர்தம் வாதமாகும். அஃது எவ்வாருயினும், ஸ்பானியர்களின் துப்பாக்கிகளுக்கு முன்னர், அமெரிக்கர்களின் தோள்வலியும் வாள்வலியும் ஈடுகொடுக்க முடியாமல் அவர்தம் நாகரிகங்கள் அழிந்தன என்பதே கண்கண்ட உண்மையாகும்.

ஸ்பானியர்களின் படை எடுப்புகளுக்கு முன்னர் அமெரிக்கப் பெருங்கண்டத்தில் நான்கு நாகரிக சமுதாயங்களிருந்தன. அவை முறையே ஆண்டியன், யுகாடெக் (Yucatec), மெக்ஸிக், மாயா சமுதாயங்களாகும். ஆண்டியர்கள் இன்கா என்றதோர் பேரரசை நிறுவினர். அது பிஸாரோ (Pizarros) என்ற ஸ்பானியத் தலைவரால் 1530-ல் அழிக்கப்பட்டது. மெக்ஸிகர்கள் அஸ்டெக் (Aztec) பேரரசைத் தோற்றுவித்தார்கள். அதனைக் கார்ட்டெஸ் (Cortez) என்ற ஸ்பானியத் தளபதி வென்று மாய்த்தார். யுகாடன் தீபகற்பத்தில் தோன்றியதோர் யுகாடக் எனும் நாகரிக சமுதாயமானது மெக்ஸிக் சமுதாயத்தோடு நாளடைவில் ஒன்றித்து விட்டது. இவ் விரண்டு சமுதாயங்களுமே மாயா என்றதோர் பழம்பெரு நாகரிகத்தின் குழவிகளாகும். இம் மாயா நாகரிகமானது

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் திடீரென நலிவுற்று அழிந்தது. யுகாடன் சமவெளியில் காணப்படும் அதன் பண்டைய பெரு நகரங்களின் அழிபாடுகளே அதன் பெருமைக்கு இன்றும் சான்று பகர்கின்றன. வான இயல், காலக் கணக்கு இவற்றில் பெரிதும் மேம்பட்டுத் திகழ்ந்த அந் நாகரிகம் அவ்வளவு விரைவில் ஏன் அருகிப்போயிற்று என்பது உண்மையில் ஒரு புதிராகவே உள்ளது.

## 1. மாயர் நாகரிகம்

*மாயர்கள் என்போர் யார்?*

மாயர்கள் என்போர் யார் என்பதுபற்றி எதுவும் திட்டவட்ட மாகத் தெரியவில்லை. அவர்கள் மங்கோலிய இனத்தைச் சேர்ந்த ஆசியர்கள் என்பதும், பேரிங் நீரிணைப்பு வழியாக அலாஸ்கா வுக்குள் முதலில் நுழைந்திருக்க வேண்டுமென்பதும் ஒரு சிலரின் கருத்தாகும். அவர்கள் ஐரோப்பாவிலிருந்து கிரீன்லாந்து மூலமாக அமெரிக்காவில் நுழைந்திருக்கக் கூடுமென்பது வேறு சிலரின் கருத்தாகும். மற்றும் சிலர் அவர்கள் அமெரிக்காவிலேயே பிறந்து வளர்ந்த தொல்குடி மக்கள் என்று கூறுவர்.

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் அவர்கள் யுகாடன் தீபகற்பத்தில் குடியேறி அங்கு ஒரு பேரரசைத் தோற்றுவித்தார்கள். அதன் தலைநகர் சிச்சன் இட்ஸா (Chichen Itza) என்பதாகும். அதை மையமாகக் கொண்டு பல பேரரசர்கள் ஆண்டார்கள். அவர்களே மதகுருக்களாகவும் திகழ்ந்தார்கள். அவர்களது பேரரசுக்குட் பட்டிருந்த மாநிலங்கள் பெரிதும் சுயேச்சையுடன் திகழ்ந்தன. அவர்கள் வாழ்ந்த நகரங்களின் அழிபாடுகளிலிருந்தே நாம் அவர் தம் கட்டடக் கலையின் மாண்பினை ஓரளவு உய்த்துணர முடிகிறது.

*மாயர்களின் கட்டடக் கலை*

மாயர்கள் கட்டடக் கலையில் ஈடும் எடுப்பு மற்றவர்களாய்த் திகழ்ந்திருக்க வேண்டுமென்பது அவர்களால் விட்டுச் செல்லப் பட்ட கட்டடங்களிலிருந்து நன்கு தெரியவருகிறது. கோயில்கள், அரண்மனைகள், மடங்கள் முதலிய பல கட்டடங்கள் பூமியிலிருந்து அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன. அவை பெரும்பாலும் முக்கோண வடிவில் பிரமிடுகளைப்போல் அமைந்துள்ளன. அவற்றின் சுவர்கள் திண்மை செறிந்தனவாயும், இடையிடையே வளைவுகளைக் கொண்டனவாயும் விளங்குகின்றன. அவற்றின் மேற்பரப்பில் ஆங்காங்கே ஓவியங்கள் பல வரையப்பெற்றுள்ளன. சிச்சன் இட்ஸா என்ற தலைநகரில் உள்ள இருபெருங் கோயில்கள் மிக்க புகழ்பெற்றவை. அவற்றுள் ஒன்று போர்வீரர் கோயில் என்றும்

மற்றொன்று இறகுசெறிந்த பாம்பின் கோயில் (The Temple of Plumed Serpent) என்றும் அழைக்கப்படுவன. அவற்றில் பல அழகிய புடைப்புறுச் செதுக்கோவியங்களும் (Bas-releifs), சுவர்ப் பூச்சு சிற்பமும் (Stucco) காணப்படுகின்றன.

*சிற்பக் கலை*

மாயர்களின் கோயில்களில் ஏராளமான பாம்பு உருவங்கள் காணப்படுகின்றன. மனிதனது தலைகூட சில சமயங்களில் பாம்பின் திறந்த வாயினைப் போன்ற வடிவத்தில் உருவாக்கப் பட்டுள்ளது. எனவே, பாம்பினை அறிவின் அடையாளமாக அன்னார் வழிபட்டிருக்க வேண்டுமெனத் தெரிகிறது. பாதி மிருக மாகவும், பாதி மனிதனாகவும் ஆக்கப்பட்டுள்ள பல்வேறு உருவங்கள் கல்லில் வடிக்கப்பட்டுள்ளன. அவை உண்மை யிலேயே மிகச் செம்மையாகச் செதுக்கப்பட்டுள்ளன. தூரத்தி லிருந்து ஒரு பொருளை ஓர்ந்து உணரும் தன்மையை அவர் கள் சிற்பத்தில் நன்கு எடுத்துக்காட்டியுள்ளனர்.

*ஓவியம்*

மாயர்கள் கையெழுத்துக் கலையில் பெரிதும் வல்லவர்கள் எனத் தெரிகிறது. அவர்களது நூல்களில் காணப்படும் ஓவிய எழுத்து கள் கண்கவர் வனப்புடன் விளங்குகின்றன. உடைந்த பானைத் துண்டுகளில் காணப்படும் ஓவியங்கள், பல்வேறு நிறங்களை எல்லாம் கூட்டிக் குழைத்து வண்ண உருவங்களாக வடிக்கும் கலையில் அவர்கள் எங்ஙனம் கைதேர்ந்து விளங்கினர் என்பதை நன்கு எடுத்துக் காட்டுகின்றன. கோயில்களிலும் அரண்மனை களிலும் காணப்படும் சுவரோவியங்களில், ஆடம்பர ஆடை அணிந்த பிரபுக்களும், போர்க்கவசம் பூண்ட வீரர்களும், திறமை மிக்க வணிகர்களும், அழகுமிக்க மகளிரும் குழந்தைகளும், வனப்பு மிக்க மிருகங்களும் நன்கு தீட்டப்பட்டுள்ளன.

*ஏனைய கலைகள்*

மாயர்கள் மட்பாண்டம் வனையும் கலையில் வல்லவர்கள். அவர்தம் மட்பாண்டங்கள் ஓவியங்கள் செறிந்தனவாய்க் கண்கவர் காட்சியுடன் மிளிர்கின்றன. நேர்த்தியான ஆடைகளை நெய்ய அவர்கள் கற்றிருந்தார்கள். பறவைகளின் இறகுகளைக் கொண்டு அழகிய கிரீடங்களைச் செய்து அணிந்துகொண்டனர். பஞ்சினும் மெல்லிய பறவைகளின் இறகுகளை ஆடைகளில் வைத்துத் தைத்துக் கொண்டனர். மரங்களில் அழகிய வேலைப்பாடுகளைச் செய்வதிலும் உலோக வேலைப்பாட்டிலும் வல்லவர்கள். செம்பினு

லாய பிரம்மாண்டமான மணிகள் அவர்களின் கோயில்களை அணி செய்கின்றன. பொன்னாலும், மணியாலும் செய்யப்பட்ட பல்வேறு அழகிய ஆபரணங்களை அணிந்துகொண்டார்கள். கல்வி கேள்விகளிலும் சிறந்து விளங்கினர். அழகிய எழுத்துகளாலாய நூல்கள் பல அங்கே கண்டெடுக்கப்பட்டுள்ளன. வரலாறு, புராணம், சிற்பம், கட்டடக்கலை முதலியவை பற்றிய ஏராளமான நூல்களை அவர்கள் வைத்திருந்தனர். ஆனால், அவர்களை வென்ற ஸ்பானியர்களின் நடவடிக்கைகளால் ஏராளமான நூல்கள் தீக்கிரையாக்கப்பட்டன.

*அறிவியல்*

மாயர்கள் கணித நூலில் வல்லுநர்கள். பூஜ்யத்தின் பயனை நன்கு உணர்ந்திருந்தார்கள்; தசாம்ச முறைக்குப் பதிலாக இருபதாம்ச முறையைக் (Vigesimal System) கையாண்டனர்; இருபது எனும் எண்ணைக் குறிக்கப் பத்தொன்பது புள்ளிகளை வைத்து இறுதியில் ஓர் பூஜ்யத்தைப் போட்டனர்; ஆண்டு ஒன்றை 18 மாதங்களாகவும், மாதமொன்றை 20 நாட்களாகவும், பிரித்தனர்; ஆண்டின் இறுதியில் 5 நாட்களைக் கூட்டிக்கொண்டனர்; அந்த 5 நாட்களும் சுப காரியங்களுக்கு ஏற்றவையல்ல எனக் கருதினர்; சுபகாரியங்கள் தொடங்குவதற்கெனப் பல நாட்களை ஒதுக்கிவைத்தனர்.

*சமயம்*

மாயர்கள் வேளாண்மைத் தொழிலில்தான் பெரிதும் ஈடுபட்டிருந்தார்கள். எனவே சாகுபடிக்கு இன்றியமையாத மழை, கதிரவன் ஆகிய இயற்கைச் சக்திகளைத் தெய்வமாக வழிபட்டார்கள். விவசாயம், வேட்டையாடுதல் ஆகிய இரு தொழில்களையும் காத்து நிற்கும் தெய்வமாகக் கதிரவனைக் கருதி வழிபட்டனர். ஒருபுறம் இறகு முளைத்த பாம்பும், மற்றொருபுறம் ஒரு வேதாளமும் அவற்றின் குறுக்கே ஒரு சிலுவையும் வரையப்பட்ட உருவமே கதிரவனைக் குறிக்கும் சின்னமாகக் கருதப்பட்டு வணங்கப்பட்டது. அதன் பெயர் கினிசாகௌ (Kinichahau) என்பதாகும். சாக்ஸ் (Chacs) எனும் மழைக் கடவுள் தமது நீர்ப்பைகளை வேண்டும்போது திறந்து மக்களுக்கு மழையைப் பொழிவிப்பதாக அன்னார் நம்பினர். அதேபோன்று அவரது காற்றுப் பையிலிருந்தே புயலும், இடியும், மின்னலும் தோன்றுவதாக நம்பினர். மரணத்துக்குப்பின் ஆன்மாக்கள் மெட்னல் (Metnal) எனும் இருண்ட பயங்கரமான பாதாள உலகுக்குச் செல்வதாயும், அங்கே ஹூனகா (Hunahau) என்ற கடவுள் ஆட்சி புரிவதாகவும் நம்பினர். இந்துக்கள் யமனை

வழிபடுவது போன்று மாயர்கள் ஹூனெகாவை வணங்கினர். குல்குல்கான் (Kulkulkan) என்ற இறகு முளைத்த பாம்புத் தெய்வம் தலைநகரின் காவல் தெய்வமாக வணங்கப்பட்டது. மாயர்கள் பல திருவிழாக்களைக் கொண்டாடினர். மாதந்தோறும் அவர்கள் ஒரு விழாவை நடத்தி மகிழ்ந்தனர். புத்தாண்டை அவர்கள் மிகவும் சிறப்பாகக் கொண்டாடினர். தெய்வங்களுக்குப் பலி கொடுக்கும் வழக்கம் அவர்கள்பால் காணப்பட்டது. மிருகங்களையேயன்றி, குழந்தைகளையும், கன்னிப் பெண்களையும் அவர்கள் தெய்வங்களுக்குப் பலி கொடுத்தனர்.

## 2. அஸ்டெக் நாகரிகம்

### நாடும் மக்களும்

அஸ்டெக் நாகரிகமானது மெக்ஸிகோ பிரதேசத்தில் தோன்றியதாகும். அமெரிக்கக் கண்டத்தின் நடுமத்தியில் அமைந்துள்ள இந்நிலப் பகுதியில் ஒரு காலத்தில் செழிப்பான செடி கொடிகளும், அடர்ந்த காடுகளும் இருந்தன. மிதமான காலநிலையும், ஏராளமான மழையும் கொண்ட இப் பகுதியில் நிலவளமும் நீர்வளமும் ஒருங்கே காணப்பட்டன. மெக்ஸிகோ பள்ளத்தாக்கில் மொத்தம் 5 ஏரிகள் உள்ளன. அவற்றில் மிகப் பெரிய ஒன்றின் கரைமீதுதான் மெக்ஸிகோ, டெஸ்குகோ (Tezcuco) என்ற இருபெரும் தலைநகரங்கள் அக்காலத்தே கட்டப்பட்டன. மெக்ஸைட்டில் (Mexitl.) எனும் அஸ்டெக் தெய்வத்தின் பெயர் அடிப்படையிலேயே மெக்ஸிகோ என்ற பெயர் இப் பிரதேசத்தின் தலைநகருக்கு வழங்கப்பட்டது. பெரிய ஏரியின் வடமேற்குக் கரையில்தான் அஸ்டெக்குகள் தமது பேரரசை நிறுவினர். அவர்களின் மூதாதையர் டோல்டெக்குகள் (Toltecs) எனப்பட்டனர். அவர்கள் மெக்ஸிகன் பள்ளத்தாக்கின் வடபகுதியில் ஆண்டனர்; உலோகங்களின் பயனை நன்கு உணர்ந்திருந்தனர். அவர்களின் வழிவந்த அஸ்டெக்குகள் போர்க்குணமிக்கவர்கள்; தமது போர் வன்மையால் மெக்ஸிகோ பள்ளத்தாக்கை மட்டுமின்றி, மெக்ஸிகோ வளைகுடாவையும், அட்லாண்டிக் பிரதேசத்தையும், கொதிமாலா, நிகராகுவா போன்ற நாடுகளையும் வென்று பேரரசு ஒன்றை அவர்கள் ஏற்படுத்தினர்.

### அரசியல் நிலை

அஸ்டெக்குகள் கோனுட்சி முறையையே கடைப்பிடித்தனர். பரம்பரை பரம்பரையாக அரசர்கள் நாட்டை ஆண்டனர். ஒரு மன்னன் இறந்த உடன், பிரபுக்களின் சபை ஒன்று கூடி,

இறந்தவரது சகோதரர்களில் ஒருவரை மன்னராகத் தேர்ந் தெடுத்தது. யார் போர் செய்வதில் பெரிதும் வல்லவராய்த் திகழ்ந்தாரோ அவரையே பிரபுக்கள் மன்னராகத் தேர்ந்தெடுப்பது வழக்கமாயிருந்தது. தேர்ந்தெடுக்கப்பட்ட பின் மன்னர் சர்வ வல்லமை பெற்றவராகத் திகழ்ந்தார். பிரபுக்களில் யாரும் அவரை எதிர்க்க இயலாது. தமது விருப்பப்படியே பிரபுக்களுக்கு அவர் நிலங்களைப் பரிசாக வழங்கினர். பிரபுக்கள் மன்னர் சொற்படியே ஆடினர். அவர்கள் பெரும்பாலும் தலைநகரில் மன்னருக்கருகிலேயே இருந்து வந்தனர்.

அஸ்டெக்குகள் நீதியிலும் நேர்மையிலும் பெரிதும் அக்கறை காட்டினர். ஒவ்வொரு மாவட்டத்துக்கும் ஓர் நீதிபதி இருந்தார். சிவில் வழக்குகளில் அவரது தீர்ப்புக்கு மேல் முறையீடு கிடையாது. அவருடைய தீர்ப்பே இறுதித் தீர்ப்பென மன்னராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அவருக்குக் கீழ் மூன்று நீதிபதிகள் ஒவ்வொரு மாநிலத்திலும் நியமிக்கப்பட்டிருந்தனர். கிரிமினல் வழக்குகளில் அவர்களது தீர்ப்புகளை ஏற்றுக்கொள்ள விரும்பாதவர்கள் மாவட்டத் தலைமை நீதிபதியிடம் முறையிட்டுக் கொள்ளலாம். சிவில் வழக்குகளில் அவர்களும் தலைமை நீதிபதியும் சமமான அதிகாரத்தையே பெற்றிருந்தனர். நாட்டுப் புறங்களில், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட நீதிபதிகள், சிறிய சாதாரண வழக்குகளை விசாரித்துத் தீர்ப்புக் கூறினர். இங்ஙனம் நீதித்துறையானது மன்னரின் தலையீடின்றி சுயேச்சையாக நடைபெற்றுவந்தது. நீதிபதிகளுக்கு மன்னரின் நிலங்களிலிருந்து வரும் வருவாயைக் கொண்டு ஊதியம் வழங்கப்பட்டது. மன்னரிடத்து அச்சமின்றி அவர்கள் பாரபட்சமற்ற நீதி வழங்கினர். தண்டனைகள் மிகக் கடுமையாக இருந்தன. சட்டங்கள் நன்கு வரையறுக்கப்பட்டு வெளியிடப்பட்டன. ஆனல் அவற்றை விரித்துரைக்க வழக்குரை ஞர்களை அமர்த்தும் வழக்கம் அக்காலத்து இல்லை. இரு தரப்பிலும் சாட்சிகளை விசாரித்து, அதன் அடிப்படையிலேயே நீதிபதிகள் தீர்ப்புகளை வழங்கினர். மக்களின் உயிரும் உடைமையும் சட்டங் களால் நன்கு பாதுகாக்கப்பட்டன. திருட்டு, கொலை போன்ற குற்றங்களுக்கு மரண தண்டனை வழங்கப்பட்டது. இலஞ்சம் வாங்கியவர்களுக்குக் கொலைத் தண்டனை விதிக்கப்பட்டதால் நாட்டில் இலஞ்சம் தலைகாட்டவில்லை. சட்டத்தின் முன் யாவரும் சமமாக மதிக்கப்பட்டனர்.

அரசனுக்குப் பல வகைகளில் வருவாய் கிடைத்தது. ஒவ் வொரு குடியானவனும் தனது விளைச்சலில் ஒரு பகுதியை வரி யாகச் செலுத்தினன். சிற்றரசர்களும், மானியதாரர்களும் மன்ன

ருக்குத் திறை செலுத்தினர். வரிகளும், திறைகளும் பணமாக வன்றிப் பண்டங்களாகவே வழங்கப்பட்டன. அரசனுக்கே உரிய நிலங்களிலிருந்தும் அவருக்கு நிரந்தர வருவாய் வந்தது. தொழிலாளிகள் பலரும் தத்தம் வருவாய்க் கேற்ப தொழில் வரி செலுத்தினர். காகிதம், இறகு வேலைப்பாடு, அணிகலன்கள் முதலியவற்றை உற்பத்திசெய் தவர்களும், பழங்கள், கோக்கோ போன்றவைகளைத் தத்தம் நிலங்களில் விளைவித்தவர்களும் வரி செலுத்தினர். வரிதண்டுவதற்காகத் தண்டல்நாயகர்கள் நாடெங்கும் நியமிக்கப்பட்டனர். அவர்களுக்கெல்லாம் தலைவராக ஒருவர் இருந்தார். அவர் தமக்கு வந்த வருவாய்களை எல்லாம் பெரும் பெரும் தானியக் கிடங்குகளில் சேமித்துவைத்து இன்றியமையாத வேளையில் மக்களுக்கு வழங்கினார். முறைகேடாக நடந்துகொண்ட தண்டல் நாயகர்கள் கடுமையான தண்டனைகளுக் குட்படுத்தப்பட்டார்கள்.

போர் விருப்பம் கொண்ட அஸ்டெக் மன்னர்கள் வலிமை மிக்க சேனை ஒன்றை வைத்திருந்தனர். ஒவ்வொரு மாநிலமும் இத்தனை படைவீரர்களை வழங்க வேண்டுமென்று திட்டம் வகுக்கப்பட்டிருந்தது. ஆரோக்கியமுள்ள வாலிபர்கள் அனைவரும் சேனையில் சேர்ந்தனர். ஒவ்வொரு மாநிலத் தலைவரும் தனித்தனிப் படைகளை வைத்திருந்தார். மன்னனே அப்படைகள் யாவற்றிற்கும் தனித் தலைவராக விளங்கினார். போர் நேர்ந்தபோது எல்லாப் படைகளும் மன்னரின் கீழ் நின்று போர் புரிந்தன. வீரர்களுக்கெனத் தனிப்பட்ட சீரணிகள் இருந்தன. பஞ்சு வைத்துத் தைக்கப்பட்ட உடற் கவசங்களையும் தலைக் கவசங்களையும், கேடயங்களையும் அணிந்து கொண்டு அன்னார் போர் புரிந்தனர்.

**சமயம்**

அஸ்டெக்குகள் கடவுள் ஒன்றேஎன்ற கொள்கையுடையவர்கள். அவர் எங்கும் நிறைந்தவர். எல்லாம் வல்லவர். இப் புவனமனைத்தையும் படைத்தவர். அவரிடமிருந்து பரிணமித்த பல சிறு கடவுளர்கள் இயற்கையின் பல்வேறு சக்திகளையும் இயக்குபவர்கள். அவர்களில் 13 பேர்களே தலைமைத் தெய்வங்கள். அவர்களுக்குக் கீழ் 300 சில்லரைக் கடவுளர்கள் இருந்தனர். யாவர்க்கும் தலைமையான தெய்வம் ஹியுட்ஸிலோபோக்ட்லி (Huitzilopochtli) என அழைக்கப்பட்டது. அதற்கெனப் பெரிய கோயில்கள் எடுக்கப்பட்டன. விலையுயர்ந்த ஆபரணங்கள் அதற்கு அணிவிக்கப்பட்டன. போரில் பிடிபட்ட கைதிகள் பலரும் அத்தெய்வத்துக்குப் பலியிடப்பட்டனர். மற்றும் அஸ்டெக் மக்களிடையே இருந்த சில வாலிபர்களும் மேற்படி தெய்வத்துக்குப் பலியிடப்பட்டனர். ஒவ்வொரு தெய்வத்துக்கும் அதன் இயல்புகளைக் கொண்ட ஒரு

வாலிபன் தேர்ந்தெடுக்கப்பட்டான். பலியிடப்படுமுன் அவனுக்குத் தினமும் நல்ல அறுசுவை உண்டியும், நான்கு இளம் பெண்டிரும் வழங்கப்பட்டனர். பலியிடும் சமயத்தில், பூசாரியானவர் அவ் வாலிபனின் நெஞ்சைப் பிளந்து இருதயத்தை எடுத்து தெய்வத்தின் திருவடிகளில் எறிவார். பின்னர் அவ் விளைஞனது உடலம் சமைக்கப்பட்டு, அதன் இறைச்சியைப் பலரும் ஒன்ருக அமர்ந்து உண்பர். ஒரே ஒரு கோயிலில் மட்டும் 136,000 மண்டையோடுகள் கண்டெடுக்கப்பட்டதென அறிகிறேம். இதிலிருந்து நரபலி இடும் வழக்கமானது அஸ்டெக்குகளிடையே எவ்வளவு வேரூன்றி இருந்தது என்பது தெற்றென விளங்குகிறது.

குவெட்ஸால்கோடில் (Quetzalcoatl) என்பது வாயு பகவானுடைய பெயராகும். மக்களுக்கு விவசாயம், தொழில் உலோகத்தின் பயன் இவற்றைக் கற்றுக் கொடுப்பவர் அவரே என நம்பப்பட்டது. நாட்டின் செழுமைக்கெல்லாம் அவரேதான் காரணமென மக்கள் நம்பினர். இவ்வளவு பெரிய கடவுள் ஏதோ ஒரு சிறு தவறு செய்துவிட்டதால் யாவர்க்கும் மேலான தனித்தலைமைக் கடவுள் அவரைத் தேவலோகத்திலிருந்து வெளியே துரத்தி விட்டாராம். எனவே பாம்புத் தோலாலான ஒரு படகில் ஏறிக்கொண்டு, அவர் டிலபாலன் (Tlapalan) எனும் நாட்டுக்குப் போய்விட்டாராம். போகும்போது, தான் என்ருவது ஒரு நாள் திரும்பி வருவதாகச் சொல்லிவிட்டுச் சென்ருராம். இதை அப்படியே நம்பிய மக்கள் ஐரோப்பியர்கள் தங்கள் நாட்டுக்குள் நுழைந்தபோது வாயு பகவானே திரும்பி வந்துவிட்டதாக எண்ணி உளமார வரவேற்றனர். மூடநம்பிக்கையின் விளைவாக அவர்கள் தமது சுதந்திரத்தையே பறிகொடுத்தனர்.

பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளைத் தம்மகத்தே கொண்ட நான்கு பெரும் யுகங்கள் இருப்பதாகவும், ஒவ்வொரு யுகம் முடிந்த பின்பும் உலகம் முற்றும் அழிந்து, பின்னர் புதிய யுகம் மீண்டும் தோன்றுவதாகவும் அன்னூர் நம்பினர். இறந்தபின் தீயவர்கள் நரகத்துக்கும், நல்லவர்கள் சுவர்க்கத்துக்கும் போவார்கள் என்றும், போரில் இறந்தவர்கள் கட்டாயம் சுவர்க்கம் எய்துவர் எனவும், உடல் இறந்தபின் ஆன்மாக்கள் கொஞ்சகாலம் கழித்துப் பறவைகளையும், மேகங்களையும் ஆட்கொள்ளுமென்றும் அவர்கள் நம்பினர். இறந்தவர்கள் பெரும்பாலும் சுட்டெரிக்கப்பட்டனர். எரிக்கப்பட்டபின் எஞ்சுகிற சாம்பல் ஒரு குடத்தில் இடப்பெற்று வீட்டின் ஒரு மூலையில் பத்திரமாக வைக்கப்பெற்றது. பிணங்களைப் புதைக்கின்ற வழக்கமும் ஒரு சிலரிடம் காணப்பட்டது. அப்படிப்

புதைக்கப்படுமுன், சடலங்கள் நன்கு ஆடை அணிகளால் அலங் கரிக்கப்பட்டன. மந்திரங்கள் எழுதப்பட்ட காகிதத் துண்டுகள் பிரேதத்தைச் சுற்றி வைக்கப்பட்டன. அம் மந்திரங்கள் இறந்தவர்கள் சுவர்க்கத்துக்குப் போகும் வழியில் துன்பம் நேராமல் தடுக்கும் என நம்பப்பட்டது.

குழந்தைகள் பிறந்த உடன் அவற்றுக்கு ஞானஸ்நானம் செய்யப்பட்டது. வழிவழியாக வந்த பாவங்கள் யாவும் அதன் மூல மாயும் ஜெபதபங்கள் மூலமாயும் போக்கடிக்கப்படுமென நம்பப் பட்டது.

குருமார்கள் சமுதாயத்தில் பெரிதும் செல்வாக்குடையவர் களாக விளங்கினர். குழந்தைகளுக்குக் கல்வி புகட்டியவர்கள் அவர்களே யாவர். பெண் பிள்ளைகளுக்குக் கல்வி கற்பிக்கப் பெண் குருமார்கள் இருந்தனர். அவர்களுக்கெனத் தனி மடாலயங்கள் இருந்தன. சீடர்கள் குருமார்களுக்குக் குற்றேவல் புரிந்தனர். கோயில்களுக்கு வேண்டிய பூக்களைப் பறித்துத் தருதல், நந்தா விளக்கு சதா எரிந்துகொண்டிருக்குமாறு எண்ணெய் ஊற்றுதல், திருவிழாக்களுக்கான ஏற்பாடுகளைச் செய்தல் முதலிய சேவைகளை யும் அவர்கள் மேற்கொண்டனர். கோயில்களுக்கென ஏராள மான நிலங்கள் மானியமாக விடப்பட்டன. அதிலிருந்து வரும் வருவாயில் ஒரு பகுதியைக் கோயில் செலவுகளுக்கும், மற்றொரு பகுதியை தர்மகைங்கரியங்களுக்கும் குருமார்கள் செலவழித்தனர். கோயில்கள் பிரமிடுகளைப்போன்ற வடிவத்தில் கட்டப்பட்டன. அவற்றில் பல அடுக்கு மாடிகள் இருந்தன. ஒவ்வொரு மாடியிலும் ஒரு தெய்வத்தின் சிலை வைக்கப்பட்டது. மாடிகளுக்குச் செல்ல சுவர்களின் ஓரத்தில் வளைவான படிகள் அமைக்கப்பட் டிருந்தன. கோயிலின் உச்சியில் எப்போதும் இரண்டு கம்பங் களின் மேல் நெருப்பு எரிந்துகொண்டே இருந்தது. அக்கம்பங் களுக்கிடையே தலைமைக் கடவுளின் சிலை வைக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு மாதத்திலும் ஒவ்வொரு கடவுளுக்கு விழா எடுக்கப்பட் டது. கடவுளர்க்கு மூன்று கால பூஜைகள் முறையே நடை பெற்றன. இராக் காலத்தில் ஒரே ஒரு முறை மட்டுமே பூஜை நடைபெற்றது. ஒவ்வொரு கடவுளுக்கும் தனித்தனிப் பூசாரிகள் இருந்தனர். பாவம் செய்தவர்கள் பூசாரிகளிடம் வந்து முறை யிட்டுப் பாவமன்னிப்பு வேண்டினர். பாவங்கள் கழிதற்கேற்ற விரதங்களையும் பிராயச்சித்தங்களையும் அவர்கள் பாவிகளுக்குத் தெரிவித்தனர்.

***போக்கு வரத்துச் சாதனங்கள்***

நாட்டின் பல பாகங்களை இணைக்கப் பாதைகள் அமைக்கப் பட்டிருந்தன. அப்பாதைகளின் ஓரங்களில் இடையிடையே

அஞ்சலகங்கள் இருந்தன. செய்தி அறிவிப்போர், செய்திகளை எடுத்துக் கொண்டு ஓடிச் சென்று அடுத்த அஞ்சலகத்தில் சேர்ப்பர். அங்கிருந்து இன்னொருவர் அதை அடுத்த அஞ்சலகத்துக்கு எடுத்துச் செல்வார். இங்ஙனம் ஆள்மாற்று முறையால் செய்திகள் நாட்டின் பல பாகங்களுக்கும் அனுப்பப்பட்டன.

### சமுதாய நிலை

அஸ்டெக் சமுதாயத்தில் அரசர்கள், நிலப்பிரபுக்கள், வணிகர்கள், உழவர்கள், போர்வீரர்கள், குருமார்கள் எனப் பல்வேறு வகுப்பினர் இருந்தனர். அவர்களில் அடிமைகளின் நிலைதான் மிகக் கேவலமாயிருந்தது. ஆனல், அடிமைகள் எந்த நேரத்திலும் தங்களை விடுவித்துக் கொள்ளலாம். எனவே, பரம்பரை அடிமை முறை என்பது அவர்களிடம் இல்லை. போரில் கைது செய்யப்பட்டவர்கள், வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க முடியாதவர்கள், வறிஞர்கள் ஆகியோர்களே பெரும்பாலும் அடிமைகளாக இருந்தனர். ஓர் ஆண்டையனிடம் அடிமைகளாக இருந்தவர்கள், அவர் இறந்த உடன் விடுதலை பெற்றனர். அடிமைகளின் குழந்தைகள் அடிமைகளாக இருக்க வேண்டுமென்ற கட்டாயமில்லை. அடிமைகளிற் பலர் தமக்கென நிலமும் சொத்தும் உடையவர்களாய் விளங்கினர். ஒரு சிலர் தமக்குக் கீழ் ஒரு சில அடிமைகளை வைத்திருந்தனர். அஸ்டெக் மக்களிடையே திருமண உறவுகள் நன்கு வலுவுற்று விளங்கின. ஆனல், விருப்பமானல் விவாகரத்துச் செய்து கொள்ளவும் தம்பதிகள் அனுமதிக்கப்பட்டனர். விவாகரத்து வழக்குகளை விசாரிப்பதற்கென்றே தனி வழக்கு மன்றங்கள் அமைக்கப் பெற்றிருந்தன.

### கல்வியும் கலைகளும்

அஸ்டெக்குகள் நன்கு எழுதப் படிக்க அறிந்திருந்தனர். எழுதுவதற்கு நாம் காகிதத்தைப் பயன்படுத்துவது போன்று அன்னர் கற்ருழை இலை, துணி, தோல் இவற்றைப் பயன்படுத்தினர். கற்ருழை இலைகள் மீது ஓவியங்கள் வரையப்பட்டன. அவை நெடுங்காலம் ஒளி குன்ருமல் அப்படியே இருந்தன. கவிதைகள், நாடோடிப் பாடல்கள், கதைகள், நாடகங்கள் முதலியவற்றை அவர்கள் எழுதினர். அவற்றில் பெரும்பான்மையானவற்றை ஸ்பானியர்கள் அழித்துவிட்டனர். எண்களை அவர்கள் இருபதின் மடங்காகக் கணக்கிட்டனர். பத்தொன்பது வரையுள்ள எண்களைக் குறிக்க அவர்கள் அத்தனை புள்ளிகளை வைத்தனர். இருபது எனும் எண் ஒரு கொடியின் உருவத்தால் குறிக்கப்பட்டது. அதன்பின் வரும் ஒவ்வொரு 20க்கும் ஒவ்வோர் அடையாளம் தரப்

பட்டது. ஆண்டொன்றுக்கு 18 மாதங்கள், மாதமொன்றுக்கு 20 நாட்கள் எனக் கணக்கிடப்பட்டன. ஆண்டின் இறுதியில் ஐந்து நாட்கள் சேர்த்துக்கொள்ளப்பட்டன. 52 ஆண்டுகளுக்கு ஒருமுறை 12½ நாட்கள் ஆண்டுடன் கூட்டப்பட்டன. மாத மொன்றுக்கு 4 வாரங்கள் எனவும், ஒரு வாரத்துக்கு 5 நாட்க ளெனவும் கணக்கிடப்பட்டன. ஜாதகத்தில் அவர்கள் அபார நம்பிக்கை கொண்டிருந்தனர். ஒவ்வொரு குழந்தை பிறந்த உடனே அதன் ஜாதகம் கணிக்கப்பட்டது. கிரஹணங்களைப் பற்றி அவர்கள் அறிந்திருந்தனர். ஆனால், வான இயலில் அவர் கள் அவ்வளவு அறிவு பெற்றிருக்கவில்லை. ஏனெனில், வானத் தைத் துப்பு துலக்கக் கூடிய நுட்பமான வானியல் கருவிகள் அவர்களிடம் அப்போது இல்லை.

## 3. இன்கா நாகரிகம்

தென் அமெரிக்காவிலுள்ள பெரு எனும் நாட்டில் பண்டைக் காலத்தே தோன்றிய நாகரிகமே இன்கா நாகரிகம் எனப்படும். அங்கு வாழ்ந்த மக்கள் இன்கா எனும் இனத்தைச் சேர்ந்தவர்கள் ஆதலால் அது அங்ஙனம் அழைக்கப்பட்டது. ஆண்டிஸ் மலைத் தொடர்களின் சரிவுகளில் ஏற்பட்ட நகரங்களில் அந்நாகரிகம் மலர்ந்த காரணத்தால் அதை ஆண்டிய நாகரிகம் எனவும் அழைப்பதுண்டு. அந்நாகரிகம் எப்போது தோன்றியதென்பது திட்டவட்டமாய்த் தெரியவில்லை. எனினும், அது ஏனைய தென் அமெரிக்க நாகரிகங்களைப் போன்றே கி.பி. 16ஆம் நூற்றாண்டில் ஸ்பானியர்களால் அழிக்கப்பட்டது.

இன்கா இனத்தவர் ஸ்பானியர்கள் வருகைக்கு முன் ஆண்டிஸ் மலைச் சரிவுகளிடையே ஓர் பேரரசை அமைத்து ஆட்சி புரிந்து வந்தனர். அதன் தலைநகர் கஸ்கோ (Cuzco) எனப்படுவ தாகும். கி.பி 15ஆம் நூற்றாண்டில் அது தன் புகழின் உச்ச நிலையை எய்தியது. அந்நகரின் நடுவே அழகிய நீரோடை ஒன்று ஓடிக்கொண்டிருந்தது. அதன் இரு கரைகளிலும் அழகிய அரண்மனைகள் பலவும், கம்பீரமான கோயில்களும் எழுப்பப்பட் டிருந்தன. சூரிய பகவானுக்கு அவ்வப்போது திருவிழாக்கள் திறந்த வெளிகளில் நடைபெற்றன. நகரைச் சுற்றிலும் திண்ணிய மதில்கள் சூழ்ந்திருந்தன. அம்மதில்கள் கற்களாலேயே கட்டப் பட்டன. ஒரு கல்லுக்கும் இன்னொன்றுக்கும் இடைவெளி சிறிது மில்லாதபடி அவை ஒன்றன்மீதொன்று அழகாக அடுக்கப்பட் டிருந்தன.

### அரசியல் நிலை

இன்கா மக்கள் பரம்பரை பரம்பரையாக வருகின்ற அரசர்களால் ஆளப்பட்டனர். அவ்வரசர்களுக்குப் பல மனைவியர் இருந்தனர். எனினும், சட்டப்படி இராணியாகக் கருதப்பட்ட ஒருத்தியின் மூலமாகப் பிறந்த அரசகுமாரனே பட்டத்துக்கு உரியவனாகக் கருதப்பட்டான். பட்டத்துக்கு வருமுன் அரசிளங் குமரனுக்குப் பல வகையான பயிற்சிகள் அளிக்கப்பட்டன. அவனது 16ஆம் வயதில் பலப்பயிற்சி ஒன்று நடத்தப்பட்டது. அதில் தேர்ந்தாலன்றி ஓர் அரசகுமாரன் பட்டத்துக்குத் தகுதியில்லை எனக் கருதப்பட்டது. உடலும் உள்ளமும் உரம் பெறத்தக்க முறையில் மல்யுத்தம், வாட்போர் முதலிய துறைகளில் நல்ல பயிற்சியளிக்கப்பட்டது. பொறைக் குணத்தை வளர்க்கும் வகையில் கடுமையான விரதங்களைக் கடைப்பிடிக்குமாறு அன்னார் வற்புறுத்தப்பட்டனர். அவர்களது காதுகளில் துளைகள் போடப்பட்டிருந்தன. அத்துளைகள் பெரிதாகும் பொருட்டு அவற்றில் கனமான தங்க ஆபரணங்கள் திணிக்கப்பட்டன. காதுகளின் விளிம்புகள் தோள்களைத் தொடும்வரை நீட்டப்பட்டன. அத்தகைய நீண்ட காதுகள் இராஜரீகத்தின் சின்னமாகக் கருதப்பட்டன. அரச பதவிக்குரிய எல்லாப் பயிற்சிகளும் முடிந்தபின், அரசிளங் குமரனுக்குப் பட்டமளிப்பு விழா நடைபெற்றது. அப்போது அவனுக்கு அரசர்களுக்கே உரிய மிதியடிகளும், ஒட்டியாணமும், மலர்க் கிரீடமும் அணிவிக்கப்பட்டன. நெற்றியில் கம்பள இழைகளாலான ஓர் பட்டம் கட்டப்பட்டது. அதன்பின் பிரபுக்கள் இளவரசனுக்கு வணக்கம் செலுத்தினர். இச்சடங்குக்குப் பின்னர் இளவரசர் தமது தந்தையின் ஆலோசனை சபைகளிலும், போர்க்களங்களிலும் பங்கெடுத்துக் கொள்ள அநுமதிக்கப்பட்டார்.

### மன்னர் நிலை

மன்னர் ஏறக்குறைய சர்வாதிகாரியாய் விளங்கினார். சாதாரண மக்களின் கண்களுக்கு அதிகம் படாமல் அவர் வாழ்ந்தார். எளிதில் யாரும் அவரை அணுக முடியாது. சமுதாயத்தில் மேல் நிலையிலிருந்த ஒரு சிலரே அவரைக் காண முடியும். அப்படிக் காணச் செல்லும்போது அவர்கள் காலில் மிதியடிகளை அணியக் கூடாது. பணிவுக் கறிகுறியாக அவர்கள் ஓர் சிறிய பளுவினைத் தோளில் சுமந்து செல்லவேண்டும். மன்னர் சூரிய பகவானின் பிரதிநிதியாகக் கருதப்பட்டார். எனவே, மக்களின் மதத் தலைவராயும் தலைமைக் குருவாகவும் அவர் விளங்கினார். சமயச் சடங்குகள், விழாக்கள் முதலியவற்றுக்கு அவர் தலைமை வகித்தார். நாட்டின் சட்டங்களை ஆக்கியவரும், நீதி பரிபாலனம் செய்தவரும்

அவரேயாவார். நீதிபதிகளை அவரே நியமித்தார். போர்க்களத்தில் அவரே சேனைகளுக்குத் தலைமை தாங்கி நடத்தினர்.

அரசர், விகுனு (Vicuna) என்ற விலங்கின் உரோமத்தாலான உயர்ந்த ஆடைகளை அணிந்தார். கொராகுவென்கியு (Coraquenque) என்ற பறவையின் இறகுகள் இரண்டை இராஜரீகத்தின் சின்னமாக அவர் முடிமீது அணிந்து கொண்டார்.

மன்னர் அடிக்கடி நாடெங்கும் சுற்றுப்பயணம் செய்வார். அப்போது மக்களின் குறைகளைக் கேட்டு அவைகளை நிவர்த்திப்பார். பொன்னாலும் மணியாலும் அலங்கரிக்கப்பட்ட பல்லக்குகளிலேயே அவர் பயணம் செய்வது வழக்கம். அப்படிச் செல்லும்போது எங்குப் பார்த்தாலும் அவருக்குக் கோலாகலமான வரவேற்புகள் நடைபெறும். தெய்வீக அரசரைப் பார்க்க, ஏராளமான மக்கள் தெருவின் இருமருங்கிலும் நிற்பர்.

மன்னர் கற்களால் கட்டப்பட்ட கம்பீரமான அரண்மனைகளில் வாழ்ந்தார். அவைகளுக்கு மரத்தாலான கூரை வேயப்பட்டது. அவருக்கு நாடெங்கும் பல அரண்மனைகள் இருந்தன. அவற்றின் சுவர்கள் தங்கத்தாலும் வெள்ளியாலும் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தன. மிருகங்கள், செடி கொடிகள் ஆகியவற்றின் உருவச் சிலைகள் அவற்றில் ஆங்காங்கே வைக்கப்பட்டிருந்தன. கஸ்கோ (Cuzco) என்ற தலைநகரில், அவருக்கிருந்த பெரும் அரண்மனையோடு கூட, அழகு வாய்ந்த கோடைக்கால மாளிகை ஒன்றும் யுகாய் (Yucay) எனும் நகரில் இருந்தது. அது நாற்புறமும் பசுமையான காடுகளும் புல்வெளிகளும் சூழ்ந்த பள்ளத்தாக்கில் அமைந்திருந்தது. குளிர்ச்சி பொருந்திய மென்காற்று அங்கு வீசிய வண்ணமிருக்கும். நறுமணமிக்க பூங்காக்களும், தோப்புகளும், சில்லென்ற நீர் ஓடும் ஓடைகளும், குளியல் குளங்களும் நிறைந்த அந் நகரில் அரசர் கோடைக் காலங்களில் தம் அந்தப்புர மகளிரோடு உல்லாசமாய்ப் பொழுது போக்குவது வழக்கம்.

அரசர் ஒவ்வொருவரும் தமக்கு வேண்டிய பொருளைத் தாமே தான் ஈட்டுதல் வேண்டும். அவர் இறந்த உடன் அவரால் சம்பாதிக்கப்பட்ட பொருள் அனைத்தும் அரண்மனையிலுள்ள ஓர் கிடங்கில் அடைக்கப்பட்டுவிடும். என்றுவது ஒருநாள் மரித்தவர் எழுவார் என்றும் அப்போது அவரவரது பொருளை அவரவர் அநுபவிக்கலாம் எனவும் மக்கள் நம்பினர். அரசர் இறந்த உடன் அவரது சடலம் நன்கு பதனம் செய்யப்பட்டு, அரசருக்குரிய மரியாதைகளுடன் சூரிய பகவான் கோயிலுக்குள் அடக்கம் செய்யப்

பட்டது. அவருக்குச் சொந்தமான தங்க வெள்ளி நகைகளும் அவரது உடலோடு சேர்த்துப் புதைக்கப்பெற்றது. அவரது ஏவலாளர்களும், வைப்பாட்டிகளும் கூடக் கொல்லப்பட்டு அவரோடு புதைக்கப்பட்டனர். இறந்த மன்னரைப் பெருமை செய்யுமுறையில் நினைவு நாள் விழா ஆண்டுதோறும் நடைபெற்றது.

*பிரபுக்கள் நிலை*

இன்கா (Inca), குராகா (Curaca) என்ற இருவகையான பிரபு வர்க்கம் ஆண்டிய சமுதாயத்தில் காணப்பட்டது. இன்கா பிரபுக்கள் அரச பரம்பரையைச் சேர்ந்தவர்கள். அவர்களின் வம்சம் சூரியனிடமிருந்து தோன்றியதாக நம்பப்பட்டது. அவர்கள் தமக்கென்று தனி உடையுடன் விளங்கினர். மாநிலங்களின் ஆளுநர்களாயும், படைத்தலைவர்களாகவும், இன்னும் பல உயர்தர அதிகாரிகளாயும் அன்னூர் நியமிக்கப்பட்டனர். பெரும்பாலும் அவர்கள் மன்னரது அரண்மனையிலேயே வாழ்ந்து வந்தனர். இறைவனது பிரதிநிதிகள் என்ற முறையில் நாட்டின் சட்டங்கள் தம்மைக் கட்டுப்படுத்தமாட்டா என அவர்கள் கருதினர். போரில் வெல்லப்பட்டவர்களும், அவர்களின் சந்ததியர்களும் குராகா வர்க்கத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதப்பட்டனர். அவர்களுக்கு ஏராளமான நிலபுலங்கள் மானியமாக விடப்பட்டிருந்தன. அவர்களின் மக்கள் அரண்மனையிலேயே கல்வி கற்றனர். ஆனால், அவர்கள் பெரும் பதவிகளில் நியமிக்கப்படவில்லை.

*ஆட்சி முறை*

நாடு நான்கு பெரும் மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு மாநிலமும் ஓர் அரசப் பிரதிநிதியால் ஆளப்பட்டது. அரசப் பிரதிநிதிக்கு ஆலோசனை கூற ஓர் அவை அமைக்கப்பட்டது. சமுதாயத்திலிருந்து வெவ்வேறு பிரிவினரின் தனிப்பட்ட உரிமைகளைக் காப்பதே அரசப் பிரதிநிதியின் தலையாய கடமையாகும். குற்றவாளிகளைத் தண்டிக்காமல் விட்ட அதிகாரிகள், அக்குற்றங்களுக்கேற்ற தண்டனைகளைப் பெற்றனர். மாநிலங்களுக்கு அடுத்தாற்போல், 10,000 பேர் மக்கள்தொகை கொண்ட மாவட்டங்கள் இருந்தன. அவற்றை ஆளுநர்கள் ஆண்டார்கள். சிறிய வழக்குகள் ஆங்காங்கே இருந்த நீதிபதிகளால் விசாரிக்கப்பட்டன. மாநில நீதிமன்றங்களுக்கு மேல்முறையீடு செய்து கொள்ளும் உரிமை மாவட்ட மக்களுக்கு இருந்தது. கிரிமினல் குற்றங்களுக்குத் தண்டனை கடுமையாக வழங்கப்பட்டது. விபசாரம், தேசத்துரோகம், மததுவேஷம் போன்ற குற்றங்களுக்கு மரண தண்டனை வழங்கப்பட்டது. சட்டங்கள் யாவும் சூரிய பகவானின் ஆணைகள் எனக்

கருதப்பட்டன. அவற்றை மீறியோர் தெய்வத்தை அவமதித்த குற்றத்துக்கு ஆளாயினர்.

*பொருளாதார நிலை—வேளாண்மை*

இன்கா மக்கள் விவசாயத்தில் சிறந்த முன்னேற்றமடைந்திருந்தனர். ஏனைய அமெரிக்கர்கள் அனைவரையும் விட அவர்கள் வேளாண்மையில் திறமை பெற்று விளங்கினார்கள். மன்னரே இத்துறையில் மக்களுக்கு வழிகாட்டியாக விளங்கினர். ஒரு திருவிழாவின்போது அவர் பொன்னாலான கலப்பையைக் கொண்டு கஸ்கோ நகருக்கருகிலுள்ள நிலங்களை உழுவது வழக்கம். கடற்கரைப் பகுதிகள் மணற்பாங்காயிருந்ததால் அங்கு எதுவும் விளைவிக்கப் பெறவில்லை. ஆனால், உள்நாட்டுப் பகுதிகளில் செழிப்பான நிலங்களிருந்தன. அவற்றில், மழை நீரைக் கொண்டும், ஏரிகள் ஆறுகள் இவைகளிடமிருந்து கால்வாய்கள் மூலம் கொண்டுவரப்பட்ட நீரைக் கொண்டும் முப்போகம் விளைவிக்கப்பட்டது. வாழை, கொக்கோ, கசாவா முதலிய பயன்தரும் மரங்களையும், மக்காச்சோளம், அரிசி போன்ற உணவு தானியங்களையும் அவர்கள் பயிர் செய்தனர். மிதமான காலநிலை உள்ள இடங்களில் புகையிலையும், மெகு (Maguey) என்ற நார்ச் செடியும் பயிரிடப்பட்டன. கொக்கோவிலிருந்து பருகும் பானங்களும், மெகுவிலிருந்து கயிறுகளும், சோற்றுக் கற்றாழையிலிருந்து (aloe) காகிதமும், மதுவும் செய்யப்பட்டன. கற்றாழையின் இலைகள் கூரையாகவும், நார்கள் கயிறாகவும், கிழங்குகள் உணவாகவும், முட்கள் ஊசியாகவும் பயன்பட்டன. பலவகையான மருந்து மூலிகைகளையும் பல்வேறு வகையான மலர்களையும் சிலர் பயிர் செய்தனர். கண்ணுக்கினிய மலர்கள் எங்குப் பார்த்தாலும் காணப்பட்டன. ஓர் இன்பப் பூங்காபோல பெரு நாடு காட்சியளித்தது.

விவசாயிகள் கடற்பறவைகளின் எச்சங்களை எருவாகப் பயன்படுத்தினர். இழந்த செழிப்பை மீண்டும் பெற வயல்கள் சிலகாலம் தரிசாகப் போடப்பட்டன. சிறந்த நீர்ப்பாசன வசதி முறைகளை அவர்கள் அறிந்திருந்தனர். அதைக் கொண்டு அவர்கள் பாலைவனங்களையும் சோலைவனமாக்கினர். கலப்பையை ஆண்களும் பெண்களும் சேர்ந்து இழுக்க உழவர்கள் நிலங்களை ஆழ உழுதனர். ஒரு சிலர் கூடவே மண்ணாங்கட்டிகளை உடைத்துத் தூள் செய்து கொண்டே சென்றனர். மலைச் சரிவுகளில் கூட, படிப்படியாக மேடைத்தளங்களை அமைத்துப் பயிர் செய்யும் முறையை (Terraced Cultivation) அவர்கள் அறிந்திருந்தனர்.

நாட்டிலுள்ள நிலங்கள் யாவும் மூன்று பகுதியாகப் பிரிக்கப்பட்டன. ஒரு பகுதி சூரியக் கடவுளுக்கும், மற்றொரு பகுதி இன்கா

மன்னருக்கும், மூன்ருவது பகுதி மக்களுக்கும் என வகுக்கப் பட்டது. முதலிரண்டு பகுதி நிலங்களில் வந்த வருவாயனைத்தும் முறையே கடவுளுக்கும், மன்னருக்கும் சொந்தமாக்கப்பட்டது. கடவுளுக்கு வந்த வருவாயைக் கொண்டு கோயில்கள் பரிபாலனம் செய்யப்பட்டன. குருமார்கள், அநாதைகள், விதவைகள், போர் வீரர்கள் ஆகியோர் அதைக் கொண்டே பிழைத்தனர். மன்னரின் வருவாயைக் கொண்டே, ஆட்சியாளர்கள், யாவருக்கும் ஊதியம் வழங்கப்பட்டது. மூன்ருவது பகுதியைச் சேர்ந்த நிலங்கள் நாட்டி லுள்ள குடும்பங்களிடையே சமமாகப் பிரித்து வழங்கப்பட்டன. நிலங்களை உழுது பயிரிட்ட குடியானவர்கள் விளைச்சலில் ஒரு பகுதி யைக் கூலியாகப் பெற்றனர்.

*தொழில்கள்—நெய்தல் தொழில்*

ஆடு மேய்த்தல் ஆண்டியர்களின் முக்கிய தொழில்களிலொன் ருகும். ஆடுகளை அவர்கள் பொன்னே போல் போற்றி வளர்த்தனர். நாட்டிலுள்ள ஆடுகள் அனைத்தும் இறைவனுக்கும் அவரது பிரதி நிதியான மன்னருக்குமே சொந்தமெனக் கருதப்பட்டது. வேட்டைக்காலத்திலன்றி மற்றச் சமயங்களில் ஆடுகளைக் கொல்வது பெருங் குற்றமாகக் கருதப்பட்டது. இங்ஙனம் ஆடுகள் நாட்டின் பொது உடமையாக்கப்பட்டன. ஒவ்வோர் இடையனுக்கும் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள ஆடுகளே பகிர்ந்தளிக்கப்பட்டன. பண்டிகை தினங்களில் தெய்வங்களுக்குப் பலியிடுவதற்கென ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள ஆடுகள் ஆண்டுதோறும் அரண் மனைக்கு அனுப்பப்பட்டன. சரியான பருவங்களில் ஆட்டு உரோமங் களைக் கத்தரிக்க ஏராளமாக ஆட்கள் வேலைக்கமர்த்தப்பட்டனர். அங்ஙனம் சேகரிக்கப்பட்ட உரோமங்கள் பெரிய கிடங்குகளில் சேமித்து வைக்கப்பட்டு, ஒவ்வொரு குடும்பத்துக்கும் அதனதன் தேவைக்கேற்ப பகிர்ந்தளிக்கப்பட்டன. குடும்பத்திலுள்ள பெண் டிர்களே உரோமங்களை ஆடையாக நெய்தனர். குடும்பத்துக்கு வேலை செய்த நேரம் போக மீதி நேரங்களில் அவர்கள் மன்னருக் காகக் கம்பளத் துணிகளை நெய்தனர். இன்கா மன்னருக்கு இத்தனை ஆடைகளை ஒவ்வொரு குடும்பமும் நெய்து தரவேண்டுமென்பது கட்டாயமாக்கப்பட்டது. அதன்படி ஒவ்வொரு குடும்பமும் பணி புரிகிறதா என்பதைக் கண்காணிக்க அதிகாரிகள் பலர் நியமிக்கப் பட்டிருந்தனர். ஆட்டிறைச்சியை மக்கள் உணவாக உண்டனர். அதன் உரோமத்தினின்றும் போர்வைகள், உடைகள், திரைச் சீலைகள், தரை விரிப்புகள் போன்ற பல பொருள்கள் நெய்யப் பட்டன. அவைகள் அழகாக சாயந்தோய்க்கப்பெற்றன. மெகுவே நாரினின்றும் பருத்தியிலிருந்தும் கூட ஆடைகள் நெய்யப்பட்டன.

பறவையின் இறகுகளை உடைகளில் நுழைத்துத் தைக்கும் கலையிலும் அவர்கள் வல்லவர்களாய் விளங்கினர்.

*சுரங்கத் தொழில்*

நாட்டின் உலோகச் சுரங்கங்கள் யாவும் அரசருக்கே உடைமை யாக இருந்தன. பயிற்சி பெற்ற சுரங்கத் தொழிலாளிகள் அவற்றில் ஈடுபடுத்தப்பட்டனர். ஆற்றுப் படுகைகளிலும், குகைகளிலும் கூட தங்கம் கிடைத்தது. குரிஞகோ (Curinago) எனுமிடத்திலிருந்த சுரங்கம் மிகவும் புகழ் பெற்றது. போர்ஸ் (Pores) எனுமிடத்தி லிருந்த வெள்ளிச் சுரங்கத்தில் மிகக் குறைந்த ஆழத்திலேயே வெள்ளி கிடைத்தது. வெள்ளியை மூலப் பொருளினின்றும் பிரிக்கும் கலை அவர்களுக்குத் தெரியவில்லை. எனவே, காற்றின் உதவியால் எரியக் கூடிய பெரிய களவாய்களை அவர்கள் மேட்டு நிலங்களில் அமைத்து அவற்றின் மூலம் அவர்கள் உலோகங்களைக் கலவைப் பொருளினின்றும் பிரித்து எடுத்தனர்.

*உலோக வேலைப்பாடு*

தங்கத்தாலும் வெள்ளியாலும் செய்யப்பட்ட ஏராளமான வளையல்களை மகளிர் அணிந்தனர். வீட்டிற்கு வேண்டிய பாத்திரங் களும் தட்டுமுட்டுச் சாமான்களும் செம்பாலும் வெண்கலத்தாலும் செய்யப்பட்டன. மரகதம் போன்ற கெட்டியான கற்களை வெட்டு வதற்காக செம்பையும் தகரத்தையும் கலந்து உறுதியான கருவிகளை அன்னூர் ஆக்கினர். விலையுயர்ந்த கற்கள், வெள்ளி ஆகியவற்றை நன்கு தேய்த்து அவற்றைக் கண்ணாடிகளாகப் பயன்படுத்தினர்.

தொழிலாளிகள் நாட்டின் பொது உடைமையாகக் கருதப் பட்டனர். நாட்டின் பல்வேறு பொருளாதாரத் திட்டங்களில் அவர்கள் பலவந்தமாக ஈடுபடுத்தப்பட்டனர். ஆனால், தனிப்பட்ட முறையில் தொழில் செய்து இலாபம் சம்பாதிக்கவும் அவர்கள் உரிமை பெற்றிருந்தனர். தொழிலாளிகள் பொதுவில் உழைத்து உற்பத்தி செய்த பொருள்கள் பெரிய கிடங்குகளில் சேமிக்கப் பட்டுத் தேவையான காலங்களில் மக்களுக்கு வழங்கப்பட்டன. அவர்கள் நாட்டுக்காகவே உழைத்து நாட்டுக்காகவே இறந்தனர். நாட்டின் வரிப்பளு முழுதும் அவர்கள் மீதே சுமத்தப்பட்டது. அவர்கள் சுகபோகமாக வாழவில்லை எனினும் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களைப் பெற்றனர். அரசர் அவர்களை நோய், முதுமை, வேலையின்மை போன்ற இக்கட்டான காலங்களில் பொருள் உதவி செய்து காப்பாற்றினர்.

### போக்குவரத்துச் சாதனங்கள்

பண்டைய ரோமாபுரியை எங்ஙனம் பெரும் பாதைகளைக் கொண்டு ரோம் மன்னர்கள் இணைத்தனரோ, அங்ஙனமே இன்கா மன்னர்களும் நாட்டின் தலைநகரான கஸ்காசையும் ஏனைய நகரங்களையும் பெருவழிகளால் இணைத்தனர். 1500 மைல்கள் நீளமுள்ள ஓர் பெருவழி, ஆண்டிய பீட பூமியைக் கடந்து சென்றது. மைல் கற்கள் அதில் நடப்பட்டிருந்தன. கற்களையும், தண்ணீர் கசியாத ஒருவகை சாந்தினையும் பயன்படுத்தி வழுவழுப்பான பாதைகள் அமைக்கப்பட்டன. ஆறுகள், ஓடைகளின் வழியே பாதை சென்றபோது பாலங்கள் அமைக்கப்பட்டு ஓரங்களில் நடைபாதையும் கைப்பிடிச் சுவர்களும் எழுப்பப்பட்டன. ஆண்டிஸ் மலைகளுக்கும் கடலுக்குமிடையே இன்னொரு பெரும்பாதை அமைக்கப்பட்டது. பாதைகளின் இருமருங்கிலும் நறுமணமிக்க பூக்கள் நிறைந்த மரங்கள் நடப்பட்டன. ஆங்காங்கே வழிப்போக்கர்கள் தங்கி இளைப்பாற சத்திரங்கள் கட்டப்பட்டன. பாதைகளைச் செவ்வனே பாதுகாக்கும் பொறுப்பு அந்தந்த மாவட்டங்களுக்கே விடப்பட்டது.

சாலை ஓரங்களில் அஞ்சல் நிலையங்கள் ஆங்காங்கே இருந்தன. செய்திகளை எடுத்துக்கொண்டு தபால்காரர்கள் ஒரு நிலையத்திலிருந்து மற்றொரு நிலையத்துக்கு ஓடினர். மாறிமாறி ஓடும் ஓட்டக்காரர்கள் மூலம் செய்திகளும் அரசரது ஆணைகளும் உள்நாட்டுப் பகுதிகளுக்கு எடுத்துச் செல்லப்பட்டன. மக்களுக்குத் தேவையான உணவுப் பொருள்களும், ஏனைய பண்டங்களும் நெடுஞ்சாலைகள் வழியாகவே எடுத்துச் செல்லப்பட்டன. பண்டங்களைச் சுமந்து செல்ல லாமாக்கள் எனும் ஒருவகை ஒட்டகங்கள் பயன்படுத்தப்பட்டன. உள் நாட்டுக் கலகங்களை அடக்கப் படைகளும் இச் சாலைகளையே பயன்படுத்தின. துருப்புகள் தங்க சாலைமருங்கில் பல கோட்டைகள் கட்டப்பட்டன. இங்ஙனம் நாட்டின் பெருவழிகள் வாணிப வளர்ச்சிக்கும், அமைதி காக்கவும் பெரிதும் பயன்பட்டன.

### படை

இன்கா மன்னர்கள் போர்க்குணம் மிகுந்தவர்கள். எதற்கெடுத்தாலும் போரில் ஈடுபடும் இயல்பு படைத்தவர்கள். அவர்களது கடவுளான சூரியனைத் தெய்வமாக ஏற்றுக்கொள்ள மறுத்தோர் அனைவர்மீதும் அன்னார் போர் தொடுத்தனர். ஆனால், கூடுமான வரை சமாதான முறையில் அவர்களிடமிருந்து பொருள் பறிக்கவே அவர்கள் பெரிதும் முயன்றனர்.

ஒவ்வொரு மாவட்டமும் இத்தனைப் போர் வீரர்களைப் படைக்கு வழங்க வேண்டுமென்ற நியதி இருந்தது. அவர்களுக்கு வேண்டிய வில், அம்பு, வாள், கதை, ஈட்டி, கவண் போன்ற போர்க் கருவிகளை அரசாங்கம் அவர்களுக்கு வழங்கியது. வண்ணமிக்க ஆடைகளையும், பொன்னாலும், மணியாலும், பறவை இறகுகளாலும் அலங்கரிக்கப்பட்ட தலைமுடிகளையும் அணிந்துகொண்டு அன்னார் போர் புரிந்தனர். பஞ்சு தைக்கப்பெற்ற கேடயங்களை அன்னார் தற்காப்புக்குப் பயன்படுத்தினர். படைகளில் பல பிரிவுகள் இருந்தன. ஒவ்வொன்றுக்கும் ஓர் தளபதி இருந்தார். எல்லாருக்கும் மேலாக சேனாதிபதி ஒருவர் இருந்தார். இளவரசரே பொதுவாக சேனாதிபதியாக இருப்பது வழக்கம். வானவில் பொறித்த கொடியினை ஏந்தி வீரர்கள் போர்புரிந்தனர். சாதாரண மக்களைத் துன்புறுத்தல், அவர்களது உடைமைகளைக் கவரல் போன்ற காரியங்களில் ஈடுபட்டால் அன்னாருக்கு மரணதண்டனை வழங்கப்பட்டது.

வெல்லப்பட்ட நாடுகளை இன்கா மன்னர்கள் கொஞ்சம் கொஞ்சமாகத் தமது நாட்டைப் போன்றே மாற்ற முயற்சித்தனர். தங்களது மொழி, சமயம், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை வெல்லப்பட்ட மக்கள்மீது அன்னார் திணித்தனர். பொதுவாக அவர்கள் கௌரவமாகவே நடத்தப்பட்டனர். எனவே, வென்றார்க்கும் வெல்லப் பட்டார்க்குமிடையே காழ்ப்புணர்ச்சிக்குப் பதிலாக நட்புணர்ச்சியே பெரிதும் காணப்பட்டது.

போர் வீரர்கள் பரணி பாடிக்கொண்டே நடை போட்டனர். அறிவியல் போர்முறைகளை அன்னார் அறிந்திலர். திடீரெனத் தாக்குதல், திடீரெனப் பின் வாங்கல், எதிரி எதிர்பாராதபோது தாக்குதல், எதிரிகளை அபாயமான இடங்களுக்கு இட்டுச் சென்று சூழ்ந்துகொளல், கொரில்லாப் போர்முறைகள் இவைகளையே அன்னார் மேற்கொண்டனர். போரில் இறந்தவர்கள் வீர சுவர்க்கம் புகுவர் என நம்பப்பட்டது. எனவே, அவர்கள் உயிர்க்குச் சிறிதும் அஞ்சாது போரிட்டனர். ஒரு வீரனுடைய சிறப்பு அவன் எத்தனை வீரர்களைக் கைது செய்தானோ அதைப் பொறுத்தே தீர்மானிக்கப் பட்டது. கைது செய்யப்பட்டவர்களில் பெரும்பாலோர் கடவுளுக்குப் பலியிடப்பட்டனர். வீரர்களிடையே கட்டுப்பாடு பெரிதும் நிலவியது. உயர்அதிகாரியின் ஆணைகளுக்குக் கீழ்ப்படிய மறுத்தோரும், பிறரது சொத்துகளைச் சூறையாடியோரும் கொல்லப்பட்டனர். காயம்பட்ட வீரர்களையும், நோய்வாய்ப்பட்ட வீரர்களையும் குணப் படுத்த மருத்துவமனைகள் ஆங்காங்கே அமைக்கப்பட்டன.

*சமுதாய நிலை*

இன்கா சமுதாயத்தில் சாதிமுறை காணப்படவில்லை. ஆனால், பரம்பரை பரம்பரையாக ஒரே தொழிலைச் செய்து வரும் வகுப்புகள் பல இருந்தன. ஒவ்வொரு தொழிலுக்கும், வாணிபத்துக்கும் தனித்தனிக் குழுக்கள் இருந்தன. அக்குழுக்களுக்குத் தனிப்பட்ட கடவுள்கள் இருந்தனர். வணிகர்களே சமுதாயத்தில் சிறந்து விளங்கினார்கள். அவர்களது பயணத்தையோ, உடைமையையோ குலைத்தோர் மரண தண்டனைக்குள்ளாயினர். அவர்கள் பெருஞ் செல்வாக்கோடு சீமான்கள் போல் வாழ்ந்தனர். அரசர்களும் அவர்களை அவ்வப்போது கலந்தாலோசித்தே பல முடிவுகளை எடுத்தனர். செல்லுமிடங்களிலெல்லாம் அரசர்களுக்காக வேவு பார்க்கும் வேலையையும் அவர்கள் மேற்கொண்டனர். அவர்களுக் கெனத் தனி நீதிமன்றங்களும், பொருளாதார ஆலோசனை மன்றங் களும் இருந்தன. அவர்கள் பயணம் செல்லும்போது ஏராளமான பணியாளர்கள் அவர்களைப் பின்தொடர்ந்தனர். அவர்களது சமுதாயத்தில் அடிமைகள் ஏராளமாக இருந்தனர். வறுமையின் காரணமாகவும் போர்க்களத்தில் தோற்றதன் விளைவாகவும் பலர் அடிமைகளாக்கப்பட்டனரே அன்றி பிறவியிலேயே அடிமைகள் என்ற ஒருநிலை அங்கில்லை. பல அடிமைகள் தமக்கென சொத்து களை வைத்திருந்தனர்.

இன்கா மக்கள் நல்ல நாகரிகமான பழக்க வழக்கங்களைக் கைக் கொண்டிருந்தனர். ஒருவருக்கொருவர் பரிசுப் பொருள்களாக, ஆடைகளையும், அணிகளையும், பூக்களையும், தமக்குள் பரிமாறிக் கொண்டனர். துயருற்றோர்க்கு ஆறுதல் கூறவும், வெற்றி பெற்றோர்க்கு வாழ்த்துரை வழங்கவும் நன்கு தெரிந்திருந்தனர். குழந்தைகள் மிகுந்த, கட்டுப்பாடுகளுடன் வளர்க்கப்பட்டார்கள். பெண்களுக்குத் தனி மரியாதை தரப்பட்டது. எளிய சிக்கன வாழ்க்கை வாழவும், துப்புரவாக இருக்கவும், கணவன்மார்களுக்கு உண்மையாக நடந்துகொள்ளவும், அவர்கள் பயிற்றுவிக்கப் பட்டனர். திருமணங்கள் வைதீகமுறையில் நடைபெற்றன. புனிதச் சடங்குகள் பல அப்போது நடத்தப்பெற்றன. மணமகனும் மணமகளும் ஒருவருக்கொருவர் விசுவாசமாக இருப்பதாக உறுதி மொழி எடுத்துக்கொண்டனர். இன்கா மன்னரோ அல்லது அவரது பிரதிநிதியோ முன்னின்று திருமணங்களை நடத்தி வைத்தார்கள். தலைநகரிலும் கிராமங்களிலும் அவ்வப்போது திருமணச் சந்தைகள் நடத்தப்பெற்றன. வயதுவந்த ஆண்களும் பெண்களும் ஒன்று கூட்டப்பட்டனர். மனதுக்குப் பிடித்த யுவர் களும், யுவதிகளும் அதிகாரிகளின் முன்னிலையில் அங்கேயே

திருமணம் செய்துகொண்டனர். விவாகரத்துச் செய்துகொள்ளும் உரிமையும், அவசியமானபோது அவர்களுக்கு வழங்கப்பட்டது. அதற்கெனத் தனிப்பட்ட நீதிமன்றங்கள் இருந்தன. பலதார மணம் பரவலாக இருந்தபோதிலும், ஒருவன் ஒருத்தியை மணந்து கொள்ளும் வழக்கமே சிறப்பாகக் கருதப்பட்டது. பெண்கள் நூல் நூற்றல், ஆடை நெய்தல் போன்ற தொழில்களில் ஓய்வு நேரங்களில் ஈடுபட்டிருந்தனர். பண்டிகைகளைக் கொண்டாடுவதிலும் விருந்தினர் களை உபசரிப்பதிலும் அவர்கள் பெரிதும் அக்கறை காட்டினர். வீடுகளை மலர்களாலும், இலைகளாலும் அவர்கள் நன்கு அலங்கரித் தனர். விருந்துகளின்போது ஆமை ஓடுகளினாலான சிறு குழல் களில் புகையிலை வைத்து வழங்கப்பட்டது. ஆண்களும் பெண் களும் ஒருங்கே புகைபிடித்து மகிழ்ந்தனர். பொடிபோடும் வழக்க மும் அவர்களிடம் காணப்பட்டது. விருந்துகளில், பலவகையான இறைச்சிகளும், பழங்களும், காய்கறிகளும் வழங்கப்பட்டன. சில பண்டிகைகளின்போது நர மாமிசமும் உணவாகப் படைக்கப் பட்டது. சாக்லேட் என்ற பானத்தையும் பலவகையான மது பானங்களையும் அன்னார் அருந்தி மகிழ்ந்தனர். விருந்து முடிந்த பின் யுவர்களும், யுவதிகளும் பாடியும், ஆடியும் பொழுது போக் கினர். போதையேற்படா வண்ணம், மிதமாகவே அவர்கள் மதுவை அருந்தினர். விருந்துகளின் இறுதியில் ஆடை, அணிகலன் கள் பரிசுகளாக வழங்கப்பட்டன.

**கல்வியும் கலைகளும்**

சமுதாயத்தில் உயர் நிலையில் இருந்த ஒருசில பிரபுக்களுக்கே கல்வி தனி உரிமையாக இருந்தது. அவர்களது குழந்தைகளுக்கு மட்டுமே கல்வி போதிக்கப்பட்டது. சிவில் துறையிலும் இராணுவத் துறையிலும் அவர்களுக்கென ஒதுக்கப்பட்ட ஒருசில பதவிகளுக்கு ஏற்றமுறையில் அவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது.

சாதாரண மக்கள் தம்மிடையே கருத்துகளைப் பரிமாறிக் கொள்ள ஒரு நூதன முறையைக் கையாண்டனர். வெவ்வேறு நிறம் கொண்ட நூல்களால் திரிக்கப்பட்ட இரண்டடி நீளமுள்ள குவிபு (Quipu) என அழைக்கப்பட்ட ஓர் கயிற்றை அவர்கள் கருத்து வெளியீட்டுக் கருவியாகப் பயன்படுத்தினர். அக்கயிற்றிலிருந்து பல்வேறு நிறம்கொண்ட நூல்கள் தொங்கிக்கொண்டிருந்தன. ஒவ்வொரு நிறமும் தனித்தனிப் பொருளையோ, கருத்தையோ குறித்தது.

வெள்ளை நிறம் வெள்ளியையும், மஞ்சள் நிறம் தங்கத்தையும் குறித்தன. அதே போன்று வெண்மை அமைதியையும், செம்மை

போரையும் குறிப்பிட்டன. அதில் காணப்பட்ட முடிச்சு பூஜ்யத்தைக் குறித்தது. ஏனைய முடிச்சுகள் வெவ்வேறு எண்களைக் குறித்தன. இத்தகைய முடிச்சுகளைக் கொண்டே கணக்குகள் யாவும் போடப்பட்டன. நாட்டில் கிடைக்கும் கச்சாப் பொருள்கள், செய்பொருள்கள் எவ்வளவு என்பதையும், வீரர்கள், தொழிலாளிகள் எத்தனைபேர் என்பதையும் இக்கயிற்றைக் கொண்டே அதிகாரிகள் கணித்தனர்.

இன்கா மக்களின் கவிஞர்கள் முக்கிய சம்பவங்களின் வரலாற்றை நாட்டுப் பாடல்களாகப் பாடிவைத்தனர். கோயில்களிலும், அரண்மனைகளிலும் திருவிழாக்களின்போது அவைகள் மக்கள்முன் படித்துக் காட்டப்பட்டன. கவிதை, நாடகம் இவை நன்கு வளம் பெற்றிருந்தன. துன்பியல், இன்பியல் ஆகிய இருவகை நாடகங்களும் அவர்களால் போற்றி வளர்க்கப்பட்டன. புவியியல்பற்றிய அறிவையும் அவர்கள் ஓரளவு பெற்றிருந்தனர். எல்லைகள் குறிக்கப்பெற்ற வரைபடங்களை அவர்கள் வைத்திருந்தனர். வானியல் அறிவும் அவர்களிடம் ஓரளவு காணப்பட்டது. ஆண்டொன்றுக்கு 12 மாதங்கள் என்பதை அவர்கள் அறிந்திருந்தனர். ஒவ்வொரு மாதத்திலும், ஒவ்வொரு பண்டிகை கொண்டாடப்பட்டது. தலைநகரைச் சுற்றி மேட்டுநிலத்தில் வைக்கப்பட்டிருந்த உருளைவடிவான தூண் வரிசைகளைக் கொண்டும், அவற்றின் நிழல்களைக் கொண்டும் அவர்கள் சூரியனின் வெவ்வேறு திருப்பு முனைகளைக் கணித்தனர். கோயிலில் வரையப்பட்ட ஓர் வட்டத்தின் நடுவே ஓர் தூணை நட்டு, அதன் நிழல் எப்போது நடுப்பகலில் சாயாமலிருக்கிறதோ அதுவே இரவு பகல் சமமாயிருக்கும் நாட்களென்பதை (equinoxes) அவர்கள் கணக்கிட்டனர். அத்தகைய சமகால நாட்களை அவர்கள் கொண்டாடினர். அந்நாட்களைக் கணிக்க உதவிய தூணுக்கு மாலைகள் அணிவிக்கப்பட்டன. பழங்கள் முதலியன நைவேத்தியமாகப் படைக்கப்பட்டன. வெள்ளி என்ற கோளின் இருப்பை அவர்கள் அறிந்திருந்தனர். பலிபீடங்கள் அமைத்து அக்கோளுக்கு வழிபாடுகள் செய்யப்பட்டன. கிரஹணங்கள் பற்றியும், வளர்பிறை தேய்பிறை போன்றவற்றைப் பற்றியும் அவர்கள் அறியவில்லை. தனது சோம்பேறித்தனத்தினாலேயே சந்திரன் தேய்கிறது என்று அவர்கள் நம்பினர்.

சிற்பம், கட்டடக்கலை இவற்றிலும் அவர்கள் ஓரளவு சிறந்து விளங்கினர். பொன், வெள்ளி, செம்பு, பித்தளை முதலிய உலோகங்களைக் கொண்டு பல்வேறு மிருகங்களைப் போல் உருவங்களைச் செய்து மாளிகைகளில் வைத்திருந்தனர். கோயில்களிலும், அழகிய மனித உருவச் சிலைகளையும், பிராணிகளின் சிலைகளையும்

வைத்திருந்தனர். மாண்டிஸுமா என்ற மன்னர் காலத்திய இரண்டு பாறைப் புடைப்போவியங்கள் மட்டுமே இப்போது கிடைத்துள்ளன. அவையும் ஸ்பானியர்களால் சிதைக்கப்பட்ட நிலையிலேயே காணப்படுகின்றன. 50 டன் எடையுள்ள வெண்நீலப் பாறையினுலான நாட்காட்டி (Calendar) ஒன்று கஸ்கோ நகரில் கிடைத்துள்ளது. இன்கா மக்களின் சிற்பத்திறனுக்கு அது தக்க தோர் எடுத்துக் காட்டாகும்.

கருங்கல்லாலும், செங்கல்லாலும் கட்டப்பட்ட கட்டடங்களின் அழிபாடுகளில் இருந்து இன்கா மக்களின் கட்டடக்கலைச் சிறப்பினை நாம் நன்கு அறியலாம். சுவர்கள் 12 அல்லது 14 அடி உயரமுள்ளவையாகவும், கனமுள்ளவையாகவும் இருக்கின்றன. நடுவில் ஓர் முற்றமும் அதைச் சுற்றி அறைகளும் அமைக்கப்பட்டுள்ளன. கதவுகள் அகலமாக உள்ளன. அறைகளில் ஜன்னல்கள் காணப்படவில்லை. தூண் வரிசைகளில் வளைவுகள் முதலியவற்றைப் பயன்படுத்த அவர்களுக்குத் தெரியவில்லை. எனவே, கட்டடங்கள் அவ்வளவு நேர்த்தியாகக் காணப்படவில்லை. வீடுகள் பெரும்பாலும் கூரை வேயப்பட்டவையாகவே காணப்பட்டன. அடிக்கடி ஏற்பட்ட பூகம்பத்தினுல் பாதிக்கப்படாதவகையில் அவை அமைந்திருந்தன.

பானை வனையும் கலையில் அவர்கள் சிறந்து விளங்கினர். மண்ணுல் செய்யப்பட்ட தட்டுகள் கோப்பைகள் முதலியன அழகான ஓவியங்களுடன் கண் கவர் வனப்புடன் செய்யப்பட்டன. உலோகங்களில் இருந்தும் செடி கொடிகளில் இருந்தும் வடிக்கப்பட்ட பல்வேறு வகையான சாயங்களின் பயனை அவர்கள் நன்கு அறிந்திருந்தனர். சாயம் தோய்க்கப்பட்ட நூல்களைக் கொண்டு ஆடைகளில் பூவேலைகள் செய்யப்பட்டன. மிருகங்களின் ரோமங்களைக் கொண்டு அழகிய ஆடைகளை நெய்து அவற்றில் பல நிறம் கொண்ட பூ வேலைப்பாடுகளைச் செய்தனர். அலங்காரத்திற்காகப் பறவைகளின் பல்வகை வண்ணமுள்ள இறகுகளைப் பயன்படுத்துவதில் அவர்கள் ஈடும் எடுப்பும் அற்றுத் திகழ்ந்தனர். கிளிபோன்ற ஒரு பறவையின் இறகுகளை ஆடைகளிலும், திரைச்சீலைகளிலும் தைத்து அவற்றிற்கு அழகூட்டினர்.

*சமயம்*

இன்கா மக்களின் வாழ்வில் சமயம் பெரிதும் ஊடுருவி நின்றது. நாட்டின் சட்டங்களையெல்லாம் கடவுளே பிறப்பித்ததாகவும், மன்னர்கள் கடவுளின் பிரதிநிதிகள் எனவும் அவர்கள் நம்பினர். உலக முழுதையும் அழிக்கின்ற ஓர் ஊழிக்காலத்திலும் சொர்க்கத்தி

லும், நரகத்திலும் அவர்களுக்கு நம்பிக்கை இருந்தது. நல்ல ஆன்மாக்கள் சொர்க்கத்திற்கும், பாபாத்மாக்கள் நரகத்திற்கும் செல்லுமென நம்பப்பட்டது. ஏதாவது ஒரு காலத்தில் இறந்தோர் அனைவரும் உயிர்த்தெழுவர் என்ற நம்பிக்கையின் காரணமாக சவங்கள் பனிமலைகளின் இடையே வைக்கப்பட்டு அழியாமல் காக்கப்பட்டன. இறந்த ஆன்மாக்களுக்கு சுகமளிக்க அவர்களின் மனைவியரும் வேலையாட்களும் கொல்லப்பட்டு அவர்களோடு புதைக்கப்பட்டனர்.

இன்கா மக்களின் முழுமுதற்கடவுள் பச்சகாமக் என்றும் வீரச்சோச்சா என்றும் அழைக்கப்பட்டது. உலகத்தை உண்டாக்கியவர் அவரே. ஆனால், அவருக்குக் கோயில் எதுவும் கட்டப்படவில்லை. மக்கள் அனைவரும் விரும்பி வழிபட்ட கடவுள் கதிரவனே ஆகும். அக்கடவுளுக்கு நாடெங்கும் கோயில்கள் எடுக்கப்பட்டன. சந்திரன், வெள்ளி போன்ற கோள்களும் காற்று, பூமி, இடி, மின்னல் போன்ற இயற்கைச் சக்திகளும் மக்களால் வணங்கப்பட்டன. டிடிக்காக்கா என்னும் தீவில் உள்ள கதிரவக் கடவுளின் கோயில் மிகவும் புகழ் வாய்ந்தது. அதைச் சுற்றி உள்ள நிலங்களில் விளையும் தானியங்கள் மிகவும் புனிதமானவையாகக் கருதப்பட்டன. அவற்றில் விளையும் தானியக்கதிர் ஒன்றைப் பெற எதை வேண்டுமானாலும் கொடுக்க மக்கள் தயாராக இருந்தனர். கஸ்கோ நகரில் உள்ள சூரியன் கோயில் மிகவும் கம்பீரமானது. முற்றிலும் கற்களால் கட்டப்பட்டது. அங்குள்ள சிலையில் ஏராளமான விலையுயர்ந்த கற்கள் பதிக்கப்பட்டிருந்தன. சூரியன் உதிக்கும்போது அதன் கதிர்கள் நேரே சிலையின் மீது விழுமாறு அமைக்கப்பட்டிருந்தது. கோவில்களில் சுவர்களிலும் தூலங்களிலும் எங்குப் பார்த்தாலும் தங்கம் பதிக்கப்பெற்று இருந்ததால் இதைப் பொன்மயமான கோவில் என மக்கள் அழைப்பர். இக்கோயிலுக்கருகே, சந்திரனுக்கு என்று ஒரு கோயில் கட்டப்பட்டுள்ளது. சந்திரனைத் தாயாகப் பாவித்து அனைவரும் வணங்கினர். அதன் உருவம் வெள்ளியால் செய்யப்பட்டது. இடி, மின்னல், வானவில் ஆகிய தெய்வங்களுக்கும் தனித்தனி கோயில்கள் இருந்தன.

கோயில்களைப் பராமரிக்கவும் விழாக்கள் நடத்தவும் ஏறக்குறைய நாலாயிரம் மதகுருமார்கள் தலைநகரில் மட்டும் இருந்தனர். கஸ்கோ நகரில் இருந்த மதகுருமார்கள் அரச பரம்பரையைச் சேர்ந்தவர்கள். மாநிலத் தலைநகரில் இருந்த குருமார்கள், சாதாரண மக்களைச் சேர்ந்தவர்கள். குருமார்கள் தெய்வீகமானவர்களாக மதிக்கப்பட்டனரே ஒழிய அவர்களுக்குத் தனிப்பட்ட

சலுகைகள் எதுவும் தரப்படவில்லை. சூரியன் தெற்கு திசையின் எல்லையை அடைகின்ற நாளில் மிக ஆடம்பரமான விழா கோயில் களில் கொண்டாடப்பட்டது. இறைவனுக்கு மது மாமிசம் போன்ற பல பொருள்கள் படைக்கப்பட்டன. அங்ஙனம் படைக்கப்பட்ட மதுவை மன்னர் சிறிது பருகிவிட்டு மீதியை மக்களுக்கு வழங்கு வார். மற்றும் மிருகங்களும் சில சமயங்களில் சிறு பையன்களும் கன்னியர்களும் பலியிடப்பட்டனர். பலியிடப்பட்ட மிருகங்களின் உள்ளுறுப்புகளைப் பார்த்து நாட்டின் எதிர்காலம் கணிக்கப்பட்டது. கோயிலில் விழாக்காலத்தில் மூட்டப்பட்ட புனிதத் தீ அணையாமல் ஆண்டுமுழுவதும் காக்கப்பட்டது. அங்ஙனம் காக்கும் பொறுப்பு புனிதக் கன்னியர் சிலரிடம் ஒப்படைக்கப்பட்டது. அக்கன்னியர் கள் கோயில்களுக்கென தத்தம் செய்யப்பட்டவர்கள். கண்ணிய மான குடும்பங்களில் இருந்து பொறுக்கப்பட்ட அவர்கள் வெளி உலகத்தோடு யாதொரு தொடர்புமின்றி தனியே கன்னிமாடங் களில் வாழ்ந்தனர். கடவுளுக்கே அர்ப்பணிக்கப்பட்ட அக்கன்னி யர்களில் அழகு மிக்கவர்கள் சிலரை அவ்வப்போது மன்னர் தமது அந்தப்புரத்திற்கு அழைத்துக்கொள்வார். அங்கே அவர்களிற் சிலர் மன்னரின் மனைவியராகும் பேற்றைப் பெற்றனர். தமக்குப் பிடிக்காத மகளிரை அரசர் அந்தப்புரத்தை விட்டு அகற்றி விடு வார். எனினும் சமுதாயத்தில் அம்மங்கையர் சிறந்த மரியாதை யைப் பெற்றனர்.

இங்ஙனம் இன்கா மக்கள், சமய வாழ்க்கை, பொருளாதார வளம், அரசியல் உணர்வு, கலையுணர்வு, கல்வியில் தேர்ச்சி போன்ற பல்வேறு இன்றியமையாத நாகரிக சாதனங்களையும் பெற்றிருந்தனர். எனினும், அவர்கள் தங்களைவிட நாகரிகத்தில் குறைந்த ஸ்பானியர்களிடம் தோற்றுப்போயினர். ஸ்பானியர் களின் துப்பாக்கிப் படையும், சிறந்த போர் முறைகளுமே அவர் களது வெற்றிக்கு முக்கிய காரணங்கள் என்பது பல வரலாற்றறிஞர் களின் துணிபாகும்.

# 11. பண்டைய கிரேக்க நாகரிகம்

### கிரேக்க நாகரிகத்தின் வளர்ச்சி வரலாறு

பண்டைய நாகரிகங்கள் பலவற்றிலும், இன்றைய ஐரோப்பிய நாகரிகத்தைப் பெரிதும் ஒத்ததாய், ஒரு வகையில் அதற்கு ஓர் முன்னோடியாய் விளங்கியது கிரேக்க நாகரிகமேயாகும். ஏனைய பண்டைய நாகரிகங்கள் பலவும் சமயத்தின் ஆதிக்கத்துக்குட் பட்டுக் கிடந்தன. ஆனால், கிரேக்க நாகரிகம் சமயச் சார்பு அற்ற தாயும் பகுத்தறிவின்பாற் பட்டதாயும் விளங்கியது. பண்டைய நாகரிகங்கள் தெய்வங்களைப் பெரிதாய்ப் போற்றின. ஆனால், கிரேக்க நாகரிகம் மனிதனைப் போற்றியது. மனிதனின் ஆற்றலுக் கும், தனி மனித சுதந்திரத்துக்கும் (Liberty) பெரும் மதிப்பு கொடுத்தது. ஏனைய பண்டைய நாகரிகங்களில் மூடநம்பிக்கை கள் மலிந்து கிடந்தன. ஆனால் கிரேக்க நாகரிகத்தில், எதையும் நன்கு விசாரித்த பின்னரே நம்புகின்ற அறிவியல் மனப்பான்மை ஓங்கியிருந்தது. இத்தகைய சிறப்பியல்புகளை எல்லாம் கிரேக்கர் கள் தாமே உண்டாக்கிக் கொண்டனர் என்று சொல்வதற்கில்லை. அவர்களது தத்துவம் அறிவியல் முதலியன எகிப்தியர்களிடமிருந் தும், எழுத்துக் கலை பினீஷியர்களிடமிருந்தும், அழகுணர்ச்சி ஈஜிய மக்களிடமிருந்தும் பெறப்பட்டனவேயாம். எனினும், கிரேக்கர்கள் அவற்றில், தமக்கே உரிய ஓர் தனிப் பண்பையும் புகுத்தியுள்ளனர் என்பதை எவரும் மறுக்க இயலாது.

### புவியியல்

கிரேக்க நாகரிகம் அதன் இயற்கையமைப்பால் பெரிதும் உரு வாக்கப்பட்ட தென்பதில் ஐயமில்லை. கிரேக்கர்கள் தங்களது நாட்டை 'ஹெல்லாஸ்' (Hallas) எனச் செல்லமாக அழைத்தனர். மத்தியதரைக் கடலுக்குள் நீட்டிக்கொண்டுள்ள மூன்று தீபகற்பங் களுள் ஹெல்லாசும் ஒன்று. அது 25,000 சதுர மைல்கள் பரப் பளவுடையது. அதன் நடுவில் பிண்டஸ் மலை (Pindus) முது கெலும்பு போல் ஓடுகிறது. அதன் தெற்குப் பகுதி ஓர் பீடபூமி. அங்கு டைஜடஸ் (Taygetus) என்ற மலைத்தொடர் ஓடுகின்றது இவ்விரு மலைத்தொடர்களிலிருந்தும் பக்க வாட்டில் பல கிளை மலைத் தொடர்கள் கிளம்பி நாட்டைச் சிறு சிறு துண்டுச் சமவெளிகளாகப்

பிரிக்கின்றன. கிரீஸில் ஆதியில் சிறு சிறு நகர அரசுகள் (City) தோன்றவும், அவை ஒன்றுக் கொன்று தொடர்பின்றித் தனிப் பண்புகளை வளர்த்துக் கொள்ளவும் இப்புவியியலமைப்பே பெரிதும் காரணமாகும். தேசிய மனப்பான்மைக்குப் பதிலாகக் குறுகிய மாநிலப்பற்று (Parochialism) அவர்களிடை வளர்ந்ததற்கும் இதுவே காரணம். அன்னூரின் சுதந்திர மனப்பான்மைக்கும் இச் சூழ்நிலையே ஓரளவு காரணமெனில் மிகையாகாது. மற்றும் கிரீஸில் நீர்வளமும் நிலவளமும் மிகக் குறைவு. பெருமளவில் விவசாயம் செய்ய இயலாது. திராட்சை, ஒலிவம் இவற்றைத்தான் அதிகம் பயிரிட முடியும். எனவேதான் கிரேக்கர்கள் திரைகடலோடித் திரவியம் தேடுவதில் வல்லவர்களாக மாறினர். கிரீஸின் கடற்கரை உடைந்து பல துறைமுகங்களைக் கொண்டதாய் விளங்குகிறது. கொரிந்திய வளைகுடா அதனிடையே ஊடுருவிச் செல்கிறது. கிரீஸில் எந்த இடமும் கடலிலிருந்து 64 கிலோ மீட்டருக்கு மேற்பட்ட தொலைவிலில்லை என்பர். எனவே, மக்கள் கடற் பயமற்றவர்களாயும், கடற் பயணங்களில் விருப்பமுள்ளவர்களாயுமிருந்தனர். கீழைப்பகுதியில் அருகருகே அமைந்திருந்த ஈஜிய தீவுக் கூட்டங்கள் கடல் வாணிபத்துக்குப் பெரிதும் உதவியாய் இருந்தன. கிரேக்கர்கள் கீழை நாடுகளை நாடியதற்கும் அவற்றின் கலாசாரங்களைத் தமதாக்கிக் கொண்டதற்கும், கடற் செலவு கிழக்குப் பகுதியில் மிகவும் எளிதாயிருந்தது ஒரு காரணமாகும். கிரேக்கர்கள் கலை ஆர்வமிக்கவர்கள். அங்கு நிறையக் கிடைத்த களிமண்ணும், வெண்பளிங்குக் கற்களும் அவர்களது சிற்பக் கலை வளர்ச்சிக்கு உறுதுணையாயிருந்தன. கிரீஸின் காலநிலை (Climate) மனோரம்மியமானது. அதன் மிதமான தட்பவெப்ப நிலையும், உடலுக்கு உற்சாகமூட்டும் மெல்லிய பூங்காற்றும் திறந்த வெளி வாழ்க்கைக்கு ஊக்கமளித்தன. ஒலிம்பிக் விளையாட்டுகள் போன்ற பொழுதுபோக்குகள் வளரவும், மக்கள் திரளாக ஓரிடத்தில் கூடி ஆட்சித் துறையில் ஈடுபட்டு, மக்களாட்சியை வளர்க்கவும் இத்தகைய காலநிலை பெரிதும் துணை செய்ததெனலாம்.

**மக்கள்**

கிரேக்கர்கள் எந்த இனத்தைச் சேர்ந்தவர்கள் எனத் திட்டவட்டமாய்த் தெரியவில்லை. ஆரியர்களில் அவர்கள் ஓர் பிரிவினர் என்றும், காகசஸ் மலைப் பகுதியிலிருந்தும், டான்யூப் நதிப் பள்ளத்தாக்கிலிருந்தும் வந்து ஏறக்குறைய கி.மு. 2000 ஆண்டளவில் கிரீஸில் புகுந்தனர் எனவும பொதுவாக நம்பப்படுகிறது. கிரீஸில் ஏற்கெனவே வாழ்ந்த பெலாஸியர்களை (Pelasgians) அவர்கள் எளிதில் வென்றனர். வெல்லப்பட்ட மக்களோடு நாளடைவில், அவர்கள் கலந்துவிட்டனர். எனவே, நார்டிக் ஆல்பைன்,

பெலாஸியன் ஆகிய மூன்றுவித இனங்களின் கலப்பினமே கிரேக்க இனமாகும். அவர்கள் நாற்பெருங் குலங்களாகப் பிரிந்து வாழ்ந்தனர். அவர்களில் மிகவும் சிறப்பு வாய்ந்தவர்கள் அக்கேயர்கள் எனப்படுவர். அடுத்தாற் போல் எண்ணப்படக்கூடியவர்கள் அயோனியர்கள் என்பார். டோரியர்கள் மூன்ருவது குலத்தவர். இயோலியர்கள் (Aeolians) நான்காவது குலத்தவர். பல இனத்தவர்களின் கலப்பு அதில் அதிகமாயிருந்தது.

பிற்காலத்தே அயோனியர்கள் (Ionians) என அழைக்கப்பட்டவர்களே முதன் முதலில் கிரீஸில் குடிபுகுந்தவர்கள். கிரீஸ் தீபகற்பத்தின் வடபகுதியிலும், கடற்கரையோரங்களிலும் அவர்கள் முதலில் குடியேறினர். ஏராளமான ஆடு மாடுகளை அவர்கள் தம்முடன் கொண்டு வந்தனர். கடல் வாணிபத்திலும் அவர்கள் வல்லவர்களாயிருந்தனர். அக்கேயர்கள் (Achaeans) என்ற வகுப்பினர் தீபகற்பத்தின் தென் பகுதியில் புகுந்து, மைசீனு, டிராய் போன்ற நகரங்களை வென்றனர். இறுதியில் டோரியர்கள் (Dorians) என்ற கிரேக்க வகுப்பினர் கிரீஸின் நடுப்பகுதியில் வந்து குடியேறினர். போர் செய்வதில் வல்ல அவர்கள் விரைவிலேயே பெலப்பொனீஷியாவையும், ஈஜியத் தீவுகளையும் கைப்பற்றினர். கி.மு. 1000 ஆண்டளவில் அவர்கள் நாசஸ் (Knossus) என்ற நகரைக் கைப்பற்றினர். கிரீட் தீவில் கொடி கட்டிப் பறந்த மினேவ நாகரிகம் (Minoan Civilization) அவர்களுக்குப் பணிந்தது. கிரேக்கர்கள் அந்நாகரிகத்தை அழித்துவிடவில்லை. அதன் சிறப்பியல்புகளை அப்படியே தம் நாகரிகத்தோடு உட்கிரகித்துக் கொண்டு புதிய கலப்பு நாகரிகமொன்றைத் தோற்றுவித்தனர். அதுவே ஹெல்லனீய நாகரிகமெனப்படுகிறது.

கிரீஸின் மக்கள் எழுத்தறிவற்றவர்கள் எனினும் அறிவு செறிந்தவர்கள். எனவே பல்வேறு நாட்டுப் பாடல்களையும், சிறு காப்பியங்களையும் அவர்கள் யாத்து வாய்மொழி மூலமாகவே மக்களிடையே பரப்பி வந்தனர். புலவர்கள் நாடெங்கும் சுற்றி அப்பாடல்களைப் பரப்பினர். கி.மு. 9ஆம் நூற்ருண்டளவில் ஹோமர் என்ற புலவர் அந்நாடோடிப் பாடல்களையெல்லாம் ஒன்று திரட்டி, ஈலியட் (Iliad), ஒடிசி (Odessey) எனும் இருபெருங் காப்பியங்களைப் புனைந்தார். இராமாயணம், மகா பாரதம் போன்று அவை கிரேக்கர்களின் இதிகாசங்களாகத் திகழ்கின்றன. அக்கிலிஸ் (Achilles), யுலிசிஸ் (Ulyssis) ஆகிய மாவீரர்களின் துணிகரச் செயல்களை அவை விவரிக்கின்றன. கிரேக்க மக்களின் சமுதாயப் பொருளாதார நிலைமைகளை நாம் அவற்றிலிருந்து நன்கு அறியலாம். கிரேக்க வரலாற்றின் ஆரம்ப கட்டம்

ஹோமரது காலம் (Homaric age) எனப்படும். அது கி.மு. 1200 முதல் 800 வரை நீடித்தது.

### *ஹோமர் கால நாகரிகம்—அரசியல் நிலை*

ஹோமர்கால மக்களிடையே அரசியல் அறிவு நன்கு வளர்ச்சி யடையவில்லை. பெயருக்கென்று ஒரு மன்னர் இருந்தாரேயன்றி அவரது அதிகாரங்கள் மிகக் குறைவாகவே இருந்தன. மக்களைப் பிறநாட்டு எதிரிகளிடமிருந்து காப்பதும், சமயச் சடங்குகளை முன் னின்று நடத்துவது மட்டுமே அவரது தலையாய கடமைகளாய் விளங்கின. மற்றபடி ஒவ்வொரு கிராமமும் தன்னிச்சையாகவே ஆட்சி நடத்தி வந்தன. அரசன் அவைகளிடமிருந்து கப்பம் கூடப் பெறவில்லை. தனக்குச் சொந்தமான நிலத்தில் வரும் வரு மானத்தைக் கொண்டே அவன் வாழ்ந்தான். சட்டங்களுக்குப் பதிலாக வழக்காறுகளே நாட்டில் பலம் பெற்றிருந்தன. வழக்கு கள் அங்கங்கே உள்ள நடுவர்களின் உதவி கொண்டு தீர்க்கப்பட் டன. மன்னனிடம் இறுதியாக முறையீடு செய்துகொள்ளும் வழக்கம் இருந்தது. அப்போது கூட மன்னன் ஓர் மத்யஸ்தர் போல் நடந்துகொண்டாரேயன்றி நீதிபதியாகவல்ல. மன்னன் உதவியின்றியே சமுதாயம் நடைபெறும் என்ற நிலையே காணப்பட் டது. மன்னனுக்கு அறிவு கூறப் பிரபுக்கள் சபை ஒன்றும், அவனுக்குப் போர் செய்யவும் உடன்படிக்கை ஏற்படுத்தவும் உதவி செய்ய ஓர் படைவீரர் சபையும் சில இடங்களில் இருந்தன. ஆனால், அவைகளுக்கு திட்டவட்டமான அதிகாரங்கள் எவையும் இருந்த தாகத் தெரியவில்லை.

### *சமூகப் பொருளாதார நிலைகள்*

ஹோமர் கால சமுதாயத்தில் பிரபுக்கள் என்ற பெருங்குடி மக்களே (aristocrats) மிகவும் செல்வாக்குடன் விளங்கினர். அன்னாரின் நிலங்களில் ஏராளமான பணியாட்கள் வேலை செய் தனர். அவர்கள் பிரபுக்களை அண்டிப் பிழைத்தனரேயன்றி சுதந்திரமாக வாழவில்லை. ஆனால், அவர்கள் அடிமைகளாக நடத்தப்படவில்லை. பிரபுவின் குடும்பத்தில் ஓர் உறுப்பினராகவே அன்னார் கருதப்பட்டனர். போர்க் காலங்களில் அவர்கள் தமது ஆண்டையரின் போர் வீரர்களாகப் பணிபுரிந்தனர். சமுதாயத் தில் எந்நிலையிலிருப்பவனும் முயற்சியினால் மேல் நிலைக்கு வரலாம் என்ற கொள்கை கடைப்பிடிக்கப்பட்டது. போர் வீரர்கள் பலர், மெச்சத்தக்க வீரத்தைக் காட்டிப் பிரபுக்களாக மாறினர்.

விவசாயம், ஆடு மாடு மேய்த்தல் இவையே மக்களின் முக்கிய தொழில்களாகும். தட்டார், குயவர், கருமான் போன்ற

திறன்மிகு தொழிலாளிகள் பலரும் இருந்தனர். ஒவ்வொரு குடும்பமும் தனக்கு வேண்டிய துணி, உணவு, தட்டுமுட்டுச் சாமான்கள், கருவிகள் ஆகியவற்றைத் தானே செய்து கொண்டது. வாணிபம் என்பதை அவர்கள் அறியார். பண்டமாற்று முறையையே அவர்கள் கடைப்பிடித்தனர்.

*சமய வாழ்க்கை*

ஆதிகாலத்திலேயே கிரேக்கர்கள் சமயத்துக்கும் கடவுளர்களுக்கும் கட்டுப்படாமல் வாழ்ந்தனர். சமயம் அவர்களது பொழுது போக்காக இருந்ததேயன்றி வேறன்று. அவர்களது சமயத்தில் குறிப்பிட்ட கோட்பாடுகளோ, சடங்குகளோ இல்லை. ஒவ்வொருவரும் தமது பிரியப்படி சமய வாழ்க்கையிலீடுபடலாம். கிரேக்கர்களின் கடவுளர்களிடம் தெய்வீகம் கற்பிக்கப்படவில்லை. சாதாரண மக்களின் ஆசாபாசங்களுடனேயே அவர்கள் விவரிக்கப்பட்டனர். அமிழ்தை அருந்தி சாகாவரம் பெற்றது ஒன்றைத் தவிர மற்றெல்லாவற்றிலும் அவர்கள் சாதாரண மக்கள் போலவே காட்சி அளிக்கின்றனர்.

கிரேக்கர்களால் வணங்கப்பட்ட தெய்வங்கள் பல. ஜியூஸ் (Zeus) எனும் வாயுபகவான், பொசைடன் (Poseidon) எனும் கடல் தெய்வம், அப்ரடைட் (Aphrodite) எனும் காமக் கடவுள் முதலியவற்றை அன்னுர் வணங்கினர். இறந்தவர்கள், ஹேடீஸ் (Hades) என்பாரின் ஆட்சியின் கீழுள்ள உலகத்துக்குச் செல்வர் என நம்பப்பட்டது. ஆனல், ஹேடீஸ் மக்களைக் கெட்ட வழிகளில் சாத்தானைப்போல் ஊக்குவிப்பதாகக் கருதப்படவில்லை. சுவர்க்கம், நரகம் இவற்றுள் கிரேக்கர்களுக்கு நம்பிக்கை இல்லை. மரணத்துக்குப் பின் ஆவிகள் பூமிக்கருகிலுள்ள ஹேடீஸில் தங்கி ஏறக்குறைய இந்நிலவுலகில் வாழ்ந்தது போன்றே அங்கும் மக்கள் வாழ்வர் என நம்பினர். மரித்தோர் மீண்டும் உயிர்த்தெழுவர் என்ற நம்பிக்கை இல்லாததால் அவர்கள் பிணத்தைப் பாதுகாக்க முயற்சிக்கவில்லை. அநேகமாக அவர்கள் இறந்தவர்களை எரித்து விட்டனர். கடவுளர்களுக்கு ஏராளமான பண்டங்கள் படைக்கப்பட்டன. ஆனல், அவை எல்லாம் ஏதோ ஓர் இலாபத்தைக் கருதியே செய்யப்பட்டதேயன்றி பக்தியாலும், ஞானத்தாலுமல்ல. ஒவ்வொரு வீட்டுத் தலைவனும் தனது மக்களும் மனைவியும் நலமாயிருக்க வேண்டுமென்பதற்காகவே கடவுளுக்கு ஆராதனைகள் செய்தான். தனது குடிமக்கள் நலமாயிருக்க வேண்டி மன்னன் கடவுளர்களைப் பூசித்தான். கடவுளால் ஆட்கொள்ளப்பட்டவர்களாகக் கருதப்பட்ட பெண்களிடமும், ஆண்களிடமும், தமது எதிர்காலம்பற்றி அன்னுர் குறி கேட்டனர். எனினும், நன்கு

அமையப்பெற்ற ஓர் குருமார் கூட்டம் கிரீஸில் என்றுமே ஏற்படவில்லை. முறையான கோயிலோ, கோயில் தொழுகையோ இல்லாத காரணத்தாலேயே பரம்பரைப் பூசாரிகளும் அவர்களது ஆதிக்கமும் கிரீஸில் ஏற்படவில்லை என அறிகிறோம்.

*நகர அரசுகள்*

பண்டைய கிரீஸின் தனிச்சிறப்பு, அங்குத் தோன்றிய சிறு சிறு நகர அரசுகளாகும்(City States). ஆதியில் கிரேக்கர்கள் தனித்தனி சிறு கிராமங்களில் வாழ்ந்தனர். ஒவ்வொரு கிராமத்திலும், ஒரு கிரேக்க குலம் (Class) மேலோங்கி நின்றது. நாளடைவில் பல கிராமங்கள் ஒன்று சேர்ந்து பொதுவான ஓர் அரசாங்கத்தைத் தமக்குள் ஏற்படுத்திக்கொண்டன. அண்டை நாடுகளின் படையெடுப்பைச் சமாளிக்க அவைகள் ஒரு குன்றின்மீது கோட்டை (Citadel) ஒன்றைக் கட்டிக்கொண்டன. கோட்டையும் அதைச் சுற்றிலும் அமையப்பெற்ற நகரமும், நாட்டின் அரசாங்கத் தலைமை இருப்பிடமாக மாறியது. தலைநகரமும் அதன் ஆளுகைக்குட்பட்ட கிராமங்களும் சேர்ந்ததே ஓர் நகர அரசு எனப்படும். பரப்பளவிலும், மக்கள் தொகையிலும், இத்தகைய நகர அரசுகள் ஒன்றுக்கொன்று பெரிதும் வேறுபட்டன. அட்டிகா நிலப்பகுதியில் தோன்றிய ஏதென்ஸ் (Athens) நகர அரசு 1060 சதுர மைல் பரப்பளவும், பெலொப்பனீஷிய தீபகற்பத்தில் தோன்றிய ஸ்பார்ட்டா (Sparta) எனும் நகர அரசு 3000 சதுர மைல் பரப்பளவும் கொண்டவை. நகர அரசுகளில் மிகப் பெரியனவும், புகழ் பெற்றனவும் அவ்விரு நகரங்களேயாம். ஏனைய நகர அரசுகள் யாவும் அளவில் இன்னும் சிறியவை. தீப்ஸ் (Thebes), மெகாரா (Megara), கொரிந்த் (Corinth), மிலிடஸ் (Miletus) முதலியன கிரீஸின் முக்கிய நகர அரசுகளாகும். இத்தகைய நகர அரசுகள் ஏறக்குறைய கி.மு. 800ஆம் ஆண்டளவில் கிரீஸில் தோன்றின.

*நகர அரசுகளின் படித்தர வளர்ச்சி* (Evolution of City States)

ஆதியில் தனித்தனியே வாழ்ந்துவந்த கிராமச் சமுதாயங்களே (Village Communities) நாளடைவில் நகர அரசுகளாக மலர்ந்தன. வேறுபட்ட குலங்களைச் சேர்ந்த பல கிராமத்தினர், ஒருவர்பால் ஒருவர் ஈர்க்கப்பட்டு, ஒரு சில பொதுக் காரியங்களுக்காக ஒன்று சேர்ந்து ஒரு நகர அரசை அமைக்கின்ற முறையைக் கிரேக்கர்கள் சினேகிஸம் (Synoecism) என அழைப்பர். சினேகிசம் என்ற கிரேக்க சொல்லுக்கு நேரிடையான பொருள் ஒன்றியம் (Union) என்பதாகும். இத்தகைய ஒன்றியங்

களில் ஒரே மாதிரியான அரசாங்கம், சட்டம், வழிபாட்டு முறைகள் காணப்பட்டன. சினேகிஸ முறையில், பன்னிரண்டு கிராமங்கள் ஒருங்கே இணைந்த அரசியல் ஒன்றியமே ஆதென்ஸ் நகர அரசாகும். ஐவேறு கிராமங்களின் ஒன்றியமே ஸ்பார்ட்டா நகர அரசாகும். இத்தகைய ஒன்றியங்கள் பல்வேறு காரணங்களால் ஏற்பட்டன. முதலில் குறிப்பிட்ட நிலப்பகுதியிலிருந்த சில கிராமங்கள், பொது வழிபாடு, பொது வாணிபம் இவை காரணமாக ஒன்று சேர்ந்து செயல்படும். பின்னர் பொதுப் பாதுகாப்பு நிமித்தம் அவை அரசியல் துறையில் ஒன்றுபட்டுவிடும். நாற்புறமும் குன்றுகளால் சூழப்பட்ட சிறுசிறு பள்ளத்தாக்குகளில்தான் இந்நகர அரசுகள் தோன்றின. இத்தகைய பள்ளத்தாக்குகள் கிரீஸில் இயற்கையாகவே ஏராளமாக ஏற்பட்டிருந்தது நகர அரசுகள் தோன்றுவதற்குத் தக்கதொரு சூழ்நிலையாயமைந்தது.

தற்காலத் தேசிய அரசுகளைப் (Nation-States) போலன்றி நகர அரசுகள் அளவில் சிறியனவாயிருந்தமையால், சட்டங்கள் செய்வதிலும், பட்டங்கள் ஆள்வதிலும், குடிமக்கள் அனைவரும் பங்கெடுத்துக்கொள்ள முடிந்தது. பிரதிநிதித்வ அரசாங்கத்துக்குப் (Representative Government) பதிலாக நேர்முக அரசாங்கம் (Direct Government) அங்கு நிலவியது. ஆனால், இக்காலத்திலிருப்பது போன்று வயதுவந்தோர் அனைவரும் அரசியலுரிமையை அங்குப் பெற்றிருக்கவில்லை. அரசியலில் பங்கெடுத்துக் கொள்ளாத அடிமைகளின் எண்ணிக்கை, குடிமக்களின் எண்ணிக்கையைவிட அதிகமாயிருந்தது. எனினும் குடிமக்களிடம், இக்காலத்தில் காணப்படாத அளவுக்கு நாட்டுப்பற்று (Patriotism) காணப்பட்டது. அரசே அவர்களது பேச்சாகவும், மூச்சாகவும், ஏன் உயிராகவும் கூடத் திகழ்ந்தது. வெறும் உடல் வளர்ச்சிக்காக மட்டுமின்றி, உள்ளம் ஆன்மா ஆகிய மனிதனின் முழு வளர்ச்சிக்கும் உற்றதொரு சாதனமாக அரசு மதிக்கப்பட்டது. ஆனால், இத்தகைய சிறப்புவாய்ந்த நகர அரசுகள் தமக்குள் ஒற்றுமையின்றிப் போரிட்டுத் தம்மைத் தாமே அழித்துக்கொண்டதுதான் அவற்றிடையே நாம் காணக்கூடிய ஒரு பெருங் குறையாகும்.

நகர அரசுகளில் ஆரம்பத்தில் பெரும்பாலும் கோனாட்சியே (Monarchy) நிலவியது. அறிவிலும் ஆற்றலிலும் தலைசிறந்த ஒரு கோமானுக்கு யாவரும் அடி பணிந்தனர். அவனுக்கு ஆலோசனை கூறப் பெருமக்களடங்கிய மூத்தோர் சபை ஒன்றும் (Council of Elders), குடிமக்கள் அனைவரும் கொண்ட பொதுப் பேரவை (General Assembly) ஒன்றும் இருந்தன. நாளடைவில் மூத்தோர் சபையின் செல்வாக்கு வளர்ந்தது. நாட்டின் நிலங்களில் பெரும்

பகுதி அச்சபையின் உறுப்பினர்களிடமே முடங்கிக் கிடந்தது. ஏனைய குடிமக்களனைவரும் அவர்களின் கைப்பாவைகளாக நாளடைவில் மாறினர். அரசனின் தயவு அன்னார்க்குத் தேவை யற்றதாய்ப் போயிற்று. அரசர்களும் நாளடைவில் ஆற்றலிலும், ஒழுக்கத்திலும் பெரிதும் குன்றினர். எனவே, அவர்கள் அரசனைத் துரத்திவிட்டு, ஆட்சியைக் கைப்பற்றினர். உயர்குடிப் பெரு மக்களாட்சி (Aristocracy)யாக அது திகழ்ந்தது. செல்வம், உயர் குடிப் பிறப்பு இவற்றை மையமாகக் கொண்டு, அவர்களது செல்வாக்கு வளர்ந்தது. வள்ளன்மையும், சுயநலமற்ற மனப்பான் மையும் அவர்களின் தனிப் பண்புகளாய் விளங்கின. இவர்களின் ஆட்சிக் காலத்தே மூத்தோர் சபையின் வலிமை பெருகியது. குடிமக்கள் சபையின் அதிகாரம் குறைந்தது. ஆனால், பல நல்ல காரியங்களைப் பிரபுக்கள் செய்தனர். நிர்வாகக் காரியங்களைச் செவ்வனே செய்ய பல வாரியங்கள் (Committees) அமைக்கப்பட்டன. எனவே, நிர்வாகத் திறமை வளர்ந்தது. நிர்வாக அதிகாரிகளின் அதிகாரங்களும் சிறப்புரிமைகளும் வரை யறுக்கப்பட்டன. ஆட்சித்துறை அமைப்பு (Administrative System) முழுமையான வளர்ச்சியடைந்தது. எனவே, மீண்டும் வல்லரசு ஏற்பட வழியில்லாது போயிற்று. ஒழுங்கும் கட்டுப்பாடும் வளர்க்கப்பட்டன. கல்வி, கலை முதலியன பேணி வளர்க்கப்பட் டன. வெறுமனே வாழ்வது போதாதென்றும், அது நல்வாழ்வாக அமைய வேண்டுமென்றும் அரசு பாடுபட்டது. ஆனால், விரைவி லேயே இப் பெருங்குடிமக்கள் சுயநலம் படைத்த சிறுமதியாளர் களாக மாறினர். மற்றும், பிறநாட்டு வாணிபத்தால் பெரும்பணம் பெற்ற செல்வந்தர்கள் தாய்நாடு போந்து நிலப்பிரபுக்களை எதிர்த் தனர். சாதாரண குடிமக்களை அவர்களுக்கு விரோதமாகத் தூண்டிவிட்டுக் கலகம் செய்தனர். நாளடைவில் அதிகாரம் குறுகிய உளம் படைத்த பணக்காரக் கும்பலிடம் மாறியது. சுய நலச் செல்வர்களின் சிறுகுழு ஆட்சி (Oligarchy) நாட்டில் ஏற் பட்டது. அவர்கள் நிலப்பிரபுக்களுக்கு எதிராகவும், தமக்குச் சாதகமாகவும் பல சட்டங்களைத் தீட்டினர். அடக்கு முறை எங்கும் தாண்டவமாடியது. அவ்வடக்கு முறையை மக்கள் எதிர்த்தனர். பலர் வெளிநாடுகளுக்குத் தப்பிச் சென்று பெரும் பொருளீட்டிக் கொண்டு மீண்டும் தாய்நாடு போந்து உரிமைக் குரல் எழுப்பினர். எங்குப் பார்த்தாலும் குழப்பங்கள் ஏற்பட்டன. இதைப் பயன்படுத்திக் கொண்டு ஒரு சில தனிப்பட்ட தலைவர்கள் ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டார்கள். அது வல்லாட்சி (Tyrenny) எனப்பட்டது. வல்லாட்சியாளர்கள் நாட்டில் அமை தியை ஏற்படுத்திப் பல நல்ல காரியங்களைச் செய்தனர். நாளடை வில் அவர்கள் கொடுங்கோலர்களாக மாறியபோது மக்கள் கலகம்

செய்து மக்களாட்சியைத் (Democracy) தோற்றுவித்தனர். அதில் பிரபுக்கள் வலிமையற்றவர்களாயும், பொதுமக்கள் அதிகாரமிக்கவர் களாயும் விளங்கினர். இங்ஙனம் நகர அரசுகளில் கோனாட்சி முதல் குடியாட்சிவரை பல அரசியல் நிறுவனங்கள் மாறி மாறி ஏற்பட்டன.

### ஸ்பார்ட்டாவும் ஆதென்சும்

நகர அரசுகள் பலவற்றில் மிகவும் சிறந்தவையும் நமது கவனத்துக் குரியனவுமானவை, ஸ்பார்ட்டாவும் ஆதென்சுமாகும். அவை இக்கால ருஷ்யாவையும் அமெரிக்காவையும் போன்று இரு வேறுபட்ட குறிக்கோள்களை உடையவை. ஸ்பார்ட்டா நாடே தெய்வமென்றும், நாட்டுக்காகவே ஒவ்வொரு மனிதனும் வாழ வேண்டுமென்றும் கூறியது. ஆனால், ஆதென்சோவெனின் தனி மனிதனுக்காகவே நாடு இருக்கிறதே ஒழிய, நாட்டுக்காக மக்கள் அல்ல என அறைந்தது. தனி மனித சுதந்திரத்தை அது போற்றி யது. மக்களாட்சியை அது பேணியது. ஆனால், ஸ்பார்ட்டாவில் இராணுவ ஆட்சி வளர்ந்தது. செல்வச் சிறுகுடியாட்சி (Oligarchy) நிலைபெற்றது. பொது உடைமை (Collectivism) பெரிதும் போற்றப்பட்டது. ஆனால், ஆதென்ஸில் தனி உடை மையே (private property) பெரிதும் பேணப்பட்டது.

### ஸ்பார்ட்டா

ஏனைய நகர அரசுகளைப் போலன்றி ஸ்பார்ட்டாவானது, தனக்கேயுரிய தனிப்பட்ட முறையில் வளர்ந்தது. கிரேக்க நகர அரசுகளின் சிறப்பியல்பான மக்களாட்சி அங்கு ஏற்படவேயில்லை. சர்வாதிகாரமிக்க ஓர் ஆட்சியே அங்கு ஏற்பட்டது. கலாசாரத் துறையிலும் அங்கு ஒரு தேக்கநிலை தென்பட்டது. இதற்கெல்லாம் முக்கிய காரணம் அதன் புவியியலமைப்பேயாகும். லேக்கோனியா (Laconia) எனும் பள்ளத்தாக்கின் ஒரு கோடியில் அது அமைந்துள் ளது. வடகிழக்கிலும், வடமேற்கிலும் மலைகளால் அது சூழப்பட்டுள் ளது. அம்மலைகளினின்றிழியும் யூரோட்டஸ் எனும் நதிப் படுகையே லேக்கோனிய சமவெளியாகும். இச்சமவெளிக்குத் துறைமுகங்கள் எதுவும் கிடையா. தெற்கேயுள்ள விரிகுடாவின் மூலமாக மட்டுமே ஸ்பார்ட்டர்கள் கடலுக்குள் செல்ல முடியும். எனவே, வெளியுலகத்தோடு வியாபாரத் துறையிலோ, கலாசாரத் துறையிலோ தொடர்பு கொள்ளவும், அவற்றின் துணைகொண்டு தமது நிலையில் முன்னேறவும் அவர்களுக்கு வாய்ப்பில்லாமல் போய்விட்டது. மற்றும் நிலப்பிரபுக்களுக்குப் போட்டியாக ஒரு நடுத்

தர வர்க்கம் (middle class) ஸ்பார்ட்டாவில் தோன்றுமலே போய் விட்டது. எனவேதான் அங்கு மக்களாட்சி மலராதொழிந்தது.

*இராணுவ மனப்பான்மை*

ஸ்பார்ட்டர்களிடையே காணப்பட்ட இராணுவ மனப்பான் மைக்கும் ஓரளவு சூழ்நிலையே காரணமாகும். கடல் அருகில் இல்லாததால் அவர்கள் கடற்போரில் வலிமையடையக் கூடவில்லை. நிலப் போரில் நல்ல திறமையை வளர்த்துக் கொண்டார்கள். நாளடைவில் பெருகிக்கொண்டே போன மக்களுக்குப் போதிய உணவு லேக்கோனியாவில் கிடைக்கவில்லை. கடல் கடந்து சென்று காலனிகளை அமைத்து உணவுப் பற்றுக்குறையைப்போக்கிக்கொள்ள அவர்களால் இயலவில்லை. எனவே, அருகிலுள்ள மெசனியா (Messenia) மீது படையெடுத்தனர். அரும்பாடுபட்டு அதைக் கைப்பற்றினர். ஆனுல், மெசனியர்கள் உள்ளூரக் கருவிக்கொண்டே யிருந்தனர். 50 ஆண்டுகள் கழித்து ஆர்கோஸ் (Argos) நகர மக் களின் துணை கொண்டு அவர்கள் ஸ்பார்ட்டாவின் மீது படையெடுத் தனர். ஆர்கோஸ்தளபதி போரில் இறந்ததாலும், டிர்டாஸ் (Tyrtaeus) என்ற கவிஞரின் உணர்ச்சிமிக்க பாடல்களால் ஸ்பார்ட்டர் களிடையே ஏற்பட்ட ஊக்கத்தாலும், இறுதியில் ஸ்பார்ட்டா வென்றது. ஆனுல், ஸ்பார்ட்டாவுக்குப் பணிய மெசனிய மக்கள் விரும்பவில்லை. எனவே, அடக்குமுறை கொண்டே அவர்களை ஸ்பார்ட்டர்கள் ஆண்டனர். தங்களது லேக்கோனிய நாட்டில் சதா அதிருப்தியுடன் முணுமுணுத்துக் கொண்டேயிருந்த மைசீனிய மக்களையும் ஸ்பார்ட்டர்கள் அடக்குமுறையைக் கொண்டே ஆண்ட னர். இங்ஙனம் உள்நாட்டில் தங்களைவிட எண்ணிக்கையில் அதிகமா யிருந்த ஹெலட்டுகள் (Helots) என்ற அடிமைகளையும், வெளி நாட்டில் மெசனியர்களையும் அடக்கியாள வேண்டிய கட்டாயத்தி ஞல்தான் ஸ்பார்ட்டர்கள் இராணுவத்துக்கு அவ்வளவு முக்கியத் துவம் கொடுக்க வேண்டி நேர்ந்தது. ஒவ்வொரு ஸ்பார்ட்டக் குடிமகனும் சிறந்த போர்வீரனுக வாழ்ந்து நாட்டுக்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டாலொழிய சுயேச்சையாய் வாழ இயலாது என்ற நிலையில் ஸ்பார்ட்டா விளங்கியது. எனவே, தனிப்பட்டோர் சுதந்திரத்துக்கு அங்கு வழியில்லை. நாட்டுக்காகவே ஒவ்வொரு வனும் வாழவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. கட்டுப்பாடும் ஒழுங்கும் இன்றியமையாத ஒழுக்கங்களாய் மாறின. ஒரு குடிமகன் புல அடிமைகளைச் சமாளிக்க வேண்டியிருந்ததால் உள்ள வளர்ச் சியைவிட உடல் வளர்ச்சியிலும், போர்ப் பயிற்சியிலுமே அவர்கள் அதிகம் கவனத்தைச் செலுத்தலாயினர். ஸ்பார்ட்டா முழுவதுமே ஓர் இராணுவ கூடமாகத் (Armed Camp) திகழ்ந்தது.

***லைகர்களின் திட்டம்***

ஸ்பார்ட்டர்களின் மேற்கூறிய தேவைகளை நன்குணர்ந்த லைகர்கஸ் (Lycurgus) எனும் பெரியார் அதற்கேற்ற வாழ்க்கை நெறியொன்றை வகுத்து ஸ்பார்ட்டர்களுக்கு அளித்தார். அதன்படி ஸ்பார்ட்டாவில் பிறந்த ஒவ்வொரு குழந்தையும் அரசாங்கத்துக்கே சொந்தமானது. குழந்தை பிறந்த உடனேயே அரசாங்க அதிகாரிகள் வந்து பார்வையிடுவர். பலஹீனமானதும், உறுப்புக் குறைந்ததுமான குழந்தையாயிருந்தால் அதைக் கொல்லுமாறு அன்னூர் ஆணையிட்டனர். நல்ல குழந்தையாயிருந்தால் அதை அதன் தாய்மார்கள் ஏழாண்டுகள் வரை வளர்க்கலாம். அதன்பின் அரசாங்கம் அதை எடுத்துச் சென்று இராணுவ கூடங்களில் சேர்த்துப் பயிற்சியளிக்கும். எதையும் தாங்கக்கூடிய இதயத்தைப் பெறுவான்வேண்டி மாணவர்கள் பல்வேறு கடுமையான சோதனை களுக்குட்படுத்தப்பட்டனர். கோடை வெய்யிலிலும், மாரிகாலக் குளிரிலும் அவர்கள் ஒரே ஓர் ஆடையுடன்தான் திறந்தவெளியில் நாணற்புல் படுக்கையின் மேல் உறங்க வேண்டும். குறைந்த அளவு உணவே தரப்படும். அது போதாவிட்டால் மாணவர்கள் சாதுரியமாகப் பக்கத்திலுள்ள தோட்டங்களில் சென்று திருடி வயிற்றை நிரப்பிக் கொள்ளலாம். குத்துச் சண்டை, கேடயம் எறிதல், நீச்சல் போன்ற விளையாட்டுகளில் நல்ல பயிற்சியளிக்கப் பட்டது. சட்டங்களை அவர்கள் உருப்போட்டனர். ஆனால்,கலையிலும் இலக்கியத்திலும் பயிற்சியளிக்கப்படவில்லை. எனவே, பேச்சுக் கலையில் அவர்கள் சிறப்படையவில்லை. சுருங்கப் பேசுவதிலேயே அன்னூர் வல்லவராயிருந்தனர். முப்பது வயதுக்குமேல் ஆண்களும் இருபது வயதுக்குமேல் பெண்களும் திருமணம் செய்துகொள்ள அனுமதிக்கப்பட்டனர். பெண்ணை, ஆண் பலவந்தமாகத் தூக்கிச் சென்று மணந்துகொள்ள வேண்டும். திருமணத்துக்கு முன் கள்ள உறவு அநுமதிக்கப்பட்டது. அச்சமயம் பிறந்த குழந்தைகளை அர சாங்கம் எடுத்துக்கொண்டது. ஸ்பார்ட்டப் பெண்களுக்கும் போர்ப் பயிற்சியளிக்கப்பட்டது. பெண்களுக்கு நாணம் தேவையில்லை என்பது அவர்களது கருத்து. காதலைவிட வீரத்தையே அவர்கள் போற்றி வளர்த்தனர். பொது விழாக்களில் ஆண்களும் பெண்களும் ஆடையின்றி நடனமாட வேண்டுமென்றும், அவர்கள் உறுப்புக் குறைபாடுகளைப் பிறரிடமிருந்து அறிந்து திருத்திக் கொள்ள வேண்டுமென்றும் வற்புறுத்தப்பட்டது. போரிலீடுபடத்தக்க ஆண் குழந்தைகளை நிறையப் பெற விரும்பிய ஸ்பார்ட்ட அரசாங்கம், திருமணமாகாத ஆண்களுக்கு அபராதம் விதித்தது. குழந்தைக் காக மறுமணம் செய்துகொள்வதையும், திடமான குழந்தைகளைப் பெறவேண்டி, கணவனல்லாத வேறொரு பலசாலியோடு கூடி

மகிழ்வதையும் சட்டம் அனுமதித்தது. ஸ்பார்ட்டாவில் நிலமனைத்தும் சமுதாயத்துக்கே சொந்தம். நிலங்களைப் பயிர் செய்த பிரபுக்கள் குறிப்பிட்ட அளவு பார்லி மாவு, பழங்கள் சாராயம் இவற்றைப் பொதுப்பந்திக்கு (Public mess) வழங்க வேண்டும். ஒவ்வொரு பந்தியிலும் பதினைந்து உறுப்பினர்கள் இருந்தனர். அவர்கள் அனைவரும் ஒன்ருக அமர்ந்தே உண்பர். இங்ஙனம் ஸ்பார்ட்டாவில் உணவு, உடை, உடைமை அனைத்தும் பொதுவாகவே அநுபவிக்கப்பட்டன. ஆனுல், இக்காலப் பொது உடைமை நாடுகளிலிருப்பது போன்று வாணிபமும், தொழிலும் அரசாங்கத்திடமிருக்கவில்லை. தனிப்பட்டோர் அத்தகைய காரியங்களிலீடுபட்டனர். ஸ்பார்ட்ட பொதுவுடைமை, குடிமக்களான டோரியர்களுக்கு மட்டுமே உரித்தானது. ஹெலெட்டுகள் என்ற அடிமைகளுக்கு நில உரிமையோ, அரசியலுரிமையோ கிடையாது.

### சமுதாயம்

ஸ்பார்ட்ட சமுதாயத்தில் பல வகுப்பினர் இருந்தனர். ஸ்பார்ட்டியேட்டுகள் (Spartiates) என்போர் உயர் வகுப்பினர். அவர்கள் தூய டோரிய இனத்தைச் சேர்ந்தவர்கள். நாட்டை ஆண்டவர்கள் அவர்களே. செழிப்பான நிலமனைத்தும் அவர்க்கே சொந்தம். அவற்றை அவர்கள் தமக்குள் சமமாகப் பிரித்துக் கொண்டனர். நாளடைவில் வளமற்ற நிலங்களையும் அவர்கள் எடுத்துக்கொண்டனர். பிறருக்கு விற்கவும் வாங்கவும் உரிமை பெற்றனர். இதனுல் ஒரு சிலர் அதிகமான நிலங்களைப் பெற்றுச் செல்வந்தராயினர். அத்தகைய செல்வந்தர்களே ஆட்சித்துறையில் செல்வாக்கடைந்தனர். ஸ்பார்ட்டியேட்டுகளுக்கடுத்து பெரியோஸி (Perioeci) என்ற வகுப்பினர் இருந்தனர். டோரியர்களும் சுதேசிகளும் கலந்ததால் ஏற்பட்ட இக்கலப்பு வகுப்புக்கு நில உடைமை இல்லை. ஆனுல், வியாபாரத்திலும், தொழிலிலும் ஈடுபட உரிமை பெற்றிருந்தனர். சமுதாய மாடியின் அடித்தளத்தில் அவதிப்பட்டவர்கள் ஸ்பார்ட்டர்களால் வெல்லப்பட்டு அடிமைப்படுத்தப்பட்ட சுதேசிகள். அவர்கள் ஹெலட்டுகள் எனப்பட்டனர். அவர்களே பிரபுக்களின் நிலங்களை உழுது பயிரிட்டவர்கள். எஜமானர்களுக்கு விரோதமாகக் கிளர்ச்சி செய்யாத வகையில் அவர்கள் அடக்கி ஒடுக்கப்பட்டனர். அவர்களில் சந்தேகப்பட்டவர்களை எந்தக் குடிமகனும் காரணங்காட்டாது அடித்துக் கொல்லுகின்ற உரிமை இருந்தது.

*அரசியலமைப்பு*

ஸ்பார்ட்டர்களின் அரசாங்க அமைப்பு விநோதமானது. அங்கு ஒரு மன்னருக்குப் பதிலாக இரு மன்னர்கள் ஆட்சி புரிந்தனர். இராணுவத் தலைவர்களாயும், சமயக் காவலர்களாயும் அவர்கள் பணிபுரிந்தனர். அவர்களும், 28 பெரும் பிரபுக்களும் (60 வயதுக்கு மேற்பட்டவர்கள்) சேர்ந்த ஆலோசனை சபையே (Council) ஆட்சியை நடத்தியது. ஆட்சித் துறையைக் கண்காணிப்பதும், சட்ட மன்றத்தில் தீர்மானங்களைக் கொண்டுவந்து நிறைவேற்று வதும், தலைமை நீதிமன்றமாகப் பணி புரிவதும் அதன் கடமை களாகும். சட்டமன்றமானது (Assembly) ஆலோசனை சபையின் தீர்மானங்களை விவாதித்துத் தள்ளவும் கொள்ளவும் அதிகாரம் பெற்றிருந்தது. ஆட்சித்துறை அலுவலர்கள் அனைவரையும் அது தேர்ந்தெடுத்தது. இவ்விரு சபைகளையும் கட்டுப்படுத்த ஐவரடங் கிய எப்பர் (Ephor) சபை ஒன்று இருந்தது. அச்சபை பார்த்து எந்தச் சட்டத்தையும் உண்டாக்கலாம். அல்லது நிராகரிக்கலாம். நாட்டின் நிலங்களைப் பங்கு போடவும், கல்வி முறையைத் தீர்மானிக்கவும், மன்னர்களை ஆக்கவும், அவசியமானால் பதவியி லிருந்து நீக்கவும் எப்பர்கள் உரிமை பெற்றிருந்தனர். பூமியில் பிறந்த குழந்தைகளில் எது வாழவேண்டும், எது மாளவேண்டும் என்பதைத் தீர்மானித்தவர்கள் அவர்களே. அவர்கள் சட்டமன்றத் தால் ஆண்டுக்கொருமுறை தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஆனால், மீண்டும் மீண்டும் அவர்களே தேர்ந்தெடுக்கப்பட்டதால் ஏறக் குறைய ஓர் நிரந்தர நிர்வாக நிறுவனமாக எப்பர் சபை விளங்கியது. எனவே, ஸ்பார்ட்டாவின் ஆட்சி, செல்வாக்கு மிக்க ஓர் ஐவரிடமே உண்மையில் சிக்கிக் கிடந்தது. எனவே, அதைச் செல்வமிக்க சிலவராட்சி (Oligarchy) எனக் கூறலாம். ஆனால், பெயரளவில் கோனாட்சியும், பிரபுக்களாட்சியும், அதில் கலந்து காணப்பட்டது. சட்டமன்றத்தில்கூடக் குறிப்பிட்ட அளவு செல்வமுடையவர்களே உறுப்பினர்களாக அநுமதிக்கப்பட்டனர். எனவே, அதை ஓர் பொதுமக்கள் மன்றமாக நாம் மதிப்பதற்கில்லை. மக்களாட்சியின் கூறுபாடுகள் ஸ்பார்ட் அரசியலமைப்பில் மருந்துக்குமில்லை எனலாம்.

*ஆதென்ஸ் நகர அரசு*

ஸ்பார்ட்டாவின் சூழ்நிலைக்கு முற்றிலும் மாறான நிலையில் ஆதென்ஸ் வளர்ந்தது. அட்டிகா எனும் பிரதேசத்தின் தலைநகராக அது விளங்கியது. அட்டிகாவில் அயோனியர்கள் சிறிது சிறிதாக வந்து குடியேறினர். ஸ்பார்ட்டர்களைப் போல் சுதேசிகளோடு அவர்கள் ஓயாது போரிடவில்லை. சமாதான

முறையிலேயே அவர்களது குடியேற்றம் நடைபெற்றது. மற்றும் அங்கு வளமிக்க உலோகச் சுரங்கங்கள் இருந்தன. அவற்றில் கிடைத்த உலோகங்களைப் பிற நாடுகளுக்கு எளிதில் அனுப்பி வியாபாரம் செய்ய நல்ல துறைமுகங்கள் அங்கு அமைந்திருந்தன. எனவே, விவசாயத்தை நம்பி வாழ்கிற நிலை அதீனியர்களுக்கு ஏற்படவில்லை. அதற்கு மாறாக அவர்கள் வாணிபத்தில் ஈடுபட்டுப் பெரும் பொருளீட்டி நகர வாழ்க்கையை மேற்கொண்டொழுகினர். கலையையும் கல்வியையும் வளர்த்தனர்.

***கோனாட்சியும் சிலவராட்சியும்* (Monarchy and Oligarchy)**

கி.மு. 800 வரையில் ஆதென்ஸில் கோனாட்சி முறையே நிலவியது. கி.மு. ஒன்பதாம் நூற்றாண்டில் நாட்டில் அரசியல், பொருளாதாரத் துறைகளில் பல மாற்றங்கள் நிகழ்ந்தன. ஒலிவ எண்ணெய் உற்பத்தி, திராட்சை ரச உற்பத்தி இவ்விரண்டிலும் மக்கள் அதிக கவனம் செலுத்தினர். ஏனெனில் பிற நாடுகளில் அப்பண்டங்களுக்கு நல்ல கிராக்கி இருந்தது. மற்றும் அட்டிகாவின் நிலங்கள் உணவு உற்பத்திக்குப் பதிலாக ஒலிவ மரம், திராட்சைக் கொடி இவற்றின் வளர்ச்சிக்கே பெரிதும் தகுதியாயிருந்தது. எனவே, பல செல்வந்தர்கள், அவற்றைப் பயிரிட முன்வந்தனர். அவை பலன் தரப் பல ஆண்டுகள் பிடித்ததால், பரம்பரைப் பணக்காரர்கள் மட்டுமே அதில் ஈடுபட முடிந்தது. சாதாரண குடியானவர்கள் அந்நிலக்கிழார்களின் கடனாளிகளாய் மாறி, அச் செல்வந்தர்க்கே அடிமைகளாக மாறினர். அரசியல் அதிகாரங்கள் அனைத்தும் நிலப் பிரபுக்களின் கைகளுக்கு மாறியது. அரியோ பேகஸ் (Areopagus) என்ற மூத்தோர் சபையில் அன்னார் மட்டுமே இடம் பெற்றனர். அச்சபை மன்னனை மட்டந்தட்ட முனைந்தது. நாளடைவில் மன்னனைத் துரத்திவிட்டுத் தானே அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொண்டது. கோனாட்சி, செல்வர்களின் சிலவராட்சி யாக (Oligarchy) மாறியது.

***மக்களாட்சியின் வளர்ச்சி* (Growth of Democracy)**

***சோலன்:*** ஆட்சியைச் செல்வர்கள் கைப்பற்றியதைக் கண்ட நடுத்தர மக்கள் மனங்கொதித்தனர். வாணிபத்தால் செல்வர் களான பலர் குடியானவர்களோடு சேர்ந்துகொண்டு கிளர்ச்சி செய்தனர். இறுதியாக கி.மு. 594ஆம் ஆண்டளவில் எல்லாப் பிரிவினரும் ஒன்று சேர்ந்து சோலன் (Solon) எனும் ஓர் நிர்வாக அறிஞரை அழைத்து, யாவர்க்கும் நன்மை பயக்கும் வகையில் சில சீர்திருத்தங்களைப் புகுத்துமாறு வேண்டினர். அவர் ஐநூற்றுவர் சபை (The Council of the Five hundred) என்ற ஒரு நிறுவனத்தை ஏற்படுத்தினார். அதில் நடுத்தர வர்க்கத்தினரும்

இடம் பெற்றனர். அதற்கும் தாழ்ந்த நிலையிலிருந்த மக்களுக்கு வாக்குரிமையும், மக்கள் சபையில் (Assembly) இடமும் அளிக்கப் பட்டது. வயதுவந்த ஆண்கள் அனைவராலும் தேர்ந்தெடுக்கப் பட்ட உறுப்பினர்களைக் கொண்ட தலைமை நீதிமன்றம் ஒன்று ஏற்படுத்தப்பட்டது. சாதாரண மக்களும், அதில் உறுப்பினராக லாம். நிர்வாக அதிகாரிகளுக்கெதிராகப் பொதுமக்கள் அதனிடம் முறையிட்டுக் கொள்ளலாம். நிலத்தை அடைமானமாக வைத்த ஏழைக் குடியானவர்களின் கடன்கள் ரத்துச் செய்யப்பட்டன. எனவே, அவர்கள் இழந்த நிலங்களை மீண்டும் பெற்றனர். கடனுக் காக ஒருவனை அடிமைப்படுத்துவது தடுக்கப்பட்டது. நாணயத்தில் சில சீர்திருத்தங்கள் செய்யப்பட்டதால் நடுத்தர வர்க்கத்தினரும் நன்மையடைந்தனர். சோம்பேறிகள் தண்டிக்கப்பட்டனர். பிற நாட்டுத் தொழில் விற்பன்னர்களுக்குச் சலுகைகள் வழங்கப் பட்டன.

இங்ஙனம் பலதரப்பினருக்கும் நன்மையை விளைக்க சோலன் முயன்றார். ஆனால், இறுதியில் அது பயனற்றுப் போயிற்று. சில உரிமைகளை இழந்த பிரபுக்கள் அதிருப்தி அடைந்தனர். நிர்வாகத் திலும் அரியோபேகஸ் சபையிலும் இடம் கிடைக்கவில்லையே என நடுத்தர வர்க்கத்தினர் கவன்றனர். மற்றும் மக்களைப் போரிலீடு படச் செய்து, குறைகளை மறைக்க சோலன் முயன்றார். மெகாரா நகர்மீது போர் தொடுத்தார். அதனால் பொருள் விரயம் ஏற்பட்டது. குழப்பங்கள் எங்குப் பார்த்தாலும் தோன்றின. இதைப் பயன் படுத்திக்கொண்டு பைசிஸ்டிராடஸ் (Peisistratus) என்ற சர்வாதிகாரி ஆட்சியைக் கைப்பற்றினார். அவர் பல நன்மைகளை மக்களுக்குச் செய்தார் எனினும் மக்களின் உரிமை பறிபோயின. அவரது வழித் தோன்றலான ஹிப்பியாஸ் (Hippias) ஓர் கொடுங் கோலர். அவரது அடக்குமுறையைச் சில பிரபுக்கள் எதிர்த்தனர். ஸ்பார்ட்டாவின் துணைகொண்டு ஹிப்பியாஸ் முறியடிக்கப்பட்டார். கிளையஸ்தினிஸ் (Cleisthenes) என்ற ஓர் பிரபுவின் கைக்கு அதிகாரம் மாறியது. மக்களுக்குத் தொண்டு புரிவதாக வாக்களித்து அவர்தம் ஆதரவுடன் எதிரிகளை ஒழித்துக் கட்டிய கிளாஸ்தனிஸ் பொதுமக்களுக்குச் சாதகமாகப் பல சீர்திருத்தங்களைப் புகுத்தினார்.

*கிளையஸ்தனிஸ்*

அதீனிய ஜனநாயகத்தின் தந்தையெனக் கிளையஸ்தனிஸ் மதிக்கப்படுகிறார். ஏனெனில், நாட்டில் வதிந்த எல்லா சுயேச்சைக் குடிகளுக்கும் அவர் குடியுரிமையை (Citizenship) வழங்கினார். புதிய ஓர் ஐநூற்றுவர் சபையை ஏற்படுத்தி அதற்கு ஏராளமான நிர்வாக அதிகாரங்களையும், ஆட்சித்துறைப் பொறுப்புகளையும்,

சட்டங்களை ஆக்கும் உரிமைகளையும் வழங்கினர். டீம்கள் (Demes) என்ற மாவட்டத் தொகுதிகளால் கொடுக்கப்பட்ட பட்டியல்களி லிருந்து அச்சபையின் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். 30 வயதுக்கு மேற்பட்டவர் எவராயினும் அவர் அச்சபையின் உறுப்பினராகலாம். சபை பத்து வாரியங்களாகப் பிரிக்கப்பட்டது. ஒவ்வொரு வாரியமும் ஒவ்வொரு மாதத்துக்கு ஆட்சி செய்ய அனுமதிக்கப்பட்டது. இங்ஙனம் நாட்டிலுள்ள பல்வேறு பகுதிகளும் ஆட்சித்துறையில் பங்கெடுத்துக்கொள்ள ஓர் வாய்ப்பளிக்கப் பட்டது. இச் சபையால் கொண்டுவரப்பட்ட சட்டங்களை நிராகரிக் கவும், ஏற்றுக்கொள்ளவும், மக்கள் சபைக்கு அதிகாரம் வழங்கப் பட்டது. போர் தொடுக்கவும், வரி போடவும், தண்டவும், வருமான கணக்கைத் தணிக்கை செய்யவும் அது உரிமை பெற்றது. நாட்டுக்குக் கேடு சூழக் கூடியவர்கள் என்று ஐயுறப்பெற்றவர்களை நாட்டிலிருந்து பத்து ஆண்டுகளுக்குத் தற்காலிகமாக நாடுகடத்த வும் (Ostracism) அச்சபை உரிமை பெற்றது. சர்வாதிகாரிகள் என ஐயுறப்பெற்றவர்கள் நாட்டு அரசியலினின்றும் விலக்கி வைக்கப்படுவதற்கு இம் முறை பெரிதும் துணைசெய்தது.

*பெரிக்லிஸ்*

பெரிக்லிஸ் (Pericles) என்பாரின் காலத்தில்தான் (461-421 கி.மு.) அதீனிய ஜனநாயகம் முழு வளர்ச்சியும் பெற்றது. பொது மக்கள் சபையின் அதிகாரம் அப்போதுதான் நன்கு நிறுவப் பெற்றது. புதிய சட்டங்களைக் கொண்டுவரவும், மேல்சபையினல் பிரேரேபிக்கப்பெற்ற சட்டங்களைத் தள்ளவும் அல்லது கொள்ளவும் அச் சபை உரிமை பெற்றது. மற்றும் அச்சபை ஆண்டுக்கொரு முறை பத்து தளபதிகளைத் தேர்ந்தெடுத்து அரசாங்கத்தை அதனிடம் ஒப்படைத்தது. சரிவர நிர்வாகத்தை நடத்தவில்லை என்ருல் அவர்களை அடுத்த ஆண்டுக்குத் தேர்ந்தெடுக்காமல் விட்டுவிட அதற்குரிமையுண்டு. எனவே, தளபதிகள் மக்கள் சபைக்குப் பொறுப்பாளிகளாய் விளங்கினர். தற்காலக் காபினட் சபைபோல் அது ஒரு வகையில் விளங்கியது. பொதுவாக அத் தளபதிகள் மீண்டும் மீண்டும் தொடர்ந்து தேர்ந்தெடுக்கப் பட்டனர். பெரிக்லிஸ் என்ற முக்கிய தளபதி (Chief Strategus) 30 ஆண்டுகளுக்கு மேலாகப் பணிபுரிந்தார். மற்றும் ஆதென்ஸின் தலைமை நீதிமன்றத்தை மக்கள் மயமாக்கிய பெருமையும் பெரிக்லி சுக்கே உரியது. ஒவ்வோர் ஆண்டு தொடக்கத்திலும் 6000 பேர் கொண்ட ஒரு பட்டியல் தயாரிக்கப்பட்டது. அது 200 முதல் 1001 பேர்வரை கொண்ட சிறுசிறு சான்ருண்மைக் குழுக்களாகப் (Jury) பிரிக்கப்பட்டது. ஒவ்வொரு குழுவும் ஒரு வகையான குற்றத்தை

ஆண்டு முழுதும் விசாரிக்க உரிமை பெற்றது. ஒரு நிர்வாக அதிகாரி ஒவ்வொரு குழுவுக்கும் தலைமை வகித்தபோதிலும், இறுதித் தீர்ப்பு குழு முழுவதின் முடிவுக்கே. விடப்பட்டது. பெரும்பான்மை வாக்குகள் மூலம் தீர்ப்புகள் வழங்கப்பட்டன. அதற்கு மேல் யாரும் முறையீடு செய்துகொள்ள முடியாது. இங்ஙனம் மக்களே முடிவான நீதிமன்றமாக அமைந்து செயல்பட்டது பெரிக்லிஸின் காலத்திற்றுகும். நிர்வாக அதிகாரிகளும் (Magistrates) ஆண்டுக் கொருமுறை திருவுளச் சீட்டு முறையால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஏறக்குறைய எல்லாக் குடிமக்களுமே, நிர்வாகத்திலும், நீதி வழங்கு வதிலும் பங்கு பெறுதற்குரிய அரிய வாய்ப்பினைப் பெரிக்லிஸ் வழங்கினர்.

#### *கிரேக்க ஜனநாயகமும் தற்கால ஜனநாயகமும்*

மேலே கூறப்பட்ட கிரேக்க ஜனநாயகத்துக்கும் இன்றைய ஜனநாயகத்துக்கும் ஒரு சில வேற்றுமைகள் உள்ளன. கிரேக்க ஜனநாயகத்தில் இன்றிருப்பது போன்று வயதுவந்த அனைவருக்கும் வாக்குரிமை இல்லை. அடிமைகள், பெண்கள் ஆகியோருக்கு அரசியல் உரிமைகள் மறுக்கப்பட்டன. மற்றும் கிரேக்க ஜனநாயகத்தில் வாக்குரிமை பெற்றிருந்த குடிமக்கள் அனைவரும் ஆட்சித்துறையில் பங்கெடுத்துக்கொண்டார்கள். சீட்டுக் குலுக்கல் முறை மூலம் சட்டமன்ற உறுப்பினர்களும், நீதிமன்ற உறுப்பினர் களும் தேர்ந்தெடுக்கப்பட்டதாவது, குடிமக்கள் அனைவரும் சமமான திறமையுடையவர்கள், எனவே சமவாய்ப்பு ஆட்சித் துறையில் அன்னார்க்கு வழங்கப்பட வேண்டும் என்ற ஜனநாயக தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது. ஆண்டுக்கொரு முறை தேர்தல் வைத்து அதிகாரிகளைப் பொறுக்கியதன் மூலம் குடிமக்கள் அனைவரும் அரசாங்க அலுவல்களில் பங்குபெற வாய்ப்பு ஏற்பட்டது. நீதிமன்றத்திலும் அங்ஙனமே எல்லோரும் பணிபுரிய வாய்ப்பு இருந்தது. ஆனால், இன்றைய ஜனநாயகத்தில் மக்களின் பிரதிநிதிகளே சட்டமன்றத்திலும், நிர்வாகத்துறையிலும் பங்கு பெறுகின்றனர். கிரேக்கரின் ஆட்சிமுறையில் நேர்முக ஜனநாயகம் (Direct Democracy) நடைபெற்றது. இன்றைய ஆட்சிமுறையில் பிரதிநிதித்துவ ஜனநாயகம் நடைபெறுகிறது. கிரேக்க நகர அரசுகள் மிகச் சிறியனவாயிருந்ததும், இன்றைய தேசிய அரசுகள் அளவில் மிகப் பெரியனவாயுமிருத்தலே இவ் வேறுபாட்டுக்குக் காரணமாகும்.

#### *அதீனிய ஜனநாயகத்துக்கு ஏற்பட்ட சோதனைகள்*

***பாரசீகப் போர்கள் :*** சுதந்திர ஆதென்சின் அந்திய காலத் தில் அதற்கு இருபெருஞ் சோதனைகள் ஏற்பட்டன. ஒன்று பாரசீகத்

துக்கும் அதற்குமிடையே ஏற்பட்ட போராகும். மற்ருென்று ஸ்பார்ட்டாவுடன் ஏற்பட்ட பெலெப்பொனீஷியப் போராகும். பாரசீகத்தோடு ஏற்பட்ட போரானது அப்பேரரசின் ஏகாதிபத்திய விரிவாக்கத்தால் விளைந்ததொன்ருகும். ஆசிய மைனரில் வாழ்ந்து வந்த அயோனிய கிரேக்கர்களின் மீது பாரசீகர்கள் படையெடுத்த போது அதீனியர்கள் அன்னுர்க்கு உதவி செய்தனர். எனவே, பாரசீகர்கள் அதீனியர்களை வெறுத்தனர். அவர்கள்மீது வஞ்சந் தீர்த்துக்கொள்ள விரும்பிய டேரியஸ் (Darius) எனும் பாரசீகப் பேரரசர் கிரீஸின்மீது படையெடுத்தார். கிரீஸ் முழுவதுக்குமே ஏற்பட்ட இவ்வபாயத்தை ஆதென்ஸ் நகரந்தான் முன்நின்று தடுத்தது. எண்ணிக்கையில் மிகக் குறைவாயிருந்த அதீனியப் படை, எண்ணிக்கை மிக்க பாரசீகப் படைகளைப் புகழ்மிக்க மாரா தான் (Marathon) போர்க்களத்தில் தோற்கடித்தது (490 கி.மு.). ஸெர்க்ஸிஸ் (Xerxes) என்ற பாரசீகப் பேரரசர் கிரீஸின் மீது இரண் டாம் முறையாகப் படையெடுத்தபோது மீண்டும் ஆதென்ஸ் முன் வந்து சாலமிஸ் (Salamis) கடற்போரில் பாரசீகர்களைத் தோற் கடித்தது. அதன்பின் ஸ்பார்ட்டர்களும் வந்து அதீனியர்களோடு சேர்ந்துகொண்டு பாரசீகர்களை மைகேல் (Mycale) போர்க்களத்தில் தோற்கடித்துத் துரத்திவிட்டனர். பாரசீகப் போர்கள் அதீனிய ஜனநாயகத்தின் பெருமையையும், வலிமையையும் உலகறியச் செய்துவிட்டன.

*பெலப்பொனீஷியப் போர்கள்*

பாரசீகப் போர்களைச் சமாளிக்க ஆதென்ஸ் டீலியக் கூட்டுறவு (Delian League) என்ற கிரேக்க நாடுகளின் இணைப்பு ஒன்றினைச் ச்மைத்தது. போர் முடிந்த பின்பும் அக் கூட்டுறவு கலைக்கப்பட வில்லை. மெல்ல மெல்ல அக் கூட்டுறவை ஒரு பேரரசாக ஆதென்ஸ் மாற்றியமைத்தது. அதன்பின் ஆதென்ஸின் போக்கே மாறி விட்டது. சுயநலம் அதன்பால் கொழுந்துவிட்டெரியலாயிற்று. கூட்டுறவுக்குச் சொந்தமான பொதுப் பணத்தை எடுத்துத் தனக்காகவே செலவழிக்கத் தொடங்கியது. கூட்டுறவின் உறுப்பு நாடுகளைக் கேவலமாக நடத்த ஆரம்பித்தது. ஏகாதிபத்தியப் பாதையில் நடைபோட ஆரம்பித்த ஆதென்சை, ஸ்பார்ட்டா எதிர்த்தது. கொரிந்த் நகர அரசும் அத்துடன் சேர்ந்துகொண்டு அதீனியர் மீது போர் தொடுத்தது. வடக்கு பெலப்பொனீஷியா வைக் கைப்பற்றப் பார்ப்பதாக அது ஆதென்ஸ் மீது குற்றம் சாட்டியது. ஏனெனில், கொரிந்த் வளைகுடாவில் அதீனியர் தனியாதிக்கம் பெற விரும்பினர். ஸ்பார்ட்டாவின் தலைமையில் இவ்வுள்நாட்டுப் போரானது கி.மு. 431முதல் கி.மு. 404 வரை

நடைபெற்றது. இப் போரில் அதீனியர்கள் படுதோல்வி அடைந்தனர். அவர்களது ஜனநாயகமும் கலைச் சிறப்பும் சீர்குலைந்தது. மிகக் கேவலமான நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டு ஆதென்ஸ், ஸ்பார்ட்டாவுக்கு அடி பணிந்தது.

***கிரேக்க நாகரிகத்தின் வீழ்ச்சி***

பெலப்பொனீஷியப் போரின் விளைவாக ஆதென்ஸ் மட்டுமின்றி, எல்லா கிரேக்க அரசுகளுமே கலகலத்துவிட்டன. ஒன்றன் பின் ஒன்ருக அவை ஸ்பார்ட்டாவின் ஆதிக்கத்துக்குள் சிக்கித் தமது சுயேச்சையை இழந்தன. ஜனநாயகம் இருந்த நகரங்களில் செல்வர்களின் சிலவராட்சி (Oligarchy) யை ஸ்பார்ட்டர்கள் புகுத்தினர். ஆதென்ஸில் மட்டும், ஜனநாயகம் ஓரளவுகாப்பாற்றப்பட்டது. ஏறக்குறைய முப்பதாண்டுகள் வரை ஸ்பார்ட்டா கிரீஸ் முழுவதையும் தனது ஆதிக்கத்துக்குள் வைத்திருந்தது. அதன் பின் தீப்ஸ் நாட்டைச் சேர்ந்த எபமினேண்டஸ் (Epaminondes) என்ற தலைவர் ஸ்பார்ட்டர்களைத் தோற்கடித்து, கிரீஸில் தமது ஆதிக்கத்தை நிலைநாட்டினுர் (கி.மு. 371). ஆனுல், அவர் அடக்குமுறை ஆட்சியைக் கடைப்பிடித்ததால் பல நகர அரசுகள் சேர்ந்து அவர்மீது போர் தொடுத்தன. போரில் எபமினுண்டஸ் மாண்டார். அவரது பேரரசும் நிலைகுலைந்தது (கி.மு. 362). ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம் என்பதற் கிணங்க கிரேக்க நகர அரசுகள் தம்முள் போரிட்டுக் கொண்டதைக் கண்ட மாசிடோனிய மன்னரான பிலிப் (Philip) கிரீஸின்மீது படையெடுத்து எளிதில் அதை வென்று தன்னடிப்படுத்தினுர் (கி.மு. 338). ஸ்பார்ட்டாவைத் தவிர ஏனைய நகர அரசுகள் யாவும் மாசிடோனிய ஆதிக்கத்தின் கீழ் வந்தன. கி.மு. 336-ல் பிலிப் இறந்து விட்டார். அதன்பின் மாசிடோனியாவின் மன்னராக வந்த அலெக்ஸாந்தர் கிரீஸை மேலும் அடக்கியொடுக்கினுர். நகர அரசுகள் தம் சுயேச்சையை முற்றிலும் இழந்தன. அலெக்ஸாந்தர் கிரீஸை மட்டுமின்றிப் பாரசீகப் பேரரசு நாடுகளையும், எகிப்தையும், இந்தியாவின் வடமேற்குப் பகுதியையும் வென்று ஓர் பேரரசை நிறுவினுர். ஆனுல், அவர் தமது பேரரசை நன்கு நிலைநாட்டு முன்பே இறந்து போனுர் (கி.மு. 323). அவரது படையெடுப்புகளால் கிரேக்க நாகரிகம் பிற நாடுகளில் பரவவில்லை. பிற நாகரிகங்களின் விளிம்பை மட்டுமே கிரேக்க நாகரிகம் தொட்டது. ஆனுல், கீழை நாகரிகங்களோடு மேலை நாகரிகம் தொடர்பு கொள்ள அவரது வெற்றிகள் துணைபுரிந்தன. கீழை நாடுகளின் நாகரிகப் பண்புகள் மேலை நாடுகளில் பரவ ஆரம்பித்தது அலெக்ஸாந்தரின் வெற்றிகளுக்குப் பின்னரே எனலாம்.

# பண்டைய ஹெல்லனிக் நாகரிகம்

## (அலெக்சாந்தருக்கு முன்)

ஒரு நாட்டின் பெருமையானது அது எத்துணைக் காலம் சுயேச்சையாக வாழ்ந்தது என்பதைப் பொறுத்து ஏற்படுவதொன் றன்று. எத்துணை பெரிய சாதனைகளை அஃது செய்து விட்டுச் சென்றுள்ளது என்பதைப் பொறுத்தே அதன் சிறப்பு அமையு மென்பது ஒருதலை. கிரேக்கர்கள் சுயேச்சையாகவும், முழுமை யாகவும் வாழ்ந்த காலம் என்னவோ மிகச் சிறியதுதான். கி.மு. 490-ல் பாரசீகருக்கு எதிராகக் கிரேக்கர்கள் மாரதான் (Marathon) போர்க்களத்தில் பெற்ற பெரு வெற்றிக்கும், கி.மு. 338-ல் மாசிடோனியரிடம் அவர்கள் அடைந்த படுதோல்விக்கும் இடைப்பட்ட ஓர் ஒன்றரை நூற்றாண்டுக் காலமே அவர்கள் சீரோடும் சிறப்போடும் செம்மையுற வாழ்ந்த காலமாகும். அத் துணைக் குறுகிய காலத்திற்குள் அன்னார் செய்துமுடித்த சாதனைகள் பலப்பல. அரசியலிலும், அறிவியலிலும், கலையிலும் அவர்கள் படைத்துச் சென்றுள்ள புதுமைக் கருத்துகளின் அடிப்படை யிலேயே இன்றைய மேலை நாகரிகமெனும் மேதகு கட்டடமானது கட்டப்பட்டுள்ளது. அரசியல் துறையில் கட்டற்ற சுதந்திரத்தை யும், வரலாற்றுத் துறையில் ஆராய்ச்சி மனப்பான்மையையும், அறிவியல் துறையில் கட்டுப்பாடற்ற சிந்தனையையும் முதன் முதலில் வற்புறுத்தியவர்கள் அவர்களேயாவர். கணிதம், பௌதிகம், தத்துவம், ஆட்சிக்கலை, பேச்சுக்கலை ஆகியவற்றைக் கண்டுபிடித்து உலகுக்கீந்தவர்கள் அவர்களே. மற்றும் இலக்கியம், சிற்பம், கட்டடக்கலை ஆகியவற்றிலும் அவர்கள் ஏனைய பண்டைய மக்களினும் சிறந்து விளங்கினார்கள். இங்ஙனம் அவர்கள் செய்து முடித்த செயல்கட்கு மேலாகத் தற்கால உலகம் அடைந்துள்ள முன்னேற்றம் மிகச் சிறிதே என்பது அறிந்து வியத்தற்பால தொன்றுமென்க.

### *கிரேக்கக் கலைகள்*

கிரேக்கர்களது பண்டைய நாகரிகத்தின் முழுமையான மலர்ச்சியை நாம் அவர்களது கலைச் செல்வங்களில்தான் நன்கு காண்கிறோம். 'அழகே தெய்வம். தெய்வமே அழகு' என்ற கவிஞரின் வாக்கை மெய்ப்பித்துக் காட்டியவர்கள் கிரேக்கர்கள். அவர்களது வாழ்வே கலையாகவும், கலையே வாழ்வாகவும் அமையப் பெற்றிருந்தன. அத்தகைய கலை வாழ்வின் உயிர் நாடி யாகத் திகழ்ந்தது அவர்களது அழகுணர்ச்சியாகும். அதனாற்றான் பெரிக்ளீஸ் தமது நாட்டு மக்களைப் பற்றிக் கூறுகின்றகாலை 'அழகு

விரும்பிகள்' (Lovers of beauty) என்று பேசுகின்றார். 'அழகு விரும்பிகள்' என்று கூறுவதைவிட 'அழகின் பித்தர்கள்' என்று கூறுவது இன்னும் பொருத்தமுடையதாயிருக்கும். ஏனெனில், அழகுக்காக அவர்கள் எவ்விதத் தியாகத்தையும் செய்யத் தயாராயிருந்தார்கள். அழகில்லாத பொருள்களைப் பார்க்கும்போது, ஏதோ ஈட்டியால் குத்தப்பட்டது போல் அவர்கள் வேதனையடைந்தார்கள். அழகையும் அறத்தையும் அவர்கள் ஒன்றாகவே கண்டனர். அழகும் எழிலும் கட்டுக்கோப்பும் கம்பீரமும் கொண்ட தோற்றப் பொலிவுள்ளவர்களே நல்லவர்களாகவும் இருக்கக்கூடுமென்பது அவர்தம் நம்பிக்கையாகும். நல்ல அழகுள்ளவர்களையே அவர்தம் பூசாரிகளாயும், தலைவர்களாயும் தேர்ந்தெடுப்பது வழக்கம். அருவறுப்பான தோற்றமுடையவரா யிருந்தும் நல்லவராக விளங்கிய சாக்ரடீஸைக் கண்டு அவர்கள் வியந்தனர். அவரை ஒரு விதிவிலக்காகவும், விசித்திர மனிதராகவும் அன்னார் கருதினார்களேயன்றித் தங்களது இலட்சிய மனிதராகக் கருத அவர்களால் இயலவில்லை.

இங்ஙனம் அழகுணர்ச்சியால் உந்தப்பட்ட கிரேக்கர்கள், தாம் தொட்டதையெல்லாம் வனப்புடையவைகளாக வடித்தெடுத்தனர். எதிலும் சீராக இருக்கவேண்டும் என்பது அவர்தம் குறிக்கோளாகும். ஓர் உருவத்தில் இயற்கையான அளவுக்கு மீறி ஓர் உறுப்பு இருக்குமானால் அதை அவர்கள் வெறுத்தனர். கிரேக்கச் சிற்பங்களிலும் கோயில்களிலும் இத்தகைய சீர்மையையும், ஓர்மையையும் நாம் நன்கு காணலாம். 'அளவுக்கு மீறினால் அமிர்தமும் நஞ்சு' என்ற பழமொழியை அவர்கள் எல்லாத் துறையிலும்—சிறப்பாகக் கலைத்துறையிலும் கடைப்பிடித்தனர். அடுத்தபடியாக அவர்களின் கலைப்பொருள்களில் நாம் காண்பது தெளிவான அமைப்பு முறையாகும். புரியாத கோதிக் (Gothic) கட்டடங்களில் காண்பது போன்ற ஐயப்பாட்டிற்கிடமான இயல்புகளை நாம் அவர்களது கட்டடங்களில் காண்பது அரிதாகும். இல்லாததை இருப்பதைப் போல் காட்டுவதை வெறுத்த கிரேக்கர்கள், இருப்பதை மறைத்தும் குறைத்தும் காட்டவும் விரும்பினரல்லர். உள்ளதை உள்ளபடியே படம் பிடித்துக் காட்டுவதிலேயே அவர்கள் உவகையுற்றனர். அதே சமயம் இயற்கையில் உள்ளவற்றை எல்லாம் அவர்கள் அப்படியே கலைப்பொருள்களில் வடிக்க எண்ணவில்லை. இயற்கையின் சிறந்த செம்மை சான்ற படைப்புகளை மட்டுமே அவர்கள் தமது கலைப்பொருள்களுக்கு ஒரு முன் மாதிரியாகக் கொண்டனர். அதனாற்றான் சில வகையான உருவங்களே மீண்டும் மீண்டும் செய்யப்பட்டன. தனிப்பட்ட மனிதர்களின் உருவங்களை அப்படியே செதுக்குவதில் அவர்கள் அதிகம் அக்கறை காட்ட

வில்லை. எனவே, கிரேக்கக் கலை இயற்கையானது (Naturalistic) என்று கூறுவது பொருந்தாததாகும். ஆனால், அதை மனிதச் சார்புடையது (Humanistic) என்று துணிந்து கூறலாம். ஏனெனில், அவர்தம் கலைப்பொருள்கள் யாவும் இப்பூவுலகில் மனிதனுடைய சிறப்பைத்தான் பெரிதும் பறைசாற்றுகின்றன. அவர்கள் வடித்துள்ள தெய்வங்களின் உருவங்களில்கூட நாம் மனிதர்களின் சாயையையே காண்கின்றோம். மனிதரின் உணர்ச்சி களான கோபம், தாபம், காமம், பொறாமை போன்ற உணர்ச்சிகள் தாம் அவ்வுருவங்களில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. அறிவுக்கு அப்பாற்பட்ட உருவங்களையும், உணர்ச்சிகளையும், பரலோக சம்பந்தமான காட்சிகளையும், அவர்களது ஓவியங்களிலும் சிற்பங் களிலும் காண இயலாது. மனிதரின் நல்வாழ்வே அவர்களின் கலை யில் சித்திரிக்கப்படுகின்றன. கலை கலைக்காகவே என்பதன்றிக் கலை மனிதனின் நல்வாழ்வுக்காகவே என்ற கொள்கையை கிரேக்கர்கள் கடைப்பிடித்தனர். மற்றும் தங்களது தேசிய வாழ்வின் சின்ன மாகவும் அவர்கள் கலையைக் கருதினர். தாங்கள் வாழும் நகரத்தைப் பற்றிப் பெருமைப்படவும், அதன் மாண்பினை மற்றவர் உணரவும் விரும்பியே அவர்கள் தங்களது நகரங்களில் வியக்கத் தக்க கட்டடங்களைக் கட்டினர். ஆதென்ஸில் அவர்களால் கட்டப் பட்ட அத்தீனா தேவதையின் கோயிலானது அன்னாரின் கூட்டு வாழ்க்கைச் சிறப்பின் சின்னமாகவும், நகரின்மீது அவர்கள் கொண்டிருக்கும் பற்றுக்கும் நம்பிக்கைக்கும் ஓர் எடுத்துக் காட் டாகவும் திகழ்ந்ததே அன்றி வேறன்று. இங்ஙனம் கிரேக்கக் கலை யில் நாம் அழகுணர்ச்சியை மட்டுமின்றி, அரசியல் உணர்வையும், அற மனப்பான்மையையும் ஒருங்கே காண்கிறோம்.

கிரேக்கர்களின் கலை அபூர்வமானது. அது அவர்களது சுற்றுப்புறங்களால் பெரிதும் தூண்டப்பட்டது எனின் மிகை யாகாது. கிரேக்க நாடே இயற்கை எழில் கொஞ்சும் பூஞ்சோலை யாகக் காட்சியளித்தது. குளிரும், வெயிலும் கூட அங்கு அளவுக்கு மீறாமல் சமநிலையில் இருந்து வந்தன. மலைகளும், தீவுகளும்கூட அளவுக்கு மீறிப் பெரியனவாக இல்லை. அதேபோல் வானிலை கிரீஸ் எங்கும்—சிறப்பாக அட்டிகாவில் தெளிவாக இருக்கும். எனவே, பொருள்கள் துல்லியமாகத் தெரியும். அட்டிகாவின் வானிலை தெளி வாகக் காட்சி அளிக்கும் குன்றுகளின் அமைப்பை ஒத்தே ஆதென்ஸின் பார்த்தனன் கோயிலும் திட்டவட்டமாக அமைக்கப் பட்டுள்ளதெனலாம். மற்றும் கிரீஸின் பல பாகங்கள் கடலுக்கு அருகில் இருப்பது அதன் வனப்பை இன்னும் அதிகமாக்கிக் காட்டு கிறது. நீலத்திரைக் கடல் ஓரத்திலே, தெள்ளிய அலைகள் துள்ளி விளையாட, அடுத்துள்ள மலைச்சரிவுகளில் பச்சைக் கம்பளம் விரித்

தாற்போல் புல்வெளிகள் படர்ந்திருப்பது கண்கொள்ளாக் காட்சியா யிருக்கும். எங்கும் வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கும் மரகத மலையில் தங்கம் பூப்பது போல் ஆரஞ்சுகள் பளபளக்கும். இப்படிப் பட்ட இயற்கை அழகோடு விளங்கும் ஒரு நாட்டில் மக்கள் அழகு விரும்பிகளாயிருந்ததில் வியப்பொன்றுமில்லை. அவர்கள் தமது அழகுப் பொருள்களை ஆக்குவதற்கேற்ற பளிங்குக் கற்கள் கிரீஸில் ஏராளமாகக் கிடைத்ததானது அவர்களின் கலையுணர்விற்குப் பெரியதோர் தூண்டுகோலாயமைந்தது.

கிரேக்கர்களின் கலை வரலாற்றில் மூன்று கட்டங்களை நாம் காணலாம். முதற்கட்டத்தில் அது பெரிதும் எகிப்தியக் கலையையே ஒத்திருந்தது. எகிப்தியச் சிலைகளில் காணப்படுவது போன்று விறைப்பான உடல், சதுரமான தோள்பட்டைகள், சற்று முன் வைக்கப்பட்ட ஒரு கால் இவற்றை நாம் கிரீஸிலும் காண்கிறோம். பெரிய பாறுங்கற்கள் சரியாகச் செதுக்கப்படாமல் கட்டடங்களில் முதலில் பயன்படுத்தப்படுவதையும், நாளடைவில் நன்கு செங்கல் போல் செதுக்கப்பட்ட கற்கள் பயன்படுத்தப்படுவதையும் காண்கி றோம். கி.மு. ஏழாம், ஆறும் நூற்றுண்டில் இத்தகைய முறையை கிரேக்கர்கள் கையாண்டனர். மைசீனியாட்ரின்ஸ் போன்ற பழங் காலக் கட்டடங்களும், சிற்பங்களும் இவ்வகையைச் சார்ந்தனவே. இரண்டாவது கட்டத்தில் (கி.மு. 5ஆம் நூற்றுண்டு) கட்டடக் கலை யும் சிற்பக் கலையும் நன்கு செம்மையடைகின்றன. உயர்ந்த குறிக் கோளை அவை அடிப்படையாகக் கொண்டுள்ளன. மூன்றுவது கட்டத்தில் (கி.மு. நான்காம் நூற்றுண்டு) கலையில் பல மாறுதல் களைத் தனிப்பட்ட மனிதர்கள் புகுத்தி விடுகின்றனர்; கலையும், அரசியல் உணர்வும், கூட்டு முயற்சியும் அருகிவிடுகின்றன. ஓரளவு இழிநிலையைக் கிரேக்கக் கலை அடைந்துவிட்ட காலம் இது வெனலாம்.

*கட்டடக் கலை*

கி.மு. ஆறும் நூற்றுண்டின் இறுதிக்குள் கிரேக்கக் கட்டடக் கலையில் சிறந்த முன்னேற்றம் ஏற்பட்டது. டோரியம், கொரிந்தியம், அயோனியம் என்ற மூன்று கட்டட முறைகள் தோன்றின. கட்டடத் தூண்களின் உச்சியில் காணப்பட்ட வேலைப்பாடுகளுக்கேற்ப இவை வெவ்வேருகக் கருதப்பட்டன. டோரியக் கட்டடங்களில் தூண்கள் கனமாகவும், எளிமையாகவும் காணப்பட்டன. அடிப்பகுதி என்று தனியே அவைகளுக்கில்லை. தூணின் தலைப்பகுதி சாதாரணமாகவும் எளிமையானதாகவும் செய்யப்பட்டிருந்தன. ஆனல், அயோனியக் கட்டடத் தூண்கள் ஒல்லியாகவும் அழகாகவும் செதுக்கப்பட்டிருந்தன. அவற்றின்

உச்சிப் பகுதிகளில் இருமருங்கிலும் செம்மறியாட்டுக் கொம்புபோல் சுருள்சுருளான வேலைப்பாடுகளும், நன்கு மெருகிடப்பட்ட மடிப்பு களும் காணப்பட்டன. இம்முறையை அசீரியர்களிடமிருந்து கற்றுக்கொண்ட அயோனியர்கள் இதைத் தம் கட்டடங்களில் கடைப்பிடித்தனர். கொரிந்தியக் கட்டடங்களில் இருந்த தூண் களின் உச்சிகள் மணி வடிவத்தில் (Bell shaped) மிகவும் அலங்கார மாய்ச் செதுக்கப்பட்டிருந்தன. அகாந்தஸ் (Acanthus) செடியின் இலைகளைப் போன்ற உருவங்கள் அவற்றில் பொறிக்கப்பட்டிருந்தன. காலிமாக்கஸ் (Callimachus) என்ற சிற்பி, தற்செயலாக அகாந்தஸ் செடிகளிடையே விழுந்துவிட்ட ஒரு கூடையின் அழகைப் பார்த்து இம்முறையைக் கண்டுபிடித்தார் என்பர். அலெக்ஸாந்தரது காலத்தில்தான் இத்தகைய கட்டடக்கலை முதன்முதல் நடை முறைக்கு வந்தது.

கிரேக்கர்களது கோயில்களில்தான் அவர்களது கட்டடக் கலை யின் சிறப்பை நாம் நன்கு காண்கின்றோம். கோயில்கள் முதலில் மரத்தாலும், பின்னர் கல்லாலும் கட்டப்பட்டன. தெய்வத்தின் சிலை வைக்கப்படும் கருவறை கோயிலின் முக்கியப் பகுதியாகும். நாற்சதுர வடிவில் அது அமைக்கப்பட்டிருந்தது. கருவறைக்குச் செல்லும் தாழ்வாரம் கட்டடத்தின் இரண்டாவது பகுதியாகும். இப் பகுதியில்தான் ஏராளமான தூண்கள் அமைக்கப்பட்டிருந்தன. அத்தூண்களின் மீது வாசற்படி உத்திரங்களும், அவற்றின் மீது கூரைகளும் நிறுவப்பெற்றன. கூரைகள் வெளியே பெரிதும் நீட்டிக் கொண்டிருந்தன. அவற்றைத் தாங்கத் தூண்கள் சுற்றி லும் அமைக்கப்பட்டிருந்தன. சாதாரணமாக டோரிக் முறை யிலேயே கோயில்கள் கட்டப்பட்டன. ஆதென்ஸில் கட்டப்பட்ட பார்த்தனன்(Parthenon) என்ற கோயில் இவ்வகையைச் சேர்ந்ததே யாகும். அதன் தூண்கள் வெண்மையான பளிங்குக் கற்களால் ஆனவை. இக்காலத்து அழிந்துபோன நிலையில் இருக்கும் இத் தூண்களும் கட்டடமும் இன்றும் கண்கவர் வனப்புடன் விளங்கு கின்றன. பார்வைக்கு நேராகத் தோன்றும் தூண்களின் வரிசை யில் உற்றுப் பார்த்தால் ஒரு சில நுட்பமான வளைவுகளும் காணப் படுகின்றன. சிமென்ட் போன்ற பொருள் எதையும் பயன்படுத்தா மல் ஒரு கல் இன்னொரு கல்லோடு பொருத்தப்பட்டுள்ள நேர்த்தி விந்தையானது. ஓர் ஊசியைக் கூட அவற்றின் இடைவெளியில் புகுத்த முடியாதபடி அவ்வளவு நெருக்கமாக அவை இணைக்கப் பட்டுள்ளன. எபிசஸ் (Ephesus) நகரில் கி.மு. ஆறும் நூற்றுண்டில் ஆர்ட்டிமிஸ் (Artemis) என்ற தெய்வத்துக்குக் கட்டப்பட்ட பிரம் மாண்டமான கோயில் அயோனிய முறையில் கட்டப்பட்ட அரிய கட்டடமாகும். உலகின் ஏழு அதிசயங்களில் அது ஒன்ருகக்

கருதப்படுகிறது. குறுக்கு வழியில் புகழ்பெற விரும்பிய கயவன் ஒருவன் அதை ஒரு சமயம் கொளுத்திவிட்டான். ஆனால், மீண்டும் அது புதுப்பிக்கப்பட்டது. அலெக்ஸாந்தர்கூட மேலும் அதைச் சிறப்பிக்க விரும்பினார். ஆனால், அவரது பெயரை அங்குப் பொறிக்க மக்கள் ஒப்புக்கொள்ளாததால் வாளாயிருந்துவிட்டார். கிரீஸின் பல பகுதிகளிலிருந்து பரிசுப் பொருள்களும், உபயங்களும் இக்கோயிலுக்கு வந்து குவிந்தன. சிற்பிகளும் அதில் தங்கள் கை வண்ணத்தை இனமாகக் காட்டினர். தேசியக் கலைக்கூடமாகத் திகழ்ந்த அதனை ரோமானியர்களும், காத்துகளும் பிற்காலத்தில் சூறையாடினர். எபிசஸில் டயானா எனும் தெய்வத்திற்கு எடுக்கப்பட்ட கோயில் 126 மீட்டர் நீளமும் 66 மீட்டர் அகலமும் கொண்டது. டெல்ஃபியில் அபோலோ தெய்வத்துக்குக் கட்டப்பட்ட கோயிலும் சிறப்பு வாய்ந்தது. இது டோரிய முறையில் கட்டப்பட்டது. வருங்காலத்தை அறிந்துகொள்ளக் குறி கேட்க வந்த அரசர்களும் மக்களும் அங்கு நிறையச் செர்த்தைச் சேர்த்தனர். நீரோ, கான்ஸ்டான்டைன் போன்ற ரோமானிய மன்னர்கள் நூற்றுக்கணக்கான சிலைகளையும், பொன்னையும், பொருளையும் இதிலிருந்து கவர்ந்து சென்றனர். ஒலிம்பஸ் மலையடிவாரத்தில் ஜியூஸ் கடவுளுக்காக டோரிய முறையில் எடுக்கப்பட்ட கோயில்கள் பல. அவை யாவும் இரண்டாம் தியோடோஸியஸ் (Theodosius II) எனும் கிறித்துவ மன்னரது ஆணையால் இடிக்கப்பட்டன. அவற்றின் அழிபாடுகளில் இருந்துதான் சிப்செலஸ் (Cypselus) என்பாருக்குச் சொந்தமான அழகிய சித்திர வேலைப்பாட்டுடன் கூடிய பெட்டியும், பிராக்சைடிலிஸ் (Praxiteles) என்பாரின் உருவச்சிலையும் கிடைத்துள்ளன. காரியாவின் (Caria) மன்னரான மாசோலஸ் (Mausolus) என்பார் இறந்தபோது (கி.மு.352) அவரது நினைவுச் சின்னமான ஆர்ட்டிமீஸியா (Artemisia) எனும் அவரது இராணியால் ஹாலிகார்னஸஸ் (Halli-carnessus) நகரில் கட்டப்பட்ட கல்லறைமாடம் (Mausoleum) எனும் கட்டடம் கிரேக்கரின் மற்றோர் அழகுப் படைப்பாகும். ஹுமாயூனின் நினைவுச் சின்னமாக அவரது இராணி ஹமீதா பானு பீஹம் கட்டிய கல்லறைமாடமும் மிகவும் புகழ் வாய்ந்தது. உலக அதிசயங்கள் ஏழனுள் ஒன்றாக அது கருதப்படுகிறது. அழகு கொழிக்கும் சிலைகள் அங்கு நிறைந்திருந்தன. பளிங்குக் கல்லாலான இரதத்தில் இருந்த மாசோலஸின் சிலை, ஏனைய சிலைகட்கு முத்தாய்ப்பு வைத்தாற்போல இருந்தது. இக்கட்டடத்தின் அழகு காரணமாகவே மாசோலியம் என்ற பெயர் சிறந்த நினைவுச் சின்னங்களைக் குறிக்கும் பொதுப் பெயராக உலகில் இன்று கையாளப்படுகின்றது. சாமோஸ் தீவிலுள்ள ஜீனோ தெய்வத்தின் கோயில் 105 மீட்டர் நீளமும் 57 மீட்டர் அகலமும் கொண்ட அரிய கலைக் கட்டடமாகும்.

கிரேக்கரின் நாடக அரங்குகளும் அவர்தம் கட்டடக் கலையின் மாண்பை நன்கு புலப்படுத்துகின்றனவாகும். அரை நிலா வடிவத்தில் அமைக்கப்பட்ட இருக்கைகள் நாடகத்தைப் பார்ப்பவர்களுக்காக அமைக்கப்பட்டிருந்தன. அவற்றின் இறுதியில் இருந்த இருக்கைகளுக்கிடையில் பக்க வாத்தியக்காரர்களுக்கு ஒரு மேடையும், நடிப்பவர்களுக்கு ஒரு மேடையும் அமைக்கப்பட்டிருந்தன. ஆதென்ஸில் அகழ்ந்து கண்டுபிடிக்கப்பட்டுள்ள டயோனிஷியஸின் நாடக மேடையில் நூறு வரிசை இருக்கைகள் இருந்தன. கடைப் பகுதி வரிசையில் மட்டும் அறுபத்தேழு பளிங்கு நாற்காலிகள் இருந்தன. ஏறக்குறைய முப்பதாயிரம் பேர் ஒரே சமயத்தில் அமர்ந்து நாடகம் பார்க்கத்தக்க வகையில் அரங்கம் அமைக்கப்பட்டது. முன்னுலிருப்பவர்கள் பின்னுலிருப்பவர்களை மறைக்காமல் இருக்கவேண்டி இருக்கைகள் யாவும் மலைச்சரிவு போல் படிப்படியாய் அமைக்கப்பட்டிருந்தன.

**சிற்பம்**

கட்டடக் கலையைப் போலவே அவர்களின் சிற்பக் கலையும் ஆரம்பத்தில் சமயச் சார்பு கொண்டதாகவே திகழ்ந்தது. நாளடைவில் மனிதச் சிலைகளும் வடிக்கப்பட்டன. நாம் முன்னமே குறிப்பிட்டது போன்று தெய்வச் சிலைகளில்கூட மனிதச் சாயையே தென்படுகிறது. முதலில் மரத்தாலும், பின்னர் வெண்கலம், பளிங்குக்கல் ஆகியவைகளாலும் சிலைகள் வடிக்கப்பட்டன. தெய்வச் சிலைகள் பெரும்பாலும் ஒரு சில மரபுகட்குக் கட்டுப்பட்டே செய்யப்பட்டன. ஆனால், ஒலிம்பிக் விளையாட்டுகளில் வெற்றி பெற்றோரின் நினைவாக மனிதச் சிலைகள் செய்யப்படும் வழக்கம் நாளடைவில் ஏற்பட்ட பின்னர், கட்டுப்பாடற்ற முறையிலும், இயற்கையோடியைந்த முறையிலும் சிலைகள் வடிக்கப்பட்டன. நன்கு உருண்டு திரண்ட முழு வளர்ச்சி பெற்றுள்ள உறுப்புகளைக் கொண்ட ஆணழகர்கள் அத்தகைய சிலைகளில் சித்திரிக்கப்பட்டனர். அவற்றில் அழகும், நெளிவு சுளிவும் பெரிதும் நடம் புரிந்தன. உடல் பயிற்சியால் நன்கு பண்பட்ட உடல் உருவங்கள், விளையாட்டுப் பந்தயங்களில் ஈடுபடும் நிலையில் எப்படி இருக்குமோ, அப்படியே அவற்றைக் கண்டு ரசித்த சிற்பிகள் அவைகளை ஆக்கித் தந்துள்ளனர்.

கி.மு. ஐந்தாம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் கிரேக்கச் சிற்பம் தனது உச்சநிலையை அடைந்தது. மிரான் (Myron) என்ற சிற்பி, வெண்கலத்தாலாய அழகுச் சிலைகள் பலவற்றைச் செய்தார். கேடயம் எறியும் ஒரு பந்தய ஆட்டக்காரரின் சிலை அவரது படைப்புகளில் தலைசிறந்தது. நன்கு பக்குவப்பட்ட ஓர் உடலின்

தசைகளும், நரம்புகளும் சுறுசுறுப்பாகச் செயல்படும்போது உண்டாகும் அழகை அவர் தமது சிலைகளில் வடித்து வைத்துள்ளார். சிற்பிகள் சிங்கம் எனத்தக்க பீடியாஸ் (Phidias), பெரிக்ளீஸின் காலத்தில் வாழ்ந்தவர்; அவரது ஆதரவின் கீழ் அத்தீனு தெய்வத்துக்குக் கோயிலெடுத்தவர். அவர் செய்த அத்தீனுவின் சிலை 12 மீட்டர் உயரமுடையது. அதன் தலைமுடி, உடைகள், படைக்கலன்கள் யாவும் தங்கத்தால் ஆனவை. மற்றப் பாகங்கள் தந்தத்தாலானவை. ஒரு கையில் அழகிய வேலைப்பாடு நிறைந்த கேடயத்தையும், மற்றொரு கையில் வெற்றியின் உருவமான எழில் மிக்க பளிங்குச் சிலையையும் அத்தெய்வம் ஏந்தி நின்றது. ஒலிம்பியாவில் பீடியாஸால் எடுக்கப்பட்ட ஜியூஸ் தெய்வத்தின் சிலை 18 மீட்டர் உயரமுடையது; தங்கத்தாலும் தந்தத்தாலும் செய்யப்பட்டது. அதன் கண்களில் ஒளிமிக்க கற்கள் பதிக்கப் பெற்றிருந்தன. விலையுயர்ந்த கற்கள் அதன் அரியணையில் அமைக்கப் பெற்றிருந்தன. ‘தயையும், கருணையும் தெய்வத்தின் முகத்தில் வழிந்தன’ என அதைப் பார்த்தவர்கள் கூறியுள்ளனர். கி.பி. 5ஆம் நூற்றாண்டில் கான்ஸ்டன்டைன் மன்னர் அதை எடுத்துச் சென்று தீக்கிரையாக்கிவிட்டார். வெண்கலத்திலும், பளிங்குக் கல்லிலும் பல சிலைகளை உருவாக்கினார் பீடியாஸ். ஆனால், தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட கோயில் சொத்தைக் கையாடல் செய்ததாக அவரது எதிரிகள் அவர்மீது குற்றம் சாட்டிச் சிறையிலடைத்தனர். சிறையிலேயே அவர் உயிர் துறந்தார் (கி.மு. 432). ஆர்காஸ் நகரில் வாழ்ந்த பாலிக்லீட்டஸ் (Polycleitus) என்பார், பந்தய ஆட்டக்காரர் பலரது அழகிய உருவச் சிலைகளை வெண்கலத்தில் செய்துள்ளார். அவர் செய்த ஓர் ஈட்டியெறியும் பயில்வானது சிலை உலகப் புகழ் வாய்ந்தது. ஆர்காஸ் நகரத் தெய்வமான ஹீராவின் (Hera) சிலை அவரது மிகச் சிறந்த படைப்பாகும். பெயோனியஸ் (Paeonius) என்பாரால் உருவாக்கப்பெற்றுள்ள நைக் (Nike) எனும் வெற்றித் தெய்வத்தின் சிலையானது அழகு சொட்டும் தன்மையது ஆகும்.

பெலப்பொனீஷியப் போரில் ஸ்பார்டர்கள் ஒருசமயம் தோல்வியுற்றபோது மெஸ்ஸனீயர்கள் எனும் அவர்களது எதிரிகள் இச்சிலையை வைத்தார்கள் என்பர். ஹாலிகார்னசஸ் நகரத்து மாசோலியத்தில் காணப்படும் அருமையான சிலைகளைச் செய்தவர் ஸ்கோபஸ் (Scopas) (கி.மு. 395-350) எனும் சிற்பியாவார். டீஜியா நகரின் அத்தீனு சிலையை உருவாக்கியவரும் அவரே. பிராக்ஸிடிலெஸ் (Praxitelus) (கி.மு. 360-340) என்ற சிற்பிகள் திலகம், நீடஸ் (Cnidus) நகரில் உள்ள காம தேவதையான அப்ரோடைட்டின் (Aphrodite) சிலையைச் செதுக்கியவர். அழகு

தேவதையின் முழு உருவமாக அதை எண்ணி கிரேக்கர்கள் போற்றினர். அழகில் ஈடு இணையற்ற அச்சிலையைக் காண நெடுந் தொலைவிலிருந்தெல்லாம் மக்கள் யாத்திரைக்கு அங்கு வந்தனர். ஒலிம்பியாவில் உள்ள ஹெர்மிஸ் (Hermes) சிலை அவரது அற்புதப் படைப்புகளில் ஒன்றாகும். ஹெர்மிஸ் தமது கையில் டயோனிஷியஸ் (Dionysius) என்ற குழந்தையை வைத்துக்கொண்டுள்ளது போல் சித்திரிக்கப்பட்டுள்ளது அதன் சிறப்பை மேம்படுத்துகிறது. ஒரு சிறந்த ஆணழகனுடைய திட்டமான ஒல்லியான ஒயில் நிறைந்த உருவத்தையும், அமைதி நிறைந்த முகத்தையும் அவர் தமது கடவுள் சிலையில் அமைத்துள்ளார். சிகியான் (Sicyon) நகரைச் சேர்ந்த லிசிப்பஸ் (Lysippus) என்பார், வெண்கலத்தால் தத்ரூப மான சிலைகளைச் செய்வதில் வல்லவராயிருந்தார். 1500 சிலைகளை அவர் செய்து நாடெங்கும் அனுப்பினார் எனக் கிரேக்கர்கள் கூறுவர். அலெக்ஸாந்தர் தமது உருவச் சிலைகளை இவரைக் கொண்டே செதுக்கச் செய்தார். ஆசியா மைனரிலிருந்த பெர்காமஸ் (Pergamus) தீவில் சிற்பக்கலை நன்கு பேணி வளர்க்கப்பட்டது. ஜியூஸுக்காகக் கட்டப்பட்ட வெற்றி மேடையில் பல உன்னதச் சிற்பங்கள் காணப்படுகின்றன. ரோட்ஸ் தீவின்கண் வாழ்ந்த காரஸ் (Chares) என்ற சிற்பியே உலக அதிசயங்களுள் ஒன்றான கலாசஸ் (Colassus) சிலையைச் செய்தவர் (கி.மு. 200). லாகூன் (Lacoon) என்ற அவரது சிலைத் தொகுதியில் வலியால் வதங்கும் மாந்தரின் முக பாவங்கள் தத்ரூபமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன.

**ஓவியம்**

சிற்பத்தில் காட்டிய அளவுக்கு ஓவியக் கலையில் கிரேக்கர்கள் தங்கள் திறமையைப் புலப்படுத்தவில்லை. ஏனெனில், சிற்பங்களைப் போல் ஓவியங்களை அவர்கள் வணங்கவில்லை. வண்ணந் தீட்டப் பட்ட ஒரு சில மட்பாண்டங்கள் இவற்றைக் கொண்டே நாம் கிரேக்க ஓவியத்தைப்பற்றி அறிய முடிகிறது. ஏனையவை எல்லாம் அழிந்துபோய்விட்டன. ஆனால், ஓவியர்களைப்பற்றி இலக்கியங் களில் வரும் செய்திகளைக் கொண்டு அக்கால ஓவியச் சிறப்பை நாம் நன்கு உணரலாம். பாலினோட்டஸ் (Polygnotus) என்ற சிறந்த ஓவியர்தான் (கி.மு. 475—455) முதலில் அகத்தே நிகழ்ந்த உணர்ச்சிகளை முகத்தே வெளிப்படுத்தியவர். ட்ராய் நகர இளவரசியான பாலிக்சீனாவின் (Polyxena) படத்தில் அவர் தேக்கி வைத்துள்ள அழகும், துன்ப உணர்வும், ட்ரோஜன் போரை அப்படியே விளக்குவனவாயமைந்துள்ளன என்பர் கலாரசிகர்கள். ஆதென்ஸ் நகரப் பொதுக் கட்டடங்களில் உலகம் காணாத அரிய சுவரோவியங்களைத் தீட்டியவர் அவரே. மாரத்தான் போர் நிகழ்ச்சிகளையும் அவர் அங்கே வரைந்தார். டெல்ஃபி

கோயிற்சுவர்களில், ஓடிஸியஸ் (Odysseus) நகரத்திலிறங்கும் காட்சியை அவர் சித்திரித்துள்ளார். கி.மு. 5ஆம் நூற்றுண்டில் ஸீக்ஸிஸ் (Zeuxis), பர்ராசியஸ் (Parrahasius) என்ற இரு ஒப்பற்ற ஓவியர்கள் வாழ்ந்தனர். அவர்களிருவரில் யார் சிறந்தவரென்பது பற்றிய கதையொன்றைக் கிரேக்கர்கள் கூறுவர். அதன்படி இவ் விருவரும் தம்முள் போட்டி போட்டுக்கொண்டு இரு ஓவியங்களை வரைந்தனர். ஸீக்ஸிஸ், திராட்சைப்பழக் கொத்து ஒன்றை வரைந்து அதை வெளியே வைத்தபோது, அவற்றை உண்மைப் பழங்கள் என்று எண்ணிப் பறவைகள் வந்து கொத்திற்றும். அத்தனை தத்ரூபமாக ஓவியத்தை வரைந்த தாமே சிறந்தவர் என ஸீக்ஸிஸ் அறிவித்துவிட்டுப் பர்ராசியஸின் ஓவியத்தைக் காட்டு மாறு கேட்டாராம். 'அதோ அங்கு தெரியும் திரைச்சீலையை நீக்கிவிட்டுப் பார், உள்ளே இருக்கிறது' என்று பர்ராசியஸ் கூறினாராம். அதன்படி ஸீக்ஸிஸ் சென்று திரையை நீக்க முயன்றார். அப்போதுதான் அது உண்மைத் திரையன்று, 'ஓவியத் திரை' என உணர்ந்தார். தமது தோல்வியை ஒப்புக்கொண்ட அவர் 'நான் எனது ஓவியத்தால் பறவைகளைத்தான் ஏமாற் றினேன். ஆனால், நீயோ அனுபவம் வாய்ந்த இன்னோர் ஓவியனையே நின் ஓவியத்தால் ஏமாற்றி விட்டாய்' எனப் புகன்றாராம். அலெக்ஸாந்தரின் அரண்மனை ஓவியரான அபெல்லஸ் (Apelles) என்பார் பண்டைக்கால ராப்பேல் (Raphael) என அழைக்கப்படுபவர். கடலின் அலைகளிலிருந்து எழுவதேபோல் அப்ரோடைட் (Aphrodite) எனும் தெய்வத்தை அவர் வரைந் துள்ள ஓவியம் ஒப்பற்ற வனப்பு வாய்ந்தது. அவரது கேசத்தி லிருந்து உதிரும் தண்ணீர்த் திவலைகளால் சற்றே மறைந்தாற் போற் காணப்படும் அக் காமதேவதையின் அங்க அழகுகள் உள்ளத்தை ஈர்க்கும் தன்மையினவாய் அமைந்துள்ளன. அவரால் வரையப்பட்ட குதிரைகளைக் கண்டு உண்மைக் குதிரைகள் கனைத்தன என்றோர் கதை உண்டு. அவர் வரைந்த ஓர் உருவத்தில் காணப்பட்ட செருப்பின் அமைப்புச் சரியில்லை என ஒரு மிதியடி செய்யும் தொழிலாளி கூறியபோது அவர் அவன் சொற்படி சரி செய்தார் என்றும், ஆனால் அதே தொழிலாளி, தாம் வரைந்த உருவத்தின் காலமைப்பைப் பற்றிக் குறை கூறியபோது, 'அப்பனே! செருப்போடு உன் பேச்சை நிறுத்திக்கொள்' என்று சொல்லித் துரத்திவிட்டார் என்றும் இன்னொரு கதையும் உண்டு. அப்பெல்லாஸின் கைகளில் கிரேக்க ஓவியம் தனது உச்ச நிலையை எய்தியது. கிரேக்கர் தங்கள் வீட்டுச் சுவர்களிலும், மரத்தாலும், பளிங்காலும் கண்கவர் ஓவியங்களை வரைந்து இன்பம் நுகர்ந் தனர். ஆடைகளிலும் அணிகலன்களிலும் நேர்த்தியான சித்திர வேலைப்பாடுகள் செய்யப்பட்டன.

### இசை

பண்டைய கிரேக்கர்கள் இசையிலும் வல்லுநராயிருந்தனர். யாழ் போன்ற நரம்புக் கருவியையும், ஒற்றைக் குழல், இரட்டைக் குழல் போன்ற துளைக் கருவிகளையும் அவர்கள் பயன்படுத்தினர். தேசியத் திருவிழாக்களில் இசைப் போட்டியையும் அவர்கள் நடத்திப் பரிசு வழங்கினர். ஈலியட், ஓடிசி போன்ற இதிகாசங்களையும் பாட்டாகவே பாடி மக்களை மகிழ்விப்போர் பலர் இருந்தனர். நாளடைவில் இங்ஙனம் பாடியோர் முகமூடி அணிந்துகொண்டு நடித்துக் காட்டவும் ஆரம்பித்தனர். பலபேர் சேர்ந்து, ஒரு சிலர் பாட, ஒரு சிலர் நடிக்க ஆரம்பித்தனர். அநேகமாக ஓர் அரண்மனை அல்லது கோயிலைச் சித்திரிக்கும் திரைச்சீலையின் பின்னணியிலேயே நாடகங்கள் நடத்தப்பட்டன. திறந்த வெளியிலேயே நாடகங்கள் நடந்தன. நடிகர்கள் நீண்ட பேச்சுக்களை மனப்பாடம் செய்துகொண்டு பேசினர். இடையில் பின்னணிப் பாடல்களும் பாடப்பெற்றன. முகமூடி அணிந்து கொண்டதால் நடிகர்கள் உணர்ச்சிகளை வெளிக்காட்ட முடியவில்லை. சொற்கள் மூலமாகவே உணர்ச்சிகளை அன்னார் வெளிப்படுத்தினர். மலைச்சரிவுபோல் அமைக்கப்பட்ட இருக்கைகளிலிருந்து நாடகத்தை மக்கள் பார்த்தனர். இன்பியல் நாடகங்களைவிடத் துன்பியல் நாடகங்களையே அவர்கள் பெரிதும் ரசித்தனர். பிடிக்காத நடிகர்களை அவர்கள் கல்லெறிந்தும் கூச்சலிட்டும் மேடையை விட்டுத் துரத்தினர்.

நூல்கள் எழுதுவதையும் கிரேக்கர்கள் ஒரு கலையாகக் கொண்டனர். பேப்பிரஸ் (Papyrus) என்ற எகிப்தியச் செடியினின்றும் செய்யப்பட்ட தாள்களில் எழுதி அவற்றை நீட்டுவாக்கில் ஒட்டி அதை ஒரு கழியில் சுருட்டி வைத்துக்கொள்வர். அந்நூலின் பெயர் ஒரு சீட்டில் எழுதிக் கழி முனையில் தொங்கவிடப்படும். மரப்பட்டைகளில் எழுதி அவற்றை அடுக்கி வைத்துக் கொள்ளுவதும் உண்டு. கூர் சீவப்பட்ட குச்சியைக் கொண்டு சிவப்பு, கறுப்பு மைகளில் தோய்த்து அவர்கள் எழுதினர். அரசாங்க அறிக்கைகள் மெழுகு பூசப்பட்ட பலகைகளில் எழுத்தாணிகளால் எழுதப்பட்டன. பெரிய நகரங்களில் எல்லாம் பல்லாயிரம் நூல்களைக் கொண்ட நூல் நிலையங்கள் இருந்தன.

### இலக்கியம்

ஒரு நாட்டின் நாகரிகத்தை உள்ளபடி படம் பிடித்துக் காட்டுபவை அங்குக் காணப்படும் இலக்கியங்களே அன்றி வேறல்ல. இலக்கியத் துறையில் கிரேக்கர்கள் சிறந்த முன்னேற்றம் எய்தியிருந்தனர். பண்டைய கிரேக்க இலக்கியங்களின் அருமை

பெருமைகள் இன்றும் உலகோரால் பாராட்டப்பெறுகின்றன. தாங்கள் படைத்த கோயில்களிலும், சிலைகளிலும் அழகினைப் பெய்து வைத்திருப்பது போன்றே இலக்கியத்திலும் அவர்கள் அழகை ஊட்டி வைத்துள்ளனர். அவர்களது புராணங்களிலும், இதிகாசங்களிலும், அரசியல் பேருரைகளிலும், நாடகங்களிலும், வரலாறுகளிலும் ஒருவிதச் சீர்மையும், ஓர்மையும், தெளிவும், திட்டமும் ஏனைய கலைகளில் காணப்படுவது போன்றே வெளிப்படுகின்றன. அவர்களது தத்துவங்கள், சரித்திரங்கள்கூட இலக்கியங்கள் போலவே காட்சியளிக்கின்றன. கிரேக்க இலக்கியங்களைக் கி.மு. 475-க்கு முற்பட்ட கால இலக்கியம், பொற்கால இலக்கியம் (கி.மு. 475-300), அலெக்சாந்தரின் கால இலக்கியம் (கி.மு. 300-146) என மூன்று பாகமாகப் பிரிக்கலாம். முதற் பகுதியில் இதிகாச இலக்கியமும், பாட்டுடைச் செய்யுளும் (Lyric Poetry) வளர்ந்தன. பொற்காலத்தே வரலாறு, பேச்சுக்கலை, நாடகம் முதலியவை வளர்ச்சியுற்றன. கடைக்காலத்தில் இலக்கியம் சற்றே நலிவடைவதைக் காண்கின்றோம். புதுமை எதுவுமின்றிப் பழையவற்றையே திருப்பி விளக்கமான முறையில் எழுதுவதையே மக்கள் இக்காலத்துத் தொழிலாகக் கொண்டனர்.

நாம் ஏற்கெனவே பார்த்தபடி ஈலியட், ஓடிசி என்ற ஹோமரது இதிகாச காவியங்களே கிரேக்கரின் மிகப் பழைய இலக்கியங்களாகும். அக்கீலஸ், ஓடிஸியஸ் ஆகிய வீரர்களின் கதையை விளக்கும் அக்காவியங்கள் இலக்கிய நயம் செறிந்தவை. நன்கு ஒன்றோடொன்று பின்னப்பட்ட கதா நிகழ்ச்சிகளும் (plots), இசையோடு கூடிய செய்யுட்களும், சிந்தைக்கினிய கற்பனைகளும் நிறைந்த இவ்விதிகாசங்கள், பிற்கால இலக்கியங்களுக்கு வழிகாட்டும் ஒளி விளக்குகளாய்த் துலங்கின. கி.மு. 8ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஹெஸியாட் (Hesiod) எனும் கவிஞர் ஹோமரைப் போல் தெய்வீக மனிதர்களைப் பற்றியல்லாது சாதாரண மக்களைப் பற்றியும் பாடினார். 'வேலையும் காலமும்' (Works and Days) என்ற தமது நூலில் அவர் ஒரு விவசாயி எந்தெந்த எண்ணத்தில் என்னென்ன செய்ய வேண்டுமென்பதை விவரிக்கிறார். தியாஜனி (Theogeny) என்ற நூலில் அவர் கிரேக்கக் கடவுளர்களின் வம்சாவளியை விவரிக்கின்றார். ஹோமர் காலத்தை அடுத்த நூற்றாண்டுகளில் மக்கள் வியாபாரம், குடியேற்றம் ஆகியவைகளில் சிறந்து விளங்கினர். தனி மனிதர்கள் தம் உணர்ச்சிகளை வெளிப்படுத்திக் கையறுநிலைப் பாடல்களை உருக்கமாகப் பாடினர். காதல், வீரம், வாழ்க்கையில் ஏற்படும் ஏமாற்றம், இகழ்ச்சி இவற்றைப்பற்றிப் பல இரங்கற்பாக்கள் புனையப்பட்டன. மிம்னர்மஸ் (Mimnermus), தியோக்னிஸ் (Theognis) போன்றோர்

இத்தகைய கவிதைகளில் சிறந்தவராவர். கி.மு. 6ஆம் நூற்றுண்டில் இரங்கற் பாடல்களுக்குப் பதிலாக உணர்ச்சிமிக்க உருக்கப் பாடல்கள் (Lyric poetry) நிறையப் பாடப்பெற்றன. லேர் என்ற யாழின் இசையோடு கூடிய இப்பாடல்களில் காமம், பொருமை போன்ற பேருணர்ச்சிகள் வெளிப்படுத்தப்பட்டன. ஆல்கியஸ் (Alcaeus) என்ற ஆண்பாற் புலவரும், சாப்போ (Sappho) என்ற பெண்பாற் புலவரும் காதலின் அழகையும், வசந்த காலத்தின் இன்பத்தையும், கோடைக்கால இரவின் வனப்பையும் வருணித்து உணர்ச்சிப் பாடல்களைப் பாடினர். தனி மனிதரின் உணர்ச்சியையே அன்றிச் சமுதாயத்தின் உணர்ச்சிகளையும் ஒரு சிலர் விவரித்தனர். தீப்ஸ் நகரத்துப் பிண்டார் (Pindar) என்பார் இந்த வகையைச் சார்ந்தவராவார். தேசியத் திருவிழாக்களில் நடைபெற்ற போட்டிப் பந்தயங்களைப் பற்றி அவர் பெரிதும் பாடியுள்ளார். நல்லவர்கட்கு இன்பத்தையும், தீயவர்கட்கு துன்பத்தையும் ஜியூஸ் என்ற தெய்வம் தருவதாக அவர் நம்பினர்.

பொற்காலமெனப்படும் இடைக்காலத்தில்தான் முதன் முதலில் துன்பியல் நாடகங்கள் தோன்றின. மதுக்கடவுளான டயோனிஷியஸ் என்பாரின் பொருட்டு எடுக்கப்பட்ட விழாக்களில் நடைபெற்ற ஆடல் பாடல்களே நாளடைவில் நாடகங்களாக நடிக்கப்பட்டன. 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்ற உண்மையை (Nemesis) அடிப்படையாகக் கொண்டே துன்பியல் நாடகங்கள் புனையப்பட்டன. அத்தகைய நாடகங்களை முதன் முதலில் எழுதியவர் ஈஸ்கிலஸ் (Aeschylus) என்பவராவார் (கி.மு. 525-456). அவர் எழுதிய 80 நாடகங்களில் ஏழு மட்டுமே தற்போது கிடைத்துள்ளன. பாரசீகர்கள் (Persians) தீப்ஸுக்கு எதிராக ஏழுவர் (Seven against Thebes), புரோமோதீயூஸ் பவுண்ட் (Promotheus Bound), அரஸ்டியா போன்ற நாடகங்கள் அவர் எழுதியவைகளுள் சிறந்தவை. ஸோபோக்ளீஸ் (Sophocles) (கி.மு. 495-406) என்ற நாடகாசிரியர் நூற்றுக்கணக்கான நாடகங்களை எழுதியவர். 18 நாடகங்களில் முதற் பரிசு பெற்றவர். 'எதிலும் அளவுக்கு மீருதே' என்ற கொள்கையையே இவரது நாடகங்கள் அடிப்படையாகக் கொண்டுள்ளன. ஈடிப்பஸ் (Oedipus), ரெக்ஸ் (Rex), ஆன்டிகோன் (Antigone), எலெக்ட்ரா (Electra) ஆகியவை அவரது சிறந்த நாடகங்களாகும். யூரிபைடிஸ் (Euripides) என்ற நாடகாசிரியர் மனிதாபிமானி (Humanist). அவரது நாடகங்களில் செல்வந்தரைத் தாழ்த்தியும் ஏழைகளை உயர்த்தியுமுள்ளார். சாதாரண மக்களைப் பற்றியும், அடிமைகளைப் பற்றியும் எழுதியுள்ளார். சமுதாயத்தின் முறைகேடுகளையும், ஊழல்களையும் சாடியுள்ள அவர் மூடநம்பிக்கைகளைப் பழித்

தெழுதியுமுள்ளார். அல்ஸெஸ்டிஸ் (Alcestis), மெடியா (Medea), ட்ரோஜன் பெண்கள் என்பவை அவரது தலையாய நாடகங்களாகும். இன்பியல் நாடகங்கள் துன்பியல் நாடகங்கள் போல் அவ்வளவு சிறப்பாக இல்லை. அரிஸ்டோபேனஸ் (Aristophanes) என்பார்தாம் இன்பியல் நாடகாசிரியர்களிற் சிறந்தவராவார். மேகங்கள், வீரர்கள், பறவைகள், குழவிகள் என நான்கு வகை நாடகங்களை எழுதியுள்ளார். அவற்றில் அவர் சோப்பிஸ்டுகள் (Sophists) எனும் தத்துவ அறிஞர்களையும், ஆவேசப் பேச்சாளிகளையும், அரசியல்வாதிகளையும், நீதிபதிகளையும் கிண்டல் செய்துள்ளார்.

வரலாற்றின் தந்தை எனப் பேசப்படும் ஹெராடோடஸ் (Herodotus) என்பாரும் தூசிடைடிஸ் (Thucytidus), ஸெனோபன் (Xenophon) என்ற வரலாற்றறிஞரும் இக்காலத்தே தோன்றினர்.

பேச்சுக்கலையும் இக்காலத்தே பேணி வளர்க்கப்பட்டது. நீதிமன்றத்தில் ஒருவன் தனது வழக்குகளைத் தானே வாதாடவேண்டியிருந்தாலும், பொதுமக்களின் மன்றங்களில் நன்கு ஆணித்தரமாகப் பேசவல்லாரே தலைவர்களாக மதிக்கப்பட்டதாலும் பேச்சுக்கலையை ஒவ்வொருவரும் நன்றாகப் பயின்றனர். ஆண்டிபான் (Antiphon), லிசியாஸ் (Lysias), ஐசோக்ரா்டிஸ் (Isocrates), இசியூஸ் (Isaeus), டெமாஸ்தனிஸ் (Demosthenes) போன்றவர்கள் கிரேக்கப் பேச்சாளர்களில் தலைசிறந்தவர்களாவர்.

கடைக் காலத்தே எகிப்திலிருந்த அலெக்ஸாந்திரிய நகரமே கிரேக்க இலக்கியத்தின் மையமாயிருந்தது. புதுமைப் படைப்பு ஒன்றும் இக் காலத்தே ஏற்படவில்லை. இருக்கிற இலக்கியங்களுக்கும், இலக்கணங்களுக்கும், விரிவுரைகளும், மொழிபெயர்ப்புகளுமே இக்காலத்தே எழுதப்பட்டன. பழைய ஏற்பாடு எனும் விவிலிய நூல், ஹீப்ரு மொழியினின்று கிரேக்க மொழியில் மொழிபெயர்க்கப்பட்ட காலம் இதுவேயாம். டாலமி, மெனதோ (Menetho) என்பாரது எகிப்திய வரலாறும், தியோக்ரிடஸ் (Theocritus) என்ற கவிஞரின் நாட்டுப்புற வருணனைகளும் (Idyles) இக்காலத்தே தோன்றியவைகளுள் சிறந்தவைகளாகும். இக்காலத்தே இலக்கியத்தைவிட அறிவியலே பெரிதும் அலெக்ஸாந்திரியாவில் பேணி வளர்க்கப்பட்டது.

**தத்துவம்**

கிரேக்கர் இயல்பாகவே எதையும் துருவித் துருவி ஆராயும் மனப்பான்மை கொண்டவர்கள். எனவே, வாழ்க்கையின் நோக்கம், இப்புவனத்தின் இயல்பு, இன்ப துன்பத்தின் இலக்கணம் ஆகிய

பிரச்சினைகளைப்பற்றி அவர்கள் ஓயாது சிந்தித்தனர். சிந்தித்தன வற்றை அவர்கள் செய்யுள் வடிவத்திலேயே முதலில் எழுதினர். கி.மு. ஆரும் நூற்றாண்டில் 'ஏழு சான்றோர்' (Seven Sages) என்றழைக்கப்படும் அறிவுலகத் தலைவர்கள் மக்களிடம் ஒழுக்க நெறிகளைப் போதித்தனர். தேலஸ் (Thales), சோலன் (Solon), பெரியாண்டார் (Periander), கிளியோபூலஸ் (Cleobulus), சிலோ (Chilo), பியாஸ் (Bias), பீட்டாகஸ் (Pithacus) என்போரே அச் சான்றோர்களாவர். 'எதிலும் அளவுக்கு மீறுதே' என்பது போன்ற பழமொழிகளையும், பொன்மொழிகளையும் கொணர்ந்தவர் கள் அவர்களே ஆவர்.

ஆசியா மைனர் பிரதேசத்திலிருந்த மைலிடஸ் (Miletus) என்ற நகரத்திலேயே கிரீஸின் தத்துவம் முதலில் அரும்பியது. அங்கிருந்த அறிஞர்கள் பலர் உலகின் தோற்றத்தையும், தன்மை யையும் ஆராய்வதில் ஈடுபட்டனர். உலகிலுள்ள பருப்பொருள் யாவும் உயிருடையன என்று அவர்கள் நம்பினர். ஆன்மா வேறு, உடல் வேறு என்று அவர்கள் கருதவில்லை. எல்லா நிலையிலும் ஆன்மாவுக்கு உடல் உண்டு என்றே அவர்கள் எண்ணினர். உலகம் அனைத்தும் நீர், நிலம், காற்று, நெருப்பு ஆகிய நான்கு மூலப் பொருள்களாலானவை என்பது அவர்தம் வாதம். இவற்றுள் எது முதற்பொருள் என்பதில்தான் ஒவ்வோர் அறிஞரும் வேறு பட்டனர். தேலஸ் (Thales) என்பார் நீரையும், அனக்ஸிமீனஸ் (Anaxemenes) என்பார் காற்றையும், ஹெராக்லிடஸ் (Heraclitus) என்பார் நெருப்பையும் ஆதிமுதற் பொருளாகக் கருதினர். அவற்றி லிருந்து ஏனைய பொருள்கள் புறப்படவும், அகப்படவும் செய் கின்றன என்றும் அன்னார் கருதினர். உலக உற்பத்திபற்றிக் கூறப்பட்டு வந்த புராண காரணங்கள் ஒழிந்து, அறிவியல் பூர்வ மான ஆராய்ச்சிக்கு இவர்களின் வாதம் வித்திட்டது.

கி.மு. ஆரும் நூற்றாண்டில் சாமோஸ் தீவில் தோன்றிய பிதாகோரஸ் (Pythagorus) (கி.மு. 580-500) என்பார் ஓர் அறநெறிக் கழகத்தை இதாலியிலிருந்த குரோடனில் (Croton) ஏற்படுத்தினர். எகிப்து போன்ற நாடுகளுக்குச் சென்று பெற்றுவந்த அறிவை அவர் மக்களிடம் பரப்பினர். அவரது சீடர்களும், அவரும் சேர்ந்து ஒரு தத்துவ மார்க்கத்தைப் போதித்தனர். அதில் ஆன்மாவின் மறு பிறப்பு ஒப்புக்கொள்ளப்பட்டது. பூமி தன்னைத்தானும், சூரியனை யும் சுற்றுகிறதென்றும் அவர்கள் கூறினர். விண்ணில் உலவும் உடுக்கள் யாவும் ஒருவித ரீங்காரத்தை விளைவிக்கின்றன என்றும், அவ்விசையொலியை மக்கள் கேட்க இயலாதென்றும் அவர்கள் அறிவித்தனர். சமுதாய அரசியல் சீர்திருத்தங்களை அன்னார் போதித்தனர்.

சுமார் கி.மு. 490-430-ல் வாழ்ந்த எம்பிடாக்லிஸ் (Empedocles) என்பார் தற்காலப் படித்தர வளர்ச்சிக் கொள்கையை (Evolution theory) அனுமானித்தவர். மூலப் பொருள்கள் அன்புணர்ச்சியால் ஒன்று சேர்கின்றன என்றும், பகை யுணர்ச்சியால் பிரிகின்றன என்றும், இங்ஙனம் பிரிந்தும் கூடியும் செயல்படுவதாலேயே செடிகளும், பின் மிருகங்களும் மக்களும் தோன்றும் நிலை உண்டாயிற்று என்றும், வாழத்தகுதி யுடையன வாழ்ந்து தகுதியற்றவை மாய்வதிலேயே வளர்ச்சி இருக்கிறதென்றும் அவர் கூறினர். அதேபோல டெமாக்ரிடஸ் (Democritus) என்பார் தற்கால அணுக்கொள்கையை (Atomic theory) அனுமானித்தார். ஆன்மா முதற்கொண்டு எல்லாப் பொருள்களும் அணுக்களின் வெவ்வேறு வகையான கலப்பினுல் உண்டாகின்றன என்பது அவரது கூற்றுகும். இறவாத தன்மை பெற்ற ஆன்மாவில் அவருக்கு நம்பிக்கை இல்லை. பெரிக்ளீஸின் காலத்து வாழ்ந்த அனெக்ஸகோரஸ் (Anaxagoras) உள்ளம் வேறு, உடல் வேறு என்றும் வற்புறுத்தி, மனம் என்பது பகுபொருளை மாற்றிவிடக் கூடியது என்றும் போதித்தார். சந்திரனும், சூரியனும் கடவுள்களல்ல. பூமியை ஒத்தவைகளே என்று துணிந்து அவர் கூறினர். அதனுல் நாடு கடத்தப்பட்டார்.

கி.மு. 5ஆம் நூற்றுண்டின் இடையில் கிரீஸில் சோப்பிஸ்டுகள் (Sophists) எனும் ஒரு புதுவகைத் தத்துவ ஞானிகள் தோன்றினர். அவர்கள் உலகு, ஆன்மா, கடவுள் இவை பற்றியெல்லாம் கவலைப்படவில்லை. மனிதன் எவ்வகையில் நல்வாழ்வு வாழலாம் என்பது பற்றியே அவர்கள் கவலைப்பட்டனர். அரசியலில் பங்கு பெற்ற ஒருவன் முழுக்குடிமகனுக வாழ அவர்கள் மக்களுக்குக் கற்றுக்கொடுத்தனர். பேச்சுக் கலைப் பயிற்சியை வழங்க அவர்கள் பணம் பெற்றுக்கொண்டனர். மற்றும் வேறு பல கலைகளையும் அவர்கள் போதித்தனர். நடமாடும் பல்கலைக் கழகங்களாயும், ஊர் சுற்றும் ஆசிரியர்களாயும் அவர்கள் விளங்கினர். புரோத கோரஸ் (Protagoras) என்ற சோப்பிஸ்ட் மிகப் புகழ் பெற்றவர். அவர் 'மனிதனே எல்லாவற்றுக்கும் அளவுகோல்' என்று போதித்தார். 'மனிதனுக்கு நன்மை பயப்பதெதுவோ அதுவே நல்லது, மற்றவை எல்லாம் கெட்டவையே' என்பது அவரது வாதமாகும். உலகில் நல்லது கெட்டது என்பவை எல்லாம் நிலையானவை அல்ல என்றும், இடத்துக்கிடம், மனிதனுக்கு மனிதன் எனும் வகையில் அவை மாறக்கூடியன என்றும் கூறினர். அவனவனே அவனவனுக்கு எது நன்மை, தீமை என்பதைத் தீர்மானித்துக் கொள்ள வேண்டும் என்றும் கூறினர். ஜார்ஜியாஸ் (Gorgias) எனும் மற்ருெரு சோப்பிஸ்ட், உலகம் என்பது தனியே

இல்லை என்றும், எல்லாம் மனத்தின் ஒரு தோற்றமே அன்றி வேறல்ல என்றும் கூறினர். பொதுவாக சோப்பிஸ்டுகள் மனிதாபி மானிகளாயிருந்தனர். போர் செய்தல், அடிமைமுறை முதலியவை களைக் கண்டித்துச் சுதந்திரம், சமத்துவம்- போன்ற கொள்கைகளை அன்னர் வற்புறுத்தினர்.

சோப்பிஸ்டுகளின் தனிமனித வாதக் கொள்கையையும் (Individualism), சமயோசித ஒழுக்கக் கொள்கையையும் (Expediency) சாக்ரடீஸ், பிளேடோ, அரிஸ்டாடில் போன்ரோர் பெரிதும் கண்டித்தனர். கேள்வி பதில் முறையால் சாக்ரடீஸ் உண்மை காண முயன்ருர். தூய அற ஒழுக்கத்தை அவர் போதித்தார். ஆனல் கோயில் குளங்களையும், சில்லறைத் தேவதைகளையும் அவர் பழித்ததால் தெய்வ நிந்தனைக் குற்றம் சுமத்தப்பட்டுக் கொல்லப்பட்டார் என்பதை விரிவாக ஏற்கெனவே கண்டோம். அவரது சீடரான பிளேடோ (கி.மு. 427-347) குடியரசு (Republic), சட்டங்கள் (Laws) ஆகிய நூல்களில் அவர் தமது இலட்சிய அரசைப் பற்றிக் கூறுகிருர். தத்துவ ஞானிகளே நாட்டை ஆள வேண்டுமென்றும், அவர்கள் பொதுவுடைமையைக் கைக்கொள்ள வேண்டும் என்றும் அவர் கூறுகிருர். உயர்குடிப் பெருமக்க ளாட்சியே (Aristocracy) உயர்ந்த ஆட்சி எனப் போதித்தார். பிளேடோ, மறுபிறவியில் நம்பிக்கை கொண்டிருந்தார். மனிதன் கடவுளைப் போல் மாறவேண்டும் எனப் போதித்தார். அவரின் சீடரான அரிஸ்டாடில் கிரேக்க அறிஞர்களிலேயே தலைசிறந்தவர். அவர் ஆய்ந்து பாராத பாடமே இல்லை எனக் கூறலாம். அரசியலைப் பற்றித் தனி நூலை எழுதியுள்ளார். புரட்சிகள் ஏற்படக் காரணத்தை ஆராய்ந்து அவைகளைத் தடுக்கும் வழிகளையும் கூறுகிருர். அரசிய லமைப்புகளை அழகாக வகைப்படுத்துகிருர். கலப்பு அரசியலமைப் பின் பெருமையை விளக்குகிருர். பாலிடி என்ற நடுத்தர மக்கள் ஆட்சியே நல்லாட்சி என்கிருர். உடல்நூல், தாவரநூல், பௌதிகம், வானநூல், மருத்துவம், அளவை நூல், அறநூல் என்ற பலவகைத் துறையிலும் ஆராய்ந்து அவர் நூல்கள் எழுதி யுள்ளார். 'எதிலும் மிதமாயிருக்க வேண்டும்' என்பது அவரது மிக முக்கியமான போதனையாகும்.

*அறிவியல்*

பொதுவாக நம்பப்படுதல் போன்று கிரேக்கர்கள் அறிவியலில் மெச்சத்தக்க முன்னேற்றம் காணவில்லை. பெரிக்ளீஸின் காலத்தும், அவருக்குப்பின் ஒரு நூற்ருண்டு வரையிலும் கிரேக்கர்கள் கலைகளில் காட்டிய ஆர்வத்தை அறிவியலில் காட்டவில்லை. இயற்கையை வென்று சுகபோக வாழ்க்கையில் திளைக்க அவர்கள் அவ்வளவாக

முயலவில்லை. எனவே கணிதம், உயிரியல் (Biology), மருத்துவம் போன்ற ஒருசில துறைகளில் மட்டுமே இக்காலத்தில் கிரேக்கர் மேம்பாடுற்றனர்.

கிரேக்கக் கணிதத்தின் தந்தை எனக் கருதப்படுபவர் மைலிடஸ் நகரைச் சார்ந்த தேலஸ் (Thales) என்பவராவார். வரைபடக் கணிதத்தில்(Geometry) அவர் முதன் முதலில் ஒரு சில தேற்றங்களை (Thearems) உண்டாக்கினுர். பின்னுல் வந்த யூக்லிட் (Euclid) அவற்றை மேலும் விரிவாக்கினுர். ஒரு விட்ட மானது அதன் விட்டத்தால் இரண்டு சமபாகமாகப் பகுக்கப்படு கிறது. 'இரு சமபக்க முக்கோணத்தின் (Isosceles Triangle) அடிபக்கக் கோணங்கள் சமம்; இரண்டு நேர்க் கோடுகள் ஒன்றை ஒன்று வெட்டும்போது, செங்குத்தான எதிர்புறக் கோணங்கள் சமம்' என்பன போன்ற தேற்றங்கள் இவரால் கண்டுபிடிக்கப்பட்டவையாகும். பித்தாகோரஸின் சீடர்கள் ஒற்றைப்படை, இரட்டைப்படை எண்களைப் பற்றிப் பல உண்மை களை வெளியிட்டனர். ஒரு முக்கோணத்தின் மூன்று கோணங்களின் கூடுதல் (180°) இரண்டு செங்கோணங்களுக்குச் சமம் என்ற தேற்றமும், ஒரு செங்கோண முக்கோணத்தின் கர்ணத்தின் மீது வரையப்பட்ட சதுரங்களின் மொத்தப் பரப்பளவுக்குச் சமம் என்ற பித்தாகோரஸின் சித்தாந்தமும் இக்காலத்துத் தோன்றிய கணித உண்மைகளாகும். கியாஸ் (Chios) நகரைச் சார்ந்த ஹிப்போ கிராட்டஸ் (Hippoecrates) என்பாரே வரைபடக் கணித்தை முதன்முதலில் வளர்த்தவர்.

அனுக்ஸிமேண்டர் (Anaximander) என்ற தத்துவமேதை உயிர்ப்பொருள்களின் படித்தர வளர்ச்சிக் கொள்கையின் (Organic Evolution) சில முக்கியக் கூறுபாடுகளை வெளியிட்டார். உலகில் ஆதியில் உயிர்ப்பொருள்கள், உலகெங்கும் நிறைந்திருந்த கடலி லேயே தோன்றினவென்றும், தண்ணீர் வற்ற வற்ற அவை நிலத் தில் வசிக்கத் தொடங்கி, மாறுபட்ட சூழ்நிலைக்கேற்ப தம்மை மாற்றிக் கொண்டு நிலப்பிராணிகளாக மாறின என்றும் அவர் கூறிச் சென்றுர். உயிர்நூல் பற்றிய பல அரிய உண்மைகளைக் கண்டுபிடித்தவர் அரிஸ்டாடில் எனும் அறிஞராவார். பூச்சிகள் எப்படிப் புழுவிலிருந்து படிப்படியாக உருமாற்றம் அடைகின்றன என்பதையும், விலாங்குமீன் (Eel), சுரு மீன் (Dog-fish) போன்ற பிராணிகளில் கருவளர்ச்சி எவ்வாறு ஏற்படுகின்றதென்பதையும், இன்னும் பல்வேறு உண்மைகளையும் ஆராய்ச்சி செய்து அவர் கண்டு வெளியிட்டுள்ளார். ஆனுல், ஒரு சில மூடக் கொள்கைகளை யும் அவர் நம்பியதாகத் தெரிகிறது. சான்ருக, ஆடுகள் காதுகள்

மூலமாகச் சுவாசிக்கின்றன என்றும், தாவரங்களில் பால்பாகுபாடு (sexuality) இல்லை என்றும் அவர் நம்பினர்.

மருத்துவத்துறையில் ஒரு சில உண்மைகளைக் கண்டறிந்தவர்களும் தத்துவ மேதைகளேயாவர். எம்பிடாக்லிஸ் (Empedocles) எனும் அறிஞர், இரத்தமானது இருதயத்துக்குச் சென்று திரும்புவதையும், தோல் எப்படிச் சுவாச இந்திரியங்களின் பணியை ஓரளவு செய்கிறதென்பதையும் கண்டுபிடித்தார். ஆல்க்மியான் (Alcmeon) எனும் அறிஞர் பிராணிகளின் உடலைப் பகுத்து உண்மை அறியும் முறையைக் கொணர்ந்தார். கண், நரம்பு பற்றியும் பல உண்மைகளைக் கண்டு அவர் வெளியிட்டார். காஸ் (Cos) நகரைச் சார்ந்த ஹிப்போகிராட்டஸ் 'நோய் உண்டாவதற்குக் காரணம் இயற்கையில் ஏற்படும் கோளாறேயன்றி, மனிதனுக்கு அப்பாற்பட்ட சக்திகள் அல்ல' என்று அறுதியிட்டுக் கூறினர். 'நோய் நாடி, நோய் முதல் நாடி அது தணிக்கும் வாய் நாடி வாய்ப்பச் செயல்' ஒன்றே நோய் நீக்கும் வழி என்றும், மந்திரத்தாலும், தந்திரத்தாலும் ஒன்றும் முடியாது. என்றும் அவர் வற்புறுத்தினர். நோயின் அறிகுறிகளை அவர் ஆராய்ந்தார். நெருக்கடியான கட்டங்களில் அறுவைச் சிகிச்சையின் அவசியத்தைப்பற்றியும் அவர் எடுத்துக் கூறினர். பல மருந்துகள் பற்றி அவர் அறிந்திருந்தார். ஆனல், உணவுக் கட்டுப்பாட்டையே நோய் நீக்கத்துக்கு அவர் பெரிதும் சிபாரிசு செய்தார். ஆனல், வெண்பித்த நீரும், மஞ்சள் பித்த நீரும், இரத்தமும், சளியும் உடலில் அதிகமாகிவிடுவதாலேயே நோய்கள் விளைகின்றன என்ற மூடக் கொள்கையை அவர் நம்பினர். ஆகையாற்ருன் நோயாளிகளின் உடலைக் கீறி இரத்தத்தை வெளிப்படுத்தும் முறை கிரீஸில் பரவலாகக் கடைப்பிடிக்கப்பட்டது.

இங்ஙனம் பண்டைய கிரேக்கர்கள் பௌதிகம் போன்ற அறிவியல் ஆராய்ச்சியில் அதிகம் ஈடுபடவில்லையெனினும் அறிவியல் மனப்பான்மை பெரிதும் காணப்பட்டது. எதையும் நன்கு சிந்தித்துச் சிந்தித்து ஆராய்ந்த பின்பே அவர்கள் நம்பினர். சமயத் துறையில் ஒரு சில மூட நம்பிக்கைகளைக் கொண்டிருந்த போதிலும் ஏனைய துறைகளில் பகுத்தறிவை அவர்கள் பெரிதும் பயன்படுத்தினர். செய்திகளைச் சேகரித்தல், சேகரித்த செய்திகளைத் தொகுத்தும் வகுத்தும் உண்மை காணல் இவைகளால் அவர்கள் அறிவியல் முறைகளையே எல்லாத்துறைகளிலும் கடைப்பிடித்தனர். சமயத்தாலோ அன்றி சமயக் குரவர்களாலோ அன்னரின் சிந்தனைக்கு அணைபோட இயலவில்லை. 'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும், அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு'

என்ற குறளுக்கிணங்க அவர்கள் எதையும் சொந்தமாகச் சிந்தித்தே ஒரு முடிவுக்கு வந்தனர்.

*பொருளாதார வாழ்க்கை*

கிரேக்கமக்களின் பொருளாதார வாழ்க்கை மிக எளிமையானதாயிருந்தது. வேளாண்மை, வியாபாரம் இவ்விரண்டே அவர்தம் முக்கியத் தொழில்களாய் இருந்து வந்தன. பெரும்பாலான மக்கள் நாட்டுப் புறங்களிலேயே வாழ்ந்தனர். ஆலிவ் மரங்கள் வளர்த்தல், திராட்சை பயிரிடுதல், ஆடு மாடு வளர்த்தல் ஆகிய இவை அன்னாரின் தொழில்களாகும். தொழில்கள் பெரிய அளவில் ஒன்றும் நடைபெறவில்லை. பானை வனைதல், நெசவு, படைக்கலன்கள் செய்தல் இவைகளே முக்கியத் தொழில்களாயிருந்தன. ஆதென்ஸில் இருந்த மிகப்பெரிய தொழிற்சாலையில் கேடயங்கள் செய்யப்பட்டு வந்தன. அதில் 120 அடிமைகளே பணிபுரிந்தனர். சிறுசிறு கடைகளிலேயே ஏனைய தொழில்கள் நடைபெற்றன. பொது மராமத்துப் பணிகளில் பலபேர் வேலை பார்த்தனர். நீதி மன்றங்களிலும், சட்டமன்றங்களிலும் பணியாற்றி அதில் வரும் வருவாயைக் கொண்டே வாழ்ந்தோர் பலராவர். அரசியலையே ஒரு தொழிலாகக் கொண்டவர் பலர் இருந்தனர். சொற்பொழிவு எழுதித் தந்து அதன் மூலம் பொருளீட்டிச் செல்வந்தர்களானோர் பலர். டெமாஸ்தனிஸ் என்பார் அதற்கொரு பெருஞ்சான்றுவார். பேச்சுக் கலையையும் ஏனைய கலைகளையும் கற்பித்து அவற்றின் மூலம் சோப்பிஸ்டுகள் போன்றோர் பிழைத்தனர். குறி சொல்லியும், ஜோஸியம் கூறியும் பலர் வயிறு வளர்த்தனர். மருத்துவர்கள், ஆசிரியர்கள், கட்டடக் கலைஞர்கள், பொற்கொல்லர்கள், கருமான்கள், சிற்பிகள், ஓவியர்கள் போன்ற தொழிலாளி வகுப்பினர் பலர் இருந்தனர். சராசரி அவர்களுக்குக் கூலி நாளொன்றுக்கு ஒரு டிராக்மா (Drachma) எனும் கிரேக்க நாணயமாகும். கூலியில் அதிக வேற்றுமை இல்லாத காரணத்தினால் மக்களிடையே பொருளாதார சமத்துவம் ஓரளவு காணப்பட்டது. அடிமையும், ஆண்டானும், குடிமகனும், அன்னியனும் ஏறக்குறைய ஒரே மாதிரி உடை உடுத்தி உணவருந்தி வந்தனர். கேளிக்கைகளிலும் அவர்கள் யாவரும் சமமாகவே பங்கு கொண்டனர். பொதுவாகக் கிரேக்கர்கள் ஏழ்மை நிலையிலேயே இருந்தனர். அவர்தம் உடையும் மிக எளிமையானவை; அதிகமாகச் சம்பாதித்து மீத்து வைக்கும் மனப்பான்மை அவர்களிடமில்லை. நாள் முழுவதும் வறிதே உழைப்பில் கழிக்கக் கிரேக்கர்கள் விரும்பவில்லை. ஏதோ ஓரளவிற்குச் சம்பாதித்துப் பின் எஞ்சிய நேரத்தில் அவர்கள் அரசியலிலும், சந்தைக் கடைப் பேச்சிலும், அறிவுக்கும் உணர்ச்சிக்கும் உணவூட்டும் பணிகளிலும் ஈடுபட விரும்பினர்.

ஆனால், பலர் திரைகடலோடி நிறையப் பொருளீட்டினர். சுரங்கத் தொழில் போன்றவைகளை அவர்கள் கேவலமாக எண்ணியபோதி லும் கையால் வேலை செய்வதை அன்னூர் கண்ணியமாகவே கருதினர். பண்ணைகளிலும் கடைகளிலும் சுதந்திரமாகவும், சில சமயம் கூலிக்காகவும் உழைக்க அவர்கள் தயங்கியதே இல்லை. பொதுப் பராமரிப்புப் பணிகளில் அவர்கள் அடிமைகளோடு அடிமை களாய் வேலை செய்து அதே கூலியை வாங்கிக்கொண்டனர். உடற்பசியைப் போக்க ஒய்வையும் பல கிரேக்கர்கள் ஒருங்கே தேடினர்.

## சமுதாய வாழ்க்கை

பண்டைய கிரேக்கர்களின் சமுதாய வாழ்க்கைக்குச் சிறந்த தோர் எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தது ஆதென்ஸ் நகர மக்களின் வாழ்வேயாகும். பெரிக்ளீஸின் காலத்துக்குப் பின்னும், அலெக் ஸாந்தர் படையெடுப்புக்கு முன்னும் இருந்த கிரேக்கச் சமுதாயத் தில் பெருத்த மாறுதல் ஒன்றும் ஏற்படவில்லை. அரசியலுரிமை பெற்ற குடிமக்கள் அவ்வுரிமையைப் பெருத மெடிக்ஸ் (Metics) எனும் அன்னியர்கள், அடிமைகள் ஆகியோரே சமுதாயத்தின் முக்கியப் பிரிவினராயிருந்து வந்தனர். பினீஷியர்கள், யூதர்கள் போன்றவர்கள் நிலம் வைத்துக்கொள்ள அனுமதிக்கப்படாவிடினும் ஏனைய எல்லாத் துறைகளிலும் சுதந்திரமாகவே வாழ்ந்தனர். பிரியப்பட்ட தொழில்களில் அவர்கள் ஈடுபட்டனர். சமுதாயத்தின் கூட்டு வாழ்விலும் அன்னூர் கலந்துகொண்டனர். அடிமைகள், பொதுவாக மிருகங்களைப்போல் நடத்தப்பட்டார்கள்; எனினும் ஒரு சில அடிமைகள் கூலிக்கு வேலை செய்யவும், சொத்து வைத்துக் கொள்ளவும், சிறிய அரசாங்கப் பதவிகளை வகிக்கவும், வங்கிகளை நடத்துதல் போன்ற பொறுப்பான பணிகளில் ஈடுபடவும் அனுமதிக் கப்பட்டனர். ஆதென்ஸில் அவர்கள் நிலை சற்று உயர்வாகவே இருந்தது. வீதிகளிலும் சந்தைகளிலும் அவர்கள் ஏனைய குடிமக்களோடு தோளோடு தோள் சேர்த்துச் சமமாகவே உலவினர். உடையிலும் அவர்களுக்கும் பிறர்க்கும் வேறுபாடு காணப்பட வில்லை. நல்ல விசுவாசமுள்ள அடிமைகள் சிலர்க்கு விடுதலையும் வழங்கப்பட்டது.

பெண்டிரின் நிலையிலும் பெருத்த மாறுதல் ஒன்றும் ஏற்பட வில்லை. 'ஆண்களிடையே அதிகம் பேசாத பெண்களே உயர்ந்த வர்கள்' என்ற பழமொழியிலிருந்து அவர்களது நிலையை நன்கு உணரலாம். 'ஒரு பெண் ஓர் ஆணுக்கு இரண்டு நாள்களில்தான் மகிழ்ச்சியை உண்டாக்குகிறுள். ஒன்று அவனை அவன் திருமணம் செய்துகொள்ளுகின்றபோது; இன்னொன்று இறந்தபின் அவளைப்

புதைக்கும்போது' என்று ஹிப்போனேக்ஸ் (Hipponax) என்ற கவிஞன் கூறுகிருன். பிளேடோகூடப் பெண்களை இழிவாகவே பேசுகிருர். வீட்டில் அடைபட்டுக் கிடப்பதே பெண்களின் கடமையாகக் கருதப்பட்டது. அங்கு அவர்கள் நூற்றல், நெய்தல், சமையல் செய்தல் முதலிய பணிகளிலீடுபட்டனர். பொது இடங்களுக்குப் போகவோ, கணவனைத் தவிர ஏனைய ஆண்களோடு பழகவோ அவளுக்கு உரிமையில்லை. விருந்துகளிலும், பொது கேளிக்கைகளிலும் அவர்கள் கலந்துகொள்ள இயலாது. தன் கணவனைத் தானே தேர்ந்தெடுக்கும் உரிமையும் ஒரு பெண்ணுக்கு இல்லை. பெற்ருேர் பார்த்துக் கட்டிவைக்கிற கணவனைக் கட்டிக் கொண்டு, அவனைத் தெய்வமாகப் போற்றித் தொண்டுசெய்து வருவதே அவளது தலையாய கடமையாகும். ஸ்பார்ட்டாவிலும் பொதுவாக டோரிய வகுப்பினரிடையிலும் பெண்கள் சற்றுச் சுதந்திரமாகவே வாழ்ந்தனர். ஏனைய வகுப்பினரில் பெண்கள் ஏறக்குறைய ஓர் அடிமை போலவே நடத்தப்பட்டனர். அதனுல் கிரேக்க ஆண்களுக்கு அவர்களிடம் மதிப்பும், கவர்ச்சியும் ஏற்படாதொழிந்தது. ஏதோ ஒரு பிள்ளை பெறும் இயந்திரமாகவே பெண் அவர்களுக்குத் தோன்றினுள். அவர்களோடு சரிநிகர் சமானமாகப் பழகி இன்பம் கொடுக்கக் கூடியவர்கள் பொதுவாகக் கிரேக்கர் அல்லாத அன்னியப் பெண்களாகவே இருந்தனர். எனவே, ஹெடாரி (Hetaerae) என்ற அத்தகைய பெண்களின் நிலை சமுதாயத்தில் உயர்ந்தது. ஆஸ்பாஸியா (Aspasia) என்ற பொதுமகளிடம் பெரிக்ளீஸ் என்ற அரசியல் தலைவரும், வேறுபல தத்துவ மேதைகளும்கூட உள்ளத்தைப் பெரிதும் பறிகொடுத்தனர் என்ருல் அதற்குக் காரணம் கிரேக்கப் பெண்கள் சமுதாயத்தில் நன்கு மதிக்கப்படாததேயாகும்.

இளைஞர்கள் பொதுவாகச் சமுதாயத்தில் நன்கு மதிக்கப்பட்டனர். ஸ்பார்ட்டாவில் அவர்களுக்கு வெறும் உடற்பயிற்சிக் கல்வி மட்டுமே அளிக்கப்பட்டதெனினும் ஆதென்ஸிலும், இதர நகர்களிலும் அவர்களுக்குப் பல்வேறு பாடங்கள் கற்பிக்கப்பட்டன. தனிப்பட்டவர்கள் நடத்திய சிறு பள்ளிகளிலேயே இளைஞர்கள் பாடங் கற்றனர். பிளேடோ, அரிஸ்டாடில் போன்றவர்கள் பெருங் கல்விக் கூடங்களை நடத்தி ஏராளமான மாணவர்களுக்கு இலக்கியம், கணிதம், அளவை நூல் போன்ற பல துறைகளில் பயிற்சியளித்தனர். இலக்கணம், இசை, உடற்பயிற்சி இவை மூன்றும் எல்லா மாணவர்களுக்கும் கட்டாயப் பாடங்களாகும். உடற்பயிற்சியால் உடலும், இலக்கணமும், அளவை நூல் போன்ற பாடங்களால் உள்ளமும், இசையால் ஆன்மாவும் வளர்ச்சியடையும்

என்றும், இம் மூன்றையும் சீராக வளரச் செய்வதே கல்வியின் நோக்கம் என்றும் கிரேக்கர்கள் கருதினர்.

மக்களின் அன்றாடப் பழக்கவழக்கங்கள் நாட்டின் கால நிலையால் பெரிதும் உருவாக்கப்பட்டன. வெப்பமும், வறட்சியும் பொருந்திய கால நிலையே கிரீஸில் பொதுவாகக் காணப்பட்டது. மழை ஓரோவழிதான் பெய்யும். மற்றச் சமயங்களில் வானம் மேக மெதுவுமின்றித் தெளிவாகவே இருக்கும். எனவே, மக்கள் திறந்த வெளி வாழ்க்கையையே அதிகம் நாடினர். உடற் பயிற்சி அரங்கு களிலும், மற்போர் மைதானங்களிலும் அவர்கள் பலமணி நேரங் களைக் கழித்தனர். நாற்சந்திகளிலும், சந்தைக் கடைகளிலும் நின்றுகொண்டே பேசுவதில் பெரு விருப்பம் கொண்டிருந்தனர். சந்தைக்கூடம் கிரேக்கரின் சிறந்த பொழுதுபோக்கிடமாகத் திகழ்ந்தது. அன்றாடத் தேவைக்கு வேண்டிய பார்லி, மீன், காய்கறி போன்ற பொருள்கள் அங்குக் கிடைத்ததோடு அறிவுப் பசியைத் தணிக்கும் சொற்பொழிவுகளும் அங்கு நடைபெற்றன. ஆங்கே மர நிழலில் அமர்ந்துகொண்டு தத்துவாசிரியர்கள் பாடம் சொல்வர். ஈலியட், ஒடிசி போன்ற காவியங்களிலிருந்து படித்துக் கதா காலட்சேபம் நிகழ்த்துவர். இன்னும் சிலர் யாழ் போன்ற கருவிகளை மீட்டிக்கொண்டே நாடோடிப் பாடல்களைப் பாடிய வண்ணமிருப்பர். மற்றும் சிலர் தாங்கள் வேற்று நாடுகளில் கண்ட தையும், கேட்டதையும் படம் போட்டு விவரித்துக்கொண்டிருப்பர். ஒலிம்பிக் விழாப் போட்டிக்காகத் தயாரிக்கப்பட்ட காவியத்தையும், உரைகளையும், வரலாறுகளையும் ஒருசிலர் படித்துக்காட்டி ஒத்திகை பார்ப்பர். இன்னும் சிலர் தாம் வரைந்த ஓவியத்தைப் பலருக்கும் காட்டி விளக்குவர். இங்ஙனம் ஐம்பொறிகளுக்கும் இன்பமூட்டும் பல பொருள்கள் சந்தைக் கூடத்தில் காணப்பட்ட தால்தான் மக்கள் தினம் ஒரு முறையாவது அங்குச் சென்று வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். நாவிதர்களின் கடை, கிரேக்கர்கள் தினமும் விரும்பிச் செல்லும் இடங்களிலொன்றாகும். இக் காலத்தைப் போலவே அக்காலத்தும் நாவிதர்களின் கடையில் பலரும் கூடி அரசியல் பேசுவது வழக்கம். சிசிலியில் அத்தீனியர்கள் அடைந்த தோல்வியைப் பற்றிய செய்தி முதலில் நாவிதன் கடையில்தான் வெளியிடப்பட்டதென்பர். அலெக்ஸாந்தர் காலத்துக்குமுன், முகத்தை மழிக்கும் வழக்கம் கிரேக்கர் களிடம் இல்லை. ஆனால் தாடியையும், சிகையையும் அவர்கள் நறுக்காக வெட்டி விட்டுக்கொள்ளவும், அலங்காரம் செய்து கொள்ளவும் நாவிதர் கடையை நாள்தோறும் நாடினர். சிகை யலங்காரம் முடிந்த பின்பே கிரேக்கர்கள் சந்தைக்குச் சென்று சாமான்கள் வாங்குவர். வாங்கி அடிமைகள் வசம் அவற்றை

வீட்டுக்கு அனுப்புவர். வங்கிக்குச் செல்லுதல் போன்ற பல காரியங்களை முடித்துக்கொண்டு நண்பகலுக்கு வீடு சென்று உணவருந்துவர். உண்டிக்குப்பின் ஒருசிறிது கண்ணயர்வது அவர்கள் தம் வழக்கம். அங்ஙனம் வீரர்கள் சிறு துயில் கொண்டபொழுது எதிரிகள் நகரங்களையே தாக்கிக் கைப்பற்றியதாகக் கதைகள் உண்டு. மாலையில் ஒவ்வொருவரும் உடற்பயிற்சி செய்வர். நடுவயதானவர்கள் கூட ஆடைகளைக் களைந்துவிட்டுப் பயிற்சியிலிறங்குவர். உடல் அமைப்புச் சீராயில்லாவிடில் அருகிலுள்ளோர் அதைச் சுட்டிக் காட்ட வேண்டுமென்பதற்காக அவர்கள் ஆடைகளைக் களைவது வழக்கம். பயிற்சி முடிந்தவுடன் வெந்நீரிலோ, தண்ணீரிலோ குளிப்பர். குளிக்குமுன் உடம்பெல்லாம் எண்ணெய் தேய்த்துக்கொள்வது அவர்கள் வழக்கம். அடிமைகள் எண்ணெய் தேய்த்து உடம்பைப் பிடித்து விடுவர். குளித்தபின் உணவுக்குச் செல்வர். இரவில்தான் அவர்கள் முழுமையாக உண்பது வழக்கம். உணவருந்தும்போது விருந்தாளிகள் இருந்தால் அதில் மகளிர் கலந்துகொள்ளார். இல்லெனில் கலந்துகொள்வர். உணவு எளிமையாகவே இருக்கும். உணவு கொள்ளுமுன் காலிலிருந்து மிதியடிகளைக் கழற்றிவிடுவர். கோதுமை, பார்லி இவைகளாலான களி அல்லது கஞ்சியோடு மீன் இறைச்சி இவைகளையே பயன்படுத்தினர். பன்றியிறைச்சி, மாட்டிறைச்சியையும் ஒரோவழிப் பயன்படுத்தினர். ஆலிவ் எண்ணெயாலேயே சமையல் செய்யப்பட்டது. இனிப்புக்குத் தேன் பயன்படுத்தப்பட்டது. பழங்களும், கொட்டைகளும் விருந்துகளில் பரிமாறப்படும். விருந்து நடைபெறும்போது அரசாங்க நடவடிக்கையிலிருந்து அன்றாட விலைவாசி விவரம்வரை பல பிரச்சினைகளும் விவாதிக்கப்படும். இசை நிகழ்ச்சிகளும், ஆடல் பாடல்களும் பின்னர் நடைபெறும். மது அருந்துதல் விருந்தின் முக்கிய நிகழ்ச்சியாகும். 'தேட்கடுப்பன்ன நாட்படு தேறலை'க் குடிப்பவர்களைக் கண்காணிக்கவும், மதுவில் எவ்வளவு தண்ணீர் கலக்கவேண்டுமென்பதைத் தீர்மானிக்கவும் சிம்பாஸியார்ச் என்ற ஒருவர் விருந்தினர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுவார். குடித்து முடித்தபின் லைர் (Lyr) என்னும் யாழ் வாசித்துக் காட்டுவர். சிலர் பாட்டுப் பாடிப் பலரையும் மகிழ்விப்பர். விடுகவி விடுத்தல் போன்ற சில்லறை விளையாட்டுகளும் நடைபெறும். அத்தீனியர்கள் இத்தகைய விருந்துகளிலும் அளவோடேயே குடித்தனர்.

கால நிலையின் வறட்சி காரணமாகக் கிரேக்கரின் ஆடையும் குறைவாகவே இருந்தது. இரு துணிகளை அவர்கள் உடுக்கப் பயன்படுத்தினர். நாற்சதுரமான உள் துணியொன்றை முதலில் அவர்கள் அணிந்தனர். அதன் மீது மேலாடை ஒன்றை அணிவர்.

ஆண்களின் உடை சற்றுக் குட்டையாயும், பெண்களின் உடை சற்று நீளமாயும் இருக்கும். மேலே போர்த்தப்பட்ட துணி விழாமலிருக்கத் துணி தோள் பட்டைகளைச் சுற்றிப் போடப்பட்டிருக்கும். ஆடைகளில் பூ வேலைப்பாடு செறிந்திருக்கும். சரிகையும், பல நிறக் கற்களும் அவைகளில் தைக்கப்படுதலுமுண்டு. பெண்கள் தலைமயிரைப் பின்னிப் பலவிதமாக முடிபோட்டுக்கொள்வார்கள். ஆண்கள் தலைமயிரைக் குறுகலாகக் கத்தரித்துக்கொள்வார்கள்; ஆனால், நீண்ட தாடி வைத்துக்கொள்வார்கள். மலர் மாலைகளைப் பெண்கள் கொண்டையிலும் கழுத்திலும் அணிந்துகொள்வார்கள். ஆண் பெண் இருபாலரும் பலவகை மிதியடிகளை அணிந்தனர். குளிர், மழை இவற்றைத் தடுக்கக் கையுறைகளையும் குடைகளையும் பயன்படுத்தினர். பெண்கள் பல்வேறு அணிகலன்களைப் பூண்டனர். கொண்டை ஊசி, தலையணி, குஞ்சம், தோடு, கடயம், காப்பு, சங்கிலி, மோதிரம், காற்சதங்கை முதலியவை பொதுவாக அணியப்பட்டன. மீன், பாம்பு முதலிய பிராணிகளின் தலைகளைப் போன்று செய்யப்பட்ட அணிகளை அணிந்தனர்.

வெப்பம் நிறைந்த கால நிலையின் காரணமாக வீடுகள் பரவலாயும், காற்றோட்டமாகவும் கட்டப்பட்டன. ஆண்களுக்கும், பெண்களுக்கும் தனித்தனி அறைகள் ஒவ்வொரு வீட்டிலும் இருந்தன. வீட்டின் நடுவில் முற்றமொன்று இருக்கும். அதைச் சுற்றி ஒரு தாழ்வாரமும் அறைகளும் இருக்கும். வீடுகளில் சன்னல்கள் காணப்படவில்லை. பெண்கள் பகுதியில் நூல் நூற்கவும், சமையல் செய்யவும் தனித்தனி சிறு மண்டபங்கள் இருந்தன. ஆண்களும் பெண்களும் தங்கும் அறைகளில் கணப்புச் சட்டிகள் இருக்கும். அவற்றுக்கருகே கடவுள் உருவம், அல்லது ஆதி முன்னோரது உருவம் வைக்கப்பட்டிருக்கும். வீட்டிற்குப் புதிதாக வரும் மணமகள் முதன்முதலில் அக் கடவுளைச் சேவித்துவிட்டுத்தான் வேறு வேலை பார்க்கவேண்டும். வீடுகளில் சௌகரியமாக அமர்வதற்கேற்ப நாற்காலிகளும், சோபாக்களும் இருந்தன. சாப்பிடுவதற்கேற்ற மேசைகளையும் சிலர் பயன்படுத்தினர். கண்ணாடிச் சாமான்களை அவர்கள் அறியவில்லை. மரத்தாலும், மண்ணாலும், உலோகத்தாலும் செய்யப்பட்ட பாத்திரங்களையே அவர்கள் பயன்படுத்தினர். பளபளப்பாக்கப்பட்ட வெண்கலத்தையே கண்ணாடியாகப் பயன்படுத்தினர். எண்ணெய் விட்டு எரியவைக்கும் விளக்குகளையும் அன்னார் நிறையப் பயன்படுத்தினர்.

### சமய வாழ்க்கை

சமய வாழ்க்கையைப் பொறுத்த வரையில் இந்துக்களைப் போன்றே கிரேக்கர்கள் ஏராளமான தெய்வங்களை வணங்கினர்.

ஜியூஸ் (Zeus) என்ற கடவுள்தான் மற்ற எல்லாக் கடவுளர்க்கும் தலைவர். நல்லோரைக் காத்துத் தீயோரைத் தண்டிப்பது அவரது வேலை. வலக் கையில் இடியையும் இடக் கையில் செங்கோலையும் அவர் கொண்டுள்ளார். போஸிடன் (Posedon) எனும் தெய்வம் ஜியூஸின் உடன் பிறந்தவர்; கடலைக் கட்டுப்படுத்துபவர்; பூகம்பத்தை ஏற்படுத்துபவர்; அபோலோ (Apollo) என்பார் ஜியூஸின் பிள்ளை. சூரிய பகவானாக இவர் வழிபடப்பட்டார். இசை, பாடல், கவிதை, மருத்துவம், அழகு ஆகியவற்றுக்கெல்லாம் மூலமாயிருப்பவர் அபோலோ என்றே கிரேக்கர் நம்பினர். ஏரீஸ் என்பார் ஜியூஸின் மற்றொரு பிள்ளை; போருக்குத் தலைவர். ஹெர்மிஸ் (Hermes) என்ற ஜியூஸின் இன்னொரு மைந்தர் வாணிகக் கடவுள் ஆவார்; தந்திரமும், திறமையும் கொண்டவர். ஹீரா அல்லது ஜீனோ (Zeno) ஜியூஸின் மனைவி. அத்தீனா எனும் தேவதை, ஜியூஸின் மகள்; வீரம் அறிவு இரண்டுக்கும் தலைவி. அர்ட்டமிஸ் (Artemis) அல்லது டயானா எனும் கடவுள் நிலாக் கடவுளாவார். மிக்க அழகும், வீரமும் கொண்டவராக இவர் சித்திரிக்கப்பட்டுள்ளார். அப்ரோடிஸ் அல்லது வீனஸ், காதற் கடவுளாவார். ஹெஸ்தியா (Hestia) எனும் குடும்பக் கடவுள் குடும்பத்தைக் காக்கும் கடவுளாகக் கருதப்பட்டார். டெமிட்டர் (Demeter) என்ற தேவதை பழங்களுக்கும் பயிர்களுக்கும் தலைவியாவார். இத்தகைய கடவுளரோடு உலகம், கடல், வானம் போன்ற இயற்கைப் பொருள்களையும் கிரேக்கர் கடவுள்களாகக் கருதினர். தூக்கம், கனவு போன்றவைகளையும் அன்னார் வணங்கினர். மனிதன் இறந்தபின் நரகம் போன்ற ஹேடீஸ் (Hades) எனும் இடத்திற்குச் சென்று, தான் செய்த பாவ புண்ணியத்துக் கேற்ப இன்ப துன்பங்களை அனுபவிப்பதாக அன்னார் நம்பினர். புளூட்டோ (Pluto) எனும் மரணதெய்வம் இவ்வுலகைக் காத்துவருவதாக அவர்கள் கருதினர். ஹெர்குலீஸ் (Hercules) போன்ற வீரமிக்க கடவுளரையும் அவர்கள் வழிபட்டனர். கடவுளிடம் குறி கேட்டல் கிரேக்கரின் வழக்கமாகும். சமயச் சார்பாக எடுக்கப்பட்ட ஒலிம்பிக் போன்ற விளையாட்டுகள் கிரேக்கரின் வீரம் வெளிப்படவும், ஒற்றுமை வளரவும் காரணமாயிருந்தனவெனலாம்.

கிரேக்கர் இறந்தவர்களைப் புதைத்தனர். உடல் புதைக்கப்படும் வரையில், இறந்தவரின் ஆன்மா வானுலகில் ஊசலாடிக் கொண்டிருக்குமென அவர்கள் எண்ணினர். புதைக்கப்பட்ட பின் இருட்டாறு, அழுகையாறு போன்ற ஆறு வித நதிகளைக் கடந்து ஆன்மா ஹேடீஸ் நாட்டை அடையும். அந்த ஆறுகளைக் கடக்கும் போது அங்குள்ள ஓடக்காரனுக்குக் கொடுக்கவேண்டி இறந்தவர்களின் வாயில் ஒரு பணத்தை வைப்பர். புண்ணியம் செய்தவர்

எலீஸியம் (Elysium) என்ற சுவர்க்கத்துக்கும், பாவம் செய்தவர் ஹேட்ஸ் என்ற நரகத்துக்கும் செல்வாரென அவர்கள் நம்பினர். இறந்தவர்க்காகக் கூலி வாங்கிக்கொண்டு மாரடிப்பவர்களும் ஒப்பாரி வைப்பவர்களுமிருந்தனர். சில சமயங்களில் சடலங்கள் எரிக்கப்பட்டு அவற்றில் எஞ்சிய எலும்புகள் ஒரு ஜாடியில் போடப் பட்டுப் புதைக்கப்பட்டன. முன்னோரை வழிபடுவதும், அன்னார்க்கு உடையும், உண்டியும் வைத்துப் படைப்பதும் கிரேக்கரின் வழக்கங்களாகும்.

இங்ஙனம் சமயத் துறையில் கிரேக்கர்கள் பல மூடக் கொள்கை களைக் கொண்டிருந்தும், சமயம் அவர்களது சிந்தனையைக் கட்டுப் படுத்தவில்லை. சமய குருக்கள் கிரேக்கச் சமுதாயத்தில் இரண் டாந்தர இடத்தையே வகித்தனர். அவர்கள் சொன்னபடி அரசு ஆடவில்லை. சமய நம்பிக்கைகள் கிரேக்கரின் மனத்தில் ஆழ மாகப் பதியவில்லை. மேம்போக்காகவே அவர்கள் சமயச் சடங்கு களிலீடுபட்டனர், சமயத் தலைவர்கள் அரசியலில் தலையிடாதவாறு பார்த்துக்கொண்டனர். இங்ஙனம் சமயத்தையும், அரசியலையும் பிரித்ததாலேயே கிரேக்கர்கள் சிந்தனையின் சிகரத்தை எட்ட முடிந்ததெனலாம்.

***அரசியல் வாழ்க்கை***

அரசியல் துறைகளில் கிரேக்கர்கள் செய்து பார்க்காத பரிசோதனைகளே இல்லை எனலாம். அரிஸ்டாடில் அரசியலமைப்பு வகைகளை ஆறாகப் பிரித்தது இன்றும் செல்லுபடியாகிறது. நேர் முக ஜனநாயகத்தை (Direct Democracy) அவர்கள் நடைமுறை யில் நடத்திக் காட்டினர். கோனாட்சி, பிரபுக்களாட்சி, மக்க ளாட்சி ஆகிய மூன்றையும் ஒருங்கே செயல்படுத்த இயலுமென் பதை ஸ்பார்ட்டாவில் காட்டினர்; அரசியல் உணர்வு அவர்களிடம் அளவுக்கு மீறி அமைந்திருந்தது. ஒவ்வொரு குடிமகனும் போர்க் களத்திலும், பொதுப் பேரவையிலும், நீதிமன்றத்திலும் பங்கெடுத் துக் கொள்ள வசதி இருந்தது. ஜனநாயகம் ஒத்து வராதபோது சர்வாதிகாரத்தைத் தாற்காலிகமாக அவர்கள் ஏற்றுக்கொண்டனர். பொதுக் காரியங்களுக்காகப் பல நாடுகள் ஒன்று கூடிக் கூட்டரசு அமைப்பதில் அவர்கள் முன்னோடிகளாய் விளங்கினர். தனி மனிதனின் முழு ஆளுமையையும் அரசு எங்ஙனம் வெளிக்கொணர முடியும் என்பதை உலகுக்கு எடுத்துக்காட்டியவர்கள் அவர்களே யாவர்.

இத்துணைச் சிறப்புப் பொருந்திய கிரேக்க அரசியல் வாழ்வில் ஒருசில குறைபாடுகள் தோன்றி அதை அழிவுப் பாதையில்

இறக்கிவிட்டன. குடியுரிமை தூய்மையான கிரேக்கர்களுக்கு மட்டுமே கொடுத்த பெருந்தவற்றை அவர்கள் செய்தனர். குடியுரிமை பெற்றவர்களின் எண்ணிக்கை குறைந்துவிட்டபோது அக்குறையை நிறை செய்ய ஏனையோரால் முடியாமற் போயிற்று. நீந்தத் தெரிந்த ஒருவனை நீந்தத் தெரியாத பலர் சேர்ந்து நீரில் அமிழ்த்துவிட்டது போன்று, அரசியலுரிமை பெருத மக்கள், உரிமை பெற்றவரையும் சேர்த்து அடிமைப்படுத்தினர். அன்னியரோடு அவர்கள் எளிதில் சேர்ந்துகொண்டுவிட்டனர். நாட்டையே காட்டிக் கொடுக்கும் கும்பலைக் கிரேக்கர்கள் வளர்த்துவிட்டது பெருங்குற்றமாய் முடிந்துவிட்டது. மற்றும் கிரேக்கர் அனைவரும்கூட ஒன்றுபட்டு வாழமுடியவில்லை. அயோனியக் கிரேக்கர்கள், அன்னியப் பாரசீகனை வெறுத்ததைப் போன்றே டோரியக் கிரேக்கனை வெறுத்தார்கள். சுயேச்சையைப் பேணி வளர்த்த கிரேக்கர்கள், அதேசமயம் கட்டுப்பாட்டையும், ஒற்றுமையையும் பேணி வளர்க்கத் தவறிவிட்டனர். பெலப்பொனீஷியக் கூட்டுறவு, அத்தீனியப் பேரரசு போன்ற கூட்டுறவு நிறுவனங்கள் தோன்றின. ஆனல், அவை நிரந்தரமாக நிலைக்கவில்லை. சுதந்திரத்தையும், கட்டுப்பாட்டையும் (Liberty and Order) இணைக்கத் தெரியாத குற்றத்தாலேயே கிரேக்கர்கள் அன்னியருக் கடிமையாயினர். ஓரளவு தத்தம் இறைமையை விட்டுக்கொடுத்து நகர அரசுகள் ஒரு மைய அரசை அமைத்திருந்தால் அது தன் சுயேச்சையைக் காப்பாற்றிக்கொண்டு நானிலத்துக்கும் அறிவொளியைப் பல காலம் பரப்பி வந்திருக்கக்கூடும். அதற்கு மாருகக் கிரேக்க நகர அரசுகள் கட்டுப்போட முடியாத வெள்ளரிப் பழமாய் இறுதி வரை இருந்துவிட்ட காரணத்தினுல் தங்களைத் தாங்களே அழித்துக்கொண்டுவிட்டனர். பல்வேறு துறையில் என்னதான் சிறப்பு எய்தியிருந்தாலும், அரசியல் துறையில் ஒற்றுமையும் கட்டுப்பாடுமில்லையெனில் அவை யாவும் ஆற்றிற் கரைத்த பெருங்காயமாகவே அமையும் என்பதற்குக் கிரேக்கர்களின் வரலாறு தக்கதோர் எடுத்துக்காட்டாயும், ஏனைய நாடுகளுக்கொரு பாடமாயும் திகழ்கின்றது.

## ஹெல்லனிஸ்டிக் நாகரிகம்

(அலெக்ஸாந்தருக்குப் பின்)

அலெக்ஸாந்தரது காலத்துக்குப்பின், கிரேக்கர்கள் தாய் நாட்டை விட்டுப் பல்வேறு இடங்களுக்குச் சென்று, பல்வேறு மக்களோடு தொடர்புகொண்டு வாழ்ந்தனர். அதன் விளைவாகக் கிரேக்கர்களின் பழைய பண்பாட்டின் மெருகு குறைந்தது. கீழை நாட்டு நாகரிகத்தின் பண்புகள் பல கிரேக்கப் பண்பாட்டோடு

கலக்க ஆரம்பித்தன. அதனுல் தரத்தில் குறைந்த ஒரு புதிய கலப்பு நாகரிகமானது கிரேக்கர்களிடையே உருவாயிற்று. அக் கலப்பு நாகரிகமே ஹெல்லனிஸ்டிக் (Hellenistic) நாகரிகமென்று வரலாற்றில் பேசப்படுகிறது. ஹெல்லனிஸ்டிக் (Hellenistic) நாகரிகம் என்பது கிரேக்கரின் பண்டைய தூய கலப்பற்ற நாகரிகமாகும். அலெக்ஸாந்தரின் படையெடுப்பால் அது மாய்ந்தது. கி.மு. 323-ல் அலெக்ஸாந்தர் இறந்ததிலிருந்து கிரேக்க நாகரிகத்தில் ஒரு புதிய கட்டம் தோன்றுகிறது. அது கி.மு. முதல் நூற்றுண்டு வரை நீடிக்கிறது. அவ் விடைவெளிக் காலத்தே கிரேக்கரிடையே மலர்ந்த நாகரிகத்தை ஹெல்லனீயரின் நாகரிகம் என்பதைவிட ஹெல்லனீயத் தன்மை பொருந்திய புதியதொரு ஹெல்லனீய நாகரிகமென அழைத்தலே சாலப் பொருந்தும்.

கிரேக்கர்களின் பொற்கால நாகரிகத்திற்கும், ஹெல்லனிஸ்டிக் நாகரிகத்திற்கும் பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. பொற் காலத்தில் கிரேக்கர்கள் ஜனநாயகத்தைப் போற்றி வளர்த்தனர். ஆனுல், அலெக்ஸாந்தருக்குப் பின் வல்லரசே (Despotism) எங்கும் கடைப்பிடிக்கப்பட்டது. அலெக்ஸாந்தரின் வழித்தோன்றல்கள், எகிப்தியப் பாரசீகப் பேரரசர்கள் போன்று தன்னிச்சையாக ஆளத் தலைப்பட்டனர். பொற்காலத்து அத்தீனியர்கள், சிறிய அளவில் உற்பத்தி செய்வதையே விரும்பினுர்கள். ஆனுல், அலெக்ஸாந்த ருக்குப்பின் பெருமளவு வாணிகமும் போட்டியும் ஏற்பட்டன. உற்பத்தி ஓரளவு பெருமளவில் நடைபெற்றது. பொற்காலக் கிரேக்கர்கள் அறிவொளிமிக்கவர்கள்; எதையும் ஆராய்ந்து பாராது நம்பமாட்டார்கள். ஆனுல், ஹெல்லனீய நாகரிகக் காலத்தில் மக்கள் பகுத்தறிவை விடுத்துச் சமயத்திலும், மனிதனுக்கு அப்பாற் பட்ட சக்திகளிலும் அதிக நம்பிக்கை வைக்கலாயினர். தன்னம் பிக்கை வறட்சியடைந்தது. எல்லாம் தலைவிதி என்று வாளா இருக்கும் தோல்வி மனப்பான்மையும், சுய முயற்சியின்மையும் மக்களிடம் பரவலாகக் காணப்பட்டன.

*அரசியல் துறையில் மாற்றம்*

இக்காலத்தில் மக்களை ஆண்டுவந்த கிரேக்கத் தளகர்த்தர்கள் தங்களை மன்னர்களென்று அழைத்துக்கொண்டதோடு தெய்வீகத் தன்மை பொருந்தியவர்களென்றும், கடவுளின் சாயையை உடைய வர்களென்றும் தங்களைப் பற்றித் தாங்களே தம்பட்டமடித்துக் கொண்டனர். மேற்கு ஆசியாவை ஆண்ட தாலமி வம்சத்தாரும், தங்களைத் தெய்வாம்சம் கொண்டவர்களென மக்களை நம்பும்படி செய்வதற்குப் பற்பல முறைகளைக் கடைப்பிடிக்கலாயினர். செல் யூகஸ் வம்சத்தைச் சார்ந்த நான்காம் ஆன்டியாகஸ் (Antiochus IV)

என்பார் 'இறைவனின் அவதாரம்' என்று பொருள்படக்கூடிய எப்பிபானஸ் (Epiphanes) என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்டார். தாலமி வம்சத்தைச் சேர்ந்த மன்னர்களில் பலர், அரசாங்க ஆணைப் பத்திரங்களில் தங்களது பெயரை 'இறைவன்' எனப் பொருள்படும் தியோஸ் (Theos) என்றே எழுதிக் கையொப்ப மிட்டனர். பண்டைய எகிப்திய பாரோக்கள் எங்ஙனம் தங்களது தெய்வீக இனத்தின் தூய்மையைக் காக்கவேண்டி சொந்தத் தங்கையர்களையே மணந்துகொண்டனரோ அங்ஙனமே தாலமிகளும் தங்களது இனத்தூய்மை கெடாமலிருக்கத் தம் குடும்பத்துக் குள்ளேயே பெண் கொள்ளும் வழக்கத்தைக் கைக்கொள்ளலாயினர். மாசிடோனிய நாட்டில் மட்டுமே இத்தகைய புன்மை தலைவிரித்தாடவில்லை. அங்கு ஆட்சிபுரிந்த வல்லரசர்கள் குடி மக்களின் சுயேச்சையை ஓரளவு மதித்து நடந்துகொண்டனர். பெலப்பொனீஷியாவிலிருந்து கிரேக்க நாடுகள் தங்களது சுயேச்சையைக் காத்துக்கொள்ளவேண்டி அக்கீயக் கூட்டுறவு (Achaean League) எனும் இணைக் கூட்டரசு ஒன்றை ஏற்படுத்தினர். அதே போல மத்தியக் கிரீஸிலும் ஈடோலியக் கூட்டுறவு (Aetolian League) என்னும் ஓர் இணைக் கூட்டரசு ஏற்பட்டது. அலெக்ஸாந்தரது படையெடுப்பால் விளைந்த நல்ல பயன்களில் இதுவும் ஒன்றாகும். எனினும் ஆதென்ஸ், ஸ்பார்ட்டா போன்ற முக்கிய நகர அரசுகள் இக் கூட்டுறவில் சேராததால் இவைகள் நாளடைவில் பயனற்ற சேர்க்கைகளாக மாறின. பகராண்மைக் கொள்கை (Representative Principle), இணைக் கூட்டரசுக் கொள்கை (Confederation) இவற்றின் வித்துகள் இவ்வமைப்புகளில் காணப்பட்டன என்பதொன்றே இவற்றின் சிறப்பாகும்.

*பொருளாதாரச் சமுதாய மாற்றங்கள்*

ஹெல்லனீய நாகரிகக் காலத்தே பொருளாதாரத் துறையில் பெரியதொரு புரட்சி ஏற்பட்டது. நவீன காலத் தொழிற்புரட்சி வாணிகப் புரட்சிகளோடு ஒப்பிடத்தக்க அளவுக்கு அப்புரட்சி சிறப்பு வாய்ந்தது. அத்தகைய பெருமாற்றங்கள் பொருளாதாரத் துறையில் ஏற்படக் காரணமாயிருந்த சூழ்நிலைகள் பல. அலெக்ஸாந்தரது பெரு வெற்றிகளின் விளைவாகச் சிந்துநதி முதல், நைல் நதிவரை இருந்த பரந்த பிரதேசம் கிரேக்கரின் வியாபாரத்துக்குரிய இடமாக மாறியது. அண்டையிலிருந்த நாடுகளோடு மட்டும் சிறிய அளவில் வாணிகம் புரிந்துவந்த கிரேக்கர்கள் இப்போது பெரிய அளவில் வாணிபத்திலீடுபட்டுப் பெரும் பொருள் ஈட்டலாயினர். மற்றும் பாரசீகப் பேரரசிலிருந்து கைப்பற்றப்பட்ட ஏராளமான பொன்னும் வெள்ளியும் மக்களிடையே புழக்கத்திற்கு வந்ததால் மூலதனம் பெருகியது. ஊகவாணிக முயற்சிகள்

(Speculation) அதிகமாயின. தொழிலிலும் வாணிகத்திலும் பெரிய அளவில் முதலீடு செய்து இலாபமடையப் பலர் முன் வந்தனர். தமது வருவாயைப் பெருக்குதற்கு நினைத்த பல நாடு கள், வியாபாரத்தையும் தொழிலையும் வலிய ஆதரித்து வளர்க்க லாயின. வரிகளால் வரும் பணத்தைவிடப் பொருளாதார முன் னேற்றத்தால் அதிகப் பணம் படைப்பதை அறிந்தே அந்நாடுகள் அத்தகைய வழிகளைக் கடைப்பிடித்தன. இங்ஙனம் தனிப்பட்ட வர்களும் அரசாங்கமும் சேர்ந்து முயன்றதால் எங்குப் பார்த்தாலும் மிகப் பெரிய அளவில் உற்பத்தி செய்யப்பெறலாயின. தொழிலும் வியாபாரமும் போட்டி போட்டுக்கொண்டு வளரலாயின.

வேளாண்மைத் துறையிலும் வியத்தகு மாற்றங்கள் பல நிகழ்ந்தன. அலெக்ஸாந்தரின் வழித்தோன்றல்கள் யாவரும் நிலப்பிரபுக்களின் நிலங்களனைத்தையும் பறிமுதல் செய்து அவற் றைத் தம் சொந்த உடைமைகளாக ஆக்கிக்கொண்டனர். அதன் பின் தங்களது நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் பெரும்பண்ணை களாக அவற்றைப் பிரித்து வழங்கினர். இங்ஙனம் நாட்டின் நிலங் கள் யாவும் ஒருசிலரிடத்தே செறியலாயின. அவ்வொருசிலர் நிலங்களைப் பல விவசாயிகளிடம் குத்தகைக்கு விட்டனர். யார் அதிகக் குத்தகை கொடுத்தார்களோ அவர்களுக்கே நிலங்கள் வழங்கப்பட்டன. நிலங்களைக் குத்தகைக்கு எடுத்தோர், அதிக இலாபம் பெறவேண்டி உழவுத் தொழிலாளிகளை நசுக்கிப் பிழிந்து வேலை வாங்கினர். நில அடிமைகளின் எண்ணிக்கை நாட்டில் அதிகரித்தது. பெரும் நிலப்பிரபுக்களோடு போட்டி போட முடியாத சிறிய விவசாயிகள் தங்கள் நிலங்களை விற்றுவிட்டுக் குத்தகையாளராக மாறினர். நிலத்தில் அறுவடை முடியும் வரை குத்தகைக்காரர்கள் நிலத்தை விட்டுப் போகாதவாறு தடுக்கப் பட்டனர். விளைச்சலில் தமக்குச் சேரவேண்டிய பகுதியை மன்னர் தமக்குப் பிரியமான விலைக்கு விற்றுப் பணந் திரட்டிக்கொண்ட பின்பே குத்தகைக்காரர்கள் தங்களுக்கு கிடைத்த தானியத்தை விற்க அனுமதிக்கப்பட்டார்கள். நிலத்தை விட்டு ஓடவோ அல்லது வேலை நிறுத்தம் செய்யவோ முயன்ற குத்தகைக்கார உழவர்கள் நிலத்தைவிட்டுத் தனியே பிரிக்க முடியாத அடிமைகளாக மாற்றப்பட்டனர். சுதந்திரமாக வேளாண்மை செய்துவந்த பல சிறு குடியானவர்கள் பிரபுக்களிடம் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க இயலாமல் அவர்களுக்கே தங்களை அடிமைகளாக்கிக் கொண்டனர்.

தனது வருவாயைப் பெருக்கவேண்டி அரசாங்கமே ஒருசில தொழில் முயற்சிகளிலிறங்கியது. எகிப்தை ஆண்ட தாலமிகள்

பெரும் தொழிற்சாலைகளையும், கடைகளையும் சொந்தமாக நடத்தினர். தனிப்பட்டவர்களால் நடத்தப்பெற்ற தொழில்களின்மீதும் அவர்கள் பலவிதமான கட்டுப்பாடுகளை ஏற்படுத்தினர். தனிப்பட்ட முதலாளிகளால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் விலைகளை மன்னரே நிர்ணயம் செய்தார். தமக்குச் சொந்தமான தொழிற்சாலைகளில் உண்டாக்கப்பட்ட பொருள்களின் விலையை விற்கும் விலையைவிடக் குறைவாக ஏனையோர் விற்காதவாறு மன்னர் பார்த்துக் கொண்டார். வாணிகத்தில் தனிப்பட்டவர்களே தனியுரிமை பெற்றிருந்தனர். இருப்பினும் அரசர் அவர்கள்மீது ஏராளமான வரிகளை விதித்து அவர்களது இலாபத்தில் பெரும் பகுதியைத் தாமே பிடுங்கிக்கொண்டார். எனினும் புதிய வாணிக முயற்சிகளுக்கு மன்னர்கள் பெரிதும் ஊக்கமூட்டினர். துறைமுகங்கள் நன்கு பழுது பார்க்கப்பட்டுப் பல வசதிகளும் கொண்டனவாகத் திருத்திக் கட்டப்பட்டன. கடற்கொள்ளைக்காரர்களை ஒழிக்க வலிய கடற்படை ஒன்றை மன்னர் உருவாக்கினர். பாதைகளும் நீர்வழிகளும் பல புதியனவாக அமைக்கப்பட்டதோடு பழையனவும் பழுது பார்க்கப்பட்டன. மற்றும் தாலமிகள், பல புவியியல் வல்லுநர்களைப் பணம் கொடுத்து அனுப்பிப் புதிய கடல் வழிகளைக் கண்டுபிடிக்குமாறு ஊக்குவித்தனர். எனவே, அலெக்ஸாந்திரியா துறைமுகத்தில் வெளிநாட்டுப் பொருள்கள் ஏராளமாக வந்து குவிந்தன. அரேபியாவிலிருந்து வாசனைத் திரவியங்களும், சைப்ரஸிலிருந்து செம்பும், இந்தியாவிலிருந்து பொன்னும், பிரிட்டனிலிருந்து தகரமும், நூபியாவிலிருந்து தந்தமும், ஸ்பெயினிலிருந்து வெள்ளியும், ஆசியா மைனரிலிருந்து விலையுயர்ந்த கம்பளங்களும், சீனுவிலிருந்து பட்டும் அங்கு வந்து ஏராளமாக இறக்குமதியாயின. அங்ஙனம் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களிலிருந்து அரசாங்கத்துக்கும், தனிப்பட்ட வியாபாரிகளுக்கும் 20 முதல் 30 சதவிகிதம் இலாபம் கிடைத்தது.

பொருளாதாரத் துறையில் ஏற்பட்ட இன்னெரு புரட்சிகரமான மாறுதல், பல்வேறு நாடுகளிடையே ஏற்பட்ட நாணயச் செலாவணி முறையாகும். பொன்னுலும், வெள்ளியாலும் செய்யப்பட்ட நாணயங்கள் ஒரே எடையும் மதிப்பும் உடையனவாகச் செய்யப்பட்டன. அவற்றில் மன்னரது தலையின் வடிவும், சில சமயம் முழு உருவமும் பொறிக்கப்பட்டிருந்தன. உபரி மூலதனத்தைப் பல வணிகர்கள் வங்கியில் போட்டு வைத்தனர். வங்கிகளை (Banks) அரசாங்கமே நடாத்தி வந்தது. கடல் கடந்த வாணிகத்தில் ஈடுபட்ட வியாபாரிகள் வங்கிகளிலிருந்து வட்டிக்குக் கடன் வாங்கினர். மூலதனம் நிறைய இருந்ததால் வட்டி குறைவாகவே வாங்கப்பட்டது. இரண்டாம் நூற்ருண்டில் 12 சதவிகிதமும்,

மூன்றும் நூற்றுண்டில் 7 சதவிகிதமும் வட்டிகள் வசூலிக்கப்பட்டன. ஊக வாணிகம், பரஸ்பரப் போட்டி, பெருந் தொழில் வளர்ச்சி இவற்றில் மக்கள் உற்சாகத்துடன் நுழைந்தனர்.

வாணிகத்தில் நிறையப் பொருளீட்டியவர்களில் வணிகரும் உயர்குடி மக்களுமான ஒருசிலரே இருந்தனர். ஏனைய பெரும் பான்மையோரான குடியானவர்களும் நகரத் தொழிலாளிகளும் மிகவும் சாதாரண நிலையிலேயே இருந்தனர். ஆதென்ஸில் பெரிக்ளீஸ் காலத்தில் வழங்கப்பட்ட கூலியில் பாதியளவே கி.மு. மூன்றும் நூற்றுண்டில் வாழ்ந்த தொழிலாளிக்குக் கொடுக்கப் பட்டது. கூலி குறைந்ததே ஒழிய வாழ்க்கைத்தரம் முன்னைய நிலையைவிட மிகவும் கூடுதலாகவே இருந்தது. பொருள்களின் விலை பன்மடங்கு உயர்ந்துவிட்டது. எனவே, ஏழைத் தொழி லாளர் வயிற்றுக்குப் போதிய கஞ்சிகூட இல்லாமல் வாடினர். பல தொழிலாளிகள் வேலை எதுவுமின்றி வீட்டில் வீண்காலம் கழிக்க நேர்ந்தது. அத்தகையோர்க்கு அரசாங்கம் இனமாகத் தானியங்களை வழங்கிவந்தது. அடிமைகளை வைத்துக்கொள்ளும் வழக்கம் குறைந்தது. ஏனெனில், மிகக் குறைவான கூலிக்கு வேலை செய்ய ஏராளமான ஆள்கள் போட்டி போட்டுக்கொண்டு வந்தனர். அடிமைகளை வீட்டோடு வைத்துப் பராமரிப்பதற்கு அதைவிட அதிகம் செலவானதால் அடிமைகளைக் காட்டிலும் நாள் கூலிக் காரருக்கே கிராக்கி அதிகம் ஏற்பட்டது.

சமுதாயப் பொருளாதாரத் துறையில் ஏற்பட்ட மற்ருெரு புரட்சிகரமான மாறுதல், பெரு நகரங்களின் வளர்ச்சியாகும். நகர மாந்தரின் ஆடம்பர வாழ்க்கையையும், சுக போகங்களையும் கண்ட நாட்டுப்புற மக்கள், கிராம வாழ்க்கையில் சலிப்படைந்து நகர்களை நோக்கித் திரள் திரளாகப் புறப்பட்டனர். 'கெட்டும் பட்டணம் சேர்' என்ற மூடக் கொள்கை, கிராம மக்களிடையே எப்படியோ பரவிவிட்டது. எனவே, நகரங்களில் மக்கள்தொகை அளவுக்கு மீறி அதிகரிக்கலாயிற்று. சிரியாவிலிருந்து ஆண்டியாக் (Antioch) நகரில் ஒரே நூற்றுண்டில் மக்கள் தொகை இரு மடங்காகிவிட்டது. டைக்ரிஸ் நதிக்கரையின்மீது அமைந்திருந்த செல்யூஸியா (Seleucia) எனும் சிறிய நகரம் இரண்டே நூற்றுண்டில் பல்லாயிரக் கணக்கான மக்கள் வாழும் பெரு நகரமாக மாறிவிட்டது. எகிப்தி லிருந்த அலெக்ஸாந்திரிய நகரம், ஏறக்குறைய ஒரு மில்லியன் மக்களைத் தன்னகத்தே கொண்டு விளங்கியது. நன்கு பாவப் பெற்ற அகன்ற வீதிகளும், மாட மாளிகைகளும், கூட கோபுரங் களும் நிறைந்து அந் நகர் கண்டார் வியக்கும்வண்ணம் அமைந் திருந்தது. உடற் பசியைப் போக்கத்தக்க வாழ்க்கை வசதிகள்

பலவும் நிரம்பப் பெற்ற அந் நகரில் அறிவுப் பசியைப் போக்குதற்கான நூல் நிலயம் ஒன்றும், கலைப்பொருட் கண்காட்சி ஒன்றும் அமைந்திருந்தன. நூல் நிலயத்தில் 7,50,000 நூல்கள் இருந்தன. அறிவியல் ஆராய்ச்சியாளர்கள் அந்நகரில் ஏராளமாக இருந்தனர். புதுமைகள் பலவற்றை அவர்கள் படைத்தவண்ணமிருந்தனர். நகரின் சுகபோக வாழ்க்கையைச் சுவைத்தவர்கள் மேட்டுக்குடி மக்களாவர். சாதாரண ஏழை எளிய மக்கள் மற்றவர்களுக்காக உழைத்து உளுத்துப்போனுர்களேயன்றி வாழ்க்கையின் இன்பங்களை நுகர அவர்களுக்கு வாய்ப்புக் கிட்டவில்லை.

**தத்துவம்**

கிரேக்க நாகரிகத்தில் பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்டு கம்பீரமாகத் தலைநிமிர்ந்து நின்ற தத்துவ ஞானம், அலெக்ஸாந்தரது காலத்துக்குப்பின், நிலயினின்றும் பெரிதும் இழிந்தது. அறிவும், அனுபவமும் காற்றில் பறந்தன. அறிவுக்குப் பொருத்தமில்லாத மூடு மந்திரங்களும், ஆன்மானுபாவங்களும் (Mysticism) நிறைந்த தத்துவமானது மக்களைக் கண்மூடி வழக்கங்களில் ஆழ்த்தலாயிற்று. வாழ்க்கை துன்பமயமானதென்று கூறி, அத்துன்பத்தினின்றும் விடுதலை பெறுவதற்கான பல பூடகமான வழிகளைக் கூறுவதே இக் காலத் தத்துவாசிரியர்களின் வேலையாயிருந்தது.

எபிக்யூரியனிஸம் (Epicureanism), ஸ்டாயிஸிஸம் (Stoicism) ஆகிய இருவகைப்பட்ட தத்துவ முறைகளே இக்காலத்தில் தலைதூக்கி நின்றன. இவை யிரண்டும் ஏறக்குறைய ஓரேமாதிரியான குறிக்கோளையே கொண்டிருந்தன. சமுதாயத்தைப் பற்றியும், அதன் நலனைப் பற்றியும் அவை கவலைப்படவில்லை. தனி மனிதனது நலமே அவைகளின் குறிக்கோளாயிருந்தது. இவ்விரண்டும் உலோகாயதத்தையே (Materialism) அடிப்படையாய்க் கொண்டிருந்தன. இப்பெரு உலகைப் பற்றியே அவை பேசினவேயன்றி, நுண்ணுலகம், ஆன்மா, தெய்வம் இவற்றை அவை நம்பவில்லை. இவ்விரண்டு தத்துவங்களும் மாற்ற இயலாத ஒரு வகையான ஊழில் நம்பிக்கை கொண்டிருந்தன. 'ஊழிற் பெருவலி யாவுள; மற்றொன்று சூழினும் தாம்முந்துறும்' என்னும் குறளுண்மையை அவர்கள் அப்படியே நம்பினர். ஆனல், குறள் வற்புறுத்துவதுபோல மனித முயற்சியின் மேன்மையை அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. ஊழ் என்பது மனித முயற்சியால் வெல்ல முடியாத ஒன்று என்பதே அவர்தம் கொள்கையாகும். இவ்விரு சாராருமே ஐம்பொறிகளினுல் அறியப் பெறுபவைகளை மட்டுமே அறிவாகக் கருதினர்.

அடிப்படையில் ஒற்றுமை இருந்தாலும், நடைமுறையில் இவ்விரு தத்துவவாதிகளும் எதிர்த் திசைகளிலேயே போய்க்கொண்டிருந்தனர். எபிக்யூரியர்களை ஒருவகைப் போகிகளென்றும், ஸ்டாயிக்குகளை ஒருவகை யோகிகள் என்றும் கருதலாம். எபிக்யூரியர்கள் இன்பமே (Pleasure) வாழ்க்கையின் குறிக்கோள் எனக் கருதினர். ஐம்பொறிகளால் அனுபவிக்கக் கூடிய இன்பங்களை எல்லாம் நன்கு துய்க்காதவன், பிறந்ததன் பயனை அடையாதவன் என்றே அவர்கள் நம்பினர். ஆனால், இன்பம் அனுபவிப்பதில் அளவுக்கு மீறக்கூடாது என்பதையும் அவர்கள் வற்புறுத்தினர். அளவுக்கு மீறிய விபசாரத்தில் ஈடுபடும் ஒருவன் எவ்வளவு இன்பத்தை அடைகிருனே அவ்வளவு துன்பத்தையும் அடைய வேண்டுமாதலால் அத்தகைய இன்பங்கள் தவிர்க்கப்பட வேண்டுமெனவும், அளவோடு மிதமாக உடற்பசியைத் தணித்துக்கொள்ளுவதே உடலுக்கும் உள்ளத்துக்கும் நலம் பயப்பதாகும் என்று அவர்கள் போதித்தனர். உடலின்பத்தைவிட மனத்தளவில் அனுபவிக்கப்படும் அறிவின்பம் உயர்ந்தது என அவர்கள் கருதினர். முன்பு அனுபவித்த இன்பங்களை எண்ணி எண்ணி மனத்தில் அசைபோடுவதும், கொள்ள வேண்டியது எது? தள்ள வேண்டியது எது? சிலவற்றை ஏன் மறுக்க வேண்டும்? என்பவற்றை எல்லாம் சிந்தித்து, அவற்றைப் பற்றியே தியானம் செய்வதால் ஏற்படும் இன்பம் மகத்தானது என அன்னுர் கூறினர். ஆனால், இவை யாவற்றினும் சிறந்த இன்பம் ஒன்றைப் பற்றியும் அவர்கள் பெரிதும் வற்புறுத்தினர். அது உடல் துன்பம், மனத்துன்பம் இரண்டும் தோன்ருத ஓர் ஆன்ம நிலையில் உண்டாகும் இன்பமாகும். சலனமற்ற உள்ளத்தே தோன்றும் சாந்தியே (Serenity) அத்தகைய இன்பத்தைத் தர வல்லது என அவர்கள் கருதினர். சாந்தியை ஒருவன் அடையவேண்டுமானுல் அதற்குத் தடையான பயம் போகவேண்டும். பயமே துன்பத்துக்கெல்லாம் காரணம். ஆனால், உண்மையில் மனிதன் எதற்கும் பயப்படவேண்டியதில்லை. ஆன்மா என்பது உடலோடு ஒட்டியது. உடல் மாண்டபின் ஆன்மா தனித்திருக்க இயலாது. அவ்வான்மாவைத் தண்டிக்கவும் அல்லது போற்றவும் தெய்வங்கள் முன்வருவதில்லை. கடவுளர்கள் மனித விவகாரங்களில் தலையிடுவதில்லை. எனவே, அவர்களுக்குப் பயன்பட வேண்டிய அவசியமில்லை. இங்ஙனம் எண்ணி ஒருவர் மனச்சாந்தியைப் பெறுதல் வேண்டும் என்பதே எபிக்யூரியர்களின் முக்கியப் போதனையாகும். அறவாழ்க்கையையும் ஒழுக்கத்தையும் விட்டுவிடவேண்டுமென அவர்கள் கூறவில்லை. இன்பத்தை அடைவதற்காக அறவாழ்க்கை வாழ வேண்டும் என்பதே அவர்களின் குறிக்கோள். ஆனல், பிற்கால ரோமானியர்கள் இக்

கொள்கையைத் தப்பர்த்தம் செய்து 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' என வாழ்வதே எபிக்யூரியனிஸம் என்று கருதலாயினர்.

ஜீனோ (Zeno) என்பாரின் சீடர்களான ஸ்டாயிக்குகளும் ஆன்ம சாந்தியையே குறிக்கோளாகக் கொண்டிருந்தனர். ஆனால், அறவாழ்க்கையை அவர்கள் பெரிதும் வற்புறுத்தினர். எபிக்யூரியர்களைப் போன்று இன்பத்தை அடைதற்குரிய ஒரு மார்க்கமாக அற வாழ்க்கையை எண்ணாமல் அதையே வாழ்வின் குறிக்கோளாக அன்னார் கருதினர். எனவே, அவர்கள் மிக விழிப்பாக நடந்துகொண்டனர். இன்பத்தால் தம்மை மறந்து எக்காளமிடாமலும், துன்பத்தால் மனமுடைந்து அழுது புலம்பாமலும் சமநிலையில் அன்னார் வாழ்ந்தனர். வாழ்க்கை நிலையாமையை அன்னார் என்றும் நினைவில் கொண்டு அறநெறியில் அணுவளவும் பிசகாது நடந்து கொண்டனர். உலக நியதி என்று ஒன்று இருக்கிறதென்றும், அதற்கேற்பவே ஒருவனுக்கு இன்ப துன்பங்கள் ஏற்படுகின்றனவென்றும், அதை ஒருவன் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் அனுபவிப்பதைத் தவிர வேறு வழியில்லை என்றும், எல்லாம் விதிப்படி நடக்கும்; அது அறிவுக்குப் பொருத்தமானதாகவும், பொது நன்மைக்கு உகந்ததாகவுமேயிருக்கும் என்ற நம்பிக்கையோடு ஒருவன் அமைதியாக வாழ்வதே நலம் என்றும் அவர்கள் போதித்தனர். துன்பத்தை வரவேற்க வேண்டுமென்றும், இடியே விழினும் மனம் கலங்கக் கூடாது என்றும் அவர்கள் கருதினர். இவர்களிலேயே தீவிரவாதிகள் சிலர் இருந்தனர். அவர்கள் ஸ்கெப்டிக்குகள் (Skeptics) அல்லது எதிலும் நம்பிக்கை இல்லாதவர்கள் எனப்பட்டனர். டயோஜினஸ் (Diogenes) என்பார் ஒரு புகழ் வாய்ந்த ஸ்கெப்டிக்காவார். அவர் ஒரு பட்டி தொட்டியில் வாழ்ந்து வந்தார். ஆதென்ஸின் தெருக்களில் ஒரு விளக்கைப் பிடித்துக் கொண்டே திரிவாராம். யாராவது 'ஏன் பகலில் விளக்குப் பிடிக்கிறீர்கள்?' எனக் கேட்டால், 'இந்த நகரில் உண்மையான மனிதன் ஒருவன் இருக்கிறானா என்று பார்ப்பதற்கு' எனப் பதில் சொல்வாராம். ஏறக்குறைய நம் நாட்டுச் சமணர்களைப் போன்றே ஸ்டாயிக்குகள் நடந்து கொண்டனர்; உடலை வருத்திக் கொண்டனர். ஆனால், உலகத்தாரை அவர்கள் வருத்தவில்லை. மறத்தல், மன்னித்தல், பிறர் கருத்துகளுக்கு மதிப்பளிக்கும் கண்ணியம் இவற்றை அவர்கள் வற்புறுத்தினர். அடிமை முறையையும் போரையும் இவர்கள் கண்டித்தனர். சினிக்குகள் (Cynics) என்ற ஒருவகைத் தத்துவவாதிகள் கூறியதுபோன்று சமுதாயத்தைவிட்டுத் தனிமைக்கு ஓடும்படி அவர்கள் கூறவில்லை. சமுதாயத்தினிடையே வாழ்ந்து அதன் துன்பங்களைப் பொறுத்துக்

கொண்டு அதற்குத் தொண்டு செய்யவேண்டுமெனவே அவர்கள் நினைத்தனர். 'கடமையைச் செய், பலனைப் பற்றிக் கவலைப் படாதே' என்ற கீதையின் வாக்கை அவர்கள் அப்படியே ஏற்றுக் கொண்டனர்.

எபிக்யூரியர்கள் ஓரளவு ஊழில் நம்பிக்கை கொண்டிருந்தார்களெனினும் மனிதனுல் அதை மாற்ற முடியுமென எண்ணினர். எல்லாப் பொருள்களும் சிறிய அணுக்களால் ஆக்கப்பட்டுள்ளன என்று அவர்கள் கூறினரென்ருலும் மனவலிமையால் அவ்வணுக்களின் இயக்கத்தை மாற்றமுடியுமென்று அவர்கள் கருதினர். அந்த அளவுக்கு அவர்கள் பண்டைய கிரேக்கர்களை ஒத்திருந்தனர். ஆனுல், ஸ்டாயிக்குகளைவிட அதிகசுயநலமுடையோராயிருந்தனர். அரசியல், சமுதாய வாழ்க்கை பற்றி அவர்கள் அதிகம் அக்கறை கொள்ளவில்லை. சட்டங்கள், அரசியல் நிறுவனங்கள் யாவும் மனிதரின் இன்ப நுகர்ச்சிகளுக்கு உதவத்தக்க வகையில் அமைக்கப்பட வேண்டும். மனிதரின் இன்பத்துக்காகத்தான் அரசு, சட்டம் எல்லாம் இருக்கின்றனவேயன்றி அவைகளுக்காக மனிதன் வாழவில்லை என அவர்கள் கருதினர். ஞானி ஒருவன் அரசியலில் கலந்துகொள்ளாமலிருப்பதே மேல் எனவும், உலகைத் திருத்த முயல்வது நாய் வாலை நிமிர்த்தி வைக்கும் முயற்சிக்குச் சமம் என்பதை உணர்ந்து தானுண்டு, தன் வாழ்க்கையுண்டு என்று வாழ்பவனே முழுமையான அறிவுடையவன் எனவும் அவர்கள் போதித்தனர்.

பிர்ரோ (Pyrrho) என்பவரால் தோற்றுவிக்கப்பட்டுக் கார்னியாடிஸ் (Carneades) என்பவரால் வளர்க்கப்பட்ட ஸ்கெப்டிஸிஸம் (Skeptcism) என்ற கொள்கையைக் கொண்டவர்கள், ஸ்டாயிக்குகளைவிட ஒருபடி முன்னே சென்றவர்கள். ஐம்பொறிகளால் அறியப்படுவதே அறிவு என்று சோப்பிஸ்டுகள் சொன்னதை வைத்துக் கொண்டு அவர்கள் இவ்வுலகில் எதுவும் நிலையான தன்மையுடையதன்று என்றும், எதையும் நிரூபித்தல் என்பது இயலாததென்றும், இப்படித் தோன்றுகிறது என்று சொல்லலாமே தவிர இப்படித்தான் இருக்கிறது என்று யாரும் அறுதியிட்டுச் சொல்ல இயலாது என்றும் அவர்கள் வாதித்தனர். இதுதான் உண்மை, இதுதான் நியாயம் என்று எதையும் சொல்ல இயலாதென்றும், சமயத்துக்கேற்றுர்போல் அவை மாறத்தக்கன என்றும் அன்னுர் போதித்தனர். ஏறக்குறைய நம்நாட்டு மாயா வாதத்தைப் போன்றிருந்தது அவர்களது தத்துவம்.

கி.மு. முதலாம் நூற்ருண்டளவில் தத்துவங்கள் ஏறக்குறைய கீழைய சமயங்களின் நிலையை அடைந்தன. பிலோ (Philo)

என்ற யூதர், பிளேட்டோவின் தத்துவத்தையும், கீழை நாட்டுச் சமயத்தையும் ஒன்று கலந்து நியோ பிளேட்டோனிசம் (Neo Platonism) என்ற தத்துவத்தை உருவாக்கினர். பருப்பொருள் நிலையாதது. ஆன்மா ஒன்றே நிலையானது. எனவே, பருப்பொருளான உலகை ஒருவன் துறக்க வேண்டும். இறைவனைத் தியானித்து அதன் மூலமாகவே ஞானத்தைப் பெறமுடியும். அறிவைக் கொண்டு ஒளியைப் பெற முடியாது என அவர்கள் போதித்தனர். தியானம் செய்து இறைவனோடு இரண்டறக் கலப்பதே வாழ்க்கையின் குறிக்கோள் என அன்னர் நம்பினர்.

**கலையும் இலக்கியமும்**

இக்காலத்தில் தோன்றிய இலக்கியங்கள் யாவும் பண்டைய இலக்கியங்களை ஒட்டியே எழுதப்பட்டனவேயன்றிச் சொந்தமாகச் சிந்தித்து எழுதப்பட்டவை அல்ல. கருத்தாழமும், அவற்றில் அதிகமாகக் காணப்படவில்லை. உள்ளதை உள்ளபடியே அவை சித்திரித்தன. எனினும், ஏராளமான நூல்கள் காளான்களைப் போல் தோன்றிக்கொண்டே இருந்தன. ஆயிரத்துக்கும் மேற்பட்ட இக்கால ஆசிரியர்களின் நூல்கள் பல்வேறு இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஆனால், அவற்றில் ஒன்ருவது, பண்டைய கிரேக்க இலக்கியங்களின் தரத்தை எட்டிப் பிடிக்கவில்லை.

ஹெல்லனிஸ்டிக் செய்யுள்கள் பெரும்பாலும் நாடக வடிவிலேயே அமைந்திருந்தன. நாடகங்கள் யாவும் மகிழ்ச்சியான நிகழ்ச்சிகளைக் கொண்ட இன்பியல் நாடகங்களாகவே விளங்கின. ஆனால், அரிஸ்டோபேனஸ் (Aristophanes) என்பாரது இன்பியல் நாடகங்களில் காணப்பட்ட கருத்தாழமும், சமுதாய ஊழல்களை மறைமுகமாகச் சாடுகின்ற திறமையும் இக்கால நாடகங்களில் காணப்படவில்லை. உள்ளதை உள்ளபடியே அவை சித்திரித்தன. வாழ்க்கையில் உள்ள இருண்ட பகுதிகளை விடுத்து, ஒளிமயமான நல்ல பகுதிகளை மட்டுமே அவை வெளிப்படுத்தின. அறிவு சம்பந்தப்பட்டதும் அரசியல் தன்மை பொருந்தியதுமான நாடகங்கள் மிகமிகக் குறைவாகவே வெளிவந்தன. காதல் வாழ்க்கையையும், அதன் கரடுமுரடான பாதையையும் அடிப்படையாகக் கொண்டே நாடகங்கள் பல எழுந்தன. பல இடுக்கண்களுக்குப் பின் காதலனும் காதலியும் திருமணம் செய்துகொண்டு இன்பமாக வாழ்வதாகவே பற்பல நாடகங்களின் முடிவும் அமைந்திருந்தன. கி.மு. மூன்ரும் நூற்ருண்டில் வாழ்ந்த தியாக்ரிடஸ் (Theocrites) என்பார் பல ஆயர் கவிதைகள் (Pastoral poems) எழுதினர். அவை

களுள் கிராம மக்களின் சூதுவாதற்ற வாழ்வும், இயற்கையின் எழிலும், கிராமியச் சூழ்நிலைகளின் கவர்ச்சியும் நன்கு படம் பிடித்துக் காட்டப்படுகின்றன. மீம் (Mime) என்ற ஒரு வகை நாடகங்கள் நகர்ப்புறக் கனவான்களின் சச்சரவுகள், பேராசைகள் முதலிய பல்வேறு நடவடிக்கைகளைச் சுவையான உரையாடல்கள் மூலம் வெளிப்படுத்தின.

உரைநடை இலக்கியங்கள் அதிகமாக இக்காலத்தே தோன்றவில்லை. வரலாறுகள்தான் இக்கால உரைநடை இலக்கியங்களாகத் திகழ்ந்தன. சுயசரிதங்கள் எழுதியவர்களும், கற்பனை உலகங்களைப் பற்றி வரைந்தவர்களும் ஒரு சிலர் இருந்தனர். மெகலாப்பொலிஸ் (Megalopolis) நகரைச் சார்ந்த போலிபியஸ் (Polybius) என்பார் இக்கால வரலாற்றாசிரியர்களுள் மிகச் சிறந்தவராவார். உண்மையைக் காணவேண்டுமென்ற துடிப்பிலும், அறிவியல் பூர்வமான ஆராய்ச்சிக் கண்கொண்டு எதையும் நோக்குவதிலும் அவர் தூசிடைடிஸ் என்ற பண்டைய வரலாற்று ஆசிரியரை ஒத்து விளங்கினார். சுயசரிதைகளே மக்களால் பெரிதும் விரும்பிப் படிக்கப்பெற்ற இலக்கியங்களாகும். எதிர்காலத்தில் நாடு இப்படித்தான் இருக்கவேண்டும் என எண்ணிய ஒரு சிலர் அதை ஒரு கற்பனை உலகமாகத் தங்களது நூல்களில் படைத்து மகிழ்ந்தனர். அத்தகைய கற்பனை உலகில் நிலங்கள், சொத்துகள் முதலியன பொதுவுடைமைகளாக இருந்தன. வாணிகமும் பணப்புழக்கமும் இல்லை. பேராசை இல்லாமல், ஒருவரை ஒருவர் சுரண்டாமல், பொருளாதாரத் துறையிலும், சமுதாயத் துறையிலும் சமத்துவத்தோடு வாழ்கிற மக்கட் சமுதாயத்தை அவர்கள் அத்தகைய நூல்களில் விவரித்தனர். ஊழல் நிறைந்த ஒரு சமுதாயத்தைச் சீர்திருத்த வேண்டுமென்ற ஆர்வத்தை அவை மறைமுகமாகப் புலப்படுத்தின.

கலைத்துறையிலும் பண்டைய மாண்பு குறைந்தது. பொற்காலக் கிரேக்கக் கலையில் காணப்பட்ட மனிதாபிமானம் (Humanism), அடக்கம், அமைதி, சமநிலை போன்ற உயரிய பண்புகள் மறைந்து அதற்குப் பதிலாகக் கோபம், தாபம், புலன்வழி நுகரப்படும் சிற்றின்பம் இவைகளே அவற்றால் வெளிப்படுத்தப்பட்டன. கட்டடங்களில் எளிமையும், கண்ணியமும் மறைந்து, ஆடம்பரமும், பகட்டும் குடிபுகுந்தன. மாளிகைகளும் அரண்மனைகளும் ஏராளமான செலவில் கட்டப்பட்டன. சான்றாக, அலெக்ஸாந்திரியா நகரத்துக் கலங்கரை விளக்கக் கோபுரமானது பல கிலோமீட்டர் உயரம் கொண்ட மூன்று மாடிக் கட்டடமாக விளங்கியது. உச்சியிலிருந்த ஒளி விளக்கைத் தாங்க எட்டுப் பெருந்

தூண்கள் அமைக்கப்பட்டிருந்தன. சிற்பங்களிலும், பழைய பண்புகள் மறைந்துவிட்டன. அளவில் மிகப் பெரியனவாயும், பார்வைக்கு மிக விகாரமாயும் அவை காணப்பட்டன. மனிதனின் மிருக உணர்ச்சிகளே அவற்றில் பெரிதும் சித்திரிக்கப்பெற்றன. லாகூன் (Laocoon) என்ற சிற்பத்தில் உடல் துன்பம் எவ்வாறு சித்திரிக்கப்பட்டுள்ளது என்பதை ஏற்கெனவே நாம் கண்டோம். பெர்காமம் (Pergamum) என்னுமிடத்தில் காத்துகள் (Goths) என்ற முரட்டு வகுப்பினருக்கும் கிரேக்கருக்குமிடையே நடை பெற்ற போரின் நினைவுச் சின்னமாக எடுக்கப்பட்ட மேடையில் பல அழகிய சிற்பங்கள் செதுக்கப்பட்டன. மரணமடையும் தரு வாயிலிருக்கும் வீரனொருவனின் சிற்பத்தில் உடல் துன்பங் கள் தத்ரூபமாக வெளிக்காட்டப்பட்டுள்ளன. மேலாஸ் நகர ரதி தேவதையின் (Venus) சிலை, சமோதிரேஸ் நகரைச் சார்ந்த வெற்றி தேவதையின் சிலை ஆகிய இரண்டும் இக்காலச் சிற்பங் களுள் தலை சிறந்தனவாகும்.

**சமயம்**

சமயத்துறையில் புத்தம் புதிய கருத்துகள் கிரேக்கரிடையே இக்காலத்துப் பரவ ஆரம்பித்தன. உணர்ச்சிக்கு உணர்வூட்டும் பல அம்சங்கள் சமயத்தில் சேர்க்கப்பட்டன. மறைவாகச் செய்ய வேண்டிய சடங்குகள் நிறைந்த ஆர்ப்பிக் (Orphic) சமயம் எலியூஸினியச் (Eleusinian) சமயம் முதலியன மக்களால் பெரிதும் விரும்பிக் கடைப்பிடிக்கப்பட்டன. எகிப்தியர்களின் தேவதையான ஐஸிஸ் (Isis) எனும் தெய்வ வழிபாட்டைப் பலர் பின்பற்றினர். விண்வெளியில் காணப்படும் கோள்களும் உடுக்களும் வணங்கப் பட்டன. அதனால் ஜோஸியக் கலையில் மக்களுக்கு அபாரமான நம்பிக்கை ஏற்படலாயிற்று. ஜொராஸ்டிரியச் சமயத்தின் கிளை களான நாஸ்டிஸிஸம் (Gnosticism), மித்ரேயிஸம் (Mithraism) போன்ற சமயங்களின் செல்வாக்கு அதிகரித்தது. பாவிகளை இரட் சிக்கக் கடவுளின் குமாரர் ஒருவர் வருவார் என்ற நம்பிக்கையை இம் மதங்கள் பரப்பின. உலகம் துன்பமயமானது. எனவே, மறு உலக வாழ்வுக்காக ஒவ்வொருவரும் பாடுபட வேண்டுமென அவை போதித்தன. ஏழைகளேயன்றிப் பணக்காரர்களும் இம்மையில் வெறுப்பும் மறுமையில் ஆசையும் கொண்டனர். பாலஸ்தீனத்தை அலெக்ஸாந்தரும், அதன்பின் ரோமானியரும் படையெடுத்து வென்றதன் விளைவாக அங்கிருந்த யூதர்கள் மத்தியதரைக் கடற் பிரதேசங்களிலெல்லாம் பரவி, கிரேக்க மொழியைக் கற்றுக் கிரேக்கப் பண்பைக் கடைப்பிடித்தனர். அதேசமயம் பாரசீகரிடம் தாங்கள் கற்ற சமயக் கொள்கைகளையும் அவர்கள் கிரேக்கச் சமயத் தோடு கலந்துவிட்டனர். ஆன்ம அநுபவம், இறைவனோடு

தியானத்தின் மூலம் இரண்டறக் கலத்தல் ஆகியவற்றைப்பற்றிய நம்பிக்கையை அவர்கள் கிரேக்கரிடையே புகுத்திவிட்டனர்.

*அறிவியல்*

மற்றெல்லாத் துறைகளையும்விட அறிவியல் துறையில்தான் ஹெல்லனிஸ்டிக் நாகரிகம், பண்டைய கிரேக்க நாகரிகத்தைவிடப் பெரிதும் வேறுபட்டுக் காணப்பட்டது. மெச்சத்தக்க முன்னேற்றங்கள் பல அறிவியலில் இக்காலத்தே ஏற்பட்டன. கணிதம், வான இயல், புவியியல், மருத்துவம், பௌதிகம் ஆகிய பாடங்களே நல்ல வளர்ச்சி பெற்றன. வேதியியல் (Chemistry), உயிரியல் (Biology) என்ற பாடங்கள் அவ்வளவாகப் படிக்கப்பெறவில்லை.

சாமோஸ் நகரைச் சேர்ந்த அரிஸ்டார்க்கஸ் (Aristarchus) என்பார் இக்காலத்து வான இயல் அறிஞர்களுள் சிறந்தவர். கிரேக்கக் கோபர்னிகஸ் என அழைக்கப்படும் அவர், சூரியனைப் பூமி சுற்றுகிறதென்றும், தன்னைத்தானேயும் சுற்றிக் கொள்ளுகிறதென்றும் அறிவித்தார். ஆனால், அவர் கருத்தை எவருமே நம்ப மறுத்தனர். இப்புவனத்தின் பெரும் பரப்பைப்பற்றி முதலில் பல உண்மைகளை வெளியிட்டவர் அவரே. வானில் காணப்படும் விண்மீன்கள் பூமியிலிருந்து வெகு தூரத்திலிருப்பதாலேயே அசையாமல் ஓரிடத்திலேயே இருப்பது போலத் தோன்றுகின்றன என்றும், மற்றபடி அவையும் வானத்தே வேகமாகப் போய்க் கொண்டிருக்கின்றன என்றும் அவர் கூறினர். ஹிப்பார்க்கஸ் (Hipparchus) என்ற இன்னொர் அறிஞர் (கி.மு. 2ஆம் நூற்றுண்டு) அறிவியல் பூர்வமான வானசாத்திரத்தை உருவாக்கினர். கிரகணங்களை அவர் துல்லியமாகக் கணித்தார். ஆஸ்ட்ரலாப் (Astralob) என்ற வானியல் கருவியைக் கண்டுபிடித்தவரும், விண்வெளியில் விண்மீன்கள் இருக்குமிடங்களைக் காட்டக்கூடிய அட்டவணை ஒன்றை உண்டாக்கித் தந்தவரும் அவரே. சந்திரனின் விட்டத்தை ஏறக்குறையச் சரியாகக் கணித்ததுமின்றிப் பூமிக்கும் அதற்குமிடையே உள்ள தூரத்தையும் ஓரளவு துல்லியமாக அவர் கணக்கிட்டார். எராடோஸ்தனிஸ் (Eratosthenes, கி.மு. 276) எனும் வான நூலறிஞர், எகிப்தின் வடகோடியிலும், தென்கோடியிலும் நண்பகலில் கதிரவன் உண்டாக்கும் நிழல்களின் அளவைக் கொண்டு பூமியின் சுற்றளவைக் கணக்கிட்டார். அலெக்ஸாந்திரியாவைச் சார்ந்த தாலமி என்பவரே இக்கால வான நூலறிஞர்களிற் கடைசியானவர். அவர் தாமே புதிதாகக் கண்டுபிடித்தவை அதிகமில்லை எனினும், ஏனையோரால் வானவியல்பற்றி எழுதப்பெற்றவைகளை எல்லாம் ஒருங்கே தொகுத்து வைத்தார். அவர் எழுதிய அல்மாஜெஸ்ட் (Almagest) என்ற வான நூல்தான் இடைக்கால

ஐரோப்பியர் விரும்பிப் படித்த நூலாகும். அதில் அவர் பூமியைச் சூரியன் சுற்றுவதாகவே எழுதிவைத்துள்ளார். அலெக்ஸாந்திரியா நகர் அக்காலத்தே கணித மேதைகள் பலரது உறைவிடமாய்த் திகழ்ந்தது. யூக்லிட் (Euclid, கி.மு. 328-285) எனும் கணிதப் புலவர், வரைபட கணிதத்தின் (Geometry) அடிப்படை உண்மை களை வெளியிட்டார். அவை முழுவதும் அவரால் புதிதாகக் கண்டு பிடிக்கப்படவில்லை எனினும், ஏனையோரின் படைப்புகளை எல்லாம் ஒருங்கே திரட்டிய பெருமை அவர்க்குண்டு. எகிப்திய மன்னர் தாலமியே அவரிடம் கணிதம் படித்ததாகத் தெரிகிறது. கி.மு. 3ஆம் நூற்றுண்டில் சிராக்யூஸில் வாழ்ந்த ஆர்க்கிமிடிஸ் (Archimedes) என்பார் ஒரு பெருங் கணித மேதையாவார். பொருள் களின் அடர்த்தியை (density) அவை நீரில் மிதக்கும்போது வெளித்தள்ளும் நீரைக் கொண்டு அறியலாம் என்ற உண்மையை அவர் குளித்துக்கொண்டிருக்கும்போது கண்டுபிடித்தார். உடனே 'நான் கண்டுபிடித்து விட்டேன்' எனப் பொருள்படும்படி 'யுரேகா' (Eureka) 'யுரேகா' என்று கூவிக்கொண்டே தெருவில் அவர் ஆடையின்றி ஓடினுராம். இவ்வுண்மையைப் பயன்படுத்தி சிராக் யூஸின் மன்னுரான ஹீரே (Hiero) என்பாரின் கிரீடம் பொன்னு லானதன்றன்று என்ற உண்மையை அவர் கண்டுபிடித்துக் கொடுத்தார். கோளங்கள், உருளைகள் பற்றிய பல உண்மைகளை அவர் கண்டு வெளியிட்டார். புவி ஈர்ப்பு விசைபற்றியும் (Centre of Gravity) அவர் ஆராய்ச்சி செய்துள்ளார். சிராக்யூஸின் எதிரிக் கப்பல்களை விரட்டியடிக்கவும், அழிக்கவும் அவர் ஒரு பொறியைக் கண்டுபிடித்தார் என்றும், ரோமானியர்களின் கப்பல்கள்மீது சூரிய வெளிச்சத்தைக் கண்ணுடிகள்மூலம் பாய்ச்சி அவற்றைப் பற்ற வைத்தார் என்றும் கூறப்படுகின்றன.

புவியியல் துறையில் மெச்சத்தக்க முன்னேற்றம் இக்காலத்தே ஏற்பட்டது. ஸ்ட்ராபோ (Strabo) என்பவர் உலகின் பல பாகங் களுக்கும் சென்று தாம் கண்டவைகளைப்பற்றி ஒரு நூல் எழுதி வைத்துச் சென்றுள்ளார். அதேபோன்று தாலமி என்ற அறிஞரும் உலகின் பல்வேறு இடங்களுக்குச் சென்று பார்த்துப் புவியியல் நூல் ஒன்றை வரைந்துள்ளர். அவருடைய உலகப்படம் ஏறக் குறைய தற்காலப் படத்தை ஒட்டியுள்ளது. அலெக்ஸாந்திரியா நகரைச் சார்ந்த எராடோஸ்தனிஸ் (Eratosthenes) என்பாரும் உலகப்படம் ஒன்றை வரைந்துள்ளார். அதில் அவர் உலகை அட்சரேகை, தீர்க்கரேகைகள் மூலம் பல பகுதிகளாகப் பிரித்துள் ளார். எல்லாக் கடல்களும் ஒன்றுக இணைந்திருக்கும் உண்மை யையும், மேற்கே பயணம் செய்தால் இந்தியாவை அடைய முடியும் என்பதையும் அவர் அப்போதே தெரிவித்தார்.

மருத்துவத் துறையிலும் சிறந்த பல அறிஞர்கள் இக்காலத்தே தோன்றினர். கால்கிடன் நகரைச் சேர்ந்த ஹெரோபிலஸ் (Herophilus) என்பார் கி.மு. மூன்றும் நூற்றுண்டில் அலெக்ஸாந்திரி யாவில் தங்கி உடல் நூல் துறையில் பல ஆய்வுகளை நடத்தினுர். மனித உடலை வெட்டி ஆராய்ச்சி செய்யும் முறையை அவரே முதன் முதல் கொணர்ந்தார் எனச் சொல்லப்படுகிறது. மூளையைப் பற்றியும், இரத்தத் துடிப்பு பற்றியும், அதைக் கொண்டு நோயை எங்ஙனம் ஊகித்தறியலாம் என்பது பற்றியும் அவர் விதந்து ஓதியுள்ளார். தமனிகளில் (Arteries) சிவப்பு இரத்தம் மட்டுமே இருக்கிறதென்றும், இருதயத்திலிருந்து இரத்தத்தை உடலெங்கும் அது கொண்டு செல்லுகிறது என்றும் முதலில் அறிந்தவர் அவரே யாவார். கி.மு. 3ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த எராசிஸ்டிராடஸ் (Erasistratus) என்பார் உடற்கூறு நூலை முதன்முதலில் ஒரு தனி அறிவியல் நூலாகப் பிரித்து எழுதியவராவார். இறந்துபோன சடலங்களைப் பிளந்து பார்த்து அவர் பல உடற்கூறுகளைப்பற்றிய உண்மைகளைக் கண்டறிந்தார். இதயத்தினுள்ளே கதவுகள் இருப்பதையும், நரம்புகள் வெவ்வேறு பணிகள் செய்வதையும் கண்டுபிடித்தவர் அவரே. இரத்தத்தை உடம்பிலிருந்து வெளியே எடுப்பதால் நோய் நீங்க வழி ஏற்படும் என்ற மூடக்கொள்கையை அவர் அறவே கண்டித்தார்.

பௌதிகத்தை ஒரு தனிப் பாடமாக ஆக்கியவர் சிராக்கி யூஸைச் சார்ந்த ஆர்க்கிமிடிஸேயாவார். நாம் மேலே பார்த்தபடி பொருள்களின் இன எடையைக் கண்டுபிடிக்கும் முறையை அவர் புதிய வகையில் எடுத்துக் கூறினுர். மற்றும் கப்பி (Pulley), திருகாணி (Screw), நெம்புகோல் (Lever) ஆகியவை பற்றிய உண்மைகளையும் அவர் கண்டு வெளியிட்டார். மற்றும் தண்ணீர் இறைக்கும் பொறியொன்றையும், கப்பல்களை இயக்கும் முன் தள்ளி களையும் (Propellers), எரிக்கும் குவி ஆடியையும் (Burning lens) அவர் கண்டுபிடித்தார். அலெக்ஸாந்திரியாவைச் சேர்ந்த ஹெரான் (Heron) எனும் விஞ்ஞானி பல பயனுள்ள பொருள்களைக் கண்டுபிடித்ததாகக் கூறப்படுகிறது. நெருப்பணைக்கும் இயந்திரம், சைபன் (Siphon), நீர் இறைக்கும் விசை இயந்திரம் (Force Pump), நீராவி இயந்திரம், கல்லெறியும் பொறி (Catapult) முதலிய பல கருவிகளை அவர் கண்டுபிடித்துப் பயன்படுத்தினுர். ஏற்கெனவே அவை புழக்கத்தில் இருந்தனவா என்பது திட்டவட்டமாகத் தெரியவில்லை. அடிமைகளை வேலைக்கு அமர்த்தும் முறை எங்கும் காணப்பட்டதால் இயந்திரத்தைப் பயன்படுத்த வேண்டும் என்ற ஊக்கம் யாருக்கும் ஏற்படவில்லை. எனினும், அக்கால நிலைக்கு

அலெக்ஸாந்திரியாக் கிரேக்கர்கள் பெரிதும் அறிவியலில் சிறந்து விளங்கினுர்கள் என்றே தோன்றுகிறது.

இங்ஙனம் பல துறைகளிலும் பண்டைய கிரேக்க நாகரிகத்தினின்றும் வேறுபட்டு விளங்கிய ஹெல்லெனிஸ்டிக் நாகரிகம் ஓரளவு தற்கால நாகரிகத்தை ஒத்து விளங்கியது. பெருமளவில் வாணிக முயற்சி, புதிய நாடுகளைக் கண்டுபிடிப்பதில் ஆர்வம், புதிய கருவிகளைக் கண்டுபிடித்தல், வியாபாரப் போட்டி, சுக போகங்களில் ஆர்வம், பெரிய நாடுகளின் தோற்றம், ஏழை பணக்காரர்களிடையே வேற்றுமை முதலியவைகள் ஏறக்குறைய தற்காலத்தில் இருப்பது போலவே அக்காலத்திலேயும் இருந்தன. அரசியல் துறையிலும், அறிவியல் துறையிலும், கலைத்துறையிலும் கூடப் பல ஒற்றுமைகள் காணப்படுகின்றன. ஆனுல், தற்காலத்தே நாம் காண்பது போன்று அவ்வளவு விரிவான முறையில் தொழிற் புரட்சியோ, அறிவியல் முன்னேற்றமோ அக்காலத்து ஏற்படவில்லை என்பது தேற்றம்.

**கிரேக்கர்கள் உலக நாகரிகத்திற்கு வழங்கிய நன்கொடை**

வாழ்ந்த காலம் சிறிதெனினும் வாழ்வாங்கு வாழ்ந்து வையகத்துக்கோர் வழிகாட்டும் ஒளிவிளக்காய்த் திகழ்ந்த பெருமை பண்டைய கிரேக்கர்களுக்குரியதே ஆகும். இன்றைய ஐரோப்பிய நாகரிகத்துக்கு வித்திட்டவர்கள் கிரேக்கர்களே ஆவர். அவ் வித்தினை முளைக்க வைத்து, நீரூற்றி, உரமிட்டு அழகிய ஒரு செடியாக ஆக்கியவர்கள் ரோமானியர்களே ஆவர். இடைக்காலத்தே அச்செடியைக் காட்டுமிராண்டிகளின் படையெடுப்பு எனும் ஆடு மேய்ந்துவிட்ட காரணத்தால் ஓரளவு வளர்ச்சி குன்றி அஃது அப்படியே நின்றுவிட்டது. ஆனுல் கி.பி. பதினுன்கு, பதினைந்தாம் நூற்றுண்டில் இத்தாலியர்கள் அதற்கு மீண்டும் எருவிட்டு, நீரூற்றி உயிர் கொடுத்து வளர்த்தனர். செடி மரமாகி அதன் நீண்ட கிளைகள் ஐரோப்பாவெங்கும் பரவின. இன்றைக்கு அவை உலகின் மூலை முடுக்குகளிலெல்லாம் பரவியுள்ளன. அதன் கனிந்த கனியே இன்றைய மேலை நாகரிகம். எனவே, சிறப்பாக மேலை நாட்டினரும் பொதுவாக உலக மக்கள் அனைவருமே பண்டைய கிரீஸுக்குப் பல்வேறு துறைகளில் பெரிதும் கட்டுப்பட்டவர்கள் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. அரசியல், அறிவியல், அறவியல் (Ethics), மெய்யறிவியல் (Philosophy) ஆகிய பல துறைகளிலும் அன்று கிரீஸ் எனும் ஒரு சிறு அறையில் ஆடிய ஆட்டத்தையே ஐரோப்பியர்கள் இன்று உலகமெனும் அரங்கில் இன்னும் திறமையாக ஆடி வருகின்றனர் என்ருல் மிகையாகாது.

அறிவுத்துறையில் கட்டற்ற சிந்தனைக்கு முதலில் ஆக்கம் தந்தவர்கள் கிரேக்கர்களேயாவர். தற்கால ஆசிரியர் ஒருவர் கூறுவது போன்று 'சிந்தனை! சிந்தனை! தீர்க்கமான அறிவைத் தேடும் தீராத சிந்தனை! தீரத் தெளிந்த சிந்தனை!' இதுவே கிரேக்கர்களின் மூச்சாயிருந்தது. மதமோ, மதகுருக்களோ, சடங்குகளோ, சம்பிரதாயங்களோ தங்களது சிந்தனைக்கு விலங்கிடுவதை அவர்கள் தவிர்த்தனர். மதம் அவர்களது வாழ்க்கையில் இடம் பெறவில்லை என்று கூற இயலாது. அவர்கள் கடவுளரை வணங்கினார்கள். கோயில்களுக்குச் சென்றார்கள், விழா நடத்தினார்கள். டெல்பிக் குறிமேடைக்குச் சென்று அப்போலோ தெய்வத்தின் அருள்வாக்குக்கு மணிக்கணக்கில் காத்துக் கிடந்தார்கள். ஆனால், மதத்தை அவர்கள் கோயிலோடு நிறுத்திக்கொண்டார்கள். கோயிலுக்கு வெளியே அரசியலிலும், கலைகளிலும், தனிவாழ்க்கையிலும், அறிவே தனிநாயகம் செலுத்தியது. அறிவுக்கு முதலிடமும் சமயத்துக்கு இரண்டாமிடமும் கொடுத்ததனாலேயே அறிவியலும், அறவியலும் மெய்யறிவியலும், கலைகளும் வளம்பெற வளர்ந்தன எனலாம். சிந்தனைச் சிற்பி சாக்ரடீஸ்தான் கிரேக்கர்களுக்குச் சிந்திக்கும் கலையைக் கற்றுத் தந்தார். ஏன்? எப்படி? எதற்காக? என்ற கேள்விகளைத் தொடுத்து மெய்யறிவைப் பெறும்படி வற்புறுத்தியவர் அவரே. இத்தகைய ஆராய்ச்சி முறையே அறிவியல் மனப்பான்மை (Scientific outlook) எனத் தற்காலத்தே பேசப்படுகின்றது. அத்தகைய மனப்பான்மையின் விளைவாகவே இக்காலப் புதுமைப் படைப்புகள் (Inventions) யாவும் தோன்றியுள்ளன. இங்ஙனம் கிரேக்கர்கள் இக்கால அறிவியல் வளர்ச்சிக்கு அடிப்படையை அமைத்துத் தந்தவர்களாகின்றனர்.

கிரேக்கர்கள் இயற்கையாகவே அரசியல் உணர்வு படைத்தவர்களாவர். 'மனிதன் ஓர் அரசியல் பிராணி' (Man is a political animal) என்பது அரிஸ்டாடிலின் வாதமாகும். காலையிலிருந்து மாலைவரை அரசியல் தவிர வேறெதிலும் ஈடுபடாத குடிமக்கள் நிறைந்ததே ஆதென்ஸ் போன்ற நகர அரசுகள். அன்றாடம் மனிதனுக்குத் தேவையான பணிகளைச் செய்ய அடிமைகள் ஏராளமான பேர் இருந்ததால் குடிமக்கள் (Citizens) எனப்படுவோர் அரசியலில் முழுமனத்தோடு முழு நேரமும் ஈடுபடமுடிந்தது. மாஜிஸ்ரேட் என்ற நிர்வாக அதிகாரிகள் பதவிக்கு ஆண்டுக்கு ஒரு முறை தேர்தல் நடைபெற்றதால் அநேகமாக எல்லாக் குடிமக்களும் நிர்வாகத்தில் பங்கு பெற முடிந்தது. சட்டமன்றத்திலும், நீதிமன்றத்திலும் எல்லாக் குடிமக்களுமே உறுப்பினர்களாயிருந்தனர். எனவே, மக்கள் தம்மைத்தாமே ஆண்டு கொள்ளுகின்ற நேர்முக ஜனநாயகத்தை (Direct Democracy) உலகுக்கு

உருவாக்கியளித்தவர்கள் அவர்களே. சுவிட்ஸர்லாந்தில் குடி மக்கள் சட்டங்களைத் துவக்கவும் (Initiative), சட்ட மன்றத்தால் கொண்டு வரப்பட்ட மசோதாக்களுக்குக் குடியொப்பம் (Referundum) வழங்கவும் உரிமை பெற்று இருப்பது கிரேக்க ஜனநாயகத்தைச் சார்ந்ததேயாகும். பகராட்களைக் கொண்டு ஆட்சி நடத்தும் பாங்கையும் கிரேக்கர்கள் சில துறைகளில் கடைப்பிடித்தனர். அதன்வழி வந்தவையே தற்காலத்திய பகராண்மை ஜனநாயகம் (Representative Democracy) ஆகும். தற்கால ஜனநாயகமானது கிரேக்க ஜனநாயகத்தைக் காட்டிலும் பெரிதும் முன்னேறியுள்ளது எனினும், ஆள்கின்றவர்கள், ஆளப்படுவோருக்குப் பொறுப்பு வாய்ந்தவர்கள் (Responsible Government) என்ற ஜனநாயகக் கொள்கை அவர்களால் உருவாக்கப்பட்டதேயாகும். தற்காலத்தே நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை நிறைவேற்றிப் பாராளு மன்றங்கள் ஆட்சியாளர்களைப் பதவியிலிருந்து நீக்க உரிமை பெற்றிருப்பது போன்றே, அக்காலக் கிரேக்கரும், தமது நம்பிக்கையை இழந்துவிட்ட நிர்வாக அதிகாரிகளைப் பெரும்பான்மை வாக்கெடுப்பின் மூலம் தற்காலிகமாக நாடு கடத்தினர் (Ostracised). பொது மக்களைக் கொண்டு, 'தீர்ப்புச் சான்றுளர் குழு' (Jury) ஒன்றை அமைத்து, அதன் மூலம் வழக்குகளில் தீர்ப்பு வழங்கும் முறையை முதன் முதலில் படைத்தவர்கள் கிரேக்கர்களே. அந்த முறையையே இன்றும் பிரிட்டனும், இந்தியாவும், அமெரிக்காவும் இன்னும் பல நாடுகளும் பின்பற்றுகின்றன. பெரும்பான்மை வாக்கெடுப்பின் மூலம் தீர்மானங்களை நிறைவேற்றல், சீட்டு குலுக்கல்மூலம் தேர்ந்தெடுத்தல் (Lot System), குறிப்பிட்ட காலத்துக்கு மட்டுமே அதிகாரிகளைத் தேர்ந்தெடுத்தல் போன்ற ஜனநாயக முறைகள் கிரேக்கரின் அடிச்சுவட்டை ஒட்டியே நடைபெறுவனவாகும். அரசியலைப்பற்றிப் பொதுமக்கள் முன்னிலையில் ஆவேசமாகப் பேசுதல் (Oratory), அரசியல் சிக்கல்களை விவாதித்தல் முதலியவைகளைத் துவக்கியவர்களும் அவர்களே. அரசியல் சொற்பொழிவாற்றுவதை ஒரு கலையாகவே கிரேக்கர்கள் எங்ஙனம் வளர்த்தார்கள் என்பதை நாம் மேலே கண்டோம். நாம் இன்று அனுபவிக்கும் பேச்சுரிமை, சிந்தனையுரிமை, எழுத்துரிமை, கூட்டங்கூடும் உரிமை, வழிபாட்டுரிமை (Freedom of speach, Thought, Assemblage and Worship) போன்ற அமைதிக்கால உரிமைகள் (Civil Rights) யாவும் கிரேக்கர்களால் வற்புறுத்தப்பட்டவைகளேயாகும். பிளேட்டோவும், அரிஸ்டாடிலும் எழுதிய குடியரசு (Republic), அரசியல் (Politics) போன்ற நூல்கள் அரசியல் படிக்கும் மாணவர்களின் அரிச்சுவடிகளாய் விளங்குகின்றன. பொதுவுடைமைக் கொள்கையைப்பற்றி (Communism) பிளேட்டோ வற்புறுத்தியுள்ளார். ஸ்பார்ட்டாவில் காணப்பட்ட பொதுவுடைமைக்

கொள்கையே. தற்காலப் பொதுவுடைமை வாதத்துச்கு அடிப்படையாகும். கிரேக்க நகரங்களில் ஆட்சி புரிந்த சர்வாதிகாரிகளைப் பின்பற்றியே வல்லரசர்களும் (Despots), சர்வாதிகாரிகளும் (Dictators) நடந்துகொள்ளுகின்றனர். இங்ஙனம் பண்டைய கிரேக்கர்கள் தற்கால அரசியல் வாழ்வுக்குப் பலவகையிலும் அடிகோலியவர்களாகின்றனர்.

கலைத் துறையிலும் கல்வித்துறையிலும் தற்கால உலகம் பண்டைய கிரேக்கர்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளது. சாக்ரடீஸின் கேள்வி பதில் முறையை ஒட்டியே தற்கால விவாத வகுப்புகளும் (Discussion Classes) கருத்தரங்குகளும் (Seminars) நடைபெறுகின்றன. பள்ளிகளில் காணப்படும் உடற்பயிற்சிக் கூடங்களும் (Gymnasiums), அரங்குகளும் (Stadiums) கிரேக்கர்தம் வழிவந்தனவேயாகும். ஓட்டப் பந்தயம், கேடயம் எறிதல் (Discus Throw), குண்டு எறிதல் (Shot Put) போன்ற பல விளையாட்டுப் பந்தயங்கள் கிரீஸில் இருந்து வந்தவைகளே. கிரேக்கர்களின் ஒலிம்பிக் விளையாட்டுப் பந்தயங்களை ஒட்டியே இன்றைய ஒலிம்பிக் பந்தயங்கள் அமைக்கப்பட்டுள்ளன. 1869ஆம் ஆண்டிலிருந்து, நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை, அது உலகின் பல்வேறு தலைநகரங்களில் நடைபெற்று வருவது இன்றும் கண் கொள்ளாக் காட்சியாகும். மற்போர், சொற்போர், கவிதைப் போட்டி முதலிய கிரேக்கப் பந்தயங்கள் இன்றும் மக்களிடையே நடைபெறுவதை நாம் காண்கின்றோம். கல்வியைப் பற்றிய பல ஆங்கிலச் சொற்கள் கிரேக்க மொழியிலிருந்து கடன் வாங்கப் பட்டவைகளேயாகும். பௌதிகம் (Physics), எண் கணிதம் (Arithmetic), வரைபடக் கணிதம் (Geometry), அளவை நூல் (Logic), மெய்யறிவு நூல் (Philosophy) ஆகியவற்றைக் குறிக்கும் ஆங்கிலச் சொற்களின் மூலங்கள் கிரேக்க மொழியிலிருந்து வந்துள்ளன. வரைபடக் கணிதத்தில் யூக்லிட் (Euclid) என்ற அறிஞரின் தேற்றங்கள் (Theorems), பித்தாகோரஸ் என்பாரின் தேற்றம் (Pythogorus theorem) ஆகியவற்றை இன்றும் மாணவர்கள் கணிதவியலில் படிக்கின்றனர். கிரேக்கர்களே முக்கோணக் கணிதம் (Trignometry), நுண் கணிதம் (Calculus) ஆகியவற்றின் அடிப்படையை அமைத்துத் தந்தவர்கள். பௌதிகம் படிப்பவர்கள் ஆர்க்கிமிடீஸின் மிதவைக் கொள்கையை அறியாமலிருக்க முடியாது. தற்கால அணுச் சேர்க்கைக் கொள்கையின் (Atomic Theory) அடிப்படையை டெமாக்ரிடஸ் என்னும் கிரேக்க அறிஞர் அமைத்துச் சென்றுள்ளார் என்பதை நாம் மறக்க முடியாது. அதே போன்று கதிரவனை மையமாகக் கொண்டு பூமியும், ஏனைய கோள்களும் வட்டமிடுகின்றன எனும் கொள்கை

யைக் (Heliocentric Hypothesis) கண்டுபிடித்த கோப்பர்நிகஸுக்கு வழிகாட்டியாய் இருந்தவர் அரிஸ்டார்க்கஸ் (Aristarchus) என்னும் கிரேக்க வான நூலறிஞராவார். ஹிப்பார்க்கஸ், கிளாடியஸ் (Cladius), தாலமி(Ptolemy) ஆகியோரின் வான நூல் ஆராய்ச்சிகள் தற்கால வான நூலறிவுக்கு அடித்தளமெனின் மிகையாகாது. எராடோஸ்தனிஸ் (Eratosthanes) என்பாரே பூமியை அளக்கவும், அதன் தரைப்படங்களை வரையவும் மக்களுக்குக் கற்றுத் தந்தார். விலங்குகளையும், செடிகளையும் வகைப்படுத்தியும், ஆராய்ந்தும் அரிஸ்டாடில், தியோபிராஸ்டஸ் (Theophrastus) என்ற அறிஞர்கள் தற்கால விலங்கியல் (Zoology), தாவர இயல் (Botany), வானிலை ஆராய்ச்சி (Meteorology), கருவாராய்ச்சி (Embryology) முதலிய அறிவியல் அறிவுக்கு அடிகோலினர்கள். மருத்துவ அறிவை மூடக் கொள்கையிலிருந்து விடுவித்து, இயற்கைக் காரணங்களால்தான் நோய்கள் ஏற்படுகின்றன என்பதையும், அவற்றை நீக்க மருந்துகள் தேவை என்பதையும், அறுவை சிகிச்சை முறையையும், உடலைப் பிளந்து உண்மை காணும் முறையையும் (Dissection), ஹிப்போகிரடிஸ், ஹெரோபிலஸ் (Herophilus), எராசிஸ்டிரேடஸ் (Erasistratus) என்ற கிரேக்க அறிஞர்கள்தாம் முதன்முதலாக உலகுக்கு எடுத்துக் கூறியவர்கள். இங்ஙனம் தற்கால அறிவியல் பாடங்கள் அத்தனைக்கும் அடிப்படையை வகுத்தளித்த பெருமையைக் கிரேக்கர்கள் பெறுகின்றனர்கள். கிரேக்க மரபுகளை ஒட்டியே ஐரோப்பிய இலக்கியங்கள் அமைந்துள்ளன. எழுத்துகளைக் குறிக்கும் ஆல்பபெட் (Alphabet) என்ற ஆங்கிலச் சொல், ஆல்பா (Alpha), பீட்டா (Beta) என்ற கிரேக்க எழுத்துகளின் அடிப்படையிலிருந்து தோன்றியதேயாகும். பினீஷியர்களிடமிருந்து கற்ற எழுத்துக் கலையைச் செம்மையாக்கிக் கிரேக்கர்கள் ரோமானியர்களுக்கு வழங்கினர். ரோமானியர்கள் அவற்றை மேலும் செம்மையாக்கி ஐரோப்பியர்களுக்குக் கொடுத்தனர். இந்திய மொழிகளில் வடமொழியும், தமிழும் விரவிக் கிடப்பதைப் போன்று, ஐரோப்பிய மொழிகள் அனைத்திலும் கிரேக்கமும், இலத்தீனும் கலந்து கிடக்கின்றன. அறிவியல் பற்றிய உலகப் பொதுச் சொற்கள் பலவும் கிரேக்கச் சொற்களே ஆகும். உருக்கமான உணர்ச்சிக் கவிதைகள் (Lyric), நாட்டுப்புற வருணனைக் கவிதைகள் (Idyll), கையறுநிலைக் கவிதைகள் (Elegy), புதினம் (Novel), கட்டுரை, சொற்பொழிவு, தன்வரலாறு (Biography), வரலாறு, நாடகம் ஆகிய இலக்கிய வகைகளைப் படைத்து உலகுக்கு வழங்கியவர்கள் கிரேக்கர்களே. யாப்பு, அணி இலக்கணம், புள்ளியிடுதல் (Punctuation), பகுதிகளை அமைத்தல் (Paragraphs) முதலியவற்றை ஐரோப்பியர்களுக்குக் கற்பித்தவர்கள் கிரேக்கர்களே எனலாம். சொற்பொழிவுகளைத் தயாரித்தல் மூலம் உரைநடை இலக்கியத்

திற்கு (Prose) அவர்கள் வித்திட்டார்கள். துன்பியல் நாடகம் (Tragedy), இன்பியல் நாடகம் (Comedy), சைகை நாடகம் (Pantomime) ஆகியவற்றைக் குறிக்கும் ஆங்கிலச் சொற்கள் கிரேக்கச் சொற்களே அன்றி வேறல்ல. மனிதனது துன்பங்களை நாடகமாக்கி அதிலிருந்து மக்களுக்குப் பாடங்களைக் கற்றுக் கொடுக்க முதன் முதலில் துணிந்தவர்கள் கிரேக்கர்களேயாவர். கிரேக்க நாடகங்களை ஒட்டியே பென்ஜான்சன் (Ben Jonson), மோலியர் (Moliere) போன்ற தற்கால நாடகாசிரியர்கள் நாடகங்களைப் படைத்துள்ளனர். கிரேக்கர்களின் திறந்த வெளி நாடகங்களை ஒட்டியே தற்காலத் திறந்த வெளி அரங்குகள் அமைக்கப்பட்டுள்ளன. வரலாற்றை முதன் முதலாக வரைந்தவர்கள் கிரேக்கர்களே. முக்கியமாக அரசியல் வரலாற்றிற்கு அரிச்சுவடிகளை ஆக்கித்தந்தவர்கள் ஹைரடோடஸ், தூசிடைடிஸ் போன்ற புகழ்மிக்க கிரேக்க வரலாற்றாசிரியர்களே யாவர். கிறிஸ்துவ சமயத்தில் காணப்படும் பல சடங்குகளும், ஓசைரிஸ் (Osiris), ஆர்ப்பிக் (Orphic), எலியூஸினியன் (Eleusinion) கோட்பாடுகளில் இருந்தே பிறந்துள்ளன. மன்பதைக்காகத் தேவ குமாரன் மரித்தல், உயிர்த்தெழுதல், புனிதத்திலிருந்து நரகம், சுவர்க்கம், சாத்தான் உண்டாதல் முதலிய கருத்துகள் அக்கோட்பாடுகளிலிருந்தே தோன்றியுள்ளன. கிரேக்கர்களின் மூடக் கொள்கைகளான நாள் பார்த்தல், சகுனம் பார்த்தல், மந்திரவாத மங்கையிருப்பதாக நம்பல் போன்றவைகளும் ஐரோப்பியச் சமுதாயத்தில் இன்றும் உலாவுகின்றன. கிரேக்கப் புராணங்களைப் பற்றிய அறிவின்றி ஆங்கில இலக்கியங்களைச் சுவைத்தல் என்பது முடியாத காரியம். ஐரோப்பிய தத்துவத்தின் பெரும்பகுதி இன்னும் கிரேக்கர்கள் தோற்றுவித்த அளவிலேயே நிற்கிறது. எதையும் துருவித் துருவி ஆராயும் மனம் படைத்த கிரேக்கர்கள் இயற்கையையும், வாழ்வின் நுட்பங்களையும் ஆராயத் தவறவில்லை. தற்காலத் தத்துவக் கொள்கைகளான காட்சிப் பொருள் கொள்கை (Realism), நிறைநெறிக் கொள்கை (Idealism), மாயாவாதம் (Nominalism), ஏகதெய்வவாதம் (Monotheism), அனைத்திறைக் கொள்கை (Pantheism), நாத்திகம் (Atheism), பெண்மை வாதம் (Feminism), உலோகாயதம் (Materialism) போன்றவைகள் எல்லாம் கிரேக்கத் தத்துவாசிரியர்களின் சிந்தனையிற் கொப்பளித்தவைகளேயன்றி வேறல்ல. கேன்ட் (Kant), ஸ்கோபன்ஹேர் (Schopenhaur), நீட்ஸ்கி (Nietzche), பிராய்ட் (Freud) போன்ற அறிஞர்களின் மனோதத்துவக் கொள்கைகள் கிரேக்கர்தம் அடியொற்றிப் பிறந்தனவேயாகும். கிரேக்கர்கள் தத்துவம் பேசியது மட்டுமின்றி அவற்றின்படி வாழ்ந்தும் காட்டினார்கள். சாக்ரடீஸ், பிளேடோ, டயோனிஷியஸ் போன்ற தத்துவ மேதைகளைப் பின்பற்றியே பிற்கால ரோமானியப் பேரரசர்கள் சிலரும், மறுமலர்ச்சிக்கால சமய

விரோதிகளும் (Rererics), கிறித்துவப் பாதிரிமார்களும் தத்துவ வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்ந்தார்கள்.

ஐரோப்பியக் கலைகள் பல கிரேக்கருக்குப் பல வகையில் கடமைப்பட்டுள்ளன. இன்றைய ஐரோப்பிய இசை, கிரேக்க இசையினின்றும் பெரிதும் வேறுபட்டதாகக் காணப்படுகிறது. எனினும், அதன் அடிப்படை கிரேக்கருடையதுதான் எனலாம். அதுபோல் ஐரோப்பிய நடனக் கலையும் கிரேக்கக் கிராமியங்களின் ஆட்டங்களை அடிப்படையாய்க் கொண்டவையே ஆகும். பலபேர் சேர்ந்து பாடும் குழு இசை, மேடை இசை இவைகளையும், இசையின் கோட்பாடுகளையும் பித்தாகோரஸ், அரிஸ்டோக்ஸீனஸ் (Aristoxenus) போன்ற பல கிரேக்க இசைப் பேரறிஞர்கள் அமைத்துச் சென்றுள்ளார்கள். ஓவியக் கலையைப் பொறுத்த வரையில் சுவரோவியத்தின் (Frescoes) முன்னோடியாகக் கிரேக்கர்கள் விளங்குகின்றனர். கியாட்டோ (Giotto), மைக்கேல் ஏஞ்சலோ (Michel Angelo) போன்ற மறுமலர்ச்சி ஓவியர்களும் தற்காலச் சுவரோவியர்களும் கிரேக்கர்களின் ஓவியப் பண்பையே பின்பற்றியுள்ளனர். தற்காலச் சிற்பங்கள் பல கிரேக்கர்களின் சிலைகளைப் போன்றே ஆக்கப்படுகின்றன. உடல் அழகு அதில் பெரிதும் வற்புறுத்தப்படுவது கிரேக்க மரபாகும். இந்தியாவில் கனிஷ்கர் காலத்துக் காந்தாரச் சிற்பங்கள், கிரேக்கச் சிற்பக்கலையின் வழி வந்தவையே என்பது கலையறிஞர்களின் முடிவாகும். இன்று வானை முட்டும் மாட மாளிகைகள் எங்குப் பார்த்தாலும் காணப்படினும், பண்டைய கிரேக்கரது கட்டடங்களின் பாணியில் கட்டப்பட்ட ஒரு சில நிறுவனங்கள் பல நாடுகளில் இருக்கத்தான் செய்கின்றன. ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் காணப்படும் பல வியாபாரக் கிடங்குகளிலும், வங்கிகளிலும் அமைக்கப்பட்டுள்ள தூண்வரிசைகள் நிறைந்த முகப்புகள் (Facades) கிரேக்கப் பாணியிலேயே கட்டப்பட்டுள்ளன. சிற்பக்கலை, கட்டடக்கலை இவற்றில் சீர்மை, ஓர்மை (Harmony) இவைகளைக் கிரேக்கர்கள் வற்புறுத்தியதை மனத்திற் கொண்டுதான் தற்காலச் சிலைகளும் கட்டடங்களும் ஆக்கப்படுகின்றன.

இங்ஙனம் ஐரோப்பியரின் வாழ்க்கையையே உள்நின்று ஆட்டிப் படைக்கும் சக்தியாகக் கிரேக்க நாகரிகமும் அதை ஒட்டிய ஹெல்லனீய நாகரிகமும் விளங்குவதை நாம் சற்றே சிந்தித்தால் விளங்கும். இன்று ஐரோப்பிய நாகரிகம் உலகின் பல பாகங்களுக்கும் பரவிவிட்டதால் ஒரு வகையில் உலக நாகரிகமே கிரேக்க நாகரிகத்துக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளதாக அறியலாம். எனினும், கிரேக்க நாகரிகத்தில் கண்டிக்கத்தக்க பல குறைபாடு

களும் இல்லாமல் இல்லை. நாம் ஆங்காங்கே பல அத்தியாயங்களி லும் சுட்டிக் காட்டியுள்ளபடி கிரேக்கர்கள் ஒற்றுமையின்றிச் சதா போரிட்டுக் கொண்டிருந்தனர். அடுத்தவன் வாழ்வதைக் கண்டு பொறாமை கொள்ளும் புன்மையும், அடுத்துக் கெடுக்கும் தன்மை யும், வஞ்சகமும் பரவலாக அவர்களிடம் காணப்பட்டது. அடிமை களையும், பெண்களையும் அவர்கள் கொடுமைப்படுத்தியது போல் யாருமே செய்திருக்கமாட்டார்கள். அடிமைகளைச் சமுதாயத்தில் இணைத்து, ஒன்று சேர்க்காமல் விட்ட காரணத்தினாலேயே கிரேக்கச் சமுதாயம் வீழ்ச்சியுறலாயிற்று என்பது டாயன்பி (Toynbee) என்ற வரலாற்றாசிரியரின் கூற்றாகும். தனியாள் உரிமைகட்கு (Individualism) அளவுக்கு மீறிய ஆதரவு கொடுத்து அதன் பல தீய விளைவுகளை அநுபவித்தவர்கள் கிரேக்கர்கள். கீழ்த் தரமான சூழ்ச்சியாளர்களையும், சுயநலமிக்க கோழைகளையும், நாட்டைக் காட்டிக் கொடுக்கும் தேசத் துரோகிகளையும், மக்களைக் கொடுங்கோன்மை புரிந்த கொடுங்கோலர்களையும், போர் வெறி கொண்ட அரக்கர்களையும் நாம் கிரேக்க வரலாற்றில் காணு கின்றோம். அதே சமயம் பற்பல நற்குணங்களுக்கும் உறைவிடமான சான்றோர்களையும், நாட்டுக்கென உயிர்நீத்த ஏராளமான தேச பக்தர்களையும், தூரக் கண்ணோட்டமிக்க அரசியல் தலைவர்களையும், மெய்ஞ்ஞானமடைந்த மேதைகளையும், புகழ்மிக்க தளபதிகளையும், பேச்சாளிகளையும், கலைஞர்களையும், அறிவியல் வல்லுனர்களையும், நாம் ஏராளமாக அவ்வரலாற்றில் சந்திக்கின்றோம். கற்போரின் உள்ளங்களுக்கு உவகையூட்டுவதோடு அறிவுக்கு விருந்தளிப் பதாயும் உள்ளது கிரேக்க வரலாறு. உயர்ந்த எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் அது நம்முள்ளே தூண்ட வல்லது. நன்மையும், தீமையும் இரவும் பகலும் போல் கலந்தே எந்த நாட்டு வரலாற்றிலும் வரும். ஆனால்,

'குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகை நாடி மிக்க கொளல்'.

என்ற குறளின் அடிப்படையில் நாம் கிரேக்க வரலாற்றைப் பார்க் கும்போது அதில் குணங்கள் மிகுதியாகவும் குறைகள் மிகச் சில வாகவும் இருப்பதைக் காண்கிறோம்.

## பண்டைய கிரேக்க

| காலம் | அரசியல் | கலையும் இலக்கியமும் |
|---|---|---|
| | ஹோமர் காலம் (கி.மு. 1000-700) | கிரேக்க இதிகாசங்கள் ஈலியட், ஓடிசி தோன்றல் (கி.மு. 800) |
| கி.மு. 1000 | ரோமாபுரி ஏற்படல் (கி.மு. 1000)<br>கிரீஸில் நகர அரசுகள் தோன்றல் (கி.மு. 800)<br>கிரீஸில் சர்வாதிகாரர்ஆட்சி (கி.மு. 650-500)<br>சோலர்களின் சீர்திருத்தங்கள் (கி.மு. 594-560)<br>கிளையஸ்தனிஸின் சீர்திருத்தங்கள் (கி.மு. 508-502) | டோரிக் கட்டட முறை (கி.மு. 650-500)<br>அறிஞர் அசிலஸ் (கி.மு. 525-456)<br>பீடியாஸ் (கி.மு. 500-432)<br>அயோனிய கட்டடமுறை (கி.மு. 500-400.)<br>சொபாக்ளிஸ் (கி.மு. 496-406)<br>ஹெரோடோட்டஸ் (கி.மு. 454-425) |
| கி.மு. 500 | ரோமாபுரியில் கோனாட்சி ஒழிக்கப்பட்டுக்குடியாட்சி ஏற்படல் (கி.மு. 500)<br>ரோமில்வர்க்கப்போராட்டம் (கி.மு. 500-287)<br>கிரேக்க பாரசீகப் போர் (கி.மு. 493-473)<br>அத்தீனிய ஜனநாயகம் முதிர்ச்சி அடைதல் (கி.மு. 461-429)<br>ரோமானியரின் பன்னிரண்டு சட்டத் தொகுதிகள் (கி.மு. 450)<br>பெலப்பினீஷியப் போர் (கி.மு. 431-404) | யூரிபிடிஸ்(கி.மு.480-406)<br>தூசிடைடிஸ் (கி.மு. 471-400)<br>பார்தினன் மண்டபம் (கி.மு. 460)<br>அரிஸ்டபேன்ஸ் (கி.மு. 448-380) |
| கி.மு. 400 | கிரீஸில் ஜனநாயகம் குன்றுதல் (கி.மு. 400)<br>தீப்ஸின் தலைமை (கி.மு. 371-362)<br>மாசிடோனியர்கள் கிரீஸை வெல்லல் (கி.மு.338-337) | கொரிந்தியக் கட்டடக் கலை வளர்ச்சி (கி.மு. 400-300)<br>பிராக்ஸைடிலஸ் (Praxitelas) (கி.மு. 370-310) |

## ரோமானிய நாகரிகங்கள்

| அறிவியலும் தத்துவமும் | பொருளாதாரம் | சமயம் |
| --- | --- | --- |
| மிலிட்டஸ் நகரைச் சேர்ந்த தேல்ஸ் எனும்அறிஞர்(கி.மு. 640-546)<br>பித்தாகரஸ் (கி.மு. 582-507)<br>புரோட்டகோரஸ் (கி.மு. 481-411)<br>சாக்ரடீஸ் (கி.மு. 469-399)<br>ஹிப்பாக்ரட்டஸ் (கி.மு. 460-377) | கிரீஸில் பொருளாதாரப் புரட்சி, குடியேற்ற நாட்டு வளர்ச்சி, நடுத்தர வர்க்கத்தின் வளர்ச்சி (கி.மு. 750-600) | அறச் சார்பற்ற சமயத்தை கிரேக்கர்கள் தோற்றுவித்தல் கி.மு. 1200-800) |
| டெமாக்ரிடஸ் (கி மு. 460-362)<br>சோபிஸ்டுகர் (கி.மு. 450-400)<br>பிளேட்டோ (கி.மு. 427-347) | | ஆர்ஃபிக், எலூசினியன் வழிபாட்டு முறைகள் (கி.மு. 500-100) |
| அரிஸ்டாட்டில் (கி.மு. 384-362)<br>எபிகியூரஸ் (கி.மு. 342-270)<br>ஜீனோ (கி.மு. 336-264) | விளம்பரம், காப்புறுதி தத்துவம் (Advertising & Insurance) (கி.மு.300-கி.பி.100)<br>கிரேக்கர்களின் உலக வாணிபம்(கி.மு.300-கி.பி. 100)<br>உலக வாணிபத்தில் நாணயப் புழக்கம் (Money economy) (கி.மு.300-கி.பி.100) | |

| காலம் | அரசியல் | கலையும் இலக்கியமும் |
|---|---|---|
| | அலெக்சாண்டரின் வெற்றிகள் (கி.மு. 336-323) அலெக்சாண்டர்ன் பேரரசு பிரிக்கப்படுதல்(கி.மு.323) | |
| கி.மு. 300 | ஹார்ட்டன்ஸியன் சட்டம் (ரோம்) (கி.மு. 287) ப்யூனிக் போர்கள் (கி.மு. 264-146) | |
| கி.மு. 200 | கிராக்கிகளின் கழகம் (கி.மு. 333-123) ரோமின் சர்வாதிகாரம் | |
| கி.மு. 100 | ஜுலியஸ் சீசர் (கி.மு. 46-44) அகஸ்டஸ் சீசர் (கி.மு. 27 — கி.பி. 14) | வர்ஜில்(கி.மு.70-கி.பி.19) ஷொரேஸ் (கி.மு. 65-கி.பி. 8) டாசிடஸ் (55-117) கொலீசியம் (கி.பி. 80) (Coloeseum) |
| கி.பி. 100 | காட்டுமிராண்டிகளின் படையெடுப்பு (கி.பி. 100-476) ரோமானிய சட்டத் தொகுதிகளின் தயாரிப்பு (கி.பி. 200) | |
| கி.பி. 300 | டயோக்ளீஷியஸ் (கி.பி. 284-305) கான்ஸ்டன்டைன் (கி.பி. 306-336) தியோடிசியஸ் (கி.பி. 378-395) | |
| கி.பி. 476 | ரோமானியப் பேரரசின் வீழ்ச்சி (கி.பி. 476) | |

| அறிவியலும் தத்துவமும் | பொருளாதாரம் | சமயம் |
|---|---|---|
| யூக்லிட் (கி.மு. 323-285) அரிஸ்டார்க்கஸ் (கி.மு. 310-230) | அடிமைமுறை கிரீஸில் வளர்தல் (கி.மு.300-கி.பி. 100) | அறிவுக்கு அப்பாற்பட்ட வழிபாட்டு முறைகள் ரோமில் வளருதல் (கி.மு. 250-50) |
| ஆர்க்கிமீடிஸ் (கி.மு. 287-212) எரடாஸ்தனிஸ் (கி.மு. 276-195) | நகர வளர்ச்சி (கி.மு. 300-கி.பி. 400) ரோமில் அடிமை முறை வளர்தல் (கி.மு. 250-100) | அநுபூதி மார்க்கம்(Mysticism) |
| ஹெரோபிலல் (கி.மு. 320-150) | ரோமில் இடைநிலை வகுப்பு தோன்றல் (கி.மு. 250-100) | மறுமையில் நாட்டம் வளருதல்(கி.மு.200) |
| போலிபியஸ் (கி.மு. 205-123) சந்தேகவாதிகள்(Skeptics) (கி.மு.200-100) ஸ்டாயிக்குகள் எனும் யோகிகள் ரோமுக்குள் நுழைதல் (கி.மு. 140) | சிறு குடியானவர்கள் ரோமில் சீரழிதல் (கி.மு. 250-100) வாணிபமந்தம், வேலையின்மை கிரேக்கப் பேரரசில்தோன்றல் (கி.மு 200-கி.பி 100) | மித்ரேயிஸம் ரோமுக்கு வருதல் (கி.மு. 27-கி.பி. 270) |
| சிசரோ (கி.மு. 106-43) லுக்ரீஷியஸ் (கி.மு. 98-55) செனேகா (கி.மு. 3-கி.பி. 65) | அடிமை முறை கிரேக்கப் பேரரசில் குறைதல் (கி.மு.200-கி.பி. 100) | கிருத்துவ சமய ஒறுப்பு (கி.பி. 65) |
| மார்க்கஸ் அரேலியஸ் (கி.பி. 121-180) கெலன்(கி.பி.130-200) | ரோமில் அடிமைமுறை குறைதல் (கி.மு. 27-கி.பி. 476) | சமயப் பொறை ஏற்படல்(கி.பி. 311) |
| புதிய பிளேடோனியம் (Neo Platonism) (கி.பி. 250-600) | ரோமில் ஒருவகையான நிலமானிய முறையும், நில அடிமை முறையும் வளர்தல் (Serfdom) | கிருத்துவம் அரசாங்க மதமாக ரோமில் ஏற்படல் (கி.பி. 380) |

# 12. பண்டைய ரோமானிய நாகரிகம்

## 1. நாகரிக வளர்ச்சி வரலாறு

இன்றைய உலகில் பெருஞ் சிறப்புடன் திகழும் ஐரோப்பிய நாகரிகம் எனும் கட்டடத்தின் இருபெரும் தூண்களெனக் கருதத் தக்கவை கிரேக்க, ரோமானிய நாகரிகங்களாகும். ரோமானிய நாகரிகம், கிரேக்க நாகரிகத்தின் அடிச்சுவட்டைப் பின்பற்றி எழுந்ததொன்றேயாகும். கிரேக்க நாகரிகம் எனும் தாய்க்குப் பிறந்த குழவியே ரோமானிய நாகரிகம் என்பர் டாயின்பீ (Toynbee) எனும் வரலாற்றுப் பெருமகனுர். கிரேக்க நாகரிகத்தின் சிறப்பு மங்க ஆரம்பிப்பதற்கு நெடு நாட்களுக்கு முன்பே இதாலியிலுள்ள டைபர் (Tiber) நதிக்கரையில் ரோமானிய நாகரிகம் தோன்றிவிட்டது. கிரேக்க நாகரிகம் நாளடைவில் பொலிவிழந்து இருக்குமிடம் தெரியாமல் மறைந்துவிட்டபோது, ரோமானிய நாகரிகம் நன்கு வளர்ச்சியடைந்திருந்தது. எனினும், அறிவுத் துறையிலும், கலைத்துறையிலும், ரோமானியர்கள், கிரேக்கர்களைப் போன்று அவ்வளவு சிறப்பாக முன்னேற முடியவில்லை. அதற்கு முக்கிய காரணம் அதன் புவியியற் கூறுபாடுகளே எனலாம்.

*புவியியற் பின்னணி* (Geographical Background)

கிரேக்க நாட்டுக் கடற்கரையைப் போன்று இதாலியின் கடற்கரை நன்கு உடைபட்டுப் பல துறைமுகங்களுக்குத் தாயக மாக விளங்கவில்லை. டெரண்டம் (Tarentum), நேபில்ஸ் (Naples) என்ற இரு பெரும் துறைமுகங்களைத் தவிர வேறு நல்ல துறைமுகங் களே அங்கு இல்லை. எனவே, பிற நாடுகளோடு வாணிபம் செய்ய வும், பிற நாகரிகங்களோடு தொடர்பு கொண்டு, அவற்றின் சிறப் பியல்புகளை உட்கொள்ளவும், கிரீசைப் போன்று இதாலிக்கு வாய்ப்பில்லாமல் போய்விட்டது. மற்றும் கிரீசில் இருந்ததைவிட அதிகமான பரப்பளவுள்ள செழிப்பான நிலங்கள் இதாலியில் இருந்தன. போ (Po) நதி போன்ற ஆறுகளால் நீர்வளமும் நிலவளமும் ஒருங்கே பெற்ற சமவெளிகள் இதாலியில் ஏராளமாக இருந்ததால் மக்கள் விவசாயத்திலேயே பெரிதும் நாட்ட முடையோராய் விளங்கினர். வியாபாரத்தில் அவர்கள் அதிகமாகக் கவனம் செலுத்தவில்லை. மேலும் கிரீசைப் போலல்லாது இதாலி,

அயல் நாடுகளின் தாக்குதல்களுக்கு எளிதில் ஆளாகும் நிலையி லிருந்தது. வடக்கே ஆல்ப்ஸ் மலை இருந்தாலும், அது நம் இமயமலை யைப் போன்று வானளாவ உயர்ந்து விளங்கவில்லை. எனவே, அதன் வடக்கேயிருந்த பல ஐரோப்பிய மக்கள் எளிதில் அதனைக் கடந்து இதாலிமீது அடிக்கடி படையெடுத்த வண்ணமிருந்தனர். மற்றும் இதாலி ஓர் தீபகற்பம் ஆதலால் கடலின் மூலமாகவும் எதிரிகள் அதனைத் தாக்க எளிதாக இருந்தது. எனவே இதாலி யர்கள், அந்நியப் படையெடுப்புகளிலிருந்து தங்களைக் காத்துக் கொள்வான் வேண்டி, சதா இராணுவ முயற்சிகளிலேயே ஈடுபட்டுக்கொண்டிருக்க வேண்டிய ஓர் கட்டாயம் ஏற்பட்டது. அழகுக் கலையிலும், இலக்கியத்திலும், ஓவியத்திலும் கருத்தைச் செலுத்தி அவற்றில் தேர்ச்சி பெற அன்னூர்க்கு ஓய்வே இல்லாமல் போய்விட்டது. எனவேதான் ஆக்கத்திறன் செறிந்த கலைகளைத் தாமே உண்டாக்குவதற்குப் பதிலாகப் பிறரிடம் கடன் வாங்கி அவற்றைத் தம்வயமாக்கிக் கொள்ளலாயினர்.

இதாலியானது மத்தியதரைக்கடலின் நடுவில் நீட்டிக் கொண்டுள்ள ஓர் தீபகற்பமாகும். அதன் நீளம் 600 மைல்கள். அகலம் 100 மைல்கள். இந்தியப் பெருங்கடலின் இடையில் இந்தியா அமைந்துள்ளதைப் போன்றே இதாலியும் மத்திய தரைக்கடலின் நடுவில் அமைந்துள்ளது. இந்தியாவின் தென் கோடியில் இலங்கை எனும் ஓர் தீவு இருப்பதைப் போன்று இதாலியின் தென் கோடியில் சிசிலி எனும் தீவு அமைந்துள்ளது. நம் நாட்டின் வடக்கே இமயமலை அமைந்துள்ளது போன்றே, இதாலியின் வடக்கில் ஆல்ப்ஸ் மலைத் தொடர்கள் அமைந்துள்ளன. நம்நாட்டு கங்கை நதி இமயமலையினின்றிழிந்து கங்கைச் சமவெளியை வளப்படுத்துவது போல், ஆல்ப்ஸ் மலைகளினின்றும் இழிகின்ற போ நதி லம்பார்டி சமவெளியை வளமாக்குகிறது. இந்தியாவிலிருந்து ஆசியாவுக்குப் பௌத்த சமயமும், கலைகளும் பரவியது போன்றே இத்தாலியிலிருந்து ஐரோப்பாவுக்குக் கிறிஸ்தவ சமயமும், கலைகளும் பரவின. எனவே, ஒருவகையில் இதாலியை ஐரோப்பாவின் இந்தியா என அழைத்தல் தகும்.

இதாலியின் நடுவே அதன் முதுகெலும்பு போன்று அபெனைன் மலைத் தொடர் (Apennines) செல்கிறது. அதன் கிளைகளுக்கிடையே பல பள்ளத்தாக்குகள், மத்தியிலும் தெற்கிலும் உள்ளன. ஆனால், வடக்கே உள்ள சமவெளி போன்று அவை அவ்வளவு செழிப் பானவையல்ல. தெற்கேயுள்ள பல பிரதேசங்கள் வெறும் பொட்டல் காடுகளாகும். அங்கு வேளாண்மை செய்தலென்பது இயலாத காரியம். முக்கிய துறைமுகங்களும், வாணிபத் தளங்

களும் இதாலியின் மேற்குப் பகுதியிலேயே உள்ளன. கிரீசில் அவை கீழைப்பகுதியில் அமைந்துள்ளன. அதனால்தான் கிரீஸ் கிழக்கு நோக்கியும், ரோம் மேற்கு நோக்கியும் அதிகமாகப் படையெடுத்துச் சென்றன. தெற்கேயுள்ள நதிகளில் முக்கியமானது டைபர் (Tiber) என்பது. அதன் கரையில்தான் ரோம்நகர் அமைந்துள்ளது. நாட்டில் பெரும்பகுதியான பகுதிகள் நல்ல மழையைப் பெறுகின்றன. காலநிலை ஆண்டு அனைத்திலும் மிதமாக இருப்பதால் மக்கள் சுறுசுறுப்பாக இருக்கின்றனர். ஏறக்குறைய ஐரோப்பாவின் நடுநாயகமாக இதாலி திகழ்வதால், நான்கு திக்குகளிலிருந்தும் பல்வேறு பண்பாடுகளைக் கொண்ட மக்கள் கூட்டம் அங்கு வரவும், நாகரிகங்கள் ஒன்றோடொன்று கலக்கவும், இதாலியப் பண்பாடு அதன் மூலம் நல்ல ஊட்டம் பெறவும் வழி ஏற்பட்டது.

### *மக்கள் இனப் பின்னணி* (Ethnic Background)

ரோமானிய இனத்தவர், இதாலிக்குள் நுழைவதற்கு முன்னர் பல்வேறு பண்டைய மக்களினத்தினர் அங்குக் குடியேறி வாழ்ந்து கொண்டிருந்தனர். அவர்களே அங்குப் பழங்கற்காலப் பண்பாடு, புதுக்கற்காலப் பண்பாடு, உலோக காலப் பண்பாடு போன்ற பழைய பண்பாடுகளைத் தோற்றுவித்தவர்கள். ஏறக்குறைய கி.மு. 1000 ஆண்டளவில் டைபர் நதிக்கு வடக்கே எட்ரஸ்கர்கள் (Etruscans) எனும் ஓர் இனத்தவர்கள் குடியேறினர். சதுப்பு நிலங்களை வற்றவைத்து விளைநிலமாக்கவும் பெரும் பாதைகளை அமைக்கவும், சாக்கடைகளைக் கட்டவும், நகரங்களை அமைக்கவும் அன்னாருக்குத் தெரிந்திருந்தது. செம்பு, இரும்பு போன்ற உலோகங்களைக் கொண்டு பல கருவிகளை அவர்கள் செய்துகொண்டனர். அவர்களது நகரங்கள் இராணுவ பலத்தின் மூலமே ஒன்றாக இணைந்திருந்தன. மன்னன் ஒருவன் அவை யாவற்றிற்கும் தனித்தலைவனாய்த் திகழ்ந்தான். கப்பல்களைக் கட்டி அவைமூலம் மத்தியதரைக்கடல் பிரதேசங்களோடு அம்மக்கள் வியாபாரம் செய்து பெரும் பொருளீட்டினர்.

கி.மு. 1500ஆம் ஆண்டளவில் இதாலியர் அல்லது ரோமானியர் இதாலிக்குள் நுழைந்தனர். அவர்கள் கிரேக்கர்களோடு தொடர்பு கொண்ட ஓர் இனத்தவராவர். அவர்களுள் லத்தீனியர் (Latins), சேம்னைட்டுகள் (Samnites), அம்பிரியர்கள் (Ambrians), செபைன்கள் (Sabines) என்ற நான்கு வகுப்பினர் அடங்கியிருந்தனர். தென் இதாலியில் அவர்கள் முதலில் குடியேறி, நாளடைவில் வட இதாலியையும் கைப்பற்றினர். கி.மு. 800ஆம் ஆண்டளவில் கிரேக்கர்கள் தெற்கு இதாலியிலும், சிசிலியிலும் குடியேறினர். ரோமானியர்கள்

கிரேக்கரின் பண்பாட்டைப் பெரிதும் ஓம்பினர். ஏறக்குறைய கி.மு. 400-ல் கால்கள் (Gauls) எனும் இனத்தவர் போ நதிப் பள்ளத்தாக்கில் வந்து குடிபுகுந்தனர். பொனீஷிய இனத்தவர்கள் கார்த்தேஜ் நகரிலிருந்து வந்து இதாலியின் மேற்குப் பகுதியில் குடியேறினர். இவ்வனைவரது பண்பாடுகளின் கலப்பே ரோமானிய நாகரிகமெனலாம்.

ரோமானியர்கள், கட்டடங்களில் வளைவுகளையும் (Arches), வில் வளைவான கவிகை மோடுகளையும் (Vaults) அமைக்கத் தெரிந்து கொண்டது எட்ரஸ்கர்களிடமிருந்தேயாகும். எதிர்காலம் பற்றிய குறிகூறல் (Divination), மனிதன் மிருகத்தோடு போரிடுவதைக் கண்டு களித்தல் போன்றவைகளில் ரோமானியர்கள் அக்கறை கொண்டது எட்ரஸ்கர்களின் உறவினாலேயாம். கிரேக்கர்களிடமிருந்து ரோமானியர்கள் எழுத்து முறைகளையும், புராணங்களையும், சமய அறிவையும், கலையறிவையும் பெற்றனர்.

**ரோம் நகரத்தின் தோற்றம்**

பண்டைக் காலத்தே ஈடும் எடுப்புமற்றுத் திகழ்ந்த ஓர் பெரும் பேரரசுக்குத் தலைநகராய் விளங்கிய பெருமை ரோம் நகருக்குரியதாகும். அந்நகர் உண்மையில் எப்போது தோன்றியது, யாரால் தோற்றுவிக்கப்பட்டது என்ற விவரங்கள் திட்டவட்டமாகத் தெரியவில்லை. ட்ராய் நகரத்தின் வீழ்ச்சிக்குப் பின் அங்கிருந்து ஓடிவந்த ரோமுலஸ் (Romulus) என்ற ஒரு வீரனால் அது தோற்றுவிக்கப்பட்டதாக ஓர் பழங்கதை கூறுகிறது. ஓநாய் ஒன்றால் ஊட்டி வளர்க்கப்பட்ட ரோமுலஸ், ரீமஸ் (Remus) என்ற இரு இரட்டை வீரர்களால் அது தோற்றுவிக்கப்பட்டதாகவும் ரோமானிய மரபுவழிக் கதைகள் கூறுகின்றன. லத்தீன் மக்களிடையே ஒற்றுமையை வளர்க்க இக் கதைகள் பயன்பட்டன எனலாம். இவற்றின்படி கி.மு. 753ஆம் ஆண்டில் ரோம் நகர் கட்டப்பட்டது. லேடியம் (Latium) என்ற லத்தீனியர் வாழ்விடத்தில் பல நகரங்கள் இருந்தன எனினும், அவற்றுள் தலை சிறந்து விளங்கியது ரோம் நகரேயாகும். ஏனெனில், எதிரிகளால் எளிதில் பிடிக்க முடியாதபடி அது இயற்கையாகவே அமைந்திருந்தது. ஏழு மலைகளால் அது சூழப்பட்டிருந்தது. எனவே, அது தலைநகராக விரைவில் மாறியது. கி.மு. 753-ல் எட்ரஸ்க இனத்தைச் சேர்ந்த மன்னரே ரோமைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தார். லத்தீனியர்கள் அவர்களிடம் பணிபுரிந்து பல நல்ல பாடங்களைக் கற்றுக்கொண்டனர். நாளடைவில் அவர்கள் தீட்டிய மரத்திலேயே கூர்பார்க்க ஆரம்பித்தனர். எட்ரஸ்க மன்னர்களுக்கு விரோதமாகக் கலகம் செய்து கி.மு. 500ஆம் ஆண்டளவில்

அவர்கள் எட்ரஸ்கர்களிடமிருந்து ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டனர். நாளடைவில் மன்னராட்சியை ஒழித்துவிட்டுக் குடியரசை (Republic) அமைத்தனர்.

### மன்னராட்சிக் காலம்

குடியரசாட்சி ஏற்படுமுன் ரோமில் கோனாட்சியே நிலவியது. மன்னரே நாட்டின் சேனாதிபதியாயும், முக்கிய நீதிபதியாயும் விளங்கினர். குடிமக்கள் சார்பாக இறைவழிபாடு நிகழ்த்தியவரும் அவரே. அவருடைய அதிகாரங்களுக்கு வரம்பு இல்லை. எனினும், குலத்தலைவர்களடங்கிய மூத்தோர் சபையைக் (Council of Elders) கலந்தாலோசித்த பின்னரே அவர் முக்கிய தீர்மானங்களைச் செய்தார். வயதுவந்த குடிமக்கள் அனைவரும் அடங்கிய காமீஷியா கியூரியாதா (Comitia Curiata) என்ற ஒரு சபையும் அவரை அவ்வப்போது கட்டுப்படுத்தி வந்தது. அதன் அனுமதி பெறாமல் மன்னர் போர் தொடங்க இயலாது. அவர் தமது தீர்மானங்களை இச் சபையின் முன்னர் வைத்து அதன் ஒப்புதலைப் பெற்ற பின்பே நடைமுறைப்படுத்துவது வழக்கம். ஆனால், இச் சபைகளை எல்லாம் மீறி நடவடிக்கை எடுக்கும் பேரதிகாரத்தை மன்னர் பெற்றிருந்தார். நாளடைவில் மூத்தோர் சபை உறுப்பினரான கனவான்கள் பெருஞ் செல்வாக்கடைந்தனர். மன்னரை அவர்கள் அலட்சியம் செய்தனர். எட்ரஸ்கர்கள் ரோமைவிட்டுத் துரத்தப்பட்ட சமயத்தில் பிரபுக்களின் கைகளே ஓங்கி இருந்தன. மக்கள் சபையில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களை ரத்துச் செய்யவும், வேண்டாத மன்னரைப் பதவியிலிருந்து நீக்கவும் அவர்கள் அதிகாரங்களைப் பெற்றிருந்தனர். நாட்டில் தொன்றுதொட்டு வழங்கிவரும் மரபுகளின் காவலர்களாகவே அவர்கள் விளங்கினர். சட்டங்களைக் கொண்டுவந்து ஆக்கும் அதிகாரம் அவர்களுக்கு இருந்தது. ஆனால், பொது மக்கள் சபைக்கு அவ் வதிகாரமில்லை. சட்டங்களுக்கு ஒப்புதல் வழங்கும் அதிகாரம் மட்டுமே அதற்கிருந்தது.

### குடியரசாட்சிக் காலம்

முடியரசு ஒழிக்கப்பட்ட பின் ரோமில் ஏற்பட்ட குடியரசு ஏறக்குறைய 500 ஆண்டுக் காலம் நீடித்தது. அதில் ஏறக்குறைய 200 ஆண்டுகள் இடைவிடாத போராட்டங்களில் கழிந்தது. வெல்லப்பட்ட எட்ரஸ்கர்கள் அடிக்கடி ரோமின்மீது படையெடுத்துத் தொந்தரவளித்தனர். அவர்களை அடக்கி ஒடுக்கவும், ஏராளமான நிலங்களை உடைமையாக அடையவும் ரோமானியர் அடிக்கடி போர்களில் ஈடுபட்டனர். பல்லாண்டுகள் நடைபெற்ற

முற்றுகைக்குப் பின்னர் எட்ரஸ்கர்களின் கோட்டையான வெய் (Veii) நகரம் வீழ்ந்தது. அதன்பின் கால் (Gauls) எனும் முரட்டு வகுப்பினர் ரோமைத் தாக்கினர். ரோம் நகரம் சூறையாடப் பட்டது. இறுதியில் 1000 பவுன்கள் கொடுத்து லத்தீனியர்கள் ரோமை மீட்டனர். அதையடுத்துத் தெற்கேயிருந்த பல கிரேக்க நகர அரசுகள் கைப்பற்றப்பட்டன. ரோமானிய இராணுவம் இடையறாது பாடுபட்டு சாமனைட்டுகள் போன்ற எல்லா எதிரி களையும் ஒழித்தது. கி.மு. 265ஆம் ஆண்டளவில் இதாலி தீபகற்பம் முழுவதையும் தன்னடிப் படுத்தியது.

இங்ஙனம் ஓயாது போர் நடைபெற்றதால் ஏழை மக்கள் பெரிதும் பாதிக்கப்பட்டனர். நிலத்தை உழுவதைவிட்டுப் போருக்கு அடிக்கடி சென்ற பல குடியானவர்கள் விவசாயத்தில் ஊக்கம் இழந்தனர். வீண் ஆடம்பரங்களில் ஈடுபட்டு விரைவில் கடனாளிகளாகி நிலங்களைப் பெரும் பிரபுக்களுக்கு விற்றனர். பின்னர் அப்பிரபுக்களின்கீழ் குத்தகைக்காரர்களாகவோ அடிமை களாகவோ அன்னார் மாறினர். பெருநிலக் கிழார்களின் தொகை அதிகரித்தது. போர்களின் விளைவாகக் கிடைத்த நிலங்களும் பிரபுக்களுக்கே உரித்தாயின. பெரும் பண்ணைகள் நாடெங்கும் ஏற்பட்டன. வளர்ந்து வரும் மக்கட் கூட்டத்துக்கு வேலை வாய்ப்பு தரத்தக்க அளவில் நிலங்களின் அளவு பெருகிக் கொண்டே சென்றதால், மக்கள் ஏனைய தொழில்களில் ஈடுபடுவது தடைபட்டது. விவசாயமே நாட்டின் முக்கிய தொழிலாக மாறியது. அடிக்கடி போரிலேயே நாட்டங் கொண்டிருந்ததால் மக்கள் கல்வியிலும் கலைகளிலும் ஊக்கம் குன்றினர். பண்பாட்டு வளர்ச்சியில் தடை ஏற்பட்டது.

குடியரசு ஏற்பட்டதன் விளைவாக அரசியல் துறையில் பல மாற்றங்கள் நிகழ்ந்தன. ஒரு மன்னனுக்குப் பதிலாக இரு கன்சல்கள் (Consals) நாட்டை ஆண்டனர். படையேந்திய வீரர்கள் அனைவராலும் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பொதுவாக அவர்கள் பெட்ரிஷியர்கள் (Patricians) எனப்படும் உயர்குடிப் பெருமக்களிலிருந்தே பொறுக்கப்பட்டனர். எனவே, அவர்கள் பெட்ரிஷியர்களின் நலன்களைப் பாதுகாப்பதிலேயே பெரிதும் கண்ணுங் கருத்துமாயிருந்தனர். ஒரு கன்சல் செய்த காரியத்தை மற்றொரு கன்சல் நிராகரிக்கும் அதிகாரத்தைப் பெற் றிருந்தார். பொதுவாகக் கன்சல்கள் இருவரும் சேர்ந்தே செயல்களில் ஈடுபட்டனர். ஆனால், அவர்களிடையே முரண்பாடு ஏற்பட்டபோதெல்லாம், அம் முரண்பாட்டுக்குரிய பிரச்சினைகள் செனெட் (Senate) எனும் முதியோர் மன்றத்தின் தீர்ப்புக்கு விடப்

பட்டன. அம் மன்றத்தின் உறுப்பினர்கள் அனைவரும் பெட்ரீஷிய உயர்குடியைச் சேர்ந்தவர்கள். அவர்களது பிரதிநிதிகளாகவே கன்சல்கள் விளங்கினர். பிலபியர்கள் (Plebians) எனும் சாதாரண மக்களின் பிரதிநிதிகளடங்கிய காமீஷியா கியூரியாதா எனும் கீழ்ச்சபையைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தையும் செனெட் பெற்றிருந்தது. நாட்டுக்கு எதிர்பாராது ஏற்படும் ஆபத்துகளின்போது ஆறுமாத காலம் வரை, சர்வாதிகாரி (Dictator) ஒருவரை நியமித்து நிர்வாகத்தை ஒழுங்குபடுத்தும் அதிகாரமும் அதனிடமிருந்தது. மற்றபடி முடியாட்சி இருந்த போதிருந்த முறையிலேயே ஆட்சித் துறை இயங்கியது. நாட்டையாள்பவர்கள் வரம்புமீறி அதிகாரங்களைச் செயல்படுத்தா வண்ணம் காக்கவே, ஒரு கன்சல் மற்றொரு கன்சலையும் ஒரு சபை மற்றொரு சபையினையும் கட்டுப்படுத்தும் முறை கையாளப்பட்டது. இதைத்தான் சமநிலைக் கட்டுப்பாட்டு முறை (System of Checks and Balances) என்பர் அரசியலார்.

*சமுதாயப் பிரிவுகளிடையே போர்*

குடியரசு தோன்றிய சில ஆண்டுகளுக்குள்ளேயே இதாலியில், நீண்டதொரு சமுதாயப் போர் தோன்றியது. முடியரசு ஒழிக்கப்பட்ட வேளையில் பெட்ரீஷியர்கள் எனும் உயர் வகுப்பார் அரசியலில் அளவுக்கு மீறிய செல்வாக்கைப் பெற்றிருந்தனர். அதைக் கண்ட பிலபியர்கள் எனும் சாதாரண வகுப்பினர் உளம் புழுங்கினர். நாட்டிலிருந்த நிலங்களில் பெரும் பகுதி பெட்ரீஷியர்களின் உடைமையாகவே இருந்தது. சட்டங்கள் செய்வதும் பட்டங்கள் ஆள்வதும் அவர்களுக்கே தனியுரிமையாயிருந்தது. மற்றும் அவர்கள் குலத்தலைவர்களாயுமிருந்தனர். பிலபியர்களில் பெரும்பாலோர் சிறு குடியானவர்களாயும், கைத் தொழிலாளிகளாயும், சிறு வியாபாரிகளாயுமிருந்தனர். அவர்களில் பலர் பெட்ரீஷியப் பிரபுக்களிடம் சரணுகதியடைந்த சார்பாளர்களாக (Clients) இருந்தனர். அவர்களைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு பிரபுக்களைச் சார்ந்தது. அதற்குப் பதிலாக அவர்கள் பிரபுக்களுக்குப் போரில் உதவி புரிந்தனர். அவர்தம் நிலங்களைச் சாகுபடி செய்தனர். அதோடு ஏராளமான வரிகளையும் அவர்கள் செலுத்தவேண்டியிருந்தது. வரி செலுத்தல், போர் புரிதல் போன்ற கடமைகள்தான் பிலபியர்களுக்கு அதிகமாயிருந்தனவே ஒழிய உரிமைகள் ஒன்றும் இல்லை. நீதிமன்றங்களில் தங்களுக்கு ஒருதலைப்பட்சமான நீதி வழங்கப்படுவதாக அவர்கள் உணர்ந்தனர். எது நியாயம், எது சட்டம் என்பதையே அவர்கள் அறியக்கூடாத நிலையிலிருந்தனர். பிரபுக்கள் சொல்வதே

சட்டமாகச் செயல்பட்டது. தங்களிடம் கடன் பட்டவர்களை அவர்கள் அடிமைகளாகவே மாற்றிவிட்டனர். இத்தகைய அவல நிலையைப் போக்கவும், அரசியலில் சரி சமானமான உரிமைகளைப் பெறவுமே, கி.மு. 5ஆம் நூற்றாண்டில் பிலபியர்கள் பல கிளர்ச்சி களிலீடுபடலாயினர்.

தமது ஓயாத கிளர்ச்சிகளின் பலனாகப் பிலபியர்கள் பல உரிமைகளை மெல்ல மெல்ல அடைந்தனர். அவர்களது போராட்டத்தின் முதல் வெற்றியாக அமைந்தது கி.மு. 470-ல் டிரிபியூன்கள் (Tribunes) என்ற அதிகாரிகள் பதவி நாட்டில் ஏற்படுத்தப்பட்டதாகும். இவ்வதிகாரிகள் பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். மக்களின் நலனுக்கும், தொன்றுதொட்டு வரும் சட்ட மரபுகளுக்கும் விரோதமாக நிர்வாக அதிகாரிகள் செயல்பட்டால் அதைத் தடுத்து நிறுத்தும் அதிகாரம் அவர்களுக்குத் தரப்பட்டது. கன்சல்களின் நடவடிக்கைகளைக் கூட அவர்கள் ரத்துச் செய்யலாம். இம் முதல் வெற்றிக்குப்பின் கி.மு. 450-ல் மற்றொரு வெற்றி பிலபியர்களுக்குக் கிடைத்தது. அப்போதுதான் ரோமானிய சட்டங்கள் திட்டவட்டமாக எழுதப்பெற்றன. பன்னிரு சட்டப் பலகைகள் (Law of the Twelve Tables) எனப்படும் சட்டத் தொகுதி அப்போதுதான் ஏற்பட்டது. செம்பாலான பலகைகளில் அவை பொறிக்கப்பட்டு நகர மன்றத்தின் வாயிலில் வைக்கப்பட்டன. மக்கள் தமது உரிமைகள் என்ன என்பதை அறிய அவை உதவி செய்தன. ஆனால், அவை புரட்சிகரமான மாறுதல் எதையும் ஏற்படுத்தவில்லை. கடன்பட்டவர்களைப் பிரபுக்கள் அடிமைகளாக்கும் முறை கூடத் தடுக்கப்படவில்லை. தொன்றுதொட்டு வழக்காற்றிலிருந்து வந்த மரபுகளே சட்டவடிவில் வெளியிடப்பட்டன. எனினும் மக்கள், தம்மை யாரும் அநீதியாகத் தண்டிக்க முடியாது என்ற நம்பிக்கையைப் பெற்றனர். மாஜிஸ்திரேத் (Magistrate) எனும் அதிகாரி ஒருவர் மரண தண்டனை விதித்தது சட்டத்துக்கு முரண் என ஒருவர்க்குப் பட்டால் அவர் சட்டமன்றத்திடம் முறையிட்டுக்கொண்டு நியாயத்தைப் பெற வழி பிறந்தது. அடுத்துச் சட்டங்களை ஆக்குவதிலும் அவர்கள் பங்கு பெறக் கிளர்ச்சி செய்தனர். அதன் விளைவாக காமீஷியா சென்சூரியாதா (Comitia Centuriata) என்ற இராணுவ சபையானது அரசியல் சபையாக மாற்றப்பட்டது. அதில் பிலபியர்களுக்கு ஒரு சில சலுகைகள் வழங்கப்பட்டன. இராணுவ சேவை செய்வதற்காக அவர்களுக்கு ஊதியம் தரப்பட்டது. கி.மு. 367-ல் ஏற்படுத்தப்பட்ட லிசினியன் சட்டங்களின்படி (Licinian laws) ஒவ்வொருவரும் வைத்துக்கொள்ளக்கூடிய நிலம், ஆடுமாடுகள் இவற்றின் எண்ணிக்கை வரையறுக்கப்பட்டு, மட்டுப்

படுத்தப்பட்டது. ஒவ்வொரு நிலப்பிரபுவும், வெறும் அடிமைகளை மட்டும் அமர்த்திக் கசக்கி வேலை வாங்குவது தடுக்கப்பட்டது. ஒரு சில சுதந்திரக் குடியானவர்களையும் வேலைக்கமர்த்திக் கூலி கொடுக்குமாறு வற்புறுத்தப்பட்டனர். சிறு குடியானவர்களின் கடன் தொல்லைகள் குறைக்கப்பட்டன. கடன்பட்ட குடியானவர்களைச் சிறைபிடிக்கும் உரிமையைப் பிரபுக்கள் கி.மு. 313-ல் இழந்தனர். கடனுக்காகச் சிறையிடப்பட்டிருந்த அனைவரும் விடுதலை செய்யப்பெற்றனர். ஆட்சித்துறையின் அலுவல்கள் நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே சென்றன. அதிலும் தங்களுக்குப் பங்கு வேண்டுமெனப் பிலபியர்கள் கிளர்ச்சி செய்தனர். அதன் விளைவாக அவர்களுக்கு மெல்ல மெல்ல சில பதவிகள் தரப்பட்டன. நிதித்துறை அதிகாரிகளான குவேஸ்டர்களாகவும் (Quaestors), நீதித்துறை அதிகாரிகளான பிரேடார்களாகவும் (Praetors), வரி தண்டுதல், பொது மராமத்துக் காரிய மேற்பார்வை ஆகியவற்றை மேற்கொண்ட சென்சார்களாகவும் (Censor) அவர்கள் நியமிக்கப்பட்டனர். கி.மு. 362-ல் கன்சல் பதவி ஒரு பிலபியருக்குக் கிடைத்தது. ஓய்வுபெற்ற கன்சல்கள் தாமாகவே செனெட்டில் இடம்பெறவேண்டும் என்ற நியதியின்படி பிலபியக் கன்சல் அம்மன்றத்தில் இடம் பெற்றார். எனவே, பெட்ரிஷியர்கள்தான் செனெட்டின் உறுப்பினராக முடியும் என்ற நிலை மாறியது. கன்சல்கள் மட்டுமின்றி சாதாரணப் பிலபியர்களும் செனெட் உறுப்பினராகலாம் என்ற உரிமையானது கி.மு. 304-ல் வழங்கப்பட்டது. பெயரளவில் இவ் வுரிமை கிடைத்தாலும், நடைமுறையில், பணக்காரர்களாயிருந்த பிலபியர்களுக்கு மட்டுமே செனெட் பதவி கிடைத்தது. எனவே ஏழை, பணக்கார வேறுபாட்டை இச்சீர்திருத்தம் அவ்வளவாக மாற்ற முடியவில்லை. இரு வகுப்பிலுமிருந்த பணக்காரர்கள் ஒன்றுகச் சேர்ந்துகொண்டு ஏழைகளை வாட்டினர், பிலபியர்களின் இறுதி வெற்றி கி.மு. 287-ல் ஏற்பட்டது. அப்போது நிறைவேற்றப்பட்ட ஹார்டென்சியன் சட்டப்படி (Hortensian Law) காமீஷியா கியூரியாதா என்ற பிளபிய மக்கள் சபையானது சட்டமியற்றும் துறையில் தனித்தலைமையைப் பெற்றது. அதன்படி மக்கள் சபையில் நிறைவேற்றப்பட்ட சட்டங்களை செனெட் கண்டிப்பாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என ஏற்பட்டது. செனெட் அவற்றை ஏற்றுக்கொண்டாலும், கொள்ளாவிட்டாலும் அவை செல்லுபடியாகும் என்பது ஒப்புக்கொள்ளப்பட்டது. இவ்வாறு பிலபியர்கள் சட்டமியற்றும் துறையிலும், நாளடைவில், பெட்ரீஷியர்களுக்கு இணையாக உரிமைகளைப் பெற்றனர்.

மேலே கூறப்பட்ட சீர்திருத்தங்களின் விளைவாக ரோமானிய சமுதாயத்தில் புரட்சிகரமான மாறுதல்கள் ஒன்றும் ஏற்பட்டதாகக் கருத முடியாது. ஒரு சில பிலபியர்கள் செனெட்டில் இடம்பெற் றனர் என்றாலும் பெரும்பான்மையினரான பெட்ரிஷியப் பெரு மக்களின் கைகளே அதில் ஓங்கி இருந்தன. நாட்டு நிர்வாகத்தில் அவர்களே முக்கிய பங்கேற்றிருந்தனர். நிர்வாக அதிகாரிகளின் கொட்டம் ஓரளவு அடங்குவதற்கு மட்டுமே சீர்திருத்தங்கள் துணை செய்தன. பிலபியர்கள் மாஜிஸ்திரேதுகளாகப் பதவி ஏற்க அனுமதிக்கப்பட்டனர் என்றாலும், அப் பதவிகளுக்கு ஊதியம் வழங்கப்படாத காரணத்தால், ஏழைகளாயிருந்த அவர்களிற் பலர் பதவிகளை மேற்கொள்ள முன்வரவில்லை. அரசின் சர்வாதிகாரம் எப்போதும் போலவே செயல்பட்டது. மக்கள், அதிகாரிகளால் ஆளப்படத் தக்கவர்களேயன்றி, தம்மைத்தாமே ஆண்டுகொள்ளத் தகுதியற்றவர்கள் என்ற எண்ணமே நாட்டில் மேலோங்கி நின்றது.

சமுதாயத்தில் கல்வி மிகத் தாழ்ந்த நிலையிலிருந்தது. பெரும்பான்மையோர் எழுத்தறிவற்றவர்களாக இருந்தனர். தந்தையே தனயனுக்குக் கல்வி கற்பிக்க வேண்டுமென்ற நிலை யிருந்ததால், வாழ்க்கைக்குத் தேவையான போர்முறை, விவசாயம் போன்ற நடைமுறைக்கொத்த தொழில்களிலேயே பலரும் பயிற்சிபெற்றிருந்தனர். சிறு கைத்தொழிலில் வல்லார் சிலர் நகரங்களில் இருந்தனர் எனினும், விவசாயத்திலும், போர் செய்வதிலுமே பெரும்பான்மையோர் ஈடுபட்டிருந்தனர். வாணிபத் தில் முன்னேற்றம் சிறிதும் ஏற்படவில்லை. கி.மு. 269 வரை அவர்கள் நாணயமுறையைப் பற்றியே அறியவில்லை. சமயத் துறையில் அவர்கள் கிரேக்கர்களைப் பின்பற்றினர். ஜியூஸ் (Zeus) என்ற கிரேக்க வாயுபகவான் ஜூபிடர் (Jupiter) எனவும், அதீனு (Athena) என்ற நகரதேவதை மினர்வா (Minerva) எனவும், அப்ரடைட் (Aphrodite) என்ற காதல் தெய்வம் வீனஸ் (Venus) எனவும் அழைக்கப்பட்டு வணங்கப்பட்டன. நாட்டைக் காப்பதும், வளமாக்குவதும், மக்களுக்கு வேண்டிய வரங்களைத் தந்து செல்வந் தர்களாக்குவதும் தெய்வங்களின் கடமைகளாகக் கருதப்பட்டன. குறிப்பிட்ட நன்மைகளுக்காகவே வழிபாடுகள் நடத்தப்பட்டன. மதகுருமார்கள் மிக்க செல்வாக்குடன் விளங்கினர். ஏனெனில், சடங்குகள் ஏராளமாகச் செய்யப்பட்டன. மக்களின் ஒழுக்கத்துக் கும், தெய்வ வழிபாட்டுக்கும் எவ்விதத் தொடர்பையும் ரோமானி யர்கள் ஏற்படுத்தவில்லை. நாட்டை நேசிப்பதாலும், அதன் நன்மைக்குப் பாடுபடுவதாலுமே ஒருவன் ஒழுக்கமாயிருக்க முடியும் என்று அனைவரும் நம்பினர்.

***பியூனிக் போர்கள் (கி.மு. 264-146)***

நாம் ஏற்கெனவே கண்டபடி ரோமானியக் குடியரசு முதலில் இதாலியின் பல்வேறு பாகங்களிலும் தனது ஆதிக்கத்தை ஏற்படுத்தியது. அதன்பின் ஆப்பிரிக்காவின் வடகிழக்குப் பாகத்தில் அமைந்திருந்த கார்த்தேஜ் (Carthage) எனும் பினீஷிய நாட்டுக்கும் இதாலிக்குமிடையே போர் மூண்டது. பினீஷியர்கள் கடல் வாணிபத்தில் வல்லவர்கள். வலிமைமிக்க கடற்படை அவர்களிடமிருந்தது; கார்த்தேஜ் நகரைத் தலைமையாகக் கொண்டு அவர்கள் மத்தியதரைக் கடலைச் சுற்றிப் பல நகர அரசுகளைத் தோற்றுவித்தனர். இதாலியின் தென் கோடியிலிருந்த சிசிலித் தீவின் மேற்குப் பகுதியை அவர்கள் வென்று கைப்பற்றினர். கிழக்குப் பகுதியிலிருந்த கிரேக்க நகர அரசுகளையும் வென்று அங்கும் தமது ஆட்சியை நிறுவ முயன்றனர். அப்போதுதான் ரோமானியர்கள் அவர்கள் மீது கடுஞ்சினங் கொண்டனர். தங்களது நாடு பிடிக்கும் ஆசைக்கும் வாணிப வளர்ச்சிக்கும் தடையாக நின்ற கார்த் தேஜை ஒழித்துக் கட்ட வேண்டுமென ரோமின் குடியரசுத் தலைவர்கள் கங்கணம் கட்டிக் கொண்டனர். கி.மு. 264-ல் இவ்விரு நாடுகளுக்குமிடையே முதலாவது பியூனிக் போர் தொடங்கியது. 23 ஆண்டுகள் தொடர்ந்து நடைபெற்ற போருக்குப் பின்னர் ரோமானிய தளகர்த்தர்கள் வெற்றிவாகை சூடினார்கள். பியூனிஷியர்கள் ஸிஸிலித் தீவைவிட்டு வெளியேறியதோடு ஏராளமான இழப்பீட்டுத் தொகையையும் கொடுத்தனர். விரைவிலேயே கார்த்தேஜ் தனது பலத்தையும் செல்வாக்கையும் மீட்டுக்கொண்டது. தனது கடற்படையின் உதவி கொண்டு ஸ்பெயினின் ஒரு பகுதியைக் கைப்பற்றியது. இதைக் கண்டு பொருமையுற்ற ரோமானியர்கள் கி.மு. 218-ல் கார்த்தேஜ் மீது இரண்டாம் முறையாகப் போர் தொடுத்தனர். 16 ஆண்டுகள் இப்போர் தொடர்ந்து நடைபெற்றது. கார்தெஜீனியர்களின் தளகர்த்தரான ஹனிபால் (Hannibal) என்பவர் மின்னல் தாக்குதல் போன்ற புதிய உத்திகளைக் கையாண்டு ரோமானியர்களைப் பல இடங்களில் முறியடித்தார். ஆல்ப்ஸ் மலையைக் கடந்து இத்தாலிக்குள் புகுந்து அவர் பல இடங்களைக் கைப்பற்றினர். ரோம் நகரத்தைக் கூடக் கைப்பற்றக் கூடிய நிலையில் அவர் இருந்தார். ஆனால், சிபியோ (Seipio) போன்ற ரோமானியத் தளகர்த்தர்களின் வீரசாகசங்களின் விளைவாக ரோம் நகரம் காப்பாற்றப்பட்டது. பினீஷியர்கள் சரணடைந் தனர். தமது தலைநகரையும் அதைச் சுற்றியிருந்த ஓர் சிறு பகுதியும் தவிர ஏனைய பிரதேசங்கள் அனைத்தையும் அவர்கள்

ரோமானியர்க்குத் தந்துவிட்டனர். 10,000 தாலந்துகளை (Talents) இழப்பீடாகக் கொடுத்தனர். அதன் பின்னரும் அவர்கள் விரைவிலேயே மிகுந்த செல்வாக்கு அடைந்தனர். மீண்டும் பழைய நிலைக்கு அவர்கள் வந்துவிடக் கூடும் என்று அஞ்சிய ரோமானியர்கள் கி.மு. 149-ல் மீண்டும் கார்த்தேஜ்மீது மூன்றும் முறையாகப் படையெடுத்தனர். மூன்று ஆண்டு நடைபெற்ற கடுமையான போருக்குப் பின்னர் பினீஷியர்கள் முற்றிலும் தோற்கடிக்கப்பட்டனர். வாளுக்கு இரையான வீரர்களைத் தவிர ஏனையோர் அனைவரும் அடிமைகளாக்கப்பட்டனர். கார்த்தேஜ் எனும் மாபெரும் நகரம் இடித்துத் தரைமட்டமாக்கப் பட்டது. கழுதைகளைக் கொண்டு அந் நகரத்தில் நிலம் முழுவதும் உழப்பட்டது. இங்ஙனம் நடைபெற்ற மூன்று பியூனிக் போர்களின் விளைவாக ரோமுடன் போட்டியிட்ட கார்த்தேஜ் அழிந்தது.

இப்போர்களின் விளைவாக ரோமானியக் குடியரசில் பல மாற்றங்கள் விளைந்தன. அடிமைகளின் எண்ணிக்கை நாட்டில் அதிகரித்தது. வெல்லப்பட்ட நாடுகளில் கிடைத்த தானியமும் செல்வமும் பல ரோமானியர்களை நிலப் பிரபுக்களாக்கியது. அப் பிரபுக்கள் அடிமைகளைக் கொண்டு நிலத்தைப் பயிரிட ஆரம்பித்ததனால் ஏராளமான குடியானவர்கள் வேலை இழந்தனர். வணிகர்களும், வட்டிக்குக் கடன் கொடுத்துச் செல்வாக்குப் பெற்ற முதலாளிகளும், வெல்லப்பட்ட நாடுகளில் இருந்த சுரங்கங்களையும் நிலங்களையும் குத்தகைக்கு எடுத்த செல்வந்தர்களும், அரசாங்க ஊழியர்களும் எண்ணிக்கையில் பெருகினர். இவர்கள் அனைவரும் சேர்ந்த நடுத்தரவர்க்கம் ஒன்று புதிதாய்த் தோன்றியது. பொதுவாக மக்களிடையே சுகபோகங்கள் மலிந்தன. ஆடம்பரங்கள் அதிகமாயின. ஒழுங்கும் கட்டுப்பாடும் தளர்ந்தன. ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்கும் இடையே இருந்த பிளவு அதிகமாயிற்று. இதையெல்லாம் தவிர்க்க கேட்டோ (Cato) போன்ற செனட்டர்கள் எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. ரோமின் நலிவு பியூனிக் போர்களுக்குப் பின் தொடங்கி விட்டதென்றே 'டாயின்பி' என்ற ஆசிரியர் கருதுகின்றார்.

இப் போர்களின் விளைவாக, மற்றொரு முக்கிய பலன் ஏற்பட்டது. கார்த்தேஜுக்கு உதவி புரிந்த மாசிடோனிய மன்னர் 5ஆம் பிலிப்புக்கு விரோதமாக ரோமானியப் படைகள், அனுப்பப்பட்டன. அதன் விளைவாக கிரீஸும், ஆசிய மைனரும் வெல்லப்பட்டதோடு, எகிப்து நாடும் ரோமின் பாதுகாப்புக்குட் பட்டது. இதன் மூலம் கீழை நாடுகளோடும், அவற்றின் நாக

ரிகங்களோடும், ரோமுக்குத் தொடர்பு ஏற்பட்டது. ரோமானிய நாகரிகத்தில் பல குறிப்பிடத் தக்க மாற்றங்கள் ஏற்பட இது காரண மாய் இருந்தது.

### கிழக்கு மத்தியதரைக்கடல் பிரதேசத்தில் ரோமின் ஆதிக்கம் ஏற்படல்

கார்த்தேஜ் நகர அரசு வெல்லப்பட்டபின் ரோமானியக் குடியரசு மத்தியதரைக்கடலின் கிழக்குப் பகுதியிலும் பரவியது. மாசிடோனியா 'கொரிந்த்' போன்ற கிரேக்க நகர அரசுகளை வென்றபின் ரோமானியப் படைகள் 'ஈஜியக்' கடலைக் கடந்து சென்று, ஆசிய மைனர் பகுதியைக் கைப்பற்றியது. செல்யூகஸ் மன்னரின் சந்ததியார் ஆண்டுவந்த பகுதிகள் அனைத்தும் கைப்பற்றப்பட்டன (கி.மு. 48—45). 'ஜூலியஸ் சீசர்' என்ற பெரும் தளகர்த்தர்தான் இவ்வெற்றிகளையெல்லாம் தேடித்தந்தவர். எளிதில் தாம் பெற்ற வெற்றியை 'நான் வந்தேன், பார்த்தேன் வென்றேன்' என்ற செய்தி மூலம், செனட்டுக்கு அவர் தெரிவித் தார். கி.பி 113ஆம் ஆண்டளவில் ரோமக் குடியரசின் எல்லை தனது உச்ச நிலையை அடைந்தது. அதன்பின் அது கொஞ்சம் கொஞ்ச மாகச் சீரழியத் தொடங்கியது.

### *பிற்காலக் குடியரசும் சீரழிவும்* (The Later Republic and its Dealine)

அளவுக்கு மீறிப் பரப்பில் அதிகரித்துவிட்ட குடியரசு நாட்டைச் சரிவர ஆளமுடியாமல் திகைத்தது. குடியாட்சி முறை சிறு நகர அரசுகளுக்கே பொருந்தும். பரந்த பேரரசை ஆள, அதற்கேற்ற ஆட்சித்துறை நிறுவனங்களும் பிரதிநிதித்துவ ஆட்சி முறையும் தேவை. ஆனால், அத்தகைய ஆட்சி முறைக்கு ரோமானியக் குடியரசில் வழியில்லை. வெகு தூரத்திலிருந்த மாநிலங்களிலிருந்து பிரதிநிதிகள் வந்து ரோமானிய செனட்டில் பங்கு பெற முடியவில்லை. ரோமானிய செனட்டும் சுயநலமிக்க பணக்காரக் கும்பல் நிறைந்த ஓர் மன்றமாக மாறியது. பொது மக்கள் சபையை அலட்சியம் செய்துவிட்டு நாளுக்கு நாள் அது தன் பலத்தை அதிகரித்துக்கொண்டே சென்றது. நாட்டு நிலங்களை அபகரித்துக் கொள்வதில் செனட் உறுப்பினர்கள் ஒருவரோடொருவர் போட்டியிட்டனர். இப்பேராசையைத் தடுக்க முயன்ற டிபரியஸ் (Tiberius) காயஸ் கிராக்கஸ் (Gaius, Gracchus) போன்ற தலைவர்கள் உயிரிழந்தனர். இதைக் கண்ட சாதாரண மக்கள் மனக் கொதிப்பு அடைந்தனர். அவர்களின் அதிருப்தி யைப் பயன்படுத்திக்கொண்டு 'மாரியஸ்' (Marius) என்ற ஓர்

தலைவர் கி.மு. 107-ல் 'கன்சல்' பதவியைப் பெற்றார். அரசாங்கத்தின் ஊழலைத் தவிர்க்க அவர் பல சீர்திருத்தங்களைக் கையாண்டார். ஆனால், சுயநலம் செறிந்த செனட்டர்கள் அவரைப் பதவியில் இருந்து இறக்கிவிட்டனர். எனினும் ஆங்காங்கே கலகங்கள் கிளம்பின. அவற்றை எல்லாம் அடக்க கி.மு 82-ல் 'சல்லா' (Salla) என்ற ஓர் சர்வாதிகாரி நியமிக்கப்பட்டார். கலகங்கள் வெற்றிகரமாகச் சமாளிக்கப்பட்டன. அதன்பின் செனட்டிடம் அதிகாரத்தை ஒப்படைத்துவிட்டு அவர் ஓய்வு பெற்றார். கி.மு. 70-ல் 'பாம்பே' (Pompey) என்ற தளகர்த்தர் 'கன்சலாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். அவர் குடியரசின் புகழை ஓங்கச் செய்யப் பலவகையி லும் முயன்றார். மத்தியதரைக் கடலில் உலவிவந்த கடற் கொள்ளைக்காரர்களை ஒழித்தார். அதன் பின்னர் அவர் கிழக்கே சென்று 'மித்ரிடாட்டஸ்' (Mithridatus) என்ற மன்னரைத் தோற்கடித்தார். இங்ஙனம் அவர், கீழை நாடுகளில் போர் செய்து கொண்டிருந்தபோது, ரோம் நகரில் 'ஜூலியஸ் சீசர்' என்ற மற்றுமொரு தளகர்த்தர் தோன்றினார். அவரது செல்வாக்கு மக்களிடையே அதிகரித்தது. 'பாம்பே' ரோமுக்குத் திரும்பி வந்தபோது அவர் சீசரின் செல்வாக்கைக் கண்டு சற்று அஞ்சினார். அவரையும் 'கிராஸஸ்' என்ற மற்றுமோர் செல்வாக்கு மிக்க கனவானையும் தன்னுடன் சேர்த்துக்கொண்டு மூவராட்சி (Triamvarate)என்ற நூதன ஆட்சியை ஏற்படுத்தினார். அதன்பின் 'சீசர்', 'கால்' (Gaul) நாட்டின்மீது படையெடுத்துச் சென்றார். 'காலை'க் கைப்பற்றியபின் சீசர் திரும்பி ரோமுக்கு வந்தபோது 'பாம்பே'யும் செனட்டும் சேர்ந்துகொண்டு அவரை எதிர்த்தனர். 'சீசர்' அவர்களை முறியடித்து ஆட்சியைக் கைப்பற்றினார். மூவராட்சியை ஒழித்துத் தனி மனித சர்வாதிகாரத்தை ஏற்படுத் தினார். 'செனட்' சபையைச் சீர்திருத்தி அமைத்தார்; தல ஆட்சித் துறையையும் மாற்றி அமைத்தார். ஜூலியன் கால அட்டவணை யைக் கொணர்ந்தவர் அவரே. எனினும் அவரது எதிரிகள் சதி செய்து அவரைக் கொன்றுவிட்டனர். பேரரசராகத் தம்மை ஆக்கிக்கொள்ள அவர் முயன்றதாகப் 'புரூட்டஸ்' (Brutus) போன்ற அவரது நண்பர்களே குறை கூறினர். ஆனால், சீசரின் நண்பரான 'அந்தோணி' (Antony) என்ற சொல்வன்மை மிக்க தலைவர் சீசருக்கு அத்தகைய பேராசை இல்லை என்பதை நிரூபித்துச் சதிகாரர்களுக்கு எதிராக மக்களைக் கலகத்தில் ஈடுபடச் செய்தார். சதிகாரர்கள் அனைவரும் ஒழிக்கப்பட்டனர். அந்தோணி, லெப்பிடஸ் (Lepides) ஆகிய இருவரும் சேர்ந்து சீசரின் மைத்துன ரான ஆக்டேவியன் (Octavian) என்பவரை ஆதரித்தனர். இம் மூவரும் சேர்ந்து மூவராட்சி முறையை மீண்டும் ஏற்படுத்தினர். அந்தோணிக்கும் ஆக்டேவியனுக்கும் விரைவிலேயே சச்சரவு

ஏற்பட்டது. ஆக்டேவியன், அந்தோணியைத் தோற்கடித்துத் துரத்திவிட்டார். அந்தோணி எகிப்து நாட்டுக்குச் சென்று 'கிளியோபாட்ரா' (Cleopatra) என்ற அரசியை வென்றார். பின்னர் அவளது அழகில் மயங்கி கேளிக்கைகளில் மூழ்கிக் கிடந்தார். இதையறிந்த ஆக்டேவியன் எகிப்தின்மீது படையெடுத்தார். அவரது வருகையைக் கேள்வியுற்ற அந்தோணி தற்கொலை செய்துகொண்டு மாண்டார். கிளியோபாட்ரா ஆக்டேவியனையும் தனது அழகைக் கொண்டு மயக்க முயன்றாள். அது முடியாதென்று தெரிந்தவுடன் அவளும் நஞ்சுண்டு மாண்டாள். எகிப்து ஆக்டேவியன் வசமாயிற்று. இவ்வாறு கீழை நாடுகள் அனைத்தையும் வென்றபின் ஆக்டேவியன் ரோமுக்குத் திரும்பி வந்தபோது, செனெட்டர்களும் மக்களும் அவரைக் குதூகலமாக வரவேற்றுப் 'பெருமை மிக்கவர்' என்ற பொருள்படும் 'அகஸ்டஸ்' (Augustus) என்ற பட்டத்தையும், 'வெற்றித் தளபதி' எனப் பொருள்படும் 'இம்பரட்டர்' (Imperator) என்ற பட்டத்தையும் அவருக்கு வழங்கினர். 'முதன்மை ஆளுநர்' எனப் பொருள்படும் 'பிரின்ஸப்ஸ்' (Princeps) பதவி புதிதாக உண்டாக்கப்பட்டு அவருக்கு வழங்கப்பட்டது.

*முற்பட்ட பேரரசு* (The Early Empire) (*கி.மு. 27—கி.பி. 284*)

ஆக்டேவியன் அல்லது அகஸ்டஸ் சீசர் இத்தாலியையும் மற்றும் அதனுடன் சேர்ந்த பலவேறு மாநிலங்களையும் நாற்பது ஆண்டுகள்வரை அரசாண்டார். அவரது பேரரசில் மேற்கிலும் கிழக்கிலும் பல நாடுகள் அடங்கியிருந்தன. கிழக்கே, மாசிடோனியா, சிரியா, சிலீசியா, பித்தினியா, ஆசிய மைனர், இலிரிக்கம் ஆகிய நாடுகள் அடங்கியிருந்தன. மேற்கே சிசிலி, சார்டினியா, கார்ஸிகா, ஸ்பெயின், கால் முதலிய நாடுகள் உட்பட்டிருந்தன. மற்றும், ஆப்பிரிக்காவின் வடக்குக் கரையிலும் சில நாடுகள் அவருடைய தலைமையை ஏற்றுக்கொண்டன. இத்தாலியின் வடக்கே கூட, கெல்டிக் இனத்தவர்களை வென்று இரு மாநிலங்களைத் தோற்றுவித்தார். தெற்கே எகிப்தில் அவரது ஆதிக்கத்தை நன்கு நிலைநாட்டினார். ஆப்பிரிக்காவின் வடகரையில் மூன்று மாநிலங்கள் அமைக்கப்பட்டன. அகஸ்டஸின் பேரரசு மேற்கே அட்லாண்டிக் கடல் வரையிலும், தெற்கே சஹாரா பாலைவனம் வரையிலும், கிழக்கே பார்த்தியா வரையிலும், வடக்கே 'ரைன்', 'டான்யூப்' நதிதீரங்கள் வரையிலும் பரவியிருந்தது. மொத்தம் 26 மாநிலங்கள் அவரது பேரரசில் அடங்கியிருந்தன. மிக்க சாமர்த்தியத்துடன் ஆக்டேவியன் தமது பேரரசை ஆண்டார். தம்மைப் பேரரசரெனக் கூறிக்கொள்ளாமலேயே, அவர் தமது முழு அதிகாரங்களையும் செலுத்தினார். சீசர்

என்ற பட்டத்தை மட்டும் சூட்டிக்கொண்டார். செனெட்டைப் பகைத்துக்கொள்ளாமல் அதன் உதவியைக் கொண்டே பல வினைகளையும் செய்தார். இவ்வாறு நடந்துகொண்டதால் நாற்பதாண்டு காலத்துக்கு நாட்டின் அமைதியைக் காப்பாற்றினர். அமைதியின் விளைவாகவே நாட்டில் பல துறைகளிலும் முன்னேற்றம் ஏற்பட்டது. ரோமானிய வரலாற்றிலேயே பொற் காலமெனப் புகழத்தக்க அளவுக்குத் திறமையாக அவர் ஆட்சி செலுத்தினர்.

அகஸ்டஸ் சீசருக்குப் பின் வந்தவர்கள் தம்மைப் பேரரசர் களென அழைத்துக்கொண்டனர். அவர்களில் அனைவரும் வல்ல வர்கள் எனக் கூற இயலாது. கிளாடியஸ் (Cladius, 41-54 கி.பி.), வெஸ்பேசியன் (Vespasian, 69-79), டிராஜன் (Trajan, 98-117), ஹாட்ரியன் (Hadrian, 117-138) போன்றவர்கள் அவர்களுள் சிறந்தவர்கள். மார்க்கஸ் அரேலியஸ் (Marcus Aurelius) (161-180) என்ற பேரரசர் ஒரு தத்துவ ஞானியாகத் திகழ்ந்தார். ஆனால், இவர்கள் அனைவரும் கிறிஸ்தவர்களைக் கொடுமைப் படுத் தினர். கலாஷியம் (Colosseum) என்ற வட்டவடிவமான அரங்கில் சிங்கம், புலி போன்ற கொடிய விலங்குகளை விட்டு, கிறிஸ்தவர்களை அவைகள் கொன்று தின்பதைக் கண்டு களித்தனர். காலிகுலா (Calicula), நீரோ (Nero) போன்ற உதவாக்கரை மன்னர்களும் இருந்தனர். காலிகுலா தனது குதிரையைக் கன்சல் பதவிக்கு உயர்த்தினரென்பர். நீரோ, ரோம் நகரை எரித்தார் என்பர். இவ்வாறு ரோமானியப் பேரரசர்கள் நாளடைவில் அதிகாரம் செறியப்பெற்ற கொடுங்கோலர்களாக மாறினர். எல்லா நியமனங் களையும் அவர்களே செய்தனர். சட்டங்களை அவர்களே பிரியம் போல் ஆக்கினர். வரிகளைத் தான்தோன்றித்தனமாக வசூல் செய்தனர். நிலமனைத்தும் அரசின் உடைமை என்ற கொள்கையி னடிப்படையில் மன்னரும் அவரைச் சார்ந்த பிரபுக்களும், சிறு நிலக்கிழார்களின் நிலங்களைப் பறித்துக்கொண்டனர். இப் புல்லிய செயல் பேரரசின் வீழ்ச்சிக்கு முக்கிய காரணமாகும். பெரும் நிலச் சுவான்தார்கள் நாடெங்கும் தோன்றினர். அவர்கள் சுகபோகங் களில் மூழ்கி நாட்டு நலனைப் புறக்கணித்தனர். படைவீரர்களும் அங்ஙனமே கேளிக்கைகளில் பொழுதைப் போக்கினர். அவர்களது வீரம் நாளுக்கு நாள் மங்கியது. முரட்டுக் குணம் வாய்ந்த பல எல்லைப்புற இனத்தார் பேரரசுக்குள் நுழைந்தனர். அரச நிறுவனங் களிலும், படையிலும் சேர்ந்து பயிற்சி பெற்றுவிட்ட அவர்கள் நாளடைவில் பேரரசரையே எதிர்க்கலாயினர்.

***பிற்காலப் பேரரசும் வீழ்ச்சியும்*** **(The Late Empire and its fall) (கி.பி. 284-476)**

ரோமானிய வரலாற்றின் இறுதிப் பகுதியானது கி.பி. 284-ல் அதாவது டயோக்லிஷியன் (Diocletian) என்ற கொடுங்கோலர் ஆட்சிக்கு வந்ததிலிருந்து தொடங்குகிறதெனலாம். நாட்டில் கொஞ்சநஞ்சமிருந்த குடியாட்சிப் பண்புகளும் அவர் காலத்து மறைந்துவிட்டன. செனெட் மன்றம் பெயரளவிலேயே இருந்ததன்றி அரசாங்க அலுவல்கள் எதிலும் அது கலந்துகொள்ளவில்லை. பொதுமக்கள் சபையின் அதிகாரங்களும் நடைமுறையில் சிறிதும் செயல்படவில்லை. மன்னர் முழுமையான வல்லாட்சி புரிந்தார். மக்கள் அவரைத் தெய்வமென வணங்கினர். தமது பாதங்களில் வீழ்ந்து வணங்கும்படி டயோக்லிஷியன் குடிமக்களைப் பணித்தார். பிரின்செப்புகள் அணிந்த எளிய இராணுவ உடையை விட்டுவிட்டு, பந்நிறங் கொண்ட, சரிகை செறிந்த பட்டாடைகளை அவர் அணிந்துகொண்டு கோலாகலமாகக் கொலுவீற்றிருந்தார். 'வெல்லப்பட முடியாத கதிரவன்' (Invincible Sun) என அவர் தம்மை அழைத்துக்கொண்டார். அவர் இட்டதெல்லாம் சட்டமாயிற்று. அவர் பேரரசின் கிழக்கேயிருந்த நிகோமீடியா (Nicomedia) என்ற நகரைத் தமது கோநகராக்கிக்கொண்டு அங்கிருந்தே ஆணைகளை வெளியிட்டார். ரோம் நகரில் தமது பிரதிநிதி ஒருவரை ஆளுநராக நியமித்தார். அவருக்குப்பின் வந்த அரசர்களுள் கான்ஸ்டன்டைன் (Constantine) என்பார் முக்கியமானவர். கி.பி. 323 முதல் 337வரை அவர் ஆட்சி புரிந்தார். அவர் காலத்தில் கிறிஸ்தவ சமயத்தினர் துன்புறுத்தப்படுவது நின்றது. முழு வழிபாட்டுரிமை அவர்களுக்கு வழங்கப்பட்டது. பாரசீக முறையில் அவர் தமது ஆட்சித்துறையையும் படை அமைப்பையும் மாற்றினர். பைசான்ஷியம் (Byzantium) என்ற நகரைத் தன் தலைநகராக்கிக்கொண்டு அதற்குக் கான்ஸ்டாண்டிநோபில் என்ற பெயரை வழங்கினர். கிரேக்கத் திருச்சபையினரின் செல்வாக்கும், கீழை நாட்டுப் பழக்க வழக்கங்களும் அங்கு மேலோங்கி நின்றன. ரோம் நகர் தனது தலைமையையும் செல்வாக்கையும் இழந்தது. வேண்டல்கள் (Vandals), காத்துகள் (Goths), விசிகாத்துகள் (Visigoths) போன்ற முரட்டு வகுப்பினரின் தாக்குதல்கள் ரோமப் பேரரசின் மேற்குப் பாகத்தில் அடிக்கடி நிகழ்ந்தன. ரோம் நகர் பலமுறை அவர்களால் சூறையாடப்பட்டது. கி.பி. 455-ல் வேண்டல்களின் தலைவரான ஓடேசர் (Odoacer) என்பார், ரோமுலஸ் (Romulus) அகஸ்டஸ் என்ற மன்னரைத் தோற்கடித்து அரியணையிலிருந்து அகற்றினர். அதோடு மேலை ரோமப் பேரரசு வீழ்ச்சியுற்றது.

## 2. பேரரசு காலத்து ரோமானிய நாகரிகம்
## (Civilisation of the Roman Empire)

*அகஸ்டஸ் காலத்துப் பேரரசு—பொற்காலம்*

ரோமானிய வரலாற்றில் முதற் பேரரசராகக் (Emperor) கருதப்படுபவர் அகஸ்டஸ் மன்னராவார். அவர் தன்னை ஓர் குடியரசுவாதி என்று கூறிக்கொண்டாலும், வரலாற்றில் அவர் ஒரு பேரரசர் என்றே அழைக்கப்படுகின்ருர். அவரது பின் தோன்றல் களும் பேரரசர்கள் என்றே பேசப்படுகின்றனர். கி.மு. 23ஆம் ஆண்டில் ஒரு பேரரசருக்குரிய தனிப்பெரும் அதிகாரங்கள் யாவையும் செனட்சபை அவருக்கு வழங்கியது. இருப்பினும் அவர் தன்னை ஒரு பிரின்செப் என்றே அழைத்துக் கொண்டார். எனவே, கி.மு. 23 முதல் கி.பி. 180 வரையுள்ள காலத்தை முற்பட்ட பேரரசு காலம் (Early Empire) என்று அழைப்பது வழக்கம். இக்காலத்தே சிறப்பிலும் செல்வத்திலும் பேரரசு தனது உச்ச நிலையை எய்தியது. மத்தியதரைக் கடலைச் சுற்றியும் அதன் பரப்பு விரிவடைந்தது. சிறப்பாக அகஸ்டஸ் மன்னர் காலத்தில் ரோமானியரின் நாகரிகம் பல்வேறு துறைகளிலும் ஈடும் எடுப்பு மற்றுத் திகழ்ந்தது.

*அரசியல் நிலைமை*

அகஸ்டஸ் சீசர் உள்ளத்தால் ஒரு சர்வாதிகாரியே ஆயினும் வெளிக்கு ஒரு பிரபுவைப் போலவே நடந்துகொண்டார். குடியரசு நிறுவனங்கள் அனைத்தும் சிறிதும் பழுதில்லாமல் காப்பாற்றப் பட்டன. செனட் என்ற முதுமக்கள் மன்றம் நாட்டின் தனித் தலைமை பெற்ற நிறுவனமாகத் திகழ்ந்தது. அதற்குக் கீழ் மக்கள் பிரதிநிதிகள் அடங்கிய மக்கள் மன்றம் ஒன்றும் நாட்டின் முக்கிய மான நிறுவனங்களில் ஒன்ருக விளங்கியது. அரசாங்கத்தின் முக்கிய அதிகாரிகளை அதுவே தேர்ந்தெடுத்தது. அகஸ்டஸின் சட்டங்களை அனுமதிக்கும் உரிமையும் அச் சபையிடமே இருந்தது. அவரது சிறப்பதிகாரங்கள் அனைத்தையும் அதுவே வழங்கியது. செனட் சபையானது நாட்டின் நிர்வாகத்தையும் பொருளாதாரத் தையும் கவனித்துக்கொண்டது. பேரரசின் உறுப்பு நாடுகளின் மீது ஆதிக்கம் செலுத்தும் உரிமையும் அம் மன்றத்துக்கே உண்டு. அரசாங்க அலுவல்களில் ஏற்கெனவே பணி செய்து அநுபவம் பெற்றவர்களும், செல்வந்தர்களும், கண்ணியமிக்க பிரபுக்களுமே அச் சபையில் இடம் பெற்றனர். பேரரசிலிருந்த பல்வேறு மாநிலங் களின் ஆளுநர்களாகவும், படைகளின் பெரும் தளபதிகளாகவும், பல்வேறு ஆட்சிக் குழுக்களின் உறுப்பினர்களாகவும் அம் மன்ற

உறுப்பினர்கள் நியமிக்கப்பட்டனர். நல்ல பழுத்த அநுபவம் பெற்ற அரசியல்வாதிகள் அதில் இடம் பெற்றிருந்த காரணத்தால் அகஸ்டஸ் அவர்களது அறிவுரைகளுக்குத் தனிமதிப்பு வழங்கினர். எனினும் அது பெரும்பாலும் அகஸ்டஸுக்குக் கட்டுப்பட்டே நடந்து வந்தது. அம் மன்றத்தைக் கூட்டவோ கலைக்கவோ அதில் கொண்டு வரப்பெறும் சட்டங்களை ஏற்றுக்கொள்ளவோ மறுக்கவோ அவருக்கு முழு உரிமை வழங்கப்பட்டிருந்தது. இங்ஙனம் வெளிப்பார்வைக்கு மன்னர், மக்கள் மன்றங்களுக்குக் கட்டுப்பட்டவர் போல் காணப் பட்டாலும், உண்மையில் அவர் ஓர் எதேச்சாதிகாரியாகவே விளங்கினர். அதற்குக் காரணம் நாட்டின் படைகள் அனைத்தும் அவரது ஆணைக்குக் கட்டுப்பட்டிருந்ததே காரணமாகும். தூரத்து மாநிலங்களிலிருந்த படைகளுக்கும் அவரே தலைவராக விளங்கினர். பிற நாடுகளோடு போர் தொடுக்கவும், சமாதானம் செய்து கொள்ளவும், வெளிநாட்டு விவகாரங்களைக் கவனித்துக்கொள்ளவும், அவரே தனியுரிமை பெற்றிருந்தார். பேரரசிலேயே மிகப் பெரிய செல்வந்தராக அகஸ்டஸ் திகழ்ந்தார். ரோம் நகருக்கு வேண்டிய உணவுப் பொருளை அவர் தம் கைப் பணத்திலிருந்தே வாங்கி வழங்கினர். மற்றும் வீரர்களுக்கு மாதந்தோறும் ஊதியங்களையும், அவரே வழங்கினர். ரோம் நகரத்தில் குடிநீர் வசதியை அவர் தம் சொந்தப் பொருளைக்கொண்டே சீர்ப்படுத்தினர். எனவேதான் மக்கள் அவருக்கு எல்லாவிதமான உரிமைகளையும், அதிகாரங் களையும், மனமுவந்து வழங்கினர். எனினும் அவர் தம் அதிகாரங் களை மக்களின் நன்மைக்காகவே பயன்படுத்தினர் என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

### *அமைதி காத்தல்*

அகஸ்டஸ் சீசரின் காலத்தில் பேரரசில் அமைதி நிலவியது. வெளிநாட்டுப் படையெடுப்பாலும், உள்நாட்டுப் போர்களாலும் அவதிக்குள்ளாயிருந்த மக்கள் அமைதி காத்த அகஸ்டஸைத் தெய்வமெனப் போற்றினர். அகஸ்டஸின் அமைதிக்கு ஒரு சின்ன மாக அழகிய சிற்ப வேலைப்பாடுகள் அமைந்த தூண் ஒன்று ரோம் நகரத்தின் நடுவில் நடப்பட்டது. அகஸ்டஸ் பெரும் வலிமை மிக்கதோர் படையை வைத்திருந்ததாலேயே அவர் நாட்டின் அமைதியைக் கட்டிக்காக்க முடிந்தது. அவரது படையில் 150,000 வீரர்கள் இருந்தனர். பேரரசுக்கு உட்பட்ட மாநிலங்களில் அதே எண்ணிக்கை கொண்ட வீரர்கள் நாட்டைக் காக்கத் தயாராகக் காத்து இருந்தனர். ரோமானியர்களேயன்றி பல்வேறு வகுப் பினரும் படையினில் இடம் பெற்றிருந்தனர். அவர்களுக்கு நல்ல ஊதியம் வழங்கப்பட்டதோடு, ரோமானியக் குடியுரிமையும் தரப் பட்டது. படைத்தளபதிகள் மட்டும் ரோமானியர்களாகவே

இருந்தனர். எனவே, படைப் பிரிவுகளில் ஒழுங்கும் கட்டுப்பாடும் நிலவின. ரோம் நகரில் 9,000 வீரர்கள் அடங்கிய ஒரு படைப் பகுதியில் மிகச் சிறந்த ரோமானிய வீரர்கள் மட்டுமே இடம் பெற்றிருந்தனர். அவர்கள் மூலமே படைப்பகுதிகள் அனைத்தும் பயிற்சி பெற்றன.

பேரரசில் உறுப்பு நாடுகளாயிருந்த ஸ்பெயின், கால், சிரியா, எகிப்து போன்ற பிரதேசங்களில் சர்வாதிகாரிகள் தோன்றிவிடாமல் தடுக்க அகஸ்டஸ் பல வழிகளைக் கையாண்டார். மாநிலப் படைகளுக்கும், தானே சேனாதிபதியென அவர் அறிவித்தார். மாநிலங்களின் அரசியல் நிர்வாகத்திற்கும் தானே தலைவர் என அறிவித்து அதற்கேற்ப நடந்துகொண்டார். அதையும் மீறி மாநிலங்களில் ஏதாவது கலகம் நேர்ந்தால் உடனே அங்கிருந்த அரசாங்கங்களை நீக்கிவிட்டு அவற்றைத் தன் நேரடி ஆட்சியின்கீழ்க் கொண்டு வந்தார்.

பேரரசு அளவுக்கு மீறி விரிவாயிருந்தால் அதன் அமைதியைக் கட்டிக் காப்பது கடினம் என்பது தெரிந்த அகஸ்டஸ் அதன் எல்லைகளை ஒரு குறிப்பிட்ட அளவோடு வரையறுத்துக் கொண்டார். வடக்கே டான்யூப் (Danube) ரைன் (Rhine) ஆகிய நதிகளும், கிழக்கே கருங்கடல், யூப்ரடிஸ் நதி, அராபியப் பாலைவனம் ஆகியவையும், தெற்கே சகாராப் பாலைவனமும், மேற்கே அட்லாண்டிக் மாக்கடலும் தனது பேரரசின் எல்லை என அவர் அறிவித்தார்.

*நாட்டின் செல்வாக்கு*

மேற்கண்டபடி நாட்டின் அமைதி நன்கு காக்கப்பட்டதால் ரோமானியப் பேரரசில் செல்வமும் செல்வாக்கும் மேலும் மேலும் அதிகரித்தது. மத்தியதரைக் கடல், ரோமானியப் பேரரசின் ஏரியாகத் திகழ்ந்தது. அதில் ஆயிரக் கணக்கான மரக்கலங்கள் கோதுமை, ஆலிவ் எண்ணெய், லினன் துணி, கம்பளி ஆடைகள், உலோகப் பொருள்கள் முதலியவைகளை ஏற்றிக்கொண்டு சதா சஞ்சரித்த வண்ணம் இருந்தன. அதனால் பன்னாட்டு வாணிபம் வளர்ந்தது. வணிகர்கள் பெருஞ் செல்வம் உடையவர்களாய் விளங்கினர். அவ் வணிக முதலாளிகள் பெரும் மாட மாளிகைகளைக் கட்டிக்கொண்டு மிக ஆடம்பரமாக வாழ்ந்தனர். ரோம் நகரத்தில் பல அழகிய அரசாங்க மாளிகைகளும் எழுப்பப்பட்டன. அக் கட்டடங்களில் பெரும்பாலும் அழகிய சலவைக் கற்களே பயன் படுத்தப்பட்டன. அதனால்தான் அகஸ்டஸ் (Augustus) 'நான் வரும்போது செங்கல்லால் ஆய ரோம் நகரையே கண்டேன். அத்தகைய நகரத்தைப் பளிங்குக்கல் நகரமாக இதோ நான் மாற்றி

விட்டுச் செல்கிறேன்' என்று பெருமை பேசிக்கொண்டார். இது ஓரளவு உண்மையே எனினும் நகரத்தின் ஏழைமக்கள் காற்றோட்டமும் வசதியுமற்ற சிறு குடிசைகளிலேயே வாழ்ந்தனர் என்பதும் உண்மைதான். பெரிய கோயில்கள், அரசாங்க மாளிகைகள் இவற்றைப் பொறுத்தமட்டில்தான் அவரது கூற்றுப் பொருத்தமாயிருந்தது.

### *அகஸ்டஸின் சீர்திருத்தங்கள்*

நாம் ஏற்கெனவே கூறியபடி அகஸ்டஸ் மத்திய அரசில் எல்லா அதிகாரங்களையும் குவித்தார் என்றாலும் மாநிலங்களுக்கும், நகரங்களுக்கும் சுயாட்சியை வழங்கினார். அவைகள் கலகத்தில் ஈடுபடா வண்ணம் கண்காணிப்பதில் மட்டுமே அவர் கவனம் செலுத்தினார். மற்றபடி கலை, பொருளாதாரம், சமயம் ஆகிய துறைகளில் அவைகளுக்குப் பலவகையிலும் சுயேச்சையை அவர் வழங்கினார். நாடெங்கும் பல பெரு வழிகளை உண்டாக்கி அதன் மூலம் தபால் முறையை அமைத்துச் செயல்படுத்தினார். அரசாங்க அதிகாரிகளைத் தகுதியின் அடிப்படையிலேயே அவர் நியமித்தார். கையூட்டு வாங்கிய அதிகாரிகளை அவர் மிகக் கடுமையாகத் தண்டித்தார். தூரத்து மாநிலங்களில் வரிகளை வசூலிக்க அரசாங்க அதிகாரிகளையே அவர் நியமித்தார். பரம்பரையாய் வரி வசூல் செய்து வந்த பிரபுக்களை அவர் ஒழித்தார். சமுதாயத்தில் மண்டிக் கிடந்த ஒரு சில ஊழல்களை அவர் களைய முயற்சித்தார். விபசாரம், விவாகரத்து, தற்கொலை, அளவுக்கு மீறிக் குடித்தல் போன்ற ஒழுக்கக் கேடான செயல்களைத் தடுக்க அவர் பல சட்டங்களை இயற்றினார்.

### *இலக்கிய வளர்ச்சி*

அகஸ்டஸின் காலம் 'பொற்காலம்' என அழைக்கப்படுவதற்கு முக்கிய காரணம் அக் காலத்தே ஏற்பட்ட ஈடும் எடுப்புமற்ற இலக்கிய வளர்ச்சியே ஆகும். ஈனிட் (Aeneid) என்ற மாபெரும் காவியத்தைப் படைத்த வர்ஜில் (Virgil) என்ற பெருங்கவிஞர் அகஸ்டஸ் காலத்தவரேயாவார். ட்ராய் (Troy) என்ற நகரம் வீழ்ச்சியடைந்த பின்னர் ஈனியாஸ் (Aeneas) என்ற வீரனுக்கு ஏற்பட்ட பல இடையூறுகளையும் அவற்றை அவன் சமாளித்த வகையினையும் விரித்துக் கூறுவதே இந் நூலாகும். ஹோமர் (Homer) என்ற கிரேக்கக் கவிஞர் எழுதிய ஓ்டிசி (Odyssey) என்ற காவியத்தைத் தழுவியே இந் நூல் இலத்தீன் மொழியில் ஆக்கப்பட்டது. ரோமானிய மன்னர்கள் ஈனியாசின் வழிவந்தவர்கள் என்று கூறிக்கொண்டதால் இக்காவியம் ரோமப் பேரரசர்களைப்

பெருமைப்படுத்துவதற்காக எழுதப்பட்டதாகவும் கொள்ளலாம். அகஸ்டஸ் காலத்திய மற்ெருரு பெரும் புலவர் ஹொரேஸ் (Horace) என்பவராவார். அவர் ஓட்ஸ் (Odes) என்று கூறப்படுகிற நீண்ட உணர்ச்சி மயமான கவிதைகளைப் புனைந்து புகழ்பெற்றவர். ஓவிட் (Ovid) என்னும் மற்ருேர் இசையறிஞர் காதற் பாட்டுகள் பலவற்றைப் புனைந்து அளித்தவர். அவரது சொந்த வாழ்க்கையில் ஏற்பட்ட காதல் அநுபவங்களை மட்டுமின்றி கற்பனையாகவும் அவர் பல நிகழ்ச்சிகளை வருணித்துள்ளார். தெய்வங்களின் காதல் லீலைகளையும், வீரசாகசங்களையும் அவர் தமது பாடல்களில் பெரிதும் விவரித்துள்ளார். லிவி (Livy) எனும் வரலாற்று அறிஞர் ரோம் நகரத்தின் வரலாற்றை விரித்துரைக்கின்ருர். அதில் அழகிய வருணனைகளையும், ஒருவகையான நாடகபாணியையும் நாம் நன்கு காணலாம். நாட்டுப்பற்றின் விளைவாக எழுதப்பட்ட ஓர் வரலாறேயன்றி உண்மை வரலாருக அதை நாம் எடுத்துக்கொள்ளுவதற்கில்லை. மற்றும் இக்காலத்தே கட்டடக் கலையைப் பற்றியும், யாப்பு அலங்காரம் பற்றியும், ஸ்டாயிக், எபிகூரிய தத்துவங்கள் பற்றியும் பலர் பல நூல்களை எழுதினர். அரசருக்கு ஆசிரியராய் அமர்த்தப்பட்ட அறிஞர் ஒருவர் கலைக்களஞ்சியம் (Encyclopaedia) ஒன்றைத் தொகுத்தார். மசினஸ் (Maecenas) என்ற ஓர் செல்வந்தர் பல புலவர்களை ஆதரித்தார். இங்ஙனம் மன்னரேயன்றி ரோமப் பேரரசிலிருந்த பல்வேறு செல்வந்தர்களும் கலையையும், இலக்கியத்தையும் ஆதரித்தனர். ஸ்டிராபோ (Strabo) என்ற புவியியல் வல்லுனர் ஆசியாமைனரைச் சேர்ந்தவர் எனினும் அலெக்ஸாந்திரிய நகரத்தில்தான் அவர்தம் வாழ்நாளின் பெரும் பகுதியைக் கழித்தார். ஏதென்ஸ் நகரிலும் பல அறிஞர்கள் செல்வந்தர்களால் ஆதரிக்கப்பட்டனர்.

***சமயமும் தத்துவமும்***

இப் பேரரசு காலத்தே ரோமானியக் கடவுளர்கள் கிரேக்கப் புராணக் கடவுளர்களோடு ஒன்றுபடுத்தப்பட்டனர். எனினும், அக் கடவுளர்களின் மதிப்பும் செல்வாக்கும் மக்களிடையே குறைந்தது. தங்களுடைய குல தேவதைகளான லாரஸ் (Lares), பெனட்டஸ் (Penates), ஜுபிடர் (Jupiter), மார்ஸ் (Mars) போன்ற கடவுளர்களின் வழிபாட்டை மறந்து பல ரோமானியர்கள், கிரேக்கர்களின் உலகியல் தத்துவங்களை, ஆர்வத்துடன் கற்கலாயினர். 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' என்ற கொள்கையை உடைய எபிக்கூரிய தத்துவம் பலருக்குப் பிடித்திருந்தது. அத்தகையோர் தம் மனம் போனபடியெல்லாம் சிற்றின்பத்தில் உழலலாயினர். அதைத் தடுக்க அகஸ்டஸ் பழைய ரோமானியக் கோயில்

களைப் புதுப்பித்தார். பல கடும் சட்டங்களை ஏற்படுத்தினர். திருமணம் செய்துகொண்டு ஒழுங்காக வாழ்க்கை நடத்தியவர்களுக்கு அவர் சில சிறப்புரிமைகளை வழங்கினர். ஒழுக்கமற்ற வாழ்க்கை நடத்தியதற்காக அவர் ஓவிட் (Ovid) என்ற பெரும் புலவரையும், தனது சொந்த மகளையும் நாடுகடத்தினர். எனினும் சமுதாயம் ஒழுக்கங் கெட்ட பாதையில் மிக வேகமாகச் சென்று கொண்டிருந்தது. அதைக் கண்ட சிலர் மனச் சமநிலையை வற்புறுத்தும் ஸ்டாயிசிசம் (Stoicism) என்ற கிரேக்கத் தத்துவத்தில் ஈடுபடலாயினர். இயற்கையில் ஓர் நியதி நிலவுகிறது என்றும், அதை எதிர்த்து எவராலும் போகமுடியாது என்றும், நடப்பது நடக்கட்டும் என்று சும்மா இருத்தலே சாலச் சிறந்தது என்றும் ஸ்டாயிக் மேதைகள் போதிக்கலாயினர். செனேகா (Seneca), எபிக்டாடஸ் (Epictatus) போன்ற ஸ்டாயிக்குகள் ஒரு வகையான யோக மார்க்கத்தைப் பற்றிப் பேசி வந்தனர். இயற்கையின் நியதியை அவர்கள் வணங்கிச் சரணடைந்தனர். மார்க்கஸ் அரேலியஸ் என்ற பேரரசர் தமது 'சிந்தனைகள்' என்னும் நூலில் மனச் சமநிலையை வற்புறுத்துகின்றார். நன்மையையும் தீமையையும், மகிழ்ச்சியையும் துயரத்தையும் ஒருவன் சமமாகக் கருதவேண்டுமென்பதே அவரது போதனைகளின் சாராம்சமாகும். 'எல்லாம் விதியின் பயன்' என்பதும், வாழ்க்கையில் துன்பம் ஏற்படுவது இயற்கையானது என்பதும் அவரது ஏனைய கொள்கைகளாகும். கிறிஸ்தவர்களின் ஒழுக்க விதிகளின் சாயை அவரது சிந்தனைகளில் தொனிக்கின்றது.

இங்ஙனம் அகஸ்டஸின் காலத்தில் நாட்டில் அமைதியும், செல்வாக்கும், இலக்கிய மேம்பாடும், கலைத்திறனும், தத்துவ உணர்ச்சியும் ஒருங்கே வளர்ந்த காரணத்தினல்தான் அதை வரலாற்று ஆசிரியர்கள் ஒரு 'பொற்காலம்' எனப் போற்றுகின்றனர்.

### *பிற்கால ரோமானியப் பேரரசின் நாகரிகம்—ஆட்சி முறையும் சட்டமும்*

உலக நாகரிகத்துக்கு ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு நன்கொடையை வழங்கியுள்ளது என்பது உண்மையானல், ரோமானியர்கள் உலகத்துக்கு அளித்துள்ள நன்கொடையானது அவர்களது மெச்சத்தக்க அரசாங்க அமைப்பும், சட்டத்தொகுதியுமே ஆகும். கிரேக்க நாடுகளில் பல குடியரசுகள் இருந்தன எனினும் ரோம் நகரைப் போலப் பரந்ததோர் பேரரசைக் கட்டியாண்ட ஒரு குடியரசை வரலாற்றில் நாம் எங்கும் காணமுடியாது. இன்றைய உலகில் நாம் பேசுகின்ற குடியரசு தத்துவங்கள் எல்லாம் ரோமானியரிடமிருந்து கடன் வாங்கப்பட்டவையேயன்றி வேறல்ல.

சுதந்திரம் என்று பொருள்படும் 'லிபர்ட்டி' (Liberty) என்ற ஆங்கிலச் சொல்லும், குடியரசு எனப் பொருள்படுகின்ற 'ரிபப்ளிக்' (Republic) என்ற ஆங்கிலச் சொல்லும் லத்தீன் மொழியிலிருந்தே பிறந்தவைகளாகும். அதிகாரிகளையும் சட்டமன்ற உறுப்பினர்களை யும் தேர்ந்தெடுப்பதில் இன்றைய ஜனநாயக அரசானது ரோமானிய முறையையே கடைப்பிடிக்கின்றது. கிரேக்கர்களின் திருவுளச் சீட்டு முறையை (Lots system) இக்காலத்தில் யாரும் கடைப்பிடிப்பதில்லை. அமெரிக்காவிலும், பிரான்சிலும் பதினெட்டாம் நூற்றுண்டில் ஏற்பட்ட புரட்சிகளின்போது அங்குள்ள தலைவர்கள் தங்களது நாட்டின் வருங்கால அரசியல் அமைப்பை வகுக்க ரோமானிய வரலாற்றின் ஏடுகளையே தேடித் தமக்கு வேண்டிய தாராள ஜனநாயகக் கருத்துகளைப் பெற்றனர்.

இக்கால ஜனநாயகக் கருத்துகளுக்கு வித்திட்டது போலவே சர்வாதிகாரக் கருத்துகளுக்கும் ரோமானியர் வழிகாட்டிகளாய் அமைந்தனர். ஒரு நாட்டில் நெருக்கடியான நிலைமை ஏற்படும் போது சர்வாதிகார ஆட்சி ஏற்படுவது நல்லது என்ற கருத்தை இக்கால மக்கள் ரோமானியரிடமிருந்தே கற்றனர் எனலாம். அது போன்றே ஆடம்பரமிக்க கோனாட்சித் தத்துவத்தையும் அவர்கள் செம்மையாக்கி உலகுக்கு ஈந்தனர். பேரரசர்களின் ஆடம்பர உடை, அணிகலன்கள், சிம்மாசனம், செங்கோல் போன்றவை களைப் பிற்காலப் பேரரசர்கள் அப்படியே கைக்கொண்டனர். இங்ஙனம் குடியரசு, முடியரசு ஆகிய இருவகை அரசியல் தத்துவங் களுக்கும் ரோம் வழிகாட்டியாய் அமைந்தது.

### ஆட்சித்துறை அமைப்பு

மிகப் பரந்து மிகுந்த பேரரசு ஒன்றை எப்படி நிருவகிக்க வேண்டும் என்பதற்கும் ரோமானிய ஆட்சிமுறை ஒரு வழிகாட்டி யாய் அமைந்தது. முதலில் ரோமானிய அரசர்கள் தம்மால் வெல் லப்பட்ட மாநிலங்களில் ஓர் ஆளுநரையும் அவருக்கு உதவியாக ஒருசில அதிகாரிகளையும் நியமித்து வரிவசூல் செய்வதை மட்டுமே அன்னாரிடம் ஒப்படைத்தனர். மற்றபடி ஆங்காங்கே இருந்த ஆட்சி முறை அமைப்பில் அவர்கள் ஒன்றும் தலையிடவில்லை. ஆனால், நாள் செல்லச் செல்ல அவர்கள் உள்ளூர் நிர்வாகத்தில் சிறிது சிறிதாகத் தலையிடலாயினர். ஒரே மாதிரியான ஆட்சி முறையானது பல்வேறு மாநிலங்களிலும் புகுத்தப்பட்டது. மாநில நகரங்கள், பல உரிமைகளைப் பெற்றன. ரோமானியக் குடியுரிமை யானது பல்வேறு மக்களுக்கும் படிப்படியாக வழங்கப்பட்டது. ரோமானியச் சட்டமும், உள்ளாட்சி நிருவாகமும் பேரரசு நாடு களிலும் புகுத்தப்பட்டன, எனினும் இக் காலத்தில் இருப்பது

போன்ற கூட்டரசு முறையை (Federation) ரோமானியர்கள் ஏற்படுத்தவில்லை. பேரரசின் உறுப்பு நாடுகள் அனைத்தும் ஒரே பேரரசனின் ஆணைக்கே கட்டுப்பட்டிருந்தன. தம்மால் நியமிக்கப் பட்ட பேரரசு அதிகாரிகளைக் கொண்டே அவர் அனைத்து மாநிலங் களையும் ஆட்சி புரிந்தார். அவ்வதிகாரிகளிடையே பல படித்தரங்கள் காணப்பட்டன. அவர்களுக்கு வழங்கப்பட்ட சிறப்புரிமைகளும், அதிகாரங்களும் அவரவர் பதவிக்கு ஏற்றபடி வெவ்வேருக வகுக் கப்பட்டன. பிரிட்டன் தனது பேரரசை ஆட்சி புரிய இத்தகைய முறையையே பெரிதும் கடைப்பிடித்தது.

***சட்டத்தின் வளர்ச்சி***

ரோம் உலகுக்கு ஈந்த நன்கொடைகளில் மிகச் சிறந்தது அதன் சட்டத் தொகுதியாகும். அது நாளடைவில் படிப்படியாக வளர்ந்து முழுமை பெற்ற பல விதிமுறைகளின் தொகுப்பாகும். நாகரிகம் மிக்க இக் கால நாடுகள் பல ரோமானியச் சட்டங்களின் அடிப்படையிலேயே தமது சட்டங்களை அமைத்துள்ளன. ஆரம்பத் தில் ரோமானியச் சட்டங்கள் மிக எளிமையாக இருந்தன. நாளடைவில் ரோம் ஒரு பேரரசாக மாறியபோது பல்வேறு பழக்க வழக்கங்களைக் கொண்ட மக்களைக் கட்டியாளும் பொறுப்பு ரோமா னியரை வந்தடைந்தது. அத்தகையோரின் வழக்குகளைத் தீர்க்க ரோமானியப் பேரரசர்கள் தனிப்பட்ட நீதிபதிகளை நியமிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆங்காங்கே ஆட்சி புரிந்த மாநில ஆளுநர்கள் அந்தந்த மக்களுடைய பழக்க வழக்கங்களுக்கு ஏற்ப சட்டங்களை ஏற்படுத்திக் கொண்டனர். மற்றும் பேரரசு காலத்தில் நாட்டில் பணப்பெருக்கமும், வாணிபமும் வளர்ந்தன. சொத்துரிமை பற்றிய வழக்குகளும், ஒப்பந்தம், வாரிசுரிமை பற்றிய வழக்குகளும் மிகுந்த சிக்கலுடையனவாக மாறின. அவற்றையெல்லாம் தீர்க்கப் பல புதிய சட்டங்கள் தேவைப்பட்டன. மற்றும் செல்வப் பெருக் கின் காரணமாகச் சமுதாயத்தில் பல ஒழுக்கக் கேடுகள் ஏற்பட்டன. கணவன், மனைவி, பெற்றோர், பிள்ளைகள் ஆகியோர்களிடமிருந்த பந்தங்கள் தளர்ச்சியுற்றன. குடும்பங்கள் சிதைந்தன. விவாக ரத்துகள் அதிகரித்தன. இவற்றையெல்லாம் சமாளிக்கப் புதிய சட்டங்கள் பல தேவைப்பட்டன. எனவே, நீதிபதிகள் சமயத்துக் குத் தகுந்தாற் போல் பொது அறிவுக்கும், நீதிக்கும் பொதுவான முறையில் பல தீர்ப்புகளை வழங்கினர். அத் தீர்ப்புகள் யாவும் பிற்காலத்தே வருபவர்களுக்குச் சட்டங்களாகப் பயன்பட்டன. நீதி பதிகளால் ஏற்படுத்தப்பட்ட சட்டங்கள் (Judge made laws) என்று அவை பெயரிடப்பட்டன. பல வழக்குரைஞர்களும், சட்ட நிபுணர் களும் நாட்டில் பெருகினர். அவர்கள் ஒரு வழக்குக்குச் சாதக

மாகவும் பாதகமாகவும் பல முன் நிகழ்வு ஆதாரங்களை (precedents) எடுத்துக் காட்டினர். ஆனால், இத்தகைய எடுத்துக்காட்டுகளின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகமாயிற்று. ஒன்றுக்கொன்று முரண்பட்ட முன்நிகழ்வு ஆதாரங்களை வழக்குரைஞர்கள் எடுத்துக் காட்டலாயினர். அவற்றில் எது ஏற்றுக்கொள்ளத் தக்கது எது தள்ளத்தக்கது என்று புரியாத நிலைமை பல சமயங்களில் ஏற்பட்டது. இத்தகைய இக்கட்டான நிலைமையைச் சரிக்கட்டவே ரோமானியப் பேரரசர்கள் ஒரே தன்மைத்தான சட்டங்களைத் தொகுக்க விரும்பினர். அகஸ்டஸ் என்ற பேரரசரும், மற்றும் பிற்காலத்தே ஜஸ்டீனியன் என்ற பேரரசரும் இத்தகைய முயற்சியில் பெரிதும் அக்கறை காட்டினர். காயஸ் (Gaius), அல்பியம் (Ulpiam), பாப்பினியன் (Papinian), பாலஸ் (Paulus) போன்ற சிறந்த சட்ட நிபுணர்கள் நாட்டில் நிலவிய சட்டங்களை எல்லாம் தொகுத்துப் பல நூல்களை எழுதினர். ஜஸ்டினியன் காலத்துச் சட்டங்களை ஓர்மைப்படுத்தவென்றே பதினறு சட்ட நிபுணர்கள் அடங்கிய குழு ஒன்று அமைக்கப்பட்டது. அவர்கள் மூன்று ஆண்டுகள் உழைத்து ஏறக்குறைய இரண்டாயிரம் சட்ட நூல்களை ஆராய்ந்து முப்பத்தொன்பது சட்ட நூல் ஆசிரியர்களின் கருத்துகளையெல்லாம் தொகுத்துப் பல்வேறு தலைப்புகளின் கீழ் அவற்றை வரிசைப்படுத்தி வெளியிட்டனர். அவ் வெளியீடுகளுக்கு டைஜஸ்ட் (Digest) என்று பெயர் தரப்பட்டது. வழக்குரைஞர்கள் இந்த ஒரு சட்டத்தொகுப்பு நூலிலிருந்து மட்டுமே மேற்கோள்கள் தரவேண்டுமென்றும் வேறு எந்த நூலிலிருந்தும் சான்று காட்டக்கூடாது என்றும் ஜஸ்டின் கண்டிப்பாக ஆணையிட்டார். சாதாரண சட்ட மாணவர்கள் படித்து அறிந்துகொள்ளுவதற்காக டைஜஸ்ட் (Digest) என்ற நூலின் மிக முக்கியமான பகுதிகளை எடுத்து இன்ஸ்டிடூட்ஸ் (Institutes) என்ற சிறிய சட்ட நூலை ஆக்குமாறு ஜஸ்டின் சட்ட நிபுணர்களைப் பணித்தார். ரோமானியச் சட்டத்தின் கோட்பாடுகள் (Principles) மட்டும் அந்நூலில் இடம் பெற்றன. இங்ஙனம் ஜஸ்டினியனல் திருத்தியமைக்கப்பட்ட ரோமானிய சட்டத் தொகுதியில் (Justinian Code) 4,652 நிலவரச் சட்டங்கள் (Statutes) இடம் பெற்றன. பிற்காலத்தே அவ்வப்போது புதிய சட்டங்களும் திருத்தத்துடன் அவற்றில் சேர்க்கப்பட்டன. இங்ஙனம் கோட் (Code), டைஜஸ்ட் (Digest), இன்ஸ்டிடூட் (Institute) என்ற முறையில் தொகுக்கப்பட்ட ரோமானியச் சட்டங்களும் திருத்த நூலும் சேர்ந்தது, ரோமப் பேரரசின் சட்டமுறைமைக்கு அடிப்படையாக அமைந்தன. அவற்றைச் சட்ட அறிஞர்கள் கார்ப்பஸ் ஜூரிஸ் சிவிலிஸ் (சிவில் சட்டத் தொகுதி) எனப் பொதுவாக அழைப்பர்.

*சட்டத்தின் பிரிவுகள்*

ரோமானியச் சட்டத் தொகுதியானது மூன்று வகையாகப் பிரிக்கப்படும். அவை முறையே (1) ஜஸ் சிவில் (Jus Civile), (2)ஜஸ் ஜென்டியம் (Jus Gentium), (3)ஜஸ் நேச்சுரேல் (Jus Naturale) - எனப்படும். இவற்றில் ஜஸ் சிவில் (Jus Civile) என்பது ரோம் நகரக் குடிமக்களுக்குமட்டுமே உரித்தானவையாகும். அவை பண்டைய ரோமானியர்களின் பழக்க வழக்கங்களை அடிப்படையாய்க் கொண்டு விளங்கின. செனட் மன்றத்தின் சட்டங்களும், அரசர்களின் ஆணைகளும், நீதிபதிகளின் தீர்ப்புகளும் அவற்றில் இடம் பெற்றிருந்தன. ஜஸ் ஜென்டியம் (Jus Gentium) என்பது எல்லா மக்களுக்கும் பொதுவான சட்டங்களைத் தன்னகத்தே கொண்டது. ரோமப் பேரரசில் உட்பட்டிருந்த பல்வேறு மாநிலங்களுக்கும் அது பொதுவாக அமைந்திருந்தது. தனிப்பட்ட மக்களின் சொத்துரிமை, ஒப்பந்த உரிமை, அடிமைகளை விற்கவும் வாங்கவும் உள்ள உரிமை போன்ற பல்வேறு கூறுபாடுகள் அதில் இடம் பெற்றிருந்தன. மேற் கூறப்பட்ட சிவில் சட்டத் தொகுதிக்கு இது மாறுபடுவதற்குப் பதிலாக அதற்குத் துணையாகவே அமைந்திருந்தது. ஜஸ் நேச்சுரேல் (Jus Naturale) என்பது இயற்கையின் சட்டம் எனப் பொருள்படுவதாகும். இது வெறும் சித்தாந்தமேயன்றி நடைமுறையில் பயன்படத்தக்கதல்ல. மக்கள் யாவரும் சமம் என்றும், அவர்களுக்குச் சில ஜீவாதாரமான உரிமைகள் உண்டென்றும், அவற்றைக் காப்பது அரசின் கடமை என்றும், அரசாங்கம்கூட அத்தகைய உரிமைகளை மறுக்க முடியாது என்றும், அவை என்றும் மாருத தன்மை பெற்றவை என்றும் கூறப்பட்டது. சிசரோ (Cicero) என்ற வாக்கு வன்மைமிக்க அறிஞர்தான் இத்தகைய சட்டமுறையைத் தோற்றுவித்தவர். செனேகா (Seneca) என்ற அறிஞர் அதை மேலும் விரித்துரைத்தார். சட்ட நிபுணர்கள் இவற்றைத் தங்களது குறிக்கோளாகவும், வழிகாட்டியாகவும் ஏற்றுக்கொண்டனர். கூடியவரை சட்டங்கள், இவற்றைப் பின்பற்ற முயல வேண்டும் என்பதை யாவரும் ஒப்புக்கொண்டனர். நடைமுறையில் முழுமையாக அவற்றை அமல் நடத்த முடியாதென்பதையும் அவர்கள் உணர்ந்தனர்.

*சட்டத் தொகுதியின் தன்மை*

ஜஸ்டினியனுல் தொகுக்கப்பட்ட இச் சட்டங்கள் உண்மையிலேயே மிக உயர்ந்த நாகரிகம் பொருந்திய நாடுகளுக்கே பொருத்தமானவைகளாகும். ஆரம்பகாலத்தில் ரோம் நகரில் நடைமுறையிலிருந்த பன்னிரண்டு சட்டத் தொகுதிகளுக்கும் (Twelve Tables) இவற்றுக்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. சான்ருகப் பழைய சட்டங்

களின்படி ஒரு தகப்பன் தன்னுடைய மக்களையும், பேரப் பிள்ளைகளையும் எப்படி வேண்டுமானாலும் நடத்தலாம். அவர்களை அடிக்கவும், கொல்லவும் அவருக்கு உரிமை உண்டு. ஆனால், புதிய சட்டத் தொகுதியின்படி அத்தகைய சிறப்புரிமைகள் தகப்பனுக்கு மறுக்கப்பட்டன. பலவீனமான குழந்தைகளைக் கொன்றுவிடும் உரிமையைப் பழைய சட்டங்கள் அநுமதித்தன. வறுமை வந்த காலத்து மக்களை விற்கின்ற உரிமையையும் பெற்றோர்கள் பெற்றிருந்தனர். ஆனால், புதிய சட்டங்கள் அத்தகைய கொடுமைகளை ஒப்புக்கொள்ளவில்லை. அதேபோல ஆண்டைகள், தங்களது அடிமைகளை விலங்குகள்போல் நடத்திப் பிரியப்படியெல்லாம் கொடுமைப்படுத்துகின்ற உரிமையையும் புதிய சட்டத்தொகுதி பறித்துக்கொண்டது. அடிமைகள் நன்னடத்தையின்மூலம் பூரண விடுதலை பெறவும் இச்சட்டம் வழிவகை செய்தது. ஆனால், அடிமை முறையை மட்டும் அது ஒழிக்க முன்வரவில்லை. பெண்டிரையும், குழந்தைகளையும், ஆடவர்கள் பிரியம்போல் ஆட்டுவிக்கும் கொடுமையையும் இச் சட்டம் தடுத்தது. சட்டத்தின் முன் ஆணையினும், பெண்ணையினும் அனைவரும் சமம் என்ற கருத்தை இவை வற்புறுத்தின. இங்ஙனம் ஜஸ்டினியனின் சட்டத் தொகுதியானது பண்டைய ரோமானிய சட்டங்களைவிட மனிதாபிமானம் மிக்கவைகளாக விளங்கின. ஸ்டாயிக்குகள் கிறிஸ்தவர்கள் ஆகியோருடைய சகோதரத்துவ கொள்கைகளும், மனிதாபிமானக் கோட்பாடுகளும் இச் சட்டத் தொகுதியில் பெரிதும் இடம்பெற்றுள்ளதாய்த் தெரிகிறது.

### பேரரசுகாலத்தில் பொருளாதார நிலை—வாணிப வளர்ச்சி

ரோமானியப்பேரரசுஐரோப்பாவிலும், ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும் பரந்து விரிந்துகிடந்த காரணத்தால் வாணிபமானது ஈடும், எடுப்புமற்ற முறையில் முன்னேற்றமடைந்தது. வன்மைமிக்க நாவாய்ப்படை ரோமப்பேரரசைக் கட்டிக்காத்ததனால் மத்தியதரைக் கடலின் ஊடே பயணம் செய்த வணிகக் கப்பல்களைக் கொள்ளையடிக்கும் கூட்டத்தினர் ஒருவரும் இல்லாது ஒழிந்தனர். தரைமூலமாகப் பயணம் செய்த வணிகர்களை வழிப்பறி செய்யும் கூட்டமும் இல்லாதொழிந்தது. எனவே, ரோமப் பேரரசில் நிலவிய ஒழுங்கும் கட்டுப்பாடும் வாணிப வளர்ச்சிக்கு ஒரு பெரும் துணையாய் அமைந்தது. மற்றும் ரோமப் பேரரசில் பல அகன்ற பாதைகள் நாடெங்கும் அமைக்கப்பட்டன. அதனாலேயே 'பாதைகள் அனைத்தும் ரோம் நகரையே சென்றடைகின்றன' (All Roads lead to Rome)என்ற பழமொழியும் தோன்றலாயிற்று. ரோமப் பேரரசின் பல பகுதிகளையும் இப் பாதைகளும், கால்வாய்களும் இணைத்தன. மற்றும் பேரரசின் பல பாகங்களிலும் ஒரே வகையான நாணயங்கள்

புழக்கத்தில் இருந்ததால் வாணிபம் எளிதாயிற்று. ரோமப் பேரரசி லிருந்து ஏராளமான பண்டங்கள் ஐரோப்பிய, ஆசிய நாடு களுக்கு மட்டுமேயன்றி ஆப்பிரிக்க நாடுகளுக்கும் ஏற்றுமதியாயின. அதேபோன்று இந்தியா, சீனு போன்ற நாடுகளிலிருந்து பல ஆடம்பரமான பொருள்கள் ரோமப் பேரரசில் இறக்குமதியாயின. மயில் தோகை, அரிசி, கிளிப்பிள்ளைகள், முத்துகள், மெல்லிய துணிகள் முதலியன ஏராளமாக வெளிநாட்டிலிருந்து ரோமப் பேரரசுக்குள் வந்து குவிந்தன. அதன் காரணமாக ரோமானிய நிதிக்குவையே வறண்டுவிட்டது என்று ரோமானிய செனட் உறுப்பினர்களான செனேகா போன்றவர்கள் அங்கலாய்த்தனர் என்று கேள்வியுறுகிருேம்.

### வேளாண்மையும் தொழிலும்

வாணிப வளர்ச்சியின் விளைவாக ரோமப் பேரரசின் வேளாண்மையிலும், தொழிலிலும் மகத்தான சில மாற்றங்கள் நிகழ்ந்தன. வெளிநாடுகளிலிருந்து உணவுப் பொருள்கள் மிக எளிய விலைக்குக் கிடைத்தமையால் ரோமானியப் பெருநிலக் கிழார்கள் பலர் உணவுப் பண்டங்களுக்குப் பதிலாக வெளிநாடுகளில் நன்கு விலைபோகக்கூடிய மதுபானம், ஆலிவ் எண்ணெய், செங்கற்கள், உலோகக் கருவிகள், பானைகள் முதலியவற்றை உற்பத்தி செய்வதில் முனைந்தனர். அவற்றை அவர்கள் ஏற்றுமதி செய்துவிட்டு உணவு தானியங்களையும், காகிதம், லினன் துணி போன்ற பல சுகபோகப் பொருள்களையும், பிற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்து வந்தனர். இங்ஙனம் ஏற்றுமதி செய்யப்பட்ட பல பொருள்களை ஏராளமாக உற்பத்தி செய்யக்கூடிய பல தொழிற்சாலைகள் ஆங்காங்கே ஏற்படலாயின. சிறப்பாக கால் (Gaul) தேசத்தில் மதுபானமும், பானைகளும், கம்பளி உடைகளும், உலோகப் பொருள்களும் ஏராளமாக உற்பத்தி செய்யப்பட்டன. இத்தகைய உற்பத்தியால் பல புதிய நகரங்கள் ஆங்காங்கே தோன்றின. அந் நகரங்களில் கேளிக்கையும் ஆடம்பரமும் மலிந்தன. விளையாட்டு மைதானங்களும், நாடகக் கொட்டகைகளும், நூலகங்களும், பொதுக் குளியல் குளங்களும், கோயில்களும் அத்தகைய நகரங்களை அழகு செய்தன. நகரங்களில் வாழ்ந்த பெருஞ் செல்வர்கள் கலையையும், கலைஞர்களையும் பெரிதும் ஆதரித்தனர். ஆனல், சாதாரணத் தொழிலாளியின் நிலைமை மிகவும் கேவலமாகவே இருந்தது. தொழிலகங்களில் வேலை புரிந்த தொழிலாளிகளும், பண்ணைகளில் வேலை செய்த அடிமைகளும் வறுமையில் வாடினர். ஏறக்குறைய மிருகங்கள் போல் அவர்கள் வாழ்ந்தனர்.

பேரரசு பரப்பில் விரிய விரிய வேளாண்மையிலும் பல மாற்றங்கள் ஏற்பட்டன. சிறிய நிலபுலன்களை உழுதுவந்த சிறு நிலச்சுவான்தாரர்கள் நாளடைவில் அருகிப்போயினர். பெரும் நிலச்சுவான்தார்கள் ஆங்காங்கே தோன்றினர். அவர்களுக்குக்கீழ் பல குடியானவர்கள் குத்தகைக்காரர்களாக (Tenants) அமைந்து நிலத்தைச் சாகுபடி செய்தனர். பழைய நிலச்சுவான்தார்கள் பலர் இங்ஙனம் பெரும் நிலக்கிழார்களுக்கு உட்பட்ட குடியானவர்களாக மாறி விடவே பழைய அடிமைகளில் பலர் விடுதலை பெற்று சுதந்திரக் கூலியாட்களாக மாறினர். இவர்களைக் கொண்டே குடியானவர்கள் நிலங்களைச் சாகுபடி செய்தனர். இத்தகைய குடியானவர்கள் கிராமத்தை விட்டு நகர்ப்புறங்களுக்குச் சென்றுவிடாதபடி தடுக்கப் பல சட்டங்கள் ஏற்பட்டன. எனவே, ஏறக்குறைய நிரந்தர அடிமைகள் போன்ற நிலைமைக்குப் பல குடியானவர்கள் ஆளாயினர்.

நிலங்களில், திராட்சை, ஆலிவ் மரங்கள், காய்கறிகள் முதலியன பயிரிடப்பட்டன. ரோமானிய உழவர்கள் நிலத்தை மேல்வாரியாகவே உழுதனர். மிக எளிய முறையிலேயே விவசாயம் நடைபெற்றது. உரங்கள், ஓரளவு பயன்படுத்தப்பட்டன. நிலத்தின் வளத்தைக் காக்கப் பல பயிர்கள் மாறி மாறிப் பயிரிடப்பட்டன. ஆங்காங்கே நீர்ப்பாசன வசதிகளும் ஓரளவு பயன்படுத்தப்பட்டன. எனினும் மக்கட் பெருக்கத்திற்கு ஏற்ற அளவு உணவு உற்பத்தி பெருகவில்லை. அந்த அளவுக்கு வேளாண்மைத் துறையில் புரட்சி ஏற்படவில்லை. ரோமப் பேரரசு வீழ்ச்சியுற்றதற்கு முக்கியக் காரணங்களில் ஒன்று அதில் நிலவிய உணவுப் பற்றுக்குறையே என்று ஒருசில ஆசிரியர்கள் கருதுகின்றனர். இதே போன்றுதான் தொழில்துறையிலும் புதிய கருவிகள் எதுவும் கண்டுபிடிக்கப்படவில்லை. எனவே ஒருசில தொழில்களைத் தவிர ஏனைய தொழில்களில் முன்னேற்றம் எதுவும் ஏற்படவில்லை. மற்றும் ரோமானிய அரசாங்கமானது பொருளாதாரத் துறையில் பெரிதும் தலையிட ஆரம்பித்தது. பேரரசர்கள் பல பிரபுக்களின் நிலங்களைப் பிடுங்கிக்கொண்டு தாங்களே விவசாயம் செய்ய ஆரம்பித்தனர். பல தொழில்களையும் அவர்களே எடுத்துக்கொண்டு தனியுரிமையாக நடத்தலாயினர். ஆலிவ் எண்ணெய், ரொட்டி போன்ற இன்றியமையாத பொருள்களையும்கூட உற்பத்தி செய்யும் பொறுப்பை மன்னர் மேற்கொண்டார். வாணிபக் குழுக்களையும், உற்பத்தியாளர்களையும் அவர் பலவகையிலும் நசுக்கிப் பிழிந்தார். ஒரு தொழிலை மேற்கொண்டவர்கள் இன்னொரு தொழிலுக்குப் போகாவண்ணம் தடுக்கப்பட்டனர். இதனால் நம் நாட்டிலிருப்பதுபோன்று, பரம்பரை பரம்பரையாக ஒரே தொழிலைச் செய்துவரும் கூட்டத்தினர் ஆங்காங்கே பெருகினர். பொருளாதாரத்துறையில் மக்களுக்குச்

சுதந்திரம் பறிபோயிற்று. அதனால் நாளடைவில் உற்பத்தி குறைந்து நாட்டில் ஒருவிதப் பொருளாதார நலிவு ஏற்பட்டது. வேளாண்மையும், தொழிலும் குன்ற ஆரம்பித்தன. இந்நிலையில் பேரரசர்கள் ஏராளமான வரிகளை மக்கள்மீது திணித்தனர். இதையெல்லாம் பொறுக்க இயலாது மக்கள் திணறிக்கொண்டிருந்த சமயத்தில்தான் ஜெர்மானிய முரட்டுக் கூட்டத்தினர் ரோமானியப் பேரரசைத் தாக்கி எளிதில் கைப்பற்றிக் கொண்டனர்.

### சமுதாய நிலைமை

குடியரசு காலத்தில் இருந்ததைப் போன்றே பேரரசிலும் சமுதாயம் பல குறைபாடுகளுடன் விளங்கியது. அடிமைமுறை இன்னும் அகற்றப்படவில்லை. ஆனால், அதன் கடுமை குறைந்தது. பல அடிமைகள் நாம் மேலே கண்டபடி சுதந்திரக் கூலியாட்களாக மாறினர். அவர்கள் வாணிகத்திலும், தொழிலிலும் ஈடுபட்டுச் சில சமயங்களில் செல்வந்தர்களாகவும் மாறினர். ஊதாரித்தனமாகச் செலவு செய்து வறுமையுற்ற பலர் செல்வந்தர்களிடம் கடன்வாங்கி அதைக் கட்டமுடியாத காரணத்தால் அவர்களுக்குத் தங்களையே அடகு வைத்துக்கொண்டனர். அவர்கள் தங்களது எசமானர்கள் எங்குச் சென்றாலும் அவர்கள் பின்னாலேயே சென்று அவர்களது பேச்சுகளைப் புகழ்ந்து துதிபாடியும் பலவிதமான இழிவான பணிகளைச் செய்தும், கேவலமான வாழ்க்கையை வாழ்ந்தனர். ஒவ்வொரு கனவானும் இங்ஙனம் ஒரு துதிபாடும் கூட்டத்தைக் கூடவே அழைத்துச் செல்லுதல் வழக்கமாய்ப் போயிற்று. பொதுவாக சமுதாயத்தில் ஒழுக்கம் குன்றியது. உயர்தர மக்களிடையே விவாகரத்துகள் பெருகின. பரத்தையர்களின் எண்ணிக்கை பெருகிற்று. ரோம் நகரில் மட்டும் முப்பத்திரண்டாயிரம் வேசியர்கள் இருந்ததாகக் கூறப்படுகிறது. ஆண்கள் ஆண் சிறுவர்களோடு உறவு கொள்ளும் முறையும் (Pederasty) உயர்தர மக்களிடையே பரவியது. மக்களிடையே குற்ற மனப்பான்மை பெருகியது. மனிதன் மனிதனோடு போர் புரிந்து மடிகின்ற காட்சியை அவர்கள் கண்டுகளித்தனர். பொதுவாக அடிமைகளே இத்தகைய மல்யுத்தங்களில் ஈடுபடுத்தப்பட்டனர். சில சமயம் அரசர்களும், கனவான்களும்கூட இத்தகைய விளையாட்டுகளில் கலந்துகொள்ளுவது வழக்கம்.

### சமயம்

சமயத்துறையில் மித்ரேயிசம் என்ற ஓர் கலப்புச் சமயம் மக்களிடையே பெரிதும் பரவியது. செராப்பிஸ் (Serapis) என்ற ஓர் பெண் தெய்வம் மக்களிடையே பெரிதும் செல்வாக்குப் பெற்றது.

பழைய எகிப்திய தேவதைகள், மீண்டும் வணங்கப்பட்டன. நாளடைவில் கிறிஸ்தவ சமயம் மக்களிடையே பரவியது. நீரோ போன்ற மன்னர்கள் அவர்களைப் பல கொடுமைகளுக்கு ஆளாக்கினர். கொலீசியம் (Colosseum) என்ற வட்டவடிவமான மாளிகையின் அரங்கில் அவர்களை ஏற்றிக் கொடிய விலங்குகளுக்கு இரையாக்கி அவர் உளம் மகிழ்ந்தார். இத்தகைய சமய ஒறுப்புகளின் விளைவாகக் கிறிஸ்தவ சமயம் நாளுக்கு நாள் வளர்ந்ததேயன்றி குறையவில்லை. நாளடைவில் கான்ஸ்டன்டைன் போன்ற அரசர்களாலேயே கிறிஸ்தவ மதம் ஆதரிக்கப்பட்டு நாடெங்கும் பரவியது.

### பேரரசு காலத்திய கலை — கட்டடக் கலை

ரோமானியர்கள் காலத்தில் கலைகள் தனிச் சிறப்பை எய்தின. அகஸ்டஸ் காலத்துக்கு முன்பு ரோமானியக் கலையானது கிரேக்கக் கலையையே பெரிதும் பின்பற்றியது. ரோமானிய சிற்பிகள் கிரேக்கச் சிற்பங்களைப் பார்த்து அதன்படியே உருவங்களைச் செதுக்கினர். ரோமானியக் கட்டடக் கலைஞர்கள் கிரேக்க மாளிகைகளைப் பார்த்து அதைப் போலவே கட்டடங்களைக் கட்டினர். ஆனால், நாளடைவில் ரோமானியக் கலைஞர்களிடத்தில் ஓர் தனித் தன்மையானது வளர ஆரம்பித்தது. சிறப்பாகக் கட்டடக்கலையில் ரோமானியர்கள் பல சிறப்பியல்புகளைப் புலப்படுத்தினர். ஆதி காலத்தில் எகிப்தியர்களாலும், சுமேரியர்களாலும், பிற்காலத்தே இத்தாலிய எட்ரஸ்கர்களாலும் பயன்படுத்தப்பட்ட வளைவுகளை (Arches) ரோமானியர்கள் தங்கள் கட்டடங்களில் பெரிதும் பயன்படுத்தினர். ரோமானிய வாயில்கள் அனைத்தையும் அழகிய வளைவுகள் அலங்கரித்தன. வெற்றி பெற்ற அரசர்களை வரவேற்க மக்கள் ஆங்காங்கே வளைவான தோரண வாயில்களை அமைத்தனர். இத்தகைய வளைவுகள் கிரேக்கர்களின் தூண் வரிசைகளோடு (Columns) இணைக்கப்பட்டன. ஒவ்வொரு தூண் வரிசைக்கிடையிலும் ஓர் வளைவு அமைக்கப்பட்டது. இத்தகைய வளைவுகளின் மேல் தளம் பாவப்பெற்று, மேலும் பல மாடிகள் அதே முறையில் கட்டப்பட்டன. இத்தகைய முறையில் கட்டப்பட்டதே கொலீசியம் (Colesseum) என்ற விளையாட்டரங்கமாகும். வட்டவடிவமான அக்கட்டடத்தின் அறைகளில் அமர்ந்துகொண்டு 65,000 பேர்கள் ஒரே சமயத்தில் வேடிக்கை பார்க்கலாம். அம்மன்றத்தின் நடுவில் அமையப்பெற்ற மேடையின்மீது மல்யுத்தங்களும், மிருகச் சண்டைகளும் அடிக்கடி நடைபெறுவது வழக்கம். இதே முறையைப் பயன்படுத்தியே ரோமானியர்கள் ஆங்காங்கே பெரும் பாலங்களையும் அமைத்தனர்.

ரோமானியர்களின் கட்டடங்களில் காணப்படும் மற்றொரு புதுமை பெரிய குவிமாடங்களாகும் (Domes). பெரும் பெரும் கட்டடங்களின் கூரைகளுக்குப் பதிலாக இத்தகைய குவிமாடங்கள் அமைக்கப்பட்டன. இத்தகைய மாடங்களை அமைப்பதன்மூலம் கட்டடங்களின் உட்பக்கத்தே தூண்களின் எண்ணிக்கை குறைந்து பரந்த இடவசதி ஏற்பட்டது. குவிமாடச் செங்கற்களை அல்லது சதுரவடிவமான கருங்கற்களை இணைக்க அவர்கள் சிமெண்ட் போன்ற ஒருவகைச் சாந்தைப் பயன்படுத்தினர். ஹேட்ரியன் (Hadrian) என்ற பேரரசர் கட்டியுள்ள பாந்தியான் (Pantheon) என்ற மாபெருங் கட்டடத்தில் இத்தகைய குவிமாடத்தைக் காணலாம். கான்ஸ்டான்டிநோபிள் நகரத்திலுள்ள செயின்ட் சோபியா திருக்கோயிலிலும் இத்தகைய வளைவுகளையும் (Domes) கவிகை மோடுகளையும் (Vaults) நிறையக் காணலாம். இத்தகைய கண்கவர் கட்டடங்களின் அழிபாடுகள் இன்றைக்கும், பழைய ரோம் நகரில் காணப்படுகின்றன. ரோமானிய நகரங்களில் வட்டவடிவமான விளையாட்டு அரங்கங்களும் (Ampi theatres), பொதுக் குளியல் அறைகளும் (Public Baths), பொது மன்றங்களும், பந்தயப் பாதைகளும், பெரும் மாளிகைகளும் ஏராளமாகக் காணப்பட்டன. அவற்றின் தளங்களையும் சுவர்களையும் பளிங்குக் கற்கள் அணி செய்தன. கட்டடக்கலையில் ரோமானியர்கள் ஏற்படுத்திய இன்னொரு புதுமையை அவர்களது கால்வாய்ப் பாலங் களில் (Aqueducts) காணலாம். அவற்றில் நீர்க் குழாய்கள் பல உயர்தளத்தின் ஊடாகச் செல்லும்படி அமைந்திருந்தன.

பேரரசர் கிளாடியஸின் காலத்தில்தான் மேற்கண்ட மக்களுக் குப் பயன்படத்தக்க பல கட்டட முறைகள் பெருகின. பான்டு கார்டு (Pont du guard) என்ற கால்வாய்ப் பாலமும், அல்கான் டராவில் (Alcantara) உள்ள ஆற்றுப்பாலமும் ரோமானிய கட்டடக் கலைத்திறனுக்கு ஒப்பற்ற சான்றுகளாய்த் திகழ்கின்றன. இத்தகைய கட்டடங்களில்தான் ரோமானியர்களின் தனித்தன்மை நன்கு புலனாகின்றது. இவற்றில் காணப்படும் வளைவுகளின் திண்மையை கிரேக்க பளிங்குக் கல் கட்டடங்களில் காண இயலாது. ரோமின் மாண்பினை இத்தகைய கட்டடங்களில்தான் காண இயலும். டைபர் நதிக்கரையிலுள்ள ஹாட்ரியப் பேரரசரது (Hadrian) கல்லறை இக்காலக் கட்டடக் கலைத்திறனுக்கு இன்னோர் அரும்பெரும் எடுத்துக்காட்டாகும். அவரால் கட்டப்பட்ட பாந்தியான் என்னும் மற்றொரு கட்டடம் தனிப்பட்ட ஓர் கட்டடக்கலைப்பண்பைத் தன்னுட் கொண்டு விளங்குகிறது. அதனுடைய கூரை குவிமாட வடிவத்தில் அமைந்துள்ளது. எனினும் அது ஓர் உண்மையான குவிமாட மன்று. நடுவிலுள்ள திடமான பகுதியைச் சுற்றி ஓர் தொப்பியைப்

போல் கட்டப்பட்டுப் பின்னர், அதன் நடுப்பகுதி மட்டும் அகற்றப் பட்டுள்ளது. அதனுடைய உட்புறம் இன்றும் மாட்சிமை குன்றுமல் திகழ்கிறது.

நீரோ மன்னரின் காலத்தில் ஓர் பெரும் தீ விபத்து ஏற்பட்டுப் பல கட்டடங்கள் அழிந்தன. எனவே, அப்பேரரசர் மீண்டும் ரோம் நகரைக் கட்டினுர். அவரது பொன் மாளிகை (Golden House) கிரேக்கப் பாணியில் எழுப்பப்பட்டுக் கண்கவர் வனப்பின தாய்த் திகழ்ந்தது. ஆனுல், அவருக்குப் பின் வந்த பேரரசர்கள் அவரது கட்டடங்களையெல்லாம் இடித்துத் தள்ளிவிட்டுப் பழைய ரோமானிய முறையில் தலைநகரை உருவாக்கினர். வெஸ்பேஷியன் (Vespasian) என்பாரும் அவரது மக்களும், டைட்டஸின் குளியல் குளங்களையும், வெற்றி வளைவுகளையும் (Triumphal Arches), விளையாட்டு அரங்கங்களையும் கட்டினர். கொலாஸியம் (Colosseum) என்ற வட்ட வடிவமான விளையாட்டரங்கத்தில் கிரேக்க கட்டடக் கலையின் மூன்று அம்சங்களும், மூன்று மாடிகளில் அமைக்கப்பட்டுள்ளதைக் காணலாம். டோரிக், அயோனிக், கொரிந்தியன் ஆகிய மூன்று வகை கிரேக்கக் கலைகளும் மூன்று மாடிகளில் புகுத்தப்பட்டுள்ளன. ஆனுல், அவை கட்டடத்தின் புறத்தில் மட்டுமே காணப்படுகின்றன. அகத்தே ரோமானியரின் திண்மையான கட்டட அமைப்புக் காட்சியளிக்கிறது. எனவே, ஒருவகையான உருவெளித் தோற்றத்தை (Illusionism) இக் கட்டடம் உள்ளடக்கியுள்ளது.

பேரரசர் ட்ராஜன் (Trajan) காலத்தில் புகழ்பெற்ற தூண் வரிசைகள் (Column) கட்டடங்களில் இடம் பெறுகின்றன. மற்றும் மன்னரின் வெற்றிகளை விவரிக்கும் புடைப்புருச் செதுக்கோவியங்கள் நன்கு வளர்ச்சி அடைந்துள்ளன. இவை ரோமானியரின் இன்னெரு முக்கியக் கலைப்படைப்பாகும். ஹாட்ரியன் காலத்தில் கிரேக்க மரபுகள் மறுபடியும் கடைப்பிடிக்கப்படுகின்றன. நைல் நதியில் மூழ்கி இறந்துபோன ஆன்டினஸ் (Antinous) என்ற அழகிய வாலிபனின் உருவத்தைப் போன்றே கடவுளரின் உருவங் களும்கூடச் செய்யப்பட்டன. ஒலிம்பஸ் மலையின் மீதுள்ள ஆண் தெய்வங்கள் அனைவரையும் ஆன்டினஸின் உருவச்சாயலிலேயே சமைத்துள்ளனர்.

அடுத்த ஆன்டோனைன் (Antonine) காலத்தில் ரோமானியக் கலை நல்ல முழுமை பெறுகிறது. மன்னர்களின் வீரதீரச் செயல்களை விவரிக்கும் புடைப்புருவச் செதுக்கோவியங்கள், இக்காலத்தே மிக முதிர்ந்த நிலையை அடைகின்றன. அன்டோனியஸ் பயஸ்

என்பாரின் தூணுக்கு அடியிலுள்ள புடைப்புச் சித்திரங்கள் உயிருள்ளன போலவே காட்சியளிக்கின்றன. அதிலுள்ள குதிரை வீரர்களின் கொடியேந்திய உருவம் உண்மை மனிதர் போலவே காட்சியளிக்கிறது.

கோயிற் கட்டடக் கலையைப் பொறுத்த வரையில் கிரேக்க பாணியை ரோமானியர்கள் பின்பற்றினர் என்றாலும், கிரேக்கக் கலையில் காணப்படும் அடக்கம் இதில் கடைப்பிடிக்கப்படவில்லை. கீழை நாட்டு ஆடம்பரம் அவற்றில் பெரிதும் புகுந்துவிட்டது. ஹெலியோபாலிஸ் (Heliopolis), பல்மைரா (Palmyra) ஆகிய இடங்களில் உள்ள கோயில்கள் கண்களைக் கவரும் அலங்காரங்கள் பலவும் செறிந்துள்ளன. ஆனால், பார்வைக்குக் கம்பீரமாக அமைந் துள்ளன. ரோமப் பேரரசின் செல்வமும் செல்வாக்கும் இவற்றில் பிரதிபலிக்கின்றன.

ரோமானியக் கனவான்களின் வில்லாக்கள் (Villas) உண்மை யில் சிறு சிறு கலைக் கூடங்களாகும். அவற்றில் அழகிய பளிங்குக் கல்லால் ஆய மண்டபங்களும், தூண் வரிசைகளும், குளியலறை களும், நாடக அரங்குகளும், நூலகங்களும் பாங்குற அமைந் திருந்தன. மாளிகைகளின் தரையைப் பல்வண்ணப் பளிங்குக் கற்களும், சுவர்களை வெண்ணிறப் பளிங்குக் கற்களும் அணி செய்தன. அவற்றில் வண்ணக் கற்களைப் பதிப்பதன் மூலம் சித்திரங்கள் உண்டாக்கப்பட்டன. பார்வைக்கு வண்ணத்தால் வரையப்பட்ட ஓவியங்கள் போலவே அவை தோற்றமளித்தன. பன்னிற ஓவியங்களும் சுவர்களில் தீட்டப்பட்டன. பாம்பே நகரின் அழிபாடுகளில் அக்கால சுவரோவியங்களின் சாயையை இன்றும் நாம் காணலாம்.

தனிப்பட்டவர்களின் மாளிகைகள் நாளுக்கு நாள் அலங்காரத் தில் பெருகிக்கொண்டே சென்றன. சிக்கல்கள் நிறைந்த ஓர் கலைப்பாணியை நாம் பிற்காலக் கட்டடங்களில் காண்கிறோம். ஓவியங்களில் இயற்கையான தன்மை மாறி செற்கைப் பண்பு அதிகரிக்கிறது. தெய்வ மகளிரின் படங்கள், ரதி, மன்மதப் படங்கள் அதிகமாக வீடுகளில் காணப்படுகின்றன. ஓவியங்கள் உருவத்தில் சிறிதாகக் காணப்படுகின்றன. ஆனால், அவற்றுக் கிடையே இடைவெளி அதிகமாகக் காணப்படுகிறது. ஓவியங்களில் பெரும்பாலானவை பழைய புராணங்களையே படம் பிடித்துக் காட்டுகின்றன அடக்கமும், அமைதியும் நிறைந்த ஆரம்பகாலக் கலைப்பண்பு பிற்காலத்தே பெரிதும் அருகிவிடுவதைக் காண் கிறோம்.

*சிற்பம்*

சிற்பக் கலையைப் பொருத்த வரையில் ரோமானியர் கிரேக்கர்களைப் பெரிதும் பின்பற்றினர். படிமங்கள் பல கிரீஸிலிருந்து கொண்டுவரப்பட்டு, வில்லாக்கள் எனும் மாளிகைகளில் வைக்கப்பட்டன. இன்றேல் முழு உருவச் சிலைகள் (Statues) பல கிரேக்க சிலைகளைப் போலவே செய்து வைக்கப்பட்டுள்ளன. அவற்றில் தனிப்பட்ட படைப்பாற்றல் எதுவும் வெளிப்படவில்லை. ஆனால், மாபெரும் தலைவர்கள், பேரரசர்கள் ஆகியோரது உருவங்களை மார்பகம்வரை (Busts) வடித்தெடுக்கும் கலையில் ரோமானியர்கள் பெரிதும் முன்னேறினர். அத்தகைய உருவங்களில் முகம்மட்டுமே பெரிதும் முக்கியத்துவம் பெறுகிறது. அம்முகத்தில் உணர்ச்சிகள் நன்கு பிரதிபலிக்கப்பட்டுள்ளன. ஒரு மனிதனது குணத்தை அவனது முகத்தைப் பார்த்தே தெரிந்துகொள்ளலாம். சான்றுகக் காரிகல்லா (Caracalla) என்ற பேரரசரின் குரூரமும், ரத்த வெறியும் அவரது முகச் சிலையில் நன்கு வெளிப்படுகிறது. அதே போல மார்க்கஸ் அரேலியஸ் (Marcus Aurelius) என்ற இராஜரிஷியின் முகத்தில் ஒரு வகையான பலகீனமும் அதே சமயம் சாந்தமும் தொனிக்குமாறு அமைக்கப்பட்டுள்ளது.

இங்ஙனம் முகச்சிலைகளை (Busts) ஆக்கும் கலையிலும், புடைப்புச் செதுக்கோவியங்களை (Bas-relief) படைக்கும் திறமையிலும், கம்பீரமான திண்மை செறிந்த கட்டடங்களை அமைப்பதிலும் என்றும் ரோமானியர் தமக்கே உரிய தனிப்பண்பைப் புலப்படுத்தினர். ஏனைய கலைப்பண்புகளில் அவர்கள் கிரேக்கர்களை அப்படியே பின்பற்றினர் என்றும் தெரிகிறது.

*இலக்கியமும், கல்வியும்*

அகஸ்டஸ் காலத்துக்குப் பின் கல்வியில் சிறந்த முன்னேற்றம் ஏற்பட்டது. ஏறக்குறைய எல்லோருமே எழுதவும் படிக்கவும் தெரிந்திருந்தனர். ஏழைகள், அனுதைகள் போன்றோரின் கல்விச் செலவை அரசாங்கமே ஏற்றுக்கொண்டது. பல செல்வந்தர்கள் பள்ளிகளை இலவசமாகக் கட்டித் தந்தனர். மூத்த பிளினி என்ற ஆசிரியர் ஓர் பள்ளியை இலவசமாகக் கட்டித் தந்து அதற்கு ஆகும் செலவில் மூன்றில் ஒரு பங்கை ஏற்றுக்கொண்டார் என அறிகிறோம். £ 9000 செலவில் அவர் தனது சொந்த ஊரில் நூலகம் ஒன்றை அமைத்தார். இங்ஙனம் ஆங்காங்கே பல தனியார் பள்ளிகள் தோன்றின. அவற்றில் சாதாரணத் தொழிலாளிகளும் அடிமைகளும்கூடக் கல்வி கற்றனர். பள்ளிகளில் கணிதம், இசை, நாட்டியம், உடற்பயிற்சி முதலியன கற்பிக்கப்பட்டன. உயர்தரப்

பள்ளிகளில் இலக்கணத்தோடு கவி புனையவும், சொல்வன்மையுடன் பேசவும் கற்பிக்கப்பட்டது. லத்தீன் மொழியே பயிற்று மொழியாகத் திகழ்ந்தது. ஒரு சில மாநிலங்களில் கிரேக்கமும் பயன்படுத்தப்பட்டது.

ஆரம்பப் பள்ளிப் படிப்பு முதல் கல்லூரிப் படிப்புவரை கல்வி முறை நன்கு அமைக்கப்பட்டிருந்தது. ஆசிரியர்கள் நன்கு மதிக்கப்பட்டனர். நிறைந்த ஊதியம் பெற்ற அவர்கள் செல்வந்தர்களாயும், வள்ளல்களாயும் விளங்கினர். அவர்கள் தமக்கென்று கழகங்களையும் ஏற்படுத்திக் கொண்டனர். ஆனால், திறமை உள்ளவர்களை மட்டுமே தல கல்விக் குழுக்கள் ஆண்டுக்கொருமுறை தேர்ந்தெடுத்தது. அவர்களில் சிலர் பல்வேறு கல்விக் கூடங்களுக்குச் சென்று சிறப்புச் சொற்பொழிவாற்றி வந்தனர்.

இக்காலத்தே எழுந்த புகழ்பெற்ற கல்விமான்கள் பலராவர். புளுடார்க் (Plutarch) என்னும் கிரேக்க அறிஞர் ஹாட்ரியன் என்ற பேரரசரின் ஆசிரியராகப் பணியாற்றியவர். அவர் எழுதிய 'வாழ்க்கைகள்' (Plutarch's Lives) என்ற நூலானது பல தலைவர்களின் வாழ்க்கை வரலாறுகளைக் கொண்டது. கிரேக்க ரோமானியப் பழங்கதைகள் பலவும் அதில் இடம் பெற்றுள்ளன. மார்க்கஸ் அரீலியஸ் என்ற பேரரசர் ஓர் இலக்கிய மேதை. அவரது 'சிந்தனைகள்' (Meditations) என்ற நூல் கிரேக்க மொழியில் எழுதப்பட்ட உயர்ந்த அறநூலாகும். கெலன் (Galen) என்ற ஓர் பேரறிஞர் மார்க்கஸ் அரீலியஸ் காலத்தில் வாழ்ந்தவர். மனித உடலைப்பற்றியும், மருத்துவம் பற்றியும் அவர் ஏராளமான நூல்களை கிரேக்க மொழியில் எழுதியுள்ளார். அளவை நூல், இலக்கணம், அறநூல் இவைபற்றிய பல நூல்களையும் அவர் எழுதியுள்ளார். உடலின் பல்வேறு உறுப்புகள் பற்றியும், நோய்களைப் பற்றியும், அவர் கூறியுள்ள கருத்துகள், தற்கால அறிவியலுக்குப் பெரிதும் ஒத்தனவாய் விளங்குகின்றன. கி.பி. 2ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த டாலமி என்ற அறிஞர் வானசாத்திரத்தில் வல்லவர். பூமியைச் சுற்றியே கிரகங்கள் சுழல்வதாக அவர் எண்ணினார். பிற்காலத்தே இது பொய்யென்று நிரூபிக்கப்படும் வரையில் அவர் கூறியதையே மக்கள் உண்மையென நம்பிவந்தனர். முக்கோண கணிதத்தைப் பற்றியும் அவர் எழுதியுள்ளார். அவர் எழுதிய புவியியல் (Geography) என்ற நூலானது மிகவும் புகழ் பெற்றது. தெற்கு ஐரோப்பா, வட ஆப்பிரிக்கா, மேற்காசியா ஆகிய நாடுகளை அவர் தமது உலகப் படத்தில் மிகத் துல்லியமாகக் காட்டியிருப்பது அவரது மேதைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். பேரரசின் மூலை முடுக்குகளில் இருந்து எல்லாம் பல அறிஞர்கள் ரோம் நகருக்கு

வந்தனர். சான்றாக ஸ்பெயின் நாட்டிலிருந்து குவின்டிலியன் (Quintilian) என்ற புலவரும், செனேகா (Seneca) என்ற அறிஞரும் ரோம் நகருக்கு வந்து பல இலக்கியப் பணிகளை ஆற்றினர். குவின்டிலியன், வெஸ்பேசியன் (Vespasian), டாமீசியன் (Domitian) போன்ற பேரரசர்களுக்கு ஆசிரியராக விளங்கியவர். சொல் வன்மைபற்றி அவர் எழுதியுள்ள கட்டுரைகள் உண்மையிலேயே மிகச் சிறந்த இலக்கியங்களாகும். கல்வியைப்பற்றியும் அவர் இரண்டு கட்டுரைகளை எழுதியுள்ளார். நீரோ என்ற பேரரசரால் ஆதரிக்கப்பட்ட செனேகா என்ற அறிஞர் அற விதிகளைப் பற்றிப் பல கட்டுரைகளை எழுதியுள்ளார். அவரது செல்வாக்கைக் கண்டு பொருமை கொண்ட நீரோ அவரைத் தற்கொலை செய்துகொள்ளும்படி வற்புறுத்தினர் எனத் தெரிகிறது. மூத்த பிளினி (Pliny) எனும் மற்றுமோர் அறிஞர் (வெஸ்பேசியன் என்ற பேரரசரால் ஆதரிக்கப் பெற்றவர் அவர்) 'இயற்கையின் வரலாறு' (Natural History) என்ற ஒரு நூலில் ஏராளமான தகவல்களைச் சேகரித்துத் தந்துள்ளார். ஏறத்தாழ இரண்டாயிரம் நூல்களிலிருந்து அவர் கருத்துகளைச் சேகரித்துப் புவியியல், விலங்கியல், தாவரஇயல், மருத்துவம், சிற்பம், ஓவியம் போன்ற பல்வேறு தலைப்புகளின்கீழ் அவர் தந்துள்ளார். அவர் படித்துக் குறிப்பெடுத்த நூற்று அறுபது கைப்பிரதிகள் இன்று நமக்குக் கிடைத்துள்ளன. இயற்கையின் இரகசியத்தை அறிவதில் அவருக்கு இருந்த ஆர்வம் சொல்லுந்தரமன்று. இறுதியில் அவர் அவ்வார்வத்துக்கே பலியானர். வெசூவியஸ் (Vesuvius) என்ற எரிமலையை அருகில் சென்று காண முயன்ற அவ்வறிஞர், அவ்வெரிமலைக்கே இரையானர். இக்காலத்தே வாழ்ந்த ஒரு பெரும் வரலாற்றாசிரியர் டாசிடஸ் (Tacitus) என்பவராவார். அவர் எழுதிய 'ஆனல்ஸ் அண்ட் ஹிஸ்டரிஸ்' (Annals and Histories) என்ற நூல் வரலாற்று உண்மைகள் பல பொதியப் பெற்றதாகும். நீரோ போன்ற மன்னர்களின் கெட்ட குணங்களையும், ரோமானிய மக்களின் ஒழுக்கமின்மையையும், கோழைத்தனத்தையும் அவர்தம் நூலில் நன்கு சாடியுள்ளார். அவர் எழுதிய 'ஜெர்மனி' (Germanie) என்ற நூலில், ஜெர்மானியக் காட்டுமிராண்டிகளின் ஆண்மையையும், ரோமானியர்களின் கோழைத்தனத்தையும் ஒப்பிட்டு மிக அழகாக எழுதியுள்ளார். அவரது எழுத்தில் பல உண்மைகள் சுருக்கமாகவும், இருபொருள் படும் வகையிலும் (Irony) எழுதப்பட்டுள்ளன. இளைய பிளினி (Pliny, the younger) என்பார் எழுதிய வசைச் செய்யுள்களும் ரோமானிய சமுதாயக் கேடுகளைக் கேலி செய்யும் வகையில் அமைந்துள்ளன. அவர் ஓர் ஒப்புயர்வற்ற படிப்பாளர். பன்றி வேட்டைக்குச் சென்ற போதுகூட நூல்களை அவர் எடுத்துச் செல்வாராம். அதைக் கண்டு

அவரது நண்பர்கள் அவரைப் புத்தகப்புழு என எள்ளி நகையாடு வராம். எனினும் அவர் ஓயாது கண்ணுங் கருத்துமாய்ப் படித்துக் குறிப்புகளை எடுத்துக்கொள்வாராம். உணவருந்தும்போதுகூட, வேறொருவரைப் படிக்கச் சொல்லி அவர் கேட்பாராம். எனவேதான் அவர் தமது பதினொன்காம் வயதிலேயே கிரேக்க துன்பியல் நாடக மொன்றைப் புனைய முடிந்தது. இங்ஙனம் இலத்தீன் மொழியிலும், கிரேக்க மொழியிலும் பல புதுமைப் படைப்புகள் இக்காலத்தே ஏற்பட்டன.

### பேரரசு கால இலக்கியத்தின் மதிப்பீடு

அகஸ்டஸ் காலத்து இலக்கியங்களோடு ஒப்பிடும்போது பேரரசு கால இலக்கியங்கள் மாற்றில் ஒருபடி குறைந்துள்ளதாகவே தென்படுகிறது. கலைஞர்கள் ஏடும் கையுமாக ஓயாது உழைத்தும்கூடப் படைப்பாற்றல் மிக்க இலக்கியங்கள் எதையும் உண்டாக்கவில்லை. இத்தகைய இழிநிலைக்குக் காரணம் நீரோ, டிபிரியஸ் போன்ற மன்னர்களின் கொடுங்கோண்மையே என்று புகல்வர் சிலர். ஆனால், உண்மையாகப் பார்க்குமிடத்து அரசியற் காரணங்களைவிட இலக்கியக் காரணங்களே இச்சீரழிவுக்கு இட்டுச் சென்றதெனலாம். பழைய இலக்கிய மரபுகளை விடாது பற்றிக்கொண்டு உயிரற்ற முறையில் இலக்கியங்களை இக்காலப் புலவர்கள் இயற்றினர். சான்றாகப் பழைய காப்பிய முறையிலேயே ஸ்டாடியஸ் (Statius) எழுதிய திபாயிடுவும் (Thebaid), வெலரியஸ் ப்ளாக்கஸ் (Valarius Flaccus) எழுதிய அர்கோனுட்டிகாவும் (Argonitica), சிலியஸ் இட்டாலிகஸ் எழுதிய பியூனிகாவும் (Punica), லூகன் (Lucan) எழுதிய ஃபர்சாலியாவும் (Pharsalia) அமைந்துள்ளன. இவற்றில் சொல் அலங்காரங்கள் நிறைய காணப்படினும் தெளிவு இல்லை. படிப்போர்க்குச் சலிப்புத்தட்டும் முறையில் எழுதப்பட்டிருக்கின்றன. வெர்ஜில் (Vergil) என்ற புலவரை ஒட்டி எழுத முயன்றதாலேயே இஃது இங்ஙனம் நிகழ்ந்தது. வெர்ஜிலின் காவியங்களில் அமைந்துள்ள இசை நயம், மேற்கண்ட காப்பியங்களில் இல்லை. எனவேதான் இக்காலத்து மிகப் பெரிய காப்பியக் கவிஞரான லூகனின் கவிதைகள் மக்களிடையே செல்வாக்குப் பெறவில்லை. ஆனால், சாதாரண சிறுகவிதைகள் நன்கு முன்னேற்றமடைந்தன. ஸ்டாடியஸ் (Statius) எழுதிய சில்வா (Silvae) எனும் சிறு கவிதைகள் படிப்போர்க்கு உற்சாகமூட்டும் விதத்தில் அமைந்துள்ளன. ஜுவெனெல் (Juvenal) என்பாரின் வசை காவியங்கள் உண்மையில் சிறந்தவோர் இலக்கியப் படைப்பாகும். அவரது கவிதைகள் ஒழுக்கமின்மையை வன்மையாகக் கண்டிக்கின்றன. ஆனால், குழலூதுதல் போன்ற சாதாரண இன்பங்களையும் கூட அவர்

கேலி செய்கிருர். டாஸிட்டஸ் (Tacitus) என்பார் உரைநடை இலக்கியத்தின் மன்னராகத் திகழ்ந்தார். வரலாற்றைச் சுவைபட வரைவதில் அவர் லிவியைவிட வல்லவர். லிவியின் (Livy) நடையைவிட இவருடைய நடை அழகும், எழிலும் கொண்டது. சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதில் இவர் கை தேர்ந்தவர். ஒரு போர்க்களத்தையோ, அன்றி கலகத்தையோ துயரம் வாய்ந்த நிகழ்ச்சியையோ விவரிப்பதில் அவருக்கு நிகராவார் எவருமிலர். பண்டைய சீசர்களின் கொடுமைகளையும், மடமைகளையும் அவர் தாராளமாக விவரித்துள்ளார். அக் காலப் பேரரசர்கள், வரலாற்று ஆசிரியர்களுக்கு எத்துணை உரிமையைக் கொடுத்திருந்தனர் என்பது டாஸிட்டஸின் வருணனையிலிருந்து நன்கு தெளிவாகிறது. ரோமில் உதித்த பெரும் வரலாற்று ஆசிரியர்களில் அவரே கடைசியானவர்.

இக்கால எழுத்தாளர்கள் பலரும் அரிஸ்டாடில் போன்ற கிரேக்க அறிஞர்களைப் போன்று ஆராய்ச்சி மனப்பான்மையோ, அறிவியல் கண்ணோட்டமோ ஒரு சிறிதும் இல்லாதவர்கள். எனினும் இடைக்காலத்தே இவர்களது நூல்கள்தான் மாணவர்களுக்குப் பாடமாக அமைந்தன. வெட்ருவியஸ் (Vitruvius) எழுதிய கட்டடக்கலையையும், ஸ்டிராபோ (Strabo) எழுதிய புவியியலையும், கலுமெல்லா (Columella) வினுடைய வேளாண்மை நூலையும், குவின்டிலியன் (Quintilian) எழுதிய சொல்லாட்சிக் கலையையும், கெலன் (Gelen) எழுதிய மருத்துவக் கலையையும் மாணவர்கள் பல நூற்றுண்டுகளாகப் பயின்று வந்தனர். கீழை நாட்டிலிருந்து கொண்டுவரப் பட்ட பிளேக்(Plague)நோயைக் குணப்படுத்துவதற்காகவே கெலன் என்னும் மருத்துவரை மார்க்கஸ் அரேலியஸ் என்ற பேரரசர் நியமித்தார். ஆனால், கிரேக்கர்களின் மருத்துவ அறிவுக்கு மேற்பட்டு அவர் எதையும் புதிதாகக் கண்டுபிடிக்கவில்லை. தத்துவ சாஸ்திரத்திலும்கூட கிரேக்க ஞானிகளைவிட ஓர் அடிகூட அதிகமாக ரோமானிய அறிஞர்கள் எடுத்து வைக்கவில்லை. பிலோ (Philo) என்ற மிகச் சிறந்த தத்துவ ஞானிகூட பிளேட்டோவின் சித்தாந்தங்களை அப்படியேதான் ஒப்பித்திருக்கிருர். பேரரசின் மாநிலங்களிலிருந்து வந்த அறிஞர்களிடம் மட்டுமே ஓரளவு சொந்தமான சிந்தனையையும், படைப்பாற்றலையும் காணமுடிகிறது. லூஸியன் என்ற நாவலாசிரியரும், ப்ளூடார்க் (Plutarch) என்ற வரலாற்றறிஞரும் கிரேக்க நாட்டினர். செனேகா, லூகன், குவின்டிலியன், மார்ஷல் போன்ற பல பெரிய அறிஞர்கள் ஸ்பெயினிலிருந்து வந்தவர்கள். ஆனால், இதாலியில் வாழ்ந்த புலவர்கள் கிரேக்கப் பண்பாட்டில் மூழ்கி அதன் ஆதிக்கத்துக்கு முற்றிலும்

உட்பட்டுவிட்டனர். எனவேதான் அவர்களிடம் படைப்பாற்றல் பெரிதும் குன்றியிருப்பதைக் காண்கிறோம்.

*அறிவியல் துறை*

அறிவியல் துறையில் ரோமானியர்கள் அதிக முன்னேற்றம் காணவில்லை. அரசியல், இராணுவம் பற்றிய துறைகளிலேயே அவர்கள் அதிக கவனம் செலுத்தியமையால் ஏனைய அறிவியல் நுட்பங்களைப் பற்றி அவர்கள் ஆழ்ந்து சிந்திக்கவில்லை. எதையும் நடைமுறையில் செய்து பார்ப்பதில் ஆர்வம் கொண்டிருந்த அவர் களுக்கு இப்புவனத்தில் புதைந்து கிடக்கும் உண்மைகளைப் பற்றி சிந்திக்கக்கூடிய திறமையும் இல்லை; நேரமும் இல்லை; பேரரசைக் கட்டியாள்வதற்கு உதவியாக இருந்த பெரும் பாதைகள், பாலங் கள், நீர்க்குழாய்கள் இவற்றை அமைப்பதிலேயே அவர்களது அறிவியலறிவு பெரிதும் பயன்படுத்தப்பட்டது. அவர்களது மருத்துவமனைகளில் ஓரளவு மருந்து பற்றிய அறிவியல் உண்மைகள் ஆராயப் பெற்றன. மூத்த பிளினி (Pliny, the elder) என்பார், அக் காலத்தே வாழ்ந்த ஓர் அறிவியல் மேதையாவார். அவர் எழுதியுள்ள நேச்சுரல் ஹிஸ்டரி (Natural History) என்ற நூலில் பல அறிவியற் கருத்துகள் தொகுக்கப்பட்டுள்ளன. ஆனால், அவற்றில் பல அறிவுக்குப் பொருந்தாதனவாய்த் தோன்றுகின்றன. சான்றாக, ஐந்து வயதில் குழந்தைகளைப் பெற்ற பெண்களைப் பற்றியும், பின்னால் வளைந்த பாதங்களை உடைய பழங்குடி மக்களைப் பற்றியும், கப்பல்களைத் தடுத்து நிறுத்திய மீன்களைப் பற்றியும் அவர் குறிப் பிட்டுள்ளது உண்மையில் நகைப்புக்கு இடமானதொன்றே எனலாம். நீரோ மன்னர் காலத்து வாழ்ந்த செனேகா மற்றுமோர் அறிவியல் நிபுணராவார். அவருடைய கருத்துகள் ஓரளவு அறிவுக்கு ஒத்தனவாய் அமைந்துள்ளன. டைபீரியஸ் (Tiberius) என்ற பேரரசரின் காலத்தில் வாழ்ந்த செல்சஸ் (Celsus) என்ற ஒருவர்தான் இக்காலத்தே வாழ்ந்த சொந்த சிந்தனைசக்தி படைத்த அறிவியல் வல்லுனராவார். அறுவை சிகிச்சையைப்பற்றி அவர் பல அரிய உண்மைகளை எழுதியுள்ளார். கெலன் என்ற மருத்துவர் இரத்த ஓட்டத்தைப் பற்றிய உண்மையை அறிந்து அப்போதே வெளியிட்டார். இரத்தக் குழாய்கள் அறுபட்டால் அரைமணி நேரத்தில் இரத்தமெல்லாம் உடம்பை விட்டு வெளியேறிவிடும் என்று அவர் கூறினார். எபிசிஸ் (Ephesus) நகரத்தைச் சார்ந்த சொரானஸ் (Soranus) என்ற மருத்துவர் மகப்பேறு சிகிச்சைமுறை யில் (Gynaecology) வல்லவர். இக் காலத்துக் கண்ணகர்ச்சிக் கருவியை (Specularn) அவர் அக்காலத்திலேயே கண்டுபிடித்தார். அதே நகரத்தில் வாழ்ந்த ரூபஸ் (Rufus) என்னும் மற்றுமோர்

மருத்துவ நிபுணர் ஈரலின் தன்மை பற்றியும், நாடித் துடிப்புப் பற்றியும் வருணித்துள்ளார். நீரைக் காய்ச்சிக் குடிப்பதனால் கிருமிகள் இறந்துவிடும் என்றும், நோய் வராமல் தடுக்க அதுவே சிறந்த முறை என்றும் அவர் அறிவுறுத்தியதைக் காணும்போது ஏறக்குறைய இக் கால அறிவியற் கருத்துகளை அக் காலத்திய அறிவியல் நிபுணர்கள் எவ்வாறு ஓர்ந்திருந்தனர் என்பது தெள்ளி தின் புலப்படுகின்றது.

*ரோம் உலக நாகரிகத்துக்கு வழங்கியுள்ள நன்கொடை*

ரோமானியர்கள் உலக நாகரிகத்திற்கு அளித்துச் சென்றுள்ள நன்கொடைகளுள் தலையாயது என்று கருதப்படக்கூடியது அவர்கள் ஆக்கிப் படைத்து அளித்துச் சென்றுள்ள சட்டத் தொகுதியே ஆகும். வணிகத் துறையில் இன்றைய நாகரிகத்தில் காணப்படும் ஒப்பந்தம் பற்றிய சட்டம், சொத்துரிமை பற்றிய சட்டம் முதலியவைகள் ரோமானியரிடமிருந்து வழி வழியே வந்தவைகளேயாம். தனிப்பட்ட மனிதர்களைப் பொறுத்த ரோமானிய சிவில் சட்டங்கள் ஐரோப்பிய சிவில் சட்ட மரபுகளுக்கு அடிப்படையாய் அமைந்துள்ளன. பல பேர் சேர்ந்த குழு ஒன்றை (Corporations) ஒரு மனிதன் போல் பாவித்து நடத்தும் வழக்கம் ரோமானியர்களால் தோற்றுவிக்கப்பட்டதேயாகும். 'சட்டத்தின் முன் யாவரும் சமம்' என்ற தற்கால ஜனநாயகக் கருத்தை ரோமானியர்கள் தங்களது பேரரசின் குடிமக்களிடையே நடைமுறையில் கடைப்பிடித்தார்கள். கத்தோலிக்க சமயத் துறையில் கடைப்பிடிக்கப்படும் கேனன் சட்டம் (Cannon Law) முழுக்க முழுக்க ரோமப் பேரரசின் சட்ட அமைப்பில் தோன்றியதே எனலாம். இடைக்காலத்திய ஜஸ்டினீய சட்டத் தொகுதியும் (Justinian Code) தற்காலத்திய நெப்போலிய சட்டத் தொகுதியும் (Napoleonic Code), ரோமானியச் சட்டத் தொகுதிக்குப் பெரிதும் கடன் பட்டவைகளாகும். சட்டங்களை வழக்கு மன்றங்களில் வழக்குரைஞர்கள் (Advocates) எடுத்தியம்பி வாதாடும் வழக்கமும், நீதிபதி அதற்கேற்ப நீதி வழங்கும் முறையும் ரோமானிய சட்டத்துறை மரபேயெனில் மிகையாகாது. மக்களின் இறைமை (Popular Soverignity), பிரதிநிதித்துவ அரசாங்கம் (Representative Government) போன்ற தற்கால அரசியல் கருத்துகள் ரோமானியச் சட்டத்தில் இடம் பெற்றிருந்தன என்பது ஈண்டுக் குறிப்பிடற்பாலது.

சட்டத் தொகுதிக்கு அடுத்தபடியாக ரோமானியர்கள் உலகுக்கு வழங்கிச் சென்றுள்ள இன்னொரு மாபெரும் பரிசு, ரோமானியத் திருச்சபையாகும். உலகெங்கும் பரந்து விரிந்துள்ள கத்தோலிக்கத்

திருச்சபை ரோமானியப் பேரரசின் எச்சமேயன்றி வேறன்று. ரோமப் பேரரசர்கள் தங்களைத் 'தனித்தலைமை பொருந்திய இறைவர்கள்' (Supreme Pontiff) என்று அழைத்துக் கொண்டது போலவேதான் போப் ஆண்டவரும் பட்டப் பெயர் பூண்டுள்ளார். ரோமப் பேரரசின் பிரதேசப் பிரிவுகளைப் போலவே திருச்சபைப் பிரதேசப் பிரிவுகள் அமைந்துள்ளன. ரோமானிய மாநிலப் (Province) பகுதியும், திருச்சபையின் டயஸிஸும் (Diocese) ஒன்றே. அதிகாரத்தின் அறிகுறியாகப் பேரரசர் கையில் செங்கோல் பிடித்திருப்பது போலவே, போப்பாண்டவரும் தமது கையில் ஒரு தண்டினை ஏந்திக்கொண்டிருக்கிறார். பேரரசில் இருந்ததுபோன்று திருச்சபையிலும், வழக்கு மன்றங்களும், விசாரிப்புகளும், தண்டனைகளும் நடைபெறுகின்றன. பேரரசு காலத்து ஏற்பட்ட பொது மொழி, பொதுப் போக்குவரத்து முறை, பொதுச் சட்ட முறை முதலிய சாதனங்களைக் கொண்டே கிறிஸ்தவ சமயம் தனது செல்வாக்கை ஐரோப்பாவெங்கும் பரப்பியது எனலாம். 'தேனீக்கள் தேன் சேகரிப்பது தமக்காக அல்ல; மற்றவர்களுக்கே' என்பது போல் பேரரசு ஆக்கியளித்த நிறுவனங்கள் பலவற்றின் திரண்ட பயனை அநுபவித்தது திருச்சபையே ஆகும்.

அரசியல் துறையில் ரோமானியர்கள் பல்வேறு பரிசோதனைகளை நடத்திச் சென்றுள்ளனர். தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்களைக் கொண்டு ஆட்சி புரியும் 'ரிபப்ளிக்' (Republic) என்ற ஆட்சி முறையைக் கண்டுபிடித்தவர்கள் அவர்களே. அதே போன்று அரசு முழுமையான இறைமையை (Absolute Soverignity) உடையது என்ற கருத்தினையும் அவர்கள்தான் தற்கால உலகினுக்கு ஈந்துவிட்டுச் சென்றனர். சிசரோ, செனேகா போன்ற ஓருசில தத்துவ ஞானிகளைத் தவிர ஏனையோரனைவரும் அரசாங்கத்தின் இணையற்ற வல்லமையை வற்புறுத்திச் சென்றுள்ளனர். தனிப்பட்ட அரசர்களின் வல்லாண்மையைக் கண்டித்த அவர்கள் மக்கள் பிரதிநிதிகளடங்கிய செனட் (Senate) போன்ற சபைகளுக்கு முழு அதிகாரத்தையும் வழங்கிவிட முன்வந்தனர். இன்றைக்கும் 'செனட்' என்ற சொல் அமெரிக்கா, பிரான்சு போன்ற நாடுகளில் பாராளுமன்ற மேல் சபையைக் குறிப்பிடுகிறது. அரசு சட்டத்துக்கு எல்லாம் மேற்பட்டது என்றும், அதனால் தவறு செய்தல் என்பது இயலாது என்றும் (The State can do no wrong), மக்களது உரிமைகள் யாவும் அரசினால் கருணையோடு வழங்கப்பட்டவைகளே அன்றி வேறல்ல என்பதும் ரோமானியர்களின் சித்தாந்தங்களே. அரசாங்கத்தில் ஒரு நிறுவனமானது இன்னொரு நிறுவனத்தைக் கட்டுப்படுத்தி அதன்மூலம் ஒரு வல்லமைச் சமநிலையை உண்டாக்க வேண்டும் என்ற கொள்கையைக் கடைப்பிடித்தவர்கள் ரோமானி

யர்களேயன்றி வேறல்லர். இதன் பொருட்டே ரோமானியர்கள் இரண்டு கன்சல்கள் (Consuls), இரண்டு சட்ட சபைகள் முதலியவைகளை அமைத்தனர். இதைப் பின்பற்றியே இன்றைய அரசுகளிலும் இரு சட்ட சபைகள் உள்ளன. நிர்வாகம், சட்ட சபை, நீதி நிறுவனம் என்ற மூன்றும் ஒன்றையொன்று கட்டுப்படுத்தி வல்லமைச் சமநிலையை உண்டாக்கும் இன்றைய முறையானது ரோமானியர்களிடமிருந்து கடன் வாங்கப்பட்டதென்பதே உண்மையாகும்.

பேரரசிலுள்ள பல்வேறு மக்களையெல்லாம் கட்டுப்படுத்த ரோமானியர்கள் பிரித்தாளும் தந்திரத்தைக் (Divided Et Empera) கையாண்டனர். இக் கொள்கையைப் பிரிட்டிஷார், பல்லாண்டுகள் வெற்றிகரமாக இந்தியாவில் கடைப்பிடித்தனர் என்பது நாம் அனைவரும் அறிந்ததொன்றேயாகும். ரோமப் பேரரசைக் கட்டிக் காக்கவும், மக்களிடையே ஒழுங்கை ஏற்படுத்தவும், அவர்கள் மூன்று கொள்கைகளை வற்புறுத்தினர். அவை கடமை (Duty), கண்ணியம் (Dignity), கட்டுப்பாடு (Discipline or Gravitis) என்பன. இவற்றை எல்லாப் பேரரசுகளுமே வற்புறுத்தி வந்தன.

ரோமானியர்கள் பெரியதோர் பேரரசைப் படைத்து அதற்கேற்ற சட்டமான இயற்கைச் சட்டத் தொகுதியைக் (Jus Naturale) கண்டுபிடித்தனர். பேரரசின் பல பகுதிகளுக்கும் அவர்கள் சுயாட்சியைக் (Autonomy) குறைத்து மத்திய அரசின் அதிகாரத்தை வளர்த்தனர். நாட்டின் ஒற்றுமையைக் காக்க இந்தியா போன்ற பெரிய நாடுகள் இன்றைக்கும் இக் கொள்கையைக் கடைப்பிடிப்பது கண்கூடு. பிரிட்டிஷ் பேரரசு ரோமானியப் பேரரசை ஒட்டியே அமைக்கப்பட்டது. உலகத்துக்கெல்லாம் நாகரிகத்தை வழங்கவே, தாங்கள் பேரரசை ஏற்படுத்துகிறோம் என்று ரோமானியர்கள் புகன்றது போன்றே, ஜெர்மானியர்களும், அமெரிக்கர்களும் உலகப் போர்க் காலத்தில் கூறிக்கொண்டனர். பீவரிட்ஜ் (Beveridge), வில்லியம் ஆலன் ஒயிட் (William Allan White), தியோடர் ரூஸ்வெல்ட் (Theodore Roosevelt) போன்ற அமெரிக்கர்கள் உலக நாகரிகத்தைக் காப்பாற்றவே கடவுள் அமெரிக்கனைப் படைத்தார் (Manifest Destiny) என்று கூறியதெல்லாம் பண்டைய ரோமானியரிடமிருந்து பெற்ற ஆகர்ஷமேயன்றி வேறல்ல. உலகத்திற்கே பொதுவான சட்டத்தைப் பற்றி குரோஷிஸ் (Grotius) என்ற அறிஞர் பெருமகனார் எழுதியதற்கு அடிப்படையாய் இருந்ததும், இன்றைய ஐ. நா. போன்ற சபைகளின் சர்வ தேசீயச் சட்டங்களுக்கு அடிப்படையாய் இருந்தனவும் ரோமானியர்களின் ஜஸ் நேச்சுரேல் (Jus Naturale) என்ற பொதுமைச் சட்டங்களே ஆகும்.

அரசாங்கத்தின் மூன்று பகுதிகளுக்கிடையே, அதாவது நிர்வாகம், நீதி, சட்ட நிறுவனங்களுக்கிடையே அதிகாரமானது பிரிக்கப்படவேண்டும் (Theory of Seperation of Powers) என்ற கொள்கையும், நீதிபதிகளின் தீர்ப்புகளை, சட்டங்களாக ஏற்றுக்கொள்ளலாம் என்ற கொள்கையும் (Case law), நடு நிலைமை கொண்ட பொதுமக்கள், சான்றோர்கள் துணை கொண்டு நீதிபதி தீர்ப்பு வழங்க வேண்டும் (Jury System) என்ற கொள்கையும் ஆதியில் ரோமானியர்களிடமிருந்து தோன்றியவைகளேயாகும்.

உள்ளூர் ஆட்சிமுறை (Local Governments) உள்ளாட்சித் துறைக்கு ஓரளவு சுயாட்சி வழங்குதல் (Local Self Governments) போன்ற தற்காலக் கருத்துகளையும் ரோமப் பேரரசில், ரோமானியர் கடைப்பிடித்தனர்.

இன்று நாம் அரசாங்கத்தின் பல்வேறு பணிகளைக் குழு முறையின் மூலம் (Committee system) நிர்வகிக்கிறோம். இம்முறையும் ரோமானியர்கள் அறிந்தவொன்றே. சிவில் சர்வீஸ் (Civil Service) என்ற அரசு பணியாளர் கூட்டத்தைக் கொண்டு நிர்வாகத்தை நடத்தும் முறையையும் ரோமானியர்களே முதன்முதலில் நடைமுறையில் கடைப்பிடித்தவர் ஆவர்.

இன்றைக்கு நாம் பயன்படுத்தும் எண்முறையும் (Roman Numerals), ரோமானியர் எண்முறை எனப்படுவது. அராபியர்களிடமிருந்து அறிந்துகொண்டு அதனை உலகுக்குப் பரிசாக அளித்தவர்கள் ரோமானியர்களே. ரோமானியர்கள் கால அட்டவணையை நன்கு செம்மைப்படுத்தினர். ஜூலியஸ் சீசரால் செம்மையாக்கப்பட்ட காலண்டர் ஜூலியன் காலண்டர் (Julian Calendar) எனப்பட்டது. அதையே மேலும் செம்மையாக்கி, போப் கிரிகொரி (Gregory) என்பார் கிரிகொரியன் காலண்டர் (Gregorian Calendar) என உலகுக்கு வழங்கினர். மாதங்களின் பெயர்களில் பல ரோமானியப் பேரரசர்களின் பெயர்களை அடிப்படையாய்க் கொண்டவையே. சான்றாக ஆகஸ்ட் மாதம் அகஸ்டஸ் பேரரசரையும், ஜூலை மாதம், ஜூலியஸ் என்ற தலைவரையும் நமக்கு நினைவுபடுத்துகின்றன.

ரோமானியக் கலைப் பண்புகள் பல இன்றைய நாகரிகத்தில் காணப்படுகின்றன. பெரும் தலைவர்களின் முகச் சிலையைப் (Busts) பூங்காக்களிலும், முச்சந்திகளிலும் நிறுவுதல், வெற்றி வளைவுகளைக் கட்டுதல், பெரிய வளைவுகளைக் கொண்ட பாலங்கள், நீர்க்கால் வாய்கள் முதலியவற்றைக் கட்டல், தூண் வரிசைகள் செறிந்த மண்டபங்களை எழுப்புதல், இருபுறமும் மரங்கள் செறிந்த நீண்ட பாதைகளை அமைத்தல் முதலிய செயல்கள் யாவும் ரோமானியர்களிடமிருந்தே பெறப்பட்டன என்றால் மிகையாகாது.

நெருக்கடியான காலங்களில் அதிகாரம் செறிந்த ஒரு வல்லரசினை ஏற்படுத்தி ஒழுங்கை ரோமானியர்கள் நிலைநாட்டினர். நெருக்கடிகால நிலைமையில் இந்தியக் குடியரசு தலைவர் தானே மாநிலங்களை ஆளுதல் போன்ற முறைகள் ரோமானிய முறையைப் பின்பற்றியதேயன்றி வேறல்ல.

நாட்டின் வருவாயும், செலவும் ஒன்றுக்கொன்று சமமாய் அமையும்படி பார்த்துக்கொள்ள வேண்டும் என்ற இக்காலத்திய பட்ஜெட் (Budget) முறையும் ரோமானியர்கள் கண்டுபிடித்ததே யாகும். சொத்தையெல்லாம் இழந்த கடனாளி தன்னைக் காப்பாற் றிக்கொள்ள தான் திவாலாகிவிட்டதாக அறிவிக்கும் முறையை ஜூலியஸ் சீசர் ரோமில் புகுத்தினர் என்பர். இக்காலத்திய திவாலாச் சட்டம் (Bankruptcy) சீசரின் சட்டத்தை ஒட்டிய தென்றே தெரிகிறது.

சுகாதாரத் துறையில் இக்கால உலகம் ரோமானியருக்குப் பெரிதும் கடன்பட்டுள்ளது. கழிவுநீரை ஊரைவிட்டு வெளிப் படுத்த ரோமானியர் கடைப்பிடித்த முறையையும், குடிநீரை ஆறு களிலிருந்து கொண்டு வருவதற்குக் கடைப்பிடித்த கால்வாய்ப் பால முறையையும் (Aqueduct) இன்றும் பெரு நகரங்களில் கடைப் பிடித்து வருகின்றனர். அன்று கட்டப்பட்ட ஒன்பது கால்வாய்ப் பாலங்களில் மூன்று பாலங்கள் இன்றைக்கும் ரோமுக்குக் குடிநீர் வசதியை வழங்கிக்கொண்டிருக்கின்றன. நோய்வாய்ப்பட்டவர் களுக்கு மருத்துவ வசதியை அளிக்கப் பொது மருத்துவமனைகளை ரோமானியர் கண்டனர். அங்கே மருத்துவர்களையும், அரசாங்கச் செலவில் அமைத்து நோயாளிகளுக்கு மருந்துகளை வழங்கினர். நீரைக் கொதிக்கவைத்துக் குடித்தால் நோய் தரும் கிருமிகள் இறந்துவிடும் என்ற உண்மையைக் கண்டு வெளியிட்டவர்கள் ரோமானியர்களேயாவர். இத்தகைய முறையிலேயே இன்றைய ஜனநாயக நாடுகள் மக்களின் நலனைப் பேணி வருவது கண்கூடு.

விவசாயத் துறையில் மாற்றுப் பயிர் வேளாண்மை முறையைக் (Rotation of Crop System) கையாண்டு அதன் மூலம் நிலத்தின் செழுமையைக் காக்கின்ற முறையை உலகுக்கு வழங்கிய பெருமை இவர்களையே சாரும்.

இலக்கியத் துறையில் ரோமானியர்கள் உலகுக்களித்துள்ள நன்கொடைகள் பலப்பல. இடைக்காலத்தே அறிஞர்களின் பொது மொழியாக விளங்கிய லத்தீன் மொழியை ஆக்கித் தந்தவர்கள் ரோமானியர்களேயாவர். மற்றும் ஐரோப்பிய மொழி

களான ஜெர்மானியம், ஆங்கிலம் முதலியவைகள் லத்தீன் மொழியிடமிருந்து ஏராளமான சொற்களைக் கடன் வாங்கியுள்ளன. கத்தோலிக்க திருச்சபையின் சட்டங்கள் யாவும் லத்தீன் மொழியிலேயே உள்ளன. பெரும்பாலான கோயில்களில் இறை வழிபாடுகள் அம்மொழியிலேயே நடைபெறுகின்றன. உலகில் என்றும் நின்று நிலவக்கூடிய ஈனியட் (Aeneid), ஜியார்ஜிஸ் (Georgis), லூக்ரிஷியஸ் (Lucretius) போன்ற அமர இலக்கியங்களையும், ஓவிட் (Ovid) என்ற புலவர் எழுதிய இரங்கற் பாக்களையும் (Elegres), லிவி (Livy), பொலிபியஸ் (Polybius), டாஸிடஸ் (Tacitus) போன்றவர்களால் எழுதப்பட்ட வரலாற்று நூல்களையும் பிளாட்டியஸ் (Plautius) போன்ற நாடகாசிரியர்களின் நாடகங்களையும், சிசரோ என்ற சொல்வன்மைமிக்க பேச்சாளியின் சொற்பொழிவுகளையும், மார்க்கஸ் அரேலியஸ் போன்றோர்களின் தத்துவ நூல்களையும் படைத்து உலகுக்கீந்த பெருமை ரோமானியர்களுக்குரியதாகும்.

ஸ்டாயிசிசம், எபிகியூரியனிஸம் ஆகிய தத்துவங்களை உண்டாக்கியவர்கள் கிரேக்கர்களேயெனினும், அவற்றை ஒழுங்கு படுத்தி உலகுக்கு வழி காட்டியவர்கள் ரோமானியர்களேயாவர்.

பல்கலைக்களஞ்சியங்கள் பலவற்றைத் தொகுத்து வெளியிட்டவர்கள் ரோமானிய அறிஞர்களேயாவர்.

இவ்வாறு அரசியல், பொருளியல், தத்துவம், சட்டம் போன்ற பல்வேறு துறைகளில் ரோமானியர்கள், உலக நாகரிகப் பாதையில் அழிக்க முடியாத பதிவுகளை விட்டுச் சென்றுள்ளனர்.

# கலைச்சொற்கள் அகராதி

## (GLOSSARY)

### A

Adversity Theory — துன்பியல் கொள்கை
Agent — பகராள்
Amphitheatres — (கிரேக்கர்களின்) வட்ட வடிவ மான விளையாட்டரங்கம்
Anthromorphism — தெய்வங்களை மனித வடிவில் வணங்குதல்
Anthropology — மானிடவியல்
Apartheid — நிறவெறி
Aqueducts — கால்வாய்ப் பாலங்கள்
Aristocracy — உயர்குடிப் பெருமக்களாட்சி
Arches — (கட்டட) வளைவுகள்
Arithmetic — எண் கணிதம்
Atheism — நாத்திகம்

### B

Barbarians — காட்டுமிராண்டிகள், முரட்டு வகுப்பினர்
Barter — பண்டமாற்று முறை
Bas-relief — புடைப்புருச் செதுக்கோவியம்
Botany — தாவர இயல்

### C

Calendar — நாள்காட்டி
Calculus — நுண்கணிதம்
Celestial Emperors — விண்ணுலக வேந்தர்கள்
Centre of Gravity — புவியீர்ப்புச் சக்தி
Census — பிறப்பு இறப்புக் கணக்கு
Challenge and Response Theory — சவால் சமாளிப்புக் கொள்கை
Cheque — காசோலை
City-States — நகர அரசுகள்

Civilization — நாகரிகம்
Classless Society — வர்க்கமற்ற சமுதாயம்
Code — சட்டத் தொகுதி
Columns — தூண் வரிசைகள்
Comedy — இன்பியல் நாடகம்
Confederation — இணைக் கூட்டரசு
Creativity — படைப்பாற்றல்
Culture — பண்பாடு
Cuneiform — ஆப்பெழுத்து

## D

Despot — வல்லரசர்
Dictators — சர்வாதிகாரிகள்
Direct Democracy — நேர்முக ஜனநாயகம்
Discus-Throw — கேடயம் எறிதல்
Domes — குவிமாடங்கள்
Dualism — துவைதம் (இருமைக் கொள்கை)

## E

Elegy — கையறுநிலைக் கவிதை
Embryology — கருவாராய்ச்சி
Enlightened Despot — அறிவுசான்ற வல்லரசர்
Epicurians — யோகிகள்
Ethics — அற இயல்
Evolutionary Theory — படித்தர வளர்ச்சிக் கொள்கை
Expediency — சமயோசித ஒழுக்கக் கொள்கை

## F

Federation — கூட்டரசு
Feminism — பெண்மை வாதம்
Fertile Crescent — வளமிக்க வளர்பிறைப் பிரதேசம்
Feudalism — நிலமானிய முறை

## G

Geography — புவியியல்
Geometry — வரைபடக் கணிதம்
Glacial Movements — பனிமலை நகர்ச்சி
Gymnasium — உடற்பயிற்சிக் கூடம்

## H

Hanging Gardens — தொங்கும் தோட்டங்கள்
Harmony — சீர்மை, ஓர்மை
Hieroglyphs — சித்திர எழுத்துகள்
Humanistic — மனிதாபிமான முறைகள்
Humanism — மனிதத்துவம், மனிதாபிமானம்
Humanities — மனிதாபிமானப் பாடங்கள்

## I

Idealism — நிறை நெறிக் கொள்கை
Idylls — நாட்டுப்புற வர்ணனைக் கவிதைகள்
Individualism — தனிமனித வாதக் கொள்கை
Initiative — சட்டங்களைத் துவக்கும் உரிமை
Inventions — புதுமைப் படைப்புகள்

## J

Jury — தீர்ப்புச் சான்றுளர் குழு
Jehad — சமயப் போர்

## L

Lake-dwellings — ஏரிக் குடியிருப்புகள்
Logic — அளவை நூல்
Lot-System — திருமணச் சீட்டு முறை
Lyric-Poetry — உணர்ச்சிமிக்க கவிதைகள் (பாட்டுடைச் செய்யுள்)

## M

Mammals — பாலூட்டிகள்
Manufactured Articles — செய்பொருள்கள்
Materialism — உலோகாயதம்
Meteorology — வானிலை ஆராய்ச்சி
Monarchy — கோனாட்சி
Monotheism — ஏகதெய்வ வாதம்
Mummies — பாடம் செய்யப்பெற்ற சவங்கள்
Mysticism — ஆன்மானுபவம்

## N

Naturalistic — இயற்கைத் தன்மையுடைய
Neo-lithic Age — புதிய கற்காலம்
Nomad — நாடோடி
Nominalism — மாயாவாதம்
Novel — புதினம்

## O

Odes — நாடக இசைப் பாடல்கள்
Oligarchy — செல்வச் சிறுகுழு ஆட்சி

## P

Palaeo-lithic Age — பழங்கற்காலம்
Pantomime — சைகை நாடகம்
Pastoral Poems — ஆயற் கவிதைகள்
Philosophy — மெய்யறிவியல்
Physics — பௌதிகம்
Precedence — முன் நிகழ்வு ஆதாரம்
Prose — உரை நடை இலக்கியம்

## R

Records — ஆவணங்கள்
Recorded-history — வரையுப்பெற்ற வரலாற்றுக்காலம்
Realism — காட்சிப் பொருள் கொள்கை
Referendum — குடி ஒப்பம்
Relief — புடைப்போவியம்
Romantic Movement — புத்துணர்ச்சி இயக்கம்

## S

Seminar — கருத்தரங்கு
Shot-put — குண்டு எறிதல்
Skeptics — எதிலும் நம்பிக்கையில்லாதவர்
Sophists — யோகிகள்
Soil-Exhaustion Theory — மண்வள இழப்புக் கொள்கை
Stadium — அரங்கு
Stucco — சுவர் பூச்சு சிற்பம்
Syloecasm — ஒன்றியம்

